1800 வருஷங்களுக்கு முன் இத்தேசத்தில் புத்தருடைய மகத்துவங்களையும் அவருடைய திருவிழாக்களையும் கொண்டாடி வந்ததாக சரித்திர ஆதரவுகளும் சிலாசாஸனங்களும் இருக்கிறபடியால் சாதிபேதங்களை ஏற்படுத்தி புத்தமதத்தை நிலைகுலையச் செய்து புத்தமதத்தோரை பறையரென்று ஏற்படுத்திய காலம் ஏறக்குறைய 1700 வருஷத்திற்கு உட்பட்டதேயாம்.

உலகெங்கும் சாதி வித்தியாசமென்னும் மடமையில்லாமல் சொற்பதேசமாகிய தென்னிந்தியாவில் அனந்தசாதிகள் ஏற்பட்டிருப்பதற்குக் காரணமென்ன என்றால் புத்த மதத்தைச் சார்ந்த சாக்கைய குலத்தோரை பறையரென்று கடைசாதியாக ஏற்படுத்தி புத்தமதத்தை தலை எடுக்கவிடாமல் செய்வதற்கும்.

புருசீகதேசத்தார் தங்களை பிராமணர் பிராமணரென்று உயர்த்திக் கொண்டு தங்கள் சீவனத்திற்கு ஏற்படுத்திக்கொண்ட மதங்களை விருத்தி செய்வதற்குமேயாம்.

சாக்கைய வகுப்பென்பது என்ன என்றால் பூர்வகாலத்தில் வருங்காலம் போங்காலங்களை அறிந்து சொல்லக்கூடிய ஆரூடர்களுக்கு சாக்கையர் களென்றும் - வள்ளுவர்களென்றும், நிமித்தகர்களென்றும் வகுத்து வைத்திருந்தார்கள்.

அந்தசாக்கைய வகுப்பார்கள் அரசர், வணிகர், வேளாளரென்ற மூன்று தொழிலாளர்களுக்கும் கருமத் தலைவர்களாயிருந்ததும் அல்லாமல், சக்கிரவர்த்திகளாகவும் இருந்தார்கள்.

வள்ளுவர் சாக்கையரெனும் பெயர் - மன்னர்க்குள் படுகருமத்தலைவர்க் கொக்குமென்று - திவாகரத்திலும் - வருநிமித்தகன் பேர்சாக்கை வள்ளுவ னென்றுமாகும் - என்று நிகண்டிலும்.

கூறியிருப்பதற்கு ஆதரவாக, நமது ஒப்பிலா அப்பன் புத்தரவர்கள் சாத்கைய குலசக்கிரவர்த்தி வம்மிச வரிசையில் பிறந்து சாக்கைய முநி என்னும் ஓர் பெயரையும் பெற்று சாக்கையருக்கு குலகுருவாகவும் விளங்கியிருந்தார்.

சாக்கையர் ஆளுந்தலைத்தார் வெந்தனாக்கையுற்று தித்தனனாங்கவன் றானென - லென்று - மணிமேகலையிலும் - விரவு சாக்கையனேசை நன் விநாயகன் சினந்தவிர்ந்தோனென்று நிகண்டிலும், சாக்கையர் குருவின் மாயன் ஆங்கவர் புறத்தில் சாந்து - என்று *கூர்ம புராணத்திலும்*, மற்றுமுள்ள புத்தர் சரித்திரங்களிலுங் காண்க.

பூர்வ புத்தக் கியானிகளாகவும் புத்தருடைய குடும்பத்தோர்களாகவும் விளங்கிய சாக்கையர், வள்ளுவரென்பவர்களை, பறையரென்றும் ஈனரென்றும் வழங்கி வருகிறார்கள்.

சபைதனிலுள்ளவர்கள் சாக்கையனெனை. சாதியிலீனனெனசாற்றுகிறீர்
உபையோகமில்லாமலும் அங்க சுத்தி உடலறியா செபங்களோதுகிறீர்
வபைய மதாகிய நூல் வீண்பிலுக்கு வாசியறியாமலும் மயங்குகிறீர்
அவையார் குலத்தில் வந்த வள்ளுவனெனும் ஆதி பீடமும் நாண்காணும்

என்று ஞானவெட்டியிலும்
வேதமொழியர் வெண்ணீற்றர் செம்மேனியர்
நாதப்பறையினர் - என்னே - என்னும்
நாதப்பறையினர் நான்முகன் மாலுக்கு

நாதரின்னாதனா ரன்னே என்னும் - நான்முகனென்பது புத்தருடைய பெயர் என்று *திருவாசகத்திலும்*,
அறுவகை சமயத்தறையு மெய்ப்பொருளு மறுபத்து நாலு நற்கலையுல்
மறுவறப்பயின்று மாசறத்திகழும் மதிஞராமவர்களே எனினுங்
குறைவறத் தன்னைக் கொடுத்திடுங் குரவன் குரைகழல் புனைந்தவரன்றேல்
பறையர் மற்றவரை பறையரே எனினுமருள் உடையவர் பரம்பரரே.

என்று *அவிரோத உந்தியாரிலும்* - மற்றுமுள்ள ஞான நூற்களிலுங் காண்க.

புருசீகர்களென்று கூறியிருப்பது யாவரென்றால் சிலகாலங்களுக்குமுன் அக்கினியை தெய்வமாகத் தொழும்படியான ஓர் சாதியார் சண்டையில் முறியடிப்பட்டு இவ்விடம் வந்து குடியேறி யாசக சீவனத்தால் சிலகாலம் பிழைத்து இத்தேசத்தோரின் நடையுடை பாவனைகளையும் ஒழுக்கங்களையும் உணர்ந்து குடிகளும் அரசர்களும் மடாதிபதிகளுக்கு பயந்து நடந்து வருவதை நாளுக்கு நாள் பார்த்து சிற்றரசர்களையும் பெருங் குடிகளையும் தங்கள் மாய்கையால் வசப்படுத்திக் கொண்டு மடாதிபதிகளைப் போல் பூனூலணிந்து தங்களை அந்தணர்களென்று சொல்லிக் கொண்டு சிற்றரசர்களில் ஒருவர் இறந்து போனால் அவர்கள் பெயரால் ஒவ்வோர் ஆலயங்களை கட்டிவிட்டு அவர்களுடைய சொத்துக்களையும் பூமிகளையும் அதற்கு ஆதரவாக வைத்துக்கொண்டு அந்த சீவனத்தினால் தங்கள் பெண்சாதி பிள்ளைகளுடன் சுகமாக வாழ்வதற்கு அவர்களால் உண்டு செய்துக்கொண்ட சுவாமிகளுக்கு இரண்டு பெண்சாதி, மூன்று பெண்சாதிகள் உண்டென்னும் கதைகளை ஏற்படுத்திவிட்டு இத்தேசத்தில் அவரவர் தொழில்களுக்கென்று ஏற்படுத்தியிருந்த பெயர்களை,

கீழ்ச்சாதி மேற்சாதி என்று மாறுபடுத்திவிட்டு அதில் தங்களை எல்லோருக்கும் மேலான பிராமண சாதி என வகுத்துக் கொண்டு புத்தமதக் கியானிகளை எல்லோருக்குந் தாழ்ந்த சாதி பறையர்களென்று இழிவு கூறி வந்தார்கள்.

இவ்வகையாக புருசீகர்களென்று வகுக்கப்பட்டிருக்கும் இதன் விவரங்களை அஷ்வகோசர் போதித்துள்ள "*நாராதிய புராண சங்கைத் தெளி*வென்னும்" சரித்திரத்தில் தெரிந்துக்கொள்ளலாம்.

புருசீகர்கள் செய்து வந்த மித்திர பேதத்திற்கும் சிற்றரசர்கள் ஆக்ஞைக்கும், மற்றக்குடிகள் பயந்து சாதிகட்டுக்குள் அடங்கி விட்டார்கள்.

சாக்கையர்களோ என்றால் அவர்கள் ஏற்படுத்திய சாதி கட்டுக்குள் அடங்காமல் தங்கள் குலகுருவின் ஞானமும் நீதியும் அழிந்து விடுகிறதென்னும் மனவருத்தத்தினால் புருசீகர்களைக் கண்ட இடங்களில் எல்லாம் அடித்துத் துரத்தியதும் அல்லாமல் மற்றக்

குடிகளுக்கு சாதி பேதமும் விக்கிரங்களை சுவாமி என்பதும் பிசகென்று சிவவாக்கிய முதலிய நூற்களை இயற்றிக் கண்டித்து வந்தார்கள்.

சிவவாக்கியம் புத்தமதத்தைச் சார்ந்த நூலென்பதற்கு - அண்டர் கோனிருப்பிடம் அறிந்து கொண்ட ஞானிகள் - கண்ட கோவில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே என்னும் பாடல் போதுமான சாட்சியாயிருக்கின்றது. அண்டர் கோனென்பது புத்தருக்குரிய ஆயிரநாமங்களில் ஒன்றென்பதை **சூளாமணி** என்னும் - நூலில் கூறியிருக்கும் புத்தர் தியானத்தில் தெரிந்துக் கொள்ளலாம்.

விண்டாங்கு வெவ்வினை வெரு உதிரநூறி
விரிகின்ற மெய்ஞ்ஞான சுடர்விளக்கு மாட்டிக்
கண்டார்கணின் னிலமை கண்டொழுகயானின்
கதிர்மயங்கு சோதியாற் கவிளக்கப் பட்டுத்
தண்டா அமரை மலரின் மேனடந்தா யென்றும்
தமனீயப் பொன்னணையின் மேலமர்ந்தா யென்றும்
வண்டார சோகி நிழல் வாயமர்ந்தா யென்றும்
வாழ்த்தினால் வாராயோ வானவர்தங்கோவே.

புருசீகர்களோ என்றால் சிற்றரசர்களையும் பெருங் குடிகளையுந் தங்கள் வயப்படுத்திக் கொண்டு புத்தக் கியானிகளை பறையர் பறையரென்று தூற்றி கழுவு முதலியவைகளில் ஏற்றிக் கொன்றதும் அல்லாமல் ஓரிடங்களிலும் நிலைக்கவிடாமல் செய்து வந்ததாக அஷ்வகோசர் போதித்திருக்கின்றார்.

அதற்கு சாட்சியாக தன்னவர் அன்னியரென்னும் பட்சபாதம் இல்லாமல் நீதி செலுத்தும் கருணைதங்கிய ஆங்கிலேயர் ஆளுகையில் பறையர்களென்று வழங்கும்படியானவர்களை சுத்த சலத்தை மொண்டு குடிக்கவிடாமலும் இவர்கள் வஸ்த்திரங்களை வண்ணார்களைக் கொண்டு எடுக்கவிடாமலும் அம்மட்டர்களை சவரஞ் செய்யவிடாமலும் மேலான ஜீவனங்களில் பிரவேசிக்கவிடாமலும் கட்டுப்பாடு செய்து வைத்திருக்கும் அன்னிய சாதியார் தங்களுடைய சுய அதிகார காலங்களில்

இவர்களை என்னென்ன துன்பங்களுக்கு ஆளாக்கி இருப்பார்கள் என்பதை ஒவ்வொருவருந் தெரிந்துக் கொள்ளலாம். இவ்வகையான கொடூர துன்பங்களினாலும் தேசங்களை விட்டு தேசமாறுதலினாலும் நாளுக்குநாள் இவ்விடம் குடியேறியிருக்கும் பலமதஸ்தர்களின் போதனையினாலும் புத்தரே நம்முடைய குலகுரு என்பதும் புத்தமதத்தான் நம்முடைய சுய மதமென்பதும் விளங்காமல் திறை மறைவாயிருக்கின்றது.

ஆனால் இவர்களனுபவத்தினாலும் செய்கைகளினாலும் புத்தமதஸ்தர்களாகவே இருக்கின்றார்கள்.

எவ்வகையிலென்றால், நிகண்டில் கூறியிருக்கும் புத்தருக்குரிய பெயர்களில் முத்தனே முநிகருத்தன் முக்குடைச் செல்வன் முன்னோன் - என்று கூறியுள்ளபடிக்கு - இவர்களுக்குள், நாளதுவரையில் முத்தன், முனியன், கருப்பன், செல்லன் - என்னும் பெயர்களால் அழைத்துக் கொள்ளுவார்களல்லது வேறு மதத்தருடைய பெயர்களை விசேஷமாக வழங்கமாட்டார்கள்.

மணிமேகலையில் போதி நிழற்பொருந்தித் தோன்றும் நாதன்பாத நவைகெட வேத்தலென்று - புத்தருடைய போதனா நிலையைக்கூறி இருப்பதற்கு ஆதரவாக நாளது வரையில் இவர்கள் அரசமரத்தடியில் செங்கல்லை நட்டு முனியாண்டவன் பூசை செய்வார்களல்லது வேறு மரத்தடியில் வேறு வேறு தேவதைகளைப் பூசிப்பது கிடையாது அரசாணிக்கால் நட்டு புத்தர் சாட்சியாக விவாகங்கள் நடத்துவார்களல்லது - வேறு தேவதைகளை நியமிப்பது கிடையாது.

புத்தரவர்கள் நிருவாணமடைந்த நாளை பூர்வ அரசர்கள், இந்திர விழாக்கோலென்றும், போதிபண்டிகை என்றும், மங்கலத் திருநாளென்றும். தீபசாந்தி, என்றும் புத்தர் சுவர்க்கவானம் ஏறிய நாளென்றும் மார்கழி மாதத்தில் இருபத்தியெட்டு நாள் திருவிழாக் கொண்டாடி வந்ததாக மணிமேகலை. அசோதரை காவியம், மற்றுமுள்ள புத்த சரித்திரங்களில் எழுதியிருக்கின்றார்கள்.

அதற்காதரவாக மார்கழி மாதம் முழுவதும் வீடுவாசல் முதலியவைகளை சுத்தப்படுத்தி மாதகடையில் அவர் சோதிமயமாக, சுவர்க்கவானமேறிய நாளை - சொக்கபானை கொளுத்துகிறதென்றும் போதி பண்டிகையை போகி பண்டிகை என்றும் மறுநாள் புத்தராகிய இந்திரரை பூசிக்கும் நாளை பெரும் பொங்கலென்றும் பெரியாண்டவன் பூசை என்றும் இவர்களுடைய கிராமங்களில் நாளது வரையில் கொண்டாடி வருகிறார்கள்.

**சிந்தாமணி**

தேனுலாமதுச் செய்கோதை தேம்புகை கமழ்வூட்டி
வானுலாச் சுடர்கண் மூடி மாநகரிரவுச் செய்யப்
பானிலாச் சொரிந்து நல்லராணிகலம் பகலைச் செய்ய
வேனிலான் விழைந்த (சேரி) மேலுலகனைய தொன்றே
வேரியின் மெழுக்கார்ந்த மென் பூநிலத் - (து)
ஆரியாகவஞ் சாந்தத்தளித்தபின்
வாரி நித்திலம் வைப்ப பொற் பூவொடு
சேரிதோறிது செல்வத்தியற்கையே.

என்று சீவகசிந்தாமணி என்னும் புத்த நூலில் கூறியுள்ளபடிக்கு பூர்வ புத்தமத அரசர்கள் வாழ்ந்த இடங்களுக்கு சேரி என்று வழங்கி வந்த வார்த்தையை விடாமல், நாளது வரையில் இவர்கள் வாசஞ்செய்யுங் கிராமங்களுக்கு *சேரி* என்று வழங்கி வருகிறார்கள்.

**சூளாமணி**

மற்றமா நகருடை மன்னன்றன்னுய ரொற்றை வெண்குடை நிழலுலகிற் கோருயிர்ப்
பெற்றியான் பயாபதி யென்னும் பேருடை வெற்றிவேன் மணிமுடி வேந்தர் வேந்தனே.

**சிந்தாமணி**

கோதை நிலத்திலஞ் சூழ்குளிர் வெண்குடை ஓத நீருல கொப்ப நிழற்றலால்
தாதையே யவன்றா நிழற்றங்கிய காதலாற் களிக்கின்ற திவ்வையமே.

**ஞானவெட்டி**

பூணூல் தரித்துக் கொள்வோம் ஐம்பொறியும் புலனையும் அடக்கிக் கொள்வோம்,
வேண விருதுகளும் விசிதமாய் வெண்குடை சாமரையும் பிடித்துக் கொள்வோம்.
வானவர் முனிவர் தொழும் பொன் விசிறி மரகத் குண்டலத்தின் கவசங்களும்,
ஞானப்பிரகாச ஒளி திவ்யகுண நாதனினர்ச்சனையில் நிதமிருப்போம்.

என்று ஞானவெட்டி - சூளாமணி - சீவகசிந்தாமணி முதலிய புத்த நூற்களில் - புத்த அரசர்களுக்கும் - புத்த சன்னியாசிகளுக்கும் வெள்ளை யானை வெள்ளைக்குதிரை வெள்ளைக்குடை முதலிய பதினெட்டு விருதுகள் உண்டென்று கூறியிருப்பதற்கு ஆதரவாக நாளது வரையில் இவர்களுடைய விவாக காலங்களில் வெள்ளைக் குதிரை வெள்ளைக்குடை முதலிய பதினெட்டு விருதுகளுடன் ஊர்வலம் வந்து முகூர்த்தம் நடத்தி வருகிறார்கள்.

சாக்கைய முனிவராகிய புத்தர் அரசமரத்தடியில் உட்கார்ந்து ஞான நீதிகளைப் போதித்து மார்கழிமாதம் நிருவாணதிசையடைந்தது போல அவருடைய போதனையை அனுசரித்து வந்த அம்பிகை என்றும் சிந்தாதேவி என்றும் வழங்கிவந்த ஓர் பெண்ணானவள் வேம்புமரத்தடியில் உட்கார்ந்து நீதி நூற்களையும் ஞானநூற்களையும் போதித்து திரிகால சங்கதிகளையும் உணர்த்தி ஆடி மாதம் நிருவாணதிசையடைந்ததாக அம்பிகாதருமம், மணிமேகலை முதலிய புத்த நூற்களில் கூறியிருப்பதற்கு ஆதரவாக சீனதேசபுத்தர்கள் - சாம்பா - என்றும் - நேப்பால தேச புத்தர்கள் : மாரி: என்றும் சிலோன் தேசபுத்தர்கள் - மாயி - என்றும் - அதே பெண்தேவதியை சிந்தித்து வருகிறார்கள்.

அவைகளை அனுசரித்து இவர்கள் வாசஞ்செய்யும் சேரிகளில் ஒவ்வோர் பெண் தேவதியை வைத்து நாளதுவரையில் சிந்தித்து வருகிறார்கள்

**ஷெந்திராந்தம்**

நீதியார் வேத நூலினெறியலாவறங்கணாலு
மோதியோரைந்து சீல முடையராயுடல மூடிப்
போதி நீண்மரத்தின் மேவு புத்தர் நால்வரினும் வைத்து
சாதி தானிலாத கொள்கை சௌந்திராந்திகன் முன் சாற்றும்

என்று புத்த மதத்தில் சாதிபேதமில்லாமலிருக்க வேண்டுமென்று போதித்துள்ள கட்டளைபடிக்கு பலவகைக் கால்வாய்களில் ஓடிவரும் அசுத்த சலங்களெல்லாம் - சமுத்திரத்தில் விழுந்து சுத்தமடைவது போல பிராமணனென்பவன் வந்தாலும் செட்டி என்பவன் வந்தாலும் முதலி என்பவன் வந்தாலும் நாயுடு என்பவன் வந்தாலும் அவர்களை வேறு சாதி என்ற வித்தியாசம் பாராமலும் சத்துருக்களென்று சங்கை கொள்ளாமலும் தன்னவர்களைப்போல் ஆதரித்து சுத்த இதயமுண்டாகச் செய்வார்களே அல்லது இன்னசாதி இனியசாதி என்று புறங்கூறி தள்ளமாட்டார்கள்.

ஒவ்வொரு அனுபவங்களும் செய்கைகளும் புத்த மதத்தைத் தழுவி வந்த போதிலும், பேதமைகுணத்தினால், குலகுருவின் பேரில் வைத்திருந்த அன்பைக் கொண்டு தாயை பரிகொடுத்த பிள்ளையானது எவ்வகையாகப் பலரை தேடியலையுமோ அதுபோல், துலுக்கர் கோவில்களுக்கும் கிறிஸ்தவர் கோவில்களுக்கும் வைஷ்ணவர் கோயில்களுக்கும் சைவர் கோவில்களுக்கும் போய்த் தங்களுடைய மதம் இன்னது தானென்று நிலையில்லாமல் திகைத்து நிற்கின்றார்கள் தாயை மறந்துவிட்டப் பிள்ளையானது தாயின் நிறத்தையும் தாயின் அங்கபாகத்தையும் தாயை மறந்துவிட்ட இடத்தையும் உய்த்து நிதானிக்குமானால் இடந்தெரிந்து தாயும் பிள்ளையை ஏந்திக்கொள்ளுவாள் பிள்ளையுந் தாயால் சுகமடையும்.

அதுபோல் குலகுருவை மறந்துவிட்ட இவர்கள் மதசம்மதமான நிலையில்லாமலிருக்குங் காரணமென்னவென்றும் அந்தந்த மதஸ்தர்களுக்கு கோவிலென்றும் குருக்களென்றும் நிலையங்களிருக்க சோதிடத்திலும் வைத்தியத்திலும் ஞானத்திலும் நீதியிலும் வல்லமை பெற்று பரம்பரை அனுபவமாயிருக்கும் நமக்கு கோவிலென்றுங்

குருவென்றும் சொல்லும்படியான ஓர் நிலையுமில்லாமற் போனதற்கு ஏதுவென்ன வென்று உய்த்து நிதானிப்பார்களானால் குலகுரு இன்னாரென்று கண்டடைந்து குருவின் கருணையும் மதசம்மத ஒற்றுமையும் பெற்று வாழ்வார்கள்,

பிராமணர் என்று வழங்கும் புருசீகருக்கும் பறையரென்று வழங்கும் சாக்கையருக்கும் பூர்வமுதல் நாளது வரையில் ஓர்வகை விரோத மிருப்பதை எளிதிற் தெரிந்துக் கொள்ளலாம்.

பிராமணர் என்பவர்கள் பறையரென்று சொல்லும்படியானவர்களை சகல சுகங்களிலுந் தலையெடுக்கவிடாமல் தாழ்த்தி வரும் செய்கைகளினாலும்.

பிராமணரென்று சொல்லும் படியானவர்களை மற்ற சாதியோர்கள் குருவென்றும் மேலான சாதியென்றும் புகழ்ந்துக் கொண்டிருக்க பறையர்களென்று சொல்லும்படியானவர்கள் மட்டிலும் அவர்களை உயர்ந்த சாதியென்றாயினும் குருக்களென்றாயினு மதியாமல் தங்கள் கிராமங்களுக்குள் வந்து விடுவார்களானால் அவர்களை அடித்துத் துரத்தி விட்டு வீதியின் கடைசியில் சாணக் சட்டியைக் கொண்டுபோய் உடைத்து வருங்கிரியையினாலும் உள்ளப்பகை விளங்கும்.

புத்தமதத்தால் உண்டாகிய பூர்வ பகையானது நாளது வரையனுபவத்தில் இருந்தபோதிலும் அதன் விருத்தாந்தத்தை பூர்வமாக விசாரியாமலும்.

பூர்வ அரசர்கள் முதல் வைசியர் வேளாளரென்ற மூன்று தொழிலாளர்களுக்கும் இவர்கள் குருக்களாகவும் கருமத்தலைவர்களாகவும் மேன்மைப் பெற்றிருந்ததை சகல சரித்திரங்களிலும் வரைந்திருக்க நம்மை தாழ்ந்த சாதியாக இழிவு கூறிவருகிறார்களே அதன் மர்மம்மென்னவென்று

கண்டு தெளியாமல், சத்துருக்களால் ஏற்படுத்தியிருக்கும் மதங்களைத் தழுவி கோவிலில்லாமலும் குருக்களில்லாமலும் திகைத்து நிற்கின்றார்கள்.

அன்னிய மதத்தார் ஏற்படுத்தியிருக்கும் விஷ்ணு கோவில் சிவன் கோவில் என்று சொல்லும்படியான இடங்களுக்கு பட்டை பட்டையாக நாமங்களை சாத்திக்கொண்டும் வட்டை வட்டையாக விபூதியை இழுத்துக் கொண்டு போனபோதிலும் பறையன் வந்தான் பறைச்சி வந்தாளென்று அடித்து துரத்துகிறதும் சிலர் போலிஸ் அதிகாரிகளுக்குச் சொல்லி மிரட்டுகிறதும் சிலர் இவர்களை கோவிலுக்கு அருகாமை வரவிடாமல் இவர் கொண்டுவந்த பொற்பூஷணம் வெள்ளி பூஷணம் பணமுதலியவைகளைப் பெற்றுக் கொண்டு மற்றமுள்ள தேங்காய் பழ முதலியவைகளை தங்கட் கைகளிற் தொடாமலும் உள்ளுக்குக் கொண்டுபோய் தீப அருச்சனை செய்யாமலும் கற்பூரத்தைக் கொளுத்தி தூரநின்று தட்டில் போட்டுவிடுகிறார்கள்.

அன்னியனுடைய தந்தையை தன்னுடைய தந்தையென்றும் அன்னியனுடைய தாயை தன்னுடையத் தாயென்றும் தாவிப்பிடிப்பது போல அன்னிய மதத்தை தழுவுகின்றபடியால் அன்பும் ஆறுதலுமில்லாமல் அவமானத்திற்கு ஆளாக்கி விடுகின்றது.

இரவும் பகலும் உழைத்து கஷ்டத்துடன் சம்பாதிக்கும் பொருட்களை நமக்கு விரோதிகளாய் சகல விஷயங்களிலுந் தலையெடுக்க விடாமல் நசித்துக் கொண்டு வரும் சத்துருக்களிடத்தில் கொடுத்துவிட்டு அவமதிப்படைந்து வருவது என்ன பரிதாபம்.

அந்தோ, அன்னிய சாதியார் நமது குலத்தோர் மீதுள்ள பூர்வ விரோதத்தை வைத்துக் கொண்டு பலவகையாலும் இழிவு கூறி தாழ்த்தி வருவதை நாம் உணராமல் அவர்களுடைய பொறாமைச் செய்கைகளுக்குத் தாழ்ந்து கொண்டே போவதினால் நாளுக்கு நாள் சீர் குலைந்து மதசம்மத ஒற்றுமையில்லாமல் மகமதியருடன் சேர்ந்து அவர்கள் சுவாமிக்கு (பாத்தியா) செய்து வருவதும் கிறிஸ்தவர்களுடன் சேர்ந்து அவர்கள் சுவாமிக்கு மெழுகுவர்த்தி மிளகு முதலியவைகள் இறைப்பதும் ஆகிய நிலையற்ற கருமங்களைச் செய்துக் கொண்டு நிர்ப்பாக்கியராகின்றோம்.

இனியேனும் நிலையற்ற செய்கைகளால் அன்னிய மதங்களைத் தாவி பிடித்து சத்துருக்களால் நசுங்குண்டு போகாமல் பூர்வ சுதந்திரங்களை அறிந்து நம்முடைய ஒற்றுமையினாலும் விடாமுயற்சியினாலும் புத்தமத அரசர்களுடைய உதவியைப் பெற்று நம்முடைய சுயமதத்தை நிலை நிறுத்தி மடாலயங்களைக் கட்டுவித்து குலகுருவாகிய சாக்கைய முநிவரை வணங்கி ஞான வழியின் நிலைகளை உணர்ந்து பஞ்ச சீலங்களிற் பழகி நிருவாண திசையை அடையும்படியானக் கிருத்தியங்களை நடத்துவதற்கு பகவனுடைய சம்பூரணக்கிருபை நங்குலத்தார்மீது உண்டாகும்படி பிராத்திக்கின்றோம்.

நமோதஸ்ஸ பகவதோ அர அதோ சம்போசம் புத்தஸ்ஸ

**சாக்கையகுல நாயனார் குறள்**

அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீத்தலறிது.

**சாக்கையகுல அவ்வையார் நீதி நூல்**

அறஞ்செயல் விரும்பு

**சித்தாந்தக் கொத்து**

அருணெரியாற் பாரமிதை யாறைந்து முடன டக்கி
பொருண் முழுவதும் போதிநிழனன் குணர்ந்த முநிவரன்ற
னருண் மொழியா நல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியாற் பிறநூலு மயக்கறுக்கு மாறுளதோ.

**வீரசோழியம்**

தோடாரிலங்கு மலர் கோதிவண்டு வரிபாடு நீடு துணர்கேர்
வாடாதபோதி நெறி நீழன்மேய வரதன் பயந்த வறநூல்

கோடாத சீல விதமேவி வாய்மை குணனாக நாளுமுயல்வார்
வீடாதலின்ப நெறிசேர்வர் துன்பவினை சோக நாளுமிலரே

**யாப்பருங்கலக்காரிகை**

பூந்தண் சினைமலர் மல்கிய பொழிற் பிண்டி
வேந்தன் புகழ் பரவாதவர் வினைலெல்லார் - அதனால்
அறிவன தடியிணை பரவிப்
பெறுகுவர் யாவரும் பிறவியினெறியே.
வானோர் தொழ வண்டாமரை
தேனார் மலர் மேல்வந்தரு
ளானாவருள் கூரறிவனைக்
கானார்மலர் கொண்டேத்தி வணங்குனர்
பலர்புகழ் முத்தி பெறுகுவர் விரைந்தே

புத்தருடைய சரித்திரங்களையும் போதனைகளையும் நம்முடைய தேசத்து சரித்திரங்களில் எவ்வகையாக எழுதிவைத்திருக்கின்றார்களோ அது போலவே, நேபால், சீனம், ஜப்பான், சையாம், பர்மா, சிலோன், தீபேத் முதலிய தேசங்களிலும் எழுதிவைத்திருக்கின்றார்கள்.

ஆனால் அவர் பிறந்த தேதியை மட்டிலும் கிஞ்சித்து மாறுபட எழுதி வருகிறார்கள்.

உலகெங்கும் மகிமை பெற்றிருக்கும் மகாஞானியின் பிறந்ததேதி மாறுபட்டதற்குக் காரணமென்னவென்றால் மகதநாட்டை அரசாண்டுவந்த சாக்கையகுல சக்கரவர்த்திகள் வமிச வரிசையிலுதித்து சாக்கையருடைய இருப்பில் அவர் பிறந்து வளர்ந்த சரித்திரங்கள் யாவற்றையும் ஜாதக அம்ஸமாக ' எழுதி வைத்திருந்தார்கள்.

அக்காலத்தில் சாக்கையருக்குச் சத்துருவாகப் புருசிகர்கள் இவ்விடம் வந்து சேர்ந்து சாக்கையர்களை பறையர் பறையரென்று இழிவுகூறி தலையெடுக்கவிடாமல் நசித்து

விட்டபடியால் அவருடைய சரித்திரங்களின் வரிசையாவற்றும் சிதருண்டு விட்டது.

அந்தந்த தேசங்களில் அவர் நிர்வாணமடைந்த நாளை எந்தெந்த காலங்களிற் கொண்டாடினார்களோ அந்தந்த சரித்திரங்களின் படிக்கும் அவருடைய கட்டளைகளை மலைகளில் வரைந்திருக்கும் எழுத்து இலக்கங்களின் படிக்கும் 2500-2600 வருஷங்களுக்கு உட்பட அவர் பிறந்த நாளைக் குறிப்பிட்டு வருகிறார்கள்.

ஆனால் அவர் பிறந்து வளர்ந்த இத்தேசத்தின் கடைச்சங்கவித்து வான்களில் ஒருவராகிய வணிகசாத்தன் இயற்றியுள்ள பஞ்சகாவியங்களில் ஒன்றாகிய மணிமேகலை என்னும் சரித்திர ஆதரவின்படிக்கு அவர் பிறந்தது இந்த விகாரி வைகாசி மாதம் பௌர்ணமி வரையில் 3384 வருடமாகிறது.

பற்பல பாஷைகளிலுள்ள இவருடைய சரித்திரங்களை எவ்வகையில் தெரிந்துக் கொள்ளும்படி நேரிட்டதென்றால் புத்தருடைய ஞானங்களையும் நீதிகளையும் நன்குணர்ந்த ஐரோப்பியர்களும், ஜெர்மன்களும், அமேரிக்கர்களும் புத்தமதத்தில் சேர்ந்து அங்கங்குள்ள அவருடைய சரித்திரங்களை ஆங்கிலேய பாஷையில் வெளியிட்டிருக்கின்றார்கள்.

நமது குலகுருவாகிய ஒப்பில்லா அப்பன் சாக்கைய முநியவர்களின் ஞானத்தைக் கண்டடைவதற்குமடாலயங்களும் அவருடைய போதனைகளைப் பிரசங்கித்து வருவதற்கு கூடங்களுங் கட்டுவித்து Buddhist Temple என்றும்,

நமது குலத்தவருக்குள் நடக்கும் விவாகங்களைக் குறிப்பிட்டு வைப்பதற்கு புத்தகங்களை ஏற்படுத்தி Buddhist Register என்றும்,

நமது குலத்தவருக்குள் மரணமடைந்தோர்களை புதைப்பதற்கும் தகனஞ் செய்வதற்கும் பிரத்தியேக பூமிகளை ஏற்படுத்தி Buddhist Burial என்றும்,

நமது குலத்து வயித்தியர்களை ஒற்றுமை அடையச்செய்து வயித்திய சாலைகளை ஏற்படுத்தி Buddhist Medical Hall என்றும்,

நமது குலத்து சிறுவர்கள் உயர்தரக்கல்வி இலவசமாகக் கற்றுக்கொள்ளுவதற்கும் தூரதேசங்களிலுள்ள நமது குலத்து சிறுவர்கள் சென்னைக்கு வந்து நிலையாக ஓரிடத்தில் தங்கி மெடிகல் காலேஜ், இஞ்சிநியர் காலேஜ், அன்டர் காலேஜ் முதலிய இடங்களுக்குச் சென்று வித்தைகளைக் கற்றுக் கொள்ளுவதற்கும் ஓர் கட்டிடத்தை ஏற்படுத்தி Buddhist College என்றும்,

நமது குலத்து பாலியர்கள் சத்விஷயங்களில் பழகி ஆங்கிலேயபாஷையை பயிரங்கத்தில் தெளிவாக பேசுவதற்கும் தேகசுகவிளையாட்டுகளை ஆடுவதற்கும் ஒவ்வோர் கூட்டங்களை ஏற்படுத்தி Buddhist Young Men Association என்றும்,

வருஷந்தோறும் அந்தந்த வைகாசி மாத பௌர்ணமியில் புத்தர் பிறந்த நாளை கொண்டாடி வருவதற்கு Buddha's Birth day Anniversary என்றும்,

அந்தந்த வருஷ மார்கழி மாத கடைசியில் புத்தர் சுவர்க்கவானமேறிய நாளை 28 நாள் கொண்டாடி வருவதற்கும் போதி பண்டிகையன்று நமது குலத்து ஏழைகளுக்கு அன்னதானம் வஸ்திரதானமுதலியவைகள் செய்து வருவதற்கும் Buddhist Charity fund என்றும்,

ஒவ்வோர் நிலையான வரம்புகளை உண்டு செய்து நமது குலத்தவர்களை ஒற்றுமைக்கும் சீருக்குங் கொண்டுவரவிருப்பமுடையவர்கள் அடியில் கையொப்ப மிட்டிருக்கும் பொதுக்காரியதரிசியவர்களுக்கு தங்கள் இருப்பிடங்களையும் பெயர்களையும் ஒப்பந்தரசீதில் எழுதி அனுப்பி விடுவீர்களானால் அதை சபை புத்தகத்தில் பதிவு செய்து (சையாம்) (தீபேத்) முதலிய அரசர்களுக்கு அனுப்பி அவர்களை நமது சங்கத்தின் (Patron) இரட்சண்யகர்த்தர்களாக நியமித்துக் கொண்டு நமது பூர்வமதத்தை நிலைகாட்டும் உறுதி கொண்டிருக்கின்றோம்.

இப்படிக்கு<br>க. அயோத்திதாசபண்டிதர்<br>பொதுக் காரியதரிசி

Pundit. C. Iyodhi Doss,

General Secretary, S.B. Society,

No.7, M. Road, Rayapettah, Madras.

(இது 1899இல் எழுதப்பட்டிருக்கக்கூடும்)

# 4. கடவுள்

கடவுள் எனும் மொழி தமிழா, கன்னடமா, தெலுகா, மராஷ்டிரமா என ஆராயுங்கால், அஃது தமிழ் மொழி என்றே கூறத்தகும். கடவுள் என்னும் மொழியை வரைந்துள்ளவர்கள் சைவர்களா, வைணவர்களா, வேதாந்திகளா என உசாவுங்கால் இம்மூவருமின்றி திரியிடங்களுக்கு சார்பு நூல்கள் வரைந்துள்ள சமணமுநிவர்கள் என்றே பரக்க விளங்கும். இவ்வகை விளங்கும் கடவுள் என்னும் மொழிக்குப் பொருள் யாது கூறியுள்ளார் என்று ஆராயுங்கால்,

**11-வது நிகண்டுக்கரவெதுகை**

இகல்பகை வலிபோர் முப்பேரிகுளையே தோழி நட்பாம்
புகரென்ப மழைக் கோள் குற்றம் புற்கெனுநிறமுமுப்பேர்
நகமனையுகிர் மரப் பேர் நகை மகிழொளி சிரிப்பாங்
ககனம் விண்படை காடென்ப கடவுள் தே முநிநன்மைப்பேர்.

கடவுள் என்னும் மொழிக்கு நன்மை என்னும் பொருள் கூறி இருக்கின்றார்கள். இதை அனுசரித்தே கடவுள், கடவுளர், கடவுளர்கள் என்னும் மொழிகளும் பிறந்திருக்கின்றது. இவ்வகைப் பிறந்துள்ள கடவுள் என்னும் பெயரை யாருக்கு அளித்துள்ளார் என்று ஆராயுங்கால், சாக்கைய முநிவரையே ஆதிதேவனென்றும் ஆதி கடவுள் என்றும் வரைந்திருக்கின்றார்கள்.

**பின்கலை நிகண்டு - தெய்வப்பெயர் தொகுதி**

தருமராசன் முன்னிந்திரன் சினன் பஞ்சதாரைவிட்டே
யருள்சுரந்தவுணர் கூட்டுந்ததாகதன் ஆதிதேவன்
விரவுசாக்கையனே சைனன் விநாயகன் சினந்தவிர்ந்தோன்
அரசு நீழலிலிருந்தோன் அறி அறன் பகவன் செல்வன்

**சூளாமணி**

அதியங்கடவளை யருமறை பயந்தனை /
போதியங்கிழவனை பூமிசை யொதுங்கினை
போதியங்கிழவனை பூமிசை யொதுங்கிய /
சேதியஞ்செல்வநின் றிருவடி வணங்கினம்.

சாக்கையமுநிவரை ஆதியங்கடவுளென்று கூறியிருப்பது கண்டு அவர் பின்னடியார்களுக்கும் இக் கடவுள் என்னும் பெயருண்டோ என்று ஆராயுங்கால்,

**சீவகசிந்தாமணி – முத்தியிலம்பகம்**

தணக்குறிப்பறித்த போதுந்தானனை விடுத்தல் செல்லா
நிணப்புடையுடும்பனாரை யாதனானீக்கலாகு
மணப்புடைமாலைமார்ப னொரு சொலே யேதுவாகக்
கணைக்க வினழித்த கண்ணார் துறந்து போய்க் கடவுளானான்.

எனக் கூறியிருக்கின்றது.

நன்மெய்க்கடைபிடி என்னும் ஒரு சொல்லே ஏதுவாக இல்லந் துறந்து கடவுளானானென்னும் மொழியின் ஆதரவால் நன்மெய்க் கடைபிடித்த மகாஞானிகள் ஒவ்வொருவருக்கும் கடவுள் என்னும் பெயர் பொருந்தி நிற்கின்றன. இவ்வகை பொருத்தமுறும் கடவுள் என்னும் நன்மெயாஞ் செயலை புத்தசங்கத்தார் இல்லை என

கூறுகின்றார்கள் என்று அதன் பொருளறியா மற்ற சங்கத்தோர்க் குழறுவது வியப்பேயாம்.

அவ்வியப்புக்குக் காரணம் - சகஸ்திரநாம பகவனென்று கமல சூத்திரத்திலும், ஆயிர நாமத்தாழியன் திருவடி என்று மணிமேகலையிலும் கூறியுள்ள பெயர்களாகும் பிரமம், கடவுள், ஈசன், பகவன், பரமன் என்னும் புத்தருக்குரியப் பெயர்களை திவாகர நிகண்டு, சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, மணிமேகலை, சூளாமணி, கமலசூத்திரம் முதலிய நூற்களை

நோக்காமெயேயாம்.

*- 1:1; சூன் 19, 1907 –

நூற்களை நோக்கினும் நுட்பமறியாது ஆகாயத்தில் சகோரப்பட்சி உண்டோ இல்லையோ என உசாவுவது போல நிர்மலம் உண்டா இல்லையா நிற்குணம் உண்டா இல்லையா என உசாவுவோர்க்கு மாற்றம் மவுனமேயாம்.

அதாவது காணாத பொருளுக்குக் கடவுள் என்றும் ஈசன் என்றும் பகவன் என்றும் பரமன் என்றும் பிரமன் என்றும் கூறியுள்ளப் பெயர்களைக் கொடுத்திருக்கின்றார்களா அன்றேல் காணும் பொருளுக்கே இவ்வகைப் பெயர்களைக் கொடுத்திருக்கின்றார்களா என உசாவுங்கால், எழுவகைத் தோற்றங்களுள் மனுக்கள் ஆறாவது தோற்ற நல்வாய்மை - நற்காட்சி - நற்கடைபிடி - நல்லுணர்ச்சி - நல்லீகை - நன்னியதியமைந்த செயல்களுக்கிட்ட பெயர்கள் என்றே விளங்கும்.

இத்தகைய செயலின் மகத்துவம் அறியாதோர் ஓர் கடவுளில்லாமல் உலகம் உண்டாச்சுதா, குயவனில்லாமல் பாண்டம் உண்டாச்சுதா என வினவுவதும் உண்டு .

அங்ஙனம் வினவுவோர் குயவனுக்கு மண் காரணமாயிருந்தது போல் கடவுளுக்குக் காரணம் எதுவெனக் கண்டறிவாரேல் சிருட்டிகள் உண்டா இல்லையா என்பது

செவ்வனே விளங்கும்.

அல்லது கடவுள் என்னும் மொழிக்கும் சிருட்டிகள் என்னும் மொழிக்கும் பொருள் பொருந்துமா என உசாவுவரேல் பொருந்தாது, பொருந்தாதென்பதும் சிறந்து விளங்கும்.

சிறந்த விசாரணையற்று சருவமதத்திலும் உண்மெயுண்டென்று பரக்கக் கூறுவாறுமுண்டு. அங்ஙனம் கூறுவது மதத்துள் உண்மெய் உண்டா மக்களுள் உண்மெய் உண்டா என்னும் தன்மெய் உணரா தற்போதக் கூற்றேயாம். தற்போதக் சுற்றில் சருவமதஸ்தரும் தத்தங்கடவுளை தொழுது கொண்டிருக்க ஓர் கடவுள் இல்லை என்னலாமோ என வினவுவாரும் உண்டு.

ஒரு கடவுள் இல்லாமெயினால்தான் பலமதஸ்தர் பல கடவுளைத் தொழுது வருகின்றார்கள். பல கடவுள் செய்கையும் பதிகுலைந்துள்ள மெயால் அவர்கள் தொழுகையும் பயனில்லை என்பது பரக்க விளங்கும்.

அதாவது, சாதிதேசத்தை ஆளும் கூட்டை கலைப்பான் என்னும் ஓரரசனுக்கு குடி கெடுப்பான் என்னும் ஓர் மந்திரி இருந்தான். அத்தேசக் குடிகள் யாவரும் மந்திரியைக் கவனிக்காமல் அரசனுக்குக் கட்டவேண்டிய கப்பங்களைச் செலுத்தி காலங்கழித்து வந்தார்கள். இதை நாளுக்கு நாள் அறிந்து வந்த மந்திரி குடிகள் நமக்கொன்றும் கொடுக்காமல் மதோன்மத்தமராய் காலங்கழிக்கின்றார்கள். இவர்களை அடக்க வேண்டுமென்னும் கெட்ட எண்ணங் கொண்டான். அரசனை அணுகி, அரசே நமது தேசத்து மக்கள் உமமெ அவமதித்து வருகின்றார்கள் என்றான். அதைக் கேட்ட அரசன் ஏனென்னும் விசாரிணை இல்லாமல் அதற்கு யாது செய்யலாம் என்றான். மந்திரி மன்னனை நோக்கி அரசே, ஒவ்வோர் வீட்டிற்குத் தலைமெயானவனும் காலையில் அரண்மனைக்கு வந்து தம்மை சேவித்துப் போக வேண்டியது. அப்படி வராமற் போவார்களாயின் ஒவ்வொருவரும் பத்து பணம் ஆயம் செலுத்த வேண்டுமென தாங்கள் உத்திரவு பிறப்பிக்க வேண்டுமென்றான். அதைக் கேட்ட கூட்டைக் கலைப்பான் அரசனுக்குக் குதூகலம் பிறந்து தேசத்தோர்க்குப் பறையறைவித்து ஒவ்வொரு வீட்டிற்குத் தலைமெயானவனும் அதிகாலையில் அரண்மனைக்கு வந்து என்னைத்

தொழுது போக வேண்டியது. அப்படி வராதவர்கள் பத்து பணம் அயம் செலுத்த வேண்டுமென்று ஆக்கியாபித்தான்.

**- 1:2, சூன் 25, 1907 –**

அதுபோல் ஒவ்வோர் மனிதனும் தத்தமது சுகவிருத்திக்காம் ஏதுக்களை நாடி வித்தைவிருப்பென்னுங் காரண குருக்களின் போதங்களைக் கைக்கொள்ளாமல் காரியகுருக்கள் மதக்கடைகளைப் பரப்பி தத்தம் மதமே மதம் தத்தம் சமயமே சமயமென்னுங் கட்டுக்கதைகளை வரைந்து ஒட்டுச்சுவற்றிற்கு முட்டுக்கொடுப்பது போல் பொய்யிற்கு பொய் உபச்சரணப்பொய் என்னும் புராணமூட்டைகளைக் கட்டிவைத்துக் கொண்டு, பத்திரம் நமது சாமியை மறக்க வேண்டாம். வழக்கம்போல் எனக்குக் கொடுக்குந் துட்டில் குறைக்கவேண்டாம் இதுதான் நான் உங்களுக் கூட்டுந்துட்டு மதி என வஞ்சித்துப் பொருள் பறிக்கும் போதகராகும் பாதகர்களை நம்பி கல்வி விருத்தி கைத்தொழில் விருத்தியில் நின்று சுகஜீவனஞ்செய்து போஷிக்கும் வழிகளை மறந்து ஒவ்வொருவரும் அடிமெய்த் தொழில் புரிந்து அவர் கொடுப்பதை இரந்து தின்னுங் காரணம் யாதெனில், கடவுளென்னும் பொருளறியாக்கழற்றி நிலையேயாம். கடவுள் என்னும் பொருளறிந்தோன் நீதியினாலும் நெறியினாலும் வாய்மெயினாலும் அதனை விளக்குவான். கடவுளென்னும் பொருளறியாதோன் கடவுள் எங்கும் நிறைந்திருக்கின்றான். அவனுக்கு எல்லாம் தெரியுமெனத் தம்பட்டமடிப்பான். ஆனால் அன்னியனுடையப் பொருளை அபகரிக்குங்காலத்தும், அன்னியன் மனைவியை இச்சிக்கும் காலத்தும், அன்னியனை வஞ்சிக்குங்காலத்தும் எங்கும் நிறைந்த கடவுள் எல்லாமறியுங் கடவுள் பார்ப்பானென்னுஞ் சிந்தனாச் செயலுண்டோ, இல்லை. அதாவது, உண்மெயிற் சொல்லாததினாலேயாம்.

எங்ஙனமெனில், நமது தேயத்தில் வண்டி பாட்டைகள் செவ்வனில்லாகாலத்து வண்டிகள் மேடுபள்ளம் உராய்ந்து ஓடுங்கால், சக்கரத்துள் சொருகியிருக்கும் இரும்பு கம்பி அதாவது இரிசி உராய்ந்து ஓர்வகைக் கிரிச்சனக் கூச்சலிடுவது வழக்கம். அக்கூச்சல் இரவில் வண்டிகள் செல்லும்போது கூச்சலிடுமானால் நித்திரை பிடிக்காமல் அழுது கொண்டிருக்கும் பிள்ளைகளுக்கு பயமுறுத்துமாறு பிள்ளைகளுக்கு அந்த

சப்தத்தைக் கேட்கவைத்து இரிசி வந்து பிடித்துக் கொள்ளும். இரிசாத்தாள் வருவாள் என்று போதிப்பது வழக்கம். இவ்வகை சிறுபிள்ளைகளுக்கு பயமுறுத்தியப் பொய் இரிசியாத்தாளென்னும் மெய்யுருகொண்டு கறுப்புக்கோழி பலியும் கறுப்பு பிடவைதானமும் பெறுவதைக் காணலாம்.

காடுகளிலுள்ள ஏரிகளின் அருகே தண்ணீர் மோதுவது ஓர் விகார சப்தங் கொடுக்கும். வவ்வால் முதலிய பட்சிகள் சிலமரங்களிற் தொங்குங்கால் இளைகள் முறிந்து விழுவதும் காற்றினாற் சிலகிளைகள் முறிந்துவிழுவதும் வழக்கம். காடுகளில் வெட்டிவிட்ட மரங்களும் பட்டுப் போன மரங்களும் காவில் கருப்பாக ஆள்நிற்பதுபோல் காண்பது வழக்கம். இவைகளை அறிந்த பெரியோர்கள் சிலர் தங்கள் பிள்ளைகள் இரவில் வெளியிற் போகுங்கால் அப்பா காட்டேரி சப்தத்திற்கும் காத்தடியால் விழும் மரசப்தத்திற்கும், கருப்பாகக் காணுங் கட்டைத் துண்டுகளுக்கும் பயப்படாமற் போங்களென்று சொல்லுவது வழக்கம்.

- 1:8; ஆகஸ்டு 7, 1907 –

அவற்றுள் காற்றுக்குங் கறுப்புக்கும் பயப்படவேண்டாம் என்பதே கருத்தாம். இதனுட்கருத்தறியா உன்மத்தர் பிள்ளைக்கு காற்றணுகிவிட்டது கோழியேனும் ஆடேனும் பலி கொடுத்தால் தீருமென்பாராயின் அவ்வாக்கியத்தை சிரமேற்கொள்ளும் அறிவிலிகளும் அவ்வாறே செய்து வருகின்றனர்.

காட்டிலுள்ள ஏரியின் சப்தத்திற்கு பயப்படவேண்டாம் என்று கூறியுள்ள விவேகிகளின் வார்த்தையின் உட்பொருளறியா அவிவேகிகள் காட்டேரி வீட்டுப்பின்னாலிருந்து பிள்ளைகளை அடித்துவிடுவது வழக்கம். அதற்குக் கறுப்புக் கோழி தானங்கொடுக்க வேண்டும் என்று கூறியவுடன் அவர்கட் கண்ணலாம் விவேகிகள் அவ்வண்ணே நடத்தி வருகின்றார்கள்.

சில பாலபருவங் கடந்த ஆண் மக்களுக்கு சுகயீனமுண்டாகிப் பாயலிற் படுத்திருப்பதைக் கண்ட பெரியோர்கள் கன்னிமார் சொக்கலோ என்று பரிகசிப்பது

வழக்கம். அதுபோலவே பெண்மக்களில் பாலபருவம் கடந்தவர் களுக்கு சுகயீனம் உண்டாகி பாயலிற் படுத்திருப்பதைக் கண்ட பெரியோர்கள் அண்ணமார் சொக்கலோவென்று அகடிதங் கூறுவது வழக்கம்.

இத்தகைய அகடிதவார்த்தைகள் அறியா அவிவேகிகள் அண்ணமாருக்கு ஆடடித்துப் பூசைப்போடுவதும், கன்னிமாருக்குக் கோழியடித்துக் கும்பம் போடுவது மாகியச் செயலின் காரணம் யாதெனில் - அவ்வவர்க்குள்ள விசாரிணைக் குறைவும் அவிவேக நிறைவுமேயாம். விசாரிணையற்ற வீணர்கள் மதக்கடைகளைப் பரப்பி வாழ்க்கையுரும் மாக்களை அணுகி வணங்குங்கால் தத்தம் மதமே மதம், தத்தங் கடவுளே கடவுள் என்றிருமாப்புற்று மற்றோர் மதங்களையும் அன்னோர் கடவுளையுந் தூழித்து வீட்டுக்கடவுள், மேட்டுக்கடவுள், காட்டுக்கடவுள் யாவரும் பொய், யாங் கூறும் ஒரு கடவுளே மெய்யெனத் தம்பட்டமடிக்குங்கால் வெவ்வேறு மதத்தர் தத்தங் கடவுளொன் றென்று வரைந்திருக்கும் ஆதாரங்களைப் புகட்டி ஒவ்வொரு மதத்தரும் ஒவ்வொரு கடவுள் உண்டென்று கூறியிருக்க ஒரு மதத்தர் இல்லையெனக் கூறுதல் இதமாமோ என்றேய்த்தலும் உண்டு.

இங்ஙனம் ஏய்த்துப் பொருள் பறிக்கும் மதக்கடையார் தங்கடவுள் குணாகுணங்களையும் அன்னோர் செயல்களையும் ஏனையோர்க் கடவுளரின் குணாகுணங்களையும் அவரவர்கள் செயல்களையுங் கூர்ந்து விசாரிப்பரேல் அதினந்தரார்த்தம் பரக்க விளங்கும்.

அவ்வகை விசாரிணையின்றி ஊர் குடியைக் கெடுக்கும் உருத்திராட்ச பூனைகளும் வீட்டுக் குடியைக் கெடுக்கும் உபதேசி பூனைகளும், ஒன்றுகூடி தங்களுக்குள்ள பொறாமெய் பொய்ச் சாப்பு, பொருளாசை, புறங்கூறல் முதலியச் செயல்கள் தத்தங் கடவுளர்ச் செயலிலுங் காணலைக்கண்டுணராது கவிபாடுவோராதலின் விசாரிணையுரும் விவேகிகளைத் தூஷித்து விதண்டவாதம் புரிவது வீணேயாம்.

தங்களுக்குள்ள துற்செயல்களை துற்செயல் என்று அறியாதார் தாங்கொண்டாடுங் கடவுளின் துற்செயலை அறிவரோ ஒருக்காலும் அறியார்.

அன்னன்னோர் கடவுளரின் துற்செயலை அறியாதார் கடவுள் என்னும் வார்த்தையின் பொருளையும் அவ்வார்த்தையின் உற்பவத்தையும் அறிவரோ பல்காலும் அறியார்.

- 1:16; அக்டோபர் 2, 1907 –

ஒரு கடவுள் உண்டென்னும் நிலை யூர்ஜ்ஜிதமாயின் பல கடவுள் தோன்றும் பாங்கிரா பாங்குரினும் பற்பலகடவுள் துவேஷமிரா. துவேஷத்தால் கடவுளைத் தொழுவதாற் சாந்தமிரா.

இத்தியாதி கேடுகளும் ஆதி கடவுள் என்னும் மொழி வழுவி ஒரு கடவுள் என்னும் மொழிதழுவியக்கால் பொருளற்ற பலகடவுள் தோன்றிப் பாழாயின.

**சிவஞானவிளக்கம்**

கவ்வுண்டு நாசிமுனை காலால் கனலெழுப்பி
வவ்வுதனை யொவ்வாக் கமாட்டாமல் - தெய்வம்
ஒருவனே யென்பார் ஒன்று நூறாகித்
திரிவரே வீணே தினம்.

கடவுள் - தெய்வம் - யீசன் - பரன் - சிவன் எனத் தோன்றியப் பெயர்கள் ஒலிபற்றியப் பெயரா, செயல்பற்றியப் பெயரா, அதில் மக்கள் பெயரா, தெய்வப் பெயரா அங்ஙனந் தெய்வப் பெயராயின் அத்தெய்வங்கள் ஆகாயத்தினின்று தோன்றியவர்களா, மக்களினின்று தோன்றியவர்களா. அவற்றையும் விசாரித் துணர்வாரில்லை. கடவுளென்றும், தெய்வமென்றுந் தோன்றிய ஏழாவது தோற்றப் பெயர்கள் யாவும் அறாவது தோற்ற மக்களுள் பற்றற்றான் பற்றாகும் உண்மெய்ப் பற்றினின்று நாமரூபமென்னுந் துவிதமற்று தாய் வயிற்றினின்று பிறந்த பிறப்பற்று தானே தானேயத்துவிதமாய் மாற்றிப் பிறக்குஞ் செயல்பற்றியப் பிறப்பின் பெயர்களாம்.

**பட்டினத்தார்**

நீற்றைப்புனைந்தென்ன நீராடப்போயென்ன நீ மனமே
மாற்றிப் பிறக்க வகையறிந்தாயில்லை மாமறை நூல்
யேற்றுக்கிடக்குது எழுகோடி மந்திர மென்னகண்டாய்
ஆற்றிற்கிடந்துந் துறை தெரியாம லலைகின்றயே.

இருபிறப்பாளர் என்னும் அந்தணநிலையடைந்த ஏழாவது தோற்ற சாந்த தேயுவகநிலை அடைந்தவர்களின் பெ தெய்வம் இல்லையா என்று உசாவுங் கடாக்களுக்கு உரைமொழியின்றி ஆகாயப்பூ புதிதோ பழயதோ என்போனுக்கு மாற்ற முரைக்காதது போல் மவுனமுரலே மற்றாகும் காரணஞ் சொன்னதைச் சொல்லுங் கிளிபோல் பேச்சிலாடுவதுங் சுவர்க்கோழிப் பாடும்போல் கூச்சற்போடுவதுமாகிய விசாரிணையற்ற மக்களுடன் வாதுகூறல் இருதிற சுகமற்றுப்போம்.

**தாயுமானவர்**

எனதென்பதும் பொய் யானெனல் பொய் யெல்லா மிறந்தவிடங்காட்டு
நினதென்பதும் பொய் நீயெனல் பொய் நிற்கு நிலைக்கே நேசித்தேன்
மனதென்பதுவோ வென் வசமாய் வாராதைய நின்னருளோ
தனதென்பதுக்கு மிடங்காணேன் தமியே னெவ்வா றுயவேனே.

விசாரிணையில் விவேக மிகுத்தோர் வாக்கை நோக்குவார்களாக.

1:26; டிசம்ப ர் 11, 1907 –

(இத்தொடர் கட்டுரையும் தொடர்ச்சியாக வராமலும், நிறைவு பெறாமலும் நின்று விட்டது)

# 5. ஆடிமாதத்தில் அம்மனை சிந்திக்கும் விவரம்

**பின்கலை நிகண்டு**

மரகதவல்லி பூக மரநிழலுற்ற வஞ்சி
பரம சுந்தரியியக்கி பகவதி அம்மை யெங்க
ளருகனை முடி தரித்தா ளம்பிகையறத்தின் செல்வி
தருமதேவதை பேரம்பா லிகையென்றுஞ் சாற்றலாமே.

ஆயிரத்தி ஐந்நூறு வருடங்களுக்கு முன்பு தென் பரதகண்டத்துள் புந்நாட்டை அரசாண்டவனும் சீவகன் தாய்மாமனுமாகிய சாக்கைய சுந்திரவாகு என்பவனுக்கு ஓர் பெண்குழந்தை பிறந்து அம்பிகாதேவி என்னும் பெயரிட்டனந்த சீராட்டி வளர்த்து வந்தார்கள். பெண்களின் பேதை பருவமாகும் ஏழுவயதுக்குள் இனிய அமுதென்னும் தமிழட்சரங்களையும் மொழிகளையும் ஊட்டி அறிவை வளரச் செய்யுங்கால் பெதும்பை வயதாகும் பதினோராம் ஆண்டில் நமது அருகனாகும் புத்தபிரான் செயலையும் அவர் குணாதிசயங்களையும் நாளுக்கு நாள் கேள்வியுற்று அவர் பதுமாசன முற்றிருந்ததைப்போல் ஓர் சிறியச் சிலை செய்து அதை தன் முடியிற் கட்டிக் கொண்டு இடைவிடா நீதியின் சாதனங்களால் அவரை சிந்தித்துவந்தாள்.

இவ்வகை நிகழ்ச்சியால் மங்கை பருவமாகும் பதின்மூன்றாம் வருட முதித்து வதுவைகால வாக்கியங்கள் எழும்பிற்று.

அதைக் கேள்வியுற்று அம்பிகாதேவி தன் தந்தை சுந்திரவாகுவை அணுகி, எனது அருமெய்த் தந்தையே, நமது குலகுருவால் ஏற்படுத்தியுள்ள பெண்களின் ஞானசங்கத்திற் சேர விருப்புற்றிருக்கின்றேன், தடைசெய்யாமல் உத்திரவளிக்க வேண்டும் என வருந்தினாள்.

அதைக்கேட்ட அரசன் மனங்கலங்கி ஞான தேற்றலடைந்து குழந்தாய், பெண்களின் ஞானசங்கத்திற் சேரும் விருப்பம் உனக்கு பேதை பருவத்தில் இருக்க வேண்டும் அல்லது விவாக முடிந்து சிலகாலம் உன் புருஷனும் நீயும் சுகவாழ்க்கை கழிந்து உன்கணவன் புருட சங்கத்திலும், நீ பெண்கள் சங்கத்திலும் சேர வேண்டியது தருமகட்டளை. இதைத் தவிர்ந்து மங்கைபருவமுற்ற வதுவை பெண்கள் சங்கத்திற் சேர்க்கமாட்டார்களே யாது செய்யுதும் என்றான்.

அம்பிகாதேவி அரசன் முகத்தை நோக்கி என்னருமெய்த் தந்தையே, நீர் எவ்வித முயற்சியேனுஞ் செய்து பெண்கள் சங்கத்தில் என்னை சேர்த்துவிடல்வேண்டும் என வருந்தினாள்.

அரசன் மந்திரிப் பிரதானியரைத் தருவித்து தனது புத்திரிக்குந் தனக்கும் நடந்த விருத்தாந்தங்களை விளக்கினான். அதை அவர்கள் தீர்க்க ஆலோசித்து அரசே, உமது புதல்வியின் கழுத்தில் தாய்மாமனால் ஓர் பொட்டுக்கட்டி அறஹத்துக்களுக்கு அறிக்கைவிட்டு பெண்கள் சங்கத்திற் சேர்த்துவிடுவதே விதி என்றார்கள்.

உடனே அரசன் அம்பிகாதேவியின் தாய்மாமன் கந்தருவத்தனை அழைத்து சங்கதிகள் யாவையும் விளக்கி பொன்னினால் ஓர் பொட்டு செய்து சரட்டிற் கோர்த்து தன் புதல்வியின் கழுத்திற் கட்டும்படிச் செய்து சமணநீத்தோர் உத்திரவு பெற்று உமளநாட்டு வியாரத்துப் பெண்கள் சங்கத்திற் சேர்த்துவிட்டான்.

**அம்பிகா தன்மம்**

திருவளர்செல்வி தேவியம்பிகை /
யருமறைப் பீடிகை யாதனமுணர்ந்து
போதிமாதவன் பொற்கழலேந்தி /
யாதிதேவியென் றறவோர் போற்றும்
அவ்வையென்னு மைந்நெறிக்கிளத்தி /
செவ்வியதன்மம் செப்புவங்கேண்மின்
தென்பரதத்து துரை புந்நாட்டின் /
மன்னவன் சாக்கை சுந்திரவாகு
நற்றவத்துதித்த நானில முதல்வி /
பேதைப்பெதுமெய்ப் பாலையுங் கடந்து
மாதர் பருவ மங்கைமெய்யடைந்து /
அம்மையார் தன்ம சங்கமமரும்
மிம்மெயினோக்க மிகுதியினின்று /
தாதையையணுகி தற்பரன்வியார
சாதனமமருந் துரையருள் வீரென /
வோதியமொழியை உள்ளத்தமைத்து
தாதையு மந்திர சாதனர்க்கோதி /
மங்கைபருவம் வாய்ந்தமகட்கு
தன் தாய் மாமன் பொன்சரடிட்டு /
சமண நீத்தோர் தன்னுரைக்கொண்டு
அறவுரையென்று மடுத்துணர்திரிவி /
பிறவியம்பாசப் பந்தங்கழற்றி
பிடகமும்மொழிப் பிரித்துலகோர்க்குத் /
திடமுறுதிரிவா சகமதாவிரித்து
உமளநாட்டு வுமைவியாரத்துள்.

திரிபிடக விசாரிணையினின்று சிலசாதனங்கொண்டு உண்மெயுணர்ந்த ஆனந்தத்தால் பெண்கள் வியாரத்து எதிரிலுள்ள பூகமரமென வழங்கும் வேம்பு மாத்தடியில் வந்து உட்கார்ந்து பெரியோர்கள் முதல் சிறுவர்கள் வரையில் எளிதில்

உணருமாறு திரிபிடக தருமபோதங்களை எளிய வாசக நடையில் திரிவாசகங்களாக போதித்து வந்தாள். பிடகத்தை அறிவித்தவளாதலின் பிடகறி, பிடாறி என்று முதற்பேரளித்தார்கள்.

1:10; ஆகஸ்டு 21, 1907 –

பிடகறி பிடாறி என்னும் காரணப்பெயர் பெற்ற வேம்படியம்பாள் தான் மோன்னிலையால் அடைந்த ஞானவிழி பார்வையால் செல்லல், நிகழல், வருங்காலம் மூன்றின் பலன்களையும் குடிகளுக்கு விவரித்துவந்த காலத்தில் நாகைநாடு என்னும் - தேயத்தில் மழை குன்றி சாமளை என்னும் விஷப்பூச்சுக்களின் கொடூரத்தால் வைசூரி உவாந்திபேதி என்னும் மாறியாகிய வியாதிகள் தோன்றி மக்களும் விலங்கும் துன்புறுங்கால் குடிகள் பயந்து காவிரி உமளம் உமை வியாரத்துள் வேம்படி நிழலில் வீற்றிருக்கும் அம்மனிடஞ்சென்று விசாரித்தால் இம்மாறிக்கு ஏதேனும் பரிகாரஞ் சொல்லுவாள் என்னும் அவாக்கொண்டு உமளநாடணுகி அம்பிகையை சேவித்து நாகை நாட்டின் குறைகளை விளக்கினார்கள்.

அம்மன் உள்விழிநோக்கி மக்களை அழைத்து உங்கள் உள்ளங்களிலுள்ள அன்பையும் அறனையும் அகற்றி வஞ்சகம், பொறாமெய், பொருளாசைக், கெடுமதி இவைகளை நிரப்பிக்கொண்டபடியால் வானம் பெய்யாது சாமளை என்னும் விஷக்காற்று உங்கள் நாட்டிற் பரவி உயிர்களைக் கொள்ளை கொள்ளுகின்றது.

இப்பவும் உங்களுள்ளங்களில் உள்ளக் கள்ளங்களை அகற்றி இதயம் சுத்தஞ் செய்வதுடன் வீதிகளையும் வீடுகளையும் சுத்தஞ் செய்து மட்டிப்பால் புகை கற்பூரப் புகைகளை வீடுகள் எங்குங்கமழ நிரப்பி நிம்பத்தார் என்னும் வேப்பிலைத் தோரணங்களைக் கட்டுவதுடன் வீட்டின் வாயற்படிகளிலும் சொருகி பலதானியங்களை உப்பிடாமல் அவித்து ஏழைகளுக்கு தானங் கொடுப்பதுடன் பச்சரிசி மாவும் கூழுந் தானமளிப்பீர்களானால் இதய சுத்தத்தாலும், தேச சுத்தத்தாலும், வேப்பிலை மணத்தாலும், கற்பூரப்புகையாலும், அவிரிப்புகையாலும் சாமளைப் புழுக்கள் அகன்று கொள்ளை நோய் அகன்று குணம் அடைவீர்கள் என்ற வாக்கைக் கேட்டவுடன்

நாகைநாட்டுக் குடிகள் இதயசுத்தம் தேச சுத்தம் செய்ததுடன் அன்பைப் பெருக்கி தானம் அளித்த விஷயத்தால் கொள்ளை நோய் நீங்கி உள்ளம் குளிர்ந்தார்கள்.

சமணநீத்தோர் தண்ணந்தம் மருள் /
பெற்று காவிரிபூகநீழ
லுற்று யாக்கை யுண்மெயுணர்ந்து /
நாகை நாடு நடுக்குதுன் மாறி
வேக மாற்ற வுரவோர்க்கன்று
வன்பு மறனு மகலவிட்டீர்
துன்பக் கிருமி துடர்ந்த துள்ளம்
உள்ளக் களங்க மகற்றியூரின்
தெள்ளுந் தூசித் துடைத்து மட்டிப்
பாலின் புகையும் பூரப் புகையும்
நீலிப் புகையும் நிரம்பப் பயின்று
பாகு மாவுங் கூழும் பயிறும்
வேகுங் கும்பிக் கிட்டு மவித்து
உண்டி கொடுத்து வுயிரளிப்பீரேல்
பண்டை வினையின் பற்றறுப்பீர்காள்
நிம்பத் தாரி னிரை தோரணங்க
ளம்பலவீதி யெங்கு நிரப்பி வாய
நிலையிலு மாட மலைவிலும்
நேய நிம்பத் தார்மண மூட்டி /
யக ககவாரி யன்பி னிலையால்
தகை மும்மாரிப் பெய்து சாமளைக்
கிருமி யகன்றுக் கிருபாக் கடலா
மருக னருளும் வாய்மெயு முருமென
சாமளை யுற்ற சிலுகை விளக்கி
வாமன் பிடகம் வரையறுத்தோதி.

அம்மன் வாக்கினாற் சொன்னபடி நாகைநாட்டாரை வதைத்தக் கொள்ளை நோய் அகன்று சுகமுற்றவைகளைக் கண்ட ஒவ்வோர் அரசர்களும் குடிகளும் அம்மனை வந்து தாமரை புட்பத்தால் அர்ச்சித்துக் கொண்டாடுவதுடன் பலவகைப் புட்பங்களால் அம்மன் தேகத்தையும் மறைத்து ஆனந்தத்தியான முற்றிருக்குங்கால் அம்மன் சிறுவர்கள் முதல் பெரியோர்கள் வரையில் நீதிமார்க்கத்தினின்று நிருவாணசுகமடையும் போதி போதங்களாகிய திரிவாசகம், மூதுரை, ஞானக்குறள், இரத்தினகரண்டக முதலிய நூற்களியற்றி அரசர் கரங்களில் ஈய்ந்து மடங்களுக்கு அனுப்பி தசசீலாம் தங்களைப் பரவச்செய்து வந்ததுமல்லாமல் ஆதியங்கடவுளாகிய சாக்கைய முநிவரின் மும்மொழியும் மும்மொழிகளைத் தழுவிய நான்கு பேதவாக்கியங்களின் முடிவும் , மூலர் திரிமந்திரமும் நாயனார்த் திரிக்குறளும் நானியற்றியுள்ளத் திரிவாசகமுமாகிய நூற்களில் முநிவர் நூல் முதனூலும், நாயனார் நூல் வழிநாலும், மற்றும் நூற்கள் சார்பு நூற்கள் என்றும் விளக்கிக் காண்பித்தாள்.

முனிவன் கண்ட முதனூநிருவி /
இனியவழிநூ லியற்றனன் நாயன்
முதநூல் வழிநூல் முற்று முணர்ந்து
விதய மும்மறை முடி புரையாற்றி
படிமிசை மூவர் பெருதிரி மந்திரம் /
முடிபுரை யாற்றி மொழிந்தனர் சார்பாய்.
மூலர் மொழிந்த மந்திர மூன்றுஞ் /
சாலமொழிந்தேன் திரிவாசகம் யான்
மங்கை மாதர் வேராமஞ்சள் கெங்கை கிழங்கைக் கூட்டறைவித்து
தேகமெங்குந் தீட்டிக் குளித்து வேக சுன்னக் குங்கும மிட்டு

என்பதன் கருத்தோவெனில் மங்கைப் பருவமடைந்த மாதர்கள் மஞ்சள் கிழங்கை அறைத்து தேகமெங்கும் பூசிக் குளித்து மஞ்சளும் சுன்னமும் கலந்த சாந்திட்டுக் கொள்ளுவதால் விஷக்கிருமிகள் அகலும் என்பதேயாம்.

1:11; ஆகஸ்டு 28, 1907 –

எங்கெங்கு மழை குறைந்து புழுக்கந்தோன்றுகிறதோ அவ்வவ்விடங்களில் பதின்மூன்று வகை வைசூரியும் மூன்றுவகை பேதியுந்தோன்றி சீவர்களைக் கொள்ளைக்கொள்ளுவதற்கு கண்ணுக்குத் தோற்றா சாமளை என்னும் சிறுப் புழுக்கூட்டங்களே காரணமாயிருந்தது. அப்புழுக்கூட்டங்கள் அகலுவதற்கு வேப்பிலை கற்பரப்புகை, மட்டிப்பால் புகை, அவுரிப் புகை இவைகளை வீடுகள், வீதிகளெங்கும் கமழச்செய்து சீவராசிகளின் நாசியிலும் நாவிலும் புழுக்கள் நுழைந்து கொள்ளைக் கொள்ளுவதால் பல தானியங்களை உப்பிடாமல் அவித்துப் பச்சரிசிமாவு இடித்தும் அதில் வேப்பிலையைக் கலந்து சகலரையுஞ் சாப்பிடும்படி தானஞ் செய்வதால் உள்ளுக்கு நுழைந்த புழுக்கள் கழிந்து மாறி தோன்றாமல் நிற்கவும் போதித்து கொடியமாறி என்னும் கொள்ளைநோய் வெப்பத்தை ஆற்றினவளாதலால் கொடுமாறியை ஆற்றிய மாறியாத்தாள் மாறியாத்தாள் என்று கொண்டாடி வந்தார்கள்.

அம்மன் வாக்கில் தோன்றும் திரிகாலக்கியானங்களுக்கும் மகிழ்ந்து அரசர்கள் முதல் பல தேசக்குடிகளும் வந்து சூழ்ந்துக்கொண்டதும் அல்லாமல் சிம்மம், யானை, பாம்பு முதலிய ஜெந்துக்களுஞ் சூழ்ந்து அறவுரைக் கேட்பதுடன் அவரவர்களுக்குள்ள அந்தரங்கக் குறைகளையும் கேழ்க்கும்படி நெருங்கிய கோஷத்திற்கஞ்சி ஆகாயத்தில் எழும்பி சோதிரூபமாக அந்தரத்தில் நின்றுவிட்டாள்.

**ஞானவெட்டி**

வானத்தெழுந்த வாலாம்பிகைதன்னை /
மதியாலறிந்து கதியடையாமலும்
ஏனந்தனின் முளைத்தெழுந்த கொழுந்தை /
யிறுக்கினா னினிமுறுக்கிக் கிள்ளியே
ஞானப்பிரகாச மெய்ஞானவித்தாகையால் /
நாடிக் கருவூரில் நாதத்துடன் கூடி மீன மேஷ மறியாமல் குருவந்து வீணதாம் /
பூசைவிருதாவிற் செய்யவும். (பூசை.)

அவற்றைக்கண்ட குடிகளும் அரசர்களும் அந்தரத்துள்ள அம்மனை சரணாகதிக் கோரி வந்தித்ததின் பேரில் அம்மன் மறுபடியும் வேம்பு மரத்தடியில் வந்து உட்கார்ந்து அரசர்களை வரவழைத்து திரிபிடக வாக்கியங்களாகும் திரிசீலமே - தத்துவம், திரிசீலமே சத்தியம், திரிசீலமே - உத்தமம். அதுவே உங்களைக் கார்க்குந் தெய்வம் என விளக்கி திரிசீல ஜாக்கிரதம் ஜாக்கிரதம் என்று அருளி கொல்லா நோன்பு - குறளா நோன்பு, கள்ளாநோன்புகளாகிய திரி நோன்புகளையும் பதித்து வாக்குக் காப்பு, மனோக்காப்பு, தேகக்காப்பாகுந் திரிவிரதங்களையும் ஓதி தான் பரி நிருவாண மடையும் காலத்தையுஞ் சகலருக்குந் தெரிவிக்கச்செய்து ஆடிமாதம் பதிநெட்டாநாள் ஆதிவாரம் பௌர்ணமி திதியில் அம்மன் பதுமாசனத்திருந்து இருவிழிகளை மூடி சுகசமாதியுற்றக்கால் சுயம்பிரகாசசோதி உச்சியின் வழியாய் தீபம்போல் ஒளிர்ந்தது. அதைக்கண்ட அரசர்களும் குடிகளும் பதறிப் பிரலாபித்து தங்கடங்கட் கண்களில் தாரை தாரையாய் நீர்வடிய சிரமீது இருகரங்களைக் கூப்பி அம்ம வடிவுடையாட்டி - வால அம்பிகை - அறமுதற்செல்வி - ஆதி தேவி - உற்ற எண்ணமுறைக்கும் ஆயி - உள்ளக் குறையை அகற்றுஞ் சீலி - பச்சைப்பருவ பகவதி அம்பா உச்சியில் வளர்ந்த உள்ளொளிகண்டு நிட்சயமாக நிலைகுலைந்தோம் யாம் இனி யாவரால் அறவுரைக்கேட்டு ஆனந்திப்போம், யாரைநாடி ஆபத்து பந்துவென்போம், அம்மே எங்கள் வீடுகடோருங் குலதேவதையாயிருந்து கார்ப்பதுடன் கிராமதேவதையாக நின்று தோன்றும் இடுக்கங்களை நீக்குவதற்கு ஊர் காவற்காரியாகவும் காவலூர் அம்மனாகவும் விளங்கவேண்டும் அங்ஙனங் கார்க்குங் காப்பு நிட்சயமாயின் சிரசிற் தோன்றிய தீபம் ஓங்கி வளரவேண்டுமென்று கதறினார்கள். அவர்கள் கோரிக்கையின்படி உச்சியின் சோதி வளர்ந்து மறைந்தது.

வடநாட்டிற் சாக்கா என்றும், தென்னாட்டில் வள்ளுவர் என்று வழங்கும் கர்ம்ம குருக்களும், அரசர்களுங் குடும்பத்துடன் வந்து அவ்வை என்னும் அம்பிகா தேகத்தை தகனஞ்செய்து சாம்பலைக் காவிரிநீரில் விடுத்து தாங்களும் நீராடித் தங்கடங்களில்லஞ் சேர்ந்து,

மன்னை திகுவலின் ரவீற் நிலை

இரைக மலத்து கொண்டு வோது. குறையால் தேவா

**ஞானவெட்டி**

விட்டகுறை வருமளவு முபதேசங்காண் /
மெய்யுடலுந் தளர்ந்து புவி மேலு நோக்கி
தட்டழிந்துவிழும்போது வோதிவைந்த
சாத்திரத்தைக் கணப்போது முறைக்கபோமோ
எட்டிரண்டு மறியாதார் குருக்களாமோ /
என்னையினிப்பறையனென்று தள்ளலாமோ
மட்டமரும் பூங்குழல்வா லாம்பிகைப் பெண் /
வங்கிஷத்திலுதித்த சாம்பவனும் நானே.
என்று மொழிந்த இறையறச்செல்வி /
குன்றா மொழியின் குறிப்பை யறிந்தோர்
மாறியாற்று மகமாயென்று /
கூறி மன்னோர் குடி கடன்பால்
வீரு சிம்ம மரவோ டானை /
யூரு சூழ்ந்த விடுக்கங் கண்டு
சிந்தை நிரைத்த செல்வக் கிழத்தி யந்தர மெழுவி யருள்வடிவாகி
நின்றப் பேற்றை யுணர்ந்த வரயர் /
குன்றாக் குறையால் கோடமுற்றார்
வாலை யம்பிகை மகிழுளங்கொண்டு /
பேலின் கண்ணி விரவியென்தாய்
நிம் நீழல் நிரைக மலத்து /
உம்பர் போற்ற வுரவீற்றிருந்து
ஆலமர்ச் செல்வ னருளிய பிடக /
சீல மூன்றின் திடநிலையாகு
முத்த தத்துவ மெய்மெயோதி /
சுத்த சாதத் தூய நிலையாம்

நோன்பு மூன்றி னுட்பங் காட்டி /
ஆன்ற விரதக் காப்பு மருளி
தான் சென்றோங்கு சமாதி கால மான்ற வுலகோர்க் கூறுகவென்று
பருகடகத்துப் பதினெண் பாநாள் /
உருகதிர் வார முற்ற பூரணை
சிகிரி தீப சிற்சுக சோதி /
பாகிமுக முற்றப் பாங்கை கண்டோர்
அம்மை வல்லி யவ்வை யறத்தி /
உம்மை பிறிந்து முலகத் துய்வோ.

1:12, செப்டம்பர் 4, 1907 –

பொங்கு மாறி யாற்றிய வடிவை எங்கு கண்டு விரைஞ் சுவதென்தாய்
உந்தன் காவலூாருமுளத்து முந்து காக்கு முன்னவளாயின்
உச்சி சோதி யோங்கி வளர்ந்து பிச்சமருள்க பெருமுதல் வாணி
என்று மிக்க வேக்கமுறுகால் / பின்னும் வல்லி பகிர்முக்சோதி
நந்தாதிய நற்சுக மோங்கி எந்தாய் வளர்ந்து யேகமுற்றாள்
உற்ற யாக்கைக் குரியோர் நிமித்தர் / பெற்ற மன்னராவர் கைகொண்
டீமச்சுடலை யிட்டு பூதிச் சாமக்காவிரி நீர்விளையாடி
இல்ல மெங்கு மாதி தேவியை வல்லி வாணி மகமா யென்றும்
பாடி பாடி பல் பெயரிட்டு நீடுவாழ்க நிரை குலதேவி
சேரியெங்குஞ் சிறப் பறைவித்து நூறிபொங்கல் நோன்பு நூற்றி
யெங்குமெண்ணான் கறமது கொண்டு பொங்குஞ்சோற்றுக் கும்பநாட்டி
வரியோர்க்கூட்டி மநக்குறையாற்றி உரியவிரத முளத்திலூன்றி.

அன்னதானத்துக்காகும் பதார்த்தங்களை சேகரித்து அம்மன் பரிநிருவாணமுற்ற வேம்பு மரத்தடியில் வந்து பொங்கல்வைத்து எல்லோர் சோற்றையும் ஒரு போராகக் குவித்து ஏழைகளைப் பூர்த்தியாக சாப்பிடவைத்து அவரவர்களில்லங்களுக்கு அனுப்பிவிட்டு விவேகிகள் ஒன்றுகூடி அம்மன் பாலபருவமாதலின் வாலையென்றும், சகலமுந்

தெரிந்தவளாதலின் அவ்வை என்றும் இளந்தேகியாதலின் பச்சையம்மன் என்றும், அதிருபியாதலின் வடிவுடையம்மன் என்றும், குணக்குடியாதலின் மனோன்மணி என்றும், வேல்போன்று பிரகாசமுற்றக் கண்ணுடையவளாதலின் வேற்கண்ணி வேலாங்கண்ணியென்றும், கவிபாடும் பாணர் நிலையுற்றமெயின் வாணி என்றும், சரமாகும் வாசியைத் தன்வசந் திருப்பிக்கொண்ட மெயின் சரசுவதி என்றும், தாமரை புட்பாசனத்தில் வீற்றிருந்த மெயின் கமலாசனி என்றும், இராகத்துவேஷ மோகத்தை அகற்றினவளாதலின் திரிபுராந்தகி என்றும், முப்பத்தி ரண்டறங்களையும் விவரித்து சற்குருவின் தருமத்தைப் பரவச் செய்தவளாதலின் அறச் செல்வி என்றும், அவரவர்கள் இதயத்துள்ள இருளை அகற்றினவளாதலின் பகவதி என்றும் இஸ்திரீகளுக்குள் முதல் தேவியாக விளங்கினமெயின் ஆதிதேவி என்றும், சிரசினுச்சியிற் தீபம் போல் பிரகாசித்தமெயின் நந்தாவிளக்கென்றும்,

**சூளாமணி**

மௌவன் மலர்வேய்ந்து மது நாறு மணியைம்பாற்
கொவ்வைதுயில் கொண்ட துவர்வாய்க் கொடியோடொப்பா
டெய்வமணநாறு திருமேனிபுறங்காக்கு
மவ்வையரோடெய்திமுத வவ்வையடி சேர்ந்தாள்.

**மணிமேகலை**

சிந்தாதேவி செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே நாமிசை பாவா
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
யேனோ ருற்ற விடர்களை வாயென.

**சீவகசிந்தாமணி**

செந்தா மறைக்குச் செழுநாற்றங்கொடுத்ததேங்கோ
ளந்தாமரை யாளகலத்தவன் பாதமேத்திச்
சிந்தாமணியின் சரிதஞ் சிதர்ந்தேன் நெருண்டார்
நந்தாவிளக்குச் சுடர் நன்மணி நாட்டப்பெற்றே

பல்பெயரிட்டு சேரிகடோரும் அம்மன் வியாரங் கட்டிவைத்து அக்கட்டிடங்கள் வீதியிலிருக்குமாயின் திருவீதி அம்மனென்றும், மத்திய எல்லைக்குள்ளிருக்குமாயின் எல்லம்மன் என்றும் கழிகளின் ஓரங்களில் இருக்குமாயின் திருக்கழி அம்மன் என்றும், முல்லைநிலத்து இருக்குமாயின் துளிர்கானகத்தம்மன் என்றும், பனைமரச் சோலைகளிலிருக்குமாயின் கருக்கம்மன் என்றும் தண்டுகளிரங்குமிடத்தில் இருக்குமாயின் பாளையத்தம்மன் என்றும், நந்தவனத்தில் இருக்குமாயின் பூஞ்சோலையம்மன் என்றும் ஒவ்வோர் பெயர்களை வைத்து அம்மன் நிருவாணமுற்ற ஆடிமாதம் பௌர்ணமி திதி வருங்காலம் பத்து நாளைக்கு முந்தி அத்திருநாளில் அம்மனை உச்சாகப்படுத்தி ஆனந்திப்பதற்கு சேரிக்குள் வந்துள்ளவர்கள் வெளியேறாமலும் வெளியேறி உள்ளவர்கள் ஊர்வந்து சேரவும் கொலை, களவு, காமம், கள்ளருந்தல், பொய் முதலிய பஞ்சபாதகங்கள் அணுகாமலிருக்கவேண்டும் என்று காப்புக்கட்டி அம்மன் கழுத்தில் பொட்டுக்கட்ட வேண்டிய குடும்பத்தான் கரத்திலும் ஓர்காப்புக்கட்டி அவன் கையினால் அம்மன் பீடங்களை சுத்தி செய்து வைத்துக்கொண்டு ஒன்பதுநாள் வரையில் நீதியிலும் தருமத்திலும் உச்சாகமுண்டு செய்து பத்தாநாள் குடிகள் யாவரும் புதுப்பானைகள் கொண்டு பொங்கல் வைத்து எல்லோர் சாதத்தையும் ஒரேயிடத்தில் கும்பமிட்டு ஏழைகளைப் பசிதீரவுண்ணும்படிச் செய்து காவிரி நதியில் சேலை, குங்குமம், சந்தன தாம்பூலங்கள் விடுத்து ஏழைகளை எடுத்துக் கட்டிக்கொள்ளும்படிச் செய்து வந்தார்கள். அதையநுசரித்துக் குடும்பத்தோர்கள் குலதேவதையாகக் கொண்டாடி வந்ததுமன்றி மற்றுங் கிராமவாசிகளும் அந்தந்த சேரிகளில் அம்மன் வியாரங்கட்டி பகவன் உட்கார்ந்து நிருவாண திசையடைந்த அரசமரத்தையும் அம்மன் உட்கார்ந்து பரிநிருவாண திசையடைந்த வேம்புமரத்தையும் நாட்டி மெய்யறமாகும் புத்த தருமத்தை சகலருக்கும் ஊட்டி அம்மனால் ஓதிய முப்பத்திரண்டறங்களையும் பரவச்செய்து வந்தார்கள்.

1:13; செப்டம்பர் 11, 1907 –

**பின்கலை நிகண்டு - அம்பிகா தருமம்**

ஆதுலர் சாலை ஐயம் அறுசமயத்தோர்க் குண்டி
ஒதுவார்க் குணவிணோடாண் வத்திரமுடனே சேலை
மாது போகம் மகப்பால் மகப்பேறு மகவளர்த்தல்
வேதைநோய் மருந்துக்கெல்லாம் விலைகொடுத் துயிர்நோய் தீர்த்தல்.
கண்ணாடி பிறரில் கார்த்தல் கன்னிகாதானங்காவே
வண்ணார் நாவிதர் பெண்காத்தல் மடந்தடங்கண் மருந்து
தண்ணீர் செய்பந்தல் சோலைதலைக்கெண்ணெய் சிறைச்சோறோடு
பண்ணான விலங் கூணலகல் பசுவின் வாயிறை கொடுத்தல்.
அறவையாம் பிணமடக்கல் அறவைத்தூரியம் வகுத்தல்
நிறுவியோர்க்கிடங் கொடுத்தல் நிரையத்தீம் பண்டனல்கல்
உறுதியா யுண்மெய்வாய்ந்த வுத்தமமாகுமெண்ணான்
கறநிலை யன்பாலோது மம்பிகை தானமாமே.

இவ்வகை சிறப்புற்ற அம்மனைத் தமிழ்நாடெங்கும் உள்ள அரசர்களும் குடிகளும் சிந்தித்து வந்ததுமல்லாமல் சோழநாட்டுள் உம்பள கிராமமென்னும் வண்டுவாஞ்சேரியில் அவ்வை வியாரமென்றோர் மடமும் நாகைநாட்டில் வேற்கண்ணி வியாரமென்றும் வேலாங்கண்ணி மடமென்றுங் கட்டி அதில் நாகைநாட்டாருக்குற்ற இடுக்கணாகும் கொடுமாறி என்னும் கொள்ளை நோயை அகற்றி ஆரோக்கியம் பெறச்செய்தவளாதலின் அன்னாட்டார் அம்மனை விசேஷ உற்சாகமாக கொண்டாடி வந்தார்கள், இவற்றுள்,

**வீரசோழியம்**

போராக்க ரோரைவர்க்கற வமிழ்தம் பொழிந்தனையே
ஆரமிழ்த்தமணி நாகர் குலமுய்ய வருளினையே.

பாலி பாஷையில் நாகரென்றும் யீபுரு பாஷையில் இசரேல் என்றும் தற்காலம் சீனர் என்றும் வழங்கும் ஓர் கூட்டத்தாருக்கு உண்டாயிருந்த இடுக்கங்களை அகற்றி ஆதரித்த புத்தபிரானைக் கொண்டாடும் கூட்டத்தார் நாகைநாதர் வியாரமென்றும் ஓர் கட்டிடங்கட்டி புத்ததன்ம சங்கமென்னும் மும்மணிகளை ஆனந்தமாகக் கொண்டாடி வந்தார்கள்.

அதுபோல் வேலாங்கண்ணியம்மன் வியாரத்திலும் அம்மனாலோதியக் கொன்றுத் தின்னாமை என்னும் நோன்பையும் வாக்குக்காப்பு, மனோக்காப்பு, தேகக்காப்பு என்னும் மூவிரதங்களையும் அனுஷ்டித்துவருங்கால்,

தேகத்தால் யாருக்கேனும் ஓர் தீங்குசெய்து அத்தீவினையால் தங்களுக்கு ஓர் தீங்குண்டாகுமாயின் அம்மன் விரதத்தைக் கடந்து உபச்சாரத்திற்கு அங்கப்பிரதட்சணஞ் செய்துவந்து வேற்கண்ணி வியாரத்துள்ள பிட்சுணிகளை வணங்கி ஏழைகளுக்கு அன்னதானம் வஸ்திரதானங்கள் செய்தும்,

தந்நாவைக் காக்காமல் ஒருவரை வைதும் வடுக்கூறியும் வஞ்சித்தும் பொய்புகன்றுங் கெடுத்தத் தீங்கினால் தனக்குண்டான தீவினைகளை உணர்ந்து வெள்ளியினாலேனும் பொன்னினாலேனும் கம்பி செய்து குற்றஞ்செய்த தந்நாவுக்கலகிட்டு மோனத்துடன் வேற்கண்ணி வியாரம் வந்து பிட்சுணிக்களை வணங்கி நாவினால் செய்த குற்றங்களை விளக்கி அலகையும் தட்சணையையும் அதிபதிகளிடம் கொடுத்து அன்னதானம் வஸ்திரதானங்கள் செய்தும்,

தன்மனதைக் காக்காமல் போனப்போக்கில் விட்டு ஒருவரைக் கொடுத்தும் வஞ்சித்தும் காமவெகுளி மயக்கங்களைப் பெருக்கியுஞ் செய்த தீங்குகளினால் தனக்குண்டாய தீவினைகளையுணர்ந்து வஞ்சகத்தால் பொஞ்சித்தப் பொருட்களை வியாரத்துட் கொண்டுவந்து பிட்சுணி யதிபர்களிடம் அளித்து முப்பத்திரண்டு அறங்களையும் பரவச்செய்து வந்தார்கள்.

இத்தகைய தன்மர் ஆட்சியநிரைவில் குறைவு தோன்றி கொள்ளை நோய் கண்டு பாலபருவமுற்றப் பெண்களேனும் பிள்ளைகளேனும் பிராணவவத்தையில் இருக்குங்கால் தாய் தந்தையர்கள் ஆண்பிள்ளை அதியவத்தையிலிருக்குமாயின் அரசமரத்தடியிலிருந்து அருளறம் விளக்கிய ஆதி தேவனை சிந்தித்து குழவி துவராடையணிந்து ஆண்டவனுக்கடிமை என்று ஆண்பிள்ளைகள் மடத்திற் சேர்த்துவிடுவதும் பெண்பிள்ளை அதியவத்தையில் இருக்குமாயின் வேம்புமரத் தடியிலிருந்து வேதவாக்கியங்கள் மூன்றையும் விளக்கிய விண்ணவர் முதல்வியை வணங்கி குழவி சுகமுற்றவுடன் மஞ்சள் சரட்டில் ஓர் பொன் பொட்டைக் கோர்த்து கழுத்தில் கட்டி மஞ்சளாடை உடுத்தி அம்மனுக்கு அடிமையென்று பெண்கள் வியாரத்தில் விடுத்து ஞானசாதனம் அடையும்படிச் செய்து அரச தருவென்றும், இந்திரவிழா என்றும், வேம்பு திருவென்றும், அம்மன் விழா என்றும் கொண்டாடி நீதிமார்க்கத்தை நிலைபெறச்செய்து வந்தார்கள்.

யந்து உயிரைனடி வணங்கி உன் கண்ணிவியாம்
உள்ளத்துண்டா மூழதுகண்டோர் /
கள்ளத்துண்டக் கைப்பொருள் கொண்டும்
அங்கங்கொண்ட வகவினை கண்டோர் /
துங்கங்கண்ட தூளிலுருண்டும்
கலகமுண்டுக் காவாநாவில் /
அலகுமிட்டு வம் மைகாவ
லூருள்ளாயி தீபங்கண்டும் /
பேருள்வேயின் கண்ணிவியாரம்
போற்றியம்மை பொன்னடி வணங்கி !
யேற்றியெண்ணான் கறமது முந்தை
உண்டி யீய்ந்து உயிரை யோம்பர் /
பண்டைகாலப் பாங்கென்றெண்ணி
கூழு மாவுஞ் சோறிங்கொண்டு /
யேழைக்கங். கீய்ந்து வளர்ந்தும்
ஊழ்வினையற்று வுளமகிழற்கு /

சூழறமென்றே சூட்சியென்றுந்
தேம்பு மாறி தீக்குறிகண்டோர் /
வேம்படியம்மை வியாரம் விடுத்து
ஞானசங்கை நாடொரும் வினவி /
மோனவரம்பை முற்றுமெழுப்பி
அண்ணலறத்தையருளி /
பண்ணவளறத்தை பகர்ந்தனன் பார்த்தன்.

1:14; செப்டம்பர் 14, 1907 –

ஔவையார்கோவில் எங்குளதென்று அறிய வேண்டியவர்கள் மாயூரம் முத்துப்பேட்டை ரயில் பண்டி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கில் 7-வது மையிலிலிருக்கும் வண்டுறைவாள் மாறியம்மன் ஔவையார்க் கோவிலென்று கல்வெட்டில் எழுதியிருக்கும் அவற்றாலும் அடியிற் குறித்துள்ள பாடலாலுந் தெரிந்துக்கொள்ளலாம்.

**ஔவையார் துதி ஒருபோகுமயங்கிசைக் கொச்சகக்கலிப்பா**

மாமேவு சோனாட்டு வளஞ்சேரியும் பளநாட்டுத் தேமேவுவண்டுறைவாள் சேரியெனுந் திருப்பதியில்

**அராகம்**

மூதுரையென்றிசைக்கு நின்சொன் முது மறையை நிகர்ப்பதுதான்
யாதுரை யென்றிசைப்பனினி யெவனுரைக்குமி வ்வுலகம்
செல்வழியீ தெனஞாலந் தெளிந்திட நீமுனமுறைத்த
நல்வழியே வழியாக நான் மறையு நடக்குமால்,
மிருதிநூ லாகம் நூல் விளம்புவவெலாமுன நீ
கருதியருள் புரிந்துரைத்த கல்லூறியறவுரையால்

எவ்வயினு மெனையவரு மிசைப்பதிடை நிகழ்த்துமொழி
ஔவையர்வசன மிதென்றறியாதா ருளரேயோ.

இவ்வகை அன்பும் அமைதியும் ஆற்றலுமுற்ற தன்மராட்சியத்தின் வட எல்லை குமானிடர்தேசத்தில் ஓர்வகை மிலேச்ச சாதியார் வந்து குடியேறி யாசக சீவனஞ் செய்துக்கொண்டு வஞ்சினத்தாலும் மித்திர பேதத்தாலும் புத்த தருமங்களை மாறுபடுத்திவந்ததும் இல்லாமல் புத்ததருமத்தைச் சார்ந்தவர்களையும் தாழ்த்தி நிலைகுலையச் செய்யுங்கால் மகமதிய துரைத்தனத்தார் வந்து குடியேறி மிலேச்சர்களின் மித்திரபேதத்தால் மகமதியர்கள் செய்துவந்த இடுக்கண்களுக்கஞ்சி திரிசிரபுறத்திலும் நாகை நாட்டிலுமிருந்து புத்த தருமத்தைப் பரவச்செய்துவந்த தமிழ் வித்துவான்களாகும் பாணர்களும் யாழுடன் இசைகலந்து பாடும் யாழ்ப்பாணர்களும் இலங்கை முதலிய தீவுகளுக்குக் குடியேறினவர்கள் நீங்கலாக மற்றக்குடிகள் மகமதியர் மதத்தைத் தழுவியும் நின்றுவிட்டபடியால் நாகைநாட்டு நாகைநாதர்வியாரத்திருந்த பொன் சிலைகளைத் திருடி கொண்டுபோய் விற்பனைச்செய்து ஸ்ரீரங்கத்துள்ள புத்தமடத்தை மாறுபடுத்தி வேறுவகைக் கட்டிடங்களையும் மதில்களையுங் கட்டிக்கொண்டார்கள்.

இதன் மத்தியில் போர்ட்ச்கீய துரைத்தனத்தார் வந்து குடியேறிய போது வேற்கண்ணி அம்மன் வியாரமும் பாழடைந்து நிலைகுலைந்திருந்தும் வருடந்தோரும் ஆடிமாத பௌர்ணமியில் அம்மனை தெரிசிக்கும்படி தூர தேசங்களிலிருந்து வருங் குடிகள் வழக்கம் போல் வந்தும் திகைத்து நிற்பவர்களைக் கண்ட போர்ச்சுகீய குருக்கள் அதேயிடத்தில் தங்கள் மதக்கோவில் ஒன்றைக்கட்டி அம்மனை சிந்திக்கும்படிச் செய்து அம்மன் பெயரால் தட்சணை வருந் திரவியங்களை தன்மஞ்செய்யாமல் தங்கள் சுயப்பிரயோசனங்களுக்கு எடுத்துக் கொள்ளுகின்றார்கள். இதன் சரித்திரபூர்த்தியைத் தெரிந்துக்கொள்ள வேண்டியவர்கள் நாகைநாதர் பொன் விக்கிரகங்களை அபகரித்துக்கொண்ட சங்கதியை சிலாசாசன பதிவின் புத்தகத்திலும் திருமங்கையாழ்வார் சரித்திரப் புத்தகத்திலும் தெரிந்துக்கொள்ளுவதுடன் வேற்கண்ணியம்மன் வியார மாறலை மேற்சொன்னபடி சிலாசாசன புத்தகத்திலும் இலங்காதீவத்து வித்தியாதன சாலையிலுள்ள போர்ட்ச்சுகீயர் சரித்திரத்திலும்

தற்காலம் ஆடிமாதந்தோரும் நிரைவேறிவரும் அங்கட்பிரதட்சணவனுபவச் செயல்களினாலும் தெரிந்துக் கொள்ளலாம்.

புத்த, தன்ம, சங்கமென்னும் திரிமணிகளையே திரிசிரமாகக் கொண்ட திரிசிரபுரத்தில் ஸ்ரீ அரங்காமடம் என்றும் அழகாமடம் என்றும் வழங்கிய இந்திரவியாரமும் நாகப்பட்டிண நாகை நாதர் வியாரமும் அம்மன் வியாரமும் மாறுபட்டதுபோல, தென்னிந்தியாவிலுள்ள இந்திரவியாரங்களையும் அரசு விழாக்களையும் அம்மன் உற்சாகங்களையும் பலவகையில் மாறுபடுத்திக் கொண்டு தன்மத்தைச் சாதித்து வந்தவர்களையும் தாழ்ந்த சாதியாக வகுத்துத் தங்களைச் சார்ந்தவர்களுக்குப் போதித்து வந்ததுமல்லாமல் குடியேறி வருகிறவர்களுக்கும் போதித்து தாழ்ச்சியடையச்செய்து தருமங்களையும் மாறுபடுத்தி விட்டார்கள்.

1:15; செப்டம்பர் 25, 1907 –

அதாவது அரசு திருவென்றும் போதி பண்டிகை என்றும் கொண்டாடி வந்த பௌத்தர்கள் அரசமரத்தை எவ்விடத்தில் காண்கின்றார்களோ அங்கு சாக்கைய முநிவரை சிந்தித்து நீதிநெறியினின்று சுகவாழ்க்கைப் பெற்றுவருவதை புத்த தன்மத்திற்குச் சத்துருக்களாகிய பராயசாதியார் கண்டு அவற்றை மாறுப்படுத்திக் கெடுக்கவேண்டும் என்னும் பொறாமெயால் விவேகமற்றக் குடிகளை நெருங்கி நீங்களரசமரத்தடியில் சிந்திக்கும் முனியாண்டவனுக்கு ஆடேனுங் கோழியேனும் பலிகொடுத்து கள், சாராயம், அபினி, கஞ்சா , சுருட்டு முதலியவைகளை வைத்துப் படைப்பீர்களானால் உங்கள் கோரிக்கை நிறைவேறும். அவ்வகை செய்யாமல் வெறுமனே சிந்திப்பதால் யாது பயனும் அடைய மாட்டீர்கள் என்று மான் தோலைப் போர்த்திருக்குங் குக்கலைப்போன்று பெரிய மனிதன் எனச் சொல்லிக்கொண்டு திரியும் மிலேச்சர்கள் வார்த்தையை கல்வியற்றக் குடிகள் நம்பி அரச திருவின் ஆழ்ந்த சீலத்தை மறந்து கள்ளருந்துங் களவாணியில் நிறைந்து கேட்டுக்குப் போகும் வாசலைத் திறந்து கொண்டார்கள்.

அது பால் அம்மன் விழாவென்றும், வேம்பு திருவென்றும் கொண்டாடுங்கால் கிராமத்தில் வாழுங்குடிகள் ஒவ்வொருவரும் பத்துநாள் வரையில் கொலை, களவு, காமம், கள்ளருந்தல் பொய் முதலிய பஞ்சபாதகங் களை அற்றிருக்க வேண்டுமென்னும் காப்புக் கட்டி ஒன்பது நாள் வரையில் அம்மன் உற்சாகமும் அறநெறியுமூட்டி பத்தாநாள் கிராமக்குடிகளில் வீட்டிற்கு ஒருவர் புதுப்பானைகளும் அரிசி முதலியவைகளையுங்கொண்டு போய் அம்மன் பீடத்திடம் பொங்கல் வைத்து வாழையிலைகளைப் பரப்பி எல்லோர் பொங்கிய சாதங்களையுங் கும்பமிட்டு ஆறிய பின் ஏழைகளைப் பசிதீர உண்பிக்கச் செய்து ஆனந்தகோஷத்துடன் அவரவர்களில்லங்களில் சேர்ந்து சுகவாழ்க்கை யுற்று இருப்பதைக் காணும் பராயசாதியோர் இவ்வொழுக்கத்தைக் கெடுக்க வேண்டுமென்னும் பொறா மெயினால் தங்களால் ஏற்படுத்திக் கொண்ட கசிமல் சாதிக் கட்டுகளினால் ஒருவர் பொங்கலை ஒருவருடன் சேர்க்க விடாமலும், சாதங்களை ஒன்றாகக் கொட்ட விடாமலும் ஆடுகளையும், மாடுகளையும் கோழிகளையும் பலி கொடுக்கும்படி செய்து நல்லொழுக்கங்களை மாற்றிவிட்டார்கள்.

அம்மன் உற்சாகத்திற் செய்யும் நல்லொழுக்க தானங்கள் தீயோழுக்க நிலைக்கு மாற்றுவதற்கு ஆதாரம் யாதெனில்:-

அம்பிகையம்மன் நிருவாணத்திற்கு நெடுங்காலங்களுக்குப் பின் மதுரையில் கோவிலன் மனைவி கன்னகை என்பவளின் சிலம்பினால் நேரிட்ட துன்பத்திற்கு ஆற்றாமல் அவள் ஒரு புறத்து மார்பைத் திரிகியெடுத்து உதிரத்துடன் அரண்மனைமேல் வீசிய சாபத்தினால் பத்தினி விரதகோபம் பற்றிப் பாழ் நேரிட்டகாலமும் அக்கோபாவேஷந்தணிய ஆயிரமனிதர்களை பலியளித்த காலமும் ஆடிமாதம் ஆகையால் அக்காலத்தில் கன்னகா பத்தினியை வருஷந் தோரும் சிந்திப்பவர்கள் மனிதபலியைத் தவிர்த்து ஆடுமாடுகளை பலி கொடுப்பது வழக்கமாயிருந்தது. அவ்வழக்கத்தைக் கந்தி நெடுநிதியாகும் அவ்வையின் சுத்த தன்மத்திற் சேர்த்து பாழாக்கிவிட்டார்கள்.

**சிலப்பதிகாரம்**

கோமுறையறைந்த கொற்ற வேந்தன்
றான் முறை பிழைத்த தகுதியுங்கேணீர்
ஆடி திங்கள் பேரிருள் பக்கத் /
தழல்சோகுட்டத் தட்டமிஞான்று
வெள்ளிவாரத் தொள்ளெரியுண்ண /
வுரைசால் மதுரையோ டரசுகேடுருமெனு.
நிறங்கிளரருவிப் பரம்பின் றாழ்வரை /
நறுஞ்சினை வேங்கை நன்னிழற்கீழோர்
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே /
தொண்டதந்தொடு மின் சிறுபரைதொடு மின் கோடுவாய் வைம்மின் யெடு மணியியக்குமின் /
குறிஞ்சிபாடு மின் னறும்புகையெடுமின் பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின் /
பாவலும் பரவுமின் விரவுமலர்தூவுமின்
ஒருமுலை யிழந்த நங்கைக்கு /
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக்கெனவே.

புத்ததன்மத்தை மாறுப்படுத்தி மிலேச்சவதன்மத்தை நாட்டிய பராய சாதியோர் வஞ்சகபோதத்தை அறியா பேதைமாக்கள் சாந்ததேவியின் சுத்தசீல மெய்யறத்தை மறந்து தாங்கள் செய்யுந் துற்கன்ம தீங்குகட்காய்த் தோன்றுந் தீவினைகளைத் தீர்க்க ஆடுகளையும் கோழிகளையும் அறுத்து தங்கள் கிராமங்களைப் பாழடையச் செய்வதுடன் தாங்களும் பாழடைந்து போகின்றார்கள்.

இவ்வகைப் பாழுக்கெல்லாம் பராய சாதியோர்களே காரணமாயிருந்து செய்ததுமல்லாமல் சோழனுடைய நாட்டில் செத்த மாடுகளைத் தின்னும்படிச் செய்தும் வதைத்திருக்கின்றார்கள்.

**ஞானவெட்டி**

இந்தவிதமென்றறியாருலகினி லெந்தன் குலத்தையிகழ்ச்சிகள் பேசினார்
வந்தவிதி யென்றறியாத மாந்தர்கள் /
மாலப்பறையனென்றே சோழனூரினில் மாடுகள் செத்து மடிந்ததை கண்டவ /
ரோலமென்றேயதை யுண்ணும்படிச் செய்தார் பாடு பட்டுப் பலன் காணா தழியுமிப் பாவிகளெங்கள் பரநிலை காண்கிலர். (சாதியை)

தங்கள் தீவினையை மாற்றிக்கொள்ளுவதற்கு ஆடுகளையும் கோழிகளையும் பலிகொடுப்பதினால் முன்செய்த தீவினையுடன் சீவர்களைக் கொல்லுந் தீவினையுங்கூடி குடிகெடுக்குமென்று விவேகமிகுத்தோரால் கூறியுள்ள சிலேடைப்பா.

**பெருந்திரட்டு**

உங்கள் மக்களும் நீங்களும் நோய்பட /
எங்கள் மக்களும் யாங்களுமென் செய்தோம்
உங்கள் தீவினை யோடு முதலிடாய் /
எங்கள் தீவினை யேற்பது திண்ணமே.

1:16; அக்டோபர் 2, 1907 –

மனிதர்களையும் மாடுகளையும் குதிரைகளையும் சுட்டுத்தின்றுச் சோம்பேரிகளாய்த் திரிந்த மிலேச்சர்கள் மேன்மக்களாயதும் ஒழுக்கஞ், சீலம், ஞானம், விடாமுயற்சி, கருணை, யீகை முதலிய நற்குணமிகுத்த விவேகிகள் கீழ்மக்களாயதுங் காரணம் விசாரிணைக் குறைவேயாம்.

ஆடிமாத ஆதிவாரப் பௌர்ணமியில் சிந்திக்கும் ஔவையார் இயற்றியுள்ளத் திரிவாசகமாகும் நீதி நூலில் புலையுங்கொலையுங் களவுந்தவிரென்று கூறியிருக்க அவ்வம்மையை சிந்திக்கும் நாம் ஆடுமாடுகளை அவளுக்கு பலிகொடுத்தால் ஏற்பளோ, ஒருக்காலும் ஏற்காள்.

பௌத்தமார்க்க சுத்தசீலர்களின் குலதேவதையாக விளங்கிய சாந்த தேவிக்கு புட்பார்ச்சனையை விடுத்து உயிர்வதையாகும் பலி கொடுப்பதினால் அம்மன் நிருவாண காலத்தில் கொடுத்திருந்த வாக்கும் மயங்கி கிராமங்களுஞ் சீர்குலைந்து உள்ளக் குடிகளும் நாளுக்குநாள் பாழடைந்து வருகின்றார்கள்.

**மணிமேகலை**

சிந்தாதேவி செழுங்கலை நியமத்து /
நந்தா விளக்கே நாமிசைபாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி /
யேனோ ருற்ற விடர்களை வாயெனத் தான்றொழுதேத்தித் தலைவியை வணங்கி.

இவ்வகைத் தொழுகையில் சற்குருவையும், அம்மனையும் சீலத்தொழுகையால் சிந்திக்குந்தோறும் புட்பங்களைக்கொண்டே அர்ச்சித்து வந்தார்கள்.

**மணிமேகலை**

விரைமல ரேந்தி விசும்போடிழுந்து /
பொருவறு பூங்கொடி பூமியிற்பொலிந்தென வந்து தோன்றிய மணிமேகலா தெய்வ /
முந்தை பிறப்பெய்தி நின்றோள்கேட்ப.

**சீவக சிந்தாமணி**

தண்ணந்தீம்புன லாடி யதண்மலர் /
வண்ணவார் தளிர்ப் பிண்டியினானடிக்
கெண்ணியாயிர மேந்து பொற்றாமறை /
வண்ணமாமல ரேற்றிவணங்கினாள்.

சற்குருநாதனையும், ஔவையையும் தாமரை புட்பத்தைக்கொண்டு அர்ச்சித்துவந்தபடியால் மடங்களைச்சார்ந்தக் குளங்களில் எல்லாம் தாமரை புட்பத்தையே விசேஷமாக விளைவு செய்து வந்தார்கள்.

புத்ததன்மத்தினின்று ஔவையைப்போல் ஓடேந்தி மடத்திற் சேர்ந்து பிட்சுணி நிலை அடைந்த மாதவியின் மகள் மணிமேகலை என்பவள் நிருவாணதிசை அடைந்தபின் சாந்ததேவிகளில் ஒருவளாக விளங்கியபோது கம்பன் மகன் அம்பிகாபதி என்பவன் மணிமேகலையை சிந்தித்த பாடல்

காதன் மடந்தையர் கையறுங்கலையு மெய்யகலா
மேதகு நாணு மெலியவன்றோ விழிபோலு நெய்தற்லா
போதவிழ் மென்மலர்ப் புன்னையங்கானல் பொருந்துமிந்த
மாதவி பெற்ற மணிமேகலை நம்மை வாழ்விப்பதே.

புத்ததன் மத்தைச் சார்ந்து துறவடைந்து நிருவாணதிசையடைந்த ஆண்மக்களை தேவர்கள் என்றும் பெண்மக்களை தேவிகள் என்றும் கொண்டாடிவந்தார்கள்.

**சிலப்பதிகாரம்**

போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதானம் புரிந்த
மாதவிதன்றுறவுங் கேட்டாயோ தோழி
மணிமேகலை துறவுங் கேட்டாயோ தோழி.

கோவிலன் மனைவி கன்னகை என்பவளுக்குண்டான கோபாவேஷத்தை அடக்குதற்கு ஆயிரங் கொல்லரை பலிகொடுத்துவிட்டு மதுரையில் கண்ணகி பீடம் அமைத்து மனிதர் பலிக்கு பதிலாக ஆடு மாடு கோழி முதலியவைகளை பலி கொடுத்து வந்தார்கள்.

**சீவக சிந்தாமணி**

ஊன் சுவைத்துடம்புவீக்கி நரகத்தி லுரைதனன்றோ.
யூன்றுனா துடம்புவாட்டி தேவராயுரைதனன்

**சிலப்பதிகாரம்**

கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன் பொற்றொழிற்
கொல்ல ரீரைஞ் நூற்றுவ ரொருமுலை குறைத்த திருமாபத்தினிக் /
கொருபகலெல்லை யுயிர்பலியூட்டி
யுரை செல வெறுத்த மதுரை முதூர்.

கிராமதேவதையாய் இருந்து ஊர்க்குடிகளைக் காப்பாற்றும் வாக்களித்தவள், கன்னகை அன்று.

கிராம தேவதையாகவும், குலதேவதையாகவும், ஊர்க்காவற்காரியாகவும், காவலூர் அம்மனாகவும், இருப்பதாய் வாக்களித்து ஊழியாற்றோன்றுங் கொடுமாறியை அகற்றி ஆரோக்கியம் பெறச் செய்தவள் அம்பிகை என்னும் அவ்வையாதலின் அவளை சிந்திப்பவர்கள் சுத்த சீலத்தினின்று பொய், கொலை, களவு, கள்ளருந்தல், காம முதலிய பஞ்சபாதகங்களை அகற்றி தன்மசிந்தையைப் பெருக்கி சிந்திப்பதே சிந்தனையாகும்.

சாந்த தேவதையை சாந்தசீலத்தால் சிந்திப்போமானால் நமது கிராமங்கள் சிறப்படைவது இன்றி நாமும் சுகவாழ்க்கை அடையலாம்.

இதுவே சத்தியம்.

1:17: அக்டோபர் 9, 1907 –

# 6. மாளிய அமாவாசை என்னும் மாவலி அமாவாசி தன்ம விவரம்

ஆயிரத்தி இருநூறு வருடங்களுக்கு முன் தற்காலம் மாபலிபுறமென வழங்கும் பதியில் வீற்றிருந்த தென்பரதகண்ட முழுவதும் ஏகசக்கிராதிபதியாக ஆண்டுவந்த மாபலிச்சக்கிரவர்த்தி என்பவர் புத்ததன்ம சங்கம் என்னும் திரிரத்தினங்களைச் சிரமேற்கொண்டு தன் ஆளுகைக்கு உட்பட்ட தேசம் எங்கும் தன்ம சங்கங்களை நாட்டி நீதிகளையும், நெறிகளையும், வாய்மைகளையும், நிலைக்கச்செய்து குடிகள் யாவரையுஞ் சுத்தசீலத்தில் வைத்திருந்து தானுஞ் சங்கத்திற் சேர்ந்து சுத்தசாதனந் தழுவி புரட்டாசி மாத அமாவாசியிற் பூரணம் என்னும் நிருவாணதிசை அடைந்தார். இத்தென் பரத முழுமையுஞ் சங்கங்களை நாட்டி தன்மத்தைப் பரவச்செய்தப் பேறுபகாரத்தால் அனந்த மக்கள் ஹரஅத்து நிலையுற்று நிருவாணதிசை அடைந்தபடியால் தென்பரதத்திலுள்ள சகல மக்களுக்கும் முக்த்தி வழிக்கு முதன்மெயானவர் மாவலிச் சக்கிரவர்த்தியாதலின் அவர் நிருவணாதிசை அடைந்த புரட்டாசி மாதம் அமாவாசியில் சகலரும் ஏழைகளுக்கு தானஞ்செய்து தாங்களும் புத்ததன்மத்தைப் பரவச்செய்து வந்தார்கள்.

இதன் விவரங் தெரிந்துக்கொள்ள வேண்டியவர்கள் வேலார் திருவல்லக் கிராமத்திலும், குல்கான்பேடே என்னும் கிராமத்திலும் கிடைத்துள்ளக் கல்வெட்டுகளாலும், செப்பேடுகளாலும் தெரிந்துக்கொள்ளலாம்.

சுத்தசீலப் புத்தேளுலகிற்கு முதன்மெய்க் காவலாக விளங்குபவர் மாபலி பெருமானெனக் குறிப்பிட்டு மற்றும் விவரங்களையும் வரைந்திருக்கின்றார்கள்.

அவருக்கு ஆண் சந்ததி ஒன்றும் பெண் சந்ததி ஒன்றும் இருந்தது. இதில் ஆண்பிள்ளைத் திருப்பாணர் என்னும் அரசர், பெண்பிள்ளை அலர்மேலுமங்கை என்பவள், மடஞ்சார்ந்து பிட்சுணியாகிவிட்டாள். பாணர் வம்மிஷவாளிப் பட்டயத்தாலும், தாதைகி என்னும் அலர்மேலுமங்கை அற்புதத்திரட்டாலுந் தெரிந்துக்கொள்ளலாம்.

**அலர்மேலுமங்கை அற்புதத்திரட்டு**

மாவலிகடைநாட் கன்னியமாம் /
வரவையேற்றதன் மின் வாயல் தோற்றுமின்.
பூவலிசிகரம் பற்றி தீர்த்தம் /
பாயலேற்றுமின் பூவை பாற்றுமின்
காவில் புத்தூர் காவன் முன்னோன் /
காலன் தூற்றுமின் கருணையேற்றுமின்
சேவடி நீழற் சேரற்றானந் தேரவாற்றுமின் தேவர் போற்றுமின்.

**மணிமேகலை**

நெடியோன் குன்ற வாரசாரண /
ரடியார் தானவ ரமரர்களுலகக்
காவல் கொண்டக் கற்பக சீலன் /
மாவலி பெருமான் சீர்புகழ் திருமகள்
சிதாதகை யென்னுந் திருத்தகு தேவி /
போதவிழ் பூம்பொழில் புகுந்தனள் புக்கி.

ஓர்கால் பகவனால் லோகவூற்றைக் காண்பித்து வியாதியுற்றவர்கள் சிரமுதலிலுள்ள ரோமங்களைச் சிறைத்துவிட்டு இன்னீரிற் குளிப்பீர்களானால் சிற்சில ரோகங்கள் நீங்குமென்றுரைத்த நெடியோன் குன்றம் - வேங்கடமலை - வடமலை என வழங்குமிடத்தில் மாவலிச் சக்கிரவர்த்தியால் இந்திர வியாரங் கட்டி அதிற்றானும் புத்தசங்கத்தோருந் தங்கிஞானசாதன முற்றி புரட்டாசி மாதம் அமாவாசியில்

நிருவாணமுற்றபடியால் அக்காலத்தை மறவாமல் புத்த தன்ம பிரியர்கள் யாவருஞ்சென்று ஏழைகளுக்கு அன்னதானமளித்து உரோமங்கழித்து சுனை தீர்த்தத்தில் முழுகி சமணமுனிவர்களைப் போல் மஞ்சளாடை அணிந்து

அரசருக்குள் ஆட்சரிய துறவடைந்த கோவிந்தா கோவிந்தாவென்றானந்தக் கூச்சலுடன் மற்றும் வியாரங்களுக்குச் சென்று வருவது வழக்கமாயிருந்தது.

**சீவக சிந்தாமணி**

தீராவினைதீர்த்து தீர்த்தந் தெரிந்துய்த்து /
வாராக்கதியுரைத்த வாமன்றானியாரே
வாராக்கதியுரைத்த வாமன் மலர்துதைந்த /
காரார் பூம் பிண்டி கடவுணீயன்றே.
அம்மலைச்சினகரம் வணங்கியண்ணவர் /
பொன்மலர் சேவடி புகழ்ந்து பின்னரே
வெம்மலைத்தெய்வதம் விருந்து செய்தபின் /
செம்மல் போய் பல்லவ தேச நண்ணினான்.

**சூளாமணி**

என்றுதங்கதை யோடிரு நீண்டுகிற் குன்று சூழ்ந்த குழுமலர்
கானகஞ் சென்றோர்வேங்கடஞ் சேர்ந்தனருச்சிமே /
னின்று வெய்யவனு நிலங்காயத்தினான். மஞ்சிவர் மால்வரைச் சென்னிவடமலை /
விஞ்சையர் வாழும் விழாவணி நல்லுல கஞ்சியல் வில்லோ யது மற்றமரர்க /
டுஞ்சிய வில்லத் துறக்க மனைத்தே.

இத்தகைய தன்மச் செயல்களை மதக்கடை பரப்பி சீவனஞ்செய்வோர் மாவலி அமாவாசி தானத்தை மாளிய அமாவாசை என்று மாற்றியதுமன்றி வித்தை, புத்தி, யீகை, சன்மார்க்கம் நிறைந்த சுத்தவீரனாகும் மாபலியை தங்கட் கடவுள் மிதித்துக்

கொன்றுவிட்டாரென்று மாவலிச் சக்கிரவர்த்தியின் சிறப்பையுங் கெடுத்து தங்களுக்குஞ் சீவன உபாயத்தைத் தேடிக் கொண்டார்கள்.

மாபலி - பாணவம்மிசத்து அரசன்.

1:18; அக்டோபர் 16, 1907 –

பாணர்வம்மிஷ வரிசையைச் சார்ந்த மாவலிச் சக்கிரவர்த்தியின் புத்திரன் பாணரென்றும் திருப்பாணரென்றும் வழங்கிய ஒருவனிருந்தான். அவன் தனது இல்லறவாழ்க்கையைத் துறந்து திரிசிரபுரத்தைச் சார்ந்த அழகர் வியாரம் அரங்கா வியாரம் என வழங்கிய புத்ததன்ம சங்கத்திற் சேர்ந்து சீலமிகுதியடைந்தான். பெற்ற சுகத்தை ஏனையோரும் அடைய வேண்டும் என்னும் நல்லூர்க்கத்தால் விடியற்காலத் தெழுந்து ஒவ்வோர் கிராமங்களுக்குங் சென்று அடியிற் குறித்துள்ள வாக்கியங்களை போதித்துக் கொண்டே வந்தார்.

தந்தை தாய் பந்து மித்திரர் திரவியம் வீடுவாசல் முதலிய யாவற்றும் நிலையற்ற தாதலின் அதனை நீங்கள் நிலையென்று நம்பாமல் எச்சரிக்கையில் நடவுங்கள், எச்சரிக்கையில் நடவுங்கள்: காமக்குரோத வஞ்சின முதலிய திருடர்கள்.

உங்கள் தேகங்களுள் நுழைந்து ஞான மென்னும் இரத்தினத்தை அபகரிக்கும் வழிதேடுகிறார்கள் அவர்களுக்கு இடம் கொடுக்காமல் எச்சரிக்கையாயிருங்கள், எச்சரிக்கையாயிருங்கள்!

ஆசையென்னும் பாசத்தால் கட்டுப்பட்டு பூர்வகருமானு சாரத்தினால் பல சிந்தனையுள்ளவர்களாய் ஆயுளைக் குறைத்துக் கொள்ளுகிறீர்கள். இனியேனும் அவ்வகை யாசாபாசத்தில் அதியவாக் கொண்டழுந்தாமல் எச்சரிக்கையாயிருங்கள், எச்சரிக்கையாயிருங்கள்!

பிறப்பதுந்துக்கம் இறப்பதுந்துக்கம் பொருளை சம்பாதித்துந் துக்கம் அதைக் காத்தலுந் துக்கம் அது அழிதலுந்துக்கம். இத்துக்கமானது மாறாமல் அடிக்கடி நேர்ந்துக்கொண்டிருக்கின்றது. இதற்குக் காரணம் சமுசாரம் என்னும் பெருங் கடலாதலின் எச்சரிக்கையாயிருங்கள், எச்சரிக்கையாயிருங்கள்!

என்று நிதமும் போதித்துவந்த வாக்கியங்களை அரச வாக்கியம் என்றும், மடாதிய குருவாக்கியம் என்றும், உயர்ந்த நீதிவாக்கியம் என்றும் கொண்டாடி சுத்த சீலமுற்றதுமன்றி திருப்பாணரை என்றும் மறவா தியானத்தில் வைத்திருந்தார்கள்.

அக்கால் மதக்கடைப் பரப்பி சீவனஞ்செய்வோர் இடுக்கங்களினால் புத்தசங்கத்தோர் நசிந்து பலவிடங்களிற் குடியேறிவிட்டபோது அவர்கள் வியாரங்களைக் கைப்பற்றிக்கொண்டு தங்கடங்கள் மதக் கோவில்கள் என்று மாற்றிக் கொண்டதுமன்றி சங்கத் தோர்களையும் பறையாகளென்று தாழ்த்த விலகவைத்தவர்கள் ஆதலின், திருப்பாணர் சிறப்பையும் அவர் நீதிகளை மறவாமலிருந்தக் குடிகளின் மனதையும் மாற்றுவதற்காய் திருப்பாணர் என்னும் ஓர் பறையனிருந்தான், அவன் ஊரைக்காவல் வரும்போது சில நீதிகளைச் சொல்லிவந்ததுமன்றி எங்கள் சுவாமிக்கும் அன்பனாகிவிட்டபடியால் ஆழ்வார்களில் ஒருவனாகத் திருப்பாணாழ்வார் என மாற்றி அப்பெயரின் ஆதரவைக் கொண்டு தங்கள் மதக்கடையைப் பரப்பிவிட்டார்கள்.

சிவசமயத்தோரென்பவர் நந்தன் என்னும் புத்ததன்ம அரசனைப் பறையனென்று தாழ்த்தி சிலக் கட்டுக்கதைகளை ஏற்படுத்திவிட்டது போல் விஷ்ணு சமயத்தோர் என்பவர் பாணவம் மிஷத்தரசனை திருப்பாணரென்னும் பறையனென்று தாழ்த்தி சிலக் கட்டுக்கதையை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

புத்த தன்மத்தைச் சார்ந்த அரசர்களையுஞ் சங்கத்தோர்களையுந் தாழ்த்தி அவர்கள் சரித்திரங்களையும் மாறுபடுத்தியதுமன்றி புத்தசங்கத்தோர் நூற்களிலுள்ள வாக்கியங்களையும் மாறுபடுத்தி வைத்திருக்கின்றார்கள்.

பாகுபலி நாயனார், மார்க்கலிங்க பண்டாரம் இவர்கள் கைகளிலிருந்த ஏட்டுப்பிரிதிக்கும் மணிமேகலை, நன்னூல், சீவகசிந்தாமணி, வீரசோழியம் மற்றுமுள்ள சமணர் நூற்களில் சாக்கையர் சாக்கையர் என்னும் வார்த்தைகள் அன்னியரிடமுள்ள நூற்களில் சாவகர், சாவகர் என்று எழுதிவைத்திருக்கின்றார்கள், மலர்கலியுலகத்து மலர்கலியுலகத்து என்னும் வாக்கியங்களை மலர்தலை யுலகத்து மலர்தலையுலகத்து என மாற்றி வரைந்துவைத்திருக்கின்றார்கள்.

அடியிலுள்ளப் பாடல்களின் பேதங்களாற் காணலாம். பாகுபலி நாயனார், மார்க்கலிங்க பண்டாரம் இவர்களேட்டுப்பிரிதிகள்.

**மணிமேகலை**

சாக்கையராளுந் தலைத்தார்வேந்தன் /
ஆக்கையுற்றுதித்தன னாங்கவன்றானென.
நெடி யோன் குன்ற வாரசாரண /
ரடியார்தான வமரர்களுலகக்
காவல் கொண்ட கற்பகசீலன் /
மாவலிபெருமான் சீர்புகழ் திருமகள்
சிதாதகை யென்னுந் திருத்தகுதேவி /
போதவிழ்பூம்பொழில் புகுந்தனன் புக்தி.

**அன்னியர் கையேட்டுப் பிரிதிகள்.**

சாவகமாளுந் தலைத்தார்வேந்த /
னாவயிற்றுதித்தன னாங்கவன்றானென
நெடியோன் குறளுரு வாக நிமிர்ந்து /
தன்னடியிற்படி யடக்கியவந்தா
ணரிற் பெய்த மூரிவார்சிலை /
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்

சிதாதகையென்னுந் திருத்தகுதேவியொடும் /
போதவிழ் பூம்பொழில் புகுந்தனன் புக்குக.

1:19; அக்டோபர் 23, 1907 –

புத்தபிரான் மூதாதைக் கலிவாகுச் சக்கிரவர்த்தியின் காலக்கணிதமாகுங் கலியுலக திரியாங்கத்துள் (பாலி) புண்ணபட்சமென்றும் அமணபட்சமென்றும் வழங்கிய வார்த்தை வடமொழியில் பூரண சந்திரன், அமரச்சந்திரனென்றும் தென்மொழியில் பூரணகலை, அமரகலை என்றும், பூர்வவாசி, அமரவாசி யென்று வழங்கி வந்த வார்த்தைகளை தற்காலப் பஞ்சாங்கம் என்று ஏற்படுத்திக் கொண்ட பாவலர்கள் அதனுட் பொருளறியாது ஓலைச்சுவடிகளில்

அமரச்சந்திரன் அமரகலை, அமரவாசி என்று வரைந்திருக்கும் மொழியை (அமர) என்று அறியாது (அமா) என்று எண்ணி அமரவாசி என்பதை அமாவாசி என்று வழங்கி வருகின்றார்கள்.

காரணம் இலக்கியம் அறியா இலக்கண வித்துவான்களின் அந்தகாரமேயாம்.

சாக்கையர்கள் அண்டத்திற்கும் பிண்டத்திற்கும் வகுத்துள்ள கலை நூற்களில் தேகத்தின் நாசியினின்று வெளிவரும் சுவாசம் என்றும் கலை என்றும் வழங்கும் வாசியானது சுத்த இதயத்துடன் கலந்து பூரகம் என்னும் பூரணம் அடைந்த நிலையை நித்தியம் நிருவாணம் என்று கூறினார்.

சுவாசமானது ஆசாபாசஞ் கலந்த அசுத்த இதயத்துடன் கலந்து வெளிப்பட்டு தேய்வடையுமாயின் இருளென்னும் அமரமுற்று இறப்பா னென்றுங் கூறினர்.

அதுபோல் அண்டத்துள்ளக் கலை நாளுக்கு நாள் வளர்ந்து பூரணமுற்று உலகின் இருளை அகற்றி சருவ பொருளையும் விளக்குகின்றது.

பூரணமுற்ற கலை நாளுக்குநாள் தேய்ந்து அமரம் என்னும் இருளடைந்து சருவப் பொருட்களையும் மறைத்துவிடுகின்றது.

**ஞானக்குறள்**

மதிக்குள் கதிரவன் வந்துள்ளொடுங்கில் உதிக்குமாம் பூரணச் சொல்.
தோற்றுங்கதிரவ லுண்மதி புக்கிடில் /
சாற்று மமரம் தான்.

அமரபட்சம் - பூர்வபட்சம், அமரச்சந்திரன் - பூர்வச்சந்திரன், அமரகலை - பூர்வகலை, அமரவாசி - பூர்வவாசி என சுவாசத்தின் தேய்வுக்கும் வளர்ச்சிக்கும் பலனாகும் ஒளியை பூரணம் என்றும் இருளை அமரமென்றுங் கூறினார்கள்.

இருந்தும் ஓர் இமைப்பொழுது மறைந்து காணாச் சந்திரனை அமரச் சந்திரனென்றும், இருந்தும் மறைந்துக்காணா கோட்களுக்கு அமரக்கோட்களென்றும் இருந்தும் மறைந்துக்காணா தேவர்களுக்கு அமரர்களென்றும் வகுத்திருக்கின்றார்கள்.

**கடை காண்டம்**

இடைகலையே சந்திரகலை மதிதேய்ந்தாப்போ
லிலங்கியதோர் பிங்கலையுந் தேய்ந்து போச்சு
தடையாளஞ் சொல்லக்கேள் பதினாறு மாத
மப்பனே சிவயோகத் திருந்து பாரு
விடையாதே சந்திரகலை தேய்ந்து போச்சு
வேதாந்தனந்தியைப் போல் பேசலாச்சு
துடையாளிபோலிருந்த புரியபட்டந்தான்
தானே முடிந்ததடா வுண்மெய்ப்பாரே.

பூர்வகாலத்தில் மெய்யந்தணர்களை அறஹத்தோ அறஹத்தோ என்று அழைத்து அன்னமிட்டு வணங்கி தாங்களும் புசித்து சுத்த சீல தன்மத்தைப் பெருக்குஞ் சாதனங்களை மறந்து அரகரோ - அரகரோ என்னும் பொருளற்ற வார்த்தையைக் கூறுவது போல் அமாவாசி என்னும் பொருளற்ற வார்த்தையை வழங்கி வருகின்றார்கள்.

இத்தகைய புதைப்பொருள் வாக்கியங்கள் பொருளறியாது மயங்குவது பொய்க்குருக்களின் அறியாமையாயினும் பூர்வ புத்ததன்ம அரசர்களைப் பறையர்களென்று தாழ்த்தி சைவசமயத்தோர் கோவிலில் நந்தனென்னும் ஓர் பறையனையும், வைண சமயத்தோர் கோவிலில் திருப்பாணரென்னும் ஓர் பறையனையுஞ் சேர்த்துக் கொண்ட காரணம் யாதெனில்:

93 வருடங்களுக்கு முன்பு பிராமணரென்று சொல்லிக்கொள்வோர் களுக்கும் கம்மாளர் என்று அழைக்கப்படுவோர்களுக்கும் ஓர் பெருத்த கலகம் நேரிட்டது.

அதாவது பிராமணர்களென்போர் சகலசாதியோர்களுக்குங் குருக்களென்றும் சதுர்முகப்பிரமா முகத்திலிருந்து வந்தவர்களானபடியால் நாங்களே சகலசாதி யோர்களுக்கும் மேலான சாதிகள் என்றும் சகலருக்குள்ள தன்ம கன்மங்களையும் தாங்களே செய்யவேண்டியவர்கள் என்றும் கல்வியற்றவர்களை வஞ்சித்து சீவிக்குங்கால் கம்மாளருக்குள் சில விவேகிகள் தோன்றி தாங்கள் பஞ்ச முகப் பிரம்மாவால் பிறந்தவர்களென்றும் தாங்களே சகலருக்கும் தன் மகன்மங்களைச் செய்யவேண்டிய குருக்கள் என்றும் கூறி (நான் முகப் பிரம்மா கரடி முன்னிலையில், ஐந்து முகப்பிரம்மா கரடியை விட்டார்கள் ) அதனால் பொய்யுடன் பொய் மோதிக்கொண்டு பெருங்கலக முண்டாகி அடிதடில் நேரிட்டு கம்மாளர்களால் அடிப்பட்ட பிராமணர்களென்போர் தங்களுக்கு உதவிக்காக பறையர்கள் என்போர்களைச் சேர்த்துக் கொண்டு இடங்கையர் வலங்கையர் என்னும் இரு வகுப்புக்களை உண்டு செய்து கம்மாளர்களை இடங்கையரென்றுகூறி தங்களுடன் சேர்த்துக்கொண்டதுமன்றி,

1:20; அக்டோபர் 30, 1907 –

தாங்கள் செய்துக்கொண்டுவருந் தந்திரசீவனத்தை கம்மாளர்கள் என்போர் பற்றிக் கொள்ளுவதை உணர்ந்து அவர்களைத் தாழ்த்துவதற்காய் இடங்கையராக்கி சிவசமயத்தோர் கூட்டங்களில் பலசாதிகளிலும் ஒவ்வொருவர்களை நாயனார் மார்களிற் சேர்த்துக் கொண்டு கம்மாளர் என்போர்களை நீக்கியும் தங்களுக்கு அடங்கியக் கால் சேர்த்துக் கொள்ளுவதற்கும் சாதிப்பெயரில்லா நாயன்மார்களையுஞ் சேர்த்துக் கொண்டார்கள்.

அதுபோலவே விஷ்ணு சமயத்தோர்களும் தங்கள் பன்னிரண்டு ஆழ்வார்களுக்குள்ளும் சேர்த்துக் கொண்டார்கள்.

பறையர்கள் என்போர் பிராமணர்கள் என்போர்களுக்கு புத்த மார்க்கப் பூர்வ விரோதிகளாய் இருந்தபோதிலும் பூர்வ நிலைகுலைந்து ஆயிரத்தி ஐன்னூறு வருடம் கடந்துவிட்டபடியால் சற்குருவின் தியானத்தையும் பூர்வ தன்மங்களையும் மறந்து தாயைப் பறிகொடுத்தப்பிள்ளைகளைப் போல் திகைத்து நின்றவர்களாதலின் பிராமணர்கள் என்போர் போதனையிற்சிக்கி கம்மாளர்கள் என்போரை எதிர்த்துப் போர் செய்ய ஆரம்பித்துக் கொண்டார்கள். அதனால் பிராமணன் என்போருடன் இருந்த விரோதம் போதாமல் கம்மாளர் என்போர் விரோதத்தையுஞ் சேர்த்துக் கொண்டு பறையர்கள் என்னும் பெயரையுந் தாழ்வையும் அதிகரிக்கச் செய்துக் கொண்டார்கள்

இத்தியாதி தாழ்வுகளுக்கும் காரணம் கல்விக் குறைவும், செல்வக் குறைவும், விசாரிணைக் குறைவும், சற்சங்க சாவகாசக் குறைவுமேயாம்.

ஓர் விவேகியைப் பத்து பெயர்க் கூடிக்கொண்டு இவன் நீச்சன், கேவலன், தாழ்ந்த சாதி என்று புறக்கணித்து வருவார்களாயின் நாணமுற்று சீர்கெட்டு நாளுக்குநாள் நலிந்து விவேக மயங்கி நிலைகுலைந்துவிடுவான்.

ஓர் யாசகனைப் பத்துப்பெயர்க்கூடி இவன் பெரியோன், விவேக மிகுத்தவன், உயர்ந்த சாதியான் , சகலமுந் தெரிந்தவன் என்று உயர்த்திக்கொண்டே வருவார்களாயின் நாளுக்குநாள் உயர்ந்து விவேகமிகுத்து நாகரீகமுற்று சகல சுகமும் பெற்று வாழ்வான்.

அதுபோல் வித்தை, புத்தி, யீகை, சன்மார்க்கம் நிறைந்து சோதிடம், வைத்தியம், ஞானம் என்னும் முக்கலைகளுக்கும் குருபீடங்களாக விளங்கிய மேன்மக்களைப் பெருங்கூட்டத்தார் சேர்ந்துக்கொண்டு பறையர், பறையர் என்று தாழ்த்தி சுத்தசலங்களை மோர்ந்து குடிக்கவிடாமலும் அம்மட்டர்களை சவரஞ்செய்ய விடாமலும், வண்ணார்களை வஸ்திரம் எடுக்கவிடாமலும் பலவகை இடுக்கண்களைச் செய்து நிலைகுலைத்தபடியால் அவிவேக மிகுத்த அற்பர்களுந் தாழ்த்தி அலக்கழிக்க நேரிட்டுவிட்டது.

இத்தேசத்தில் நூதனமாக ஏற்படுத்திக் கொண்ட சாதிக் கட்டிற்கு பயந்து சிலர் மகமதியர்களாகவும், சிலர் கிறிஸ்தவர்களாகவும் சேர்ந்துவிட்டதன்றி மற்றுமுள்ளோர் தங்கள் பூர்வநிலயை உற்றுநோக்காமல் சத்துருக்களை மித்துருக்கள் என்று எண்ணி அன்னியனுக்குப் பெற்றப் பிள்ளையைத் தன்பிள்ளை என்று தாலாட்டுதல் போல அன்னியர் மார்க்கங்களை தங்கள் மார்க்கங்கள் என்றும், அன்னியர் தேவதைகளைத் தங்கள் தேவதைகள் என்றும் கொண்டாடி கஷ்டார்ச்சித சொத்துக்களையும் அழித்து விடுகின்றார்கள். இத்தகைய மயக்கத்தில் ஆழ்ந்துள்ளோரைத் தெளிவடையச் செய்து பூர்வ நிலக்குக் கொண்டுவரவேண்டியது விவேகிகளின் கடனாம்.

121; நவம்பர் 5, 1907 –

# 7. தீபாவளி பண்டிகை என்னும் தீபவதி ஸ்னான விவரம்

தற்காலம் ஜப்பான் தேசத்தோர் என வழங்கும் பௌத்தமார்க்கத்தோர் ஆனந்தச் செய்கைகள் யாதெனில், அவர்கள் விவேக விருத்தியில் நூதனமாகக் கண்டுபிடிக்கும் கனிவர்க்கங்களையும், நெய்வர்க்கங்களையும், விருடச் வர்க்கங்களையும் விருத்தியடையச் செய்து பலன்களை நுகர்ந்துவருங்கால் அப்பொருட்களைக் கண்டுபிடித்தக் காலத்தை வருடத்திற்கு ஒருமுறை கொண்டாடவேண்டி வீடுகடோரும் அப்பொருளைக் கொண்டுவந்து வைத்துக்கொண்டு நூதன ஆடைகளணிந்து பலவகை பதார்த்தங்களை வட்டித்து ஏழைகளுக்குக் அளித்துத் தாங்களும் உண்டு ஆனந்தித்து வருவதை நாளது வரையிலும் காணலாம்.

அதுபோல் இத்தேசத்தில் சத்தியதன்மமாகும் புத்தமார்க்கம் பரவி இருந்த காலத்தில் புத்த சங்கத்தோர் ஒவ்வோர் மடங்களிலும் வீண்காலங்களைப் போக்காமல் ஞான விசாரிணைகாலம் நீங்கலாக மற்றகாலங்களில் விருட்ச குணாகுணங்களையும், கனிவர்க்க குணாகுணங்களையும், நெய்வர்க்க குணா குணங்களையும், மற்றும் உலோகோபகார கலை நூல் விருத்திகளிலும், தங்கள் தருமத்தைப் பரவச்செய்து அரசர்களுக்குத் தெரிவித்துவருவது வழக்கமாய் இருந்தது. அதுபோல் (எள்) என்னும் ஓர் தானியத்தைக் கண்டு அதிலுள்ள நெய்யை எடுத்து அவுஷத உபயோகத்தில் விடுத்து அடியிற் குறித்துள்ள குணாகுணங்களைக் கண்டுபிடித்து அக்கால் தென்பரதத்துள் பள்ளி என்னும் நாட்டை அரசாண்டுவந்த பகுவன் என்னும் அரசனுக்குத் தெரிவித்தார்கள்.

**பதார்த்த சிந்தாமணி**

நேத்திரக் கபால ரோகம் நீங்கிடுஞ் சுரங்கள் மேகங்
காத்திரமான சேத்மம் கறைந்திடு மலத்திரட்சை
மாத்திடுஞ் சோமரோகம் வளரெலும் புருக்கியீளை :
சேத்த நல்லெண்ணெ யாலே தேகமுங் காந்தியாமே.

அவன் அதின் குணாகுணங்களை ஆராய்ச்சிச் செய்து எள்ளை மிக விளைவித்து நெய்யெடுத்து தன் தேசக்குடிகள் யாவரையும் வரவழைத்து எள் நெய்யைக் கொடுத்து சிரசில் தேய்த்துக் கொண்டு அருகிலோடும் தீபவதி என்னும் நதியில் தலைமுழுகச் செய்து மற்றும் அந்நெய்யில் பலகாரங்களும் வட்டித்து புசித்து ஆனந்தங்கொண்ட செய்கையை மாறாமல் வருடந்தோருஞ் சகல குடிகளும் எள்ளின் நெய்யாற் பலகாரம் செய்து தீபவதி நதியில் தலைமுழுகி புதுவஸ்திரம் அணிந்து ஏழைகளுக்கு அன்னதானம் செய்து (நல் எள் நெய் ) நல்லெண்ணெய் கண்டுபிடித்த அற்பிசிமாதச் சதுர்த்தசி நாளை தீபவதி ஸ்னான நாளென வழங்கி வந்தார்கள்.

**பெருந்திரட்டு - பாண்டிப் படலம்**

பள்ளியம்பதியிலார்ந்த பகுவனார்கிழவகாலந்
தெள்ளியலுழவிலூறுஞ் சேர்புநல் புஞ்சைவாவி
எள்ளகவெண்ணெயாய்ந்த விடய மற்றவர்குறிப்ப
வெள்ளியல் மற்றாகார மேற்சிரமகிழ்வென்றாங்கே
சிரமுருவெள்நெய்மற்றுந் திரளொடு செந்நெலியந்து
கரமுகிலேந்திகங்கைக் கரைதீபவதியை நாடித்
துரமுறத் தோய்ந்து நீரிற் றுவைந்து மெய்யாக நிறப்ப
பரவருமசதி மற்றும் பாயிலு மகலுமென்றான்.

1:21; நவம்ப ர் 6, 1907 –

இத்தகைய வழக்கமானது புத்ததன்மம் இத்தேசமெங்கும் பரவியிருந்த காலத்தில் கனவான்கள் முதல் ஏழைகள் வரையில் இப்பண்டையீகையை ஆனந்தமாகக் கொண்டாடி வந்தார்கள். அதன்பின் பராயசாதியோர் வந்து குடியேறி புத்ததன்மத்தை நிலைகுலையச் செய்து மதக்கடைகளைப் பரவச்செய்தக்கால் பொய்க் குருக்களை அடுத்த குடிகள் கல்வியற்றவர்களும் விசாரிணை அற்றவர்களும் ஆதலின் தங்கள் குருக்களை நாடி தீபவதி " தீபவெளி - தீபாவளி என்னும் வாக்கிய பேதம் அறியாமல் சுவாமி இப் பண்டிகையின் விவரம் என்ன என்று உசாவுங்கால் குருக்களே பிராமணர்கள் என்று புதுவேஷம் இட்டு பிச்சை ஏற்பவர்களாதலின் அவர்களுக்கு இதன் அந்தரங்கம் தெரியாமல் குடிகளின் வார்த்தைகளைக் கொண்டே அதன் நடவடிக்கைகளை உணர்ந்து மலையை ஒத்த ஓர் அசுரன் இருந்துக்கொண்டு மாட்டையொத்த தேவர்களுக்கு இடுக்கங்கள் செய்தபடியால் அவ்வசுரனை ஓர் தேவன் கொன்று தேவர்களுக்கு சுகஞ் செய்தநாளாகையால் நீங்கள் தலைமுழுகி புதுவஸ்திரம் அணிந்து பலகாரஞ் சுட்டுத் தின்பதென்னும் கட்டுக்கதையை ஏற்படுத்திவிட்டதும் அல்லாமல் அதன் மத்தியில் தங்கள் வயிற்று சீவனவழியையும் தேடிக்கொண்டார்கள்.

அதாவது தீபாவளி மறுநாள் நோன்பு ஒன்றிருக்கின்றது. அந்தநாளில் நீங்கள் சுடும் பலகாரங்கள் யாவையும் நாங்கள் நிறுத்துங் கலசத்திடம் வைத்து வீட்டில் எத்தனைப்பெயர்கள் இருக்கின்றீர்களோ அத்தனை சிவப்புக் கயிறு வாங்கி வைப்பீர்களானால் நாங்கள் அதற்கு மந்திராவாகனஞ் செய்து கொடுக்க நீங்கள் கட்டிக் கொள்ளுவீர்களானால் உங்களுக்கு செல்வம் பெருகும் என்று சொன்ன வார்த்தைகளை தேவர்கள் என்பது யார், அசுரர் என்பது யார், நோன்பென்பது என்ன என்று அறியாத குடிகள் வீடுகடோரும் தட்சணை யீய்ந்த நூலை வாங்கிக் கட்டிக் கொண்டுவருகின்றார்கள்.

ஆனால் நோன்புக்கயிற்றை நாங்கள் கட்டிக் கொள்வதால் செல்வம் பெருகும் என்று சொல்லுகின்றீர்களே அவ்வகையிற் சிறந்த கயிற்றைத் தாங்கள் ஏன் கட்டிக் கொள்ளுவதில்லை என்று கேட்பாரில்லை.

புத்ததன்ம காலத்தில் நோன்பு என்னும் பெயரும் அதன் விதிகளும் யாதெனில், நோன்பென்பது கொன்றுத்தின்னாமெய் நோன்பென்பது கணவன் பாற் குறளாமெய், நோன்பென்பது களவு செய்யாமெய், ஆகுஞ் சுத்ததேக வாழ்க்கையை விரும்புதலே நோன்புகள் நோற்றலென்னப்படும்.

அந்த தேகவாழ்க்கை நோன்புகளின் விரதம் யாதெனில், தன் தேக சுகத்தைப் போல் மற்ற சீவராசிகளின் தேகங்களையுங் கருதி அன்னியப் பிராணிகளைக் கொல்லாமலும் மாமிஷ பட்சணங்களைச் செய்யாமலிருக்கும் நெறியில் நிற்கவேண்டும் என்று நோன்பு நோற்றல் அதாவது அந்நற் செய்கையில் நிற்றல் வேண்டிய வைராக்கியத்திலிருத்தல்.

பெண்களுக்குரிய நோன்புயாதெனில், கணவன்பாற் குறளாமெய், அதாவது தன் கணவன் வார்த்தைக்கு எதிர் மொழி பேசாமலும் மிருதுவான வார்தையின்றி கடுஞ் சொற்கூறாமலும் இனிமையிலிருப்பேன் என்று நோன்பு நோற்றல். கணவன் மொழிக்கு இனியமொழி அளிப்பேன் என்று வைராக்கியம் வைத்தல்.

கள்ளாமெய் நோன்பு யாதெனில், அன்னியன் பொருளை அவனுத்திரவின்றி புருஷர்களேனும் பெண்களேனும் தங்கட்கைகளில் எடுக்கக் கூடாது என்றும் அப்பொருளை எடுக்கவேண்டும் என்று மனதில் எண்ணாமலும் இருக்க வேண்டும் என்றும் நோன்பு நோற்றல் அதாவது அன்னியர் பொருளை தேகத்தாலும் எண்ணத்தாலும் அபகரிக்கக்கூடாது என்னும் வைராக்கியம் வைத்தல் இவற்றையே திரி நோன்புகள் என்றும் கூறப்படும். அம்பிகாதன்மத்தின் நோன்புநிலைகளையும், விரதநிலைகளையுங் காண்க. - 1:22; நவம்ப ர் 13, 1907 -

# 8. கார்த்திகை தீபமென வழங்கும் கார்த்துல தீப விவரம்

நெடுங்காலங்களுக்குமுன் மலாடபுரம் என்னும் ஊரில் புத்ததன்மத்தை தழுவினின்ற சங்கத்தார் பேராமணக்கு சித்தாமணக்கென்னும் வித்துக்களிலிருந்து நெய்யெடுத்து மருந்துகளுடன் உபயோகித்து அதன் நற்பலன்களை அறிந்ததுமன்றி தீபம் ஏற்றி குளிர்ந்த பிரகாசத்தையுங் கண்டு ஆனந்தித்து அத்தேசத்தை ஆண்டுவந்த அரசனிடம் கொண்டுபோய்க் காண்பித்தார்கள். (அரசன் பெயர் விளங்கவில்லை)

**பதார்த்த சிந்தாமணி**

உண்டா லுதிரப்பலநோயும் ஒடுங்கிருமிகுடல்வாதம்
கண்டே சுவைக்கில் விளக்கெண்ணெய் கண்ணேகுளிருங் குணந்தேறுங்
கொண்டால் கிரந்தி சூலையுடன் கொடிய கரப்பான் பலமேகம்
விண்டார்தோஷ கணமாந்த மகலுஞ் சித்தாமணக்கெண்ணெய்.

அவ்வரசன் பேராமணக்கையும் சித்தாமணக்கையும் அதிகமாக விளைவிக்கச்செய்து அவன் தேசத்துள் இருந்த அண்ணாந்து மலையினுச்சியில் வெட்டிப் பள்ளமிட்டு பருத்தி நூல் திரிசெய்து ஆமணக்கு நெய்யை வார்த்து பெருந்தீபம் ஏற்றி விடியும் அளவு எறியவிட்டு உதயத்திற் சென்று அவ்விட முள்ள பட்சிகளுக்கும் ஆடு மாடுகளுக்கும் அத்தீபப் புகையால் ஏதேனும் தீங்கு நேரிட்டுள்ளதோ என்று ஆராயுங்கால் அவ்விடம் உலாவும் பட்சிகளுக்கும் மிருகங்களுக்கும் யாதோர் தீங்கில்லாததைக் கண்டதுமன்றி அத்தீபக்காவலிலிருந்த மக்களுக்கும் ஓர் கெடுதி வராதிருந்ததினால் அரசன் குடிகள்

யாவரையுந் தருவித்து ஆமணக்கு நெய்யைக் கொடுத்து தீபம் ஏற்றிக் கொள்ளும்படி ஆக்கியாபித்தான்.

இத்தீபச் சுடரை எக்காலும் காணாதக் குடிகளாதலின் தீபத்தை ஏற்றி வீட்டில் வைக்க பயந்து மூன்று நாள் வரையில் திண்ணைகளின் மீதும், தெரு மாடங்களிலும் வைத்து ஒரு தீங்குங் காணாததினால் வீட்டுக்குள் வைத்து அத்தீபம் இருளை விலக்கும் ஒளியாக விளங்கினபடியால் (கார்த்துலதீப) என்னும் பெயரை அளித்து புத்த சங்கத் தோர் கண்டுபிடித்த கார்த்திகைமாத பௌர்ணமியில் தேசம் எங்கும் தீபம் வெளியிட்டு பண்டை யீகை அளித்து பகவ தியானஞ் செய்துவந்தார்கள்.

இவ்வகை நெடுங்காலம் வருடத்திற்கு ஒரு முறை நிறைவேறிவரும் கார்த்துல தீபவெளி பண்டகையும் புத்தத் தியானத்தையுங் கண்ட சையோயாங்கென்னும் சீனதேசயாத்திரைக்காரன் ஆனந்தமுற்று தன் தேசஞ் சென்று வருடந்தோருங் கார்த்திகைமாதப் பௌர்ணமிக்குள் அவர்கள் தேசக் கொடிகளும் டப்பாசுகளும் பாணங்களும் அனுப்பி கார்த்துல தீப நாளைக் குதூகலிக்கச் செய்ததாக சையோயாயாங் யாத்திரை சரித்திரமும் விளக்குகின்றது.

**பெருந்திரட்டு - பாசமாட்சி**

காராமணக்கைக் கருதிக் கரைந்தங்கு /
பேராமணக்கைப் பெற்றார்கள் - ஊரா
ருளப்பருத்தி நெய்யூ மீர்ந்தார் பெருவங் /
களம்பார்த்த தீபக்கழல்.
புரிமலாடது பதிந்த பொற்றவசங்கத்தோர்கள்
கரதவாமணக்கு நெய்யை தூயமன்னவன்பாற் கொண்டு
பரத வெல்லை அண்ணாந்து பதிசிரம்பாதித்து தீப்
மொருதீங்கு மேறாதலே யூரவரகத்தி லேற்றார்.

122, நவம்பர் 13, 1907 –

எள்ளிநெய் கண்டுபிடித்த விஷயத்திற்கும் ஆமணக்கு நெய் கண்டுபிடித்த விஷயத்திற்கும் இவ்வகை ஆடம்பரங்கள் செய்யவேண்டியக் காரணங்கள் யாதென்பீரேல், உலோகோபகாரமாக கண்டுபிடித்த வஸ்துக்கள் எவையோ அவைகளைக் கொண்டாடி வருவதினால் மற்றவர்களுந் தங்களறிவை விருத்திச் செய்து உலோகோபகார வஸ்துக்களைக் கண்டுபிடித்து தேசத்தையுங் குடிகளையுஞ் சீர் பெறச் செய்வார்கள் என்பதேயாம்.

புத்ததன்மராட்சியம் பரவியிருந்தகாலத்தில் கண்டுபிடித்த தானியங்களை விட வேறு தானியங் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த நெய்களை விட வேறு நெய்கள் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த மூலிகைகளை விட வேறு மூலிகைகள் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த சருக்கரைகளைவிட வேறு சருக்கரைகள் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த விருட்சங்களை விட வேறு விருட்சங்கள் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த கனிவர்க்கங்களைவிட வேறு கனிவர்க்கங்கள் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த லோகங்களைவிட வேறு லோகங்கள் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த அவுஷதங்களைவிட வேறு அவுஷதங் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த கணித சாஸ்திரங்களைவிட வேறு சாஸ்திரங் கிடையா. அவர்கள் கண்டுபிடித்த இலக்கண இலக்கியங்களை விட வேறிலக்கிய விலக்கணங்கள் கிடையா.

மெய்யறச் சங்கங்கள் பரவியிருக்கும் அளவும் இத்தியாதி சீவோபகார வஸ்துக்கள் யாவும் பெருகிக் கொண்டே வந்து வேஷ பிராமண பொய்குருக்கள் தோன்றி பொய்ப் புராணங்கள் இயற்றி பொய்மதங்களைப் பரப்பி பொய்சாதிகளை நிறப்பி தங்களைப் பெரிய சாதிகளாக ஏற்படுத்திக்கொண்டு தங்களுக்கு எதிரிகளாக இருந்து பொய் வேஷங்களையும், பொய்ப் புராணங்களையும், பொய் மதங்களையும் பொய் சாதிகளையுங் கண்டித்துவந்த விவேகிகளைத் தாழ்ந்த சாதிப் பறையர்கள் என்று வகுத்து பலவகை மித்திர பேதங்களால் நசித்துவந்ததுடன் சுத்த

சலங்களை மொண்டுக் குடிக்கவிடாமலும். வண்ணார்களை அவர்கள் வஸ்திரங்களை எடுக்க விடாமலும், அம்மட்டர்களை சவரஞ் செய்யவிடாமலும், பார்வைக்கு விகாரமும் மிக்க அசுத்த நிலையில் இருக்கும்படி வைத்துக்கொண்டு இத்தேசத்திற்கு நூதனமாக

யார் வருகின்றார்களோ, அவர்களிடத்தில் இவர்களைக் காண்பித்து, இவர்கள் பறையர்கள் மெத்ததாழ்ந்த சாதியார் என்று பலவகையிலும் இழிவுகூறி புத்த சங்கத்தார்களையும் புத்ததன்மத்தையும் தாழ்த்திக்கொண்டே வந்ததினால், சகல ஞான விருத்திகள் யாவும் நாளுக்குநாள் நசிந்து வித்தியா விருத்திகளும் மறந்து ஒற்றுமெய்கள் குறைந்து பிச்சை ஏற்பதே சிறந்து பொய் சொற்களே நிறைந்துவிட்டது. இப்பண்டை யீகைகளின் பெயரும் அதினந்தரார்த்தங்களும் அறியாத பேதைகள் வேஷ பிராமணர்களை அடுத்து விசாரிப்பதில் பூர்வ புத்ததன்ம வார்த்தைகள் அறியாப் பொய் குருக்கள் அசுரரென்னும் வார்த்தையின் பொருளும் இராட்சசர் என்னும் வார்த்தையின் பொருளும் அறியாமல் ஒவ்வோர் பொய் கதைகளைப் போதித்து அதைக்கொண்டே தங்களுக்காகப் பொருள் சம்பாதிக்கும் வழிகளையுந் தேடிக்கொண்டார்கள்.

(வேஷபிராமணர் செய்கையை விவேகிகள் கண்டித்த பாடல்கள் )

**சிவவாக்கியர்**

சாதியாவதேதடா சலந்திரண்ட நீரலோ
போதுவாசமொன்றவோ பூதமைந்துமொன்றலோ
ஓதுவேதகீதமு மூணுரக்கமொன்றலோ
சாதியாவதென்பதே சாவுவாழ்வு திண்ணமே
நித்தமு மணிகுலிக்கி நிடுமூலை புக்கியே
கத்தியே கதரியே கண்களை மூடியென்பலன்
எத்தனை பேரெண்ணினாலு மெட்டுரண்டும் பத்தலோ
அத்தனுக்கு யேர்க்குமோ அறிவிலாதமாந்தரே
பூதிபூசையென்று நீர்பூசை செய்யும் பேதைகாள்
பூதிபூசையென்னினும் பூசை கொண்ட தெவ்விடம்
ஆதிபூசைகொண்டதோ வனாதிபூசை கொண்டதோ
ஏது பூசை கொண்டது யின்னதென்றியம்புவீர்.

அசுரர்கள் என்பதும் இராட்சசர் என்பதும் செயல்பற்றியப் பெயர்களன்றி வடிவைப்பற்றியப் பெயர்களன்று. மதுமாமிஷம் புசிப்பவர்களுக்கு சுரரென்றுபெயர். அதாவது, சுராபானம் அருந்துபவர்களேயாவர். அவ்விரண்டையும் நீக்கிநிற்போர் அசுரர், இராசதச் செயல்கள் யாதெனில்,

யீகை - விரதம் - தருமம் பேணுதல் - அறிவின் விருத்தியை நாடல் - கேள்வி முயலல் - நன்று தீதென்று உணரலுமாம்.

**பின்கலை நிகண்டு**

தானமே தவமே மற்ற தருமம் பேணுதலினோடு
ஞானமே கல்வி கேள்வி நலனிவை தெரிதரானே
யீனமொன் றில்லார்வைத்த விராசத குணங்களென்ப
ஊன்மின் முநிவன் முன்னாளுரைத்திடு முண்மெய்தானே.

**காக்கைபாடினியம்**

சுரருண் ஊனுங் கள்ளுமகற்றி
தூயவசுர ராவாதென்னே.

இவ்வகை சுரரென்றும், இராட்சதரென்றும், இராசதரென்றும் வழங்கிவந்த செயல்பற்றியப் பெயர்களின் பொருளறியா பொய்க்குருக்கள் அசுரர் இராசதர் என்போருக்கு மலைபோல மூக்குகளும் அலைபோல் நாக்குகளும் இருக்கும் என்றும் பத்துவண்டி சோறு எட்டு வண்டி சோறு உண்பார்கள் என்றும் கட்டுக்கதைகளை ஏற்படுத்தி மக்களை மயங்கச்செய்து அவர்கள் அறிவின் விருத்தியையும் கெடுத்து தங்கள் சுயப்பிரயோசனத்தையே பெருக்கிக் கொண்டார்கள்.

இப்பொய் குருக்களையும், பொய் மதங்களையும், பொய்சாதிகளையும் கண்டித்தெழுதிய நூற்கள் நாளுக்குநாள் பரவிவருவதைக் கண்ட வேஷதாரிகள்

சரியைக் - கிரியை - யோகம் - ஞானமென்னும் நான்கு படிகள் இருக்கின்றது என்றும், அதில் மேலாம்படி ஞானத்திலிருந்து சாதிகளையுஞ் சமையங்களையும் கண்டிக்கின்றார்கள் என்றும் தங்களை அஞ்ஞானிகள் என்றே ஒப்புக்கொண்டு சீவனவுபாயக் கதைகளைப் பெருக்கிவிட்டார்கள்.

1:23, நவம்ப ர் 20. 1907 –

இத்தேசத்தில் நூதனமாக ஏற்படுத்தியுள்ள சமயங்களையும் சமய சீவனத்திற்கு ஆதாயமாக ஏற்படுத்திக்கொண்ட சாதிகளையுங் கண்டித்து எழுதி வருங்கால் சரியைக், கிரியை, யோகம், ஞானமென்னும் பொருளில்லா வார்த்தைகளை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

அதாவது, சரியை அல்லது சரிதை ஓரரைக் கட்டி விக்கிரகங்களை உண்டு செய்து வைத்து அச்சிலைகளின் மீது காலையும் மாலையும் புட்டமிடுதலும் மெழுகுதலும் வலம் வருதலுமாம். இத்தகையச் செயல்களுக்குச் சரியையென்னும் மொழி பொருந்துமா, சரியை யென்னுமொழிக்குப் பொருள் மேற்செயல்களாகும் என்றால் அதைத் தெரிந்துச் சொல்லுவாரில்லை.

இரண்டாவது கிரியை அல்லது கிரிகை அத்தேவதைக்கு ஏற்ற மந்திரந் செபித்தல் உருவேற்றலுமாம். இத்தகைய மந்திரச் செயலுக்கு கிரியை என்னும் மொழி பொருந்துமா. அன்றேல் கிரியை என்னும் மொழி மந்திரத்தை உருவேற்றல் என்னும் பொருளைத்தருமா என்றால் அதை உணர்ந்து ஓதுவாரில்லை .

மூன்றாவது, யோகம் - மூச்சையடக்குதல் - கைகால்களை முடக்குதலுமாம். இத்தகைய யோகமென்னும் மொழிக்கு மூச்சை அடக்குதல், கைகால்களை முடக்குதலென்னுஞ் செயல்கள் பொருந்துமா, அன்றேல் யோகமென்னும் மொழி மூச்சையடக்குதல் கைகால்களை முடக்குதலென்னும் பொருளைத் தருமா என்றாலதை விவரித்தோதுவாரில்லை.

நான்காவது ஞானம் மனமடங்குதல் என்பார்கள். ஞானமென்னும் மொழிக்கு மனமடங்குதலென்னுஞ் செயல் பொருந்துமா அன்றேல் ஞானமென்னும் மொழி மடங்குதலென்னும் பொருளைத் தருமா என்றாலதன் பொருத்தங் கூறுவாருமில்லை .

மொழிக்கு மொழி பொருளற்ற நான்குவகைச் செயல்களில் கிரியை, யோகம், ஞானமென்னு மூன்றையும் விட்டு தங்கள் சீவனாதார விக்கிரகத்தை விளக்கல், விக்கிரத்தை வலம் வரல், விக்கிரகத்தைப் பூசித்துத் தங்களுக்கு வேண்டிய வரங்களை கேட்டல், விக்கிரகவூர்வலஞ் செய்தலாகிய ஆடம்பரங்களினால் மநுக்களை மயக்கி அதினால் வருந் தட்சணை திரவியங்களையும் அபிஷேக உணவுகளையும் அனுபவித்தல்.

இத்தகைய விக்கிரகத்தொழுதல் செய்யுங் கட்டிடங்களுக்குள் பறையர் களென்றழைக்கும் ஓர் வகுப்பினரை மட்டும் உள்ளுக்குச் சேர்க்காமல் இருப்பதுடன் தவரிவந்துவிடுவார்களென்னும் நோக்கமுமுண்டு.

காரணம், தாமரை தடாகங்களும் - அரசமரம், வேப்பமரம் வைத்துள்ள கட்டிடங்களும் - யோகசயன சிலாரூப அறப்பள்ளிகளும் பூர்வபுத்தசங்கத்தோர் மடங்களாதலின் பூர்வக்குடிகள் அக்கட்டிடத்தினுள் வருத்துப்போக்கி லிருப்பார்களானால் புத்ததன்ம சங்கத்தோர் சீல சமாதிகளையுஞ் சரித்திர பூர்வங்களையுந் தெரிந்து கொண்டு தங்கள் சுதந்திரங்களை விளக்கி மடங்களைக் கைப்பற்றிக் கொள்ளுவார்களென்னும் பீதியேயாம்.

ஞானமென்னும் வாக்கியத்துடன் சரியைக் கிரியை யோகமென்னும் மூன்று வாக்கியங்களைச் சேர்த்துத் தங்கள் சீவன உபாயங்களைச் செய்த போதிலும் விவேகிகள் அவற்றையுங் கண்டித்திருக்கின்றார்கள்.

**பிரம் கீதை**

சரிதை யாதியொரு மூன்றுஞ் சாதிப்பதுவோ பயனில்லை
அறியும் பிரமரானாலும் அறிதற்கரியதாரணங்கள் உரையுமில்லை
முடி வரிய வொன்றாய் நின்ற தனி ஞானப்
பொருளை இருளும் வெளியுமிலா போக மருவிக் களியென்றான்.

**பிரபுலிங்கலீலை**

உரை செயிற் பரமஞானமொன்றுமே முத்திக்கேது
சரியை நற்கிரியை யோகந் தாமொரு மூன்றுமிங்கு
மருவுதற் கேதுவென்றே மனமுவந்துரைக்குமிந்தக்
கருவியைப் பொருளென்றெண்ணி சளிப்பவர் கயவரன்றோ

இதிற் சரியை, கிரியை, யோக, ஞானமென்னும் வார்த்தைளுதித்த ஏதுக்கள் யாதென்பீரேல் சரி, சரியை, சரிதை என்னும் வார்த்தைக்கு சீர், சீர்பெறச் சீர்தூக்கி எனும் பொருளைத் தரும்.

கிரியை, கிரியாவிருத்தி, கிரியாபலன் எனும் வார்த்தைக்கு செயல், வினைவிருத்தி, கருமபலன் எனும் பொருளைத்தரும்.

(இரண்டு வரிகள் தெளிவில்லை )

ஞானம், ஞானி எனும் வார்த்தைக்கு அறிவு அறிவுள்ளான, விவேகம், விவேகியெனும் பொருளைத்தரும்.

இவ்வார்த்தைகளை புத்தசங்கத்தோர் எவ்வகையில் வழங்கி வந்தார்களென்றால்.

எடுக்கும் விஷயங்களை சரிவர சீர்தூக்கி கிரியை என்னும் ஓர் செயலை முடிப்பார்களாயின் யோகம் என்னும் பாக்கியம் பெருகி ஞானமென்னும் அறிவுவிருத்தியடையுமென்பதேயாம்.

எடுக்குங் காரியங்களை சரிவரச் செய்பவனுக்கு பாக்கிய முண்டாகி அறிவு பெருகும் என்னுங் கருத்தாலாண்டு வந்தார்கள்.

பூர்வ வேதாந்திகளாகும் அறஹத்துகள் நீங்கலாக தற்காலம் வேதாந்திகளென வெளிவந்திருப்போர் சரியை என்னும் விக்கிரகாராதனைச் செய்வோர் மறு ஜென்மத்தில் கிரியை என்னும் மந்திரத்தை உருவேற்றுவார்க ளென்றும், கிரியை என்னும் மந்திரத்தை உருவேற்றி வந்தவர்கள், மறு ஜென்மத்தில் யோக மென்னும் மூச்சை அடக்குவார்களென்றும், யோகமென்னும் மூச்சை அடக்குவோர் மறு ஜென்மத்தில் ஞானமென்னும் மனமடக்கி மௌனமடைவார்களென்றும் மூக்கறியன் கதை சொல்லி விடுகின்றார்கள். சுயம்பாகி வேலையை விடாமுயற்சியாக செய்தவன் மறு ஜென்மத்தில் உபாத்தி வேலை செய்யமாட்டான். உபாத்தி வேலை செய்தவன் மறு ஜென்மத்தில் தொம்பரவத்தொழில் செய்யமாட்டான். தொம்பரவத் தொழில் செய்தவன் மறு ஜென்மத்தில் மாட்டைப் போல் பேசாமலிருக்க மாட்டான். அதுபோல் ஒரு விக்கிரகத்தை வைத்துப் பூசிப்பவன் மறு ஜென்மத்தில் மேலுமேலும் விக்கிரக பூசையைச் செய்வானன்றி வேறு செய்கையிற் பிரவேசிக்கமாட்டான்.

காரணம், மனமும் தேகமும் எச்செயலை விடாமுயற்சியால் பற்றி நிற்கின்றதோ அச்செயலையே ஜெருநங்கடோரும் விருத்தி செய்யுமன்றி மனமுந் தேகமும் பற்றாச்செயலையே பற்றி பெரும்பேரடைவது பேயநிலையாம்.

1:24; நவம்பர் 27, 1907 -

# 9. யோகங்களின் விவரம்

உலகத்தில் விசேஷமாகக் கொண்டாடும் யோகங்கள் யாதெனில்:

ஒரு மனிதனுக்கு பூமிச்செல்வம் அதிகரித்திருக்குமாயின் பூவியோகம் என்றும், தனச்செல்வம் அதிகரிக்குமாயின் தனயோகம் என்றும், ரூபமுள்ள பெண் சேருவாளாயின் மனைவியோகம் என்றும் வழங்குவதுடன் கணிதசாஸ்திரிகள் சந்திரமங்கள யோகம், சாமுத்திரி யோகம், எக்காள யோகம் எனப் பலவகை யோகங்களை வரைந்திருக்கின்றார்கள்.

இந்த யோகங்கள் யாவும் மாறிமாறி தேருளைபோற் சுழன்று அழிந்துவிடும் யோகங்களாய் இருக்கின்றபடியால் புத்தசங்கத்தார் எக்காலமும் அழியாது ஜெநநங்கள் தோரும் விருத்தி பெற்று முத்தியளிக்கும் எட்டுவகை யோகங்களை அருளிச் செய்திருக்கின்றார்கள்.

**முன்கலை திவாகரம்**

இயம் - நியம் - மாசனம் - பிராணாயநமம் - பிரத்தியாகாரம் தாரணை - தியானம் - சமாதி என்பவைகளாம்.

இதன் சுருக்கம்
இயமம் - கொல்லாவிரதம், மெய்கூறல், கள்ளாமை,
பிறர்பொருட்காதலின் மெய். இல்வயினிந்திய மடக்கலு மியமம்.

நியமம் - தவமொடு, தூய்மெய் , தத்துவ நூலோர்தன்,
மனமுவந்திருத்த, றெய்வவழிபட , னினையுங்காலை நியமமாகும்.

**இதன் விரிவு - இயம்**

இயமம் பத்துவகை, அதாவது, அகிம்சை - சத்தியம் - ஆஸ்தேயம் பிரமசரியம் - தயை, ஆர்ஜ்ஜவம், க்ஷமை, திரிதியை, மிதாகாரம், சவுகம், என்பனவாம்.

அகிம்சை - அன்னியப் பிராணிகளுக்குத் துக்கத்தையுந் துன்பத்தையும் உண்டு செய்யாதிருத்தல்.

சத்தியம் - கண்ணினாற் கண்டதையும் யாதார்த்தக் கேள்வியையுஞ் சொல்லுதல்.

ஆஸ்தேயம்- பிறர் பொருளை கிரகிக்காமலும் மனதி லெண்ணாமலும் இருத்தல்.

பிரமசரியம் - ருதுகாலமன்றி மற்ற காலங்களில் சுயஸ்திரியை விரும்பாது ஒடுக்கத்திலிருத்தல்

தயை - தன்னைப்போல் பிறரும் சுகவாழ்க்கை யடைய விரும்புதல்.

ஆர்ஜ்ஜவம் - மித்துருக்களையுஞ் சத்துருக்களையும் பந்துக்களையும் அன்னியர்களையும் சமமாகப் பார்த்தல்.

க்ஷமை - அன்னியர் செய்யும் தீங்குகளை மனதிற் தங்கவிடாமலும் கலங்காமலு மிருத்தல்.

திரிதியை - திரிபீடார்த்தங்களை தேற விசாரித்து பற்றறுக்க முயலல்.

மிதாகாரம் - கொஞ்சமும் அதிகமுமில்லாமல் சமமாகப் புசித்தல்.

சவுகம் - தேகத்தை சுத்திகரித்து ஆரோக்கியத்தில் வைக்கல்

**நியம்**

நியமம் பத்து வகைப்படும். அதாவது, தபசு - சந்தோஷம் ஆஸ்திக்கியம் - தானம் - ஈஸ்வர பூசை - சித்தாந்த சிரவணம் லஜ்ஜை - மதி - செபம் - விரதம் என்பனவாம்.

தபசு - பஞ்ச புலன்களின் போக்கில் மனதைப் போகவிடாமல் வீரியத்தை யடக்குதல்.

சந்தோஷம் - தனக்குக் கிடைத்த வரையில் போதும் என்று திருப்தியடைதல். ஆஸ்திக்கியம் - சுருதி ஸ்மிருதிவாக்கியங்களின் மீது அன்பு வைத்தல்.

தானம் - நீதியினின்று சம்பாதிக்கும் பொருளை ஞானநிஷ்டர்களுக்கு ஈய்ந்து அவர்கள் ஞானப்பேற்றை விருத்தி செய்வதுடன் சீவிக்க சக்தியற்ற ஆதுலருக்கீய்ந்து ஆதரித்தல்.

ஈஸ்வரபூசை - நீதி நெறியினின்று தீவினையை வெல்லுதற்கு அறவழியானை சிந்தித்தல்

சித்தாந்த சிரவணம் - ஞான சங்கத்தோரை வணங்குதலும் அவர்கள் அறிவுரைக் கேட்குதலும்.

லஜ்ஜை - பொல்லாங்கான காரியங்களில் வெட்கமடைதல்,

மதி - ஒருவர் சொல்லுவதையும் எழுதிவைத்திருப்பதையும் தேறவிசாரித்து நம்புதல்

செபம் - ஒழிந்த நேரங்களில் வீண்காலம்போக்காமல் பஞ்ச மந்திரங்களாகும் சீலங்களை சிந்தித்தல்.

விரதம் - மனோவாக்குக் காயங்கள் என்னும் திரிகரணங்களால் அன்னியருக்குத் தீங்கு நேரிடாமல் கார்த்தல்.

**ஆசனம்**

ஞானசாதனங்களை உட்கார்ந்து சாதிப்பதற்கு ஒன்பதுவகை ஆசனங்களை வகுத்தார்கள். அதாவது

சுவஸ்திகம் - கோமுகம் - பதுமம் - வீரம் - கேசரி - பத்திரம் - முத்தம் - மயூரம் - சுகம் என்பனவாம்.

சுவஸ்திகம் - வெண்ணிற வஸ்திரம் பூமியில் விரித்து உட்காருதல்.

கோமுகம் - பசுவின் சாணச் சாம்பலை ஒரு வஸ்திரத்தின் மேல் பறப்பி இன்னொரு வஸ்திரம் மேலிட்டு அதன் மீது உட்காருதல்.

வீரம் - புலித்தோலின் மீது உட்காருதல்

கேசரி - புள்ளி மான் தோலின் பேரில் உட்காருதல்.

பத்திரம் - வில்வ இலையைப் பறப்பி அதன் மீது உட்காருதல்.

முத்தம் - வாயல் மத்தியில் வெளிதோன்ற உட்காருதல்.

மயூரம் - இரத்தின கம்பளம் விரித்து உட்காருதல்.

சுகம் - தனக்கு சாவகாசமும் சுகமும் தோன்றுமிடத்தில் உட்காருதல்.

**பிராணாயாமம்**

மேற்கூறியுள்ள ஆசனங்களில் ஒன்றில் உட்கார்ந்துக் கொண்டு பஞ்சபொறிகளின் பிராணாதாரங்களை நோக்குதல்.

**பிரத்தியாகாரம்**

அந்நேரத்தில் தன் மனதை உலகவிவகாரங்களிற் செல்லவிடாமல் ஆசானருளிய உபநயனபீடத்தில் நிறுத்தல்.

**தாரணை**

உடலை தளராதிருத்தி உபநயன உள்விழி பார்வையால் ஊடுருவி நிற்றல்.

**தியானம்**

நித்திறையை செயித்து ஆனந்த நித்திறையாம் சதாவிழிப்பினிற்றல்.

**சமாதி**

இத்தியாதி சாதனப்பெருக்கத்தால் அழியா பாக்கியம் பெற்று ஆதியில் தோன்றி ஞானநெறி விளக்கிய குருவுக்கு சமநிலையடைதல். ஆதிக்குச் சமமாவதே சம ஆதியென்றும் சமாதி என்றும் கூறப்படும்.

இந்த எட்டுவகை யோகங்களில் ஒருயோகம் மனிதனுக்குக் கிடைத்துப் பெருகுமாயின் அதனைக் கள்ளர்களேனும் மற்றவர்களேனும் அழிக்க முடியாது. இவ்வியோகம் நாளுக்குநாள் பெருகி துக்கம் என்பது அற்று சதானந்தத்தை விளைவிக்கக்கூடியதாய் இருக்கின்றபடியால் மேற்கூறியுள்ள பூ யோகம், தனயோகம், மனைவியோகம் மூனறையுஞ் சிறப்பிக்காமல் எட்டுவகை அழியா யோக பாக்கியத்தை அருளிச் செய்தார்கள். அழியா யோகம் அஷ்ட யோகமும் ஆனந்தபோகம் அருள் நிறைவுமாம்.

# 10. சங்கராந்தி பண்டிகை விவரம்

**மணிமேகலை**

மதிநாண் முற்றிய மங்கலத்திருநாள் /
பொதுவறி விகழ்ந்து புலம்பறு மாதவன்
றிருவற் மெய்துதல் சித்தமென்றுணர் நீ.

**சூளாமணி**

அருள்புரி யழலஞ்சோதி யாரியா னாதியில்லான்
மருள் புரி வினைகட் கென்று மறுதலையாய வாம்
னிருள்புரி யுலகஞ்சேரா வியனெறி பயந்த பெம்மாள்
பொருள் புரி விழவு காண்பார் புண்ணிய வுலகங் காண்பார்.

சாக்கையகுல சகோதிரர்களே! சற்று கவனியுங்கள். சங்கரர் அந்தி சங்கராந்தி என வழங்கி வரும் வார்த்தையின் பொருள் :

புத்தர் நிர்வாணகாலமென்று கூறப்படும். புத்தருக்கு சங்கறரென்னும் பெயர் வந்த காரண மென்னவென்றால், அவரால் போதித்துள்ள வாக்கியங்களுக்கு தரும்மென்றும் தரும் வாக்கியங்களை அனுசரித்து துறவடைந்த கூட்டத்தாருக்கு சங்கம் என்றும் வகுத்து புத்த தரும் சங்கம் என்னும் மும்மணிகளாக சிந்தித்து வருகின்றார்கள். அதாவது

புத்தாங் சரணங்கச்சாமி, தருமாங் சரணங்கச்சாமி, சங்கஞ் சரணங்கச்சாமி, என்னும் வாக்கியங்களை அனுசரித்து குலகுருவாகிய புத்தரை சங்க அறரென்றும், சங்கமித்தரென்றும், சங்க தருமரென்றும் சரித்திரங்களில் எழுதியிருக்கின்றது.

சாக்கைய முநிவராகிய புத்தர் உலகெங்கும் சுற்றி தருமச்சக்கரத்தை உருட்டி வந்ததுமல்லாமல் ஆங்காங்கு நாட்டிய சங்கங்களுக்கும் தருமத்தை நிரைவாக்கி தந்தபடியால் அவரை சங்கற நிரையோனென்றும் தருமராாசனென்னும் அறனென்றும் வழங்கிவந்தார்கள்.

**மணிமேகலை**

புத்த தரும் சங்கமென்னும் முத்திற மணியை மும்மையின் வணங்கி
போதிமூலம் பொருந்தியிருந்து /
மாரனை வென்று வீரனாகி
குற்ற மூன்று முற்ற வறுக்கும் /
வாமன் வாய்மை யே மக்கட்டுரை,

மேற்படி 5 காதை.
சாதுயர் நீக்கிய தலைவன்றவமுனி சங்க தருமன்றா னெமக்கருளிய.

மேற்படி 10 காதை.
ஆதிமுதல்வன் அறவாழி யாள்வோன் /மாதுய ரெவ்வ மக்களை நீக்கி
தெருமர வொழித்தாங் கிரத்தின தீவத்து / தரும சக்கர முருட்டினன் வருவோன்.

**வீரசோழியம்**

அருளாழி நயந்தோய் நீ அறவாழி பயந்தோய் நீ
மருளாழி துறந்தோய் நீ மறையாழி புரிந்தோய் நீ

**சாக்கையகுல நாயனார் குறள்**

அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லார் /
பிறவாழி நீந்த வறிது.

**சாக்கைய குல அவ்வையார் நீதிநூல்**

அறன் செயல்விரும்பு . அறனை மறவேல்.

**சீவக சிந்தாமணி**

வந்துதான் கூறிய வில்வாய் மொழியுமன்றி
முந்து அறன் மொழிந்த பொருண முற்றும்

**சூடாமணி நிகண்டு புத்தர் பெயர்**
அரசு நீழலி லிருந்தோன் அறி அறன் பகவன் செல்வன்.

ஐந்தத்தில் சித்தார்த்தரென்னும் ஒரு பெயரைப் பெற்று தனது ஞானானந்தத்தில் ஆயிரநாமங்களைப் பெற்ற சற்குருநாதன் உலகெங்குஞ் சங்கங்களை ஏற்படுத்தி அறமாகிய இல்லறவொழுக்கங்களையும் துறவற வொழுக்கங்களையும் போதித்து 85-வது வயதில் காசி நகரத்தைச் சார்ந்த கங்கைக்கரை என்று வழங்கும் பேரியாற்றங்கரை பல்லவ நாட்டில் மார்கழி

நீ கடைநாள் மங்கலவாரம் பௌர்ணமி திதி திருவாதிரை நட்சத்திரம் துலாலக்கினங் கூடிய வைகரையில் தனது உண்மெய்யை பஞ்சவரண சோதி மயமாகக் கழட்டி பொய் மெய்யை அந்தியகாலஞ் செய்தார்.

சங்க அறர் அந்தியமான காலமாகையால் சங்கராந்தி காலமென்றும் சங்கராந்தியென்றும் வழங்கிவருகின்றார்கள்.

**யாப்பருங்கலக்காரிகை**

வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலை மேல் வம்பனுங்க
கோளார்ந்த பூணாகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்த
சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தன் சொன் முறையான்
மனையற முந்துற வற்கும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து விடொடு கட்டி வை யுரைத்த
தொன் மெய்சால்கழி குணத்தெந் துறவாகைத் தொழுதேத்த
நன்மெய்சால் வீடெய்து மாறு.

**வீரசோழியம் - மனையறம்**

கொடுத்தலு மளித்தலுங் கோடலு மின்மையும்
ஒழுக்கத்தொடு புணர்தலும் புணர்ந்தோர்ப் பேணலும்
வழுக்கிற் பிறவு மனையறவகையே.

**துறவறம்**

துறவு மடக்க முந்தூய் மெயுந்தவமும்
மறவினை யோம்பலும் மரத்தினை மறுத்தலும்
மனையினீங்கிய முனைவர்தம் மறமே.

1:26; டிசம்ப ர் 11, 1907 –

**மணிமேகலை**

காயங்கரையெனும் பேரியாற் றடைக்கரை / மாயமின் மாதவன் றன்னடி பணிந்து காசின் மாநகர் கடல்வயிறு புகாமல் வாசவன் விழாக்கோல் மறவேனென்று.

**விம்பாசாரம்**

இறைமகற்காத னெண்பா னைந்திற்
குறைமிகுகாலக் கூற்றங்கடிந்து
தக்கக்கடை நாட்டனுவா திரையிற் /
பக்கமங்கலம் பருமதி கோலாய்
போதி நீழற் பொருந்திய புத்தேள் /
சோதி பஞ்சகச் சூழொளியாகி
ஆனவைகரை யார்ப்ப வானவர் போனக (தெளிவில்லை) விழாக்கோள்.

சங்க மித்தர், சங்க தருமர், சங்க அறரென்று வழங்கிய ததாகதர் அந்தியமான நாளை பூர்வ புத்தமத அரசர்கள் வருடந்தோரும் மார்கழிமாத முதல் இருபத்தெட்டுநாள் வரையில் தங்கள் தேசங்களிலுள்ளக் குடிகளை வீடுவாசல் முதலியவைகளை சுத்தஞ்செய்து, தோரண முதலியவைகள் கட்டுவித்து, வீதிகள் முழுமையும் புதுமணற் பரப்பி, வாழைக் கரும்பு முதலியவைகள் நட்டு, தேச முழுமையும் அலங்கரித்து கடைநாளை போதிபண்டிகை என்றும், தீபசாந்தி நாளென்றும், இந்திரவிழாவென்றும் விடியற்காலத்தில் தீபங்களையேற்றி சோதிமயங் கொண்டாடி வந்தார்கள்.

**மணிமேகலை**

மேலோர் விழைய விழாக்கோ லெடுத்த
நாலேழ் நாளினு நன்கினி துறைகென
மன்னன் கரிகால் வளவ நீங்கிய நாள்
தோரண வீதியும் தோமறு தொட்டியும்
பூரணகும்பமும் பொலம் பாலிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்பு மின்
காய்குலைக்கமுகும் வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியுங் கரும்பு நடுமின்
பத்திவேதிகை பசும் பொற்றூணத்து

முத்துத்தாமமு முறையொடு நாற்று மின்
விழவுமலி மூதூர் வீதியுமன்றமும்
பழமணல்பாற்றுமின் புது மணல் பரப்புமின்
கதலிக் கொடியும் காமனறு விலோதமும்
மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமின்
நாவலோங்கிய மாபெருந்தீவினுட்
காவேற் றெய்வந்தேவர் கோற்கெடுத்த
தீபசாந்தி செய்தருணன்னாள்.

நமது சற்குரு நாதனுடைய தேகத்திலும் உச்சியிலும் ஆயிரங் கதர் வீசுவது போல் பஞ்சேந்திரிய தாரை ஒளியானது வெளிப்பட்ட காலத்தைப் பூர்வ அரசர்களும் குடிகளும் அந்தந்த வருட மார்கழி மாத கடையில் அழற்குண்டமாகிய சோதியை எழுப்பித் தொழுதுவந்தார்கள். அதை அநுசரித்துவந்த நமது குலத்தார் மார்கழி மாத கடையில் சோதியை வளர்த்து போதிபண்டிகை என்று கொண்டாடவேண்டிய வார்த்தையை போகி பண்டிகை என்று வழங்கி வருகின்றார்கள்.

**வீரசோழியம்**

இவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருள் நீங்க
வெவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்த செஞ்டரென்ன.
போதிமேவினை பொய் மெயகற்றினை
சோதிவானவர் தொழுவெழுந்தருளின
ஆதிநாத நீனடியினை பரவுதும்.
கூரார்வளையுகிர் வாளெயிற்றுச் செங்கட்
கொலையுழுவை காய் பசியாற் கூர்ந்த வென்னோய் நீங்க
ஓராயிரங் கதிர்போல் வாள் விரிந்த மேனி
யுளம் விரும்பிச் சென்றாங் கியைந்தனை நீ யென்றாற்
காரார் திரைமுளைத்த செம்பவளமேவுங்
கடி முகிழ் தண்சினைய காமருபூம் போதி

யேரார் முநிவரர் வானவர்தங் கோவே
யெந்தாயரோ நின்னை யேத்தாதார் யாரே.

நமது குலத்தார் பூர்வகாலத்தில் சோதியை வளர்த்தி போதிபண்டிகை கொண்டாடுவதற்கு முன்பு இருபத்தேழு நாளும் வீதிகளில் கோலமிட்டு முத்தந்தெரித்து புட்பங்களால் அலங்கரித்து வந்த செய்கைகளானது மாறாமல் நாளதுவரையில் மார்கழிமாத முழுமையும் விதிகளில் கோலமிட்டு புட்பங்களைப் பரப்பி அழற்குண்டசோதி வளர்த்தி வருகின்றார்கள்.

**சூளாமணி**

விரைவினால் மெழுகிய வீதிவாயெலாந்
திரையினாற் செழுமணி முத்தஞ் சிந்தினார்
உரையினாலென்னையவ் வொளிகொள் மானகர்
புரையினாற் பொன்னுல கிழிந்த தொத்ததே .
அழல் வளர்த்தனை யன தழையுமவ்வழற்
றழல்வளர்த்தனை யென மலருந்தாமரை
பொழில்வளர்வளையமும் பொதுளிவண்டினங்
குழைவளர சோகின் மேற் குளிருகின்றவே.

நமது குலத்தார் பூர்வகாலத்தில் போதிபண்டிகை கொண்டாடும் வைகரையில் பற்பல வாத்திய கோஷங்கள் முயக்கிவந்த செய்கைகளானது மாறாமல் நாளதுவரையில் சிறுவர்களுக்கு மேளங்களை வாங்கிக்கொடுத்து போதி பண்டிகை விடியற் காலத்தில் முயக்கி வருகின்றார்கள்.

**சூளாமணி**

பூரண மணிக்குட நிரைத்த பொன்னணி
தோரண மெடுத்தன துதைந்த வெண்கொடி

வாரண முரசொடு வளைகளார்த்தரோ
காரணி கடலொலி கைதவிர்த்ததே.

**சிலப்பதிகாரம்**

வாரமுடையதிறல் வானவர் கோனுக் கெனவே
ஓரமுடையோ ருயிரிழப்ப - வீர
முழவெடுத்த பேரொலியான் மூவுலகோரேத்த
விழவெடுத்தான் பூம்புகார் வேந்து.

நமது குலகுருவாகிய ஒப்பில்லா அப்பன் உண்மெயாகிய சோதியை பிரித்துக்கொண்டவுடன் பொய்மெயாகிய தேகம் அசைவாடாமலும், நாவு பேசாமலும், கண் திறவாமலும் இருந்ததைக்கண்ட குடும்பத்துப் பெண்கள் அழுகையின் கூக்குரலானது எங்கும் பரவியதுமல்லாமல் அவரை நெருங்கியிருந்த அடியார்கள் ஒன்றுகூடி அரசமரத்தடியிலிருந்து பேரானந்த ஞானநீதிகளைப் போதித்த அப்பனை என்று காணப்போகிறோம் என்றும், அவரருள் பெற்ற அன்பான வாக்கியங்களை எக்காலத்தில் கேட்கப் போகிறோம் என்றும், அருமையாகிய தவத்தைப் பெற்ற அண்ணலுக்கொப்பான சற்குருவை எங்கு தெரிசிக்கப்போகிறோமென்றும் புலம்பி துக்கித்தார்கள்.

1:27. டிசம்ப ர் 15, 1907 –

அதை அனுசரித்துவந்த நமது குலத்துப் பெண்கள் வருடந்தோறும் போதி பண்டிகை விடியற்காலத்தில் எழுந்து சற்குருவை நினைந்து துக்கித்துவந்த செய்கைகளானது மாறாமல் நாளதுவரையில் போதி பண்டிகை விடியற்காலத்தில் பெண்டுகள் எழுந்து சற்குருவை நினைந்து அழுவதை மறந்து குடும்பத்தை நினைந்து அழுதுவருகின்றார்கள்.

**வீரசோழியம்**

கொண்டன் முழங்கினவாற் கோடற் பரந்தனவா லென்செய் கோம்யாம்
வண்டு வரிபாடவார் தளவம் பூத்தனவாலென்செய் கோம்பாம்
எண்டிசையுந் தோகை யிசைந்தகலி யேங்கினவா லென்செய் கோம்யாம்
மறுளறுத்த பெரும் போதி மாதவரைக் கண்டி லமா லென்செய் கோம்பாம்
அருளிருந்த திருமொழியா லறவழக்கங் கேட்டி லமா லென்செய் கோம்யாம்
பொருளறியு மருந்தவத்துப் புரவலரைக்கண்டி லமா லென்செய் கோம்யாம்.

மேற்படி நூல்

அலங்கொளியவிர் சுடரிலங்கெழில் மனைதொருங்
கலந்தெரி காலொடு புலம்பின பொழில்

அஞ்ஞான இருளை அகற்றி மெஞ்ஞான ஒளிவை விளக்கியபடியால் பகவனென்றும் பஞ்சவர்ண ஒளிமயமாக உண்மெயை சகலருந் தெரிசிக்கும்படிச் செய்தபடியால் இந்திரனென்றும் பெயர்பெற்ற சாக்கைய முநிவர் சத்தைப் பிரித்துக் கொண்டவுடன் அசத்தாகிய தேகத்தைக் குடும்பத்தோர் எடுத்து எஞ்செய்து கங்கை நீராடி புதிய வஸ்திராபரண் மணைந்து புட்பங்களைத் தரித்து சற்குருநாதன் சோதிமயமாக நம்முடன் என்றும் இருக்கின்றார் என்று சந்தோஷங் கொண்டாடினார்கள்.

அதை அனுசரித்துவந்த நமது குலத்தார் போதிபண்டிகை விடியற்காலத்தில் நீராடி புதிய வஸ்திராபரணங்களை அணிந்து புட்பந் தரித்து ஆனந்தங் கொண்டாடி வருகின்றார்கள்.

**சூளாமணி**

வெண்டு கிலுடுத்து வெண்சாந்து மெய்வழித்
தெண்டிரண் மல்லிகை யொலியல் சூடினார்
வண்டி ரண் மணிமுத்தும் வைரச்சாதியுங்
கொண்டியலணியோடு கோலந்தாங்கினார்.

புத்த தருமத்தைத் தழுவிய பூர்வ அரசபத்தினிகள் அவர் நிருவாணகாலத்தில் பாடல்களால் கொண்டாடி வந்தார்கள்.

**சூளாமணி**

மாமழைக்கண்ணியர் மருங்கு போல்வன /
தூமழைவளர்கொடி துவன்றிப் பத்திகள்
பாமழையுருவுகள் பலவுந் தோன்றவே /
பூமழைபொன்னிரம் புதையவீழ்ந்தவே.

அதை அனுசரித்துவந்த நமது குலப்பெண்கள் நிருவாண காலமாகும் போதி பண்டிகை முதல் குருபத்தியினால் (மையலார்) எனுஞ் சிலப் பெண்கள் கூடி அடியிற் குறித்துள்ள பாடலால் நாளதுவரையில் சிந்தித்துவருகின்றார்கள்.

கும்மியடிப் பெண்காள் கும்மியடி /
குருபாதங் காணவே கும்மியடி
நம்மை யாண்ட ஆதிநாதனை /
நாடிக்கும்மி யடியுமடி.

நமது குலத்துப் பூர்வ அரசர்களுங் குடிகளும் சங்கறர் அந்தியகால பண்டிகையை மிகவுற்சாகமாகக் கொண்டாடி வந்ததுமல்லாமல் அவர் போதி என்னும் அரசமரத்தடியில் உட்கார்ந்து ஞானநீதிகளைப் போதித்திருந்தபடியால் போதி நாதனென்றும், போதி வேந்தனென்றும் அவருடைய திருநாளை போதி பண்டிகை என்றும், அவர் தேகத்திற் பரவிய பஞ்சவர்ண சோதியை அநுசரித்து இந்திரனென்றும், அவர் திருநாளை இந்திர விழாவென்றும், தீபசாந்தி நாள் என்றும் வழங்கிவந்தார்கள்.

அன்னிய தேசத்திலிருந்து இவ்விடம் வந்து குடியேறிய பராயசாதியார் தங்கள் சுய ஜீவனங்களுக்காக ஏற்படுத்திக் கொண்ட மதகோட்பாடுகளுக்கும் புத்தருடைய ஞான நீதிகளுக்கும் நேர்விரோதமாய் இருந்தபடியால் அதை ஜெயிப்பதற்கு பலவகைத்

தருக்கங்களைச் செய்தும் சித்தியடையாமல் இத்தேசத்தில் அவரவர் தொழில்களுக்கென்று ஏற்படுத்தியிருந்த அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் என்னும் பெயர்களை கீழ்ச்சாதி மேற்சாதி என மாறுபடுத்திக் கொண்டு புத்தருடைய சம்மதத்தை சாதித்து வந்தவர்களும் வீரவாகு சக்கரவர்த்தி மாவிலி சக்கரவர்த்தி இவர்களின் வம்மிஸ வரிசையோர்களுமாகிய சாக்கையர்களை பறையர் பறையரென்னும் கீழ்ச்சாதிகளாக்கி நசித்துவிட்டால் புத்தமதம் தலையெடுக்காமல் நசிந்துவிடும் என்னும் கெட்ட எண்ணத்தினால் நமது குலத்தோரை 1,700 வருஷ காலமாகப் பறையர் பறையரென்னும் கீழ்ச்சாதியாக வகுத்து கல்வி விஷயத்திலும், நாகரீக விஷயத்திலும், உத்தியோக விஷயங்களிலும் தலையெடுக்கவிடாமல் நசித்துவந்த துன்பங்களினால் நாளுக்குநாள் சீர்குலைந்து சிந்தைநைந்து சற்குருவின் தியானத்தையும் மதசம்மத ஒழுக்கங்களையும் அவற்றின் பெயர்களையும் மறந்து செய்கைகளை முற்றும் மாறாமல் நிறைவேற்றிவருகின்றார்கள். இதன் சுருக்கத்தை சாக்கைய முநிவர் சரித்திரத்திலும் வேலூர் - மைசூர் முதலிய சுரங்கங்களில் எடுத்துள்ள செப்பேட்டு சாசனங்களிலும் புத்தமத அரசர்களின் சரித்திரங்களிலும் தெரிந்துக் கொள்ளலாம்.

நமது குலகுருவாகிய ஒப்பிலா அப்பன் சோதிமயமாய் நிருவாணதிசையடைந்த 3,475-வருடமானது இந்த பிலவங்க வருஷம் மார்கழி மீ 29 உக்குச் சரியான இங்கிலீஷ் 1908 வருஷம் ஜனவரிமீ 13உ சோமவாரம் விடியற்காலம் போதிபண்டிகை என்பது போகிபண்டிகை என்று வழங்கிவருகிறபடியால் புத்ததன்மக் குடும்பத்தோர் ஒவ்வொரு விடியற்காலத்து எழுந்து நீராடி சுத்தவஸ்திரங்கள் அணைந்து வீடுகள் முழுமையும் தீபங்களால் அலங்கரித்து கற்பூரத்தட்டில் ஜலத்தை நிறப்பி வாசல்மத்தியில் வைத்து கற்பூரத்தைக் கொளுர்த்தி சலமுள்ள தட்டில் வைத்து சோதி சாட்சியாய் பஞ்சபாதகஞ் செய்யோமென்று உறுதி வாக்கு அளிப்பதற்கு அடியிற் குறித்துள்ள பஞ்ச சீலங்களை முதற்சொல்லி குறித்துள்ள பாடல்களால் சிந்தித்து கற்பூரசோதி அமர்ந்தவுடன் தட்டிலுள்ள சலத்தை எல்லோர் நாவிலும் தடவி வீடுகள் தோரும் தெளித்து விடிந்தவுடன் தங்கள் தங்கள் சக்திக்கியன்றவாறு பிக்ஷுக்களுக்குப் புசிப்பளித்தவுடன் ஏழைகளுக்கு அன்னதானஞ் செய்து பசியாற்றித் தாங்களும் புசித்து சத்தியதன்மத்தைக் கொண்டாடும்படிக் கோருகிறோம். இந்த நிருவாண நாள் ஆதியில் பௌர்ணமிதிதி

திருவாதிரை நட்சத்திரத்தில் வந்தது. தற்காலம் அப்போதி பண்டிகையை மார்கழி மாதம் கடைநாளில் வந்த கணக்கையே விசேஷித்து நடந்தேறியபடியால் பௌர்ணமி திதியையும் திருவாதிரை நட்சத்திரத்தையுங் குறிக்காமல் மாதக் கடைநாளில் நிறைவேறி வருகின்றது.

அறிவோம் குருவாழ்க குருவேத்துணை
அறிவோம் தன்மம்வாழ்க தன்மமேதுணை
அறிவோம் சங்கம் வாழ்க சங்கமேதுணை
முதலாவது சற்குருவின் செயலைப் பின்பற்றுகிறோம்.
இரண்டாவது அவர் சத்தியதன்மத்தைப் பின்பற்றுகிறோம்.
மூன்றாவது அவரது சாதுசங்கத்தைப் பின்பற்றுகிறோம்.

**பஞ்சசீலப்பிரதிக்கினை**

பொய் சொல்லாம லிருப்போமாக
பிறர்பொருளை களவு செய்யாம லிருப்போமாக
பிறர்மனையாளை யிச்சியாம லிருப்போமாக
மயக்கவஸ்துக்களை யருந்தாம லிருப்போமாக
சீவப்பிராணிகளைக் கொலைச்செய்யாம லிருப்போமாக.

மணிவண்ணனென்னும் அரசனும் தனது தேவிமார்களும் போதி பண்டிகையன்று சோதியை வளர்த்தி புத்தரை தியானித்த பாடல்கள்.

**சூளாமணி**

ஒளியாகி யுலகாகி நீவிரிந்தா யென்கோ
வுலகெலா நின்னொளியினுள்ள டங்கிற்றென்கோ
வளியார வுலகநீயாள் கின்றா யென்கோ
வமருலகு தானின்ன தடியடைந்த தென்கோ

விளியாத மெய்ப்பொருளை நீவிரித்தாயென்கோ
நீ விரித்தவாறே மெய்ப்பொருள் விரிந்த தென்கோ
தெளியாமலில்லை நின்றிருவடிகண் மெய்மை
தெளிந்தாலுஞ் செவ்வனே தெரிந்துரைக்கலாமே.
விண்டாங்கு வெவ்வினை வெரு உதிரநூறி
விரிகின்ற மெஞ்ஞான சுடர்விளக்குமாட்டிக்
கண்டார்கணின்னிலமை கண்விளக்கப்பட்டுத்
தண்டா அமரைமலரின் மேனடந்தாயென்றுந்
தமனியப் பொன்னணையின் மேலமாந்தா யென்றும்
வண்டார சோகினிழல் வாயமர்ந்தா யென்றும்
வாழ்த்தினால் வாராயோ வானவர்தங் கோவே
செங்கணெடு மாலே செறிந்திலங்கு சோதித்
திருமுயங்கு மூர்த்தியாய் செய்யதாமரையி
னங்கணடி வைத்தருளு மாதியா யாழி
யறவரசே யென்று நின்னடி பணிவதல்லா
லெங்கணிட ரகலுமாறிந் நிலைமை யெய்தி
யிருளுலக நீக்குமரு டருகநீ யென்று
வெங்கணிருவினையையறவென்றாய் முன்னின்று
விண்ணப்பஞ் செய்யும் விழுத்த கைமையுண்டோ

சங்கராந்தி என்பதை சில சரித்திரங்களில் அறுப்புகால முடிவென்று கூறி இருக்கின்றார்கள். இப்பண்டிகை நஞ்சை அறுப்புகால முடிவில் வருகிறபடியால் அவ்வகையாக சொல்லும்படி நேரிட்டதல்லாமல் அதினந்தரார்த்தம் அஃதன்று.

1:23; டிசம்பர் 25, 1907 –

# 11. காமன் பண்டிகை விவரம்

**வீரசோழியம்**

போதி நிழலிற் புநிதன் பொலங்கழல் ஆதியுலகிற் காம்.

அணிதங்கு போதிவாமன் /

பணிதங்கு பாதமல்லாற்

றுணி பொன்றிலாத தேவர் மணி தங்குபாத மேவார்.

உலகத்தில் தோன்றும் மநுட சீவர்களுக்குள் புறப்பொருட் காலம் என்றும் அகப்பொருட் காலம் என்றும் இரு வகையாக முன்னோர்கள் வகுத்திருக்கின்றார்கள். அதில் புறதேக விளக்கமாகிய கடபடாதிகளுக்குள் பதினாறு வயதுக்கு உட்பட பாலகாலம் என்றும் இருபத்தைந்து வயதுக்குட்பட குமாரகாலமென்றும் நாற்பதைந்து வயதுக்குட்பட அரசகாலமென்றும் எழுபது வயதுக்குட்பட மூப்புகாலம் என்றும் நூறு வயதுக்கு உட்பட மரணகாலம் என்றும் கூறப்படும். அகதேகி விளக்கமாகிய இன்ப நிலைக்கு ஒரு தலைக்காமம் அன்புடைக் காமம் பொருந்தாக் காமம் என்றும் கூறப்படும்.

இவ்வகையான தேக தோற்றத்திற்கும் செயலுக்கும் கொடுத்திருக்கும் பெயர்களில் சகல துக்கத்திற்கும் காரணமானது மரணகாலமும் சகல பற்றுதலுக்குங் காரணமானது பொருந்தாக் காமமுமா இருக்கிறபடியால் அதை சிலேடை சிறப்பில் (காலம்) எனும் வார்த்தையிலுள்ள மகர ஒற்றை நீக்கி னகரஒற்றைச் சேர்த்து (காலன்) எனும் ஆண்பால் விகுதியாக்கி விவேகிகள் விளக்கி வைத்தது போல (காமம்) எனும் வார்த்தையிலுள்ள மகர ஒற்றை நீக்கி (காமன்) எனும் னகர ஒற்றைச் சேர்த்து ஆண்பால் விகுதியால் உருவகப்படுத்தி இன்பத்தைக் கரும்பின் வில்லாகவும் ஐம்புல நுகர்ச்சியை ஐம்மலர்

கணைகளாகவும் ஐம்பொறிகளின் அவத்தையை அதின் பலனாகவுங்காட்டி சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்னும் ஐவகை துன்பங்களை விளக்கி வைத்தார்கள்.

இத்தகைய துன்பங்களில் ஒவ்வொரு மநுட தேகங்களும் அழுந்தி இருப்பது அனுபவமாயிருக்கிறபடியால் காமம் எனும் இன்பத்தையும் அதின் துன்பத்தையும் அதை ஜெயிக்கும் நிலையையும் அறியத்தக்க ஞான உணர்ச்சியையும் ஆதியிற் கண்டடைந்தவர் ஒருவருண்டு. அவர் யார் என்பீரேல்.

மூவாயிர வருடங்களுக்கு முன் சாக்கையகுல சக்கரவர்த்தியின் திருமகனாகப் பிறந்து மநுட சீவர்களுக்கு உண்டாகும் துக்கங்களை நிவர்த்தி செய்வதற்கான வழியைக்கண்டு தெளிவிக்க வேண்டும் என்னும் கருணையால் இருபத்தியோராவது வயதில் இராசாங்கத்தைத் துறந்து வெளிவந்து ஒன்பது வருடகாலம் பலதேசங்களிற் சென்று விசாரித்தும் துக்க நிவர்த்தியைக் கண்டடைந்தவர் ஒருவருமில்லாதபடியால் தனக்குள்ள அன்பை ஒருருவமாகப் பெருக்கி அகிம்சை - சத்தியம் - ஆஸ்தேயம் பிராமசரியம் - மிதாகாரம் - சவுசம் எனும் தசதீட்சையுற்று முப்பதாவது வயதில் பங்குனி மாத பௌர்ணமி திதியில் ஓர் அரசமரத்தடியில் உட்கார்ந்து தன்னைத்தான் உணர்ந்து ததாகதம் பெற்றவுடன் ஞானக்கண் திறந்து காமன் என்னும் மன்மதனாகிய தன் மனதையும் காலன் என்னும் மரணத்தையும் ஜெயித்து பெண்ணாசை - மண்ணாசை - பொன்னாசை எனும் முப்புரங்களையும் எரித்து அநித்திய - அனாத்தும நிர்வாணமெனும் நாமரூபம் இரண்டும் அற்ற அத்துவிதமானவுடன் அம்மோனானந்த சுகவழியை சருவ சீவர்களுக்கும் போதித்த அந்நாளின் புகழ்ச்சியை பூர்வ புத்தமார்க்க அரசர்கள் ஒவ்வொருவரும் அந்தந்த வருட பங்குனிமாத பௌர்ணமியில் குடிகளுக்கு பறையரை வித்து தேச சிங்காரஞ் செய்து நீர்விளையாடி ஏழைகளுக்கு தானஞ் செய்துவந்தார்கள், (காமன் பண்டிகை) என்பதில் காமன் என்பதை ஆனந்த நிலையாகவும், பண்டிகை என்பதை பூர்வ தருமம் அதாவது பண்டைகால ஈகை என்றும் கூறப்படும்.

தற்காலம் அதை அனுசரித்துவரும் பூர்வபுத்தமார்க்கத்தோரிற் சிலர் பங்குனி மாத பௌர்ணமியில் காமன் கூத்தென்று ஓர் ஆனந்தங் கொண்டாடியும் வருகின்றார்கள். மற்றுமுள்ள சிலர் நீர்விளையாடி தீபம் ஏற்றி வருகின்றார்கள்.

**நூலாதார நிரூபகம் - மணிமேகலை**

ஆலமர்ச்செல்வன் மதன் விழாக்கோல்கொள.

**காமன் ஐங்கணை - 12 - நிகண்டு**

அசைவிலா வனசஞ்சூத மசோகமே முல்லை நீலம்
ஒசியும் வேள் கணைகளாகும் உன்மத்த மதன மோகம்
வசையில் சந்தாபத்தோடு வசிகரணங்களும் பேர்
இசையுமற்றிவைகள் செய்வதே யிடு மவத்தையு மேற்சொல்வாம்.

ஆதியில் காமனையுங் காலனையும் வென்று விளக்கியவர் புத்தர்.

**மணிமேகலை**

அருளறம் பூண்ட வொரு பெரும் பூட்கையின்
அறக்கதிராழி திறப்பட வுருட்டிய
காமற்கடந்த வாமன் பாதம் - மாரனை வெல்லும் வீரநின்னடி

**வீரசோழியம்**

வாடாப் போதி மரகதப்பாசடை
மரநிழ லமாந்தோன் நெஞ்சம்
யாவாக்கு மருளின்றீந் தேநிறைந்து நனிஞெகிழ்ந்து
மலரினி மெல்லியரென் பரதனைக்காமர்செல்வி
மாரன் மகளீர் நெடுமாமழைக்கண் விலங்கி

நிமிர்ந்தெடுத்தவாளும் போழ்ந்திலவாயின்
யாதோ மற்றது மெல்லியவாறே.
மாரனிதையாவேட்டு மன்னு புற மெரித்தனையே

1:29; சனவரி 1, 1908 –

**சூளாமணி**

ஆதியங்கடவுளை யருமறை பயந்தனை
போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை
போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய
சேதியஞ் செல்வ நின்றிருவடி வணங்கினம்
காமனைக் கடிந்தனை காலனைக் காய்ந்தனை
தேமலர் மாரியை திருமறு மார்பனை
தேமலர் மாரியை திருமறு மார்பனை
மாமலர் வண்ண நின்மலரடி வணங்கினம்.

புத்தர் காமனையுங் காலனையும் வென்ற சரித்திராதரவைக் கொண்டு புத்தமார்க்க அரசர்கள் காமன் பண்டிகை கொண்டாடி வந்த விவரம்.

**சீவகசிந்தாமணி**

காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யயன முநினி
யாசற நடக்குநாளு ளைங்கணைக் கிழவன் வைகிப்
பாசறை பரிவுதீர்க்கும் பங்குனி பருவஞ் செய்தான்.

**சிலப்பதிகாரம்**

வெள்ளிமால் வரைவியன் பெருஞ்செடிக்
கள்ளவிழ் பூம்பொழிற் காமக் கடவுட்கு
தென்திசை மருங்கினோர் செழும்பதி தன்னுள்
இந்திரன் விழுவு கொண் டெடுக்குநாளிதுவென.

புத்தரவர்கள் முப்பதாவது வயதில் ஞான நிலைபெற்ற ஆதரவைக் கொண்டு புத்தசங்கத்தோர்களும் மேற்கூறிய வயதில் துறவடைந்து வந்தார்கள்.

நிகண்டில் அருகனை முடிதரித்தாள் அம்பிகையறத்தின் செல்வி என விளங்கிய அவ்வையம்மனா லருளிய,

**மூதுரை**

முப்பதா மாண்டளவின் மூன்றத்தொருபொருளை
தப்பாமற்றன் கைபடானாயிற் - செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கண்
முலையளவே யாகுமா மூப்பு.

காமனையுங் காலனையுஞ் செயித்து மரணமில்லாமல் உலகத்தில் இருக்கின்றார்களா வென்னும் சில சங்கை யுண்டாகும். அதாவது சகல பற்றுக்களையும் நீக்கி பிறவியை செயித்துக் கொண்டவர்கள் களாகையால் மரணசெயம் பெற்றவர்களென்றும் பாச பந்தத்தில் உழன்று தீவினைக்கீடாய் ஜெநநமெடுப்பவர்கள் மரண துக்கத்தில் அழுந்தி திரிபவர்களென்றும் ஆப்தர்கள் கூறியிருக்கின்றார்கள்.

**சீவகசிந்தாமணி**

அல்லித்தா ளற்றபோது மறாத நூலதனைப் போல
தொல்லைத்தம் முடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்கா

புல்லிக்கொண் டுயிரை சூழ்ந்து புக்குழி புக்கு பின்னின்
றெல்லையி றுன்பவெந்தீச் சுட்டெரித்திடுங்களன்றே.

**தியானம்**

இன்னாப்பிறவியிகழ்ந்தோய் நீ யிணையிலின்ப முடையோய் நீ
மன்னா உலகமறுத்தோய் நீ வரம்பில் காட்சிக் கிறையோய் நீ
பொன்னாரிஞ் சிப்புகழ் வேந்தே பொறியின் வேட்கைக் கடலழுந்தி
யொன்னார் வினையினுழல் வேங்களுயப்போம் வண்ணமுரையாயே.

**தாயுமானவர்**

சந்ததமும் வேதமொழி யாதொன்றை பற்றினதுதான் வந்து முற்று மெனலால்
சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லை.

**மச்சமுனிவர்**

இறந்து போனவர்க்கென்ன மெய்ஞானங்காண் /
ஏச்சி ஏச்சி இகத்துள்ளோர் தடிப்பார் மறந்து செத்து மறுசென்மம் புக்கினால் /
வருவதாகிய சஞ்சலமென்னமோ ,

**அகப்பேய்சித்தர்**

பாவந்தீர வென்றா லப்பேய் பற்றறவேணுமடி
சாவதுமில்லையடி யகப்பேய் சற்குரு பாதமடி

**இடைக்க காட்டு சித்தர் பாடல்**

பற்றே பிறப்புண்டாக்குந் தாண்டவக்கோனே அதை
பற்றாதறுத்து விடு தாண்டவக்கோனே.
சாகாதிருப்பதற்கு தான் கற்குங் கல்வியன்றோ
வாகானமெய்க்கல்வி வகுத்தறிநீ கன்மனமே.

**அவ்வையார் ஞானக்குறள்**

சாகாதிருக்குந் தலமே மவுனமது /
ஏகாந்தமாக விரு.

இவ்வகையான கருத்தை அநுசரித்து வேறு சில சரித்திரங்களிலும் பாவத்தின் சம்பளம் மரணம், புண்ணியத்தின் சம்பளம் நித்திய சீவனென்று குறித்திருக்கின்றார்கள்.

1:30; சனவரி 8, 1908 -

# 12. ஸ்ரீபாதசேவை விவரம்

ஸ்ரீபாதமென்றும், கமல பாதம் என்றும், திருவடி என்றும், தாமரையடி என்றும் வழங்கும் பூர்வசரித்திர பாடம் யாதெனில்: -

புத்தபிரான் காசியில் முதற்சங்கத்தை நாட்டிவிட்டு உலகெங்கும் அறக்கதிர் விரித்துவருங்கால் சதுரகிரி என்றும் இரத்தின தீவம் என்றும் வழங்கும் ஓர் மலையினுச்சியில் ஏறி அன்பின் விருத்தியையும், அன்பின் ஆதரையையும், அன்பின் அறுதலையும் அதன் சுகப்பலனையும் விளக்கி அன்பின் அமுதத்தை ஊட்டுங்கால் ஒவ்வோர் சீவராசிகளின் இதயங்களுருகி பரவசம் உற்றதுமன்றி பகவன் பாதம் படிந்திருந்த பாறையும் உருகி அவர் பாதத்திருந்த தாமரை ரேகையுடன் பாதமும் பதிந்து படிவு உண்டாயிற்று.

பதிவாகும் ஸ்ரீபாத தோற்றத்தைக் கண்ட சங்கத்தவர்களும் மற்றும் அன்பர்களும் ஆனந்தக் கூத்தாடி அன்பைப் பரவச்செய்த அப்பன் அமுதவாக்கின் உரையால் அடியவர் உள்ளங்களுருகியதும் அன்றி பாறையும் உருகி பாதசேவை தந்ததென்றெண்ணி இடைவிடா அன்பின் பெருக்கத்தில் நின்று ஸ்ரீபாதசேவை செய்துவந்தார்கள்.

காலை முதல் உச்சிவரை அமுதவாக்கின் போதத்தைக் கேட்டிருந்த மக்கள் தாகவிடாய் கொண்டு உச்சிமலையில் தவிப்பதைக் கண்ட காருண்யன் தனது ஏக சடையை நீட்டி தெண்ணீர் பொழியச் செய்து சீவராசிகளின் தாகவிடாய் தீர்த்து ரட்சித்தார். அன்று முதல் அந்நீர் பெருகி ஓடிய ஓடைக்கு கங்கைநதி என்றும், அவருக்கு கங்கை ஆதாரனென்றும் பெயருண்டாயிற்று.

பௌத்த தரும் அரசர்கள் யாவரும் ஸ்ரீபாத தரிசனாசேவைச் செய்து சத்தியதருமத்தில் நடந்துவந்தார்கள்.

**மணிமேகலை**

மீங்கித னிகத்தி விரத்தின தீவத் தோங்குயர் சிமயத்துச்சி மீமிசை
யறவியங்கிழவோ னடி யிணையாகிய /
ஆதி முதல்வன்றவாழி யாள்வோன் பாதபீடிகை பணிந்தனளேத்தி. /
மாரனை வெல்லும் வீர னின்னடித்
தீநெறிக் கடும்பகை கடப்போய் நின்னடி
பிறற்கற முயலும் பெரியோய் நின்னடி துறக்கம் வேண்டா தொல்லோய் நின்னடி /
யென்பிறப்பொழிய விருந்தோய் நின்னடி
கண்பிறர்க்களிக்குங் கண்ணோய் நின்னடி
தீமொழீ கழித்த செவியோய் நின்னடி வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி /
நாகர்துயர்கெட நடப்போய் நின்னடி
யூகர் துயர மொழிப் போய் நின்னடி /
வணங்குத வல்லது வாழ்த்துதலென்னோ வடங்காதென்ற வாயிழை முன்னர் /
போதிநீழற் பொதிந்து தோன்று
நாதன் பாத நவை கெட வேத்தி /
ஆதி முதல்வன் அருந்துயர் கெடுக்கும்
பாதபங்கய மலர் பணிந்தன ராதலி

**சிலப்பதிகாரம்**

விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன் /
தண்பதங் கொள்ளுந் தலைநாள் போல

**சீவகசிந்தாமணி**

பாலருவிதிங்கடோய் முத்தமாலைப்பழிப்பிநெடுங் குடைக்கீழ் பாய்
பரிமான்றேர்
கோலருவி வெஞ்சிலையான் கூர்வாளோடுமணிக் கேடகமு மறமுமாற்றி
வாலருவி வாம னடித்தாமரைமலர்சூடி மந்திரமென் சாந்து பூசி
வேலருவி கண்ணினார் மெய்காப் போம்பவேந்தன் போய் விண்ணோர் விருந்தாயினானே.

**சூளாமணி**

காமனை கடிந்தனை காலனை காய்ந்தனை /
தேமலர் மாரியை திருமறு மார்பனை
தேமலர் மாரியை திருமறு மார்பனை /
மாமலர்வண்ணனின் மலரடி வணங்கினம்.

புத்தபிரானுக்கு ஏகசடை நின்றதற்கும் அதனின்று தெண்ணீரளித்த தற்கும் நூற்சாட்சிகள்

**வீரசோழியம்**

குறியாரென்வே புனவின்மீ /
துறுதாமரைமே லுறைவார்தா
நெறியார்சடையாய் நின்பாத /
மறிவா ரினியா ரறிவாரே.
வரிகொளரவு மதியும் /
புரிவுள் சடையும்
புரிவுள சடைமேற் புநலும் பிறழுமே.

**நிகழ்காலத்திரங்கல்**

தாகவிடாய் தீர்த்தோன் சடைமுடியில் கங்கை யேகந்திவிண்டா னிறையோ னதிசயமே.

பகவன் மகதநாட்டை விட்டு வடதிசைநாடி உத்திராபதியாங் காசியை அடைந்தவுடன் சில அரசர்கூடி பகவனுக்கோர் இருக்கைமடங்கட்டி வைத்த காலத்தில் அவருக்கு ஓர் நீண்ட சடையிருந்தது.

**வீரசோழியம்**

மிக்கவுத்திராபதிக்கு மேவினார் தொக்க செஞ்சடைப்பரன்
றனக்கோர் தூசளித்தவாய் மைக்கொள்சோலை சூழுநீதி
மன்னர்கூடி வாரணம் /
புக்க வாசவர்க் கிருக்கை நல்கினார்.

**சிலப்பதிகாரம்**

வாடகமாடத் தறிதுயிலமர்ந்தோன் /
சேடங் கொண்டு சிலர் நின்றேத்தத் தெண்ணீர் சுரந்த
செஞ்சடைக்கடவுள் வண்ணச் சேவடி மணிமுடிவைத்தலி
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியின் றிடியுடை
பெருமழை யெய்தியாங்கப் பிழையாவளையுட் பெருவளஞ்சுரப்ப /
மழைபிணித்தாண்ட மன்னவன் வாழ்கென

**அருங்கலை செப்பு**

கங்கைநதிக்குங் கலை நிதிக்குங் காரணனா /
யெங்கு நிலைத்தான் றன்.

புத்தபிரான் பிறந்ததும், வைகாசி பௌர்ணமி - அரசை துறந்ததும், மாசி பௌர்ணமி - நிருவாணமுற்றதும், பங்குனி பௌர்ணமி - பரிநிருவாணமுற்றதும், மார்கழி

பௌர்ணமி யாதலின் அப்பவுர்ணமி காலத்தையும் அவர் சடா பாரத்திற் தோன்றிய தெண்ணீர் விசேஷத்தையுங் கருதி விவேகமிகுத்த மேலோர் கங்கைக் கரைக்குச் சென்று சங்கத்திற் சேர்ந்து தவம்புரிந்து வந்தார்கள்.

**வீரசோழியம்**

அம்பொற் பணைமுகத்துத் தீண்கோட் டணிநாகம் /
வம்புற்றவோடை மலர்ந்திலங்க - உம்பர்
நவம்புரியுநாண்மதியுங் கங்கையுநண்ணித் தவம் புரிவார்க் கின் பந்தகும்.

**சிலப்பதிகாரம்**

போதித்தானம் புரிந்த றங் கொள்ளவு /
மென்வாய்க் கேட்டா ரிறந்தோருண்மெயி
னன்னீர் கங்கை யாடப்போந்தேன் /
மன்னர் கோவே வாழ்க வீங்கென்.

1:31; சனவரி 15, 1908 –

இவ்வகையாக அப்பாறையிற் பதிந்துள்ள பாதப்பதிவை கமலரேகைக் குறிப்புடன் சந்தனக்கூட்டிலும், அம்பர் கூட்டிலும் பதித்தெடுத்துவந்து வைத்துக்கொண்டு சங்கத்தோர் ஒவ்வொருவருந் தரிசித்து அவர் தருமத்தை சிந்தித்துவந்ததும் அன்றி நாளதுவரையில் பர்மா, சிலோன், தீபேத் முதலிய தேசங்களில் கமல பாதசேவை செய்துவருகின்றார்கள்.

இத்தகைய தருமராட்சியத்தில் சொற்ப துற்கருமச் செயலால் வேஷபிராமணர்கள் தோன்றி தருமநீதிகளையும் ஒழுக்கங்களையுஞ் சீலங்களையுங் கெடுத்து பௌத்த மடத்தோர் செய்துவந்த இட்டியாகம், ஓம்யாகம் முதலியவைகளுக்கு மாறுதலாக கௌயாகம், அசுவயாகம், மேஷயாகம் என்னும் ஆடுகளையும் மாடுகளையும்

குதிரைகளையும் சுட்டுத்தின்றுக்கொண்டு கொலைபாதகத்தை விருத்தி செய்ததுமன்றி பௌத்த சங்கத்தோர் வேதவாக்கியங்களுக்கு மாறுதலாக தவளை வயிற்றிலும் கழுதை வயிற்றிலும் நாயின் வயிற்றிலும் மனிதர்கள் பிறந்து வேதங்களை எழுதினார்கள் என்றும் பௌத்தர்களால் நீருக்கும் மண்ணுக்கும் காற்றுக்கும் நெருப்புக்கும், ஆகாயத்திற்கும் கொடுத்திருந்த பெயர்களை உருக்கொண்ட தேவர்களாக வகுத்து அவர்களுக்குப் பெண்சாதி பிள்ளைகளையுஞ் சிருட்டித்து அத்தேவர்களுக்கும் மற்றக் குடிகளுக்கும் மத்தியில் வேஷபிராமணர்களிருந்து பூசை நெய்வேத்தியங்கள் நடத்துகிறவர்கள் என்றும் பொய்யிற்குப் பொய்யை முட்டுக்கொடுத்து பொய்யையும் விருத்தி செய்துக்கொண்டு கைம்பெண்களைப் புணரும் புண்டரீக யாகம் என்னும் காமத்தையும் விருத்தி செய்து வருங்கால்

பௌத்த தருமக்கேழ்வியிலிருந்த குடிகள் புத்தர் என்றும் அழகர் என்றும், அரங்கர் என்றும், தருமர் என்றும் வழங்கிய பகவனைப் பற்றி விசாரிக்கும் காரணம் கொண்டு புத்தரே விஷ்ணு என்றும், விஷ்ணுவே புத்த அவதாரம் என்றும் புராணமேற்படுத்தி புத்தாபாதமே விஷ்ணுபாதம் விஷ்ணுபாதமே புத்தாபாதம் என்றும் கூறி அக்கமலபாதத்தை நாம் நெற்றியிலணைந்துக்கொண்டு

விஷ்ணுவை சிந்திக்கவேண்டும் என்றும் இராமானுஜாசாரியாரால் வகுத்து இருபாதங்களுக்கு மத்தியில் அம்மன் தீப்சோதியை மஞ்சள் தூளிதத்தாலேனுங் சிவப்பு தூளிதத்தாலேனும் அணைந்துக் கொள்ள வேண்டும் என்றும் ஆக்கியாபித்தாராம். இதன் ஆதாரத்தை மேல்கோட்டை செல்வராயர், ஆலய அர்ச்சகர், பட்டாசாரியார் அவர்களால் இயற்றியுள்ள ஆண்டாள் ஶ்ரீசூரணம் என்னும் நூலின் முகப்பில் வாலக்கும்மிப் பாடலைச் சுட்டி கமலபாதம் இரண்டிற்கு மத்தியில் சோதியை வளர்த்துங்கோளென்று கூறியிருக்கின்றார்.

**வாலக்கும்மி**

உச்சுக்கு நேறே உண்ணாவுக்கு மேல் நிதம் /
வைத்தவிளக்கு யெறியுதடி

அச்சுள்ள விளக்கே வாலையடி /
அவியாம லெரியுது ஞானப்பெண்ணே .

இத்தகைய தீபசின்னத்தை ஸ்ரீசூரணமென்றும் திருமண்காப்பென்றும் வகுத்து அதை நெற்றியில் அணைந்துக்கொண்டுவரும் ஒரு கூட்டத்தார் தோன்றி, புத்தர் சங்கமே விஷ்ணு சங்கம் என்றும் விஷ்ணு சங்கமே புத்தர் சங்கம் என்றும் புத்த தருமச்சக்கரமே விஷ்ணுசக்கரம் என்றும் விஷ்ணு சக்கிரமே புத்தசக்கரம் என்றும் கூறிவந்த விஷயத்தால், நாளுக்குநாள் புத்ததருமங்கள் யாவும் மாறுபட்டு அபுத்ததன்மங்கள் மேலிட்டு தன்மச்சக்கரத்தைக் கொலைச்சக்கரமாகவும் சாது சங்கத்தை யாதுசெயலும் அற்ற சங்கமாகவும் மாற்றிவிட்டார்கள்.

**மணிமேகலை**

சாதுயர்நீக்கிய தலைவன் தவமுனி /
சங்க தருமன் றானெமக்கருளிய
அறக்கதிராழி திறப்பட வுருட்டிய /
காமற் கடந்த வாமன் பாதம்.

**வீரசோழியம்**

அருளாழி நயந்தோய் நீ /
யறவாழி பயந்தோய் நீ
மருளாழி துறந்தோய் நீ /
மறையாழி புரிந்தோய் நீ

விஷ்ணுவிற்கும், புத்தருக்கும் அவதாரங்கள் உண்டு என்று புராணங்கள் ஏற்பட்டதுமன்றி கீதகோவிந்தத்தில் வேதாநுத்தரதே என்றும், ஸ்ரீ ஜெயதேவரால் காருண்ய மாதந்வதே என்றும் கூறியுள்ள ஆதாரங்களால் புத்த தன்ம சரித்திர ஆதாரங்களைக் கொண்டே வைணவசமயம் தோன்றியதுமன்றி புத்தபிரான் மாசிமாத

பௌர்ணமியில், ஓடேந்தி பிச்சையேற்ற பாவனையாய் வைணவர்கள் கோவில்களில் பிரம்ம உச்சவம் என்றும் கொண்டாடி வைணவர் கடவுள் கையில் வெள்ளிபோல் கொடுத்து பிச்சை ஏற்று ஐதீகங் காட்டுகின்றார்கள்.

அதுவும் அன்றி புத்தபிரானுக்குரிய முப்பத்திரண்டு முத்திரைகளில் முக்கியவற்றில் சிலதை வைணவர் தங்கள் தேவதைகள் கையிலும் உருவத்திலும் நாட்டியிருக்கின்றார்கள்.

ஆதலின் நமது பௌத்ததன்ம சோதிரர்கள் ஒவ்வொருவரும் ஸ்ரீபாதத்தையேனும் அவர்கள் மாறுதலையேனும் புறக்கணிக்காது மெய்யறம் என்னும் புத்ததன்மத்தையூட்டி சாதிபேத சமய பேதங்களை ஒட்டி சகோதிர ஐக்கியத்தை நாட்டி சஞ்சலத்தை வாட்டி சலனம் அற்ற நிருவாணதிசை அடையும் சங்கத்தையும் தன்மச்சக்கரத்தையும் பின்பற்றலே சத்தியதன்மம் எனப்படும். இத்தகைய நன்மெய்க் கடைபிடித்த இதயத்தையே பதுமநிதி - தன்மநிதி - சங்கநிதி வாய்த்தக் குபேர பட்டிணம் என்று வகுத்துவைத்தார்கள்.

பௌத்த தரும அரசர்களுக்குள் பூரணவாசி - அஷ்டமி - அமரவாசி முதலிய திதிகளை விசேஷ விரதங்களாகக் கொண்டாடி வந்தவைகளில் அரசர்கள் அநுசரித்துவந்த அஷ்டமிக்கு கோ, குல, அஷ்டமி என்றும் மன்னு பூரணை என்றும் அரச அமரமென்றும், வழங்கி வந்தார்கள்.

**அருங்கலைச்செப்பு**

அரயர்களேற்கு மட்டமி பூரணை /
விரதவமர முன்னாள் .

பௌத்தர்கள் கியான பஞ்சசீலங்கள் பஞ்ச சமஸ்காரங்கள் என்றும் தாங்கள் எதேஷ்டமாகப் புசிக்கத்தக்க பஞ்சாமிர்தங்கள் என்றும், அஷ்டசீலங்கள் அஷ்டாட்சரம்

என்றும், தசசீலங்கள் தசமிதானம் என்றும் தசாவதாரங்கள் என்றும் மாறுபட்டிருக்கின்றது.

**சீவகசிந்தாமணி**

மன்றனாறு மணிமுடி மேன் மலிந்த சூளாமணி போலும்
வென்றோன் பெருமானறவாழி வேந்தன் விரிபூ தாமரை மேற்
சென் றதிருவுராடியேற்றித் தெளியும் பொருள்க ளோரைந்து
மன்றியெட்டு மீரைந்து மாகுமென்பா ரறவோரே.

1:32; சனவரி 22, 1908 -

# 13. விபூதி விளக்க வொளிவிவரம்

**வீரசோழியம்**

மனைக்குப் பாழ்வாணுதலின் மெய் - தான் சென்ற
திசைக்குப்பாழ் நடடோரையின்மெய் - யிருந்த
வவைக்குப் பாழ் மூத்தோரையின் மெய்
தனக்குப்பாழ் நல்லறிவில்லா வுடம்பு.

உலகத்தில் தோன்றியுள்ள சீவராசிகளுள் அன்பு யீகை சாந்தம் என்னும் மூன்றையும் பெருக்கிக் கொண்டவர்கள் தேவர்கள் என்றும் வித்தை - புத்தி - விசாரிணை மூன்றையும் பெருக்கிக்கொண்டவர்கள் மானிடர்களாகும் மக்களென்றுங் காமக்குரோத லோப மூன்றையும் பெருக்கிக்கொண்டவர்கள் பே - மானிடராகும் நரகர்கள் என்றும் வகுக்கப்பெற்றார்கள். இவற்றுள்ள மானியென்றும் மானிடரென்றும் வகுக்கப் பெற்றவர்கள் தங்கள் விசாரிணையால் உணர்ந்த நல்வாய்மெகளை ஏனையோர்க்கு உணர்த்தி தன்மயமாக்குவது இயல்பாம்.

**அறநெறி தீபம்**

ஐயெனத்தாம் பெருகுவதும் அறிவினால் விளங்குவதும்
உய்தவங் கேட்டுணர்வதுவும் உணர்ந்தவற்றை பிறருளத்திற்
செய்தவர் நன்றாக்குதலும் சிறந்தார் சொற்றேறுதலுஞ்
மெய்யன்பை யுள்ளத்தில் மேவியவன் பயனாகும்.

ஆதலின் சாம்பலென்றும் பொடி என்றும் நீரென்றும் வழங்கும் ஓர் தூளிதத்தால் சருவ ரோகங்கள் நீங்கும் என்றும் சகல பாவங்கள் போகும் என்றும் ஓர் மனிதன் கூறுவானாயின் ரோகங்கள் என்பது என்ன. ரோகங்களைப் போக்கும் அவுடதங்கள் என்ன. பாபங்கள் என்ன என உசாவுவதன் முன் சாம்பல் என்னும் வஸ்துவின் உற்பத்தியையும் அதன் குணாகுணத்தையுந் தேறவிசாரித்துப் பலனைக் கண்டடைவதே விவேகிகளின் கடனாம்.

அதாவது, அன்னம் பசியைப் போக்கும். தண்ணீர் தாகத்தை நீக்கும் என்பது சருவ உயிர்களின் சம்மதம். அவற்றின் மாறாய் அன்னந் தாகத்தை நீக்கும் தண்ணீர் பசியைப் போக்கும் என்றால் பொருந்துமோ, பொருந்தாவாம். ஆதலின் நம் தேயத்தார் சாம்பல் என்னும் வீண்பொடியை ஒப்பிக் கொண்டாடும் உற்பவத்தை விளக்குவாம்.

உலகநாதன் என்றும் சற்குரு என்றும் தோன்றி தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயிர் ஓம்பும் மன்னுயிர் முதல்வன் என்னும் சாக்கைய முனிவர் தான் கண்டடைந்த தரும் பலனை உலகெங்கும் பரவச் செய்து,
காசின் மானகர் கடல்வயிறு புகாமல் /வாசவன் விழாக்கோள் மறவேனென்று காயங்கரையெனும் பெரியாற்றடக்கரை மாயமின் மாதவன் றன்னடி பணிந்து.

எனும் மணிமேகலை நூலாதரவால் காசி என்னும் கங்கைக்கரை என்றும் மணிப்பல்லவம் என்றும் பெரியாற்றங்கரை என்றும் பூர்வத்தில் வழங்கி தற்காலம் குஷிநகரென வழங்கும் இடத்தில் பரிநிருவாணம் அடைந்தபோது நிலம் நீர் தீ காற்றெனும் நான்கில் அமைந்த (பூதி) யாகும் யாக்கையை,

**மேருமந்திர புராணம்**

உண்டு நாம் விட்ட வல்லாப் புற்கல மொன்றுமில்லை
பண்டு நாம் பிறந்திடாத பரதேச முலகிலில்லை
கொண்டு நாம் நின்ற யாக்கை குணமிலா பூதி கந்தம்
மண்டி நாம் புலத்தின் வீழ்தன் வினைவரும் வாயிலென்றேன்

தகனஞ் செய்யுங்கால் ஏழு அரசர்கள் சந்தனக்கட்டைகளையும் வாசனை திரவியங்களையும் கொண்டுவந்து தகனித்து அஸ்தியையும் சாம்பலையும் எழுவர்கள் கொண்டுபோய் ஏழு இந்திர வியாரங்களைக் கட்டி அதாவது புத்தர் மடங்களைக் கட்டி அதன் மத்தியில் சற்குருவின் தேக அஸ்தியையும் சாம்பலையும் புதைத்து பக்த்திக்கு ஆதாரமாக அங்க லயம் என்றும் ல்ய அங்கம் என்றும் அஸ்தியை புதைத்தவிடம் விளங்குதற்கு (டாகோவாவைப்) போன்ற ஒவ்வோர் கற்களை நாட்டி குருவை சிந்தித்து வந்தார்கள்.

**காசிக்கலம்பகம்**

முத்திக்கு வேட்டவர் மோட்டு பற்பாரமுடைத்தலையோ
டத்திக்குஞ் சாம்பற்கு மோம்பினராலிவை யன்றியப்பாற்
சித்திப்பது மற்றிலை போலுங்காசிச் சிவபெருமான்
பத்திக்குக் கேவலமே பலமாக பலித்ததுவே .

பாலிபாஷையில் சிவம் என்பதற்குப் பொருள் - நிருவாணம், அன்பு எனப்படும். அவ்வகை அன்பை உருவகப்படுத்தி நிருவாணமுற்றவர் புத்தராகுஞ் சாக்கைய முனிவர் ஒருவரேயாம்.

**திரிமந்திரம்**

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார் /
அன்பே சிவமாய தியாரு மறிகிலார் அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின் /
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே.

**சிவபோகசாரம்**

தானோ வசத்தல்ல வென்றறிந்தாற் றாரணியி
லேனோ பிதற்றிடுவா னேழைதான் - றானே

பிறவாதது நீ காணிற் கவருளை
மறவாதிரு சிவமாவை.

ஒவ்வொரு மானிடனும் சிவமாதற்கு அன்பே காரணமாதலின் அவ்வன்பே ஓருருவாக வந்த சாக்கைய முநிவருக்கு ஆயிர நாமங்களில் ஒன்றாகிய சிவம் என்னும் பெயரையும் அளித்துள்ளதை நிகண்டிற் காணலாம்.

அஸ்தியையும் சாம்பலையும் அரசர்கள் எடுத்துக் கொள்ளும் போது கோபாலர்களாகிய அரச புத்திரர்கள் சற்குருமீதுள்ள அன்பின் மிகுதியால் சிறு பேழைகளில் அச்சாம்பலை வாரிவைத்துக்கொண்டு அவரை ரூபில் வணங்குதற்கு பதிலாய் சிரம் வணங்கி அச்சாம்பலை நெற்றியில் பூசிவந்த காலத்து குருவைச் சுட்டு கோபாலர் பெட்டியுள் வைத்துள்ளார் என்னும் மொழியே பழமொழியாக வழங்கிவருவதை நாளதுவரையிற் கேட்பதுடன் ஓர் மேன்மெய் தகித்த சாம்பலாதலின் அதை (மாபூதி) என வழங்கி அச்சாம்பலின் பேரில் கட்டியுள்ள ஓர் கட்டிடத்திற்கும் மகாபூதி வியாரம் என நாளதுவரையில் வழங்கிவருகின்றார்கள். சாக்கைய முநிவரின் தருமத்தைப் பின்பற்றிய வள்ளுவர் சாக்கையர் என்னும் குடும்பத்தார் மாபூதியாகும் அச்சாம்பலை நெற்றியில் மூன்று பிரிவாகப் பூசி மும்மணிகளை சிந்தித்துவந்தார்கள்.

**மணிமேகலை**

புத்ததரும சங்கமென்னு /
முத்திற மணியைமும் மெயில்வணங்கி.

**மேருமந்திர புராணம்**

பத்திரபாகுவென்னும் பரமமா முநிவனாகும்
உத்தமன் பாதஞ் சேர்ந்துன் பிதாவின்று முநிவனாகி
யித்தலமேத்தநின்றானெனக்கு வந்திதத்தை யோதி
சித்தமெய் மொழிகள் மூன்றுஞ் செறிவித்தக்குரவனானான்.

1:33; சனவரி 29, 1908 –

அதாவது புத்தரையும் அவர் தருமத்தையும் அவர் சங்கத்தையும் வணங்கி திரிபீடகங்களாகும், பாபஞ்செய்யாதிருங்கள், நன்மெய்க் கடைபிடியுங்கள், உங்கள் இதையத்தை சுத்திசெய்யுங்கள் என்னும் மூன்று மெய்மொழிகளையுஞ் சிந்தித்து ஒழுக்கத்தினின்று சீலம் அடைவதுடன் அம்மாபூதியாகுஞ் சாம்பலைக் கையில் ஏந்தி சற்குருவின் தேகத்தை நீற்ற சாம்பலிஃதென ஏனையோர் உணரும் பொருட்டு கீதைகளும் பாடிவந்தார்கள்.

மாயவரம் பாகுபலி நாயனார் ஏட்டுப்பிரதி.

**மாபூதிபதிகம்**

1.

பொன்னுடன் மண்ணும் பெண்ணுடன் வெறுத்தப் போதிய நாதன் மாபூதி
மன்னு முன்னரசர் மாதவர்போற்றும் வள்ளலா மாதி மாபூதி
சொன்ன முன்பிடகச் சுருதிமெய் மொழியை தோற்றவைத் தோதுமாபூதி
ரன்னீல முனிவர்க் காதியாய் நின்ற நாயகனாகு மாபூதி.

2.

உள்ளமெய்ப்பொருளை யுரைத்து நால்வாய்மெய் யுணர்த்திய போதமாபூதி
கள்ளமெய்யகற்றிக் காட்சியை யருள கடவுளாய் நின்றமாபூதி
விள்ளுமிப்பூத வினையிரண்டாற்றி மிடியினை யகற்று மாபூதி
தெள்ள றஞானத் தெளிவதையூட்டி சேவைதந் தாண்ட மாபூதி.

3.

அண்டர்கட் கோமானாகிய தன்றியவனிக்கு மண்ணல் மாபூதி
தொண்டர்களிதயத் துருசினை யகற்றுஞ் சுத்தவாதார மாபூதி.
எண்டிசை யோர்களிதை யசுத்தத்திற்கேமமே யோது மாபூதி
பண்டுளமோன பாக்கிய மீய்ந்த பக்குவமான மாபூதி.

4.

பக்குவம் பழுக்கும் பான்மையீ தென்னும் பரிமள வேதிமாபூதி
திக்குகளெட்டுங் கோணநன் நான்குஞ் சீர்பெறச் செய்த மாபூதி
மக்களுமனையு மாய்கை யென்றாற்றி வாய்மெ நான் கூட்டு மாபூதி
தக்கமெய்ப் பருவபால தானத்திற்றன்னறி வளர்த்த மாபூதி.

5.

தன்னையே யுணர்ந்து தன்னையே யடைந்து தானே தானான மாபூதி
மன்னவனென்னும் வாழ்க்கையினின்றும் வருத்துமென் றகன்றமாபூதி
தன்னுயி ரீய்ந்தேபிறவுயிரோம்பும் மன்னுயிர் முதல்வ மாபூதி
அன்னமு மாடையுரை யுளுமிய்ய வாக்கியாபித்த மாபூதி.

6.

வாக்கிய நான்கும் வழிபடுமாறு மாதவ முணர்த்து மாபூதி
ஆக்கியநீதி நெறிதனி நின்று வன்பினை வளர்த்த மாபூதி
போக்கிலே சிந்தை போகவிடாது பூரண முற்ற மாபூதி
சாக்கைய முநிவனாகு மெம்பெருமான் சாரணர் போற்று மாபூதி.

7.

சாரணர் போற்றுந் ததாகத னாகுஞ் சம்புவே சங்க மாபூதி
காரணமானக் கடவுளா மெங்கள் கற்பகக் காட்சி மாபூதி
பூரண ஞானம் பொலிந்து கேவலப்பெண் புணர்ந்த போதத்தின் மாபூதி
சீரண முற்றோர் செயலுரவந்த தேவாதி தேவ மாபூதி.

8.

தேவாதி தேவனென்னு மெய்யடியார் தேட்டமே நாட்ட மாபூதி
மூவா முதல்வனென மறை தூற்றும் முத்தனே யாகு மாபூதி
காவாதளிக்குங் கண்ணுத லென்னுங் கருணையோ ருருவ மாபூதி
பாவாவெனுஞ் சொல் பற்றிய போதே பற்றினை யறுக்கு மாபூதி.

9.

பற்றினை யறுத்துப் பற்றிய நீதிப்பற்றினை பற்று மாபூதி
சற்றமெய் ஞான விளக்கினை நாட்டிவுள்ளொளி விளக்கு மாபூதி
கற்றறிந்தோராம் மெய்யறிவாளர் கண்ணினுண் மணிய மாபூதி
முற்றிய ஞான வாழ்க்கையி னிற்போர் முத்தமிட் டாடு மாபூதி.

10.

முத்தமிட் டாடு முதல்வனா மெங்கள் முநிவன தாகு மாபூதி
சித்தத்தே நிற்குஞ் செய்குல குருவாந் தேற்றற வாழி மாபூதி
அத்தனா மெங்க ளருகனா மூலவாதனாய் நின்ற மாபூதி
முத்தியதாகும் பரி நிருவாணமோக்கமே யாகு மாபூதி.

என சற்குருவின் தேகத்தைத் தகனஞ் செய்த சாம்பல் தங்கடங்கள் கையிருப்பில் இருக்கும் அளவும் அப்பூதியைக் கொண்டாடி வந்து அம் மகாபூதி சாம்பல் முடிந்தவுடன் வேறு பொடி கையிலில்லாமல் சாக்கைய முநிவரின் தாயார் மாயாதேவி

மரணமடைந்தவுடன் ஓர் பசுவானது தானேவந்து குழவிக்கு பால் சுரந்தூட்டியதை கண்டது முதல் சாக்கையர்கள் பசுக்களின் பேரில் அதிக அன்பும் ஆவலுங் கொண்டவர்களாகையால் பசுக்களின் சாணத்தை எடுத்து சுட்டு சாம்பலாக்கி வைத்துக்கொண்டு மாபூதி என்னும் பெயரை மாற்றி விபூதி என்னும் பெயரால் நாளதுவரையில் உபயோகித்து வருவதுமன்றி ஏழு அரசர்கள் கொண்டுவந்த சந்தனக்கட்டைகளின் மிகுதியை சாக்கையர்களும் சங்கத்தவர்களும் ஆளுக் கொவ்வொன்றை கொண்டு போய் அவர் சிந்தனை மாறாதிருக்க உறைத்து திலதமிட்டு வந்த வழக்க மாறாது நாளதுவரையில் சந்தனத் திலதமிட்டு வருகின்றார்கள். (திலத மென்பது) பாலி பாஷையில் பிரதமகுரு வால் சுட்டிக்காட்டிய சுழிமுனை நோக்க நிலை யென்னப்படும்.

**மணிமேகலை**

பொன்னின் கோட்டது பொற்குளம்புடையது /
தன்னலம் பிறர் கோழ தான் சென்றெய்தி மீணாமுன்ன ரிளையருக்கன்று. /
நான் முலை சரந்து நன்பா லூட்டலு.

**நிகண்டு**

அடலை வெண்பலி சாம்பற் பேராந் திருநீறே பற்பம்
பொடியொடு விபூதி சாம்பற் புண்ணிய சாந்தஞ் சாணி
பொடி துகள் சுன்னந் தூளிபூதியே விபூதியாகுஞ்
சுடுச்சுண்ணச் சாந்து மண்ணாஞ் சுதையொடு களபமும் பேர்.

**சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம்**

கைப் பொடி சாந்தமேந்தி கரகநீர் விதியிற் பூசி
மைப்படி மழைகணல்லார் மணிசெப்பின் வாசநீட்ட

செப்படு பஞ்சவாசந் திசையெலாங் கமழ வாய்க்கொண்
டொப்புடை யுடைவர்க்கோயில் வணங்குது மெழுகவென்றான்.

சாக்கைய முநிவர் சங்கத்திற்கு முதன்மெயாக விளங்கியகாலத்தில் அவரை ஏகநாயகன் என்றும், சபாநாயகன் என்றும், கணநாயகன் என்றும் வழங்கி வந்தார்கள். அவர் உலகிலுள்ள சருவ சங்கங்களுக்கும் நாயகனானபோது விநாயகன் என வழங்கிவந்தார்கள்,

**நிகண்டு**

தருமராசன் முன்னிந்திரன் சினன் பஞ்ச தாரைவிட்டே
யருள்சுரந்த வுணர்கூட்டுந்த தாகத் னாகி தேவன்
விரவுசாக்கையனே சயினன் விநாயகன் சினந்தவிர்ந்தோன்
அரசுநீழலிலிருந்தோன் அறி அறன் பகவன் செல்வன்.

சற்குருவின் தகன சாம்பலை நெற்றியில் பூசி வருமளவும் அதை மாபூதி, மாபூதி என வழங்கி வந்தார்கள். அது முடிந்து எங்குங் கிடைக்கக் கூடிய பசுவின் சாணச்சாம்பலை ஏற்றுக்கொண்டபோது அதனை விபூதி, விபூதி என வழங்கிவந்தார்கள். அவ்வகை மாற்றிக்கொண்ட சாக்கையர்கள் வேஷப்பிராமணர் களாகத் தோன்றிய பராய சாதியார்களால் நசுங்குண்டு தங்கள் அரச போகங்களுந் தவறி குருபரம்பரையும் இழந்து "பாப்பானுக்கு மூப்பான் பறையன் கேட்பாரில்லாமல் கீழ்சாதியானானென்னும் பழமொழிக் கிணங்க நாளுக்குநாள் க்ஷணதிசை அடைந்து தங்கள் குல குருவையும் அவர் தருமங்களையும் மறந்து பொய்ப் புராணக் கட்டுக்களில் நுழைந்து பஞ்சபாதகங்களுக்கு ஆளாகி மாபூதியின் மகத்துவத்தையும் விபூதியின் விளக்கத்தையுங் கைவிட்டு அரசர்கள் முதல் வணிகர் வேளாளரென்ற மூன்று

தொழிலாளர்கட்கும் கன்ம குருக்களா இருந்தவர்கள்,

**திவாகரம்**

வள்ளுவர் சாக்கையர் என்னும் பெயர் மன்னர்க் குள்படு கருமத்தலைவர்க் கொக்கும்.

நூதன மதக்கிளர்ச்சியில் நுழைந்து பூர்வ நிலமையை மறந்து தங்கள் குருபரம்பரையை வேஷ பிராமணர்களாகும் பராயசாதியாரிடம் ஒப்படைத்துப் பதிகுலைந்தார்கள்.

ஆதலின் மாபூதியென்றும் நீறென்றும் சாம்பலென்றும் வழங்கும்படியான ஓர் பொருளால் அனந்த மகத்துவமுள்ளதெனக் கூறுவாராயின் அதன் மூலவுற் பவத்தையும் அதன் குணாகுணங்களையுந் தேறவிசாரித்துப் பலனைக் கண்டடைவதை விபூதி விளக்கவொளி என்று கூறப்படும்.

இத்தகைய விளக்கவொளி விவரமறிந்த தன்மசங்கத்தோரை மாபூதியை விதியென்றேனும் விபூதியை மாபூதி என்றேனும் வழங்கிக் கொண்டு தூளிதத்தை மூன்று பிரிவிலேனும் குழைத்தேனும் அணைந்துகொண்டு தாஷிப்போர்களை மெய்யறம் உணர்ந்த தருமப்பிரியர்கள் விரோதிக்காமல் அவர்கள் அறியாமெய்க்கு இரங்கி அருளறமூட்டி அன்பர்களாக்கிக் கொள்ள விரும்புகிறோம்.

1:34; பிப்ரவரி 5. 1908 –

# 14. ஆஸ்திக நாஸ்திக விவரம்

ஆஸ்தி - ஆத்தி என்றும், நாஸ்த்தி - நாத்தி என்றும் வழங்கு மொழிகள் பாலி என்னும் மகடபாஷையேயாம். அதன் பொருட்கள் யாதெனில், திரண்ட செல்வத்திற்குப் பெயர் ஆஸ்தி, அச்செல்வங்கள் அழிந்ததற்குப் பெயர் நாஸ்தி. அய்யனுக்கு ஆஸ்தி பூஸ்தி உண்டா நாஸ்தியாய் விட்டாரா என்பதும் வழக்கச் சொல். இத்தகைய வார்த்தையின் பொருளறியாது பௌத்தர்கள் யாவரும் நாஸ்திகர்கள் என்றால் அதன் பொருள் என்ன.

ஜப்பான், சைனா, தீபேத், நேபால், சிலோன், பர்மாவாசிகளாகும் பௌத்தர்கள் யாவரும் தனச்செல்வம் அற்ற ஏழைகளும் பௌத்தர்களை நாஸ்திகர் என்றும் கூறும் தென்னிந்தியன் ஆஸ்தியையுடைய தன்கனவான்களோ. இல்லை, சொன்னதைச் சொல்லுங் கிளிபோல் ஒருவர்

சொல்லுவதைச் சொல்லித் திரிபவர்களேயாவர்.

உலகப் பொருட்களின் வார்த்தை பேதம் அறியா மாக்கள் உண்மெ ய்ப்பொருளுணரும் பௌத்தர்களின் கலை நூல் அறிவரோ. அங்ஙனம் அறிந்தபோதிலும் அதன் அந்தரார்த்தம் விளங்குமோ. ஒருக்காலும் விளங்கா. விளங்காமெய்க்குக் காரணம் வஞ்சகர்சொற்களைத் தஞ்சமென்று எண்ணி ஆராய்தலற்றிருப்பவர்களாதலின் தங்கள் குருக்களாகிய சமயம் பார்ப்பார் தங்கள் தங்கள் பிரயோசனத்தையே பார்ப்பார். தங்களுக்கு உதவி புரியாதவர்களைக் குடிகெடுக்கப் பாப்பார் போதனைக் குட்பட்டு பௌத்தர்களை நாஸ்திகர் என்றுக் கூறித் திரிகின்றனர்.

பௌத்தர்கள் வித்தை - புத்தி - யீகை சன்மார்க்கம் நிறைந்த செயற்களினால் பூச்செல்வந்தனச்செல்வந் தானியச் செல்வமாகிய மூன்றும் பெருகி சுகசீவிகளாக வாழ்வதுடன் இத்தேச ஏனைய சீவர்களையும் காப்பாற்றி வருகின்றார்கள். அதற்குப் பகரமாய் தற்காலம் பார்ம்மாதேசத்திய தானியம் நமது இந்து தேசத்திற்கு வராமல் இருக்குமாயின் சருவ குடிகளும் நசியும் என்பது திண்ணம். ஆதலின் இத்தகைய ஆஸ்தி பூஸ்திகளின் நிறைவைக் கொண்டும் பௌத்தர்களை நிறைந்த ஆஸ்திகர் என்றே கூறத்தகும்.

இரண்டாவது ஒருவர் சொல்லுவதையும் ஒருவர் எழுதி வைத்திருப்பதையும் நம்பாமல் தேறவிசாரித்து உணர்ந்து ஏழைகளுக்கும் கனவான்களுக்குஞ் சுகதேகிகளுக்கும் பிணியாளருக்குந் தன்னவர்களுக்கும் அன்னியர்களுக்கும் பொதுவாக விளங்கும் உண்மெய்ப்பொருளை உணருதற்காதாரமாகும் நீதி நெறி வாய்மெய்களாம் அழியா ஆஸ்திகளைப் பெற்றவர்களாதலின் அது கொண்டும் பௌத்தர்களை அழியா ஆஸ்திகர் என்றும் கூறத்தகும்.

இத்தகைய அந்தரார்த்தம் உணராது வித்தையிலும் நாஸ்தி, புத்தியிலும் நாஸ்தி, ஈகையிலும் நாஸ்தி, சன்மார்க்கத்திலும் நாஸ்தி, பூச்செல்வம் நாஸ்தி, தனச்செல்வம் நாஸ்தி, தானியச் செல்வம் நாஸ்தி, தேச ஐக்கியம் நாஸ்தி, சகோதிர ஐக்கியம் நாஸ்தி, விசாரித்துணரும் விவேகம் நாஸ்தி, உண்மெய் உணரா உள்ளம் நாஸ்தி, ஓதுதற்கரிய போதகர் நாஸ்தி, பொய்யை விலக்கும் மெய்யர்கள் நாஸ்தியையுடையக் கூட்டத்தார் ஒன்றுகூடி நீதியும் நெறியும் வாய்மெயுமாகும் அழியா ஆஸ்தியைப் பெற்ற பௌத்தர்களை நாஸ்திகர் என்று கூறித் திரிவோர் குற்றமலிந்தோரேயாவர்.

நீதியும் நெறியும் வாய்மெயும் நாஸ்தியுற்ற மாக்களருகில் நெறுங்கி யாது வாது புரினும் மெய்யற ஆஸ்திமிகுத்த பௌத்தர்கள் விவேக நாஸ்தியுற்றவர்கட் இதங்கி பையபைய அவர்கட்குள்ள பொய்யை விலக்கி புத்ததன்மங்களை ஊட்டி புநிதர்களாக்கல் வேண்டும். அங்ஙனமின்றி அவர்களை சத்துருக்கள் என்று சலித்து நிற்கில் சாதி பொறாமெயால் சகோதிரவைக்கியம் நாஸ்தி, சமய பொறாமெயால் சாந்தம் நாஸ்தி, பூததயை இல்லாமெயால் பூஸ்திதி நாஸ்தி. பூஸ்திதி நாஸ்தியாலும் ஆடுமாடுகள்

ஏவலால் அல்லல்புரிந்து அழிவதுபோல் மக்களும் தங்களுக்குற்ற விசாரிணை நாஸ்தி, முயற்சி நாஸ்தியால் அன்னியர்களுக்கு அடிமையுண்டு குடிப்பதற்குக் கூழ் நாஸ்தி, உடுப்பதற்கு உடை நாஸ்தி அடைந்து உலகபழிக்கு ஆளாவர் என்பது திண்ணம், திண்ணமேயாம்.

அதன் அனுபவம் அறியவேண்டில் பூர்வம் நமது இந்து தேசம் இருந்த சிறப்பின் ஆஸ்தியையும் சகோதிர ஐக்கிய ஆஸ்தியும் வித்தையின் ஆஸ்தியும் விவேக ஆஸ்தியும் நீதியின் ஆஸ்தியுமாகிய பதுமநிதி, தன்மநிதி, சங்கநிதி என்னும் திரி ரத்தினங்களும் அதன் மகத்துவங்களும் உண்டோ , இல்லை . திரிரத்தினங்களாகும் ஆஸ்தியின் பெயரே விளங்காதிருக்கும் இக்காலத்தில் திரிரத்தினங்களின் பலனை அறிவார் உண்டோ . அப்பலனை அறிந்து பரிநிருவாணமுறும் ஆஸ்திகளை இழந்து நாஸ்தி அடைந்தவர்கள் பூர்வமெய்யறமாம் ஆஸ்தியைநாடாது தற்கால வேஷாபிராமணர் பொய்யறமாம் போதனைக்குட்பட்டு ஆடுகள் கசாயிக்காரனைப்பின் செல்லுவது போல் சுயப்பிரயோசன வஞ்சகர்களைப் பின்பற்றி சுவாமி, சுவாமி என்று திரியுமளவும் இந்துதேசச் சீரும் நாஸ்தி, சிறப்பும் நாஸ்தி, வித்தையும் நாஸ்தி, விவேகமும் நாஸ்தி, கல்வியும் நாஸ்தி. கைத்தொழிலும் நாஸ்தியேயாம்.

இவ்வகை நாஸ்தியாம் அபுத்த தன்மத்தை அகற்றி புத்த தன்மத்தைப் பரவச் செய்வோமாயின் இந்துதேசமும் பிரகாசமுற்று இனியமாக்களும் ஐக்கியம் பெற்று என்றும் அழியா ஆஸ்தியையேற்று ஆரோக்கிய பரமலாபச் சந்துட்டி பரமானந்த, விசுவாச பரமஞாதி, நிப்பானங் பரமாங் சுபமென்னும்" பாக்கியம் பெறலாம். இதையே சன்மார்க்கம் என்னும் நன்மார்க்கம் என்றும் மதிமார்க்கம் என்றும் நீதிமார்க்கம் என்றும் கூறுவதுடன் அழியா ஆஸ்திமார்க்கம் என்றும் கூறப்படும்.

1:35; பிப்ரவரி 12, 1908 –

## 15. முருகக்கடவுள் விவரம்

இம்மகான் குறிஞ்சி நில அரசபுத்திரனாக அவதரித்து குறிஞ்சி நிலங்களுக்கே கடவுளாகத் தோன்றிய விவரத்தை வீறைமண்டலவன் ஆதியங்கடவுளாகும் புத்தபிரானை சிந்தித்தெழுதியுள்ள பின்கலைநிகண்டின் ஆதரவாலும், புத்த மித்திரன் பகவனை சிந்தித்து எழுதியுள்ள வீர சோழியத்தின் ஆதரவினாலும், நற்கீரன் எழுதியுள்ள திருமுருகாற்றுப்படையின் ஆதரவினாலும், காக்கையர் எழுதியுள்ள நாரைக்குறவஞ்சியின் ஆதரவினாலும், இளங்கோவடிகள் எழுதியுள்ள சிலப்பதிகாரத்தின் ஆதரவினாலும் விளக்குகின்றோம்.

**பின்கலை நிகண்டு**

மகரகேதனனை வென்ற லாமற்கே தொழும்பு செய்வோ
னிகரிலா குணபத்திரன்ற ணிருசர ணிதயமானோன்
மிகுபுகழ் புனையானின்ற /
வீறைமண்டலவன் செய்தான்
பகரிற் பன்னேழிரண்டும் /
பலபொருட் பெயர்க்குஞ் செய்யுள்.

**வீரசோழியம்**

மிக்கவன் போதியின் மேதக் /
கிருந்தவள் மெய்தவத்தாற்
றொக்கவன் யார்க்குந் தொடர /

வொண்ணாத வன்றூயனெனத்
தக்கவன்பாதந் தலைமேற் புனைந்து /
தமிழுரைக்கப் புக்கவன் பைம்பொழிற் /
பொன்பற்றி மன்புத்த மித்திரனே.

**திருமுருகாற்றுப்படை**

உலகமுவப்பவலநோபுதிரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்
கரவறவி நமக்குஞ் சேண்விளங்கவிரொளி.

**நாரை குறவஞ்சி**

நாநிலஞ்சூழ் நாதனடி நாடி பணிந்தேற்றி
நாரை குறவஞ்சிநிலை நான் புகல்வேனம்மே.

**சிலப்பதிகாரம்**

திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச்சென்குளிர் வெண்குடை போன்றிவ்
வங்கணுலகளித்தலான்.
செருவறுசின வேற் செம்பியன்
ஒருதனியாழி யுருட்டுவோனெனவே.

புத்தபிரான் நிருவாணதிசையடைந்த ஆயிரம் வருடங்களுக்குப் பின்பு புத்தசங்கத்தோர் அவர் போதனாவிருத்தி விவேகத்தால் ஆகாய சோதியின் குணாகுண விருத்தியையும், தேக குணாகுணங்களையும், மூலிகை குணா குணங்களையும், உபரச குணாகுணங்களையும், நவரத்தின குணா குணங்களையும், நவசார குணா குணங்களையும், பாஷாண குணா குணங்களையும் விவரித்து எழுதிவருங்கால்

இவைகளுக் ஆதாரபீடமாக எக்காலும் நிலைத்திருக்கும் நிலத்தின் குணாகுணங்களில் முக்கியமாகும் ஐந்துவகை நிலங்களைக் குறித்திருக்கின்றார்கள்.

அதாவது, மலைகளைச் சார்ந்த நிலங் குறிஞ்சி என்றும், காடைச்சார்ந்த நிலம் முல்லை என்றும், கடலைச் சார்ந்த நிலம் நெய்தல் என்றும், நாடைச்சார்ந்து நஞ்சைவயல்கள் சூழ்ந்த நிலம் மருதம் என்றும், படுநிலம் பாலை என்றுமாம்.

**வீரசோழியம்**

முல்லை குறிஞ்சி மருதத்தொடு /
பாலை நெய்தலைந்தும்
சொல்லுமகமா மதனுக்குரை /
தொகுசட்டகமோ
நெல்லை நிகழு மிருபதொ /
டேழுள வேனையவற்
றொல்லை நிகழு முரையுமறிந்துகொ /
ளொண்ணுதலே.

**பின்கலை நிகண்டு**

கோடு சூழ் மலையின் சாரல் குறிஞ்சியாம் வனச்சார் முல்லை
நாடு சார் மருதமாகு நற்கடற் சராவுநெய்த
நீடிய கொடுங்கோன் மன்னர் நெடுங் குடைக் கீழ் வாழ்கின்ற
பாடிலாக் குடிகள் போலப் படு நிலம் பாலையாமே.

மலைகளைச் சார்ந்த குறிஞ்சி நிலவாசிகளாம் புருடர்களின் பெயர் குறவர், கானவர், மள்ளர், குன்றவர், புனவர், இறவுனரென்றும் இஸ்திரீகளின் பெயர் குறத்தியர், கொடிச்சியரென்றும் அரசன் பெயர் மலையன், வெற்பன், சிலம்பன், கானக

நாடனென்றும் அவர்கள் கொண்டாடுந் தெய்வப்பெயர் முருகன் என்றும் கொட்டுமேளத்தின் பெயர் முருகியன் பறை, துடிப்பறை என்றும் வழங்கி வந்தார்கள்.

இதனுற்பவமோவென்னில், பூங்குறிஞ்சி என்றும் பழனி என்றும் வழங்கும் மலையை ஆண்டுவந்த மருகன் என்னும் அரசனுக்கும் கங்கை என்னும் இராக்கினிக்கும் முருகன் என்னும் ஓர் மகவு விசாக நட்சத்திரத்தில் தோன்றி வளர்ந்து சரவண சங்கத்தை அடுத்து கலை நூற்கள் கற்று பாலதானங் கடந்து குமரதானம் வாய்த்தவுடன் தன் தந்தையாம் அரன்பட்டமேற்று தெய்வானை யென்னும் இராணியை மணந்து சுகவாழ்க்கையில் இருக்குங்கால் மற்றுமோர் மலைசார்பில் அதிகரூபசுந்திரமுடைய வள்ளியென்னும் மங்கை இருக்கின்றாள் என்று அறிந்து மையலுற்று அவளைக் கொண்டுவருவதற்கு வியாபாரிபோல் வேடமிட்டுச் சென்றும் பாங் கின்மையால் பௌத்த அரசர்களுக்குள் வழங்கிவந்த மயில் வாகன சூஸ்திரஞ் செய்தார்.

அதாவது, அரக்கு மெழுகு நூல் முதலியவைகளால் மயில் போன்ற ஓர் உருவு செய்து சூஸ்திர இறக்கைகள் அமைத்து செல்லவேண்டிய இடங்களுக்குச் செல்வதும் வருவதுமாகக் கூடுங் கருவியாகும் ஊர்தி எனப்படும். இஃது மஞ்சளும் அரக்குஞ் சேர்ந்துள்ள கருவியானதால் மஞ்ஞை என்னும் மறுபெயரும் உண்டு.

இதற்குப்பகரமாய் சச்சந்தனென்னும் பௌத்தமார்க்க அரசன் மயில் சூத்திரம் செய்த விவரம்.

**சீவகசிந்தாமணி**

அந்தரத்தார் மயனே யென வையுறுந் / தந்திரத்தாற் றமநூல் கரை கண்டவன் வெந்திர வான் பெருந்தச்சனைக் கூவியோர் / எந்திரவூர்தி யியற்றுமினென்றான். பல்கிழியும் பயினுந்துகி நூலொடு / நல்லரக்கு மெழுகுந் நலஞ்சான் றன அல்லனவும் மமைந்தெழு நாளினுட / செல்வதோர் மாமயில் செய்தன் னன்றே.

1:36; பிப்ரவரி 19.1908 –

பீலிநன் மாமயிலும் பிறிதாக்கிய /
கோநன் மாமயிலுங் கொடு சென்றவன்
ஞானமெலா முடையா னடி கைதொழு /
தாலுமிம்மஞ்ஞை யறிந்தரு ளென்றார்.
தன்னெறி நூன்யந்தா னன்றுனன்றிது /
கொன்னறியிற் பெரியாயிது கொள்கென
மின்னெறி பல்கலமே தகப்பெய்ததோர் /
பொன்னறைஞாண் கொடுத்தான் புகழ்வெய்யோன்
ஆடி யன்மா மயிலூர்தி யையவ்வழி /
மாடமுங்காவு மடுத்தோர் சின்னாள் செலப்
பாடலின் மென்மேற் பயப்பயந்தான்றுரந்தோட முறுக்கி யுணர்த்த வுணர்ந்தாள்.
பண்டவழ் விரலிற்பாவை பொறிவலத் திருப்பப் பொங்கி
விண்டவழ் மேகம் போழ்ந்து விசும்பிடைப் பறக்கும் வெய்ய
புண்டவழ் வேற்கட் பாவை பொறியிடந் திரிப்பத் தோகை
கண்டவர் மருளவீழ்ந்து கால்குவித் திருக்குமன்றே.

குறிஞ்சிவேந்தனாகிய முருகன் மஞ்ஞையூர்தி என்னும் ஓர் சூத்திர வாகனஞ்செய்து அதன் மீதேறி வள்ளியம்மன் வீற்றிருக்கும் இடம் இறங்கி தன்வயஞ் செய்துக்கொண்டு இருவரும் அம்மஞ்ஞை யூர்தியிலேறி வருங்கால் அம்மன் சுற்றத்தார் அறிந்து யுத்தம் ஆரம்பித்தபோது அம்பு துகட்கள் தன்மீதும் வள்ளியம்மன் மீதும் படா துதறி அவர்களை படுகளங் கிளர்த்தி தன் மாளிகை சேர்ந்து கலை நூற் றெளிந்து புலவனாகி சிலகால் மனையறம் நடாத்தி தன்ம சங்கஞ்சார்ந்து உலகமுவப்பத் திரிபீடகங்கள் அளித்த ஞானசூரியனாகும் பகவனை வணங்கி அரசர்கள் யாவரும் போற்றும் கலை நூல் முகமொன்றாகவும், மனுக்களின் இதயவிருள் அகற்றும் சூரியன் போன்ற முகம் ஒன்றாகவும், சித்துநிலை வாய்த்த சிலம்பமுகம் ஒன்றாகவும் மந்திராலோசனை ஊட்டும் மதிமுகம் ஒன்றாகவும், சருவசீவர்களையுந் தன்னுயிர்போல் காக்கும் சாந்த தேகிகளாகும் அந்தணர் வேள்விகளுக்கு ஓர் முகமாகவும், சாந்த நிலையால் சகலருக்கும் அறிவூட்டுஞ் சந்திரமுகம் ஒன்றாகவும் அவரவர்பக்குவ அறுநூன் முகனாக விளங்கியதுமன்றி ஞானாசிரியனாகனின்று யீகை அளிக்கும் ஓர்கை, இன்னமுது

அளிக்கும் ஓர்கை, ஞானமரபினரை சேர்க்குமொருகை, அன்பை நம்பினரைத் தேடுமொருகை, அருளறமுத்திறை காட்டு மொருகை, கியான மணிகளை எடுத்தூட்டும் ஒருகை மந்திராலோசனைக் குறங்கம் விளிக்கு மோர் கை, அறமிகுத்தோரை மார்புடனணைப்பது ஓர்கை, அங்கங்கு சங்கங்கள் அமைக்கும் இருகை, யீரைந்து சீலிங்களாம் தசபார தருமச்சக்கரத்தை வலந்திறுகு மொருகை, வானவர் மகளிராம் ஞானப் பெண்களுக்கு நன்மணமூட்ட வொருகை என்னும் பன்மணி வாய்த்தப் பன்னிருகையனென்று பலரும் புகழ்ந்து பாடியாடி துதித்துவருங்கால் சங்கத்தை விட்டு வெளியேறி உன்மத்தர் போலுளறிக் கொண்டு குப்பைகளிலுள்ளக் கந்தைகளை வாரி அணைத்துக் கொண்டிருந்தும் தேகத்தில் பரிமளம் வீசிக்கொண்டிருந்தபடியால் முருகவேள் என்னும் பெயர் மாறி கந்தசுவாமி என்றும், அறுவகை நூன்முகங்கொண்டு அறுமுகன் என்றும், பனிரண்டு புண்ணிய பலங்கொண்டு பன்னிருகையனென்றும், மலையரசனாக விளங்கியபடியால் குறிஞ்சி வேந்தன் என்றும், மயில்வாகனஞ் செய்வதற்கு முன் வள்ளியம்மனைக் காணுதற்கு வியாபாரிபோற் சென்றபடியால் செட்டி என்றும், அரசன் மகன் ஆதலின் அரன்மகன் என்றும், அட்ட சித்துக்களாம் சிலம்பமுள்ளமெயால் மாயோனென்றும், வள்ளியம்மன் சுற்றத்தோர் தேடிக் கொண்டு குறிஞ்சிவேந்தர் அரண்மனையருகில் வந்தபோது உப்பரிகைமேல் எங்கும் கோழிகள் பரவ மேயுஞ் சித்துவிளையாடினார். அவர்கள் அக்கோழி வேட்டையாடிக்கொண்டே வள்ளியம்மனை மறந்துப்போய் விட்டார்கள். அன்று முதல் உப்பரிகைமேல் கோழிக்கொடி விரித்து கோழிக்கொடியோ னென்றும், விசாக நட்சத்திரத்திற் பிறந்தபடியால் விசாகன் என்றும், தனக்குப்பின் சந்ததி இல்லாமெயால் சூர்ப்பகைவனென்றும், கலை நூற்களைக் கற்று வித்துவனாக விளங்கியபடியால் புலவனென்றும், குமரபருவத்தில் சகல சித்துக்களும் விளையாடி பிரசித்தி அடைந்த படியால் குமரர் என்றும், சரவணப்பள்ளியாம் புத்தசங்கத்திற் சேர்ந்து ஆறு அறஹத்துக்களின் ஞானாமுது உண்டபடியால் சரவணபவன் என்றும், இருமனைவி பாகங் கடந்தபடியால் கடம்பன் என்றும், கார்த்திகை நட்சத்திரத்தில் பரிநிருவாண முற்றபடியால் கார்த்திக்கேயன், காங்கேயன் என்றும், ஞானானந்தப் பெயர்கள் அளித்து அக்குறிஞ்சி நில வாசிகள் யாவரும் அவர் பரிநிருவாணமுற்ற கார்த்திகை நட்சத்திரம் வருங்கால் அன்று முழுதும் உபவாசமுற்று கார்த்திகேயனை சிந்தித்து வந்தார்கள்.

**பின்கலை நிகண்டு**

வேய்ந்த பூங்குறிஞ்சி வேந்தன் வேலினுக் கிறைவிசாகன்
சேந்தன் காங்கேயன் செவ்வேள் சிலம்பன்மா மஞ்ஞையூர்தி
வாய்ந்த சூர்ப்பகைவன் வள்ளி மணவாளன் தெய்வயானை
காந்தனே குமரன் கந்தன் கலையுணர் புலவனும் பேர்
முருகன் வேள் சாமியாறு முகன் குகன் குழகன் மாயோன்
மருகன் சேய் கார்த்திகேயன் வருபகை வென்றான் செட்டி
யரன் மகன் கங்கை மைந்த னாண்டலைக் கொடி யுயர்ந்தோன்
சரவணபவன் கடம்பன் றாருகற் செற்றோனாசான்

**திருமுருகாற்றுப்படை**

சேண்விளங்கியற்கை வாண்மதிகவை இ
யகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கெள்கைத் தந்தொழின் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற்முகனே
மாயிருண்ஞாலத் தொளிரறம் விளங்கப்
பல்லறந்தொழுதன் றொருமுக மொருழக
மார்வலரேத்த வுமர்ந்தினிதொழுகிக்
காதவினுவந்து வரங்கொடுத்
தன்றே யொருமுக
மந்திரவிதியின் மரபுளி வழா அ
வந்தணர் வேள்வி யோர்க்குமே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுறநாடித்
திங்கள் போல் திசைவிளக்கம் மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்து செல்சம் முருக்கிக்
கறுவு கொணெஞ்சமொடு
களம் வேட்டன்றே யொருமுகம்

குறவர் மடமகள் கொடி போனுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகைய மர்ந்
தன்றே யொருமுக
மூவிருமுகனு முறை நவின் றொழுகலி
...... ( தெளிவில்லை ) வண்புகழ் நிறைந்து
விண்செலன் மரபினையர்க்கேந்திய
தொருகையுக்கஞ் சேர்த்திய தொருகை யசையிய தொருகை
யங்குசங்கடாவ லொருகை இருகை
வலந்திரிப்ப வொருகை
தாரொடுபொலிய யொருகை
மீமசைக் கொட்ட வொருகை
படுமணி யிரட்ட வொருகை
விசும்பின் மலிதுளிபொழிய வொருகை
வதுவை சூட்ட வாங்க லொருகை.

1:37; பிப்ரவரி 26, 1908 –

**சிலப்பதிகாரம்**

திருமால் குன்றத்து செல்குவீராயிற் /
பெருமால் கெடுக்கும் பிலமுண்டாகு விண்ணோரேத்தும் வியத்தகு மரபிற் /
புண்ணிய சரவணம் பவகாரணியோ டிட்டசித்தியெனும் பெயர்போகி /
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டகச் சிறப்பின் மூன்றுளவாங்குப் /
புண்ணிய சரவணம் பொருந்துவீராயின்
விண்ணவர் கோமான் விழுநூலெய்துவிர்
சரவணப்பூம்பள்ளியறைத்தாய் மாரறுவர்
திருமுலைப்பாலுண்டான் றிருக்கைவேலன்றே

குறம களவளெம் குலமக ளவளொடு
மறுமுகவொருவனின்னடியிணைதொழுதேந்.

**நாரை குறவஞ்சி**

1. *நாநிலஞ்சூழ்நாதனடி / நாடி பணிந்தேற்றி
   நாரைகுறவஞ்சிநிலை / நான்பகர்வேனம்மே
   பொன்னுபுகழ் வெள்ளிமுதற் சந்தனமே தோன்றும்
   பழனிமலைபோத நிலை /யேற்றவருளாமே.

2. *போற்ற வருளுறு மெங்கள் / பொன்மலையன் வாழ்க்கை
   பூத்தயை யற்றவர்க்குத் தோற்றமறிதாமே.

3. *தோற்றமுற வேண்டிலுள்ள / மாற்றலுரல் வேண்டும்
   ஆற்றமுரலா லவித்தை யாவுமடிவாகும்.

4. *யாவுமடிவாகுமுறை / யாதெனவே கேளீர்
   யானெனதென்னுஞ் செருக்கு / யிழியுமதனாலே.

5. *யிழியுமன வேகநிலை / யாவுமுணர் போதன்
   எம்முருகன் எங்குரவன் /ஏற்றமலை நாடன்.

6. *ஏற்ற மலை நாடரச /னம் மருகன் மைந்தன்
   போற்றுமயில் வாகனமெய் / பூததயை யாளன்.

7. *பூததயையால் வனைந்த / பொன்மயிலின் வேகம்
   பூவுலகு மேலுலகும் / புகுதுகடி நேரம்.

8. *புகுதி குல கன்னிமனை / புக்கிவச முண்ட
போக்குரவை யென்னரைவேன் / போத மக மாதே.

9. *போதுமக மாது படை / போர்புரிந்தவாறும்
புநிதவே லொன்றதுவால் / படைகவிழ்ந்த சீரும்.

10. *படைகவிழ்ந்த சீரறியா பேதை குறமாக்கள்
பின்னுமரண் வந்துமனை / போர்புரிய நேற்றார்.

11. *போர்புரிய நேர்ந்த நிலைப் / புன்னகையுங் கொண்டு
கோபுரத்தில் வாரணங்கட் / கூட்டமிடச் செய்தார்.

12. *கூட்டமதைக் கண்டகுறக் / கூட்டு படையாளர்
ஆட்டமது கோழி பிடி / வேட்டையதிற் சென்றார்.

13. *வேட்டையது கண்டவர்கள் / வீடுபுகி னின்றார்
வீணவத்தைப் பற்றுமென / மேதினி துறந்தார்.

14. *பாட்டைசுக மாற்றியறப் / பள்ளியதை சார்ந்தார்
பள்ளியதிற் சென்று அறு / பாக்கியத்தி னின்று.

15. *பாக்கியமாம் நித்தியத்தைக் கண்டுணர பல்லோர்
போதனையி னின்றுபர / பக்குவம் தீய்ந்தார்.

16. *பக்குவமா முத்தநிலை / பாதையற மூட்டி
எத்திசையுஞ் சித்துவிளை யாடலதுரைந்தார்.

17. *ஆடலதை சொல்லமிகு / பாடமது முண்டோ
அன்பரிதையத் துரைவன் / அரியசுக வாசன்.

18. *அரியசுக வாசமது / வீசுகந்த தேகி
யதி பீர லாடைதனை / யங்கமுழு போர்த்து

19. *அங்கமதை வேங்கை மரத் தன்னடி யிருத்தி
அறுவாய் நட்சத்திரத்தி /லந்த முத்தி பெற்றார்.

20. *அந்தமுத்த பெற்றவர்த /னறநிலையைச் சொல்வேன்
ஆதனங்கொள் பூதநிலை / யகமுகமு மாமே.

முருகனென்னுங் குறிஞ்சி நாட்டரசன் வேங்கை மரத்தடியில் வீற்று வினையை வென்று விதேகமுத்தி பெற்றபோது குடிகள் யாவரையுந் தருவித்து மலையரண் தன்ம சங்கத்தோருக்கு அன்ன காவடியும் அமுதகாவடியுங் கொண்டு வந்து அளிக்க வேண்டும் என்றாக்கியபித்த வண்ணங் குடிகள் கொண்டுசென்றதை,

சாரண சாக்கைய ரென்பவராலியற்றியுள்ள அமுதகாவடி அஞ்சல், எனும் நூலிலுள்ளக் காப்பையும் நூற்றியெட்டு பாடல்களில் ஐந்து பாடல்களையும் சுவடியிலுள்ளவாறு வெளியிடுகின்றேன்.

**அமுதகாவடி அஞ்சல் - காப்பு**

முருகக்கடவு ளறுமுகத்தானை
இருகைத்தொழுது யேற்றிடுவாமே.
வேங்கை மரத்துற்றான் விளித்தான் வினைதீர்த்தான்
றூங்காமற்றூங்கி சுகமுற்றான் - பாங்குரங்கக்
கழனியான் சேவடியைக் கண்டுக் களித்தற்கு
பழனியான் காவடியைக்கொண்டு.
திருமுருகன் குரவர்மகன் திவ்ய சேவடி
அருமறையோர்க் கூட்டு மபிஷேகக்காவடி.
அண்டர்கள் சேனாதிபநற் குமுதன் சேவடி

உண்டறவோர்க்குயிரளிக்கு ம்மூதகாவடி.

திரன் மிகுத்தோரன்பன் மலைவாசச்சேவடி

பரமர்மகிழ்ந் தருந்திடும்பா யாசக்காவடி.

உற்றவடிவேலனிரு மின்னர் சேவடி

பற்றுமடியார்களுண்ணு மன்னக்காவடி.

அறுமுகத்த னறுவெழுத்த னரிய சேவடி

சிறுவர்பள்ளி சரவணத்தோர்க்குரியகாவடி.

இவ்வமுதகாவடி அஞ்சல் எனும் நூலினுள்ள நூற்றி எட்டு பாடல்களால் விவரந் தெரிந்துக் கொள்ளுவதுடன் குறிஞ்சி சிலாசாசனங்களாலும் அறியலாம்.

1:38; மார்ச் 4. 1908 -

# 16. இலிங்கபூசை விவரம்

இலிங்கம் என்னும் மொழியின் மூலவாக்கியம் அங்கலயம் எனப்படும். அங்கலயம் என்னும் மொழியே லய அங்கம் எனத் திரிந்து தற்காலம் லிங்கமென வழங்கிவருகின்றார்கள்.

அங்கலயம் என்னும் மொழியும் லய அங்கம் என்னும் மொழியும் உற்பவித்ததற்குக் காரணம் யாதெனில்,- உலகரட்சகனாகிய புத்த பிரான் பரிநிருவாணம் அடைந்து அவர் தேகத்தை தகனஞ்செய்து அவர் அஸ்திகளை ஏழாசர்கள் கொண்டுபோய் (டாகோபா) என்னும் கோபுரங்களைக் கட்டி அதன்மத்தியில் அஸ்தியைப் புதைத்து அவ்வஸ்தியைப் புதைத்திருக்கும் அடையாளமானது எப்போதுந் தெரிந்துக் கொள்ளுவதற்கும் அறவாழியானை சிந்திப்பதற்கும் உயர்ந்த கற்களால் பீடங்கட்டி மத்தியில் உயர்ந்த பச்சைக்கல்லினாலேனும் வைரத்தினாலேனுங் கருங் கல்லினாலேனுங் கொழுவிபோற் செய்து நாட்டி புத்தசங்கத்தோர் யாவரும் தாமரை புட்பத்தால் அர்ச்சித்து பகவனை சிந்தித்து சத்தியதன்மத்தில் நடந்துவந்தார்கள்,

இதையே தரும் பீடிகை என்றும் மணியறைப்பீடிகை என்றும் கடவுள் பீடிகை என்றும் தருமபீடம் என்றும் கடவுள் பீடம் என்றும் பூர்வ காவியங்கள் கூறுகின்றன.

**மணிமேகலை**

இந்திரகோடணை விழாவணி விரும்பி வந்து / காண்குறுஉ மணிமேகலா தெய்வம் பதியகத்துரையு மோர்பைந்தொடியாகி / மணியறைப் பீடிடை வலங்கொண்டோங்கி அப்படி கைகளிடத்து, / தூய்மென் சேக்கை துயில் கண் விழிப்ப

வலம்புரி சங்கம் வறிதெழுந்தார்ப்ப / புலம்புரி சங்கம் பொருளொடு முழங்க
புகர்முக வாரண நெடுங்கூ விளிப்பப் /பொறிமயிர்வாரணங் குறுங்கூவிளிப்பப்
பணை நிலைப்புரவி பலவெழுந்தார்ப்ப / வணை நிலப்புள்ளும் பலவெழுந்தார்ப்ப
பூம்பொழிலார்க்கை புள்ளொலி சிறப்ப / கடவுட் பீடிகை பூப்பலி கடிகொளக்
கலம்பகர் பீடிகை பூப்பலி கடிகொள்.

இவ்வகையாக புத்த சங்கத்தோர் தொழுது வந்ததுமன்றி சங்கத்துப் பின்னடியார்கள் ஆதிக்குச் சமமான நிலையாம் பரிநிருவாணமுற்ற போது சம ஆதியானாரென்றுகூறி சிலர் தகனஞ் செய்த அஸ்தியை கற்குழியில் வைத்தும், சிலர் நிருவாணமுற்ற தேகத்தையே கற்குழியில் வைத்து அதன் மீது கொழிவி போன்ற அடையாளக்கல் நாட்டி மற்றும் பின்னடியார்கள் அப்பீடத்தை அங்கலிங்க ஐக்கியமென்றும் லய அங்கம் என்றும் வழங்கி சிந்தித்துவந்தார்கள்.

அதாவது, சப்த, பரிச, ரூப, ரச, கந்தம் என்னும் பஞ்ச இந்திரியங்கள் அடங்கி ஆனந்த முதித்துப் பூரணநிலை அடைகின்றபடியால் அங்கலிங்க ஐக்கியம் என்றும் வழங்கிவந்தார்கள்.

**ஞான வெட்டி**

விரிவான துருவமெனும் மூலவீட்டில் வேதமதுக் கெட்டாத ரூபமாகி
கருவாகி தெவிட்டாத கனியுமாகி (கதிராகி மதியாகிக் காற்று மாகி
உருவாகி யுடலாகி யுயிருமாகி / யொளியாகியலகையெனு முடலுக்குள்ளே
யருவாகி யருள்ஞான சொரூபியாகி அங்கமதி லிங்கமதா யமைந்தேனையே.

பின்னடியார் சமாதி என்னும் ஆதிக்குச் சமமாம் நிலையை அங்கலிங்கம் என்றும் லய அங்கம் என்றும் வழங்கிய வார்த்தையானது லிங்கம் லிங்கம் எனக் குறுக்கல் விகாரப்பட்டது.

அக்காலத்தில் வேஷ பிராமணர்கள் வந்து தோன்றி புத்த தருமச் செயல்களையும் அவர்கள் வாக்கியங்களையும் பீடமாகக்கொண்டு தங்கள் சீவனப் பொய்மதங்களைப் பரவச்செய்து வந்தகாலத்தில் அவர்களைப் பின்பற்றியக் கூட்டத்தார் தங்கள் பொய்க் குருக்களிடஞ் சென்று அங்கலிங்க ஐக்கிய பூசைச் செய்யவேண்டும் என்று கோறியபோது, வேஷபிராமணர்களுக்கு அதினந்தரார்த்தம் விளங்காமல் ஆவிடையார் கோவில் என்னும் ஓர் கட்டிடத்தைக் கட்டிவைத்து அதன்மத்தியில் பெண்குறி ஆண்குறியை நாட்டி அங்கம் என்றால் தேகம், லிங்கம் என்றால் ஆண்குறி ஐக்கியம் என்றால் பெண்குறியென்று ஓதி இதுவே உலகசிருட்டி முதலா இருக்கின்றபடியால் இதையே நீங்கள் பூசித்துவரவேண்டும் என்று புண்டர யாகம் ஏற்படுத்திக்கொண்டது போல் இக்காமிகார்ச்சனை என்னும் லிங்கமதம் ஏற்படுத்திவிட்டார்கள்.

**ஞானவெட்டி**

ஆவிடையார் கோவிலிலே - யமைத்த குறி
ஆதர வாகவே சேர்ந்து மாதர்களினால்
மேவியதோர் நாதவிந்து - வெகுவிசித
விற்பனை யறியவொரு கற்பனை சொல்லே
பாவிக ளிதை யறியார் - கல்லுகள் தனில்
பாவனை யோப்பாகவுமே தாவிதஞ்செய்த
ஆவியென்று மழியாமல் - செலவழியா
ஆத்து மலிங்க மதனைப் பார்த்துணராமல்,

இவ்வகையான லிங்கமதம் ஏற்படுத்திக் குறிகளை சிந்தித்து வருவதைக் காணும் விவேகிகள் இஃது அப்பிரயோசன சிந்தனை என விளக்கிக் கண்டித்து

வந்தார்கள்.

**சிவவாக்கியர்**

தீர்த்தலிங்கமுத்தியென்று தேடியோடுந்தீரரே
தீர்த்தலிங்க முள்ளினின்ற சீவனைத்தெளியும்
தீர்த்தலிங்க மும்முளே தெளிந்து காண வல்லீரேல்
தீர்த்தலிங்கந்தானதாய்ச் சிறந்த தேசிவாயமே.

**ஔவை குறள்**

உள்ளமேபீட முணர்வே சிவலிங்கந் தெள்ளியரர்ச்சிக்குமாறு

**ஞானமதியுள்ளான்**

கல்லைப் பிளந்து சிறுசிலையாக்கிக் கன்னாரர்வைப்பதைக் கண்டு மிருந்தும் எல்லைப்பிடாரி இது சிவலிங்கமென் றேற்றிப் பணியு மிடும்பனல்லோபேயன் நானோடா பேயன்

**திருக்காவலம்மானை**

ஆண்குறியும் பெண்குறியு மத்தனென்றேயோதி
வீண்பெருமெய் கொண்டார் வீணர்களுமம்மானே.
வீண்பெருமெ யாவும் வினைப்பயன் காண்போதுணர்வார்
ஆண்மெகாமியத் தழிவோ ரற்பரே யம்மானே.

1:39; மார்ச் 11. 1908 –

இத்தகைய லிங்கமதம் ஏற்படுத்திய வேஷபிராமணர்கள் தாங்கள் கட்டியுள்ளக் கட்டிடங்களில் மேற்சென்னபடி குறிகளை ஸ்தாபித்துவிட்டது மன்றி லோக ஊற்றுக்களின் அருகிலும் ஸ்தாபித்துவிட்டு தங்களை அடுத்தக் குடிகள் யாவரையும் அழைத்து அவரவர் சுபாசுபகாலங்களில் சாணத்தினா லேனுங் களிமண்ணினாலேனும் ஆவிடையார் பீடமும், இலிங்கமும் பிடித்து வைத்து அதன் முனையில் அருகம்புல்லைக் குத்தி இந்தப் புல் பூண்டுகள் முதல் சருவ தோற்றத்திற்கும் இவ்விலிங்கமே

காரணமாதலால் இதைப் பூசித்து நீரில் விட்டுவிடுங்கோளென்று போதித்துள்ள வாக்கின்படி சிற்சிலக் குடிகளுஞ் செய்து கொண்டுவந்தார்கள். நாளது வரையிலுஞ் செய்துக் கொண்டே வருகின்றார்கள்.

**ஞானமதியுள்ளான்**

பார்த்துள லிங்கத்தை யேத்தி பணிபூசை
பண்ணாமல் வீணர்பலர் பசுசாணமோ
டேத்தி மண்லிங்கத்தை போற்றியெடுத்துப்பின்
தண்ணீரில் போடும் தகல்பாஜிபேயன், நானோடாபேயன்.

இவ்வகைச் செய்கைகளால் லிங்கமதம் பரவிவருவதைக் கண்டு வைணவமதத்தார் தங்கள் மதசீவனத்திற்குக் குறைவு நேரிடுகிறதென்று எண்ணி இலிங்கமதக் கண்டனப் புத்தகங்கள் அச்சிட்டு அதில் தாருகாவனம் என்னும் ஓர் தோட்டம் இருந்ததாகவும் அத்தோட்டத்துள் இரிஷிகளும் இரிஷிப் பத்தினிகளும் இருந்ததாகவும் அவ்விரிஷிப்பத்தினிகளை சிவனென்பவர் கற்பழித்ததாகவும் அப்பத்தினிகள் சாபத்தால் குறியறுந்து விழுந்துவிட்டதாகவும் அதையே சிலர் பூசித்துவருவதாகவும் எழுதிவிட்டார்கள்.

இத்தகையக் கதையை எழுதியவர் இரிஷிகள் என்னும் வாக்கியத்தின் பொருளையும், பத்தினிகள் என்னும் வாக்கியத்தின் பொருளையும், லிங்கம் என்னும் வாக்கியத்தின் பொருளையும் அறியாமலே எழுதியிருப்பதாக விளங்குகின்றது.

புத்தசங்கங்கள் இருந்த காலத்தில் புருஷர்களில் குடிமி வைத்துள்ளவர்கள் - குடும்பிகள் என்றும் - சடைமுடி வைத்துள்ளவர்கள் - இருடிகள் என்றும் - சங்கத்துள் தங்கி சிறமொட்டை உள்ளவர்கள் சமணர்கள் என்றும் - வகுக்கப்பட்டிருந்தார்கள்.

மனையாளுடன் இல்லத்திருந்து குடும்பியாகாமலும் மடத்திற்சேர்ந்து சிரங்கழித்து சமணநிலை சாராமலும் இல்லத்திலுமிடி துறவிலுமிடியாகும் ஈரிடிகள் உண்டு

காலங்கழித்தவர்களுக்கு இருடிகள் என்று பெயர். இவ்வகை யிருடி என்போர்களுக்கு மனைவிகள் கிடையாது. மனைவிகள் இருப்பார் களாயின் அவர்களை மனைவாழுங் குடும்பிகள் என்று அழைக்கத்தகுமேயன்றி இருடிகள் என்று அழைக்கத்தகாது.

பத்தினிகள் என்பதில் இஸ்திரீகளுக்குள் பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்னும் அவரவர்கள் குணாகுணச் செயல்களைக் கண்டு எழுதியிருக்கின்றார்கள். இதில் பத்மினி என்பவள் அன்னியப் புருடர்களை கண்ணெடுத்துப் பாராதவளும் கனவிலும் பரபுருடனை எண்ணாதவளும் தன் கணவனையே கடவுளாகப் பாவித்து பணிவிடைச் செய்துவருபவளு மாயிருப்பாள். அத்தகைய உத்தமியை ஒருவன் கற்பழித்தபோது அவளை பத்மினியெனத் தகுமோ. அங்ஙனங் கற்பழிந்தவளின் வாக்கும் பலிதமாமோ ஒருக்காலுமாகா.

இலிங்கம் என்னும் மொழியின் ஞானார்த்தம் தேகமும் மனமும் அயர்ந்தவிடம் அதாவது கருவி கரணங்கள் ஓய்ந்தவிடம். வயித்தியார்த்தம் சிவந்த நிறமுள்ள ஓர் மருந்து கட்டியின் பெயர். சோதிடார்த்தம் செவ்வாய் என்னும் கிரகத்தின் பெயர்.

ஆதலின் இலிங்கம் என்பதற்கு ஆண்குறி என்று எந்த சாஸ்திரங்களுங் கூறவில்லை .

இத்தகைய பொய்யுக்குப் பொய் கண்டனம் எழும்பியதைக் கண்ட லிங்கமதத்தோர் விஷ்ணுமதத்தரை நோக்கி உங்கள் தெய்வமாகிய இராமசாமி எங்கள் லிங்கசாமியைப் பூசித்தபடியால் இராமலிங்கம் என்னும் பெயருண்டா யிற்றென்றும் அந்தலிங்கம் எடுக்கச் சென்ற அநுமாருக்கு வாலறுந்து போய்விட்டதென்றும் இன்னோர் கற்பனை வகுத்து அவர்களைக் குறைக் கூறிவந்தார்கள். இத்தகையக் கற்பனா மதப்போர்கள் யாவும் தங்கள் தங்கள் சீவனங்களுக்காய் எதிரி மதத்தைத் தாழ்த்தியும் தங்கள் மதத்தை உயர்த்தியும் பேசிவந்த சங்கதிகளால் ஒருவருக்கொருவர் ஒற்றுமெய்க்கேடுண்டாயதும் அன்றி நமது தேச ஞானத்தின் மகத்துவார்த்தங்களுங் கெட்டுப்போயிருக்கின்றன. தங்கள் தங்கள் சுயப்பிரயோசனங்கருதுபவர் யாவரும் எங்கெங்கும் பங்கப்படுவார்கள் என்பது இயல்பாதலின் நமது தேசத்தோர் செய்துவருஞ்

செய்கைகள் நுண்ணியதாயினும் எண்ணிசசெய்யாமல் மனம் போனப் போக்கில் செய்துவிட்டு மாளா துக்கத்தில் ஆழ்த்திவிட்டார்கள்.

அதுவும் போதாமல் இன்னும் இம்மதவூழல்களை அன்னிய மதத்தோர் எளிதில் அறிந்துக் கொள்ளுவதற்கு ஏசல் என்னும் ஓர் நூலியற்றி அதிற் பார்வதி இலட்சுமியை ஏசுவதுபோலும் இலட்சுமி பார்வதியை ஏசுவதுபோலும் மத்தா லடிப்பட்டாரடி உங்கள் பெருமாள் என்றும், பிரம்பால் அடிப்பட்டாரடி உங்கள் சிவனாரென்றும் உள்ள சங்கதிகள் யாவையும் பரக்கத் தீட்டி விட்டார்கள்.

ஒரு சமயத்தோருடன் மற்றொரு சமயத்தோர் விரோதத்தினால் ஏற்படுத்திக்கொண்ட கண்டனங்கள் சுவாமிகளின் திருவிளையாட்டென்று ஏசுவதினால் விச்சாரிணைப் புருஷர்கள் யாவரும் அதைத் தெரு விளையாட் டென்று கூறித் தள்ளிவிடுகின்றார்கள். ஆதலின் நமது தேசத்தார் இனியேனும் மதப்போர்புரிந்து மாளா துக்கத்தில் ஆழாமல் சுதேச சீர்திருத்தத்தை நாடி சுகமடையவேண்டுமென்பதேயாம்.

1:40; மார்ச் 18, 1908 –

# 17. பேதாதை - பேதாளம்

சிலகாலங்களுக்கு முன் நம்முடைய தேசத்தின் அதிகாரிகள் கிராமங்களைவிட்டு மறு கிராமங்களுக்குப் போகவேண்டுமாயினும் விழாக்கள் கொண்டாடுங் காலங்களிலேனுந் தூர கிராமவாசிக்கு அறிக்கை செய்யுமாறு ஓர் பெருந்தாதை யூதுதல் கொம்பூதுதல் என்னும் குழற்கருவியும் மூன்றடி சுற்றளவு நான்கடி சுற்றளவில் கைத்தாளமும் செய்துவைத்துக்கொண்டு ஊதுதலும் அடிப்பதுமாய் இருந்தார்கள்.

பெருந்தாதையை வாயில் வைத்து ஒரு மனிதன் பெருமூச்சு கொண்டு ஊதுவானாயின் தூரத்திலுள்ள கிராமவாசிகளுக்குக் கேழ்ப்பதுடன் அருகிலுள்ளவர்களின் காது செவிடு பொத்து விடுவதுபோல் கேட்கும். அதின் பெருஞ்சப்த காரணங்கொண்டு அதைப்பேதாதை என்றும் அத்தாளமானது தட்டுங்கால் காதடைத்துக் கொள்ளும்படியான பெருஞ்சப்தத்தைக் கொடுக்குங்காரணங்கொண்டு அதைப் பேதாளமென்றும் வழங்கி வந்தார்கள்.

பண்டி என்பது வண்டி என்றும், பைராக்கி என்பது வைராக்கி என்றும், பரதனென்பது வரதனென்றும், பேதவாக்கியம் என்பது வேதவாக்கியம் என்றும் வடமொழி மாறுகொள வழங்குவது போல் மேற்கூறியுள்ள போதாள மொழியானது வேதாளமென வழங்கிவந்தது. இத்தகைய வார்த்தைகளின் உற்பவமும் அதன் பொருளும் நன்குணராப் பொய்ப் புலவர்கள் தங்கள் மனம் போனவாறு வேதாளமென்னும் ஓர் பேயிருந்ததென்றும் அஃதோர் வேளாளன் விதைத்திருந்த பயிறுகள் யாவையும் மேய்ந்துவிட்டுப்போவது வழக்கமென்றும் அவ்வகை மேய்ந்துக் கஷ்டப்படுத்தி வந்த வேதாளத்தைத் திருவள்ளுவ நாயனார் துறத்திவிட்டபடியால் அவருக்கு அவ்வேளாளன் தனது மகளைக் கொடுத்தானென்றும் பொய்யுக்குப் பொய்ப் பொருந்தாப் பொய்களை

எழுதி தன்ம சங்கத்தின் அறஹத்துக்களின் மகத்துவங்களைக் கெடுத்து வைத்திருக்கின்றார்கள். வேதாளமென்னும் ஓர் பேய் உண்டென்று புர்வ சரித்திரங்களிலேனும் பூர்வ நூற்களிலேனும் வரைந்திருக்கின்றார்களா, தற்கால அனுபவத்திலேனும் நிகழ்ந்துவருகின்றதா இல்லையே, பேதாளம் - வேதாளம், ஓர் தாளக்கருவியை பேயென்று கூறியுள்ள அவர்கள் பேயநிலையை நாம் விசாரிக்க வேண்டிய விஷயமில்லை. தன்மசங்கஞ்சேர்ந்து பெண்சாதி பிள்ளைகளென்னும் பற்றுக்களற்ற அறஹத்தாகும் திருவள்ளுவ நாயனாருக்கு ஓர் பெண்சாதியுங்கட்டி பொய்யிற்குப் பொய் மூட்டுக்கொடுத்து விட்டார்களே இதையே விஷயமாகக் கொண்டு வேதாளத்தை விவரிக்க நேரிட்டது. ஆதலின் பறப்பான் பறைச்சியை வைத்துக்கொண்டு ஏழுப்பிள்ளைகள் பெற்ற பொய்க் கதையையும் நாயனாருக்குப் பெண்சாதி கட்டி வைத்தப் பொய்க்கதையையும் திருவள்ளுவ நாயனார் திரிக்குறள் தெளிப்பொருளுரை வெளிவருங்கால் தெள்ளற விளக்குவாம்.

1:39, மார்ச் 11, 1908 –

# 18. ஜைன மத விவரம்

ஜைநம் என்னும் மொழிக்குப் பாலிசூத்திரம் (பஞ்சமார்ஜினாத்தோஜ்ஜி ஜின) அதாவது சாக்கையச் சக்கிரவர்த்தித் திருமகனாகிய சித்தார்த்தியவர்கள் போதி விருட்சமென்னுங் கல்லாலமரத்தடியில் உட்கார்ந்து பொறிவாய லைந்தினையும் குணத்திரய காமத்தையும் சினத்தையும் வென்று மாணாக்கருக்கு அறிவுறுத்தி பிம்பாசார நகரம் சென்று அங்குள்ள மலையிற் சிலகாலந் தங்கி பாணினியருக்கும் அகஸ்தியருக்கும் போதித்திருந்த சகடபாடையாம் சமஸ்கிருதத்தையும் திராவிடபாஷையாம் தமிழையும் பிம்பாசார அரசனுக்கு வரிவடிவமாய்ப் போதித்து அம் மலையில் தசபாரதம், தசபாரமிதம், தசசீலமென்னும் பத்துக்கட்டளைகளை வரிவடிவு அட்சரங்களால் அடிக்கச்செய்து சத்திய தன்மத்தை விளக்கிவருங்கால் சித்தார்த்தியாம் புத்தருக்கு ஜினர், ஜைனர், சினர், சைநரென்றும் அம்மலைக்கு ஜினமலை, சைநமலை யென்றும் வழங்கிவந்தார்கள். நாளது வரையிலும் வழங்கிவருகின்றார்கள். இதுவுமின்றி புத்தபிரானுக்குள்ள ஆயிர நாமங்களில் சைநரென்பது ஒரு பெயர் என்பதை அடியிற் குறித்துள்ள பின்கலைநிகண்டின் பாடலாற் தெரிந்துக் கொள்ளலாம்.

**பின்கலை நிகண்டு**

தருமராசன் முன்னிந்திரன் /சினன் பஞ்சதாரைவிட்டே
அருள்சுரந் தவுணர்க்கூட்டுந் / தாகதன் ஆதிதேவன்
விரவு சாக்கையனே சைநன் /விநாயகன் சினந்தவிர்ந்தோன்
அரசுநி ழலிலிருந்தோன் / அறி அறன் பகவன் செல்வன்.

ஒலிவடிவாகும் பாலிபாஷையும் புத்தபிரானாலியற்றிய சமஸ்கிருத பாஷையும் தமிழ்பாஷையும் மகதநாடாம் வடநாட்டில் வேறூன்றி அகஸ்தியரால் தென்னாடெங்கும் பரவச்செய்தனர்.

வடநாடாம் மகதநாட்டில் தமிழ்பாஷை வேறூன்றி இருந்ததென்பதற்கு நூலாதாரம்.

**உதயணன்காதை - இராஜகிரக சிறப்பு**

விண்ணுற நிவந்த பண்ணமை படை மதில்
வாயிலு மருங்கினுங் காவல் கண்ணி
வேந்து பிழைத்தொழுகினுங்காய்ந்து கலக்கறா அ
முழுப்பரிசார முதற்க ணெய்தி
விழுப்பெருஞ் செல்வமொடு வென்றி தாங்கிய
யைம்பதினிரட்டி யவனச்சேரியு
மெண்பதினிரட்டி யெறிபடைப்பாடியு
மன்பெருஞ் சிறப்பி னாயிரமாகிய
தலைப்பெருஞ் சேனைத் தமிழ்ச் சேரியுங்
கொலைப்படுங் கடுந்திறற் கொல்லச்சேரியு
மிலைச்சச் சேரியுந் தலைத்தலை சிறந்து.

பகவனுக்குரிய சைந ரென்னும் பெயரையும் சைனமலை என்னும் பெயரையும் ஆதாரமாகக் கொண்டு பூர்வம் நாகர் குலம் என்றும் இஸரேலர் என்றும் வழங்கிவந்த ஓர் பெருங் கூட்டத்தார் புத்ததன்மத்தைப் பின்பற்றியச் செயலால் சைனரென்றும் சீனர் என்றும் நாளதுவரையில் வழங்கி வருகின்றார்கள்.

ஜின ஜைநரென்னும் புத்தருக்குரிய பெயரால் அவர் தன்மத்தைப் பின்பற்றிய சைனர்கள் யாவரும் தமிழ் பாஷைக்குரியவர்களுடன் சம்பந்தப்பட்ட வர்கள் என்பதை அடியிற் குறித்துள்ள தொந்த வாக்கியங்களால் அறியலாம். தமிழில் நீ என்னு மொழிக்கு சீனபாஷையில் நீ என்றும், நான் என்பதற்கு ஞான் என்றும் யாம் என்பதற்கு

யாம் என்றும், பெண் என்பதற்குப் பெண் என்றும், எஃகு என்பதற்கு எஃஎன்றும், கண் அல்லது இடம் என்பதற்கு கண் என்றும், ஈர் அல்லது இரண்டென்பதற்கு ஈர் என்றும், மை என்பதற்கு மை என்றும் வழங்கிவரும் தொந்தமொழிகளால் அறிவதுமன்றி மகதநாட்டைச் சார்ந்த ஜினமலை சைன மலையருகில் சைனர்கள் என்னும் பௌத்தர்களும் தமிழர்கள் என்னும் பௌத்தர்களும் பூர்வத்தில் ஓர் குலத்தினராக விளங்கினார் என்பதும் புலப்படுகின்றது.

தமிழரென்னும் பௌத்தர்கள் யாரென்பீரேல், - தற்காலம் பராயர்களால் பறையர்கள் பறையர்கள் என்று கூறும் பூர்வக் குடிகளேயாம்.

இதன் ஆதரவைக்கொண்டே இலங்காதேசத்துள்ள சிங்கள பௌத்தர்கள் யாவருந் தங்கட் புராதன நூற்களில் பாண்டிய அரச வம்மிஷத்தோர் யாவரையுந் திராவிட பௌத்தாள், திராவிட பௌத்தாளென வரைந்துவைத்திருக்கின்றார்கள்.

சரித்திர பூர்வங்களையும் பாஷையின் பூர்வங்களையும் அவரவர்கள் மதங்களின் பூர்வங்களையும் நன்காராய்ந்து கற்பனா கதைகள் யாவையும் அகற்றி மெய்ப்பொருள் உணராமல், தங்களுக்கு அன்னியப்பட்ட மதங்களின் பூர்வங்களைக் கண்டுத் தெளிந்தவர்கள் என நடித்து ஜைநமதச்சுவாமி அருகரென்றும், சமணமதச்சுவாமி அருகரென்றுந் தங்கள் மதப்பொய்யை மெய்யாகக் கூறுவதுபோல் அன்னியர்மதமெய்யை அறியாமற் பொய்யாகக்கூறி அலக்கழித்துவருகின்றார்கள்.
சமணர் - பாலி - மகடபாஷா
சிரமணர் - சமஸ்கிருதம் - சகடபாஷா
சௌமியர் - தமிழ் - திராவிடபாஷா

புத்தசங்கத்திற்சேர்ந்து ஞானசாதன சௌமியர்களாக விளங்கினோர்களை பாலியில் சமணரென வழங்கிவந்தார்கள். இவர்கள் ஞானசாதன உயர்வினால் சௌமி யசாகரரென்றும் சமணநீத்தோரென்றும் வழங்கி சாரணர் நிலைதோய்ந்தவர்களை சித்தர்கள் என்றும் அழைக்கப்பெற்றார்கள்.

**பின்கலை நிகண்டு**

நீரினிற் பூவில் வானில் நினைந்துழி யொதுங்குகின்ற
சாரண ரெண்ம ராவா / சமணரிற் சித்தி பெற்றோர்.

தகரவெதுகை : புத்தன் , மால், அருகன், சாத்தன்.

ரகரவெதுகை: தருமராசன்றான், புத்தன், சங்கனோ டருகன்றானாம்.

ஜைநர்கள் புத்தருக்குரிய ஆயிர நாமங்களிற் சிலதையும் தருமங்களிற் சிலதையும் நூதனமான சாதிபேதத்தையும் உண்டு செய்துக்கொண்டு தங்களை புத்தர் பெயர்களில் ஒன்றாகிய ஜைநரென்னும் பெயரால் மாற்றிக்கொண்டபோதிலும் யதார்த்தத்தில் அவர்கள் பௌத்தர்களே யாவர். புத்தமார்க்கத்திலிருந்தே சருவ மார்க்கங்களும் பிரித்துள்ளவற்றை இனி எழுதிவரும் பூர்வத்தமிழொளியில் அறிந்துக் கொள்ளலாம்.

1:41; மார்ச் 25, 1908

# 19. வேதவாக்கியங்களின் விவரம்

வேதமென்றும் மறையென்றும் வழங்கும்படியான ஓர் நூல் மனுக்களுக்கு முத நூலென்றும் சிரேஷ்ட நூலென்றும் அதுவே மனுக்களை ஈடேற்றும் நாலென்றும் சகலரும் புகழும்படியாய் இருக்கின்றபடியால், அத்தகைய நூல் யாவரால் இயற்றப்பட்டது என்றும் எக்காலத்தில் இயற்றியது என்றும் அதைக் கற்பதினால் மனுக்கள் அடைந்த சுகம் என்ன என்றும் அவற்றிற்கு வேதவாக்கியங்கள் என்னும் பெயர் வந்த காரணம் யாதென்றும் அவ்வேதவாக்கியம் செய்யாமொழி அதாவது வரையாக் கேள்வியிலிருந்த காலம் யாதென்றும் விசாரித்துத் தெளியவேண்டியதே விவேகிகளின் கடனாம்.

இவ்வேதவாக்கியங்களை இயற்றினவர் யார் என்னில் புத்தர் என்னும் பகவனேயாவர்.

**சீவகசிந்தாமணி**

ஆதிவேதம் பயந்தோய் நீ / யலாபெய் மாரியமாந்தோய் நீ
நீதிநெறியை யுணர்ந்தோய் நீ / நிகரில் காட்சிக் கிறையோய் நீ
நாதனென்னப்படுவோய் நீ /நவை செய் பிறவிக் கடலகத்துள்
பாதகமலந் தொழவெங்கள் /பசையாப்பவிழ பணியாயே.

**சூளாமணி**

ஆதியங்கடவுளை அருமறை பயந்தனை போதியங் கிழவனை
பூமிசையொதுங்கினை / போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய

சேதியஞ்செல்வநின் றிருவடி வணங்கினம்.

**கல்லாடம்**

மூன்றழல் நால்மறை முனிவறத்தோய்ந்து /மீறைநீருகுத்தலின் மறையோனாகியும்.

இவ்வேதவாக்கியம் எக்காலத்தில் இயற்றியதென்னில் இரண்டாயிரத்தி ஐந்நூறு வருடங்களுக்கு மேற்பட்டும் மூவாயிரத்தி நானூறு வருடங்களுக்குட் பட்டுமேயாம்.

**மணிமேகலை: கலியுலகவருடக் கணக்கு**
ஈரெண்ணுற்றோடீ ரெட்டாண்டினிற் / பேரறிவாளன் றோன்றி.

உள்ளக் கணக்கின் ஆதாரத்தைக் கொண்டும் தீபேத்திலுள்ளப் பிரதமக் கோபுரக்கட்டிடத்தின் அஸ்திபாரக்கல்லின் கணக்கின் ஆதாரத்தைக் கொண்டும் கூறினோம். புத்தரால் போதித்த வேதவாக்கியங்கள் யாதென்னில் :

**பாலி - மகடபாஷா**

சௌப்பா பஸ்ஸ அகரணம் குஸலஸ உபசம்பதா
சசித்த பரியோதபனங் ஏதங் புத்தான சாசனம்.

**தமிழ் - திராவிட பாஷா.**

பாபஞ் செய்யாதிருங்கள். நன்மெய்க் கடைபிடியுங்கள்.
உங்கள் இதயத்தை சுத்தி செய்யுங்கள் என்பதே.

இவைகள் ஒருவகை வாக்கியமாய் இல்லாமல் மூன்று பேதவாக்கியமாய் இருந்தபடியால் திரிபீட வாக்கியம் என்றும் திரிபேதவாக்கியம் என்றும் வழங்கி, பண்டி யென்பது வண்டி யென்றும், பரத னென்பது வரதனென்றும், பைராக்கி யென்பது

வைராக்கியென்றும், பாப மென்பது பாவ மென்றும், பாலிபாஷையில் பகரம் வகரமாக மாறுவதுபோல் பேதவாக்கியங்கள் என்னும் மொழி வேத வாக்கியங்கள் என வழங்கலாயிற்று.

ஆனால் புத்த பிரான் இப்பேதவாக்கியங்களை கல்லாலவிருட்சத்தின் கீழிருந்து போதித்த காலத்தில் பாலிபாஷையென்னும் மகடபாஷையானது ஒலிவடிவமாய் இருந்ததன்றி வரி வடிவமாயில்லாதலினால் ஒருவர் நாவினால் போதிக்கவும் மற்றொருவர் செவியினாற் கேட்டுக்கொண்டு அதன்மேறை நடக்கவுமாயிருந்தார்கள்.

அக்காலத்தில் வரிவடிவாம் அக்ஷரங்கள் இல்லாதபடியால் அவ்வாக்கியங்களைச் செய்யா மொழியென்றும், நாவினால் போதிக்கவும் செவியினால் கேட்கவுமா இருந்தபடியால் பாலிபாஷா சூத்திரப்படி (சுரோத்ராதிக்கு அத்தே சுருதி) என்றும் வழங்கிவந்தார்கள்.

இம்மூன்று பேதவாக்கியங்களும் வரிவடிவமாம் அக்ஷரங்களில்லாமல் ஒலிவடிவாம் சுருதியா இருந்தபடியால் மக்களுக்கு மறதியாய் விடும் என்று உணர்ந்த பகவன் அக்ஷரவடிவாய் சகடபாஷையாம் சமஸ்கிருதாட்சரங்களை உண்டு செய்து பாணினியாருக்கும் திராவிடபாஷையாம் தமிழட்சரங்களை உண்டு செய்து அகஸ்தியருக்கும் போதித்து வரிவடிவாம் அட்சரங்களைப் பரவச் செய்தார்.

**முன்கலை திவாகரம்**

வடநூற்கரசன் றென்றமிழ்க் கவிஞன்
கவியரங்கேற்று முபயக்கவி புலவன்
செரிகுணத்தம்பற் கிழவன்.

**தொல்காப்பியம்**

மயங்காமரபி னெழுத்து முறைகாட்டி / மல்குநீர் வரைப்பினைந்திரர்.

**வீரசோழியம்**

மதத்திற் பொலியும் வடசொற் கிடப்புந் தமிழ்மரபு
முதத்திற் பொலியேழை சொற்களின் குற்றமு மோங்குவினை
பதத்திற் சிதைவு மறிந்தே முடிக்க பன்னூறாயிரம்
விதத்திற் பொலியும் புக ழவலோகிதன் மெய்த்தமிழே

**மேற்படி நூல்**

வடமொழியை பாணினுக்கு /வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடையத் தென்மொழியை யுலகெலாந் தொழுதேத்த
குடமுநிக்கு வற்புருத்தார் கொல்லேற்றுபாகர்.

**சிலப்பதிகாரம்**

கண்களி மயக்கத்துக் காதலோடிருந்து தண்டமிழாசான் சாத்தநிஃதுரைக்கு.

இதிற் கிழவோனென்பதும் அவலோகிதனென்பதும் இந்திரர், ஐந்திர ரென்பதும் சாத்தனென்பதும் புத்த பிரானுக்குரிய ஆயிரநாமங்களுக்குள் அடங்கிய பெயர்களாம்.

புத்தபிரான் சமஸ்கிருத அட்சரங்களையும் தமிழட்சரங்களையும் இயற்றியக்கால் பேதவாக்கியங்களாம் பாபஞ் செய்யாதிருங்கள் என்னும் மொழியினுட் பொருளை கன்மபாகை என்றும், நன்மெய்க் கடைபிடியுங்கள் என்னும் மொழியினுட் பொருளை அர்த்தபாகை என்றும் இதயத்தை சுத்தி செய்யுங்கோளென்னு மொழியினுட்பொருளை ஞானபாகை என்றும் வகுத்து ஒவ்வொரு மொழியின் சாதனமே முத்திக்கு ஆதாரமாயிருந்து நித்தியநிலைப் பெற்றபடியால் கன்மபாகத்தால் மெய்யறமும், அர்த்த பாகத்தால் மெய்ப்பொருளும், ஞானபாகத்தால் மெய்யின்பமுந் தோன்றி வீடுபேறாம் நிருவாணம் அடைகின்றபடியால் மூன்று பேதந் திரிபேதம் என்றும் வழங்கிவந்த வாக்கியங்களை அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு பேத வாக்கியங்களாக வழங்கலாயினர்.

1:42; ஏப்ரல் 1, 1908 –

இத்தகைய பேதவாக்கியங்களை திரிபேதமென்றுஞ் சதுர்பேதம் என்றும் சப்தபேதம் என்றும் வழங்கிவந்தார்கள்.

**பின்கலை நிகண்டு**

ஆதிநூ லெழுதாக் கேள்வி / யாரணம், ஒத்து. சாகை,
யேதமில் சுருதிதன்னோ / டிரிக்கிவை யேழும் வேதம்
வேதநூற் பொருளினாமம் / விதித்திடும் ஞானபாகை
யாதியாங் கருமபாகை / யருத்தபாகையுமாமென்ப.
மெய்தெரி காரணந்தான் / வேதத்தில் ஞான பாகை
உய்யுமெய் யறமுறைக்கு / முற்றநல் லர்த்தபாகை
துய்ய நற் செயலைப்பற்றல் / சுத்தநற் கருமபாகை
வெய்யபௌடி கமேயாதி / விரியுபநிடதமாகும்.
ஏமமாம் இரண்டாம் வேத / மிசையித்திரியத்தோடு
தோமிலா யசுவாமென்று சொல்லுவர் நீதிநூலோர்
சாமமே மூன்றாம் வேதஞ் / சாற்றும் பேரின்பப்பேற்றை
வாமமுன் மொழியொன்றில்லா /வதர்வண வேதமாமே.
தந்துரை புனைந்துரைத்தல் /சார்ந்த பாயிரத்தினோடு
முந்திய பதிகமே நூன் / முகவுரை முப்பேராகும்
அந்தமா மாகமத்தோ /டாரிடம் பிடகமற்றுந்
தந்திரம் பனுவலோடு / சமயஞ் சூத்திரமு நூற்போர்.

இத்தியாதி வேதவாக்கியங்களால் திரிபிடகமென்றும், முதுமொழி என்றும், முதநூ லென்றும், ஆதி நூலென்றும், அறனாற்கூறிய அற நூலென்றும் வழங்கிவந்தார்கள்.

**நன்னூல்**

வினையினீங்கி விளங்கிய வறிவின் / முனைவன் கண்டது முதநூலாகும்.

**திரிக்குறள். புத்தகங்கத்தோர் சாற்றுக்கவிகள்**

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கும்
முன்பறிய சொன்ன முதுமொழிநூல் - மன்பதை கட்
குள்ள வறி தென்றவை வள்ளுவருலகங்
கொள்ள மொழிந்தார்க்குறள்.
நான் மறையின் மெய்ப்பொருளை / முப்பொருளா நான் முகத்தோன்
றான் மறைந்து வள்ளுவனாய்த் / தந்துரைத்த நூன்முறையே
வந்திக்கச் சென்னிவாய / வாழ்த்துக்க நன்னெஞ்சம்
சிந்திக்கக் கேட்கச் செவி.

**அருங்கலைசெப்பு**

என்று முண்டாகி இறையால் வெளிப்பட்டு நின்றது நூல் என்று உணர்.

புத்தபிரானால் வரிவடிவாகும் வடமொழியும் தென்மொழியும் இயற்றியருளியப் பின்னரே பேதவாக்கியார்த்தத்தை நூலென்று வழங்கினர். அதற்கு முன்பு மகடபாஷை வரிவடிவமின்றி ஒலிவடிவாய் இருந்ததினால் திரிபிடகம் என்னுந் திரிபேதவாக்கியங்கள் வரிவடிவற்ற செய்யாமொழியாயிருந்து சுருதிமொழியெனும் பெயர்பெற்று சருவசீவர்களையும் தன்னுயிர்போல் பாதுகாக்கும் அறஹத்துக்கள் என்னும் அந்தணர்பாற் செய்யாமொழியாய் இருந்தது.

**திரிக்குறள் - புத்தசங்கத்தோர் சாற்றுக்கவி**

செய்யாமொழிக்குந் திருவள்ளுவர் மோழிந்த
பொய்யாமொழிக்கும் பொருளொன்றே - செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயினேனை
பிதற்குரிய ரல்லாதாரில்.

பாபஞ் செய்யாதிருங்கள், நன்மெய்க் கடைபிடியுங்கள், உங்கள் இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்னும் மும்மொழிகளையே குருமொழி என்றுந் திரிமொழி என்றும் வழங்கி இம்மும்மொழியில் ஓர் மொழியை மனிதன் கடைபிடித் தொழுகுவானாயின் முத்திக் குரியவனாவன்.

**தாயுமானவர்**

குருமொழியே மலையிலக்கு /சந்ததமும் வேதமொழி யாது ஒன்றை பற்றினது
தான் வந்து முற்றுமெனலால்.

ஆதியில் நன்மெய்யைக் கடைப்பிடியுங்கள் என்னும் வார்த்தையைப் போதித்தவரும் புத்தர், நன்மெய்யாம் வார்த்தையைக் கடைபிடித்து நடந்து காட்டியவரும் புத்தர், நன்மெய் என்னும் வார்த்தையாம் சுயரூபியாக அதாவது நன்மெய்யே ஓருருவாக நின்றவரும் புத்தரேயாம்.

இந்த நன்மெயெனும் ஒரு மொழிக்கு எட்டு உபநிட்சயார்த்தங்கள் கூறியிருக்கின்றார்கள். இவ்வார்த்தைக்குப் பாலியில் உபநிஷத்தென்றுங் கூறுவர்.

**அருங்கலைச்செப்பு**

வேதத்தின் உட்பொருளாகும் அர்த்தபாகை யஷ்டகம் நன்மெய்க் கடைபிடித்தல்
ஆருயிர்துன்ப மகற்றியாற்றல் பேருயிர் நன்மெய்ப்புகழ்
யீயந்தும் அளித்தும் ஏற்காதிருத்தல் / சாந்த நன்மெய்த்துணை
தன்னுயிர்தவிர்த்து மன்னுயிரோம்பல் / உன்னிய நன்மெய்யுரன்
அன்னியர்தார மன்னைதங்கையென் / றுன்னு நன்மெயுறல்.
கொலையும் புலையுங் கொள்ளாதகற்றல் / நிலையாம் நன்மெய்நிழல் அமுதவாக்கும் அன்பிநோக்குங் /குமுத நன்மெய்க்குடை
வாக்கின் வாய்மெய் வளம்பெறவோதல் நோக்கு நன்மெய் நெறி
அமுதமூறு மறிவை யேற்றல் சமய நன்மெய்ச்சுழி.

1:43, ஏப்ரல் 8, 1908 –

இதன்மேறய அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு பேதவாக்கியங்களில் வாக்கியம் ஒன்றுக்கு எட்டுவகை உபநிட்சயார்த்தங்கள் கூறி நான்கு பேதவாக்கியங்களுக்கும் முப்பத்திரண்டு உபநிட்சயார்த்தங்கள் வரைந்து வைத்தார்கள்.

அறம், பொருள், இன்பமென்னும் முப்பாலாகுந் திரிபேதவாக்கியங்களுக்கும் உள்ள உபநிட்சயார்த்தங்களை மென்மேலும் விளக்கி அதனதன் அனுபவிகளின் சரித்திரங்களுக்குட்பட மெய்யறமாம் அறத்துப்பாலை தன்மபிடகமாகவும், மெய்ப்பொருளாம் பொருட்பாலை சூத்திரபிடகமாகவும், மெய்யின்பமாம் காமப்பாலை வினைய பிடகமாகவும் வகுத்து புத்தசங்கத்தோர் எழுதிவைத்துக்கொண்டு தங்கள் சாதனங்களை அநுட்டித்து வந்தார்கள்.

சங்கத்தோர் சாதனத்தாலும் உலகமாக்களுக்கூட்டும் நீதிநெறிகளின் ஒழுக்கத்தினாலும் குடிகள் வித்தை, புத்தி, யீகை, சன்மார்க்கம் என்னும் நான்கும் பெருகி ஒருவருக்கொருவருள்ள அன்பின் விருத்தியினால் ஒற்றுமெயுற்று சுகசீவிகளாக வாழ்ந்திருந்தார்கள்.

அக்காலத்தில் மிலேச்சர் என்றும் ஆரியர் என்றும் வழங்கும் படியான ஓர் சாதியார் குமானிடமென்னும் ஓர் தேசத்தில் வந்து குடியேறி மண்ணைப்பறித்து அதில் குடியிருந்துக்கொண்டு யாசகசீவனத்தால் சீவித்து வந்தார்கள்.

**சூளாமணி**

பத்துவகைய பரதவிரேவதத் / தத்தகுகால விழிவினகத்தவர்
சித்தந் தெளிவிலர் சீலமடைவிலர் / செத்த வறிவினர் சேகர ரவரே.
தீவினுள் வாழுங் குமானிடர் தேசத்து /மேவியுறையு மிலேச்சரெனப்பெய ராவரவருண் மிலைச்சவரையும் /வீவருந்தாரோய் விலங்கினுள் வைப்பாம். வாலுநெடியவர் வளந்த வெயிற்றினர் / காலுமொரோவென் றுடையர் கலையிலர் நாலஞ்செவியர் நவைசெய

மருப்பினர் ./ சீலமடைவிலர் தீவினுள் வாழ்வார். மக்கட்பிறப்பினு மாத்திரமல்லது / மிக்கவெளிற்று விலங்குகளேயிவர் நக்கவருவினர் நாணாவொழுக்கினர் / தொக்கினர்மண்ணே துளைத்துண்டு வாழ்வார்.

**பின்கலை நிகண்டு**

மக்கட்பெயர் - மிலேச்சராரியர்

இத்தகைய மிலைச்சரென்றும் மிலேச்சர் என்றும் ஆரியர் என்றும் - வழங்கிவந்த ஓர் கூட்டத்தார் யாசக சீவனத்தால் குமானிடர் தேசத்தைவிட்டுப் பரவி பலவிடங்களிலுஞ் சென்று அவரவர்களுக்குத் தக்க ஆரியக்கூத்தாடிக் காரியத்தின் பேரில் கண்ணாய் இத்தேசத்துக்குடிகள் யாவரும் வழக்கத்திலுஞ் சீலத்திலும் மிகுத்தவர்களாய் ஒற்றுமெயுற்று வாழ்வதையும் புத்த சங்கத்தோரை அரசர்கள் முதல் குடிகள் வரையும் வணங்கி பயபக்த்தியுடன் ஆதரித்து வருவதையும் நாளுக்குநாள் கண்ணுற்று வருங்கால் புத்தசங்கங்களிற் சமணநிலை கடந்து, மகடபாஷையில் அறஹத்துக்கள், என்றும் சகடபாஷையில் பிராமணர்கள் என்றும், திராவிட பாஷையில் அந்தணர் என்றும் வழங்கிவந்த விவேகமிகுத்த மெய்ஞ்ஞானிகளைப் போல் வேஷமிட்டு அதிகார சீவனஞ் செய்யவேண்டிய தந்திர எண்ணத்தால் வடமொழியையும் தென்மொழியையும் கற்று கல்வியற்ற குடிகளிடஞ்சென்று நாங்கள் தான் அறஹத்துக்கள் நாங்கள் தான் பிராமணர்கள், நாங்கள் தான் அந்தணர்கள் என்று சொல்லி வஞ்சித்தும் பொருள் பறித்துஞ் சீவித்துவந்தார்கள். இவ்வகை வேஷமிட்டு புத்த தருமங்களை மாறுபடச்செய்தகாலம் ஆயிரத்தி ஐந்நூறு வருடங்களுக்குட்பட்ட சீவகன் அரசாண்ட காலமாகும்.

**சீவக சிந்தாமணி**

செங்கட்புன்மயிர் தோல்நிரைச்செம்முக / வெங்கணோக்கிற்குப் பாயமிலேச்சனை செங்காட்டீவிழியாற்றெழித்தான்கையு / ளங்கட்போது பிசைந்தடு கூற்றனான்.

இவ்வகையாக மிலேச்சரென்னும் ஆரியர்கள் வடபரதங் குடியேறி பிராமணவேஷமிட்டு புத்ததருமங்களைச் சார்ந்துக் கல்வியற்ற சிற்றரசர்களையும் பெருங்குடிகளையும் தங்கள் வசப்படுத்திக்கொண்டு புத்த தருமங்களையும் சங்கங்களையும் மாறுபடுத்தி வருங்கால் கல்விமிகுத்த விவேகிகள் மிலேச்சர்களின் வேஷங்களை அறிந்து அடித்துத் துறத்தியக்கால் மிலேச்சர்களின் மாறுவேஷங்களைப் பறைகிறவர்களும், மிலேச்சர்களின் கட்டுக்குள் அடங்காமல் அன்னியப்பட்டவர்களு மாகிய மேன்மக்களைப் பராயர் பராயரென்றுகூறி பாழாக்கிய சரித்திரத்தை அஸ்வகோஷாவென்பவர் கூறியுள்ள நாராதிய புராணசங்கைத் தெளிவென்னும் நூலில் பரக்கக் காணலாம்.

**நாராதிய புராணச்சங்கைத் தெளிவு : 317 - பாடல்**

கறை வடுவுள்ளக் காட்சியாற் புருசர் / கனமடஞ் சுருளிளை யழித்து
திறைகவர் வேடஞ் சாற்றிமுப்புரிநூற் /சிலைகொழு வளமைகடேற்றி
மறையவரென்கோல் மாட்டியங்கோர்ந்து வழுக்குறை யூட்டி வாமனரைப்
பறைபவரெந்தங் கொடுமுறை தூற்றிப் /பறையர்கட் பறையரென்றாற்றே.

1:44: ஏப்ரல் 15, 1908 –

பௌத்த சங்க மேன்மக்களால் வழங்கிவந்த பேதவாக்கியங்களும் அதன் உபநிட்சயார்த்தங்களும் வடபரதந் தென்பரத முழுமையும் பரவிவந்த காலத்தில் நமது சக்கிரவர்த்தித் திருமகனாகும் சித்தார்த்தி பெருமான் ஐந்திந்திரியங்களை வென்ற வல்லபங்கொண்டு அவரை ஐந்திரரென்றும் இந்திரரென்றும் ஓர் பெயரளித்து இந்திரவிழாவென்றும் இந்திர திருவென்றும் இந்திரவிழாக்கோலம் என்றும் வடபரதந் தென்பரத முழுமையுந் கொண்டாடி வந்தார்கள். அங்ஙனம் புத்த தருமத்தைக் கொண்டாடிவந்த மாக்களை இந்தியர் என்றும் அவர்கள் கொண்டாடிவந்த தன்மத்தை இந்தியர் மார்க்கம் என்றும் இந்துவேதமென்றும் அவர்கள் வாசஞ்செய்யும் தேசத்தை இந்தியா தேசமென்றும் இந்து தேசம் என்றும் வழங்கிவந்தார்கள்.

**அருங்கலைச்செப்பு**

இந்தியத்தை வென்றான் தொடர்பாட்டோடாரம்ப
முந்து துறந்தான் முனி.

**அறநெறிச்சாரம்**

இந்தியக்குஞ்சரத்தை ஞானப்பெருங்கயிற்றால்
சிந்தனைத்தூண்பூட்டிச் சேர்த்தியே - பந்திப்பர்
இம்மெப்புகழும் இனிச்செல்கதிப்பயனும்
தம்மெத் தலைப்படுத்துவார்.

**தொல்காப்பியம்**

மல்குநீர் வரைப்பினைந்திர நிறைந்த

**மணிமேகலை**

இந்திரகோடனை விழாவணி விரும்பி.
இந்திரர் சிறப்புச் செய்வோர் முன்னர்
வந்து தோன்றிய வானவர் பெருந்தகை.

சிலப்பதிகாரம் இந்திரர் விழாவூரெடுத்த காதை காண்க

**சீவகசிந்தாமணி**

ஆசையார்வமோடையமின்றியே / யோசைபோயுல குண்ணநோற்ற பி ளேசுபெண்ணொழித் திந்திரர்களாய்த் தூயஞானமாயத் துறக்கமெய்தினார்.

**காசிக்கலம்பகம்**

புரவுபூண்டிந்திர திருவொடும் பொலிந்து / முடிவினு முடியா முழுநலங்கொடுக்கு. விடுத்துவிட் டிந்திர திருவும் புவி / வெண்குடைக்குளிடு மரசாட்சியுங்
கடுத்ததும் புவனத்தரைத்தேடுவர் / காதலித்து வருந்திருக்காசியே.

இத்தேசத்திலிருந்த சகலமாக்களும் இந்திரராம் புத்தரை சிந்தித்துவந்த சாதனத்தால் இந்திய தேசம் என்று வழங்கும் இந்நாட்டில் பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் வந்து தோன்றி அவரவர்கள் சமயாசார நூற்களை ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். அக்காலத்தில் வேஷ பிராமணர்களால் புத்ததன்மம் சீர்குலைந்து சங்கங்களும் அழிந்து சங்கத்தோராகும் மேன்மக்களும் நிலைகுலைந்து வேஷபிராமணர்கள் வாக்கு செல் மிகுதியிலிருந்தபடியால் அவர்களுக்குப்பின்பு தோன்றிய மகமதிய ராஜாங்கத்தாரிடமும் அதன்பின் தோன்றிய பிரிட்டிஷ் ராஜாங்கத்தாரிடமுந் தங்கள் வாக்கை ஏற்றுக் கொள்ளத்தக்க நிலையில் வைத்துக்கொண்டார்கள்.

இந்தியர் வேதம் இந்தியர்மார்க்கம் எதுவென்று விசாரிக்க ஆரம்பித்தவர்கள் புத்தபிரானால் விளக்கிய முத நூலாகும் பேதவாக்கியங் களையும் அதன் உபநிட்சயார்த்தங்களையும் வாரணாசியென்னுங் காசியில் வெகுவாகப் பரவச் செய்தபடியால் விசாரிணைமிகுத்த மேன்மக்களாகும் ஐரோப்பியர்கள் காசிப்பட்டணஞ்சென்று இந்தியர் வேதத்தை விசாரிக்க ஆரம்பித்தார்கள்.

அவ்விசாரிணைக்கு எதிர்தோன்றியவர்கள் எதார்த்த பிராமணர்களின்றி வேஷப் பிராமணர்களாய் இருந்தபடியால் பேதமென்னும் வாக்கியத்தின் பொருளும் அப்பேதமொழிகள் எத்தனை என்றும் அப்பேதமொழி ஒன்றுக்கு எத்தனை உபநிட்சயார்த்தங்கள் இருந்தது என்றும் அதன் அந்தர அர்த்தம் அறியாமல் வேதங்கள் என்றால் பெரிய பெரியக் கட்டுச்சுவடிகள் என்றும் அதில் மந்திரம், பிராமணம், தோத்திரங்கள் அடங்கியிருக்கின்றன வென்றும் இவ்வேதம் கள்ள மாயங்களினின்று நீங்கியக் கடவுளின் வாக்கினின்று புறப்பட்ட தற்பூரணமொழியென்று கூறி இவ்வேதத்தைக் கடவுள் பிரம்மாவுக்குப் போதித்தும், பிரம்மா முனிவர்களுக்குப் போதித்தும், முனிவர்கள் தங்கள் மாணாக்கர்களுக்குப் போதித்ததாக வரைந்திருக்கின்றார்கள்.

இவ்வேதம் தோன்றுவதற்கு முன்பே கடவுளும், பிரம்மாவும், முநிவர்களும், மாணாக்கர்களும் இருந்திருக்கின்றபடியால் கடவுள், முநிவர், பிரம்மா என்னும் பெயர்கள் யாவும் புத்த தன்ம நூற்களிலிருந்தே வரைந்துக்கொண்டார்கள் என்பது திண்ணம். இவ்வேதமும் இத்தேசத்திற்குரிய பாலியாம் மகடபாஷையிலேனும் சமஸ்கிருதமாம் சகட பாஷையிலேனம் வரையாமல் தாராஷ்கோ என்னும் பாரீசு சாதியோருள் ஒருவரால் பாரீசு பாஷையில் எழுதிவைத்து கிடைத்தப்பின்பு மற்றுஞ் சிலர்களால் சகடபாஷையில் எழுதிக் கிடைத்தது.

இவைகள் யாவற்றையும் சிறுக சிறுக சேகரித்து புத்தகருபப்படுத்திக் காண்பித்த மேன்மக்கள் யாரெனில் :

1-வது . கர்னல் பேர்லியர்.

2- வது. சர். இராபர்ட்ஸ் சேம்பர்.

3- வது. ஜெனரல் மார்ட்டீன்.

4 - வது. சார் . வில்லியம் ஜோன்ஸ்,

5-வது . மிஸ்டர் கோல்புருக்

1:45, ஏப்ரல் 22, 1908 –

இவ்வகையாகக் காசியில் அந்தந்த துரை மக்கள் கையில் எந்தெந்த சங்கதிகள் அடங்கிய பாகங்களோ அவரவர்கள் கொடுக்க அவைகள் யாவையும் ஒன்று சேர்த்து பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் கண்காட்சி கூடத்தில் மேற்கூறியுள்ள துரை மக்கள் வைக்கும் வரையில் இவ்வேதங்களானது இன்ன மடத்தில் இருக்கின்றது இனிய கலாசாலையில் இருக்கின்றதென்றேனும் இன்ன ஆச்சாரியாரிடத்தில் இருக்கின்றதேனும் இனிய குருவிடம் உள்ளதென்றேனும் ஓர் வதந்தியும் கிடையாது.

ஓர் கடவுள் வேதத்தை பிரம்மாவிடம் கொடுத்தார் என்றும், பிரம்மா முனிவர்களிடம் கொடுத்தார் என்றும், முனிவர்கள் மாணாக்கர்களிடம் கொடுத்தார் என்றும் பாயிரத்தில் வரைந்திருக்கின்றார்கள்.

கடவுளால் கொடுக்கப்பெற்ற வேதத்தை இருக்கு வேதத்தில் எவ்வகையாக எழுதியிருக்கின்றதென்றால் அனந்தங் கதைகள் விசுவாமித்திரராலும், பரத்துவாசராலும், வசிஷ்டராலும், கிரதசமதராலும், வாமதேவராலும், புதனாலும், அத்திரியினாலும், அகஸ்தியராலும், காசியபர், பராசர், கௌதமர், கண்ணுவர், பிரகஸ்பதி மற்றும் அனந்த அரசபுத்திரர்கள் வேதங்களிலுள்ள அனந்தமாயிரக் கதைகளை வரைந்திருக்கின்றார்களாம்.

இத்தனைப்பெயர்கள் கூடி எழுதியுள்ள வேதத்தை ஆதியில் சூரியனுக்குத்தான் வெளிப்படுத்தியதாக யசுர்வேதத்தில் எழுதியிருக்கின்றது. இவ்வகையான சூரியனுக்கு வெளிப்படுத்திய வேதத்தை சாமவேதம் என்றும், ருக்கு வேதம் என்றும், எஜுர் வேதம் என்றும், அதர்வண வேதம் என்றும் பிரித்துப் பெயர்கொடுத்தவர் வியாசர் என்று முகவுரையிற் கூறி இருக்கின்றது. இதே வியாசர் புராணங்களையும் எழுதியிருக்கின்றார். பாரதத்தையும் எழுதியிருக்கின்றார். சங்கராச்சாரிக்குப் போதிக்கவும் வந்திருக்கின்றார். தற்காலம் எங்கிருக்கின்றாரோ தெரியவில்லை.

இருக்குவேதத்தில் பூலோகத்திற்கு ஓர் கடவுள், புவர் லோகத்திற்கு ஓர் கடவுள், சுவர் லோகத்திற்கு ஓர் கடவுள், அவர்கள் பெயர்கள் யாதெனில் - அக்கினி, வாயு, சூரியன்.

வேத நிகண்டின் அட்டவணைகளோடு முதலில் அக்கினிக்கே ஏகார்த்தப் பலப்பெயர்களை எழுதியிருக்கின்றார்கள்.

அக்கினியையே பெரும்பாலும் தேவதையாகக் கொண்டாடுகிறவர்கள் பாரிசுசாதியோர் ஆதலினாலும், இவ்வேதங்களில் உள்ள அரைபாகசங்கதிகளை ஜெயபுரத்தில் கர்னல் பேர்லியர் துரையவர்களுக்கு தாராஷ்கோ என்னும் பாரீசு சாதியோர் ஒருவரால்

பாரீசுபாஷையில் மொழி பெயர்த்துக் கொடுத்துள்ள படியினாலும் வேதங்களின் அரைபாகம் பாரீசு சாதியோருக்கு சம்மந்தப்பட்ட சரித்திரங்களாக விளங்குகின்றது.

பாரிசீகர் சரித்திரங்களையே முற்றுமெழுதி விட்டால் இத்தேசத்திலுள்ள பௌத்தர்கள் மறுப்பார்கள் என்று எண்ணி புத்ததன் மங்களில் வரைந்துள்ள முக்கியப் பெயர்களாகும், இந்தியர், கௌதமர், சங்கறர், வாமனர், காசிபர், அஜாத சத்துரு மற்றுமுள்ளப் பெயர்களையும் அவரவர்கள் சரித்திரங்களில் சிலதைக் கூட்டியுங் குறைத்தும் எழுதிவிட்டார்கள்.

இந்த வேதங்களை இவர்கள் எழுதிய காலம் யாதென்பாராயின், ஜெநநமே ஜெயன் அஸ்வமேதயாகத்தை முடித்தவிஷயத்தை இவ்வேதங்களில் எழுதியிருக்கின்ற படியால் ஜெநநமே ஜெயன் சரித்திரமாகும் பாரதத்திற்குப் பின்பே எழுதியிருத்தல் வேண்டும். அல்லது யசுர் வேதத்துள் புராணத்துள் குறித்துள்ள வராக அவதாரத்தை எழுதியுள்ளதினாலும், பாயிரத்தில் புராணத்திலுள்ள மச்சவதாரத்தை எழுதியுள்ளதினாலும், புராணகாலங்களுக்குப் பின்பே இவ்வேதங்கள் எழுதியிருத்தல் வேண்டும். மச்சாவதாரங் கூறியுள்ள புராணத்தை எடுத்தோதும் இவ்வேதத்தில் இன்னோர் ஆட்சரியக்குறிப்பையும் காணலாம்.

அதாவது - பௌத்தர்கள் எழும்பி சங்கரர் என்னும் புத்தரால் போதித்துள்ள பேதவாக்கியங்களையும் பேத வந்தங்களையும் நீங்கள் எடுத்து போதிக்குங் காரணம் யாதென்பாராயின் எங்கள் வேதத்தை சங்கனென்பவன் திருடிக்கொண்டுபோய் சமுத்திரத்தில் ஒளித்துவைத்துக் கொண்டபோது எங்கள் கடவுள் மச்சாவதாரம் எடுத்து சமுத்திரத்துள் மூழ்கி மறுபடியும் கொண்டுவந்தார் என்று கூறுவதற்கு ஓர் ஆதாரமும் தேடிவைத்துக் கொண்டார்கள்

**பின்கலை நிகண்டு**

தருமராசன்றான் புத்தன் சங்கனோடருகன்றானாம்.

பாரதத்திலுள்ள சங்கதிகளும் புராணங்களிலுள்ள சங்கதிகளும் புத்த தன்மங்களில் பெரும்பாகங்களும் இவ்வேதங்களில் அடங்கியிருக்கின் றபடியால் புத்தபிரான் நிருவாணம் அடைந்த நெடுங்காலங்களுக்குப்பின்பு பிரிட்டிஷ் துரைத்தனத்தாராகிய ஆங்கிலேய மேன்மக்கள் தோன்றி இந்துக்களின் வேதங்கள் எவை என்று விசாரிக்க ஏற்பட்ட காலத்திலேயே பலபேர்களாலும் பலவகையாக எழுதி அவர்களிடம் சேர்த்திருப்பதாக விளங்குகிறபடியால் வேதசரித்திரங்கள் எழுதுவதற்கும், வேதம் என்னும் புத்தகரூபம் அடைவதற்கும், பிரிட்டிஷ் துரைத்தன ஆங்கிலேயர் காலமே ஆதாரமும் வேஷப்பிராமண வேதோற்பவக் காலம் என்றும் விளங்குகின்றது.

1:46; ஏப்ரல் 29, 1908 –

வேஷப்பிராமணர்கள் என்னும் பெயருதித்தக் காரணம் யாதென்பீரேல் :

இத்தேசம் எங்கும் பௌத்தர்கள் நிறைந்துள்ள காலத்தில் புத்த நிலையாம் உண்மெய் உணர்ந்தவர்களை பாலி பாஷையில் அறஹத்துக்கள் என்றுஞ் சமஸ்கிருத பாஷையில் பிராமணர்கள் என்றும் தமிழ் பாஷையில் அந்தணர்கள் என்றும் வழங்கப்பெற்ற பெயர்கள் அவரவர்கள் ஞானசாதனத்தால் சாந்தகுணம் மிகுத்த தண்மெயாலுஞ் சருவ சீவர்களையுந் தன்னுயிர்போல் பாதுகாக்கும் அன்பின் மிகுதியாலும் எதிரிகளின் பலனைக் கருதாது ஈகையினின்றாதரிக்குஞ் செய்கையாலும் அறநெறிகளை அடியார்களுக்கு ஓதி அல்லல்களை அகற்றுவதினால் உண்டாயவைகளாம்.

**திரிக்குறள்**

அந்தணரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மெய்ப் பூண்டொழுகலால்.

**பாரதம்**

நீதியும் நெறியும் வாய்மெயு முலகில் / நிறுத்தினோன் வேதியனன்றி
வேதியனேனு மிழுக்குறி லவனை / விளம்பு சூத்திரனென வேத
மாதவர் புகன்றாதலாலுடல் மாய்ந்தபின் யாவதோர் பொருளோ
கோதிலாவிந்தப் பிறவியில் வேதக் குரவ நீயல்லையோ குறியாய்.

**சிலப்பதிகாரம்**

அரவோர் பள்ளியற நோன்படையும்
புறநிலைக் கோட்டத்து புண்ணியதானமும்.

குமானிடர் தேசத்தில் குடியேறி வந்தவர்களோ பிராமணவேஷந்தரித்து விவேகமற்ற பலரையுந் தங்கள் வசப்படுத்திக்கொண்டு புத்த பிரானால் இயற்றியுள்ளத் தமிழையுஞ் சமஸ்கிருதத்தையும் கற்று சில சுலோகங்களைக் கூறிவந்தபோதிலும் பௌத்தர்கள் யாவரும் மதுமாமிஷங்களை விரும்பாமலும் அவைகளைக் கண்ணிற் காணாமலுஞ் சுத்தசீலத்தில் இருந்தவர்களாதலின் அவர்கள் முன்னிலையில் இந்த வேஷப் பிராமணர்கள் தங்கள் நாட்டில் எக்காலும் புசிக்கும் மதுமாமிஷங்களை பௌத்தாள் முன் புசிப்பதற்குப் பயந்து தங்களை அடுத்த கல்வியற்றவர்களை ஏமாற்றிக் கொழுத்த குதிரைகளையும் கொழுத்த மாடுகளை ளையும் கொழுத்த ஆடுகளையும் கொண்டுவரச்செய்து அசுவ யாகம், கோ யாகம், மேஷ யாகமென்றும் பெயர்களிட்டு நெருப்பிற் சுட்டு - தின்றுவந்ததுமன்றி மதுபானமென்னும் சுராபானத்தை சத்தி பூசையென்னும் பெயர்வைத்துக் கொண்டு பெண்களுடன் தாங்களும் கலந்துப் புசித்து வந்தார்கள்.

இத்தகைய மதுமாமிஷங்களை அந்தரங்கத்திற் புசிக்கும் வேஷ பிராமணர்களின் செய்கைகளை அறிந்த பௌத்தர்கள் அவர்களை அடித்துத் துறத்திவந்தபோதிலும் தங்கள் தந்திரங்களாலும் மித்திரபேதங்களாலும் கல்வியற்றப் பெருங்குடிகளையுஞ் சிற்றரசர்களையும் வசப்படுத்திக்கொண்டு புத்தசங்கத்தோரால் அவரவர்கள் தொழில்களுக்கென்று எழுதிவைத்திருந்தப் பெயர்களைக் கீழ்ச்சாதி மேற்சாதி என்று வகுத்து அதில் தங்களை உயர்ந்தசாதி பிராமணரென்று ஏற்படுத்திக்கொண்டு

தங்களை அன்னியர்கள் என்று அடித்துத் துறத்தித் தங்கள் வேஷங்களை விவரமாகப் பறைந்துவந்த பௌத்தர்களைத் தாழ்ந்த சாதி பறையர்கள் என்று வகுத்துப் பலவகை இடுக்கங்களால் பாழாக்கித் தங்கள் பொய்வேஷத்திற்கும் பொய்ப் போதங்களுக்கும் அடங்கி நடந்துக்கொண்ட அரசர்களை ஆதரித்துக் கொண்டும் தங்கள் பொய் வேஷங்களையம் பொய்ப் போதகங்களையும் அறிந்து துறத்திய அரசர்களை மித்திர பேதங்களால் கொன்றும் பலவகைத் துன்பங்களைச் செய்துவிட்டது மல்லாமல் புத்த தன்ம நூற்களையும் அழித்து புத்த சங்கங்களையும் மடங்களையும் பாழாக்கித் தங்கள் பிராமணவேஷத்தை பலப்படுத்திக் கொண்டார்கள்.

பிச்சை எடுத்து உண்பதிலும் அதிகாரப் பிச்சையால் தங்கள் தங்கள் பெண்டு பிள்ளைகளுடன் சுகித்துவாழ்வதை அறிந்த இத்தேசத்து ஆந்திரசாதி, கன்னடசாதி, மராஷ்டக சாதி, திராவிடசாதியோர் என வழங்கியக் கூட்டத்தாருள் சில விவேகிகள் தாங்களும் பிராமணவேஷமிட்டு வெளிவந்ததினால் பழய வேஷ பிராமணர்களுக்கும் புதுவேஷப்பிராமணர்களுக்கும் மனத்தாங் கலுண்டாய் அவர்களை வேஷபிராமணர்களென்று கண்டித்தாலோ நீங்களும் வேஷபிராமணர்களே என்று விளக்கிவிடுவார்கள். அதினால் நமக்குக் கனக்குறைவும் வேஷமும் வெளியாகிவிடும் என்று எண்ணி மாட்டிறைச்சியைப் பறிகொடுத்த பாப்பாத்தி போல் வெளிக்குச் சொல்லாமல் உள்ளுக்குள்ளாக விரோதத்தை வைத்துக் கொண்டு பிராமணர்கள் என்னும் வேஷம் போட்டிருந்த போதிலும் ஒருவர் வீட்டில் ஒருவர் புசியாமலும் ஒருவர் பெண்ணை மற்றொருவர் கொள்ளாமலும் மாறுபட்டே நின்றுவிட்டார்கள்.

பிச்சையேற்றுண்பதிலும் அதிகாரப்பிச்சை அதிகரிக்கவும் இதனந்தரார்த்தம் அறியாது ஏமார்ந்து கொடுப்போர் ஏராளமாகவும் பிராமணர்கள் வேஷம் பலபாஷைக்காரர்களிடத்தும் அதிகரித்துவிட்டது. அங்ஙனம் பிராமண வேஷங்கள் மட்டிலும் அந்தந்த பாஷையில் அதிகரித்துவிட்ட போதிலும், ஆந்திரபாஷையில் க்ஷத்திரியன் யார். வைசியன் யார். சூத்திரன் யார். இந்தப் பறையன் யார். கன்னட பாஷையில் க்ஷத்திரியன் யார், வைசியன் யார், சூத்திரன் யார், இந்தப் பறையன் யார், மராஷ்டக பாஷையில் க்ஷத்திரியன் யார். வைசியன் யார். சூத்திரன் யார். இந்தப் பறையன் யார். திராவிட பாஷையில் க்ஷத்திரியன் யார், வைசியன் யார்.

சூத்திரன் யார். இந்தப்பறையன் யார்.

1:47; மே 6, 1908 –

என்பவற்றுள் ஆந்திர, கன்னட, மராஷ்டக, திராவிடம் என்னும் பாஷைகளுள் பிராமணன் என்னும் பெயர்களை மட்டிலும் வைத்துக்கொண்டு மற்ற க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்னும் வரிசைக்கிரமப் பெயர்கள் ஒவ்வொரு பாஷைகளிலும் இல்லாமல் திராவிட பாஷையிலுள்ளப் பெருங் குடிகளைப் பறையன் என்றுத் தாழ்த்திப் பலவகை இடுக்கண்கள் செய்துவந்த காலத்தில் பௌத்ததன்ம விவேகிகள் அவற்றைக் கண்டித்துக் கொண்டுவந்தது மன்றி நான்முகன் மாலாகும் புத்தருக்கு சிரேஷ்ட வம்மிஷ வரிசையோரென்றுஞ் சத்தியதன்மப் பரம்பரையோரென்றும் விளக்கி புத்தபிரானை சிந்திக்காதவர்களே பறையர்கள் என்றும் பரக்கத் தீட்டியிருக்கின்றார்கள்.

**அவிரோத வுந்தியார்**

அறுவகை சமயத்தரையு மெய்ப்பொருளு / மறுபத்து நாலு நற்கலையு மறுவறப்பயின்று மாசறத்திகழு / மறிஞரா மவர்களே யெனினுங்
குறைவறத் தன்னைக் கொடுத்திடுங் குரவன் / குரை கழல் புனைந்தவ ரன்றேல் பறையர் மற்றவரை பறையரே யெனினு / மருளுடையவர் பரம்பரரே.

**சிவவாக்கியர்**

பறைச்சியாவதேதடா பாணத்தியாவதேதடா
விறைச்சிதோ லெலும்பிலே யிலக்கமிட்டிருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பாணத்தி போகம் வேறதோ
பறைச்சியும் பாணத்தியும் பரிந்து பாருமும்முளே.

**திருவாசகம்**

வேதமொழியர் வெண்ணீற்றர் செம்மேனியர் / நாதப்பறையினரென்னே என்னும் நாதப்பறையினர் நான்முகன் மாலுக்கு / நாதரின்னாதனாரன்னே என்னும்.

**ஞானவெட்டி**

விட்டகுறை வருமளவி முபதேசங்காண் / மெய்யுடலந்தளர்ந்து கலை மேலு நோக்கி
தட்டழிந்து விழும்போது வோதிவைத்த / சாத்திரங்களொன்றேனு நினைக்கப் போமோ
எட்டு ரண்டு மறியாதார் குருக்களாமோ / என்னையுமே பறையனென்று தள்ளலாமோ
மட்டமரும் பூங்குழல் வாலாம்பிகைப்பெண் / வங்கிஷத்தி லுதித்த சம்பவனு னானே.

வேஷப் பிராமணர்களால் பௌத்தர்களைப் பறையரென்று தாழ்த்தி வந்தப் பெயரை விவேகிகள் கண்டித்து வேஷப்பிராமணர்ப் பொய்ப் போதங்களை விளக்கி யவற்றுள் சொற்ப விவேகிகள் தெரிந்துக் கொண்ட போதிலும் கல்வியற்றப் பெருங்குடிகளைத் தங்கள் வழிப்படுத்திக் கொண்டு பறையரென்னும் பெயரை பலவகையாலும் பரவச்செய்துவந்தார்கள்.

அதாவது பறைப்பருந்து பாப்பாரப் பருந்தென்றும், பறைமயினா பாப்பார மைனாவென்றும், பறைப்பாம்பு பாப்பாரப்பாம்பென்றும், இப் பெயரை மறவாமல் பரவச் செய்ய வேண்டிய உபாயஞ் செய்தார்கள். நாயின் பெயரில் பறைநாயென்று மட்டும் கூறவைத்துப் பாப்பார நாயென்னும் வார்த்தையை வழங்காமல் நிறுத்திக் கொண்டார்கள்.

ஏனென்பீரேல் பாப்பார நாயென்றால் தங்களை இழிவுபடுத்து மென்பதேயாம்.

இதுவுமன்றி வேஷப்பிராமணர்கள் கல்வியற்றக்குடிகளை ஏமாற்றி பிச்சை இரக்கப்போகும் காலங்களில் எல்லாம் இப்பறையனென்னும் வார்த்தையைப் பரவச்செய்தற்கு பொய் சொன்னால் நான் ஒருபறையன், கொடாவிட்டால் நான் ஒரு பறையன் என்று வழங்கும் வார்த்தைகளையும் கற்பித்துவிட்டார்.

அக்கல்வியற்றக் குடிகளோ பொய்யே ஒருருவாகக் கொண்டிருந்த போதிலும், திருட்டே ஒருருவாகக் கொண்டிருந்தபோதிலும், வஞ்சகமே ஓருருவாகக் கொண்டிருந்தபோதிலும், மோசமே ஓருருவாகக் கொண்டிருந்த போதிலும் தங்களுடைய துற்செயல்களையும் துற்குணங்களையும் கவனியாமல் பறையன் என்னும் மொழியை மட்டிலும் இழிவாக உபயோகித்து வருகின்றார்கள்.

இதுவுமன்றி பௌத்தமார்க்கத்தைத் தழுவிய நந்தனென்னும் ஓரரசன் இருந்தான். அவன் பெயரைக் கொண்டே நந்தனென்னும் பறையனிருந்ததாகப் பொய்ப் புராணத்தையும் பொய்க்கீர்த்தனையும் ஏற்படுத்திப் பரவச்செய்ததுமன்றி பொய்ச்சொல்லா அரிச்சந்திரன் கதை என்னும் பொய்ப்புராணம் ஒன்று ஏற்படுத்தி புத்தர் வம்மிஷ முதியோன் வீரவாகுச் சக்கிரவர்த்தியை சுடலை காக்கும் பறையனென்று ஏற்படுத்தி கூத்துகளாடி தமிழ்நாடெங்கும் பரவச் செய்தார்கள்.

கபிலர் இயற்றினாரென்னும் பொய் அகவலொன்று ஏற்படுத்தி அதிலும் பறையன் என்னும் பெயரைப் பரவச்செய்தார்கள். சுத்தமாகியத் திரிக்குறளில் அசுத்தவேஷப் பிராமணன் பொய்க்கதையை எழுதி அதனிலும் பறையன் என்னும் பெயரைப் பரவச் செய்தார்கள்.

காரணம் யாதென்ரேல் ஐயர் வார்த்தையை ஐயம் பெருமாள் வார்த்தை போல் எண்ணிக் கொள்ளும் கல்வியற்றவர்களாதலின் தங்களிடமுள்ள நீச்சச் செயல்களைக் கவனியாமல் பறையன் என்னும் வார்த்தையை மட்டும் பரக்க உபயோகிக்கின்றார்கள்

இதுவுமன்றி பௌத்தர்களை நசிக்கிவிட்டால் பௌத்த மார்க்கம் தானே நசிந்துவிடும். அப்போது நம்முடையப் பிராமண வேஷங்களும் பொய்வேதப் புரட்டுகளும் நிலைத்து நாமும் சிறப்படைந்து விடலாம் என்று எண்ணி பௌத்தர்களை சுத்தசலங்களை மொண்டு குடிக்கவிடாமலும் வண்ணார்களை வஸ்திரம் துவைக்கவிடாமலும் இடுக்கங்கள் செய்துக் கொண்டு வந்ததுமன்றி பண்ணை வேலைச் செய்துவந்தவர்களை ஒருநாள் முழுவதும் வேலைவாங்கி அரைவயிறு கஞ்சேனுஞ் சரிவரக் கொடுக்காமல் எலும்புந் தோலும் விகாரரூபமுங் காணவைத்துக் கொண்டு

அன்னிய தேசங்களிலிருந்து இவ்விடம் வந்து குடியேறியுள்ள மகமதியர் களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இவர்களைக் காண்பித்து இவர்கள் தாழ்ந்த சாதிபறையர்கள் இவர்களை நாங்கள் தீண்டுகிறதுமில்லை அருகில் சேர்க்கிறதும் இல்லை என்று சொல்லி அவர்களையும் அருவெறுக்கச் செய்து வேஷபிராமணர்களே இத்தேசத்துள்ள வர்களுக்கு பெரிய சாதிகள் என்று சொல்லிக் கொண்டு நூதனமாகக் குடியேறியவர்களிடஞ் சென்று பாஷைகளில் ஏதேனும் கற்பிக்கப் போனபோதிலும் இப்பறையனையே முந்தி இழிவடையக் கூறி பின்பு மற்ற

போதகங்களைச் சொல்லிவருவது வழக்கமாயிருந்தது.

இத்தகையக் குறூர செயல்களினால் பௌத்த கூட்டத்தோர் யாவருஞ் சுகநிலை தவறி க்ஷணதிசை அடைந்திருந்தபடியால் நூதனமாகக் குடியேறியவர்களும் இவர்களை அவமதித்து வேஷப்பிராமணர்களால் பறையன் என்று அவமதிக்கப்படும் காரணங்களை விசாரிக்காமலும் இதன் விவரங்களைத் தெரிந்துக் கொள்ளாமலும் வேஷபிராமணர்களின் தந்திர சொற்களை மேற்கொண்டு இந்துதேசத்தோர் வேதம் யாதென்றுக் கேட்க ஆரம்பித்ததின் பேரில் பௌத்ததன்மத்தைச் சார்ந்த வேதங்கள் யாவும் விளங்காமல் வேஷப்பிராமணர்கள் வேதம் வெட்டவெளியாக விளங்கியது.

1:48; மே 13. 1908 –

யாதெனில் இந்துக்கள் வேதங்களை அறிய வேண்டும் என்று அவாக் கொண்டு தேடிய கானல் போலியர், சர் ராபர்ட் சேம்பர், ஜெனரல் மார்ட்டீன், சர் உல்லியம் ஜோன்ஸ், மிஸ்டர் கோல்புருக் இவர்களுக்கு பலப்பெயர்களால் ஓலைகளில் எழுதிக் கொடுத்து இவைகள் தான் எங்கள் வேதங்கள் என்று கூறியதுமன்றி, இத்தகைய வேதங்களை எழுதியவர்களின் சிரேஷ்ட உற்பவத்தை மநுஸ்மிருதி என்னும் நூதன சாதி உற்பவ நூலில் வரைந்து வைத்தார்கள்.

ரிஷி பஸ ருங்கோம் ருகோஜாத / கௌசிகோகாதிநந்தன்
ஜம்புகோ ஜம்புகோத்பத்தி / கௌதமோ கௌதசம்பவ

வால்மீ கோ பரோத்பத்தி / அகஸ்திய கும்பகம்பவ
மியாசோலுப்த சம்பூதோ / வசிஷ்டா வூர்வசிசுத
நாரதோப் சகிபுத்திரோ / கௌண்டன்யோ முண்டகிசுத்
மதங்கஸ்ய மதங்கஸ்யாத் / மாண்டவ்யோ மண்டுகிசுத
சாங்கியாசம்ச சம்பூதோ /கார்க்கேயோ கார்த்தவசுத
சுநகிகற்ப சம்பூதோ / சௌனகாதி மஹாரிஷி.

இதன் சுருக்கமாவது தவளை வயிற்றிலும், நாயின் வயிற்றிலும், நரியின் வயிற்றிலும், கழுதையின் வயிற்றிலும், மான் வயிற்றிலும், பசுவின் வயிற்றிலும், மனிதர்கள் பிறந்து இவ்வேதங்களை எழுதினார்கள் என்பதேயாம்.

இதுவுமின்றி இவ்வேதத்தை ஓரசுரன்கொண்டு போய் சமுத்திரத்தில் ஒளித்து வைத்ததை இவர்கள் கடவுள் போய் கொண்டுவந்தார் என்று கூறியிருக்க அது ஒரு கட்டும் ஒருருவுமின்றி பலர்கள் எழுதி கொண்டு ஐந்து துரைமக்களிடம் கொடுத்திருப்பதினாலும், அது காலங்களுக்குக்காலம் மாறுபட்டே கிடைத்திருக் கின்ற படியாலும் இவ்வேதங்களுள் பாரீசு சாதியாரின் சரிதங்களும் புத்ததரும் நீதிகளும் கலந்திருப்பது நீங்கலாக சாமவேதத்துள் துவஷ்ட பிரமாவே சங்கராச்சாரியாக வந்திருப்பதாக சித்தூர் ஜில்லாத் தீர்ப்பில் வெளிவந்திருப்ப தினாலும், இருக்குவேதத்துள் - மாதவாச்சாரியின் குருவும் அவ்வேதத்துள்ள சில கீதைகளை வரைந்துள்ளதினாலும் சங்கராச்சாரி மாதவாச்சாரி இவர்களின் காலங்கள் சொற்பமாக விளங்குகின்றபடியாலும், ஆளில்லா உபதேசம் அதர்வணனுக்குப் போதித்து அதினால் அதர்வணவேதம் என்னும் பெயர் கண்டிருப்பதினாலும், வேதங்களின் சிக்கை அறுத்தவரும் வியாசர், புராணங்களை உண்டு செய்தவரும் வியாசர். கைம்பெண்களைச் சேர்ந்து பிள்ளைகளை உற்பத்திச் செய்து அவர்கள் கதையாகும் பாரதத்தை எழுதியவரும் வியாசர். இத்தகைய பாரதப்போர் முடிவில் தோன்றிய பரிச்சித்துவின் மகன் ஜெனனமே ஜெயனென்பவன் குருவின் சங்கதிகளும் எசுர்வேதத்துள் எழுதியிருப்பதினாலும், தற்காலம் கிறீஸ்துவேதம் என்று வழங்கும். மோசே எழுதியுள்ள முதலாகமத்துள் பராபரன் தண்ணரின் பேரில் அசைவாடிக் கொண்டிருந்தாரென்று எழுதியிருப்பது போல், யசுர்வேத 114-வது பாகத்தில் இந்த

உலகம் ஆதியில் சலமாக இருந்ததாகவும் அந்த சலத்தின்பேரில் அவர்களுடைய சிருஷ்டி கர்த்தா அசைவாடிக்கொண்டிருந்தார் என்றும் உலகமே சலமாயிருந்து ஒருவரும் அறியாமல் தோன்றிய பூமியை இவர்கள் சிருஷ்டி கர்த்தா பன்றி உருவெடுத்துத் தாங்கியிருந்தார் என்றும், அப்பன்றி எதன்பேரில் நின்றதென்று விளங்காததினாலும், யசுர்வேத 129-வது பாகத்தில் வேதாந்ததை போதித்தவர் சுவேதாசுவத்திரர் என்று கூறியிருக்க சங்கரவிஜயத்தில் சங்கராச்சாரி வேதாந்தங் கூறினார் என்று எழுதியிருப்பதினாலும், உபநிடதங்களையும் அவ்வேதங்களுள் எழுதிவைத்திருப்பதினாலும், சாமவேதம் 131-வது பாகத்தில் சாமவேதியர்க் கிரியைகளை ஓதுதலினால் சாமவேதம் என்று குறித்திருப்பதினாலும், சாமவேதத்தை ஓதுதலினால் சாமவேதியரா னார்களா, அன்று, சாம வேதியர் கிரியைகளைக் கொண்டு சாமவேதம் உண்டாயிற்றாவென்று விளங்காததினாலும், சாமவேதம் 141 - வது பாகத்தில் புத்தபிரான் பரிநிருவாணமடைந்த நெடுங்காலங்களுக்குப் பின்பு தோன்றிய உத்தாலகன் கதைகள் அடங்கியிருக்கின்றபடியாலும், இவ்வேஷபிராமணர்களின் வேதங்களும் புராணங்களும் மநுஸ்மிருதி பாரதம் இராமாயண முதலிய நூற்கள் யாவும் புத்த பிரான் பரிநிருவாணமடைந்த நெடுங்காலங்களுக்குப் பின்பே தோன்றியுள்ளது என்பது துணிபாம்.

இவைகள் வேதங்களில் உள்ள மற்றும் சங்கதிகளை விவரிக்கின் வீண்சங்கை வளரும். பிராமணவேதம் சைவம் வைணவமென நூதனமாகத் தோன்றியுள்ளவை களுக்குப் பின்பு இன்னும் நூதனமாகத் தோன்றியுள்ள பிரமோசமாஜம், வேதாந்தம், ஆரியமதமென வந்துள்ளவர்களில் சிலர் புத்ததன்ம அஷ்டாங்க மார்க்கத்துள் சீலம், சமாதி, பிரக்ஞை என்னும் நிலையால் தோன்றும்.
பிரக்ஞானம் பிரமம் / அகம்பிரமாஸ்மி / அயமாத்ம பிரமம் / தத்துவ மசி.

என்னும் நான்கு சுத்தோதய சத்தியதானத்தை நான்கு பேதவாக்கியங்கள் என்று கூறியபோதினும் அதனுட்பொருள் பிரக்ஞா தெளிவின் பிற்போதமாதலின் நான்கு பேதவாக்கியங்களுக்கும் அதனுட் பொருளாம் கர்மபாகை, அர்த்தபாகை, ஞானபாகையாகும் அறம், பொருள், இன்பம் நிகழாமல் அநார்த்தத்தால் அழியும். இத்தகைய பேத வாக்கியங்களைக் கொண்டு குருடனுக்குக் குருடன் வழிகாட்டுவது

போல வேஷபிராமணர்களுக்கு உதவியாய வேஷஞானிகள் தோன்றி ஞானப் பிரகாசமுற்றிருந்த தேசத்தை அஞ்ஞானவிருள் அடையச்செய்து விட்டதினால் ஞானிகளின் தோற்றமும் அவர்கள் தெரிசனமும் கிடையாமல் போய்விட்டது.

இப்போதும் இவ்வேஷபிராமணர்கள் எங்கள் வேதங்களும் நிலையுள்ளது வேதாந்தங்களும் நிலையுள்ளது என்று வெளிவருவார்களாயின் காசியில் விஷ்ணுவே பரமென்று கரமற்ற வியாசர், சிவனே வியாசராகவும் சங்கராச்சாரியாகவும் வந்துள்ள அவதாரபேதங்களாலும் போத பேதங்களாலும் இவர்கள் வேதங்களும் நிலையற்றது வேதாந்தங்களும் நிலையற்றதென ரூபிக்கக் கார்த்திருக்கின்றோம்.

**கடுவெளி சித்தர்**

பொய்வேதந் தன்னைப்பாராதே - அந்த / போதகர் சொற்புத்தி போதம் வோராதே (பாபஞ்)

1:49; மே 20, 1908 -

# 20. கோயிலும் ஆலயமும்

வினா : அடியிற் குறித்துள்ள வாசகங்களின் அந்தரார்த்தங்களை விளக்கும்படிக் கோறுகிறேன்.
ஆலயந்தொழுவது சாலவுநன்று. / கோவிலில்லாவூரில் குடி யிருக்க வேண்டாம்.

விடை : விசாரிணைப்புருஷர்கள் ஒவ்வொருவரும் இத்தகைய சங்கைகளைக் கேட்டுத் தெளிவதே விவேக விருத்தியாம். அங்ஙனமின்றி சொன்னதைச்சொல்லுங் கிளிபோல் சொல்லித் திரிவது (ஹாமில்டன்) வாரவீதியை (அம்மட்டன்) வாரவீதி என்று வார்த்தை கெட்டதுமன்றி பொருளுங்கெட்டு நிற்பது போலாகும். ஆதலின் தாமுசாவியுள்ள வாசகங்களின் பொருளும் அவ்வாறே கெட்டு வழங்கிவருகின்றது.

வாசகங்களின் பொருளறிய வேண்டியவர்கள் முன் வாசகச் சீரின் அந்தரார்த்தம் உணர்ந்து பின் வாசகச் சீரின் பொருளுரைத்தல் வேண்டும்.

அதாவது

அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம் - தாய் தந்தையர்களே முன்கண்ட தெய்வங்களாவர். அவர்களைத் தொழுவோர்,

ஆலயந் தொழுவது சாலவு நன்று

தாய்தந்தையரை திரிகரணங்களும் ஒடுங்கி வணங்குதல் எக்காலுஞ் சுகத்தைத் தரும் என்பதாம். ஆ என்னும் நெடிலுயிரின் பொருள் பாலிபாஷையில் மனோவாக்கு,

காய்மென்று கூறப்பட்டிருக்கின்றது. இத்தகைய மனோவாக்குக் காயங்கள் என்னும் திரிகரணம் ஒடுங்கத் தொழுதலே முழு கும்பிடாகும். அதன் பலனே சாலவு நன்றாம்.

மைந்தன் தாய் தந்தையரைத் திரிகரண லயமுறச் சதா வணங்கி வருவானாயின், அத்தொழுகையைக் கண்டு வரும் இவன் மைந்தன் இவனை சதா வணங்கி சுகத்தில் வைப்பான். இவ்வகை ஆசாரங்களே குலத்தில் பெருகி குலமுஞ் சீர்பெறும். இதன் அந்தரார்த்தங்கொண்டே நமது அம்மை சாலவு நன்றென வைப்புறுத்திக் கூறியிருக்கின்றாள்.

கொற்றவனோடு எதிர்மாறு பேசவேண்டாம். இதன் பொருள் அரசனுடைய வார்த்தைக்கு எதிர்மொழிக் கூற வேண்டாம் என்பதாம்.

கோயிலில்லாவூரில் குடியிருக்கவேண்டாம். இதன் பொருள் அரசன் மனையில்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பதாம். அதாவது ஓர் அரசனில்லாத ஊரில் குடியிருப்பதினால் சத்துருக்களின் துன்பமும் கள்ளர்களின் பயமும் மிகுந்து விசாரிணையின்றி பாழுறும். ஆதலின் சக்கருக்களின் துன்பமும் கள்ளர்களின் பயமும் இல்லாமல் சுகமாக வாழவேண்டியவர்கள்

அரசனிருக்கும் ஊரில் குடியிருக்க வேண்டும் என்பது கருத்து.

இதன் பொருளறியாதோர் இத்தேசத்துள் நூதனமானக் கல்லைநட்டு விளக்கெண்ணெய் வார்த்துத் தொழுமிடங்களுக்குக் கோவிலென்றும், ஆலயம் என்றும் பெயரிட்டுக் கொண்டார்கள். அதற்கு அர்ச்சகர்களாக இருப்பவர்கள் வேஷபிராமணர்கள் ஆகையால் அவர்கள் வார்த்தை ஐயர், பெரியவர் வார்த்தையென்று எண்ணி சகலரும் ஆமோதித்துச் சரிசரி என்று சொல்லி வருகின்றார்கள்.

இத்தகைய சொற்களின் சுயப்பொருட்கள் யாவும் புத்த சங்கத்தோர் உரைக்கல்லில் விளங்குமேயன்றி வேஷபிராமணர்கள் வெறும் பொய்யால் விளங்கும் என்பது

வெட்டவெளியேயாம்.

கோத்திரம் அறிந்து பெண்கொடு, பாத்திரம் அறிந்து பிச்சையிடு என்பது பௌத்தர்கள் முதுமொழியாம். (இதன்பொருள்) அரசன் வல்லமெய் அறிந்து பெண் கொடு, புத்தசங்கத்தோருக்கு விமலர் தந்த ஓடு தெரிந்து பிச்சையிடு என்பதேயாம்.

1:47: மே 6, 1908 -

# 21. அரிச்சந்திரன் மெய்யனென்னுங் காதையும் பொய்யனான விவரமும்

அயோத்தியாபுரியை அரசாண்டுவந்த திரிச்சங்கு மைந்தன் அரிச்சந்திர னென்னும் ஓர் அரசன் இருந்ததாகவும் அவன் பொய் சொல்லாவாசகன் என்றும் ஓர் புராணம் இயற்றி இருக்கின்றார்கள்.

இதற்குமுன்னுள்ள சரித்திராதாரங் கிடையாது. இதன் காலவரையோ 384-வருடங்களுக்கு முன் சாலிவாகன் சகாப்தம் 1446-வருடம் நெல்லூர் ஆசுகவி - வீரகவிராயரால் இயற்றியதாகக் குறிக்கப்பட்டிருக்கின்றது. செய்யுட்களின் பேதங்களோ புராதனப் புலவர்கள் செய்யுட்களாகக் காணாமல் தற்காலப் புலவர்கள் செய்யுளாக விளங்குகின்றது.

எவ்வகைய தென்னில் - செந்தண்மெய் உடைய அறஹத்துக்களை வடமொழியில் பிராமணர்கள் என்றும், தென்மொழியில் அந்தணர்கள் என்றும் பூர்வச் செய்யுட்களில் வழங்கியிருக்கின்றார்கள். இவ்வரிச்சந்திர புராணத் தமிழ்ச் செய்யுளுள் பிராமணன் எனக் கூறியிருக்கின்றது.

**அரிச்சந்திரபுராணம் - நகரச்சிறப்பு**

கிள்ளை பாடுவ கீதங்கள் சாரிகைப் / பிள்ளை பாடுவ வேதம் பிராமணர்
கொள்ளை பாடுவ ரின்னிசைக் கோதையர் /வள்ளை பாடுவர் மன்னவன் வன்மையே.

இப்புராணச் செய்யுட்களானது புத்ததன் மகாவியச் செய்யுட்களைப் பார்த்துக் கொண்டே எழுதியிருக்கின்றார்களன்றி அவர்கள் மதசம்மதமாகவும் எழுதியதைக் காணோம்.

அதாவது இவர்கள் மார்க்கமோ பசுமாடுகளை நெருப்பில் இட்டுக் கொன்று சுட்டுத்தின்னும் படியானவர்கள் இத்தகையக் கொலையாளர்கள் பஞ்சசீலத்தைப் பரக்க பாடியிருக்கின்றார்கள்.

**அரிச்சந்திரபுராணம் - நாட்டுப்படலம்**

கள்ளங் கொலைக்கட் பொய்க்காமமென்றைந்து மற்றார்க்
குள்ளந் தெளிந்தோர்தரு முத்தான மென்னப்
பள்ளந்திடர் மால் வரை கானக பக்கமெங்கும்
வெள்ளம் பெருகிப் பரந்தோடி விறைந்ததன்றே.

இத்தகையப் புராணத்திலுள்ள சரித்திர சுருக்கம் யாதெனில், விசுவாமித்திரர் என்பவருக்கும் வசிஷ்டர் என்பவருக்கும் ஓர் தருக்கம் உண்டாயதாகவும் அத்தருக்கத்தில் பொய்சொல்லா மனிதன் உலகத்தில் ஒருவனுமில்லை என்று விசுவாமித்திரர் கூறியதாகவும் அரிச்சந்திரர் என்னும் ஓர் அரசனிருக்கின்றான். அவன் பொய் சொல்லாவாசகன் என்று வசிட்டர் கூறியதாகவும் அதன் பேரில் அவர்களிருவரும் அவ்வரசனை சோதிக்க எத்தனித்ததாகவும் அவன் பொய்சொல்லாமலே துன்பங்களை அனுபவித்தான் என்றும் புராணத்தை விரித்திருக்கின்றார்கள்.

பொய் என்பது எது, மெய் என்பது எது என்று கண்டு வாதித்திருக்கின்றார்கள் என்று ஆராயுங்கால் பாப்பானுக்குப் பொருள் கொடுப்பதாகச் சொல்லி அதை மறுக்காமல் பல கஷ்டங்களை அனுபவித்துப் பொருளைக் கொடுத்துவிட்டதே மெய் என்றும், இரண்டு பறைச்சிகள் கேட்டதைக் கொடுப்போம் என்று சொல்லி அவர்கள் கேட்டக் குடையைக் கொடுக்காமல் மறுத்துவிட்டதைப் பொய் என அறியாமல் படாடம்பம் காட்டிவிட்டார்கள்.

இவ்விரு பறைச்சிகளின் உற்பவமும் அவர்கள் நிறத்தையும் பாருங்கள்.

விசுவாமித்திரனின் முதல் பிறப்பு அரசவம்மிஷத்தில் தோன்றி தனது ஞான விருத்தியால் பிராமணனாக விளங்கியதாய் அவர் சரித்திரங் கூறுகின்றது. அத்தகைய புருஷன் சுவாசத்திலிருந்து இரண்டு பெண்கள் பிறந்தார்களாம். அவ்விரண்டு பெண்களே கறுப்பு நிறமமைந்த பறைச்சிகள் என்று வரைந்திருக்கின்றார்கள்.

**அரிச்சந்திரபுராணம் - சூழ்வினைகாண்டம்**

பேச்சினிற் கிளிபோற்சிங்கா / பெயர்ச்சியிற் பெடைபோற்செங்கை
வீச்சினின் மின்போற்சிற்ற / மிகுதியான் முநிவன்விட்ட
மூச்சினிற் பிறந்து ரண்டு / மோகினி மாதராரு
நீச்சினி நிலைத்து நிற்கு / நீலமென் கொடி போல் நின்றார்.

இவ்விரண்டு பெண்களையும் அரசனிடம் கொண்டுபோய் அவர்களை விவாகஞ் செய்துக் *கொள்ளும்படிக் கேட்டபோது அவற்றை மறுத்த விவரம்.

**அரிச்சந்திரபுராணம் - சூழ்வினைகாண்டம்**

கண்ணைவேண்டிலு மீகுலன் காக்கின்ற
மண்ணைலேண்டிலும் வாழ்வுடனீகுவன்
பண்ணைவேட்லன் செஞ்சொற்பறைக்குலப்
பெண்ணை வேண்டிவன் யானென்று பேசினான்.

என்னுடையக் கண்ணைக் கேட்டாலும் கொடுப்பேன், என் அரசாட்சியுடன் பூமிமுழுதிலுங் கேட்டாலுங் கொடுப்பேன், இப்பறைச்சிகளை வேண்டேனென்று கூறிய அரசனை இவ்

ன்று கூறிய அரசனை இவ்விரு பெண்களும் அரசனது வெள்ளைக்குடையை மட்டிலும் கேட்டார்கள். தனது தேசத்தையே கொடுப்பேன் என்று சொன்ன அரசன் அவர்கள் கேட்ட குடையைக் கொடுக்காமல் துறத்திவிட்டான்.

**அரிச்சந்திரபுராணம் – சூழ்வினைகாண்டம்**

பழவழி யெழுதாநீதிப் / பானுவின் குலத்துவேந்தர்
வழிவழி வந்த கொற்றக் / கவிகையை வழங்கமாட்டேன்
விழிவிழி கண்டவேறு / கவிகையை விளம்பிலுங்கள்
மொழிவழி தருவேனென்று / மொழிந்தனன் மன்னர் கோமான்.

என் கண்ணைக் கேட்டாலும் கொடுப்பேன், என் தேசத்தைக் கேட்டாலும் கொடுப்பேன் என்று கூறிய அரசன் தேசத்தில் நாட்டியுள்ளக் குடையைக் கொடுக்காத விஷயத்தை வாக்குத் தவறு என்றும் பொய்மொழி என்றும் கூறாமல் பாப்பானுக்குக் கொடுப்பேன் என்று சொன்ன இல்லா திரவியத்திற்கு மட்டிலும் அரசன் இணையில்லா பாடுபடுகிறான்.

1:50; மே 27, 1908 –

இரண்டு கறுப்புப் பறைச்சிகள் கேட்டக்குடையைக் கொடுக்காத மன்னன் அந்தணனென்னும் விசுவாமித்திரனுக்கு தன்னுடைய தேசங், குடை, கொடி முதலியவையுங் கொடுத்து விட்டான்.

**அரிச்சந்திரபுராணம் - சூழ்வினைகாண்டம்**

அந்தணாளனை நோக்கிய வண்ணலும்
உந்த மக்களுரு எலன் வேண்டி லேன்
எந்த நாடு மிருநிதி குப்பையும்
தந்தனன் மொழி தப்புவதில்லையே.
குடைதந்தேனீன் கொடி தந்தேனென் குழுவாய்
படைதந்தேன ற்கனகத்திண்டேர் பரிதந்தேன்
தடைந்தேனின் படியேனே காத்தவனே நீ
விடை தந்தேகென்றடி மேற் பரவிவீழ்வானை.

அரிச்சந்திரன் தன்னுடைய நாடு நகரங்கள் யாவையும் அந்தணனுக்கு தாரைவார்த்துக் கொடுத்துவிட்டு வேற்றுநகரை நாடிச் செல்லுங்கால் அரசாட்சியி லிருக்கும் போது யாகத்திற்குக் கொடுப்பேன் என்று சொன்னப் பொருளை அந்தணன் வந்து கேட்கும் போது நாடு - நகரங்-குடை - கொடி - தனதான்யம் யாவையும் கொடுத்து மனைவி மகவுடன் வெறுமனே சென்ற அரசன் திரவியங்கொடுப்பேன் என்று சொன்னவாக்கு தவிராமல் அத்திரவியத்தைக் கொடுப்பேன் என்று ஒப்புக்கொண்டானாம்.

யாதொருகாசுங் கையிலில்லாத அரசன் எவ்வளவு திரவியங் கொடுப்பதாக ஒப்புக்கொண்டான் என்றால் ஓர் யானையை நிறுத்தி அதன்மீதோர் மனிதன் நின்று கவண்கல் எறிந்து அக்கல் ஆகாயத்தில் எவ்வளவு உயரம் போகின்றதோ அவ்வளவு திரவியக் குவியல் கொடுப்பதாக ஒப்புக்கொண்டானாம்.

**அரிச்சந்திரபுராணம் - நகர்நீங்கிய காண்டம்**

உள்ளிய தீவினையனைத்துந் தனித்திருத்தி
வகைவகையே யுரைத்து நீபோய்
அள்ளியிடும் பொருள்கவராதானையின் மேற்
கவண் சிலைபோ மளவுந்தந்தால்
கொள்ளுதிநீ பின் போன கூலியையும்
பெறுதியெனக்கூறித்தீய
வெள்ளிதனை யுடன் கூட்டி மீண்டு மழைத்
தொருவாய்மெய் விளம்பலுற்றான்.

இத்தகைய யாகத்திற்கு வேண்டிய பேராசைப்பொருளின் பரிமாணத்தைப் பாருங்கள். ஓர் யானையை நிறுத்தி அதன் உயரம் திரவியத்தைக் கொட்ட வேண்டு மானால் எவ்வளவு சுற்றளவுள்ள திரவியத்தைக் கொட்டினால் யானையின் உயரம் குவியும் என்று கணக்கெடுத்துக் கொண்டால் யானையின் மீது ஓர் மனிதன் நின்று கவண்கல்லெறிந்து எவ்வளவு உயரம் போகின்றதோ அவ்வளவு திரவியங் கொட்ட வேண்டுமானால் எவ்வளவு சுற்றளவு திரவியங் குவியல் வேண்டும். அதுவுமின்ற

அதுவுமின்றி கவண்கல் இவ்வளவு உயரம் சென்றதெனக் கூறு நூல் ஆதாரமெது. இம்மேறு நிறையற்ற உயரமும் பரிமாணமற்ற திரவியக்குவியலை பார்ப்பான் கேட்கவும் கையில் ஒருகாசுமில்லா அரசன் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு வாக்குத் தவிராமல் தன் மனைவி மகவை அவ்வளவு திரவியத்திற்கு விற்றுவிட்டானாம். அப்பணக்குவியலை எவ்விடங்கொட்டி அளவுபார்த்ததும் எடுத்துப்போனதும் யாரும் அறியார்கள்.

மேற்கூறியப் பொருள் யாவும் பெற்றுக்கொண்ட பார்ப்பான் தான் கூட சுற்றி வந்ததற்குக் கூலி வேண்டும் என்று கேட்க அதற்காய் அரசன் வீரவா கென்னும் புலையனுக்கு அடிமையாகி பதினாயிரம் பொன் கொடுத்தானாம்.

**அரிச்சந்திரபுராணம் - காசிகாண்டம்**

வாரமேதகு மந்திரி மன்னனைத் / தூரமேவிலை கூறிய சொற்கேளா

வீரவாகுவெனும் பெயர்மேவினான் / சூர நீர்மைப் புலைமகன் தோன்றினான். ஆயினென்றென் றமைச்சனு மவ்வயின் / மேவினன்னினி விற்பனுனக்கென்றான் ஈயு நல்விலை யேதெனப் பொன்பதி / னாயிரமென் றமைச்ச னியம்பினான்.

இத்தகைய பார்ப்பானுக்குக் கொடுப்பேனென்ற சொன்மொழி தவிறா அரிச்சந்திரன் தன் தேசத்தை விசுவாமித்திரர்க்குக் கொடுத்துவிட்டு வேற்றுநா டேகுங்கால் மந்திரிப் பிரதானிகள் யாவருஞ்சூழ்ந்து அரசனை நோக்கி மன்னே, மறுபடியும் எக்கால் வருவீர் என்று வினாவினார்கள். மன்னனவர்களை நோக்கி நான் மறுபடியும் இந்நாட்டில் வரமாட்டேன் என்று உறுதிவாக்களித்தான்.

**அரிச்சந்திரபுராணம் - நகர்நீங்கிய காண்டம்**

அக்காலத் தமைச்சரெல்லா மடல் வேந்த / னடி போற்றியரசே நீமீண் டெக்காலமெழுந்தருள்வ தென்றுரைக்க /வாங்கவரை யிருகணோக்கி முக்காலங்களுமுணரு முநிவனுக்கின்று யான் கொடுத்த மூதுர்தன்னில் எக்காலமும் வருவதில்லை யென்றா னமைச்சரெலா மேங்கி வீழ்ந்தார்

பொய்சொல்லா அரிச்சந்திரன் எக்காலமுந் தன்னாட்டுள் வருவதில்லை என்று வாக்களித்து மறுபடியும் நாட்டுள் வந்துசேர்ந்தான்.

**அரிச்சந்திரபுராணம் - மீட்சிகாண்டம்**

வள்ளலை முனிவன் கூட்டி வருகின்றவாறு கேட்டு
பள்ள முற்றும்பர் வெல்லாம் பரிசேபோல
வள்ளமு மகிழரோமஞ் சிலிர்ப்புற வூரிற் சேனை
வெள்ளமு மரசர்தாமும் வியந்தெதிர்கொண்டாரன்றே.

பதினாயிரம் பொன்னுக்குப் புலையனிடம் அடிமையுண்ட அரிச்சந்திரன் தனக்குக் கிடைக்கும் வாய்க்கரிசியை சமைத்துண்ணாமல் பசுமாட்டைப் பசிக்கச்செய்து சாணத்துடனும் கோமியத்துடனும் வெளிவந்து விழும் அரிசியைக் குத்தி சமைத்துண்பானாம்.

**அரிச்சந்திரபுராணம் - காசிகாண்டம்**

மண்டலத் திறைவனுய்த்து / வைத்தவாய்க் கரிசிதன்னை
கொண்டுபோய் சுரபிக்கீய்ந்து /கோமயத்து னே வீழ்ந்த
தண்டுல மெடுத்துக்குத்தி / சமைத்தினி துதவச்சோ
றுண்ணுவணுரைந்தான் பின்னை / யுற்றவ ரெடுத்துறைப்பாம்.

1:51; சூன் 3, 1908 -

அரிச்சந்திரபுராணம் ஏற்பட்ட விதமும் அதிலுள்ளக் கதைகளின் சாராம்சமும் நமதன்பர்கள் ஒவ்வொருவருக்கும் விளங்கிய போதினும் அதினந்தரார்த்தத்தை அவ்விடம் விளக்க வேண்டியவனாய் இருக்கின்றேன்.

அதாவது - இத்தேசத்திருந்த இந்திரவியார அதிபதிகளாகும் பிராமணர், அந்தணரெனக் கூறும் அறஹத்துக்கள் போல் வேஷமிட்டுக் கொண்டு கல்வியற்றக் குடிகளையும் காமியமுற்ற சிற்றரசரையும் அடுத்து தாங்கள் நூதனமாகக் கற்றுக்கொண்ட வடமொழி சுலோகங்களில் சிலதைக்கூறி, நாங்கள் தான் பிராமணர்கள், நாங்கள்தான் அந்தணர்கள் என்று மொழிந்து யாசகசீவனஞ் செய்துவந்தவர்களுக்கும், இத்தேசப் பூர்வக்குடிகளும் சாக்கைய வம்மிஷ வரிசையோரும் குருபரம்பரையோருமாகிய திராவிட பௌத்தர் களுக்கும், நேர்ந்துவந்த விரோதத்தினால் வேஷப்பிராமணர்கள் பூர்வக்குடிகளாம் பௌத்தர்களை பறையர்கள் என்றுத் தாழ்த்தியும் பலவகைத் துன்பங்களைச் செய்துவந்ததும் அல்லாமல் இப் பறையன் என்னும் பெயர் பரவவேண்டிய கட்டுக்கதைகளை ஏற்படுத்திக் கொண்டுவந்ததுமன்றி இவர்களை இழிந்தோர் என்று கூறி பலரும் அருவெறுக்கத்தக்க உபாயங்கள் செய்துவந்தவற்றை முன்பே விளக்கியிருக்கின்றோம். அவைகளைத் தழுவிய ஈதோர் கட்டுக்கதை என்பதை விசுவாமித்திரன் சரித்திரத்தால் வெள்ளென விளங்கிக்கொள்ளலாம்.

விசுவாமித்திரன் என்னும் அரசன் தனது தபோபலத்தால் பிராமணன் நிலையை அடைந்து தனது நாசியின் சுவாசத்தால் இரண்டு பெண்களை உற்பத்திச் செய்தானாம்.இங்ஙனம் சுக்கில சுரோணிதமின்றி உற்பத்தியானதென்றால் விவேகிகள் ஏற்பதில்லை. அங்ஙனம் ஞானியாயதால் தனது சித்தினால் ஏற்படுத்தியிருக்கலாம் என்றேற்கினும் சிரேஷ்டமுற்ற ஞானியின் சுவாசத்தில் தோன்றியப் பெண்கள் இழிந்தகுலப் பறைச்சிகளாவரோ, நிறமுங் கறுப்புநிறம் வாய்க்குமோ.

இழிந்தகுலப்பறைச்சிகளாகவும் கறுப்புநிறப் பெண்களாகவுந் தோன்றியது எதார்த்தமாயின் இரு பெண்களை ஈன்ற விசுவாமித்திரனும் பறையன் என்றோ, அப்பறையனை குருவாக வணங்கி நாடு நகரம் யாவையுந் தந்த அரிச்சந்திர அரசனும் பறையனன்றோ. அப்பறையனாகும் அரிச்சந்திரன் பின்னே சென்று வெட்டியானுக்கு விற்று அப்பணத்தைப் பறித்துக் கொண்ட வெள்ளியென்னும் அந்தணனும் பறையனன்றோ. இத்தியாதி உற்பவ தோற்றங்களை உணராமல் அற்பமதியால் பறையர்கள் என்னும் பெயரைப் பரவச்செய்தற்கும் அப்பெயரை ஏனையோர் இழிவாக

மதித்தற்கும் இக்கட்டுக் கதை எழுதினார்கள் என்பதை எளிதில் அறிந்துக் கொள்ளலாம். அதுவுமின்றி பறைச்சிகள் கேட்டக் குடையைக் கொடுக்காமல் சாக்குபோக்குச் சொன்ன மன்னன் பார்ப்பான் கேட்டவுடன் கொடுத்துவிட்டது பரிசாமோ, பறையனென் போ கூறிவருதற்கும் பார்ப்பான் என்போனை உயர்த்தி தானமீதற்கும் ஈதோர் உபாயமாகும்.

கேட்டதைக் கொடுப்பேன் என்று கூறிய மன்னன் பறைச்சிகள் கேட்டக் குடையைக் கொடுக்காமல் விரட்டியது பொய்யன்று. பார்ப்பானுக்குக் கொடுப்பேன் என்று சொன்ன வாக்குத் தவறாமல் கொடுத்தது மெய்யேயாம். இத்தகைய மெய் பொய் வாக்கியத்தினும் பறைப்பொய்ப் பாப்பாரப்பொய், பறை மெய் பாப்பார மெய் இருக்கின்றாப்போல் தோன்றுகின்றது..

யாதென்பீரேல் இரு பறைச்சிகளுக்குக் கேட்டதைக் கொடுப்பேனென்று கூறி கொடாமல் விரட்டியதை பொய்யென ஏற்காமல் பாப்பானுக்குக் கொடுப்பேன் என்று சொல்லிக் கொடுத்ததை மெய்யென்று ஏற்பதினாலேயாம்.

பறையர்களை இழிந்தோர் என வகுத்துவிட்டபடியால் அவர்கள் மெய் மொழிகளும் இழிவடையும் போலும், வேஷப்பிராமணர்களை உயர்ந்தோரென்று வகுத்துவிட்டபடியால் அவர் மொழிவது பொய்மொழி யாயினும் உயர்ந்து போம் போலும்.

இத்தகைய உயர்வு தாழ்வினால் பறைச்சிகள் கோரிக்கையை மன்னன் ஏற்காமல் பாப்பான் சொல்லை ஏற்றிருக்கின்றான். அதுவுமன்றி தனதுதேசத்தை விசுவாமித்திரனுக்கு தாரைவார்த்துவிட்டு வெளிநகரம் போகும்போது மறுபடியும் இந்நகருள் வரமாட்டேன் என்று உறுதி வாக்களித்த மன்னன் பின்னும் நகருள் வந்து சேர்ந்தான். இம்மொழி பொய்யாமெய்யா என்பதை அறிந்திலர்போலும். காரணம் :- மெய் என்பது இது பொய் என்பது இது என்னும் பேதம் இன்றி குடும்பிகளாகவும் பொருளாசை உள்ளவர்களாகவும் இருந்துக்கொண்டு தங்களைப் பிராமணர், பிராமணர் என்று பொய்சொல்லி கல்வியற்றர்களை வஞ்சித்து பொருள் பறிக்கப் பொய்யை மெய்யாகக் கூறித்திரிபவர்களாதலின் சாக்கையர் வம்மிஷ வரிசையோனும்

புத்தபிரான் மூதாதையுமாகிய வீரவாகுச் சக்கிரவர்த்தியை சுடலைகாக்கும் பறையனென்று வகுத்து அப்பெயரைப் பரவச்செய்தற்கும் இழிவு கூறிவருவதற்கும் இவ்வரிச் சந்திரன் கட்டுக்கதையை ஏற்படுத்தினார்களன்றி பொய்மொழி யீதென்றும் மெய்மொழி யீதென்றும் உணர்ந்தியற்றினாரில்லை. மெய்யும் பொய்யு முணர்ந்தியற்றுவாரேல் வையகமுய்யும் நீதிநெறிகளைப் புகட்டி வாழ்வடையச் செய்வார்கள். அங்ஙனமின்றி பொய்யை மெய்யாகக் கூறி பேதையர்பால் பொருள் பறிப்போராதலின் சுவாசத்தால் வந்தபறைச்சிகள் கதையையும் சுடுகாட்டில் வாழும் பறையன் கதையையும் பரக்கத்தீட்டிப் பரவச் செய்யும் பொய் மூட்டையைக் கட்டி விட்டார்கள்.

இப்பொய் மூட்டையாம் அரிச்சந்திர புராணமானது வேஷப்பிராமணர் களுக்கு எதிரிகளாக நின்ற பௌத்தர்களை பறையர்களென்றழைத்து அப்பெயரைப் பரவச்செய்வதற்கும் அவர்களை இழிவடையச் செய்து பாழ்படுத்துவதற்கே இயற்றியுள்ளார் என்பது சாத்தியம், சத்தியமேயாம்.

வேஷப்பிராமணர்களால் பறையனென்று தாழ்த்தப்பட்டவன் பதினாயிரம் பொன்படைத்தாலும் சுடுகாட்டில் காவலிருப்பதைவிட்டு நகருள் வரப்படாது என்பது அவர்கள் மநுதன்ம சாஸ்திர விதி.

இவற்றுள் புத்தபிரானுக்கு சங்க அறன் என்றும் சங்க மித்திரன் என்றும் சங்க தருமரென்றும் அனந்தம் பெயர்களுண்டு. இதிற் சங்கறரென்னும் புத்தரை சிந்திக்குஞ் சங்கத்தோர்களை சங்கரசாதிகள் என்று வகுத்து இவர்களே சுடலைக்காப்பவர்கள் என்று மநு நூலில் எழுதி வைத்திருக்கின்றார்கள். இக்கட்டுக்கதைகள் யாவும் பௌத்தர்களைப் பாழ்படுத்தி வேஷப்பிராமணத்தை விருத்தி செய்வதற்கேயாம். யாவரேனும் இவ்வரிச்சந்திரபுராணம் பொய்யன்று மெய் என்றே வெளி வருவாராயின் உள்ளப்பொய்கள் ஒவ்வொன்றையும் தெள்ளற விளக்கித் தீட்டிக்காட்டுவோம்.

1:52; சூன் 10, 1908 -

# 22. பிறவி சந்தேகிகாள் கேண்மின்

வினா : பதினெண்சித்தரில் ஒருவராகிய சிவவாக்கியர் பௌத்தமதத்தைச் சேர்ந்தவராகத் தோன்றிடினும் பௌத்த மதம் பிறப்புண்டென்று போதிக்கிறது. மேற்சொன்னபடி வாக்கியமோவெனில் பிறப்பில்லை எனக் கண்டிக்கிறபடியால் அதின் அந்தரார்த்தத்தை விளக்கவேணுமாய் கோறுகிறேன்.

ஜி.எம்., சாம்பியன் ரீப்ஸ்

விடை : பிறவிக்கடலைக்கடந்து நிருவாண சுகமடைவதற்கும் மாறாப்பிறவியில் சுழன்று துக்கமடைவதற்கும் அவரவர்களின் அவாக்களால் உண்டாகும் பற்றுக்களும் பற்றையறுத்தலுமே காரணமாகும்.

**இடைக்காட்டு சித்தர்**

பற்றேபிறப்புண்டாக்குந் தாண்டவக்கோனே
அதைப்பற்றாதறுத்துவிடு தாண்டவக்கோனே.

என்று புத்தசங்கத்தோர் ஒவ்வொருவரும் அவாவாகியப் பற்றுக்களே பிறவிக்குக் காரணம் என்று கூறியிருக்கும் அந்தரார்த்தம் இரட்சியம் அறியா வேஷ பிராமண மதச்சார்பினர் ஆத்துமாவென்பது ஒன்றுண்டு. அதுபோய் பிறவி எடுக்கின்றதென்றும் சிலர் அந்தந்த உருவங்கள்

அப்படியே வந்து திதிகளை வாங்குகிறதென்றும் பொய் சொல்லி பொருள் பறிப்பது வேஷபிராமணர்கள் இயல்பாம்.

இதற்கு ஓர் கதையும் உண்டு. ஓர் வேஷபிராமணத்திக்கு ஓர் வேஷபிராமண புருஷனிருந்தும் மற்றோர் சூத்திரனையும் வைத்துக் கொண்டு ஓர் புத்திரனைப் பெற்றவுடன் இரண்டு புருஷர்களும் இறந்துவிட்டார்களாம். பிள்ளை வளர்ந்து திதி கொடுக்க ஆரம்பித்தானாம். அப்போது ஓர் சூத்திரனும் வந்து கைநீட்டினான். ஓர் பிராமணனும் வந்து கைநீட்டினானாம். இவ்விரு வரையும் கண்ட மைந்தன் தாயாரிடஞ் சென்று ஓர் சூத்திரனும் பிராமணனும் வந்து திதி கேட்கின்றார்களே நான் யாருக்குக் கொடுப்பதென்று கேட்டான். அப்பா நீ சூத்திரனுக்குப் பிறந்தவனாதலின் சூத்திரனுக்கே கொடுமென்றாளாம். இவ் வகையாக இறந்தபின் சுட்டெரித்த சூத்திரதேகமும் பிராமணதேகமும் உருவாக வந்து திதி வாங்குவதாய்க்கூறி அதினால் அரிசி பருப்பைச் சேர்த்துக் கொள்ளும் ஐயமார் பொய் போதனைப் பிறவிகளைக் கண்டிப்பதற்கு பௌத்தர்களால் ஏற்படுத்தியுள்ளப் பாடல்களில் ஞானவெட்டியில் பொய்க் குருக்கள் போதிக்கும் பிறவிகளைக் கண்டித்திருப்பது போல் சிவவாக்கியரும் பொய்க்குருக்கள் போதித்துள்ள பிறவிகளைக் கண்டித்திருக்கின்றார். ஆனால் செய்யுட்கள் பலவாறு மாறுபட்டிருப்பதினால் கருத்துக்களையும் மாறுபடச் செய்து விட்டார்கள்.

**ஞானவெட்டி - பொய்க்குருக்கள் பிறவியைக் கண்டித்தல்**

இருவினையுந்தனையுரைத்து உலகத்தாசான்
இறந்தவுடல்விழுந்தாவிபிரிந்த பின்பு
வருஜெனனமாகிவந் துடலெடுத்து
வாழ்புவியில் வருவமென் றுருதிச் சொல்வார்
குருவறிந்து புவியில் வந்து வயது நூறு
குறிப்பாகப் பிறந்திறந்தால் குழவியாமோ
அருமெயுட னற்பிறவி பிறப்பாரென்று
அதீதவெகுபொருளெல்லாம் பறிப்பாரையே

**ஞானவெட்டி - மெய்க்குருக்கள் பிறவி விவரம்**

தீராப் பிறவி கடலையறுத்து / செஞ்ஞானஞ்சொற்
கூரான வம்பிகை பொற்பாதமேவி / கொடியு மன்னை
நேரான திங்கள் பத்ததுஞ் சென்று / நிறைந்ததென்று
பாராதனஞ்சய னோர்பாதந் தூக்கி / படவுதைத்தே.

இதைப்போலவே சிவவாக்கியரும் பொய்க்குருக்கள் போதனைகளை விளக்கியவற்றைக் கண்டிக்கின்றார்.

கறந்தபால் முலைபுகா / கடைந்தவெண்ணை மோர்புகா
வுறத்தசங்கி னோசையும் / உடல்களும் உயிர்புகா
வறைந்தவே ரடியினி லுதிர்ந்த பூமரம்புகா
திறந்து போன மானிட /ரினிபிறப்பதில்லை.

தகப்பன் இறந்தவுடன் மறுபடியும் தேகமெடுத்துவந்து திதி வாங்குவதாகக் கூறும் வேஷபிராமணர்கள் பொய்களை விளக்கி கண்டித்துள்ள பாடல்களாகும்.

உடம்புயிரெடுத்ததோ / உயிருடம்பெடுத்ததோ
உடம்புயி ரெடுத்தபோது உருவமேது செப்பிடும்.

என்று கண்டித்துள்ள பாடல்களேயன்றி பௌத்தமார்க்கத்தோர் கூறியுள்ள பிறவியைக் கண்டித்தப் பாடல்களன்று. அதே சிவவாக்கியர் 81-பாடலில் பிறவியை அறுக்க வேண்டிய விதிகளை விவரித்திருப்பதைக் காண்க.

வல்லவாச லொன்பது / மறுத்தடைத்த வாசலும்
செல்லும் வாச லோரைந்தும் சொல்லவிம்மி னின்றதும்
நல்லவாசலைத்திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டபின் இனி பிறப்பதில்லையே.

என்னும் பிறவியின் ரகசிய போதனைகளும் அதை உணர்ந்தொழுகும் சாதனங்களும் புத்த சங்கத்தோர்க்கு விளங்குமேயன்றி ஏனைய மதஸ்தர்களுக்கு விளங்காவாம். ஒரு மனிதன் தனது அவாவின் மிகுதியால் நாளொன்றுக்கு எத்தனை பிறவிக்கு வித்தாகின்றானென்பது சங்கசாதனர்க்கே விளங்கும்.

1:50; மே 27, 1908 -

# 23. பள்ளத்தூரிற் பணஞ் சேர்க்கும் சுவாமி விவரம்

இவ்வருடம் ஜூன் 10உ வெளிவந்த ஓர் திராவிடப் பத்திரிகையில் (உண்மை விளம்பி) எனக் கையொப்பம் இட்டு பள்ளத்தூரில் ஸ்ரீசிங்கேரிஸ்சுவாமிகள் வந்தபோது புதுவூர் பழயவூர் இரண்டிலும் இருந்து குடிகள் சுவாமிகளுக்கு தட்சணைக் கொடுத்த ரூபாய் 22000 என்றும், கானாடு காத்தானென்னும் ஊரில் குடிகளால் சுவாமிகளுக்குக் கொடுத்த ரூ.16000 என்றும் அவர் பாதத்தைக் கழுவிய தண்ணீரில் தட்சணையாகப் போட்ட ரூபாய் 300 என்றும் குறித்திருக்கின்றார். சுவாமி என்னும் பெயர் கொண்டவருக்கு இத்தனை ரூபாய்கள் ஏன் கொடுத்தார்களோ விளங்கவில்லை. அத்தொகையைக் கொண்டு ஓர்கைத்தொழிற்சாலை ஏற்படுத்தி இருப்பார் களாயின் அக்குடிகளின் பின் சந்ததியார் சுகமடைவார் அன்றோ . பணவாசைக் கொண்ட சுவாமி பீடமும், பிணவாசைக் கொண்ட பூமி கூடமும் நாற்றமெடுக் கும் என்னும் பழமொழிக்கிணங்க சுவாமிகள் மற்ற எந்த ஆசையை விட்டிருப்பார் என்பதை அக்குடிகளே அறிந்துக்கொள்ள வேண்டியதுதான்.

சகலருக்கும் கல்வி கொடுத்தாளும் இங்கிலீஷ் துரைத்தனத்திலும் ஏமாளிகள் இருப்பார்களாயின் இவர்களுக்கு கல்வி விருத்தி செய்யாதிருந்த வேஷபிராமணர்கள் துரைத்தனத்தில் எவ்வளவு தெளிவில் இருந்திருப்பார்கள் என்பதை ஒவ்வொரு விவேகிகளும் தெரிந்துக்கொள்ள வேண்டியதேயாம்.

இத்தகைய தந்திரசாமிகளின் செய்கைகளை மந்திரசாமிகளாம் பௌத்தர்கள் விளக்கிக்கொண்டுவந்தபடியால் அவர்களைப் பலவகையாலும் கொல்லவும்

பறையர்கள் என்று சொல்லவும் நேர்ந்துவிட்டது.

இதன்பகரமாய் பௌத்ததன்மம் இத்தேச முழுதும் நிறைந்திருந்த காலத்தில் சில வேஷ பிராமணர் கூடி ஓர் பேதை அரசனை அணுகி அரசே நாங்கள் விசேஷ யாகம் செய்யப்போகின்றோம் அதில் தங்களிடம் உள்ள பொன்னாபரணம் யாவையும் அணிந்துக்கொண்டு நாங்கள் பூசிக்கும் யாக குண்டத்தில் குதிப்பீரானால் அணைந்துள்ள ஆடையாபாரணங்களுடன் தெய்வலோகஞ் சென்று அரம்பாஸ்திரீகள் போகம் அனுபவிப்பீர் என்றார்கள்.

அதைக்கேட்ட அரசன் அவர்கள் வாக்கை தெய்வவாக்கு என நம்பி தன்னிடமுள்ள பொன்னாபரணம் இரத்தினாபரணம் யாவையும் அணைந்து கொண்டு யாக குண்டத்தில் அருகில் வந்து சேர்ந்தான்.

அதேகாலத்தில் ஓர் பௌத்தகுருவும் அவ்வழியே வந்து யாககுண்டம் எரிவதையும் அரசன் அருகினில் நிற்பதையுங்கண்டு அரசே யாது செய்கிறீரென்றார். பௌத்த குருவே, நான் யாககுண் டத்தில் குதித்து தெய்வ லோகத்திற்குப் போகின்றேன் என்றான். அதைக்கேட்ட புத்தகுரு அரசே தெய்வலோகத்திற்குப் போகும் வழிகள் யாவும் உமக்கு நன்றாய்த் தெரியுமா என்றார்.

பௌத்தகுருவே, நான் கண்டதில்லை என்றான்.

அரசே, உம்மை தெய்வலோகம் போவதற்கு யாக குண்டத்தில் குதிக்கச் சொன்னவர்கள் யாரென்றார்.

பௌத்தகுருவே, இதோ எதிரில் மந்திரஞ் செய்துகொண்டிருக்கும் பிராமணர்களே சொன்னார்கள் என்றான்.

அரசே, அப்படியானால் அந்தபிராமணர்களை முந்தி யாக குண்டத்தில் குதிக்கச்செய்து நீர் பின்பு குதிப்பீரானால் அவர்கள் முன்பு தெய்வலோகத்தின் வழியைக்

காட்டிக்கொண்டே சென்று உம்மை அவ்விடம் விட்டு அவர்கள் இவ்விடம் வந்து சேர்ந்துவிடுவார்கள் நீங்களுஞ்சுக போகத்தில் இருக்கலாம் என்றார்.

அதைக்கேட்ட அரசன் நமக்குந்தெய்வலோகத்து வழிதெரியாது பிராமணர்கள் முன்பு வழிகாட்டிக்கொண்டு நடப்பது நன்றென்று பிராமணர்களை அழைத்து சுவாமிகளே தாங்கள் முன்பு யாக குண்டத்தில் குதிப்பீரானால் நானும் கூடவே குதிக்கின்றேன் என்னை நீங்கள் கூட்டிக் கொண்டு தெய்வலோகத்தைக் காட்டிவிட்டு இவ்விடம் வந்துவிடலாம் என்றான்.

இதைக்கேட்ட வேஷபிராமணர்கள் அ ஆ இன்று கிடைக்கக்கூடிய இலக்ஷ பொன்னுக்கு மேற்பட்ட ஆபரணங்கள் போய்விட்டதென்று வருந்தி இப் பௌத்த பிஷவே கெடுத்துவிட்டான் என்று எண்ணி ஏ அரசே, நீர் நீச்சனை அணுகி, நீச்ச வார்த்தையைக் கேட்டு நீயும் நீச்சனாகிவிட்டீர். ஆதலின் உமக்குதெய்வலோக சுகங் கிடைக்காமல் போய்விட்டது, போம் போம் என்று

தூறி குடிமியை தட்டிக்கொண்டே போய்விட்டார்களாம்.

இத்தகையக் காரணங்களைக் கொண்டே பௌத்தர்கள் யாவரும் பறையர்கள் என்றுத் தாழ்த்தப்பட்டு பாழடைந்தார்கள் என்பதைப் பறக்கத் தெரிந்துக்கொள்ளலாம்.

2:1; சூன் 17, 1908 –

# 24. வேதாந்தம்

வினா : வேதாந்தம் என்பது ஓர் மதமா, ஓர் சமயமா, ஓர் மார்க்கமா இவ்வேதாந்ததை அனுபவித்தோர் என்ன சுகம் பெற்றார்கள்.

எ.வி. இராமலிங்கம்

விடை : விஷ்ணுவே கிருஷ்ணனாக அவதரித்தாரென்னும் ஆளில்லா வேதாந்தம் வேண்டுமா? சிவனே சங்கராச்சாரியாக அவதரித்தார் என்னும் ஆளில்லா வேதாந்தம் வேண்டுமா!

இவ்விரண்டினுள் ஒன்றைப் போதிப்போர்கள் பாதி வயது கடந்து பாலனென்னும் பெயர் மாற்றி பரம் எனக்குள் இருக்கின்றது நான் பரத்துள் இருக்கின்றேன் என்னும் பிரசங்கங்கூறி அறைக்குள் நுழைந்து செம்புச்சிலை பித்தளைச்சிலைகளைப் பூசை செய்துவிட்டு அவ்வகைப் பூசையாலுந் தனது வேதாந்தத்தாலும் தன்னாலும் யாதொரு பிரயோசனமும் கூடி வரவில்லை என்று கண்டு ஓர்வகைக் கொட்டையால் சிலப் பிரயோசனம் உண்டென்று நம்பி அதைக் கழுத்தில் கட்டிக்கொண்டு வேதாந்தம் பிரசங்கித்துக்கொண்டு வருகின்றார் அவர் வேதாந்தம் வேண்டுமா.

அன்றேல் அமேரிக்காதேசத்திற்குச் சென்ற போது புத்ததன்மமாகும் ஞானமே விசேஷமென்று கூறியும் மற்ற தேசங்களுக்குச் சென்ற போது இந்துவேதமே முக்கியம் என்று கூறியும், வங்காளதேசம் வந்தவுடன் பிரமோவேதாந்தமே பெரிதென்று கூறியும் ஒருவர் மரணமடைந்தார். அவர் வேதாந்தம் வேண்டுமா.

அல்லது இவ்வேதாந்தங்களுக்கு அதிகாரிகளாகும் பாஷியாக்காரர்கள் கூறியுள்ளபடிக்கு வேதத்தை சூத்திரன் காதில் கேழ்க்கப்படாது அங்ஙனம் கேழ்ப் பானாயின் அவன் செவிகளில் ஈயத்தைக் காய்த்து விடவேண்டும் என்பது விதி. சூத்திரன் என்பவனுக்கு வேதத்தைக் கேழ்க்க சுவாதீனமில்லாத போது சுடு காக்கும் பறையனென்போனுக்கு வேதாந்தங் கேழ்க்க விதியுண்டோமோ, இல்லை இல்லை.

இத்தகைய வேஷ பிராமணர்கள் வேதத்தையும் அவர்கள் வேதாந்தத்தையும் இரகசியமாகக் கற்றுக்கொண்ட ஓர் சூத்திரர் செவியில் ஈயத்தைக் காய்த்து விட்டுவிடுவார்கள் என்று பயந்து தன் வீட்டிற்குள் உழ்க்கார்ந்துகொண்டு வெளியிலிருப்பவர்களுக்கு வேதாந்தஞ் சொல்லிக்கொடுத்துக்கொண்டு வருகின்றார். அவர் வேதாந்தம் வேண்டுமா.

இவர்களனைவர் வேதாந்தத்துள் யாருடைய வேதாந்தம் வேண்டுமோ அதை விவரிப்பீராயின் அவர் வேதத்தின் பிறப்பையும் வேதாந்தச் சிறப்பையும் விளங்கக்கூறுவோம்.

2:3; சூலை 1. 1908 –

# 25. கிறீஸ்த்தவன் கிறீஸ்த்து அவன் - அவன் கிறீஸ்த்து

என்னும் சிறந்த வாக்கியமானது கிறீஸ்த்து அவனுக்குள்ளும் அவன் கிறீஸ்த்துவுக்குள்ளும் அமர்ந்தவனே கிறீஸ்த்தவனாவான்.

அதாவது - அவருடைய நீதிபோதனைகளுக்குள்ளும் அவருடைய நன்மார்க்க ஒழுக்கத்திற்குள்ளும் அமர்ந்து ஒழுகுபவனுக்குள் கிறீஸ்த்துவின் அன்பு குடிக்கொள்ளும். அவ்வகைக் குடி கொண்டவனை கிறிஸ்தவன் என்று கூறத்தகும்.

நான் கிறிஸ்தவன் என்று கூறுபவன் தன்னைப்போல் பிறரை நேசிக்க வேண்டியது என்றும் சகலரையும் சகோதிரவாஞ்சையால் ஆதரிக்க வேண்டியது என்றும் கூறியுள்ள அவரது நற்போதனைக்குள் நுழையாமலும் அவர் ஒழுக்க போதனைக்குள் நுழையாமலும் அவர் ஒழுக்கமேரை நடவாமலும் நான் கிறீஸ்தவன் என்று கூறுவது அவர் நீதிபோதகத்திற்கு முரணேயாம்.

ஓர் இராசனென்னும் வேஷம் போடுபவன் அரசசின்னங்களாகும் கிரீடம், புஜகீர்த்தி, வாகுவல்லயம் அணைந்து இராஜன் வந்தானே எனநடிப்பானாயின் எல்லோரும் இராஜன் வந்தான் சரித்திரம் பாடுவானென்று நோக்குவார்கள்.

அத்தகைய அரசசின்னம் இன்றி வெறுமனே ஒருமனிதன் மேடையில் வந்து நிற்பானாயின் இராஜன் யார் இராஜன் யார் என்று சகலரும் கேட்பார்கள். அதுபோல் நான் கிறீஸ்த்தவன் என்று சொல்லும்படியானவன் கிறீஸ்த்துவின் நீதியிலும் அவர்

அன்பிலும் ஒழுக்கத்திலும் அமர்ந்திருத்தலே அழகாவதன்றி அவரைக் கனஞ்செய்பவனுமாவன்.

அங்ஙனமின்றி வாய்ச்சொல்லில் கிறீஸ்த்தவன் என்று சொல்லித்திரிவது அவரைக் கனயீனஞ்செய்தலாகும்.

இத்தகையக் கனக்குறைவாய் நான் கிறீஸ்த்தவன் என்பதற்கே செயலற்றவர்கள் செட்டிக் கிறீஸ்த்தவன் நாயுடு கிறீஸ்த்தவன் வேளாளக் கிறீஸ்த்தவன் நாயகர்க் கிறீஸ்த்தவன் என வெளியேறுகிறவர்கள் கிறீஸ்த்துவை என்ன கனஞ் செய்வோராவர்.

கிறீஸ்துவை யதார்த்தத்தில் கனஞ்செய்வோராயின் அவரேந்திய சிலுவையின் ஒடுக்கத்தை இவர்கள் ஏந்தி சருவசீவர்களையும் தன்னைப்போல் பாவித்தல் வேண்டும்.

அங்ஙனமின்றி ஜோசேப்பு செட்டியார், தாவீது முதலியார், சவேரியப்ப நாயுடு என வெளிவருவோர் கிறீஸ்த்துமதப் பெயரையும் பிராமணமத சாதியையும் வைத்துக் கொண்டு மற்றவர்களை அஞ்ஞானிகள் என்று கூறுவது என்ன மகிழ்ச்சியோ விளங்கவில்லை.

கிறீஸ்த்துமதத்தில் பிரவேசித்து பிராமண மதத்தைக் கனஞ்செய்வோர் யதார்த்தக் கிறிஸ்த்தவராவரோ.

கிறீஸ்த்துமதத்தில் பிரவேசித்தாலும் எங்கள் சாதியை மறைக்கலாமோ என்பாரும் உண்டு. அச்சாதிப் பெயர்கள் யாவும் ஓர் தேவனால் உண்டு செய்யாமல் தங்களுக்குத் தாங்களே உண்டு செய்துக் கொண்டபடியால் பிராமணமதக் கோட்பாட்டின்படி அவனவன் ஏற்படுத்திக் கொண்ட சாதியை அவனவன் வெளியில் சொன்னால்தான் தெரியும். சொல்லாவிடில் தெரியாது.

இவ்வகை சொல்லிக்கொண்டு திரிவதற்கும் எப்போதும் பார்த்துக் கொள்ளுவதற்கும், பிராமணமதஸ்தர் மநுசாஸ்திரம் ஏற்படுத்திக் கொண்டார்கள்.

அத்தகைய மநுசாஸ்திரமும் அவர்கள் வேதமும் வேண்டாம் என வெறுத்து கிறீஸ்த்துமதம் பிரவேசித்தவர்கள் பிராமணர் மநுசாஸ்திரத்தை விடமாட்டோம் என்பாரேல் எண்ணத்தால் சிந்திக்கும் அவர்கள் மததேவதைகளை விட்டிருப்பரோ ஒருக்காலும் விட்டிரார்.

ஒவ்வோர் கிறீஸ்த்துமதக் குருக்களும் இவற்றைப் பெரும்பாலும் கவனிக்க வேண்டும்.

ஏனென்பீரேல், உயர்த்தப்பட்டவன் தாழ்த்தப்படுவான் தாழ்த்தப் பட்டவன் உயர்த்தப்படுவானென்னும் உங்கள் வேதவாக்கியம் இருக்கின்றது. ஆதலின் உங்களை அடுத்தக் கிறீஸ்தவர்களுள் பூலோகத்தில் உயர்ந்தசாதிக் கிறீஸ்தவன் என்பவன் பரலோகத்தில் தாழ்ந்தசாதிக்கிறிஸ்தவனாவான்போல் காணுகின்றது. அவ்விடம் அங்ஙனந் தாழ்ச்சியடையாமல் உயர்த்தப்பட வேண்டும் என்பதே எமது கோரிக்கை,

ஆயிரங் கிறீஸ்தவர்களில் ஒரு யதார்த்த கிறிஸ்த்தவன் இருப்பானாயின் உலகம் நடுங்கும். பத்தாயிரம் கிறீஸ்த்தவர்களில் ஒரு யதார்த்தக் கிறிஸ்த்தவன் இல்லாமல் போவானாயின் உலகம் பழிக்கும். இவ்விரண்டிற்குங் காரணம் அம்மத குருக்களேயாவர்.

2:9; ஆகஸ்டு 12, 1908 –

# 26. தசராவென்னும் ஆயுத பூஜை

பூர்வ வடநாட்டரசர் சுத்தவீரத்திலும், வல்லமெயிலும் மிகுத்த காளிகா தேவியைப் போன்ற ஒருருவமைத்து தாங்கள் கொலு வீற்றிருக்கும் ஆசனத்தில் பத்துநாள் நிறுத்தி ஒவ்வோர் நாளும் ஒவ்வோர் ஆயுதவித்தைகளை விளையாடி பத்தாநாள் தாங்களெடுக்கும் படைக்கு இருதியினின்று ஆதரிக்க வேண்டுமென்று கோறி கொலுவைக் கலைப்பது வழக்கமாம்.

இஃது பத்துநாள் விளையாட்டாதலின் வடமொழியில் தசராவென்றும், உயுத்தியா யுத்தங்களாம் யுத்த ஆயுதங்களாகும் வேலாயுதம், சூலாயுதம், கதாயுதம், வாகாயுதமென்னும் யுத்தக்கருவிகளை வைத்து பூசித்து வந்ததினால் ஆயுதபூஜை என்றும் வழங்கி வந்தார்கள்.

இத்தகைய பூஜையால் சில சாதியோர்களுக்கு சீவனவிருத்தி கிடையாது. இதை அநுசரித்தே தங்கள் தங்கள் சமயங்களைச் சார்ந்தவர்களை வீடுகபோரும் ஆயுதபூஜை செய்யவேண்டுமென்று கற்பித்து அடுப்பங்கட்டையும் ஓராயுதம், துடைப்புக்கட்டையும் ஓராயுதம், அறுவாமணையும் ஓர் ஆயுதம், திருவாமணையும் ஓர் ஆயுதம், அடுக்குந்தட்டும் ஓர் ஆயுதம், வெட்டுபாறையும் ஓர் ஆயுதம், கொடுவுகத்தியும் ஓர் ஆயுதம், மடிவுகத்தியும் ஓர் ஆயுதம் என்னும் நிராயுதபூஜையை உண்டு செய்து அதன் சார்பாய் சில சீவன விருத்தியைத் தேடிக்கொண்டார்கள்.

ஆயுதபாணிகளென்பதும், நிராயுதபாணிகள் என்பதும் அரசர்களின் யுத்தக் கருவிகளைக் குறிக்குமேயன்றி அடுப்பங்கட்டைக்கருவிகளுக்காகாவாம்.

# 27. பட்டினத்தார்

வினா : நமது பௌத்த சகோதிரர்களுக்குள் சிலர் பட்டினத்து சுவாமிகளையும் பௌத்தரென்று கூறுகின்றார்கள் அவ்வகைக் கூறலாமோ, அவற்றிற்கு ஆதாரம் ஏதேனும் உண்டோ

ப. முனிசாமிபிள்ளை , செக்கன்றாபாத்

விடை : தாம் வினாவிய சுவாமிகளை பௌத்தரென்றே கூறற்கு அவரருஞ் செய்யுட்களே ஆழ்ந்த ஆதாரங்களாகும்.

அதாவது :- புத்தபிரான் ஓரரச புத்திரனாகப் பிறந்து மனைவி மக்களைத் துறந்து சற்குருவாகச் சிறந்து ஓடேந்தி இரந்து நின்றதுமன்றி செல்வமிகுத்த தனது சங்கத்தோர்களுக்கும் ஓடளித்து இரந்து ஒடுங்கும் பற்றற்ற செயலுள்

வைத்துள்ளாரென்பது சருவசாஸ்திர சரித்திர சம்மந்தமாகும்.

**பட்டினத்து சுவாமிகள் பாடல்**

மானார் விழியைக் கடந்தேறிவந்தனன் வாழ்குருவுங்
கோனாகி யென்னைக் குடியேற்றிக்கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேரிருந்தாலு நற்பேரிது பொய்யன்றுகாண்
ஆனாலு மிந்த வுடம்போடிருப்ப தருவெறுப்பே.

இச்செய்யுளால் புத்தபிரான் அரசாங்கத்தைத் துறந்து குருவானவிடயம் விளங்குவதால் இனிவருஞ் செய்யுளால் புத்தசங்கத்தோருக்குள்ள ஓட்டின் மகத்துவத்தையும் அறிந்துக்கொள்ளலாம்.

**பட்டினத்து சுவாமிகள் பாடல்**

வீடு நமக்குண்டு திருவாலங்காடு விமலர்தந்த
வோடு நமக்குண்டு வற்றாத பாத்திரம் ஒங்கு செல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல்லாந்தா நன்நெஞ்சமே
ஈடு நமக்குச் சொல்வோ வொருவரு மிங்கில்லையே.

இன்னும் மற்றாதாரங்களை வரையின் விரியும் என்றஞ்சி விடுத்துள்ளோம் ஆயினும் சமய நேர்ந்துழி யெஞ்சிய தெழுதுவாம்.

2:31. சனவரி 13, 1909 -

# 28. மைலாப்பூரில் பௌத்தாலயம்

வினா : ஐயா, இவ்வாரம் வெளிவந்த தமிழன்' பத்திரிகையில் திருவளூர், மயிலாப்பூர், திருப்போரூர் மூன்றும் பூர்வபௌத்தர்கள் மடமெனக் குறித்து அவ்விடங்களுக்குப் பெரும்பாலும் பூர்வ பௌத்தர்களென விளங்கி தற்காலம் பறையர்கள் என்று அழைக்குங் கூட்டத்தார் போக்குவருத்து உண்டென்றுங் கூறியிருக்கின்றீர்.

அதுபோலவே இக்கூட்டத்தோர் பெரும் வரவை மூன்று ஆலயங்களிலும் கண்டுவருகின்றேன். திருவளூரில் நிருவாண சிலைக்கு நாமமிட்டுள்ளதைக் கண்டுள் ளேன். திருப்போரூரில் புத்தர் முத்திராங்கசிலைகளுள்ளதையும் கண்டுள்ளேன். ஆயினும், மயிலாப்பூரில் பௌத்த ஆலயம் இருக்கின்றது என்பதற்கு போதிய ஆதாரம் காணேன். ஆதலின், பத்திராதிபரவர்களே போதிய நூலாதாரம் கொடுத்து எமது சங்கையை நீக்க வேண்டும்.

புமா. சமரபுரிமுதலியார், திருவளூர்.

விடை : திருமயிலையில் சாக்கையர் நிமித்தகரென்னும் வரிசையோராகிய வள்ளுவர்கள் வாசஞ்செய்திருந்த வீதியின் பெயராலும் அல்லமா பிரபு மடமென்றும், குழந்தைவேலு பரதேசி மடமென்றும் வழங்கிவந்தவைகளையும்

சாஸ்திரபண்டிதர் மார்க்கலிங்க நாயனாரவர்கள் அச்சிட்டுள்ள சுத்தஞானம் நூறிற் காணுவதன்றி பௌத்தர்கள் நூலாகும் திருக்கலம்பகத்தி லுள்ள மயிலாலய யோகசயன தியானத்தையும் காணலாம்.

**திருக்கலம்பகம் - கட்டளைக் கலித்துறை**

உரையோம் பயன் செய்வதற்கென்று வைத்தற் மோதும் வஞ்சத்
துரையோடுறாத சுகர்கண் டீர்பொங்கு தூங்கொலிநீர்
திரையோ டுருண்டெழு சங்கஞ் சொரிந்த செழுந்தரள
நிரையோ டுறங்குந் துறை மயிலாபுரி நின்றவரே.

**விருத்தம்**

மயிலாபுரி நின்றவ ரரியாசன வும்பரின்
மலர் போதியிருந்தவர் அலர்பூவிநடந்தவர்
அயிலார் விழிமென்கொடி யிடைதீயையவித்தவர்
அமராபதி யிந்திரர் அணியாட லுகந்தவர்
கயிலாயமெனுந்திரு மலைமேலுரைகின்றவர்
கணநாயகர்தென்றமிழ் மலைநாயகர் செம்பொனின்
எயிலாரிலகுஞ்சினகிரியாள் பவரசம்பைய
ரெனையாள நினைந்து கொல்வினையேனு ளமர்ந்ததே .

சாக்கையர்கள் மயிலாப்பூரில் அல்லமாப்பிரபுவால் புத்தர் மடம் இயற்றி அவர் மாசிபௌர்ணமியில் துறவடைந்து கரபோலென்னும் ஓடேந்திய பிச்சாண்டி வேஷத்தையும், அன்றிரவு முழுவதும் நித்தி றையற்று துறவடைந்த சிவராத்திரியையும், கல்லால விருட்சத்தின் கீழ் காமனை ஜெயித்து நிருவாணமுற்ற பங்குனி புருவத்தையும், சுயம்பிரகாச பரிநிருவாணமுற்ற

மார்கழிபருவ திருவாதிரைநாளையும், ஆனந்தமாகக் கொண்டாடி வந்தார்கள்.

அக்காலத்தில் மயிலை சாக்கையர் மடத்து பிச்சாண்டி வேஷங் காணும்படியாகவந்த கார் வெட்டி நகரத்து அரசன் மனைவி பூம்பாவை என்பவள் இறந்தபோது சாக்கையர்கள் துக்கங்கொண்டாடிய சரமகவி.

மார்க்கலிங்கநாயனா ரேட்டுப்பிரிதி.

**திருமயிலை பூம்பாவை பதிகம் பத்து**

உரிஞ்சாய வாழ்க்கை எமனுடைய போக்கு
மிருஞ்சாக்கையாகள் எடுத்துரைப்ப நாட்டிற்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்சுரத்தான்றன்
பெருஞ்சாந்தி காணாது போதியோ பூம்பாவாய்.

கூளாமணியிலுள்ள பூம்பாவை என்பவள் சரிதையைக் காண்க.

**கல்யாண சருக்கம்**

வணங்கி வையந்தொழ னின்றமன்னன் காதன் மடமகள் போன்
மணங்கணாறும் பூம்பாவை வளரல்வாழி நறுங்குரவே
மணங்கணாறும் பூம்பாவை வளர்த்தியாயிலிளை யாராற்
கணங்களோடு பறிப்புண்டி கண்டாய் வாழி நறுங்குரவே.

புத்தபிரான் மாசி மாதப் பௌர்ணமியில் துறவடைந்த பிச்சாண்டி வேஷத்தை சீவக சிந்தாமணியிற் காண்க.

**முத்தியிலம்பகம்**

மாசித்திங்கண் மாசினமுன்ன மடிவெய்த / வூசித்துன்ன மூசியவாடை யுடையாகப் பேசிப்பாவாய் பின்னுமிருக்கை யகலேந்த கூசிக்கூசி நிற்பர் கொடுத்துண்டறியாதார்.

இதை அநுசரித்தே மயிலையில் மாசிமாதப் பௌர்ணமிநாளைக் கொண்டாடாமல், போதியோ பூம்பாவா’யென்று சாக்கையர் கொண்டாடி யுள்ள பூம்பாவைப் பதிகத்தைக் காண்க.

தெங்கின் மயிலையா மாசிக் / துறந்தான் கபாலீச்சுர மமர்ந்தான்
யானே யூறுமங்கை யகல் கொண்டு / மாடல் காணாதே போதியோ பூம்பாவாய்.

புத்தபிரான் கல்லாலவிருட்சத்தடியில் வீற்று பங்குனி பருவத்தில் காமனை வென்று நிருவாண நிலையடைந்தார். அதை அநுசரித்தே பௌத்த சங்கத்தோர் யாவரும் கொண்டாடி வந்தார்கள்.

**சீவக சிந்தாமணி**

காசறு துறவின் கிக்க கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோர் வடதிசையயன முன்னி
யாசற நடக்குநாளு ளைங்கணைக்கிழவன் வைகிப்
பாசறைம் பரிவுதீர்க்கும் பங்குனிப் பருவஞ்செய்தான்.

இதை அனுசரித்தே மயிலையில் பங்குனிமாத பௌர்ணமி மதன்விழாக்கோல் கொண்டாடாமல் போதியோ பூம்பாவா யென்று சாக்கையர் கொண்டாடியுள்ள பூம்பாவைப் பதிகம் பத்தைக் காணலாம்.

மலிவிழாவீதி மஉ நல்லார் மாமயிலை
கலிவிழா கொண்டான் கபாலீச்சுரமமர்ந்தான்
பலிலிதாய் பாடல் செய் பங்குனி பருவநாள்
பொலிவிழாக் காணாதே போதியோபூம்பாவாய்.

புத்தபிரான் மார்கழி பௌர்ணமி திருவாதிரை நாளில் பரிநிருவாண மடைந்தார். அந்நாளை அனுசரித்தே பௌத்த சங்கத்தோர் யாவரும் கொண்டாடி வந்தார்

**விம்பாசாரம் - விழாவதைக்காதை**

இறைமகற்காத னெண்பானைந்திற் குறைமிகு காலக் கூற்றங்கடிந்து
தக்கக் கடைநாட் ட நுவாதிரையிற் /பக்க மங்கலம் பருமதி கோலாய்
போதிநீழற் பொருந்திய புத்தேள் சோதிபஞ்சகச் சூழொளியாகி
ஆனவைகரை யார்ப்ப வானவர் போனக - தெளிவில்லை ) விழாக்கோள்.

இதை அனுசரித்தே மயிலைச் சேரியில் ஸ்தாபித்திருந்த கபாலிச்சுர மடத்திற்கு வந்து மரணமடைந்த பூம்பாவையை பரிநிருவாண ஆதிரை நாட் காணாது போதியோ வென்று சாக்கையர் துக்கங்கொண்டாடினார்கள்

ஊர்திறைவேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனிற்
கார்தரு சோலைக் கபாலீச்சுர மமர்ந்தான்
ஆர்திரை நாட்காணாதே போதியோ பூம்பாவாய்.

புத்தர் பரிநிருவாணமடைந்த காலத்திற்குப் பின் அந்தந்த புத்தசங்க வியாரங் களுக்கு அமரவாசி, பௌர்ணமி, அட்டமி இம்மூன்று தினத்திற்கும் வந்திருந்து சீலவிரதங்காப்பது வழக்கமாகும்.

**சீவக சிந்தாமணி**

ஓவாதிரண்டுவ்வு மட்டமியும் பட்டினியாயொழுக்கங்காத்த
றாவாத தவமென்றார் தண்மதிபோன் மூக்குடைக்கீழ் தாதை பாதம்
பூவே புகைசாந்தஞ் சுண்ணம் விளக்கிவற்றால் புனைதனாளு
மேவா விவை பிறவும் பூசனையென் றீண்டிய நூல் கரைகண்டோரே.

இதனை அனுசரித்தே மயிலை வியார சாக்கையர்கள் தாங்கள் கொண்டாடி வரும் அமாவாசி, பௌரணை, அட்டமி நாள் விரதங்காக்காது ‘போதியோ பூம்பாவை’ என்று துக்கங்கொண்டாடினார்கள்.

தண்ணாரறவாழி சுகமீய்ந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச்சுரமமர்ந்தான்
பண்ணார் பருவம் பணையமர வட்டமி நாள்
புண்ணியகாப்புண்ணாதே போதியோ பூம்பாவாய்.

என்றும் புத்ததரும் விழாக்கோல் மயிலையிற் கொண்டாடி வந்தவற்றை மேற் குறித்துள்ள செய்யுட்களால் அறிந்துக் கொள்ளுவதன்றி மயிலை சேரியிலுள்ளோர் வரிசை செல்லுவதும், அதன் சபாமண்டபமும் இன்னும் விளக்கவேண்டுமேல் பின்னும் விவரிக்கக் கார்த்திருக்கின்றோம்.

2:37: பிப்ரவரி 24, 1909 –

# 29. மதவிசாரணை மஹாசங்கம்

வங்காள நாட்டில் சென்ற சுக்கிரவாரம் சகல மதஸ்தர்களும் கூடி மதவிசாரிணைப் புரிந்திருக்கின்றார்கள்.

இத்தகைய விசாரிணையில் அந்தந்த மதஸ்தாபகர்கள் எந்தெந்த சீர்திருத்தங்களையொட்டி தங்கடங்கள் மதங்களை இஸ்தாபித்துள்ளா ரென்றும், அந்தஸ்தாபங்களினால் மனுகுலத்தோர் என்னசீர்பெற்று முன்னேறினார்களென்றும், தற்காலம் எம்மதஸ்தர் சீர்பெற்று முன்னேறி சகல சுகங்களையும் அனுபவித்து வருகின்றார்களென்றும் அனுபவ திருஷ்டாந்த தாட்டாந்தங்களை ரூபிக்காதுவிளக்கி நெய்யால் வீட்டைக் கழுவியது போல் மநுகுலத்தோருக்கு மதத்தாலுண்டாம் பிரயோசனம் இன்னது யினியதென்று விளக்காமலும் அந்தந்த மதஸ்தாபகர்களின் கருத்தும் அதனதன்பலனும் அவர்களுக்கே விளங்காமலும் பேசி முடித்துவிட்டார்கள்.

அச்சபைக்கு கணநாயகராக வீற்றிருந்தவரோ எல்லோரும் ஒரே கடவுளைத் தொழுங்காலம் வருமென்று கூறி முடித்து விட்டார். இஃது எவ்வகைத்தான தீர்க்க தெரிசன மொழியோ அதுவும் விளங்கவில்லை.

ஒருகடவுளென்று கூறிய கணித மொழியானது ஒன்றென்று தோன்றிய பின்னர் இரண்டு, மூன்று, நான் கென்னும் தொடரிலக்கம் தோன்றுமென்பதை தெளியாது ஒரு கடவுளென்னும் மொழியை உறுதி பெறக் கூறியது உன்மத்த நிலையேயாம்.

ஒருகடவுளென்னும் மொழியே இரண்டு கடவுள், மூன்று கடவுள், நான்கு கடவுளென்னும் மொழிபெற்று ஒன்றன்பின் ஒன்றாய் உதிக்கும் என்பதை உணராமல் போதித்துவிட்டார்

போலும்.

அந்தோ மதவிஷயங்களில் களங்கமற்ற புருஷாள் தன்மதம் பிறர்மதமென்றும், தன்கடவுள் பிறர் கடவுளென்றும், தன் சமயம் பிறர் சமயமென்றும், தன்னவர் அன்னியரென்றும் பட்சபாதமின்றி ஒவ்வோர் முகஸ்தாபகர்களின் குணாகுணச் செயல்களையும் அம்மத ஸ்தாபகத்தால் மக்கள் சீரடைந்த சுகங்களையும் தேற விசாரிணைப்புரிந்து தாங்களும் அச்சுகத்தை அனுபவித்து ஏனையோருக்கும் அச்சுகத்தை காட்சியாகவும், அநுபவமாகவும் விளக்குவரேல், இன்னமத ஸ்தாபகரால் மநுகுலத்தோர் இன்னின்ன சீர்பெற்று இன்னின்ன சுகபலன் அனுபவித்து வருகின்றார்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். அவற்றின் காட்சியாலும் அநுபவத்தாலும் மற்ற மக்கள் முன்னேறி மனக்களங் கங்களற்று மகா நிப்பானம் பெறுவார்கள்.

இதுவே உலகமாக்களுக்கு விசாரிணையுற்ற விவேகமிகுத்தோரளிக்கும் வித்தியாதானமென்னப்படும்.

இத்தகையக் களங்கமற்ற மத விசாரிணையை விடுத்து களங்கமுற்ற மதவிசாரிணைப் புரிவோமாயின் விசாரிப்பவர்களுக்கே அத அதனுண்மெய் விளங்காது மயங்குவதுடன் அவர்களைப் பின்பற்றியவர்களும் அதிமயக்கமுற்று

அழியவேண்டியதேயாம்.

2:45 ; ஏப்ரல் 21. 1909 -

# 30. பலிபூசை விவரம்

பலி என்பதின் பொருள் சோறு, பூர்வகாலத்தில் புத்தசங்கத்தோருக்கு பௌத்தக்குடிகள் கொண்டுவந்தளிக்கும் சோற்றினை ஓரிடம் குவித்துவைக்கும் இடத்திற்கு (பலிபீடமென்றும்) பெயர்.

சமணமுநிவர்கள் பாத்திரம் ஏந்தி வெளியில் சென்று புசிப்பவர்கள் நீங்கலாக ஆச்சிரமங்களிலுள்ளவர்களுக்கு குடிகள் வட்டித்த சோற்றினை பீடங்களில் கொட்டி முநிவர்களை வலம் வந்து வணங்கி பூசிப்பது வழக்கமாம்.

அம்மனைக்கொண்டாடும் ஆடிமாதப் பௌர்ணமி பத்தாநாள் உச்சாகமாகுந் தசரத்தன்று மடத்தின் முன்னுள்ள பீடத்தில் குடிகள் யாவரும் பொங்கலிட்ட சாதமாம் சோற்றினைக் குப்பலாகக் கொட்டி கும்பமென்றும், கும்பாபிஷேகமென்றும், பலிபூசை என்றும் கூறி அச்சோற்றினை சகல ஏழைகளுக்கும் அளித்து அன்னதானம் என்றும் வழங்கிவந்தார்கள்.

இத்தகைய சுத்ததன்மச் செயலானது புத்த தன்மத்தைத் தழுவியுள்ளவரையில் நிறைவேறி வந்து அசத்திய தன்மங்களைப் பரவச்செய்வோர் ஆடுகளையும், மாடுகளையும், குதிரைகளையும் சுட்டுத்தின்று மதுமாமிஷமயக்கத்தால் உள்ள மொழிகளின் பொருட்களை உணராது தங்கள் தங்கள் மனம் போனப்போக்கில் வார்த்தைகளின் பொருளை மாற்றிவிட்டார்கள்.

அத்தகைய சத்தியதன்ம வழக்கமானது விசாரிணையின்றி (வரிகள் சிதைந்து போயின)

**முன்கலை திவாகரம்**

பலியென்னும் பெயர், பலியேயையமு .....(சிலவரிகள் தெளிவில்லை )

சோறுமாகும்.

**மணிமேகலை**

கடவுட்பீடிகை பூப்பலி கடி கெள கலம்பகர் பீடிகை பூப்பலி கடிரெ

**பின்கலை நிகண்டு**

பீடிகையாவணம்பூ ந்தட்டொடு பீடமும்

பூப்பல்லி - மல்லிகை மலரொத்த சோற்றுக்குவியல்

ஆவணம் - சோறு

பலியிடுதல் - சோறுகொண்டுவந்தீதல்

பலியேற்றல் - பிட்சாபாத்திரத்தில் சோற்றை வாங்கிக்கொள்ளுதல்

மணிமேகலையில் உண்டி கொடுப்போர் உயிர்கொடுப்போரே என்னும் சிறப்பு மொழிக்கு மாறாக உண்டி கொடாது உயிர் வதைப்பதே மேலென்று

ஏற்றுக் கொண்டார்கள்.

இத்தகைய செயல்களையே சத்தியதன்மத்திற்கு மாறுபட்ட அசத்தியதன்மம் என்று கூறப்படும்.

3:4; சூலை 7. 1909 –

# 31. ராமருக்குச் சீதை தங்கை

வினா : மாரிகுப்பம் சாக்கைய பௌத்த சங்கத்தில் இம்மதி 3-ம் 4 ஆம் நாட்களில் செய்தப் பிரசங்கத்தையுங் கேட்டு மகிழ்ந்தேனெனினும் 3-7-09 ல் செய்தப் பிரசங்கத்தில் ராமருக்கு சீதை தங்கையாக வேண்டுமென்று சொன்னதைக் கேட்டு சங்கைக்கிடமாயிற்று. வேறு சிலரும் இவ்விதமாகவே புகலக் கேட்டிருக்கிறேன்.

தி.ஆ. பார்த்தசாரதி செட்டியார், மாரிகுப்பம்.

விடை : வாரணாசியில் சுகந்தகாவென்னும் அரண்மனையில் தசரதனென்னும் ஓரரசனிருந்தார். அவருக்கு இராமனென்றும், இலக்கண னென்றும் இரண்டு ஆண்பிள்ளைகளும், சீதையென்ற ஓர் பெண்பிள்ளையும் இருந்து தாயாரிறந்தவுடன் தசரதன் வேறு விவாகஞ் செய்து கொண்டு அவ்வம்மனுக்கும் ஓர் ஆண்குழந்தை பிறந்து பரதனென்னும் பெயரளித்து வாழ்ந்துவருங்கால் மறுதாயின் மாறு பாட்டினாலும், இராமர் பனிரண்டு வருடம் வனவாசம் இருக்கவேண்டும் என்னும் தனது ஜாதகக்குறிப்பின் வினைப்பயனாலும் காட்டிற்கு ஏகும்படி ஆரம்பித்தார். தனது தம்பி இலக்கணருந் தொடர்ந்தார், தங்கை சீதையுந் தொடர்ந்தாள். மூவரும் வனசஞ்சாரிகளாய் அங்கங்குள்ள மடங்களில் தங்கி ஞானவிசாரிணைப் புரிந்து வந்தார்களென்பதை வசிஷ்டஸ்மிருதியிற் கண்டறியலாம்.

இம்மூவரும் வெளியேறிய ஒன்பதாமாண்டில் தசரதர் இறந்துவிட்டார். பட்டத்திற்கு ஒருவருமில்லாதபடியால் சிறியதாயார் பரதனுக்குக் கட்டவேண்டுமென்று ஆரம்பித்தாள். மந்திரிகளவற்றைத் தடுத்து காட்டிற் சென்றிருக்கும் இராமரே

பட்டத்திற்கு உரியவரென்று கூறியதின் பேரில் பரதன் இராமரை அணுகி வணங்கி வரவேண்டுமென்று கோறினான்.

இராமருடைய சஞ்சாரகாலம் மற்றும் மூன்று வருடம் இருந்தபடியால் வைக்கோலினாற் செய்திருந்த தனது பாதரட்சத்தைக் கழற்றி பரதன் வசமளித்து இதைக் கொண்டுபோய் ராஜபீடத்தில் வைத்து இராட்சியத்தைப் பாதுகார்த் திருங்கோளென்று பரதனுடன் இலக்கணரையும், சீதையையுங் கூட்டியனுப்பி விட்டு பனிரண்டு வருட முடிந்தபின் இராமர் வாரணாசிச் சென்று சுகந்தகாவென்னும் அரண்மனையில் தங்கி அரசு செலுத்தி தனது காலத்தைக் கழித்துவிட்டார்.

இதுவே நாம் பிரசங்கத்திற் கூறிய ராமரது சரித்திர சுருக்கம்.

இந்த சரித்திரத்தைத் தாங்களே வாசித்தறிந்துக் கொள்ளவேண்டுமானால் பிராகிருதபாஷையிலிருந்து மொழி பெயர்த்திருக்கும் அடியிற்குறித்துள்ள இங்கிலீஷ் புத்தகத்தை வாசித்தறிந்துக்கொள்ளுவீராக.

THE STUPA OF BHARHUI - A BUDDHIST MONUMENT.

BY ALEXANDER CUNNINGHAM, C.S.I., C.I.E.

LONDON, 1879

DHASARATHA JATAKA.

(Page 72)

Place - Baranasi; King - Dasaratha; Palace - Suchandaka.

The queen had two sons and one daughter. The elder son was the sage Rama by name, the second the Prince Lakkhana, the daughter the Princess Sita. Afterwards the queen died. The King’s second wife had a son Prince Bharata.

3:5. சூலை 14, 1900 -

# 32. புத்தமதமும் அருகமதமும்

வினா : இத்தேசத் தமிழ்க்குடிகளிற் சிலர் புத்தமதம் வேறு, அருகமதம்

வேறென்றுங் கூறுகின்றார்களே,

வே. ப. குலசேகரதாசன், வேலூர்.

விடை : சகஸ்திரநாம பகவனென்றும், ஆயிரநாமத்தால் வாழியனென்றும், வழங்கும் புத்தபிரானுக்கே அருகனென்னும் பெயரும் உரியதென்பதை அடியிற் குறித்துள்ள பின் கலை நிகண்டால் அறிந்துக்கொள்ளலாம்.

**11- வது நிகண்டு தகரவெதுகை**

புத்தன் மால் அருகன் சாத்தன்

**ரகரவெதுகை**

தருமராசன்றான். புத்தன் சங்கனோ டருகன்றானும்.

உலகரட்சகனை வடதேசமெங்கும் பகவனென்றும், புத்தரென்றும் வழங்கிவருவது போல் தென்தேசமெங்கும் இந்திரரென்றும், அருகரென்றும் விசேஷமாகக் கொண்டாடி வந்தார்கள்.

இத்தேசத்தோர் இந்திரரென்று கொண்டாடிவந்த விஷயத்தை மணிமேகலை, சிந்தாமணி, சிலப்பதிகாரம், காசிக்கலம்பக முதலிய நூற்களில் இந்திரவிழா வென்றும், இந்திர திருவென்றுங் கொண்டாடி வந்த உற்சாக நாட்களால் அறிந்துக் கொள்ளலாம்.

இத்தேசத்தோர் அருகரென்று எவ்வகையால் கொண்டாடி வந்தார்கள் என்பீரேல், சாந்தமும், அன்பும் நிறைந்த அருமெயானவர் ஆதலின் அருகரென்று கொண்டாடியதுமன்றி சகலரும் மறவாதிருப்பதற்காய் புத்தபிரான் பரிநிருவாண மடைந்தபின் அவரது தேகத்தை தகனஞ்செய்து அவ்வஸ்திகளை ஏழரசர்கள் எடுத்துபோய் பூமியில் அடக்கஞ்செய்து கட்டிடங்கள் கட்டியபோது அஸ்தியை வைத்துள்ள இடம் விளங்குவதற்காய் குழவிக்கல்லுகளைப்போல் உயர்ந்த பச்சைகளினாலும், வைரத்தினாலும் செய்து, அவ்விடம் ஊன்றிவைத்திருந்தார்கள்.

ஒவ்வோர் பௌத்தர்களும் தங்கள் தங்கள் இல்லங்களில் நிறைவேறும் சுபாசுப காலங்களில் பசுவின் சாணத்தால் மேற்சொன்னபடி குழவிபோல் சிறியதாகப்பிடித்து அதன்பேரில் அருகன் புல்லைக் கிள்ளிவந்தூன்றி அருகனைப் புல்லுங்கள், அருகனை சிந்தியுங்கோளென்று கற்றவர்களுங் கல்லாதவர்களும் அருகம் பல்லை வழங்கும் வழக்கத்தை அநுசரித்து அருகனை மறவாதிருக்கும் ஓர் வழிபடு தெய்வவணக்கமுஞ் செய்து வைத்திருந்தார்கள்.

அதை அநுசரித்தே நாளதுவரையில் நாட்டுகளில் பசுவின் சாணத்தால் குழவிபோல் பிடித்து அருகம்புல்லை ஊன்றி, அருகக்கடவுளாம் புத்தபிரானை சிந்தித்து வருகின்றார்கள்.

பகவனால் போதித்துள்ள தன்மமானது சருவசீவர்களுக்கும் பொதுவாயதாதலின் அதனை புத்தன்மமென்றும், அருகதன்மமென்றுங் கூற வேண்டுமேயன்றி புத்தமதமென்றும், அருகமதமென்றம் கூறுவது பிசகேயாம்.

பத்து பெயர்கூடி, அவரவர்கள் மனோசம்மதப்படி ஏற்படுத்திக் கொள்ளுவது மதமென்றும் ஒவ்வோர் முக்கிய மக்கள் காலத்திற்குக் காலம் தன்மங்களை

மாறுப்படுத்தல் சமயமென்றும் ஒவ்வொருவர் சென்ற வழியே செல்லுதலும், போதித்தவழியே நடத்தலும் மார்க்கமென்றுங் கூறப்படும்.

இவற்றுள் பகவனால் போதித்த சத்திய போதம் புழுப்பூச்சுகள் முதல் தேவர்கள் எனத் தேர்ந்த மக்கள் வரையிலும் மலமெடுக்குந் தோட்டிகள் முதல் தொண்டர் மகான்கள் வரையிலும், ஏழைகள் முதல் கனவான்கள் வரையிலும், கற்றவர்கள் முதல் கல்லாதோர் வரையிலும், பிணியாளிகள் முதல் சுகதேகிகள் வரையிலும் சுதந்திரமாக அனுபவக்கக்கூடிய சத்தியமும் நடுநிலையுமாய தன்மமாதலின் இவற்றை புத்த தன்மமென்றும், பகவத்தன்ம மென்றும், இந்திரர் தன்மமென்றும், அருகர் தன்மமென்றும், அவலோகிதர் தன்மமென்றும், ஐயனார் தன்மமென்றும், மன்னர் சுவாமி தன்மமென்றும், தருமராசன் தன்மமென்றுமே கூறல் வேண்டும். இவைகளே சத்திய மொழிகளாம்.

3:7; சூலை 28, 1909 –

# 33. புத்தரென்னும் மெய் காட்சியோடு அபுத்தரென்னும் பொய்காட்சியைக் கலப்பதென்னோ

உலகெங்கும் புகழ்பெற்ற உத்தமராம் புத்தபிரான் மகதநாட்டுச் சக்கிரவர்த்தித் திருமகனாகப்பிறந்து வளர்ந்து சதா துக்கத்திற்கு எதிரிடையாகும் சதா சுகமிருக்கவேண்டுமென்னும் ஆராய்ச்சியின் மிகுதியால் சகல சிற்சுகபோகங்களையும் விடுத்து சாந்தம், அன்பு, ஈகை என்னும் பற்றினைப்பற்றி இராகத்துவேஷமோகம் என்னும் பற்றுக்களை அறுத்து நிருவாணம் பெற்று தானடைந்த சுகப்பேற்றை உலகெங்குமுள்ள மக்களுக்கூட்டி கியான சங்கங்களை நாட்டி பரிநிருவாணமுற்றபோது அவரது தேகத்தை பௌத்த அரசர்களால் தகனஞ்செய்து அஸ்தியையுஞ் சாம்பலையும் ஏழரசர்கள் எடுத்துப்போய் புத்தபிரான் கியாபகச் சின்னங்களைக் கட்டியதில் அடக்கஞ்செய்த அஸ்திகளையும் கட்டிடங்களையும் அசோக அரசன் சீர்திருத்திவைத்த நெடுங்காலங்களுக்குப்பின் தானிஷ்காவென்னும் அரசனால் அவற்றை சீர்திருத்தி நிலையாகக் கட்டிவைத்தும் சீன யாத்திரைக்காரர் அக்கட்டிடத்தைக் கண்டுகளித்தும் தனது சிலாசாசனத்தில் வரைந்தும் வைத்திருக்கின்றார்.

அத்தகைய சிறப்புற்ற கட்டிடம் நானூறு ஐந்நூறு வருடங்களாக சமய சத்துருக்களால் தரைமட்டமாகி யாதுந் தெரியாமல் மறைந்து (சில வரிகள் தெளிவில்லை) வையும் வெட்டிப் பார்வையிட்டுக்கொண்டுவந்ததில் சென்றமாதம் சரியானப் பீடந்தோன்றி பகவனது அஸ்தியும், சாம்பலுங்கிடைக்கப்பெற்றதன்றி அவரைப்போன்ற சிலாரூபமும், கானிஷ்கா அரசனின் சிலாரூபமுங் கிடைக்கப்பெற்று சீனயாத்திரைக்காரர் சிலாசாசன வாக்கு சத்தியவாக் கென்றேற்பட்டது.

சத்திய சிலாசாசன ஆதரவால் புத்தரென்னும் ஓர் மனிதபுத்திரன் இருந்ததும் மெய், அவரால் போதித்துள்ள சத்திய தன்மங்களும் மெய் அவற்றை அநுஷ்டித்துவரும் சங்கங்களும் மெய்யென்று சகல விவேகிகளுக்கும் வெள்ளென விளங்கிற்று.

இத்தகைய சத்தியவிளக்கத்தால் உலகெங்குமுள்ள சத்திய தன்மப் பிரியர்கள் யாவரும் அவலோகிதர் அஸ்தி தோன்றிற்றென்றவுடன் அவரன்பார்ந்த தேகமே தோன்றிற்றென்றும் ஆனந்தத்தில் இருக்கின்றார்கள்.

ஏனென்பீரேல் தற்காலந்தோன்றியுள்ள மதஸ்தர்களின் கடவுளர் இட்சணமோ அவருக்கு உருவில்லை தோட்டத்தில் உலாவுவார், நாவில்லை பேசுவார், கண்ணில்லை, பார்ப்பாரென்று கூறுவோரும், தங்கள் மதம் அழிந்து போகின்றபடியால் அவதாரங்கள் எடுத்துவந்து அன்னியர் மதத்தையும், அன்னியரையும் அழித்து எங்கள் மதத்தை நிலைநிறுத்தினாரென்று கூறுவோரும், உங்கள் மதங்களைக் காப்பதற்கே உங்கள் கடவுள் அவதரிப்பது யதார்த்தமாயின் தற்காலந்தோன்றியுள்ள மகமதுமதம், கிறீஸ்து மத முதலிய நூதன மதங்களை அழிப்பதற்கு உங்கள் கடவுள் அவதாரம் எடுக்காமலிருக்குங் காரணம் என்னவெனில் :- மௌனஞ் சாதிப்பவர் களுமாகிய பொய் மதக் கற்பனா கதைகளினால் சகலமக்களைப்போல உலகத்திற் பிறந்து வளர்ந்து விவேக விருத்திப்பெற்று சகலதேச மக்களுக்கும் விவேகப் பெருக்கத்தின் வழிகாட்டிய ஜகத்தீசன் சரிதையையும் முன் போன்ற கற்பனா கதைகளென்றே சிலர் எண்ணியிருந்தார்கள். அத்தகைய சந்தேகிகள் யாவருக்கும் சித்தார்த்தி என்னும் மனுபுத்திரன் பிறந்து உலகத்தில் உலாவி மக்களை சீர்திருத்தியதும் மெய். அவரது தேகத்தை தகனஞ் செய்ததும் மெய்யென்னும் அவரது பூர்வ சரித்திரத்திற்கும், ஆயிரத்தி முன்னூறு வருடங்களுக்கு முன் சீன யாத்திரைக்காரர் வரைந்துள்ள சிலாசாசனத்திற்கும் பொருந்த பகவனது அஸ்தியும், சாம்பலுங் கிடைத்துள்ளபடியால் சகல பௌத்த சிகாமணிகளுந் தங்களது தன்மசரித்திரம் மெய் மெய் எக்காலும் மெய்யென்னுங் குதூகலத்தில் இருப்பதுடன் பிரம்மதேசவாசியாம் ஸ்ரீமதி தன்மத்தாயாகும் ஓரம்பாள் இலட்ச ரூபாய் உதவிபுரிந்து அவ்வஸ்தியையும், சாம்பலையும் தகுந்த கட்டிடங் கட்டி வைக்கவேண்டுமென்று கூறியிருக்கின்றாள் நமது

கருணைதங்கிய ராஜாங்கத்தோரும் அவற்றிற் கிணங்கி மற்றும் ஆலோசினைகளுக்கு எதிர்பார்த்திருக்கின்றார்கள்.

இத்தகைய மெய்க்காட்சி குதூகலத்தில் இத்தேசவாசிகளிற் சிலர் தங்களது பொய்க்காட்சியைப் போர்த்து மெய்யை முற்றும் மறைக்கப் பார்க்கின்றார்கள்.

அதாவது, பகவனது அஸ்தியையும், சாம்பலையும் வேறு தேசத்தோருக்கு அளிக்கப்போகாது அவர் விஷ்ணுவே அவதாரமாக வந்தவராதலின் இத் தேசத்துள் அவற்றை வைக்கவேண்டுமென்று கூச்சலிடுகின்றார்கள்.

பௌத்த கூட்டங்களை அழிப்பதற்கு விஷ்ணுவும், சிவனும் அவதாரம் எடுத்து வந்துள்ளாரென்று வரைந்து வைத்திருப்பதுடன் உத்திர மீ மாம்சை, தட்சண மீமாம்சை என்னுங் கற்பனைகளை வரைந்து வைத்துள்ளவர்கள் புத்தரை விஷ்ணு அவதாரமென்று கூறவந்த தென்னவிந்தையோ விளங்கவில்லை.

மெய் மெய்யென விளங்கும் சத்தியப் பெருஞ்சரித்திரத்துடன் தங்களது பொய்க் கதைகளையுஞ் சேர்த்து மெய்ப்பித்துக்கொள்ள வேண்டுமென்னும் நோக்கம் போலும்.

அத்தகைய விஷ்ணுவின் அவதாரம் உலகெங்குமுள்ள மக்களைக் கார்க்கவந்திருக்குமா அன்றேல் தென்னிந்தியாவில் நாமமிட்ட மக்களை மட்டுங் கார்க்க வந்திருக்குமா. உலகெங்குமுள்ள மக்களைக் கார்க்கவந்திருக்குமாயின் சகலதேச மக்களும் அவ்வஸ்தியை பாகித்துக் கொள்ளுவதுடன் தாங்களுஞ் சிறிது பாகம் பெற்று சிறப்பு செய்யலாகாதோ. புத்தரவர்கள் விஷ்ணுவின் அவதாரமாதலின் அவரது அஸ்தியை இந்து தேசத்துள்ளாகவே வைக்கவேண்டுமென்று கூறுவது கொண்டு விஷ்ணுவினவதாரம் தென்னிந்தியா வாசிகளுக்கென்றே தெளிவாக விளங்குகின்றது.

ஆனால் புத்த பிரானோ உலகெங்குமுள்ள மக்களுக்கு ஜகத்தீசனாகவும், ஜகத்குருவாகவும் விளங்கியுள்ள அநுபவக் காட்சியானது உலகெங்குமுள்ள மக்கள்

ஜனத்தொகையில் அவரையே அரைக்கால்பாக மனுக்கள் பௌத்தர்களாக இருப்பதால் புத்தபிரானை விஷ்ணு வினவதாரமென்று கூறுவது வீண் வார்த்தையேயாம்.

மெய்யாகிய சரித்திர சாட்சியோடு பொய்யாகியப் பொடிகளைக் கலப்பது நமது தேசத்தையும், தேசத்தோரையும் பொய்யர்களாக்கிவிடும். ஆதலின் நமது அன்பர்கள் ஒவ்வொருவரும் பொய்சரித்திரங்கள் ஈதென்றும், மெய்சரித்திரங்கள் ஈதென்றும் ஆராய்ந்து பேசும்படி வேண்டுகிறோம்.

3:14; ஆகஸ்டு 15, 1909 –

# 34. மஞ்சள் உடுத்தி கரகம்

வினா: விவாஹ மாகுமுன் மணமகனுக்காகிலும், மணமகளுக்காகிலும் மஞ்சளாடை உடுத்திக் கரகம் ஜோடித்து சிரமேற்றி 7 -ஊர் விளையாடுவதற்குப் பதிலாய் 7- தெருவாகிலுஞ் சுற்றும் வழக்கமிருக்கிறதே அதின் விஷயங்கள் இன்னதென்ன விளங்கவில்லை.

பி. கோவிந்தசாமி, சாம்பியன் ரீப்ஸ்,

விடை: பூர்வபௌத்தர்கள் தங்களுடையப் பிள்ளைகளில் யாதாமொருவர் கொடு வியாதியால் பீடிக்கப்படுங்கால் ஆண்பிள்ளைகளாயின் அவ்வியாதி நீங்கியவுடன் சிரமொட்டை அடித்து மஞ்சளாடை அணைந்து புருஷர் மடத்திற் சேர்ந்துவிடுவதும், பெண்பிள்ளையாயின் வியாதி நீங்கியவுடன் சிரமொட்டை அடித்து தாய்மாமனால் மஞ்சள் நூல்சரடு கழுத்தில் அணைந்து மஞ்சளாடை உடுத்தி இஸ்திரீகள் மடத்திற் சேர்த்துவிடுவதும் வழக்கமாகும்.

மடத்திற் சேர்க்க பிரியமில்லாத சிலர் தங்கப் பிள்ளைகள் வியாதி நீங்கி விவாக காரியம் நடத்துங்கால் பௌத்த பிக்ஷணி அம்பிகாதேவியை சிந்தித்து ஆண்பிள்ளையையேனும், பெண்பிள்ளையையேனும் மஞ்சளாடை உடுத்தி பூவாடைக்காரியாம் பிக்ஷணியின் கமலபாதத்தையே பூங்கரகமாக சிரசிலேந்தி புத்தபிரானது அஸ்தியை ஏழுவரசர்கள் கொண்டுபோய்க் கட்டிவைத்திருக்கும் ஏழு கோபுரங்களாகும் ஏழுமலையான் (டாகோபாக்) களை சுற்றி தெரிசித்து வருவதற்கு பதிலாய், ஏழு எல்லைகளையேனும், ஏழு வீதிகளையேனும் வலம் வந்து முகூர்த்தச்செயலை நடத்துவது வழக்கமாகும்.

# 35. ஆயுதபூசை

வினா: ஆயுதபூசை என்பதின் பொருளென்னை, அதனை நடாத்தும் விவரமென்னை , அதன் சரித்திரம் யாது

பாஷியம் நாயுடு, காஞ்சிபுரம்.

ஆயுதம் என்பதின் பொருள் மக்கள் ஆயுளை அதஞ்செய்யுங் கருவிகளுக்கு ஆட்கொல்லியென்றும், ஆயுதமென்றும் அவற்றை அணிந்த அரயனை ஆயுதபாணியென்றும், அஃதில்லா அரயனை நிராயுதபாணியென்றும் கூறுவது வழக்கமாம். ஆயுவை அதஞ்செய்யும் ஆயுதங்கள் வில், வாள், வேல், வாகு, பிண்டிபாலம், கதாயுதம், கோல், தடி, ஈட்டி முதலியவைகளேயாம். இத்தகைய ஆயுதங்களைப் பூசிக்குங் காரணம் பூர்வம் இப்பரதகண்டத்தில் கொண்டாடி வந்த மூன்று இஸ்திரீ தேவதைகளில் இருவரை துஷ்ட தேவதை களாகவும், ஒருவளை சாந்ததேவதையாகவுங் கொண்டாடி வந்தார்கள்.

இம்மூவருள் வட பரதகண்டத்து வங்காளம், காம்போஜம், பப்பிர மென்னும் மூன்று நகரங்களையும் அரசாண்டுவந்த சுத்தவீரி காளியென்னும் ஓர் அரசியிருந்தாளாம். அவளது நீதிநெறி ஒழுக்கத்திற்கும், வாய்மெய்க்கும், எத்தகைய அரசருக்கும் அஞ்சாத வல்லபத்திற்கும் சகல அரசர்களுங் குடிகளும் அஞ்சும்படி ராட்சியபாரஞ்செய்து மறைந்தனளென்பது காளிதாச தியானம். அவள் வாசஞ்செய்த கோவிலுள் அவளுருவத்தை அமைத்து காளிகாதேவி என்றும், துருக்கை, சாமுண்டி என்றும், வராகி என்றும், வணங்கி வந்தார்கள்.

மற்றுமோர் துஷ்டதேவதை கோவிலன் மனைவி கன்னகா பரமேஸ்பரி. இவளை நீலியென்றும் கூறுவதுண்டு.

மற்றுமோர் சாந்ததேவதை சாக்கையருள் பாணர்வம்மிஷ மலையரசன் புத்திரி வாலாம்பிகை என்றும், ஔவையென்றும், அம்மை என்றும், மணிமேகலா தெய்வமென்றும் வாலை, மனோன்மணி என்றும் மாறியை ஆற்றினவளென்றுங் கூறியுள்ள ஒருவளுண்டு.

இம்மமூவருள் வடபரதகண்டத்தில் இருந்த காளிகாதேவியை அவளது வம்மிஷ வரிசை அரசர்கள் அவள் மரணமடைந்த நாளை பத்துநாள் கொண்டாடுவதற்காய் வருடந்தோரும் அரண்மனை முன்னில் பெரும் பந்தலிட்டு காளிகாவுருவை ஒன்பது நாள் கொலுவிருக்கச்செய்து தங்கள் சம்மாரத்திற்கு உதவியாகும் வில், வாள், கதை முதலிய யுத்தக்கருவிகளை காளியம்மன் முன் வைத்து தாங்கள் எவ்வரசர்களின் மீது யுத்தத்திற்குச் செல்லினும் ஜெயம்பெற வேண்டுமென பூசித்து அவ்வாயுதங்களைக் கொண்டே அரசர்கள் ஒருவருக்கொருவர் விளையாடி ஆயுதங்களைக் கலைத்து தூணிகளில் வைப்பது வழக்கமாகும்.

இதை அநுசரித்தே காளிதாசர் தனது கமலப்பிரவாள சமஸ்கிருத சூத்திரத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு.

“காளிகாதேவி கண்வைத்தருள்வாய்
கல்லார்க்கெல்லாங் கலைவகுத்தருள்வாய்
வில்லும் வாளுமேந்திடு மரசர்
சொல்லித்தொழவும் சுகந்தந்தருளாய்
ஒன்பது நாளு மன்பர்முன் னின்று
இன்ப மருளி யெனையாண்டருள்வாய்”

என்றுந் துதித்துள்ள மற்றுஞ் சூத்திரங்களைக் கமலப்பிரவாளத்தை நோக்குக. காளிதாசர், கமலப்பிரவாளத்தை வங்காளம் துருகப்பிரசாத் அவர்கள் வெளியிட்டுள்ள

காளிதாச சரித்திரத்திற் காணலாம்.

வட பரதகண்டத்தில் அரசாண்டுவந்த காளிகாதேவியின் உருவை ஒன்பது நாள் கொலுவீற்றிருக்கச்செய்வதினால் நவராத்திரி கொலு என்றும், பத்தா நாள் வில், வாள், கதை முதலியவைகளை பூசித்து விளையாடுவதால் ஆயுத பூசை என்றும், இஃது பத்துநாள் கொண்டாட்டமானதால் தசரா வென்றுங் கொண்டாடி வந்தார்கள்.

இஃது அரசர்கள் கொண்டாடும் ஆயுதபூசா சம்பந்தமென்பதே வட பரத காளிகாபூசை என்றும் சாமுண்டி பூசை என்றும் வழங்கும். இதன் பிரபல வைபவத்தை மைசூர் அரண்மனையில் வருடந்தோருங் காணலாம்.

3:20; அக்டோபர் 27, 1909 –

# 36. அரசபுத்திரன் புத்தர்

வினா: பத்தரென்னும் பெயரை சகல நீதி நூற்களிலும் ஞான நூற்களிலுங் காண்கின்றேன். ஆயினும் அவரை அரசபுத்திரனென்று எந்த நூற்கள் கூறுகின்றதோ யான் காணவில்லை. சிவசமயத்தோருட் சிலர் தங்கள் சிவன் அலமரத்தடியில் உட்கார்ந்தாரென்றும், புத்தர் அரசமரத்தடியில் உட்கார்ந்தார் என்றும் கூறுகின்ற படியால் இவ்விரண்டும் ஒரு சரித்திரமா அன்றேல் இரண்டு சரித்திரமா விளங்கவில்லை.

வீ. மாரிமுத்தாப்பிள்ளை , திரிசிரபுரம்.

விடை: ஐயா, தாம் வினாவியுள்ள வினாக்களை நமது தமிழ் சாஸ்திரங்களைக் கொண்டே எளிதில் அறிந்துக்கொள்ளலாம். ஆயினும் மதவைராக்கியம், மதகர்வம் முதலியவைகளால் கண்ணை மறைத்துக்கொண்டு சத்தியதன்மத்தைக் காண வேண்டுமாயின் கிஞ்சித்தும் விளங்காது.

தன்மதம் பிறமதமென்னும் போர்வையை அகற்றி மதகர்வத்தை நசித்து பொய்யைப்போக்கி மெய்யை விசாரிப்போமானால் பொய் நீங்கிய இடத்திலேயே மெய் விளங்கும்.

புத்தபிரானுக்கு அன்பர்களால் அளித்துள்ள ஆயிர நாமங்களில், தொளாயிரத்து தொண்ணூற்றொன்பது நாமங்களை இத்தேசத்து நூதனமதஸ்தர்கள் எடுத்துக் கொண்டு புத்தரென்னும் ஒரு பெயரை மட்டும் நீக்கி விட்டார்கள், சிவனென்னும் பெயரும் புத்தருக்குரிய ஆயிர நாமங்களில் ஒன்று .

**அறநெறிச்சாரம்**

அவன்கொ லிவன் கொலென் றையப்படாதே
சிவன்கண்ணே செய்மின்கள் சிந்தை சிவன்றானும்
நின்றுகால் சீக்கு நிகறிகழும் பிண்டிக்கீழ்
வென்றிச்சீர் முக்குடையான் வேந்து.

**சிலப்பதிகாரம்**

சினவரன் தேவன் சிவகதி நாயகன்

**அருங்கலைச்செப்பு - அன்புநிலைப்பத்து**

சிவமே சிவமே யென்றேத்தித் திருவாயுள் / ளவமேய வன்பில்லாதென்.
அன்பே சிவமா யமர்ந்தா ரருளடியார் / முன்பே முநிவேந்தனார்.

முநிவேந்தரென்றும், வேந்தனென்றும் அரசரது மரபு கொண்டே வரைந்துள்ளார்கள்.

புத்தராக விளங்கியவர் அரசபுத்திரனே என்பதை அடியிற்குறித்துள்ள நூற்களால் அறிந்துக்கொள்ளலாம்.

**நெஞ்சறி விளக்கம்**

அரியதோ ரரசன் மைந்தன் / அவனியிற் பிறந்து முன்னாள்
பெரியபே ரின்ப ஞானம் / பெருவதே பெரிதென்றெண்ணி
உரியவேதாந்த உண்மெ / யுரைத் தகண்டத்துச் சென்ற
தெரியொணா நாகை நாதர் / சீர்பதம் போற்று நெஞ்சே.

**ஞானக்கும்மி**

அரசகுலத்தி லுருவாகி /யம்பரமான வெளிதனிலே
பொரசமரத்தி லமர்ந்திருந்தா - னவன் / பொருளைப்பாட்டி ஞானப்பெண்ணே

**மணிமேகலை**

சாக்கையராளுந் தலைத்தார் வேந்தன் / ஆக்கையுற்றுதித்தனன் ஆங்கவன்றானென.

அவர் அரசபுத்திரரிலும் சக்கிரவர்த்தி திருமகனாகத் தோன்றியது கொண்டே நாயனார் தானியற்றியுள்ள திரிக்குறள் கடவுள் வாழ்த்துப் பாவில் இறைவனென்றே அவரை சிந்தித்துள்ளார்.

**திருக்குறள்**

இருள்சே ரிருவினையுஞ் சேரவிறைவன் / பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.
பிறவிபெருங் கடனீந் துவர் நீந்தா / ரிறைவனடி சேராதார்.

இத்தகையச் சக்கிரவர்த்தித் திருமகனாகப் பிறந்து அறியென்றும், சிவனென்றும், பிரமனென்றும் பெயர்பெற்ற புத்தபிரான் சென்று நிலைத்த ஓர் மரத்திற்கு அரசபுத்திரன் மரத்தடியில் வீற்றிருக்கின்றார் அரசபத்திரன் மரத்தடியில் வீற்றிருக்கின்றார் என்னுங் காரணங்கொண்டு அம்மரத்திற்கே அரசன் மரமென்னு பெயருண்டாயிற்று. அம்மரத்தடியில் உட்கார்ந்து சோகமாம் காம மயக்கத்தை வென்றபடியால் அம்மரத்திற்கு அசோக மரமென்றும், அம்மரத்தின் கோல் காய்ந்த உலக்கையாயிருந்தும் ஓர் கால் துளிரிட்டு தழைத்தபடியால் பிண்டியென்றும் மராஷ்டகம், கன்னட முதலிய பாஷைகளில் வழங்கிவந்ததுமன்றி திராவிட பாஷையில் கருங்கல் நிறங் கண்டது கொண்டு கல்லாலமென்றும், ஆலமரமென்றும், கல்லாத்தியென்றும், போதிக்கும் ஓர் பீடமாதலின் போதியென்றும் அவலோகிதகர் வீற்றிருந்த மரப்பெயர் வழங்கி வந்தார்கள். அதன் மகத்துவப்பெயரை மராமரமென்றும் வழங்குவதுண்டு.

**திரிவாசகம்**

ஆத்திச்சுவட்டி லமர்ந்த தேவணை / ஏத்தி யேத்தித் தொழுவோமியாமே.

**மணிமேகலை**

ஆலமர்ச் செல்வன் மதன்விழாக்கோல்கொள்

**தாயுமானவர்**

செங்கமல பீடமேல் கல்லாலடிக்குள்வளர் / சித்தாந்த முத்திமுதலே.

**வைராக்கிய சதகம்**

ஆலநீழலி லன்றோ ரைவருக் கறநெறியுரைத்தானை காலகாலனை சிவப்பிரகாசவெண் / கண்மணிதனை யுன்னா தேலவார் குழலார் மயல்கொண்டு நீ யிங் குழலுவதெல்லாம் சாலவே பிழையாகு நெஞ்சேசொனேன் /றவநிலை யென்மேலே.

**முன்கலைதிவாகரம்**

கணவைம் பணையே மராமரம் போதி / யரசன் வீற்று மிருந்தலி லரசே.

ஓர் அரசபுத்திரனும் நம்மெய்ப்போன்ற தேகியுமாயிருந்து சுத்தஞானத் தெளிவால் ஐகத்குருவாக விளங்கி உலக சீர்திருத்தக்காரருள் ஆதியாகி உலக ரட்சகனுமாகி பரிநிருவாணமடைந்த பின் அவரது தேகத்தை தகனஞ்செய்த அஸ்தியையும், சாம்பலையும் நாளதுவரையில் தெரிசித்து வருகிறோம்.

உலகெங்குமுள்ள விவேகமிகுத்தோர் யாவரும் அவரை ஐகத்குருவென்றும், சீர்திருத்தக்காரருள் முதல்வரென்றும், புருஷர்களில் உத்தமரவரே என்றும், ஆசியா கண்டத்தின் ஆதியொளி என்றும் நாளதுவரையிலுங் கொண்டாடி வருகின்றார்கள்.

அன்னியன் பிள்ளையைத் தன் பிள்ளை என்று தாராட்டிய போதிலும் அதினந்தார்த்தத்தையும் குணக்குறிகளையும் அறிந்த விவேகிகள் அவற்றைத் தெளிவுற விளக்கிவிடுவார்கள்.

அதுவும் விளக்க வேண்டுமென்று கோறியவிடத்தில் விளங்குமேயன்றி அன்னியன் பிள்ளையை தன்பிள்ளை என்று சாதிக்குமிடத்து விளங்கமாட்டாது.

குணங் குறியந்தரார்த்தம் உணர்ந்த பெரியோர்களும் மதகர்வங் கொண்டோர் முன் தோன்றி விளக்கவுமாட்டார்கள்

3:23: நவம்பர் 17, 1909 –

# 37. மரணக் கிரியை

வினா: நமது சாதிபேதமற்ற திராவிடர்களுக்குள் மரணமடைந்துவிட்டால் அப்பிரேதத்தின் பெருவிரலைக் கட்டி விடுவதும், சிரசினருகே தீபமேற்றி வைப்பதும், பிரேதம் எடுத்துக்கொண்டு போகுங்கால் நெருப்புச்சட்டி எடுத்துக்கொண்டு நெற்பொரியும், வெற்றிலையும் இறைத்துக்கொண்டு போய் பிணத்தை பூமியிற் புதைத்துவிட்டு இரண்டாநாளேனும், மூன்றாநாளேனும் பால் கொண்டுபோய் பிரேதக் குழியின் மீது வார்த்துவிட்டு வருவதும் ஆகியக் கிரிகைகளின் விவரங்கள்.

வீ. பாலசுந்திரம், அரக்கோணம்.

விடை : முற்காலத்தில் புத்ததன்மம் இந்துதேசம் முழுவதும் பரவியிருந்தகாலத்தில் அவற்றை அநுசரித்துவந்த மக்கள் ஞானத்துக்குரிய நித்தியச் செயல்களைப் புகழ்ந்தும் அநித்திய செயல்களை இகழ்ந்தும் வருவது இயல்பேயாம்.

அதாவது ஞானசாதனம் உணர்ந்தும் இறந்தானென்றால் இகழ்ந்தும், சம ஆதியானானென்றால் புகழ்ந்தவற்றுள் தன்னை அறியாது இறந்தவன் கால்களின் பெருவிரலை சேர்த்துக் கட்டுவதின் காரணம் யாதெனில்.

பாசபந்தக்கட்டானது இவனைவிட்டு நீங்கவில்லையென சகலரும் அறிந்து சீர்பெறுவதற்கேயாம்.

இதனை உணர்ந்தே தாயுமானவரும் "நிகள பந்தக் கட்டவிழ்ப்பாரே" யென்றுங் கூறியுள்ளார்.

ஒவ்வோர் மக்களின் உச்சியில் தேயு ஒளியாம் சோதியுண்டு. அஃது அறிவின் விருத்திக்குத் தக்கவாறு விருத்தியும் பிரகாசமுமாகும்.

அதுவே சாந்தம் அமைந்தபோது சுயம்பிரகாச தெய்வமென்றும், காம வெகுளி மயக்கத்தில் அமைந்தபோது தேயு தீயால் நைந்து பிணமென்றுங் கூறப்படும். இத்தகைய ராகத்து வேஷமோகமிகுதியால் அறிவுகுன்றி அச்சோதி அடங்கியதை உணர்ந்த பெரியோர் பிணத்தின் சிரசினருகே மற்றோர் தீபத்தை ஏற்றிவைத்து தீபமுள்ளோரை தெரிசித்து தங்களுக்குள்ள தீபம் அழியா வழியில் ஒழுகச் செய்திருக்கின்றார்கள்.

**ஞானக்கும்மி**

உச்சிக்கு நேரே வுண்ணாவுக்கு மேல் நிதம் / வைத்த விளக்கே யெறியுதடி
அச்சுள்ள விளக்கே வாலையடி / அவியாம் லெறியுது ஞானப்பெண்ணே

**கடவுளந்தாதி**

மெய்ப்பொரு ளுச்சிக்கு / ளுச்சிதமாக விருக்குமப்பா
வைப்பினின் மாணிக்கப் / பொக்குஷமேமணி மாமகுடச்
செப்புக்குள் ளேற்றுந் / திருவிளக்குள்ளொளி - தீபமது
கைப்பொரு டன்னினு / மெய்ப்பொருளாமது கண்டவர்க்கே.

சில நூற்றாண்டுகளுக்கு முன்பு புத்ததன்மத்தைச் சார்ந்த உபாசகர்களையும், அறஹத்துக்களையும் தகனஞ்செய்வதே வழக்கமாயிருந்தது. அதன் பின்பு தோன்றிய அசத்தியமார்க்கத்தோர்களால் ஞானசாதனங்கள் மாறுபட்டு அடயோக சாதனமென்னும் பிராணாயாம பொருள் தெரியாது பெருநாவை சிறுநாவாம் உண்ணாவிலடைத்து உந்திகமலம் வரை பூரித்து அகராட்சரத்தை கண்டத்தில் அமைக்குமிடந் தெரியாதமைத்து பெருநித்திறை யடைவதுபோல் மூச்சுப்பேச்சற்று அடங்கிவிடுவார்கள். அச்செய்கை இறந்தவனுக்குங் கூட்டில்லை, உயிருடன் உலாவும்

அஞ்ஞானிக்குங் கூட்டில்லை. இத்தகைய சாதனமுள்ளவர்களை இறப்போர்கள் எடுத்து தகனஞ்செய்யுங்கால் சுரணைதெரிந்தெழுந்த சிலரைக் கண்டப்பின் மூச்சுசாதனமுள்ளோர்களை அரைவீடுகட்டி அடக்கஞ்செய்வதும், ஞானசாதகர்களில் குண்டலியோகி களையும் அவ்வகை அடக்கஞ்செய்வதும், மற்றுமுள்ள சகலர்களையுந் தகனஞ்செய்வது வழக்கமாகும்.

அத்தகைய தகனத்திற்கும் அரைக்கட்டுவதற்கும் குறித்தயிடங் கிடையாது. அவரவர்களுடைய தோப்புகளும், காலிபூமிகளும் எங்கெங்கிருக்குமோ அங்கங்கு அடக்கமும், தகனமுஞ் செய்துவந்தார்கள்.

இவ்வகையாய பழக்கத்தால் பிறேதமெடுத்துப்போம் போது பின்வருவோர் அத்தகனவிடந்தெரிந்து வருவதற்காக பதிவிரதாகுணமறியப் பொரித்த நெற்பொரியையும், வெற்றிலையையுங் கவர்ந்து இறைத்துக்கொண்டே போவார்களாயின் பின் செல்லுவோர் அவ்வழி தெரிந்தே சுடுமிடத்திற்குப் போவது வழக்கமாகும்.

நெருப்புச்சட்டிக் கொண்டு போகுங் காரணம் யாதெனில், முற்காலத்தில் மாச்சிஸ்பெட்டிகளேனும், மற்றவகைத் தீக்குச்சுகளேனும் இல்லாததினால் வீட்டிலிருந்து போகும் போதே நெருப்பைக் கனையவைத்துக் கொண்டு போய் புறதேகமாம் பிறேதத்தின் மீதுக் கட்டைகளை அடுக்கி சகலவரசர்களுங் கூடி தகனித்த புத்தபிரான் தேகத்தை மற்றவர்கள் யாவரும் நெருங்கி கொள்ளிமீட்டாது தனது யேகபுத்திரர் இராகுலரைக்கொண்டு கொள்ளிமீட்டியது போல் இறந்துள் ளோர் மைந்தனைக்கொண்டு கொள்ளிமீட்டி தகனித்த தேகத்தின் மீது நீரை தெளிக்காது பாலை தெளித்தும், போதாதாயின் இளநீரைத் தெளித்தும் அவித்து அவ்வஸ்தியை கங்கையிலேனும், சமுத்திரத்திலேனும் விடுவது இறந் துள்ளோர் மீதுள்ள அன்பின் செயல்களாகும்.

**காசிக்கலம்பகம்**

கேயூரமூரக் கிளர்தோளகிலேசர் / மாயூர மூறு மொருமைந்தற்குத்-தீயூறு மவ்வேலையீயந்தாரடித்தொழும்பு செய்தொழுகு / மிவ்வேலையீயந்தா ரெமக்கு.
இடமருங்கின் மருங்கிலாதவள் / குடியிருக்கவு முடியில்வே
றிவளொருத்தியை யிருத்திவைத்து நதி / பாகமோகினி ரூபமாய்
நடமிடுங்கிவண் மேலும்வைத்துள / நயந்தோர் பிள்ளை பயந்த நீர் நங்குலத்திருவை மருவினின்று பிறர் / நாவளைக்க விடமாகுமோ குடமுடைந்தவென வானினங்கண் மடி / மடைதிறந்து பொழி பாலோடுங் கொழுமடற்பொதியவிழ்ந்து கைதை சொரி / சோறுமிட்டணி திருக்கையாற்
கடல் வயிற்றினை நிறப்புகின்ற சுர / கங்கை குண்டகழியா நெடுங்
சுகநநீள் குடுமி மதில்கள் மூன்றுடைய / காசிமேவு மகிலேசரே.

புத்தபிரான் தேகத்தை தகனஞ்செய்த சாம்பரின்மீது பாலைக்கொண்டு போய் தெளிக்க ஆரம்பித்தபோது பாற்குடந் தவரிவிழுந்துடையவும் வந்திருந்த மேலோர் மற்றும் பாலும், இளநீரும் விட்டவித்து அங்குவந்துள்ள ஏழைகளுக்கும் சோறு கொடுத்து பசியாற்றினார்கள்.

அதை அநுசரித்தே சர்க்கியவம்மிஷ வரிசையோர்களாகிய சாதிபேதமற்ற திராவிடர்கள் பால் கொண்டுபோய் தணலை அவிக்கு முன் பிண்டப் பிரசாத மென்னும் அன்னமிட்டு குடமுடைப்பதும் பாலும் இளநீரும் விட்டவிப்பதும் பூர்வ வழக்கமாகும்.

தற்காலமோ மகமதியர் சேர்க்கையாலும், கிறிஸ்தவர்கள் சேர்க்கையாலும் தகனத்தை மறந்து பிரேதத்தை புதைக்க ஆரம்பித்துக்கொண்டபோதிலும் பூர்வ புத்ததன்மச்செயல் மாறாது நெருப்புச்சட்டிக் கொண்டுபோவதும் பால்கொண்டு போவதும், குடமுடைப்பதும், பிண்டப்பிரசாதம் ஈவதுமாகிய வழக்கங்களை விடாது செய்துவருகின்றார்கள்.

இத்தியாதி தன்கன்மச் செயல்கள் யாவும் பூர்வ புத்ததன்ம அநுபவங்கள் என்றே தெரிந்துக்கொள்ளுவீராக.

3:23; நவம்பர் 24, 1909 –

# 38. பௌத்தர்களுக்குள்ளும் தெய்வதூஷணமுண்டோ

ஒருக்காலும் இராதென்பது திண்ணம் எங்ஙனம் என்பீரேல், தற்காலந் தோன்றியுள்ள கிறிஸ்து மதத்தோரைப் பாருங்கள். தங்கள் மதத்தை சிறப்பித்துக் கொண்டு பௌத்தரை தூஷித்து புத்தகமெழுதியிருப்பார்கள். சிவமதத்தோரைப் பாருங்கள் தங்கள் மதத்தை சிறப்பித்துக் கொண்டு பௌத்தரை தூஷித்து புத்தகம் எழுதியிருப்பார்கள். விஷ்ணுமதத்தோரைப் பாருங்கள் தங்கள் மதத்தை சிறப்பித்துக் கொண்டு பௌத்தரை தூஷித்து புத்தகம் எழுதியிருப்பார்கள்.

நாளது வரையில் அப்புத்தகங்களைக் காணலாம். ஆனால், களோ கிறிஸ்து மதத்தையேனும், சிவ மதத்தையேனும், விஷ்ணு மதத்தையேனும் தூஷித்து புத்தகங்கள் எழுதியதுங் கிடையாது, தூஷிப்பதுந் தமிழ் பாஷையிற் கிடையாது.

காரணம், தெய்வமென்றும், கடவுளென்றும், சாமியென்றுந் தோன்றி யுள்ளப் பெயர்கள் யாவும் பௌத்தர்களால் ஏற்படுத்தியுள்ளவைகளேயாம்.

அவ்வகை ஏற்படுத்தியுள்ளவர்களுக்கு அப்பெயர்களின் மூலகாரணங் களுஞ் செயல்களுந் தெரிந்துள்ளபடியால் தெய்வ தூஷணம் மறந்துஞ் செய்யமாட்டார்கள்.

வானரரினின்று நரரும், நரரினின்று மக்களும், மக்களினின்று மனுக்களும், மனுக்களினின்று தேவரும் உயர்ந்துகொண்டே வருவது அவரவர்களின் அதி தீவிரமும், விடாமுயற்சியும், நற்சாதனமும், சற்சாவகாசமுமேயாம்.

இத்தகைய சிறந்த முயற்சியால் தேவரென்னும் பெயர் பெற்றுவருவதை சத்தியதன்ம விசாரிணையாலும், அனுபவத்தினாலும் நாளுக்குநாள் முதிர்ந்துவரும் பௌத்தர்கள் தெய்வதூஷணஞ் செய்கின்றார்களென்று தூற்றித்திரிவது அவரவர் களுக்குள்ள தூஷணச் செயல்களையுந் தாங்களே வெளியிட்டு மற்றும் அன்பர்களையும் விரோதிக்கத்தக்க வழிதேடுகின்றார்கள்.

அஃதெவ்வகையில் என்பீரேல், சென்னையில் சாக்கைய பௌத்த சங்கத்தை நாட்டிய காலத்தில் ஓர் வித்துவான் வெளிவந்து பௌத்தரை தூஷித்து புத்தகம் எழுதியதுமன்றி பௌத்தர்கள் தெய்வதூஷணஞ் செய்கிறார்களென்று தங்கள் சமயத்தோருக்குப் பொய்யைச் சொல்லி அன்னவர்களா உள்ளவர்களை எல்லாம் வீணவிரோதத்தை உண்டு செய்து தமிழில் மிக்க வல்லவனென்னும் படாடம்பங்காட்டி அன்னோர் சமயவாசிகள் மெச்ச நடித்தும் பொய்யைச் சொல்லி விரோதத்தை வளர்த்தும், பெரியோரை தூஷித்தும் வந்த பலனை தான் மடியுங்கால் யாரும் அற்றனுபவித்ததுன்பமே போதுஞ்சான்றாம்.

அத்தகையோர்க்கு உதவியாய் தற்காலம் மற்றொருவர் தோன்றி பௌத்தர்கள் தெய்வதூஷணஞ் செய்கின்றார்களென்று பொய்யைச் சொல்லி அன்பர்களுக்கு விரோதத்தை உண்டு செய்து வீண்கலகத்தைப் பெருக்க ஆரம்பிக்கின்றவர் எங்கள் தெய்வத்தை இன்னவிதமாக இன்னார் தூஷித்தாரென்று அதிகாரிகளிடம் ரூபிப் பாராயின் அவர்கள் தேர்ந்த விசாரிணையால் தெண்டிக்கக் கார்த்திருக்கின்றார்கள்.

அத்தகைய நியாயவழியில் செல்லாது தூஷிக்கின்றார்களென்று பொய்யைச் சொல்லி தானே தூஷித்தும், தானே அவதூறு செய்தும், சங்கத்தோரெல்லவரையும் மனத்தாங்கல் அடையச் செய்துள்ள பலனை தானே கூடிய சீக்கிறத்தில் அனுபவிப்பார். அன்னோர் தெய்வமே அதற்கு சாட்சியமாம் என்பது சாத்தியம்.

3:26, டிசம்பர் 8. 1909 –

# 39. அவனன்றி ஓரணுவுமசையாது

வினா : அவனன்றி ஓரணுவும சையாது என்பதனால், இடிவிழுந்து சாவதும், வீடுநஷ்டமாவதும், புசலடித்து கப்பல் முழுகிப்போய் அனாதரவாய் மாள்வதும், கன்மாரி பெய்து பட்சிகளும், மிருகங்களும், ஊர்வன முதலியதும் காரணமின்றி உயிர் துறப்பதும், பூகம்பமுண்டாய் ஒரு பட்டணம் அப்படியே நடுநடுங்கி ஆயிரம் ஆயிரமாய் ஜனங்கள் சாவதும், நடுநித்திரையில் வீடிடிந்து வீழ்ந்து மண்டை சிதறி விலாவெலும்புடைந்து மரிப்பதும், பாம்பு கடியுண்டு உயிரிழப்பதும், விருத்தாப்பிய தாய் தந்தையரையும், சிறு சோதரர்களையும் வேலை செய்து காப்பாற்றி வந்த ஒருவனுக்குக் கண்தெரியாமற் போவதும். ஆனதால் மேற்சொன்னபடி அன்னையும் தந்தையும் திக்கற்று இரந்து குடிப்பதும் பாலிய ஆணுக்கும் பெண்ணுக்கும் அம்மை வார்த்து கண்தெரியாமற் றிகைப்பதும், பத்துமாதமும் பலகஷ்டங்களை அனுபவித்து பிரசவிக்கும் சமயத்தில் உயிரற்று குழந்தை பிறப்பதும், தாயே சாவதும், தாயும் பிள்ளையும் சாவதும் அவன் செயல்தானோ?

தி.சி. நாராயணசாமி பிள்ளை எச். எப்.யு., உ கோ .

விடை: "அவனன்றி யோரணுவு மசையா தெனும் பெரிவாப்தர் மொழியொன்று கண்டாய்" எனக் கூறியுள்ளவற்றுள் அம்மொழி அவனவனென்னும் மீமிசை பெற்று வராது அவனன்றி, யெனவெழுந்த முன்னிலைச் சுட்டு மொழியை காணா வஸ்துவின் கருத்துரை யேற்றல் கனக்குறைவேயாகும். அவனவன் செய்யுங் கன்ம பலனை அவனவனே அனுபவித்துத் தீரல்வேண்டுமேயன்றி ஓரணுவேனு மற்றவர்களால் அகற்றலாகாது என்பது கருத்து. அவன் செய்த கன்மத்தை அவனே அனுபவித்துத் தீரல் வேண்டும் பல சீவர்கள் செய்யுங் குற்றங்கள் யாவற்றிற்கும் ஒருவன் காரணனென்று

கூறுவது ஒவ்வாமொழியேயாகும். அவன் செயல் நற்செயலாயின் நற்பலனடைவான். துற்செயலாயின் துற்பலனடைவான். அவ்விரு வினைப்பயனுள் ஓரணுவேனும் மற்றவர்களால் அகற்றலாகாது.

முன்மெய்ச்சுட்டு அவனென்பதும், தன்மெய்ச்சுட்டு தானென்பதும் ரூபக்குறிப்புகளன்றி அரூபக்குறிப்புகளாகாவாம்.

இத்தகையக் கருத்து கொண்டே தாயுமானவர் மற்றோரிடத்திற் கூறியுள்ள ”தானான தன்மயமேயல்லால்" என்னு மொழியைக்கொண்டே தனக்கன்னிய வேறுமயமில்லை என்பது துணிபாயிற்று.

அதே தாயுமானவர் மற்றோரிடத்து "எனதென்பதும் பொய் யானெனல் பொய் யெல்லாமிறந்தவிடங்காட்டும், நினதென்பதும் பொய் நீயெனல் பொய்,’ என்றுங் கூறியுள்ளக் கருத்துகளைக் கொண்டு அவனென்னு மொழி முன்னிலைச் சுட்டாம். ஓர் மனிதனையே குறிப்பிட்டுக் கூறியமொழியாகும். அம்மொழியே, அவனவனென்னும் மீமிசையுற்று வருமாயின் அவனவன் செய்கைகளென்பது அங்ஙனே விளங்கும். அவனென்று தனிமெய்ப்பெற கூறியதனால் மொழிமயங்கி சகலசீவர்களின் குற்றங்களுக்கும் ஒருவன் காரணமென உருகெட்டு நின்றது.

அவன் செய்த குற்றங்களை அவனே அனுபவிக்கவேண்டும். தான் செய்த குற்றங்களை தானே அனுபவிக்கவேண்டுமேயன்றி ஏனையோர்களால் ஓரணுகும் அசைக்கலாகாதென்பது கருத்து.

அவனன்றி எனுமொழியை அவனவனன்றி யென வேற்றவிடத்து தெள்ளற விளங்கும்.

**மூவர் தமிழ் நாலடி நானூறு**

நன்னிலைக்கட்டன்னை நிறுப்பானுந்தன்னை / நிலைகலக்கிக் கீழிடுவானு - நிலையினு

மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னை / தலையாகச் செய்வானுந்தான்.

**அறநெறிச்சாரம்**

தன்னிற் பிறிதில்லை தெய்வநெறி நிற்பில் / ஒன்றானுந் தானெறி நில்லானேல் - தன்னை இறைவனாய்ச் செய்வானுந் தானேதான் தன்னை / சிறைவனாய்ச் செய்வானுந்தான். தானே தனக்குப் பகைவனு நட்டானும் / தானே தனக்கு மறுமெயு மிம்மெயும்
தானேதான் செய்த வினைப்பயன் றுய்த்தலால் / தானே தனக்குக் கரி.

**சொரூபசாரம்**

என்னையே யல்லாமல் யான் பெற்ற தேதுமிலை
யென்னையான் பெற்றிருந்ததெப்போது - மென்னையன்றி
பந்தமிலை வீடுமிலை பார்க்கிலிவை யாராயுஞ்
சிந்தனையு மில்லாததே.

**கடவுளந்தாதி**

சாதகமென்னுஞ்சிவஞானபூரணந் தன்னிடத்திற்
பூதமாக வருளிருக்கப் பொருள் வேறென்வே
பேதகமாகத் திரிந்துழன் றெங்கும் பிதற்றும் பொய்யிற்
றோதகமொன்று மறியாமன் மாய்கின்ற தொல்பவரே.

3:27; டிசம்பர் 15, 1909 –

# 40. இந்தியதன்மத்தினின்று புத்த தன்மம் தோன்றியதா அன்றேல் புத்ததன்மமே இந்திரர்தன்மமா

புத்ததன்மமாம் சத்தியதன்மமே இந்திரர் தன்மமென வழங்கலாயிற்று.

சித்தார்த்தியாம் சக்கிரவர்த்தித் திருமகன் புத்த நிலையடைந்து சாத்தியதன்ம வரத்தை சகல சீவர்களுக்கும் ஊட்டியது கொண்டு அவரை வரதரென்றும், பரதரென்றுங் கொண்டாடி வந்தார்கள்.

மக்களுக்கும், சீவராசிகளுக்கும் இத்தேசமெங்கும் வேண்டிய சீர்திருத்தங்களை செய்து ரட்சித்த ஆதிபகவனாதலின் அவருக் களித்திருந்த பரதன், வரதன் என்னும் பெயரைக்கொண்டே சிலநாள் வடநாட்டை வடபரதகண்டமென்றும், தென்னாட்டை தென்பரதகண்டமென்றும் வழங்கிவந்தார்கள்.

**சூளாமணி**

தேரணி கடற்படைத் திவிட்டன் சென்றுபி / னாரணி யறக்கதி ராழிநாதனாம்
பாரணி பெரும்புகழ் பரத வென்றனன் / சீரணிதிருமொழித் தெய்வத் தேவனே.

**வீரசோழியம்**

தோடாரிலங்கு மலர்கோதிவண்டு வரிபாடு நீடுதுணர்சேர்
வாடாதபோதி நெறி நீழன்மேய வரதன் பயந்த வறநூல்
கோடாதசீல விதமேலி வாய்மெய் குணனாக நாளுமுயல்வார்
லீடாதவின்ப நெறிசேர்வர் துன்ப வினை சேர்த நாளுமிலரே.

**சூளாமணி**

மாற்றவர் மண்டில் மதனுளுழியா லேற்றுழி புடையன விரண்டு கண்டமாந்
தேற்றிய விரண்டினுந் தென் முகத்தது /பாற்றரும் புகழினாய் பரதகண்டமே.

இத்தகைய பரதகண்டமென்று இத்தேசத்தை வழங்கிவருங்கால் இத்தென்பரதம், வடபரதமெங்கும் புத்தபிரானை இந்திரரென்றும், இந்திர பூசையென்றும், இந்திர விழாவென்றும் மிக்க ஆனந்தத்துடன் இந்திரரென்னும் பெயரைப் பிரபலமாகக் கொண்டாடிவந்தார்கள்.

சித்தார்த்தி என்னும் புத்தபிரானை இந்திரரென்று கொண்டாடிய காரணம் யாதென்பீரேல், பெண்ணிச்சையாம் காமியத்தை வென்று பஞ்ச இந்திரியங்களை அடக்கி ஜெயம்பெற்று மகாஞானிகளாம் வானவர்களுக்கு அதிபராக விளங்கின படியால், அவரை இந்திரர், ஐந்திரரென்றும், அவரது தன்மத்தை ஐந்திர தன்மம், இந்திர தன்மமென்றும், அவரை சிந்திப்பதை இந்திரபூசையென்றும், அவரைக் கொண்டாடும் நாட்களை இந்திர விழாவென்றும், அவரைக்கொண்டாடுந் தேசத்தை இந்திரர்தேசம், இந்திய தேசமென்றும் வழங்கிவந்தவற்றுள் வடநாட்டை வடயிந்தியமென்றும், தென்னாட்டை தென்னிந்தியமென்றும் நாளதுவரையில் வழங்கிவருகின்றார்கள்.

**சீவகசிந்தாமணி**

ஆசையார்வமோ டையமின்றியே / யோசைபோயுல குண்ணநோற்றபி
னேசுபெண்ணொழித் திந்திரர்களாய் / தூயஞான மாய்த் துறக்கமெய்தினார்

**அருங்கலைச்செப்பு**

இந்தியத்தை வென்றான் தொடர் பாட்டோடாரம்ப / முந்திதுறந்தான் முனி.

**திரிக்குறள்**

ஐந்தவித்தா னாற்றல் அகலவிசும்புளார்க் கோமான் / இந்திரனே சாலுங்கரி.

**அறநெறிச்சாரம்**

இந்தியக்குஞ்சரத்தை ஞானப்பெருங்கயிற்றால்
சிந்தனைத்தூண் பூட்டிச் சேர்த்தியே - பந்திப்பர்
இம்மெயப்புகழும் இனிச்சொல்கதிப்பயனும்
தம்மெய்த் தலைப்படுத்துவார்.

**காசிக்கலம்பகம்**

புரவுபூண் டிந்திர திருவொடும் பொலிந்து / முடி வினு முடியா முழுநலங்கொடுக்கும்.

**மணிமேகலை**

இத்திரகோடனை விழாவணிவிரும்பி / வந்து காண்குரூஉ மணிமேகலா தெய்வம் இந்திரரெனப்படு மிறைவ நம்மிறைவன் / றந்த நூற்பிடகம்.

**சிலப்பதிகாரம்**

அந்தரசாரிக ளறைந்தனர் சாற்றும் / இந்திரர் வியார மேழுடன் போகி.
கப்பத்திந்திரர் காட்டிய நூலின் / மெய்ப்பாட்டி யற்கை விளங்கக் காணும்*.

புத்தபிரானையே இத்தேசவாசிகள் யாவரும் இந்திரரென்று கொண்டாடிவந்த காரணத்தால் குடிகள் யாவரையும் இந்தியர்களென்றும் வாசங்செய்யும் தேசத்தை இந்திரர் தேசமென்றும் இந்திய தேசமென்றும் வழங்கிவருகின்றார்களன்றி வேறு காரணங்கிடையா.

இத்தேசத்தில் நூதனமாகக் குடியேறியவர்களாம் வேஷபிராமணர்களுக்கு இதனந்தரார்த்தந் தெரியாது. தங்களை இந்துக்கள் என்றும், தங்கள் மதத்தை இந்து மதமென்றுஞ் சொல்லிக் கொண்டே திரிகின்றார்கள்..

தெரியாமலே தங்களை இந்தியர்கள் என்றும் இந்துக்கள் என்றுஞ் சொல்லி வருகின்றார்கள் என்பதை அடியிற்குறித்த விஷயங்களா லறிந்துக்கொள்ளலாம்.

அதாவது உலகிற் தோன்றியுள்ள மார்க்கங்களில் புத்தரென்னும் ஒருவரிருந்தார். அவரால் போதித்த மார்க்கத்தை புத்தமார்க்கமென்றும், கிறீஸ்துவென்னும் ஒருவரிருந்தார். அவரால் போதித்த மார்க்கத்திற்கு கிறிஸ்து மார்க்கமென்றும், மகம்மது என்பவர் ஒருவரிருந்தார். அவரால் போதித்த மார்க்கத்திற்கு மகம்மது மார்க்கமென்றும் வழங்கிவருகின்றார்கள்.

இவைபோல் வேஷபிராமண மதத்தோர் தங்களை இந்திய மதத்தோரென்று கூறுவதில் இவர்களது மார்க்கத்தைப் போதித்த இந்து இந்தியர் என்பவர் எவரேனுமிருந்தாரா. அவரது மார்க்கத்தை எப்பாஷையில் போதித்தார். இவை களுக்கு மாறுத்திரங் கூற யாதோர் ஆதரவுங் கிடையாது. வெறுமனே தங்களை இந்தியர்கள் இந்துக்களென்று கூறித்திரிபவர்கள், இந்துமதத்திருந்தே புத்த மதம் தோன்றிற்றென்றும், இந்துக்களிலிருந்தே சிலர் பௌத்தர்களாகிவிட்டார்களென்றும் ஆதாரமில்லாது கூறுகின்றது அஸ்திபார மற்றக் கட்டிடமேயாம்.

இந்திரர் தன்மமே புத்ததன்மமும் புத்ததன்மமே இந்திரர் தன்மமென்னப்படும்.

அங்ஙனமன்று இந்து தன்மம் வேறென்று கூறுவாராயின் அவ்விந்து என்பவர் பிறப்புவளர்ப்பையும் அவரது சரித்திரத்தையும் வெளிக்குக் கொண்டுவரல் வேண்டும். சாத்திரமில்லை, அனாதி மதமென்பார்களாயின் இந்து மதத்தோ ரென்னும் பெயரை அன்னோர் வகிப்பதற்கு ஆதாரமில்லை என்பது துணிபு.

3:28; டிசம்பர் 22. 1909 –

# 41. பூதக்கதை பூதக்கதை வேதாளக் கதையினும் விந்தையே

அன்பர்காள், பூதமென்னு மொழி பாலி, அப்பாலியிலுள்ள பூதமென்னு மொழிக்கு ஓர் குணிப்பில் அடங்காப் பொருட்களின் பெயரெனக் கூறப்படும்.

அதாவது, மண், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கு பொருட்களும் குணிப்பிற்கடங்காதது ஆதலின் நான்கு பூதங்களென வகுத்துள்ளார்கள் சிலர் வெறுவெளியாகிய ஆகாயத்தையும் ஓர் பூதமெனக் கூறுவதுண்டு இதுவே கலை நூற்களின் சம்மதமும், சரித்திர சம்மதமுமாகும்.

இத்தகைய பூதங்கள் ஓர் அரசனைக் கொண்டு போய்க் காட்டில் வளர்த்ததென்றும் அவைகள் இறைதேட வெளிக்குப் போயிருந்ததென்றும் ஓர்க்கதை தோன்றுமாயின் அது கண்ணாற்கண்ட சுட்டுக்கதையாயிருக்குமா அன்றேல் கட்டுக்கதையா இருக்குமா, காணக்கூடிய உற்பனக்கதையா அன்றேல் கற்பனைக் கதையா, அதாவது மெய்ச்சரித்திரமா பொய்ச் சரித்திரமா என்று கண்டு தெளிவதே கலை நூற் கற்றதின் பலனாகும்.

கலை நூற் கற்ற விசாரிணையோ இராஜபுத்திரனை எடுத்து போய் வளர்த்த பூதங்களின் சந்ததி தற்காலம் காடுகளில் ஏதேனும் வாசஞ் செய்கின்றதா, அவ்வகை வாசஞ்செய்யும் பூதங்களைக் கண்டு காட்டிலாக்கா உத்தியோகஸ்தர் களாகும் பாரஸ்ட் ஆபீசர்களேதேனும் அறிக்கை செய்திருக்கின்றார்களா காடுகளையும், மலைக்குகை களையும் வெட்டி ஆராய்ச்சி செய்துவரும் ஆர்ச்சலாஜிகல் சர்வேயர்களேனும்

அப்பூதங்களைக் கண்டிருப்பார்களா, இல்லையே. இல்லாதப் பொய்க்கதைகளை ஏட்டில் எழுதிக் கூட்டமிட்டுக் கூத்தாடுவது வீண்விரயமன்றோ .

கஷ்டார்ஜித சொத்தை காடைவிளக்கென்றும், மேடை சோடிப் பென்றும் சிலவிட்டாடும் நாடகத்தை விழித்திருந்து பார்த்த மக்களுக்கு ஏதேனும் பலனுண்டா. ஆட்டமாடுவோருக்குப் பணக்கேடும் அதனைப்பார்க்க ஓடுவோருக்கு பணக்கேடுடன் தூக்கக்கேடுமே கண்டபலனாகும்.

ஓர் சுபகாலங்களைக் கொண்டாடுவோர் தங்களாற் கூடிய திரவியத்தை சேர்த்து நங்குலத்து ஏழைகளுக்கு வஸ்திரதான மேனும், அன்னதானமேனும் அளித்து ஆதரிப்பார்களாயின் ஏழைகள் மனங்குளிர்ந்தளிக்கும் ஆசீரால் சகல சுகமும் பெருகுமென்பது சத்தியம்.

பணவிரயஞ்செய்து பொய்க்கூத்தாடுவோர் பெரும்பாலுங் காணும் பலன் யாதெனில், மேடைக்கு முதலாளியானோர் ஓர் கடனாளி ஆவதும், ஆட்டமாடும் வாலிபர் அருகிலுள்ள மனைவியுடன் மற்றோர் உடைந்தையைத் தேடிக்கொள்ளுவதும் கூத்து பார்க்கப்போகும் பாலியப்பெண்கள் குடி கெட்டலைவதுமே பெரும் பயனாகும்.

இத்தகையக் கேடுகளுக்குக் காரண உற்சாகக் கதைகளோவென்னில், ஓர் பால்ய ஸ்திரீயானவள் தன்னுடைய விளையாட்டில் இருக்குங்கால் ஓர் மதோன்மத்த பாலியன் அவள் மீது கல்லைவிட்டெரியவும் அதை அறிந்த காவலாளிகள் அவனை கட்டி இழுத்து நீதியதிபரிடஞ்சென்று அவர்களது தெண்டனையால் கொலைகளஞ் சென்று நின்றவன் பகவனை வணங்கக் கொலையாளர் விட்டுச்சென்றக் கட்டுக் கதையை மற்றுமுள்ள பாலியர் கேட்பார்களாயின் கன்னியின் மீது கல்லெரிந்தவன் கொலைக்குற்றத்தில் நியமித்து பகவனை வேண்டி தப்பித்துக்கொண்டபடியால் நாமும் அனந்த பதிவிரதைகளை பலவந்தஞ்செய்தும், கன்னிகைகளைக் கெடுத்தும் பகவனை வேண்டிக்கொண்டால் நம்மெய்க் காப்பாற்றிவிடுவாரென்னும் பயமற்றச் செயலால் நீதிமார்க்கமற்று அனந்தங் குடிகளைக் கெடுத்து அல்லலடையச் செய்து விடுவார்கள்.

இவைகள் யாவையும் நமதன்பர்கள் நன்காராய்ந்து குலயீடேற்றத்தைக் கருதி ஆடம்பரங்களை ஒழித்து சிறுவர்கள் கல்வியிலும், கைத்தொழிலிலும், வியாபாரத்திலும் விருத்தி பெறும் வழிகளையும் அவற்றிற்கு வேண்டிய சிலவுகளைச் செய்து சிறப்படையப் பார்ப்பார்களென்று நம்புகிறோம்.

பரிமாணத்திற்கு மீறி பெரிதாயிருக்குந் தாதையென்னும் ஊதுகுழலை பேதாதை என்றும், பரிமாணத்திற்கு மீறி பெரிதாயிருக்கும் தாளத்தை பேதாளம் என்றும் வழங்கிவந்ததுண்டு. அக்கருவியின் தோற்றமும் அதன் பருமனுஞ் செயலும் அறியாதோர் வேதாளமென்னும் ஓர் சீவனுள்ளதென்றும், அஃது பயிறுகளை எல்லாம் மேய்ந்துவிட்டதென்றும், அதனை நாயனார் மந்திரத்தால் ஓட்டிவிட்டாரென்றும் வேதாளக் கட்டுக்கதையை வரைந்திருக்கின்றார்கள். அத்தகைய வேதாளந் தற்காலப் பயிறுகளை ஏதேனும் மேய்ந்துவருகின்றதா, யாவரேனும் அவற்றைக் கண்டதுண்டா. இத்தகைய பேதாளக் கட்டுக் கதையினும் பூத கட்டுக்கதை மிக்க மேலாயதேயாம்.

கட்டுக்கதைகளைக் கொண்டு விருத்தி பெறும் மக்களை வீணே கெடுக்காது நந்தேசத்தை ஆண்டு வருகிறவர்களும், நமது இடுக்கங்களையுங் கேடுகளையும் அகற்றி இரட்சித்தவர்களும் இன்னும் இரட்சித்து வருகிறவர்களுமாகிய ஐரோப்பியர் களின் செயலையும் அவர்களது வித்தியா விருத்திகளையும் பின்பற்றுங்கள்.

அவர்களையும், அவர்களது விருத்திச் செயலையும் பின்பற்றுவோமாயின் அவர்களைப்போல் வித்தையும் புத்தியும் பெருகி நிறைந்த செல்வத்தைப் பெறுவதுடன் செல்வ நிறைவால் வஞ்சினம், சூது, பொறாமெய், குடி கெடுப்பு முதலிய துற்கிரித்தியங்களற்று அறிவு விருத்தி பெற்று ஆனந்தயோகபாக்கியமாம் முத்தி பேறென்னும் நிருவாண சுகமும் பெறலாம்.

அங்ஙனமின்றி நங்குலத்தோரை மீண்டுங் குடிகெடுக்குஞ் சத்துருக்களின் செயலை பின்பற்றுதல் இன்னும் பாழுக்கடிபடை போடுவது போலாம்.

தற்காலம் ஆடிய கூத்திற்குப் பணவுதவியாய செயல் ஐரோப்பியர் செயலா அன்றேல் நங்குலத்தோரை தாழ்த்தி தலையெடுக்கவிடாமற் செய்த சத்துருக்களின் செயலா தாங்களே கண்டறிந்துக்கொள்ளுங்கள்

3:29. டிசம்பர் 29, 1909 –

# 42. சங்கறாந்தி புண்ணியகால விவரம்

**சங்கமித்தர் . - சங்க தருமர் - சங்க அறர்**

என்றழைக்கும் புத்தபிரான் சங்கங்களுக்கு நாயகராக விளங்கியது கொண்டு சபாநாயகரென்றும், கணநாய்கரென்றும், சபாபதி யென்றும் கணபதியென்றும் வழங்கி வந்ததுமன்றி சங்கத்தோர்களாகும் சமணமுனிவர்களுக்கு சத்திய தன்மத்தையே பெரும்பாலும் போதித்தவராதலின் சங்கதருமர், சங்கறார் என வழங்கிவந்த அவர் பரிநிருவாணமடைந்த அந்தியகாலத்தை சங்கறர் அந்திய புண்ணியகாலமென்றும், சங்கராந்தி புண்ணிய காலமென்றும், விடுத்த பூத விழாக்கோலென்றும், இந்திர விழாவென்றும், தீபசாந்திநாளென்றும், சுவர்க்கவானம் ஏறிய நாளை சொக்கபானைக் கொளுத்துவதென்றும் வழங்கி வருகின்றார்கள்.

இவ்விந்திரர் தேயமுழுவதும் இந்திரர்மார்க்கம் நிறைந்திருந்த காலத்தில் இந்திய அரசர்கள் சமயகணக்கர்களாகிய சமண முனிவர்களைத் தருவித்து அவர்கள் அடிபணிந்து சக்கிரவர்த்தித் திருமகன் வைகாசிமீ பூரணையில் பிறந்த நாள் விழாக்கோலும், மாசிமீ பூரணியில் இல்லந்துறந்து பிச்சாண்டியான நாள் விழாக்கோலும், பங்குனிமீ பூரணியில் நிருவாணமடைந்த ஆலமர்ச் செல்வன் மதன்விழாக்கோல் நாளும், மார்கழிமீ பூரணி திருவாதிறை நட்சத்திரத்தில் பரிநிருவாணமடைந்த விடுத்த பூதவிழாக்கோல் நாளுங் கணக்கெடுத்து தெரிவிக்கும்படி வேண்டிக்கொள்ளுவது வழக்கமாகும்.

சமணமுநிவர்களாகும் சமய கணக்கர்கள் அவற்றிற்கு இசைந்து ஒவ்வோர் பௌர்ணமி காலக் குறிப்பையும், அவைகளின் காலகணிதங்களையும் விளக்கி அந்தந்த

விழாக்கோலை கொண்டாடும்படி உத்திரவளிப்பார்கள்.

இவற்றை மணிமேகலை விழாவறை காதையிற் காண்க.

இவ்வகையாய் புத்தசங்கங்களில் தங்கியிருந்த சமணமுநிவர்களால் விசேஷகாலங்களை விளக்கிவரவும், பௌத்த அரசர்களுங் குடிகளும் அவற்றைக் கொண்டாடி வருவது இயல்பாயிருந்தது.

இப்பண்டிகை மார்கழிமீ 28உ பூரணிநாள் திருவாதிறை நட்சத்திரத்தில் ஆதியில் வந்தபடியால் மார்கழி மாதக் கடைநாளையே விசேஷமாகக் கொண்டு மார்கழிமீ முதல் திகதி முதல் விடியர்காலமெழுந்து வீடுவாசற் சுத்தி செய்து கோலமிட்டு புட்பம் பரப்பி ஜகத்தீசனாம் சத்குருநாதனை பஜிக்கும் பாடல்களாலும், கும்மியடிக்குங் குதூகலத்தாலும் மாதமுழுவதுங் கொண்டாடி கடைநாள் விடியற்காலம் சோதியை வளர்த்து தெரிசித்து போதிபண்டிகையென போதிநாதனை சிந்தித்து ஏழைகளுக்கு அன்ன வஸ்திரமளித்து சங்கறாந்தி புண்ணிய காலத்தை பூர்த்தி செய்வார்கள்

இத்தகைய புத்ததன்மச் செயல்களானது அபுத்ததன்மங்கள் மேலிட்டு மதக்கடைப் பரப்பி சீவிக்கும் பொய்க்குருக்களால் மாறுபட்டிருந்த போதினும் பூர்வ வழக்கத்தை மட்டிலும் மாறாமல் செய்துவருகின்றார்கள்.

போதி பண்டிகை, போகிப்பண்டிகை யெனக் கொண்டாடும் விடியர்காலத்தில் சகல பெண்களும் எழுந்து அழுது துக்கிக்குங் காரணம் யாதென்பீரேல் பகவனது உச்சியிலும் தேகமுழுவதும் வாள் போன்ற சோதி கழன்று பரிநிருவாணமுற்றபோது ஆனந்தன் என்னும் அவரது பிரதம் சிஷியன் அலறித் துக்கித்து அழுகவும் அதையுணர்ந்த உலக மக்களுங் குடும்பத்தோரும் இனி எப்போதிவர்பால் அறவுரைக் கேழ்ப்போமென்று துக்கித்த வழக்கமே நாளதுவரையில் போதிபண்டிகை விடியர்காலத்தில் துக்கித்துவருகின்றார்கள்.

**சோதியாய் பகவன் - பரிநிருவாணமடைந்த விவரம்**

**வீரசோழியம்**

கூரார்வளையுகிர் வாளெயிற்றுச் செங்கட்
கொலையுழுவை காய்பசியாற் கூர்ந்த வென்னோய் நீங்க
வோராயிரங் கதிர்போல் வாள் விரிந்த மேனி
யுளம் விரும்பிச்சென்றாங் கியைந்தனை நீயென்றாற்
காரர்திரைமுளைத்த செம்பவளமேவுங்
கடி முகிழ் தண்சினைய காமரு பூம்போதி
யே ரார் முநிவரர் வானவர்தங் கோவே
யெந்தாயரோ நினை யேற்றாதார் யாரே.
திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனென் றுலகேற்ற
வுருமேவி யவதரித்த வுயிரனைத்து முயக்கொள்வா
னிவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருள் நீங்க
மெவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்த செழுஞ்சுடரென்ன
விலங்குகதி ரோரிரண்டு விலங்கிவலங் கொண்டுலவ
வலங்குசினைப் போதி நிழ வறமமர்ந்த பெரியோய் நீ

பகவன் உச்சியிலும் தேக முழுவதும் வாள் போன்ற சோதி கழன்று பரிநிருவாணமுற்றபோது புத்தபிரான் பிரதமமாணாக்கன் ஆனந்தன் துக்கித்த விவரம்.

**பாணவீரியன் பாடியுள்ள வெண்டாழிசை**

சீருங் சிதைந்தனவோ செல்வந் துறந்தன மாவென் செய்கோம் யாம்
பேரும் பிரிந்தன நம் பெம்மான் மறைந்தன மாலென்செய்கோம் யாம்
நெஞ்சார வஞ்சமற்றோர் நீநிலத்தை நீக்க முற்றா ரென்செய்கோம் யாம்
துஞ்சாது துஞ்சிய கண் டுஞ்சலுறக் கண்டோ மாலென்செய்கோம் யாம்
உண்ணாவிருந்த சுட ருச்சிக் கெழுந்தனவொ வென்செய்கோம் யாம்
தணமெய்யெழுந்த சுடர் தார்போன் மறைந்தனவா லென்செய்கோம் யாம்
கருணையே வோருருவாய்க் காட்டி மறைந்தனனோ வென்செய்கோம் யாம்

அருணனே யருளுங் கொண்டோதி மறைந்தனனோ வென் செய்கோம் யாம்
குமுதத்தில் வீற்றானை குவாலயத்திற் காணாதா லென்செய்கோம் யாம்
அமுதத்தின் வாக்கை யடக்கி மறைந்தானே யென்செய்கோம் யாம்
செவிக்கின்பமா யுரைப்போன் சேவைத் துறந்தோமே யென்செய்கோம் யாம்
புவிபாரம் நீக்கவந்தோன் போதம் மறைந்தனவா லென்செய்கோம் யாம்
மறுளறுத்தப் பெரும் போதி மாதவரைக்கண்டி லமா லென்செய்கோம் யாம்
அருள் நிறைந்த திருமொழியா ரறவழக்கங் கேட்டிலோமா லென்செய்கோம் யாம்
பொருளறியு மருந்தவத்து புரவலரைக் கண்டி லமா லென் செய்கோம் யாம்
திருவருளே முதற் குருவாய்த் தோன்றி மறைந்தனவே யென்செய்கோம் யாம்.

புத்தபிரான் பரிநிருவாணத்தைப்பற்றி ஆனந்தன் புலம்பியதுபோலவே வீரைமகாமுநிவரும் தனது தேவபாணியிற் பாடியிருக்கின்றார்.

ஆதலின் நமது பௌத்தசோதிரர்களும் தன்மப்பிரியர்களும் கலியுலகம் 5011 சௌமிய வருஷம் மார்கழி மீ 30உ க்குச் சரியான இங்கிலீஷ் 1901 வருஷம் ஜனவரிமீ 13உ குருவாரம் விடியர் காலையில் போகி நாதன் சோதியை வளர்த்தி நீதிமார்க்கத்தினின்று சங்கறர் அந்தியகாலத்தை சிந்தித்து பொங்கலிட்டு புண்ணியதானஞ் செய்யவேண்டுகிறோம்.

**வீரசோழியம் அரசர்கள் வைராக்கிய வாக்கு**

**போதி வேந்தன் சரணலால் அரண் புகேன்**

சங்கறரந்திய புண்ணியகாலம் / பொங்கலிட்டுப் புண்ணியஞ்செய்வோர் தங்குஞ்சங்கத் தண்ணருள் பெற்று / மங்காசெல்வ வாழ்க்கைப் பெறுவர்.

3:30; சனவரி 5, 1910 –

# 43. சைவசமயம்

வினா : தாயுமானவரவர்களின் பாடலில் சைவசமயமென்றும், பொய்வந்துழலுஞ் சமயமென்றும், தெய்வசபையென்றுங் கூறி இருக்கின்றனரே அதின் அந்தரார்த்தங்களென்னை, அவற்றை அறிந்து செல்லும் மார்க்கங்கள் எவை யென்று அடியேனுக்கு விளக்கி ஆட்கொள்ளும்படி வேண்டுகிறேன்.

’வி. நடேசன், மதுரை

விடை : அன்பரே, தாம் வினவியக் கருத்தை தெய்வப்புலமெய்த் தாயுமானவர் பாடலின் பரிபக்குவ உரையைக் கொண்டே உணர்ந்துக் கொள்ளலாம்.
அதாவது சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம் பொருள்
கைவந்திடவு மன்றுள் வெளிக்காட்டு மிந்தக் கருத்தைவிட்டு
பொய்வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா மடநெஞ்சே
தெய்வசபையை சேர்வதற்கு சேரவாருஞ் ஜெகத்தீரே.

இதன் பொருள்.

சைவம் - தன்னை அறியும், சமயமே சமயம் - காலமே காலமாகும், சமயாதீத காலத்திற்கு அப்புறப்பட்ட பழம்பொருள் - மெய்ப்பொருள், கைவந்திடவும் - தனது நன்முயற்சியால் கைகூடவும், மன்றுள் வெளிக்காட்டும் - அன்று வுள்ளொளிக்காட்டும், கருத்தைவிட்டு - ஆழ்ந்த ஆராயும் உண்மெய் நழுவி, பொய் வந்துழலும் - அபுத்தமாகுஞ் செயல்கொண்டு திரியும், சமயநெறி - காலநிலையில், புகுதவேண்டாம் - நுழையவேண்டாம், மடநெஞ்சே -

பாழு மனமே, தெய்வசபையை புத்தசங்கத்தை, சேர்வதற்கு - அமைவதற்கு, சேரவாரும் - நெருங்கி வரக்கடவீர், ஜெகத்தீரே உலகத்தோரே என்றவாறு.

தன்னையறிந்து அடங்கு நிலைக்கு பாலிபாஷையில் சைவமென்று கூறப்படும். இவற்றையே அகப்பேய் சித்தர். சைவமாருக்கடி - யகப்பேய் தன்னையறிந்தவர்க்கே சைவமானவிடம் - அகப்பேய் தானாகநின்றதடி

சமயமென்பது ஓர் காலத்தைக்குறிக்கும் மொழியாகும். அதாவது நல்ல சமயத்தில் வந்தீர் நல்ல சமயத்திற் போனீர் என்பதேயாம்.

மக்களுக்குக் காலமென்பது யாதென்பீரேல் பாலகாலம், குமரகாலம், அரசகாலம், மூப்புகாலம், மரணகாலம் ஐந்தினுள் வாலவிளையாட்டுகாலமும், குமர காமிய பாரகாலமும், அரசவாளுகை பாரகாலமும், விசேஷித்தன்று.

மனிதன் தனக்குள்ள இராகத், துவேஷ, மோகமென்னும் பற்றுக்களற தனக்குள்ள நற்செயலையுந் தீச்செயலையுந் தன்னிற்றானே ஆராய்ந்து தீயச்செயல்களை அகற்றி நன்மெய்க் கடைபிடிக்கும் காலமே விசேஷகாலமாதலின், தன் மெயறியுங் காலமே சமயமென வற்புறுத்திக்கூறியுள்ளார்.

சைவமென்பது தன்னை அறிதலும்
சமயமென்பது காலக்குறிப்பும்
பொய் வந்துழலுஞ் சமயமென்பது.

அயுத்தமாம் மதக்கடைகளைப் பரப்பி அதினாற் சீவிப்போர் காலமும்.

தெய்வசபை என்பது ஞான விசாரிணையினின்று உண்மெ உணர்ந்து புலன் தென்பட்டோராகும் தென்புலத்தோர் வாசஞ்செய்யும் புத்தசங்கமேயாகும்.

அதாவது, மநுக்களென்னும் ஆறாவது தோற்றங் கடந்து தேவர்களென்னும் ஏழாவது தோற்றமுற்றிருக்கும் சமணநிலை கடந்த அறஹத்துக்கள் வாசஞ்செய்யுமிடம் புத்த சங்கமாதலின் அவற்றையே தெய்வசபை என்றுங் கூறியுள்ளார். இவைகளே தாயுமானவர் பாடல்களிற் கூறியுள்ள மெய்ம்மொழிகளின் அந்தரார்த்தங் களாகும்.

3.33; சனவரி 26, 1910 –

# 44. சாக்கைய பௌத்தர் விவாக விளக்கம்

**முகவுரை**

இவ்வுலகின்கண் பண்டைகாலம் வித்தையிலும், புத்தியிலும், ஈகையிலும், சன்மார்க்கத்திலும் சிறப்புற்றிருந்து தற்காலம் பொறாமெயிலும், வஞ்சினத்திலும், குடியிலும், களவிலும் சீர்கெட்டு வரும் இத்தென்னிந்தியாவில் பற்பல மதங்கள் தோன்றித் தத்தம் மதக் கொள்கைகளைத் தழுவி சுபாசுபக் கிரியைகளை நிறைவேற்றி வருகின்றனர்.

இவ்வகை சுப அசுபக்கிரியைகளில் தாங்கள் எவ்வகை துற்கருமங்களைச் செய்யினும் தங்கடங்கள் தெய்வங்கள் அவற்றை பரிகரிக்குமென்னும் காரிய குருக்களின் மதக்கட்டுண்டு பணத்தினாலும், வாக்கினாலும், தேகத்தாலும் செய்யுந் துற்கருமச்செயல்கள் யாவும் மாட்டினாலும், ஆட்டினாலும், கோழியினாலும், பணத்தினாலும், பூசையினாலும் அப்பாவச்செயல்கள் அகலுமென்றெண்ணி வாளா துற்கன்மங்களைப் பெருக்கி வருகின்றனர்.

துற்கரும பெருக்கத்தால் நற்கருமங் குறைந்து நாளுக்குநாள் மனுக்குல ஒற்றுமெய்க்கெட்டு சதிபுருஷாள் சத்துருத்துவம் மேலிட்டு புத்திரசந்தான போகமும் பட்டு சீரழிவதற்குக் காரணமென்னையெனில் உலக சீர்திருத்தக்காரர்கள் முதன்மெயாகத் தோன்றி ஆதிபகவன் என்றும், அதி முனிவனென்றும், ஆதி தேவனென்றும், ஆதி கடவுளென்றும், ஆதி சிவனென்றும், அதி மூலமென்றும் காரணப்பெயர்கள் ஆயிரம் பெற்ற ஒப்பிலா சற்குருவாகிய புத்தரையும் அவர் போதித்துள்ள தருமங்களையும், அவர் சங்கங்களையும் மறந்து தங்கள்

சீவனோபாவத்தினால் நூதன மதங்களை ஏற்படுத்தி மதக்கடைகளைப் பரப்பி அக்கடைகளில் புத்த தருமங்களில் மட்டும் சிலதைப் புசலிட்டு புத்தரையும் அவர் சங்கத்தவர்களையும் தாழ்த்தி தங்கள் சீவனோபாயப் பொய் மதக்கடைகளைப் பரவச் செய்வதற்கு பொய்ப் புராணங்களாகும் பற்பலக் கட்டுக்கதைகளை ஏற்படுத்தி உலகொளியாக விளங்கும் சற்குருவின் சரித்திரங்களையுங் கெடுத்து அவர் நீதிவழுவா சங்கத்தவர்களுக்கும் தாழ்ந்த சாதிப் பெயர்களைக் கொடுத்து நாளுக்குநாள் நசித்து வரும் வஞ்சினச் செயல்களே சீரழிவுக்குக் காரணமென்னப்படும்.

சற்சங்க விருத்தியிலிருந்த சாதுக்களும் நாளுக்குநாள் துற்சங்க விருத்தியாகும் பொய்மதக்கடைகளில் பிரவேசித்து பொய்யை மெய்யெனப் பிதற்றித்திரிந்த போகியைம் அவரவர்களுக்குள்ள சுபாசுப காரியங்கள் யாவற்றிலும் புத்தருமக் கிரியைகளையே நிறைவேற்றி வருகின்றார்கள்.

சுபகாரியங்களென்னும் விவாக காலங்களில் நிறைவேற்றிவரும் தன் மகன்மக் கிரியைகள் யாவும் எந்த சரித்திரத்திற் கூறியுள்ளவை களென்றும், அக்கிரியைகளின் அந்தரார்த்தம் யாதென்றும் விசாரித்துணராமல் புத்த தருமம் நூதனமாகத் தோன்றிய தென்றும் பொய்மதப் போலி ஞானிகளால் அஃது அழிந்து விட்டதென்றும் பிதற்றித் திரியும் அன்பர்களுக்கு நமது விவாக காலங்களிற் செய்து வருங் கிரியைகள் யாவும் 1,500 வருஷங்களுக்குட்படத் தோன்றி நாளுக்குநாள் நசிந்துவரும் சைவமதம் வைணவமதமென்னும் இருமதச்செயல்களைத் தழுவிய தல்லவென்றும் பூர்வ புத்ததருமச் செயல்களைத் தழுவியதென்றும் உணர்வான் வேண்டி புத்ததரும் அரசர்கள் செய்துவந்த விவாகக் கிரியைகளையும் தற்காலம் நாம் செய்துவரும் விவாகக் கிரியைகளையும் விளக்கி சாக்கைய புத்த சங்கத்தார் விவாக விளக்க நூலென வெளியிட்டிருக்கின்றோம்.

இவ்வரிய சுருக்கநூலை ஒவ்வோர் அன்பர்களும் பூர்த்தியாக வாசித்துணர்ந்து பூர்வ தன் மகன்மங்களை நிலைபெறச் செய்வதுடன் முடிவுரையிற் கூறுயுள்ளவைகளையும் பின்பற்றுவார்களாக.

**பூர்வீக திராவிட புத்தசங்கத்தார்**

**மங்கல நிலை**

மனைக்கு விளக்க மடவார் மடவார் / தமக்குத் தகைசால் புதல்வர் - மணைக்கினிய காதற் புலவர்க்குக் கல்வியே கல்விக்கு / ஒதிற் புகழ்சா லுணர்வு.

**மனைநிலை**

மழையின்றி மானிலத்தார்க்கில்லை - மழையும் / தவமிலா னில்வழி யில்லை - தவமும் அரசிலா னில்வழி யில்லை - அரசனும் இல்வாழ்வா ளில்வழியில்

**உண்மெய் நிலை**

அறிந்தானை ஏத்தி யறிவாங்கறிந்து / செறிந்தார்க்குச் செவ்வனுரைப்ப - சிறந்தார் சிறந்த மெய் ஆராய்ந்து கொண்டு.

**சாக்கைய சங்கத்தார் விவாக விளக்கம்**

பூர்வகாலத்தில் வடயிந்தியம் தென்னிந்திய முழுமையும் அரசாண்டுவந்த புத்ததன்ம அரசர்கள் முதல் வணிகர் வேளாள ஈறாகும் முத்தொழிலாளருக்கும் கன்ம குருக்களாக விளங்கி தன்மகன்மக் கிரியைகளை நடத்தி வந்தவர்கள் வள்ளுவர், சாக்கையர், நிமித்தகரென்னும் பூர்வக்குடிகளாம்.

**முன்கலை நூல் திவாகரம்**

வள்ளுவர் சாக்கைய ரெனும் பெயர் / மன்னர்க்குள் படு கருமத்தலைவர்க் கொக்கும்

**பின்கலை நூல் நிகண்டு**

வருநிமித்தகன் பேர் சாக்கை வள்ளுவனென்றுமாகும்.

இத்தகைய தன்மகன்மப் பெயர்களைப் பெற்ற வகுப்பாருள் கலிவாகுச் சக்கிரவர்த்தி, வீரவாகுச் சக்கிரவர்த்தி, குலவாகுச் சக்கிரவர்த்தி, இட்சுவாகு சக்கிரவர்த்தி யெனுந்

தலைத்தார் வேந்தர்களும் அரசர்களும் இருந்தார்கள். இத்தகைய சக்கிரவர்த்திகளின் வம்மிச வரிசையில் சித்தார்த்தி என்னுஞ் சக்கிரவர்த்தி திருமகன் தோன்றி நன்மெய் நிலையாகு உண்மெய் உணர்ந்து புத்தரெனும் பெயர்பெற்று உலக ரட்சகன் என்னும் சற்குருவாக விளங்கின படியால் அவர் வம்மிச வரிசையில் தோன்றிய அரசர்கள் யாவரையும் குருகுலத்தரசரென்றும், குருகுலக் கோமான்களென்றும், குருகுல மன்னரென்றும் வழங்கி வந்தார்கள்.

**மணிமேகலை**

சாக்கையராளுந் தலைத்தார் வேந்தன் / ஆக்கையுற்றுதித்தன னாங்கவன்றானென.

**சூளாமணி**

இன்னலன துயர் குலமு மிளமையு மிங்கிவன் வடிவுஞ் சொல்ல வேண்டா மன்னவன்றன் மடமகளே மற்றிவனுக் கிடமருங்கின் மஞ்சஞ் சேர்ந்து பொன்னவிருமணியணைமேற்பொழி கதிரீண்டெழுந்தது போற்பொலிந்து தேன்றி கொன்னவின்ற வேற்குமான் குரு குலத்தார்கோனிவனே கூறக்கேளாய்.

**வீரசோழியம்**

மலைகரந்து போகாதோ வற்றாதோபவ்வ
மலர்கதிரோன் வீழானோவஞ்சி - நிலயெனக்குப்
பார்வேந்த ரொப்பரோ பாய்நீர் குரு குலத்தார்
போர்வேந்தே யான்முநிந்தபோது.

**சீவக சிந்தாமணி**

ஆழ்ந்த குருகுலமா மாழ்கடலி னுண்முளைத்த வறச்செங்கோலாய் கதிரினை
வேந்தர் பெருமானைச் சச்சந்தனை மந்திரிமா நாகமுடன் விழுங்கிற்றன்றே.

இன்னுங் குருகுலத்தரசர்களாய் விளங்கிய திரியோதினன், இரணியன், மாபலி, நந்தன் முதலிய அரசர்கள் யாவரையும் தற்காலந் தோன்றி நிற்கும் பராய மதஸ்தர்கள்

வஞ்சினத்தாலும், மித்திரபேதத்தாலும் கொன்று பற்பலக் கட்டுக் கதைகளால் அவர்கள் பூர்வ சரித்திரங்களையும் மாறுபடுத்தி அவர்கள் வம்மிசவரிசை யோர்களையும் தாழ்ந்த சாதியாக வகுத்து நாளதுவரையில் நசித்துவருகின்றார்கள்.

மேற்கூறியுள்ளக் கருமத்தலைவர்கள் முக்காலங்களையும் அறிந்து சொல்லக்கூடிய கணிதசாஸ்திரிகளாகவும், தன் மகன்ம குருக்களாகவும் விளங்கின படியால் வள்ளுவர், சாக்கையர், நிமித்தகரென்னுங் காரணப் பெயர்களைப் பெற்றிருந்தார்கள். வடயிந்தியாவில் சாக்கையரெனும் பெயரால் பெரும்பாலும் இவர்களை அழைக்கப்பெற்றிருந்தபடியால்,

3:33; சனவரி 26, 1910 –

நாளதுவரையில் அவ்விடம் சாக்கையர் தோப்பென்னும் இடப்பெயர் வழங்கிவருகின்றது. தென்னிந்தியாவில் சாக்கையரெனும் பெயரை சாக்கியரென வழங்கி வந்தபோதிலும் வள்ளுவரெனும் பெயரை விசேஷமாக வழங்கி வந்தபடியால் அவர்கள் சிறப்பு மாறாமல் திருவனந்தபுரத்தைச் சார்ந்த வள்ளுவர் நாடென்னும் தேசப் பெயர் நாளதுவரையில் வழங்கிவருகின்றது. கங்கைநதி எனும் வார்த்தை கங்காந்தி எனுங் குணசந்தி பெற்றது போல சாக்கைய ரெனும் பெயரை சாக்கியரென வழங்கி வருகின்றார்கள்.

சென்னையைச்சார்ந்த மயிலைநாட்டில் சாக்கையரின் வம்மிச வரிசையோர் விசேஷமாக குடியிருந்ததும் அவர்களுக்குள் கொன்றை ராசனென்னும் ஓர் சிற்றரசனிருந்ததும் அங்கு புத்த சங்கத்தோர் மடமிருந்ததும் அம்மடத்தில் புத்தர் மாசிமாத பௌர்ணமியில் துறவடைந்த வேடத்தைக் கொண்டாடுவதற்கு அரசன் பிச்சையாண்டி வேஷங்கொண்டு வெளிவருவது போல் உற்சாகங் கொண்டாடி வந்ததும் மாசிமாத பௌர்ணமியன்று இரவுமுழுதும் புத்தரவர்கள் நித்திரையற்று துறவடைந்தபடியால் அந்நாளிரவைக் கொண்டாடுவதற்கு அவருடைய சங்கத்தோர்கள் துறவு விசாரிணையில் விழித்திருந்து மகாசிவராத்திரி என வழங்கிவந்ததும் கார்வெட்டி நகரத்தை ஆண்ட குருகுலத்தரசன் மணிவண்ணன் மனைவி பூம்பாவை என்பவள்

மயிலை மடபிச்சை ஆண்டி வேட உற்சாகங் காணவந்து மரணமடைந்ததினால் சாக்கையர்கள் துக்கங்கொண்டாடியதும் ஆகிய விஷயங்கள் யாவும் பூர்வ சரித்திராதாரமாக மயிலை வீ. குப்புலிங்க நாயனாரவர்களால் வெளியிடும் புத்தகத்தில்சாக்கையர் விருத்தாந்தங்களைத் தெளிவாகத் தெரிந்துக்கொள்ளலாம்.

புத்தர் தனது கரத்தில் போல் என்னும் பாத்திரமேந்தி பிச்சை ஏற்றதினால் கரபோல் ஈசனென வழங்கிவந்த வார்த்தை குறுக்கல் விகாரப்பட்டு கபோல ஈசனென்றும், கபால ஈசனென்றும் வழங்கிவருகின்றார்கள்.

**சீவகசிந்தாமணி**

மாசித்திங்கண் மாசினமுன்ன மடி வெய்த / வரித்துன்ன மூசியவாடை யுடையாக பேசிப்பாவாய் பின்னு மிருக்கை, யகலேந்தக் காரிக்காரி நிற்பர் கொடுத்துண் டறியாதார்.

தென்னிந்தியாவில் சீவகன், காளகூடன், மணிவண்ணன், நந்தன், கன் அசேந்திரன், தஞ்சைவாணன், கொன்றையன் மற்றுமுள்ள சாக்கைய புத்த அரசர்கள் வாசஞ்செய்த இடங்களுக்கு சேரி எனும் பெயர் பெரும்பாலும் வழங்கிவந்தபடியால் நாளது வரையில் அவர்களுடைய வம்மிச வரிசையோர் - வாசஞ்செய்யும் இடங்களுக்குச் சேரி என வழங்கி வருகின்றார்கள்.

**சீவக சிந்தாமணி**

தேனுலா மதுச்செய் கோதை தேம்புகை கமழவூட்டி
வானுலாச் சுடர்கண்மூடி மாநக ரிரவுச் செய்ய
பானிலாச் செரிந்தனல்லா ரணிகலம் பலைச்செய்ய வேனிலான் விழைந்த சேரி மேலுல களைய தொன்றே.

**சூளாமணி**

மெய்ப்புடை தெரிந்து மேலை விழுதவமுயன்று நோற்றார்க்
கொம்புடைத்துங்கள் சேரி யுயர்நிலை செல்வமெல்லா
மெம்படி முயறு மேனு மெங்களுக்கெய் தலாகா
தப்படி நீயுமுன்னர் மொழிந்தணை நன்றே யென்றான்.

**சிலப்பதிகாரம்**

கூலமறுகிற் கொடியெடுத்தணுலும் / மாலைச் சேரி மருங்கு சென்றெய்தி.

புத்தமார்க்க அரசர்கள் ஓர் அறபுத்திரியை தனக்கு மனைவியாக சேர்த்துக்கொள்ளுவதற்கு வதுவை, கைப்பற்றல், தீவலம், மணம், கல்யாணம், வீதியுளி, மன்றல், விவாகம் என எட்டு வகைப் பெயர்களைக் கொடுத்திருந்தார்கள். இவ்வகை விவாக உற்சாகத்தையும் புத்தர் பிறந்த நாள் உற்சாகத்தையும் அவர் துரவடைந்த உற்சாகத்தையும், காமனை எரித்த உற்சாகத்தையும், அவர் நிருவாணகால உற்சாகத்தையும் ஆனந்தமாகக் கொண்டாடி வந்தார்கள்.

**பின்கலை நிகண்டு**

வதுவை கைபற்றலே தீவலஞ்செய் தன் மணங் கல்யாணம்
விதியுளி வேட்டன் மன்றவிசாகமெண்பேர் விளங்கும்
புதுவிழா முருகுசாறு புத்தருளுச் சவமாஞ்சோறு
துதை மலர் கொண்டு போற்றும் துணங்கற லிரண்டு மப்பே.

இவ்வகை விவாக உற்சாகங்களை சாக்கைய புத்த அரசர்கள் வள்ளுவர், சாக்கையர், நிமித்தகரென்னுங் கருமத்தலைவர்களைக் கொண்டே நடத்தி

வந்தார்கள்.

**சீவக சிந்தாமணி**

பூத்த கொங்கு போற் பொன் சுமந்துளா / ராச்சியார் நலக்காசுறூணனான்
கோத்த நித்திலக் கோதை மார்பினான் / வாய்த்த வன்னிரை வள்ளுவன் சொனான்.

**சூளாமணி**

நிமித்தக னுரைத்தலு நிறைந்த சோதியா
னுமைத்தொகையிலாததோருவகையாழ்ந்து கண்
ணிமைத்தில னெத்துணை பொழுது மீர்மலர்ச்
சுமைத்தொகை நெடுமுடி சுடரத்தூக்கினான்.

**வேறு**.

தலைமகன்றாடனக்காகச் சாக்கைய / நிலமைகொண் மனைவியா நிமிர்த பூந்தணர் நலமிகு மக்களா முதியர் தேன்களாக் / குலமிகு கற்பகங் குளிர்ந்து தோன்றுமே.

பூர்வ அரசர்கள் நடக்கையை அநுசரித்து அவர்கள் வம்மிச வரிசையோர்களும் பௌத்தக் குடிகளும் வள்ளுவர்களைக் கொண்டே அவர்கள் சுபாசுபக் கிரியைகளை நடத்தி வருகின்றார்கள்.

சாக்கைய புத்தவரசர்கள் சாந்தம், ஈகை, அன்பென்னும் முக்குணங்களைப் பெருக்கி குடிகளைத் தன்னுயிர்போல் பாதுகாக்குங் குணமுடையவர்களாய் இருந்தபடியால் வெண்குடை, வெண் கொடி, வெண் சாமரை, வெள்ளையானை, வெள்ளைக்குதிரை, வெண்ணுடை, வெண்பிறை, முடி, வாகு, வலய முதலியப் பதினெட்டு விருதுகளுடன் ஊர்வலம் வந்து விவாகக் கிரியைகளை நடத்தி வந்தார்கள்.

**சூளாமணி**

மறந்தலை மயங்கிவையத் தொருவரையொருவர் வாட்ட
விறந்தலை யிலாமை நோக்கி யின்னுயிர்போலகாக்கு

மறந்தலை நின்றவேந்த ரடி நிழ லன்றி யார்க்குஞ்
சிறந்த தொன் றில்லைகண்டாய் திருமணி திகழும்பூணோய்.

**மணிமேகலை**

மதிமருள் வெண்குடை மன்னவன் சிறுவனுதய குமரனுரு கெழு மூதூர்.

**வீரசோழியம்**

ஆவியனைத்துங் கசத நப மவ்வரியும் வவ்வி
லேவிய வெட்டும் யவ்வாறு ஞந்நான்கு மெல்லா வுலகு
மேவிய வெண்குடைச் செம்பியன் வீரராசேந்திரன்றன்
நாவியல் செந்தமிட் சொல்லின் மொழிமுத னன்னுதலே.

**சிலப்பதிகாரம்**

திங்கண்மாலை வெண்குடையான் சென்னி செங்கோலது வோச்சிக் கங்கைதன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி.

**சூளாமணி**

கயந்தனைக் களிற்றினா யோர்க்கனாக்கண்டதுளது கங்கு
னயந்தது தெரியினம்பி நளிகடல் வண்ணன் றன்னை
வியம்பகத் திழுந்து வந்தோர் வேழம்வெண் போது சேர்ந்த
தயங்கொளி மாலை சூட்டி தன்னிட மடைந்ததன்றே.
எல்லா விருது மீனும் பொழிலின
தெல்லா நிதியு மியன்ற விடத்தின
தெல்லா வமரர் கணமு மிராப்பக
லெல்லாப்புலமு நுகர்தற் கினிதே.

3:36, பிப்ரவரி 16, 1910 –

ஆர்த்த பல்லியக்குழா மதிர்ந்த குஞ்சரக்குழாந்
தேர்த்தவீரர் தேர்க்குழாம் திசைத்தபல் சனக்குழாம்
போர்த்த சாமரைக்குழாம் புதைத்த வெண் கொடிக்குழாம்
வேர்த்த வேந்தர் பல்குழாம் விரைந்த கூந்தன் மாக்குழாம்.

பூர்வ அரசர்கள் கொண்டாடிவந்த விருதுகளாகும் சின்னங்களை விடாது அவர்கள் வம்மிச வரிசையோர்கள் பராய மதஸ்தர்களால் நசுங்குண்டு எழிய நிலமையிலிருந்த போதிலும் தங்கள் விவாககாலங்களில் பூர்வ சின்னங்களை மறவாது, வெள்ளைக் குதிரை, வெள்ளைக் குடை, வெண்ணங்கி, வெண்பிறைமுடி, வெண்சாமரை கொடை, செடி, வாகுவலயம் முதலிய பதினெட்டு விருதுகளுடன் ஊர்வலம் வந்து முகூர்த்தம் நடத்துகின்றார்கள். இவர்களுக்குள்ள பூர்வசுதந்திரம் மாறாமல் பராய மதஸ்தர்கள் திருவாளூரிற் செய்யும் உற்சவத்தில் இக்குலத்தோருள் பெரிய தனக்காரன் ஒருவனை யானையின் பேரிலேற்றி ஊர்வலங் கொண்டு வருகின்றார்கள். இஃது குருபரம்பரை ஒழுக்கம்.

புத்தமார்க்க அரசர்கள் மழலைபருவமாகும் சிறுவயதில் பெண்களுக்கு விவாகஞ்செய்யாமல் மங்கை பருவமடைந்த பெண்களுக்கே விவாகஞ் செய்து வந்தார்கள்.

**சூளாமணி**

நங்கைதான் வளர்ந்து காம நறுமுகை துணரவைத்து
மங்கையாம் பிராயமெய்தி வளரிய நின்ற நாளுட்
பைங்கண்மால் யானையார்க்கும் பருவம்வந் திருத்ததென்றாள்
வங்கவாய்ப் பவழச்செவ்வாய் வயந்தமாதிலகையென்பாள்

மேற்கூறிய அரசர்கள் வம்மிசவரிசையைச் சார்ந்த பூர்வக்குடிகளும் அச்சேர்க்கை மாறாது நாளதுவரையில் மங்கைபருவமடைந்த பெண்களையே விவாகஞ் செய்துவருகின்றார்கள்.

குமரப்பருவமுற்ற அரசர்களுக்கும் மங்கைப்பருவமடைந்த பெண்களுக்கும் வதுவை நியமிக்குங்கால் தன்மகன்ம குருக்களாகும் வள்ளுவர்களை வருவித்து பெண்பிறந்தநாள், பருவமடைந்தநாள் தெரிந்துகொள்ளுவதுடன் பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்னுந் தேகலட்சணமும் அறிந்து புருஷருக்குரிய குதிரை, ரிடபம், மான், முயல் எனுந் தேகபொருத்தமும் அறிந்து விவாகம் நடத்திவந்தார்கள்.

**மங்கலத்திரட்டு**

பருவமங்கை பலுத்த நாள் முகநாளையு மிடைபாரமும்
உருவில் மன்னனுதித்த நாள் குரியோதமுமுயையாழமும்
வருவிலங்க குணக்கடற் சுகவாட்கையு மணசேர்க்கையுங் கருவிலோங்கு களத்திரத்திரள் காணுமே கனமூணுமே.

**சூளாமணி**

மானக்கோதை மாசரு வேலோய் வரவெண்ணிலாத்
நானக்கோதை நங்கை பிறந்த நாளாளே
வானக்கோனின் மாண்புணர்வார்கண் மறுவில்
தானக்கோளிற் சாதகவோலைத்தலை வைத்தார்.

இவ்வகையாகக் கருமத்தலைவர்கள் சென்று பெண்பார்த்து புருஷனுக்குரிய தேகபொருத்தமும் பெண்ணுக்குரிய தேக பொருத்தமும் பொருந்துதலைக் கண்டவுடன் அரசர்களுக்குத் தெரிவிக்க அரசன் அம்மங்கையை நானே விவாகஞ் செய்வேனென்று தனது- கரத்தில் மஞ்சள் நூலாற் கங்கணங்கட்டிக்கொள்ளுவதும் மங்கை

அம்மன்னனையே விவாகஞ் செய்வேனென தனது கரத்தில் மஞ்சள் நூலால் கங்கணங் கட்டிக்கொள்ளுவதும் ஓர் விரதமாய் இருந்தது.

**சூளாமணி**

போதனத்திறைவன் காண்க விரதநூபுரத்தை யாளுங்
காதுவேன் மன்னனோலை கழலவன் றனக்கு நாளு
மாதிய வடிசி லொண்கேழஞ்சன முன்னிட்டெல்லாந்
தீதுதீர் காப்புப் பெற்றுச் செல்கென விடுத்ததன்றே.

**சீவகசிந்தாமணி**

கணிபுனைந் துரைத்த வாளாற் கண்ணிய கோயிற்றன்னுண்
மணிபுனை மகளிர் நல்லார் மங்கல மரபுகூறி
யணியுடைக் கமலத்தன்ன வங்கை சேர் முன்கை தன்மேற்
றுணியுடைக் காப்புக்கட்டிச் சுற்றுபு தொழுது கார்த்தார்.

கங்கணமென்னுங் காப்புக்கட்டி மங்கலமுரசு வழங்க ஊர்வலம் வருவதற்கு தேசாலங்காரஞ் செய்து கமழ்புகையூட்டி வேற்றரசர்கள் புடை சூழ வீதிவலம் வந்து மணாளன் தன் குலமரபினோர் கோயிலாகும் புத்தமடஞ் சென்று வணங்கிக் கொள்ளுவதும் மணாளி தன் குலமரபின் கோயிலாகும் அம்மன் மடத்திற் சென்று வணங்கிக்கொள்ளுவதுமாகிய வணக்கமுற்று கலியாணமண்டபஞ்சேர்ந்து பூநூல் தரித்துக்கொள்ளுவது வழக்கமாயிருந்தது.

**சூளாமணி**

குங்குமக் குழம்பு கொட்டிச் சந்தனத்தொளிகண்கூட்டி
யங்கலுழவிரை சேற்றோடகநகர ளருசெய்து
மங்குலாய் விசும்புமூட வகிற்புகை மயங்க மாட்டி

பொங்குபொற் சுண்ணம் வீசி மணவினை புனைவியென்றான்.
முரசும் முழுவின் குழுவும் முடிசே / ரரசன் னகரார் குழுவுக் கெழுமி
விரையும் புகையும் விரவும் பகலின் / னிரையந் நெடுவீதி நிறைத்தனவே.
பிடியுங் களிறும் பிறவுந் நெரிவுற் / றடியும்மிடவா மிடமின்றிலருங்
கொடியுங் குடையுங் குளிர்கா மரமும் / முடியின் சுடரும் மிசைமூடினவே.

**சீவகசிந்தாமணி**

மடற்பனைக் குழாத்திற் பிச்சநிரைத்தன மன்னர் சூழ்ந்து
புடைக்களி நேறித் திங்கட் பொழிக்கதிர் குப்பை யன்ன
வெடுத்தெரிகவரிவீச வியம்பல முழங்கியார்ப்பக்
கடற்புடை வெள்ளஞ்சூழ காவலன் வீதி சேர்ந்தான்.

**சூளாமணி**

உலமுறை தோளினானுவகை கூர்ந்தனன்
குலமுறை வழிபடுந் தெய்வக் கோயிலை
வலமுறை வந்தனன் வரலுமாமணி
கலமுறை கதிர் நகைக் கபாடம் போழ்ந்ததே.
மௌவன் மலர்வேய்ந்து மது நாறுமணியைம்பாற்
கொவ்வைதுயில் கொண்டதுவர் வாய்க்கொடி யோடொப்பா
டெய்வமண நாறுதிரு மேனிபுரங் காக்கு
மவ்வையரோடெய்தி முதலவ்வையடி சேர்ந்தாள்.
நங்கை மணவேள்விநக ரெய்துவதன் முன்னைப்
பொங்குபுரி நூலனலர் தாமரை புனைந்தார்
மங்கல வுழைக்கல நிரைத்த மணமாட
மங்கது புகுந்தழல் வளாக்கிய வமைத்தார்.

மணமக்கள் வீற்றிருக்கும் மணவரைமுகப்பில் அரசமரத்தடியில் வீற்றிருந்து உலகநீதி ஒளிபரப்பிய நமது ஒப்பிலா அப்பன் குருசாட்சியாகுகைக்கு அரசிலைக்கால் நாட்டியும்,

3:37, பிப்ரவரி 23. 1910

வேம்பு மரத்தடியில் வீற்றிருந்து குருநாதனை சிரசில் தாங்கி உலகுக்கு நீதிவிளக்காக விளங்கி அம்பிகையென்றும், அவ்வையென்றும் பெயர் பெற்ற நமதம் மனை சாட்சியாகுகைக்கு குடி விளக்கு அமைத்தும், பஞ்சதாரை சோதி நிலையைப் பரப்புவதற்கு பஞ்சகூறு சால்களென்னும் இந்திர வருண பானைகள் அமைத்து ஓமகுண்டத்தில் அகிற்புகை சோதி வளர்த்தி மணமகளை தாய்மாமன் பாத சேவை செய்ய வைத்து மண்டபத்திற் கொண்டுவந்து மணமகள் தந்தை நீரில் தாரைவார்த்து மணமகன் கையில் பிடித்துக் கொடுப்பது வழக்கமாய் இருந்தது.

**பின்கலை நிகண்டு**

தருமராசன் முநீந்திரன் சினன் பஞ்சதாரைவிட்டே
யருள் சுரந்த வுணர்கூட்டுந் ததாகதன் ஆதிதேவன்
விரவு சாக்கையனே சைனன் வினாயகன் சினந் தவிர்ந்தோன்
அரசு நீழலிலிருந்தோன் அறியரன் பகவன் செல்வன்

**சிலப்பதிகாரம்**

பணையைந்தோங்கிய பாசிலைப் போதி / யணிதிகழ் நிழலற் வோன்றிருமொழி

**பின்கலை நிகண்டு**

மரகதவல்லி பூக மரநிழலுற்றவஞ்சி
பரமசுந்தரி யியக்கி பகவதி யம்மையெங்க
ளருகனை முடி தரித்தா ளம்பிகையறத்தின் செல்வி
தரும தேவதை பேரம்பாலிகை யென்றுஞ் சாற்றலாமே.

**மணிமேகலை**

சிந்தாதேவி செழுங்கலை நியமத்து / நந்தாவிளக்கே நாமிசைப்பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதலிவி / யேனோருற்ற விடர்களைவாய்

**சூளாமணி**

தூண்டிய சுடர்விளக்கன்ன கன்னியோ / டாண்டகை யழல்லலஞ் செய்யுமாரணி காண்டகையுடைத்தது காண்டு நாமென / வீண்டிய கதிரவ னுதயமேறினான்.

**சீவகசிந்தாமணி**

அடி மணை பவழமாக வரும்பொனா வலகு சேர்த்தி
முடிமணி யழுத்திச் செய்த மூரிக்காழ் நெற்றி மூழ்கக்
கடிமலர் மலரை நாற்றி கம்பல விதானங் கோலி
யிடும் புகை மஞ்சிற்குழ மணவரை யியற்றினாரே.
ஐந்து மூன்றெடுத்த செல்வத்தமனி மூன்றியற்றிப் பூம்பட்
டெந்திர வெழினிவாங்கி யினிமுக வாசச்செப்புஞ்
சந்தனச் சாந்து செப்புந் தண்மலர் மாலை யெய்தி
யிந்திர நீலச்செப்பு மிளயவ ரேந்தினாரே.
மன்பெரிய மாமனடி மகிழ்ந்து திசை வணங்கி
யன்பி னகலாதவினை விடுத்தலர்ந்த கோதைக்
கின்பநிலத் தியன்றபொரு ளிவையிவைநின் கோமான்
றந்தவெனச் சொல்லிநனி சாமி கொடுத்தானே.

**சூளாமணி**

மங்கையை வலத்துக் கொண்டு மாலையுங் குழலுந் தோடு
மங்கையாற் றிருத்திமாம் னடிகளைப் பணிகவென்று
செங்கயற் கண்ணிதாதை செவ்விரல் குவியப்பற்றி

பங்கயப் பழனன் னாடன் பாத மூலத்து வைத்தான்.
அங்குமுன் வளர்த்த வழலே கடவுளாக
மங்கையை மணக்குழுவின் முன்னைவரவேந்தன்
கொங்கு விரிதாரவற்கு நீரொடு கொடுத்தான்
நங்கையொடு நாண்மவரு ளாளையமடுத்தான்

மணவரையில் மணமகளை வலமாகவும், மணமகனை இடமாகவும் வைத்து அரசாணிக்கால் முன்பு வளர்த்திய சோதியை குருசாட்சியாகவும் குடவிளக்கை அம்மன் சாட்சியாகவும் சத்திய குண்டமிட்டு மணமகள் வலப்புறக் கழுத்தில் பொற்சரட்டை சுழலமாட்டி இருவருமெழுந்து அரசிலைக்கால் வலம் வந்து வடமீனென்னும் அருந்ததி நட்சத்திரத்தை மணமகளுக்குக் காண்பித்து அருந்ததியைப்போல் கற்புடையவளாக வாழும்படி நவரத்தினங்களாலும், பொன்னரிசியாலும் ஆசீர்கூறுவது வழக்கமாயிருந்தது.

**சூளாமணி**

மன்னியழல் வேழ்வியிலவற்கு வலமாகப்
பின்னியத குப்பைகள் பிடித்தவை விடுத்தாங்
கன்ன மனையாளொடெயில் வேலவனிருந் தான்
கன்னியோ டியைந்த கதிர் மாமதியமொத்தாள்.
கந்துளு மிழுங்கரிய சூழ்புகைகள் விம்ம
வந்து சுட ரேந்திவல னேசுழலமாட்டி
யந்தணனு மங்கழ லழைத்து மிக வேட்டான்
மைந்தனு மடந்தையை மனத்தின் மிக வைத்தான்.
பொங்கழல் செய் வேள்விமுறை போற்றலு மெழுந்தா
னங்கையி னணங்கினணி மேல்விரல் பிடித்து
மங்கையொடு காளைவல னாகவருகின்றான்
கங்கையோடி யைந்தவரு கார்க்கடலோ டொத்தான்.
வானநெறி யங்குவளர் சோதிவட மீனைக்

கான மயிலன்னவடன் முன்னை நணிகாட்ட
யானுமிவள் போலுலகு காணவியல்வேனோ
வீனமொடு நாணமில னோவெனவிகழ்ந்தாள்.
இடிபடு முரசிற் சாற்றி யேற்பவ ராசி கூறச்
சுடர்விடு மணியின் மாரி பொன்னொடு சொரிய வேவிக்
கடிபடு நெடியமாடங் கன்னியோ டேறினானாண்
முடி கொளு முலகமெய்து மின்டா மூர்த்திமெய்யான்.

**சீவக சிந்தாமணி**

விளங்கொளி விசும்பிற் பூத்த வருந்ததிக் காட்டியின்பால் வளங்கொளப் பூத்தகோல மலரடி கழீய பின்றை யிளங்கணை யாழியேந்த வயினிகண்டமர்ந்திருந்தான்

றுளங்கெயிற் றமுவை தொல்சீர் தோகையோ டிருந்த தொத்தான்.

மணாளியை கற்புநிலையில் நிறுத்துவதற்கு அருந்ததியைக் காட்டி மணாளனின் பாதத்தைக்கழுவி கணையாழி பூட்டிய மறுநாள் மஞ்சள் நீரினாலும், சந்தனக் குழம்பாலும் விளையாடி சுகானந்தத்திலிருப்பது வழக்கமாயிருந்தது.

**சீவகசிந்தாமணி**

அன்னப் பெடைநடுக்கி யசைந்து தேற்றா நடையாளு
மன்னர் குடைநடுக்கும் மாலை வெள் வேன் மறவோனும்
மின்னு மணிக்குடத்தின் வேந்தரேந்த மண்ணாடி
சுன்னங் கடி மலருந் துகிலுஞ் சாந்தும் புனைந்தாரே.

இவற்றிற் கூறியுள்ள விவாக சடங்குகளை ஆழ்ந்து வாசிப்பவர்களுக்கு தற்கால விவாக சடங்குகள் தெளிவாக விளங்கும். நமக்குள்ள ஒவ்வோர் கிரியா சம்மந்தங்களையும் செவ்வனே விசாரித்துணராமல் நம்மெ நாளெல்லாம் தாழ்த்தி நசுங்குரச்செய்யும் பராய

சாதியார் மதங்களைத் தம்மதமெனக் கொண்டு மயங்கி நிற்கும் அன்பர்கள் இனியேனும் பராயர்களின் மதக்களிம்பை அகற்றி அவரவர்களின் மதத்தோன்றலை பூர்த்தியாக விசாரித்துணர்ந்து சற்குருவின் திருவடியைப் பின்பற்றுவார்களாக.

புத்ததரும் நூல்களாக விளங்கும் திவாகரம், நிகண்டு, வீரசோழிய முதலிய இலக்கண நூற்களிலும் சீவகசிந்தாமணி, மணிமேகலை, சூளாமணி, மங்கலத்திரட்டு முதலிய சரித்திர நூற்களிலும் புத்ததரும் அரசர்கள் முதல் வணிகர், வேளாளரென்ற மூன்று தொழிலாளருக்கும் வள்ளுவர்கள் கன்மகுருக்களாயிருந்து தன்ம கன்மங்களை நிறைவேற்றிவந்ததாகக் கூறுகின்றது.

அவைகளை அநுசரித்துவந்த குருகுலத்து அரசவம்மிச வரிசையோர்களாகிய நாமும் நாளதுவரையில் வள்ளுவர்களை விடாது தன்மகன்மங்களை நிறைவேற்றுவதுடன் அரச சின்னங்களாகும் புத்ததரும் விருதுகளையும், கிரியா சம்மந்தங்களையும் விடாது நிறைவேற்றிவருகின்றோம்.

அதாவது குருகுல அரசர்களுக்குள் மங்கை பருவமடைந்து பெண்களை விவாகஞ் செய்துவந்தார்கள். அதுபோல் நாமும் பருவமடைந்த பெண்களை விவாகஞ் செய்துவருகின்றோம். அவர்கள் சாதகவோலைப் பார்ப்பதுடன் தேக பொருத்தமும் பார்த்து விவாகம் நடத்தி வந்தார்கள். நாம் சாதக வோலை ஒன்றை மட்டும் பார்த்து தேகபொருத்தம் பாராது கறுப்பு சிவப்பென்னும் அழகு பொருத்தம் பார்த்து விவாக முடிந்த நாலைந்து தினத்துள் கலகத்தையும், துக்கத்தையும் பெருக்கிக் கொள்ளுகின்றோம்.

3:38; மார்ச் 2, 1910 –

அவர்கள் ஊர்வலம் வருவதுடன் கோவில் வலமும் வந்து மணவரையிற் பூநூல் தரித்துக் கொள்ளுவார்கள். அதுபோலவே நாமும் ஊர்வலம் வருங்கால் அம்மன் கோவிலை வலம் வந்து மணவரையிற் பூநூல் தரிப்பது வழக்கமாயிருக்கின்றது. அவர்களுக்குப் பெண் நியமனமானவுடன் கையிற் கங்கணங் கட்டுவது வழக்கமாயிருந்தது.

அதுபோலவே நாமும் விவாக காலங்களில் கங்கணங்கட்டி வருகின்றோம். அவர்கள் ஊர்வலம் வருங்கால் வெள்ளை யானை, வெள்ளைக்கொடி, வெண்குடை, வெண்சாமரை முதலிய பதிநெட்டு விருதுகளுடன் வந்தார்கள். அதுபோலவே நாமும் வெண்பிறை முடியென்னும் வெண்பிறைப் பாகை, வெண்ணங்கி, வெள்ளைகுதிரை வெள்ளைக்குடை, வெண்சாமரை முதலிய விருதுகளுடன் ஊர்வலம் வருகின்றோம் அவர்கள் தங்கட் பெண்ணைத் தாய் மாமன் பாதத்தில் விழச்செய்து மணவரைக்குக் கொண்டுவருவது வழக்கமாயிருந்தது. அதுபோலவே நாமும் தாய்மாமன் பாதத்திற் பெண்ணை விழச் செய்கின்றோம்.

அவர்கள் அரசாணிக்கால், குடவிளக்கு, பஞ்சவர்ணப் பானைகள் முன்பு ஓமகுண்ட சோதியை வளர்த்து அதன் சாட்சியாக மாலையிடுவது அல்லது பொற்சாட்டில் பொட்டுக்கட்டுவது வழக்கமாயிருந்தது. அதுபோலவே நாமும் அரசிலைக்கால் நாட்டி, குடவிளக்கிட்டு பஞ்சவர்ண பானைகளமைத்து ஓமகுண்ட சோதியை வளர்த்து நமது எழிய நிலமைக்குத் தக்கவாறு நூல் சரட்டில் (தாலி) என்னும் ஓர் மங்கல்யச் சின்னத்தைக் கட்டி வருகின்றோம்.

அவர்கள் மங்கல்யம் முடிந்தவுடன் நவரத்தினங்களாலும் பொன்னரிசியாலும் ஆசீர் கூறி அருந்ததி என்னும் வடமீனைக் காட்டி ந்தார்கள். பராய மதஸ்தர்களால் நாம் நசுங்குண்டு எழிய நிலமைக்கு வந்துவிட்டபடியால் நவரத்தினங்களுக்கு பதிலாக பலவருணபுட்பங்களும் பொன்னரிசிக்கு பதிலாக மஞ்சட்கலந்த அரிசியுங் கொண்டு அசீரிட்டு அருந்ததியைக் காட்டிவருகின்றோம்.

அவர்கள் விவாகமுடிந்த மறுநாள் பெண்ணும் பிள்ளையும் பொற்குடங்களில் மஞ்சள் நீரும் சந்தனக்குழம்புங்கொண்டு நீராடி வந்தார்கள். அது போலவே நாமும் மட்குடங்களில் மஞ்சள் நீர்க்கொண்டு விளையாடி வருகின்றோம்.

இவ்வகைக் கிரிகைகளின் அந்தரார்த்தமும், மணவரையிற் பெண்ணும் பிள்ளையும் கொடுக்கும் சத்தியவாக்குபாடுகளும் பூர்வத்திலிருந்த தன்மகன்ம குருக்களாகிய வள்ளுவர்கள் புத்த தருமங்களைத் தழுவி நீதிவழுவா ஒழுக்கத்திலும் சீலத்திலும்

இருந்த காலத்தில் சத்தியதருமங்களையும் கிரியா சம்மந்தங்களையும் விளக்கிவந்தார்கள். தற்காலத்திலுள்ள வள்ளுவர்கள் பராயர் மதாசாரங்களைத் தழுவி ஒழுக்கமும் சீலமும் கெட்டு பொய்ப்பிராமணர்களைப் போல் பொருளாசை மேலிட்டு பராயர்கள் போதனைக்குட்பட்டு மதவித்தியாசமானதுமன்றி சாதி வித்தியாசமும் ஏற்படுத்திக்கொண்டு நமது வீடுகளில் சாப்பிடாமல் தங்கள் சாதியை உயர்த்திக்கொண்டு நமது கருமக்கிரியைகளை மட்டும் அதினந்தரார்த்தம் உணராது நடத்திவருகின்றனர். இத்தகைய வள்ளுவர்கள் புத்ததருமத்தைத் தழுவியிருந்தகாலத்தில் களங்கமற்ற நெஞ்சினர்களாய் நம்முடன் கலந்து புசித்து வந்ததாக அடியிற் குறித்துள்ள சரித்திர நூலால் விளங்குகின்றது.

**மங்கலத்திரட்டு**

கொள்ளு நெய்தயிர் பாலுமின்னமு துண்டபாளித சோறுடன்
பள்ளு காய்கனி சீனிதேனு கர்பாகுமற்று பணித்தமும்
வள்ளுவர்க் குணவூட்டி வட்டினை மாடு பொன் சிலையீய்ந்தனன்
உள்ளமெய்ப் புகழுற்ற ராயனுயர்ந்த கார் நகர் சீயனே.

புத்ததரும் நிலை வழுவி பராயர் மதத்தைத்தழுவியவர்கள் போதனைக்குட் பழகி நம்மைத்தாழ்ந்த வகுப்பாக்கித் தங்களை உயர்த்திக்கொண்டது முதல் நாளுக்குநாள் வள்ளுவர் குலம் நசிந்து சீலமு மறந்து சிறப்புங் குறைந்து வருகின்றார்கள்.

புத்ததரும அரசர்களின் சின்னங்களையும் ஞானிகளாகிய சமணமுனிவர் களின் சின்னங்களையும் திருவள்ளுவ சாம்பவனார் தானியற்றியுள்ள

ஞானவெட்டியில் தெளிவாகக் கூறியிருக்கின்றார்.

**ஞானவெட்டி**

பூனூல் தரித்துக்கொள்வோம் பூதம் பொறியுமை
ம்புலனையு மடக்கிக்கொள்வோம்
வேணவிருதுகளும் உசிதமாய் வெண் குடை
வெண்சாமரையும் பிடித்துக் கொள்வோம்
வானவர் முனிவர்தொழும் வெண்விசிரி மரகத
குண்டலமுங் கவசங்களும்
ஞானப்பிரகாச வொளி நிறைந்த பரநாதன் றன்
னடிகளை நிதந் துதிப்போம்.

எனக் கூறியுள்ள ஞான வெற்றியெனும் நூல் ஏற்பட்டக் காரண மென்னவென்றால் தற்காலம் விசுவபிரம் வம்மிசத்தோரென்றும், கம்மாளரென்றும் வழங்கும் படியானவர்களுக்கும், வேஷப்பிராமணர்களுக்கும் குருபட்ட தருக்கம் நேரிட்டதுபோல் 1,400 - வருடங்களுக்கு முன்பு புத்த தருமங்களைச் சார்ந்து தன்மகன்மங்களை நிறைவேற்றி வந்த வள்ளு

அரசர்கள் முதல் வணிகர்கள் வேளாளரென்ற மூன்று தொழிலாளர்களுக்கும் - கன்மகுருக்களாயிருந்து செய்துவந்த கிரியைகளை பௌத்த பிராமணர்களைப் போலவேஷமிட்டுக் கொண்டவர்கள் செய்யும்படி ஆரம்பித்த காலத்தில் இவர்களுக்கும் அவர்களுக்கும் வாதுகள் நேரிட்டு வள்ளுவர்களுக்குள்ள களங்கமற்றச் செய்கையால் சோர்வடைந்தும் வேஷப் பிராமணர்களுக்குள்ள வஞ்சகச் செய்கையால் அரசர் வணிகர் வேளாளரென்ற முத்தொழிலாளரையும் தங்கள் வயப்படுத்திக்கொண்டு வள்ளுவர்களையும், அவர்களைச் சார்ந்த அரசர்களையும், ஞானகுருக்களாகிய சமண முனிவர்களையும் கொன்றுப் பலவகைத் துன்பங்களையுச் செய்ததுமன்றி தற்காலம் திருப்பதி, மாவலிபுரம், சிதம்பரம், ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், புதுக்கோட்டை மற்றுமுள்ளப் பூர்வ இந்திரவிஹாரங்களையும் தங்கள் வயப்படுத்திக்கொண்டு பூர்வம் இத்தேசத்தில் தொழில்களுக்கென்று வகுத்திருந்தப் பெயர்களை சாதிகளாக ஏற்படுத்தி அதில் தங்களை உயர்ந்தசாதிப் பிராமணர்களென வகுத்துக் கெ ண்டு - வள்ளுவர்களையும் அவர்களைச்சார்ந்த புத்த தருமசீலர்களையும் தாழ்ந்த சாதிப் பறையர்களென வகுத்து இழிவு கூறிவந்த காலத்தில் இஞ்ஞானவெற்றி நூல் ஏற்பட்டது. இந்த ஞானவெற்றி

யெனும் நூலை தற்காலம் அச்சிட்டவர்கள் பராயமதஸ்தர்களாகையால் தங்கள் மனம்போனவாறு கிறிஸ்துமதத்தைக் கண்டித்தும் செத்ததோர் மாடெடுப் போமென்றும் கட்டையும் அடுக்கிக்கொள்ளுவோம் என்றும் அவரியற்றியது போல் (217) பொய்ப் பாடல்களை இயற்றி அதிற் சேர்ந்து அச்சிட்டிருக்கின்றார்கள். இவைகள் யாவையும் நமது சங்கத்தாரால் சுத்தப்பிரிதிகளாக அச்சிட்டு கூடிய சீக்கிரத்தில் வெளியிடப்படும். இந்த சரித்திரங்களை அநுசரித்து சென்னை தேவனாம்பேட்டையில் வசித்துக் காலஞ்சென்ற ம-அ-அ-ஸ்ரீ வீ. அயோத்திதாஸ ' கவிராஜ பண்டிதரவர்கள் இயற்றியுள்ள,

**சீட்டுக்கவி சுருக்கம்**

ஆதிச்சிறந்தவனை பறையனென் பேசுவ
தகைந்தை வாய் மதமல்லவோ
அந்தணர் தமிழரையு மடுமைகொண்டுக்
ககனமாண்டப் பிரபோத சிம்மம்
அவனியிற் பதினெட்டு விருதுடைதீட்டிலா
னழகு முன்னூல் பூண்டவன்
அவைவென்ற வெள்ளானை யேறிப்பிரதிட்டைவரு
மகழங்கஞான வீரன்.

எனவும் சென்னை புரசவாக்கத்தில் வசித்துக்காலஞ்சென்ற ம-அ-அ-ஸ்ரீ ஏகாம்பரப்புலவரவர்களியற்றியுள்ள,

**கீர்த்தனை சுருக்கம்**

சகலவிருதும் பெற்ற சத்துவசீலரை
பகலிற் பறையரெனப் பகட்டும் பாதகர்க்கு
இகத்து சுகமதற்று பரத்திற் பவங்களூற்று
நுகத்துத் தடிகளேற்று நொய்வர்நொய்வர்மிகு.

3:39; மார்ச் 9, 1910 –

இத்தகைய பூர்வ சரித்திரங்களை மறந்து பராயர் மதவிசாரிணையிலும் அவர்கள் செயலிலும் பழகி தன்மகன்ம குருக்களென விளங்கும் வள்ளுவர்கள் மணவரையில் உட்கார்ந்து தன்மகன்ம குருக்களின் செயல்களைச்செய்து வருகின்றார்கள். அதாவது, புருடர்களுக்கு உத்தம குணத்தையும், பெண்களுக்கு பத்மினி குணத்தையும் பெருக்கி வாழ்க்கைத்துணை நலங்காட்டும் மந்திரங்களை மறந்து (சுக்கிலாம்பரதரம்) தேங்கா கொண்டுவா, (சசிவர்ணம்) வாழைப்பழம் கொண்டுவா, (அட்சயா நமா) தட்சணைக் கொண்டுவா, (பிரபவாநமா) தாம்பூலம் கொண்டுவா வெனத் தங்கள் வரவைப் பார்த்துக்கொண்டு போய்விடுகின்றார்கள்.

தன் மகன்ம குருக்களாகிய வள்ளுவர்கள் மணவரையில் மணமக்களை நிலம் பெறச் செய்து ஓமகுண்டத்தில் அகில், சந்தனம் தக்கோல முதலிய கந்த சுள்ளிகளிட்டு, பசுநெய்விட்டு சோதியை வளர்த்து, மணமகள் கரத்தில் நவதானியங் களைக் கொடுத்து பெண்ணை யாதொருகுறைவுமின்றி நடத்துவதற்கு தன்மகன்ம மந்திரஞ் சொல்லப்போகின்றேன் அதைக் கவனித்து என்னுடன் சொல்லி தானியத்தை சோதியிலிட வேண்டுமென்று எச்சரித்து மணமகனை நோக்கி இப்பெண்ணை இன்றுமுதல் என் மனைக்கும் என் சுகத்திற்கும் ஆளாக்கிக் கொள்ளப்போகின்றேன், இவளுக்கு யாதாமொரு துரோகமும் நான் செய்யமாட்டேன், இவளையன்றி நான் வேறு இஸ்தீரிகளை இச்சிக்கமாட்டேன், இவளுக்கு சுகபூஷணங்களை என்னாற் கூடியவரையிற் செய்து சுகமாக பாதுகார்ப்பேன், இவளுக்குண்டாகும் பிணி வாதைகளை எனக்குண்டாகும் வாதை போல் எண்ணி சுகமடையச் செய்வேன், என் அறிவை மயக்கும் கள் முதலிய லாகிரிவஸ்துக்களைக் குடித்து இவளை மனநோகச் செய்யமாட்டேன், அன்னியர்களை வஞ்சித்தும் அவர்கள் பொருட்களைக் களவு செய்தும், இவளை போஷிக்காமல் என்தேகத்தையும் மனத்தையும் வருத்தி சம்பாதித்து இவளை போஷிப்பேன், பொய்யான வார்த்தைகளைச் சொல்லி இவளை வஞ்சிக்க மாட்டேன், சீவப்பிராணிகளைத் துன்பப்படுத்தி அதினாற் பொருளை சம்பாதித்து இவளை போஷிக்கமாட்டேன். இவளுக்கு வேண்டிய சுகங்களுக்குப் புருடனாகவும், காப்பாற்றுவதில் காவலாளியுமாக இருந்து இவளை அன்புடன் ஆதரிப்பேன். இதுவே

சத்தியம் சத்தியம், சத்தியமென ஒவ்வொரு வார்த்தைகள் முடியும் போதும் நவ தானியத்தை சோதியிலிடச்செய்து புருடனை உறுதிமொழி கூறவைப்பர்.

பெண்ணின் கரத்தில் நவதானியத்தைக் கொடுத்து இன்றைய திகதியில் என் தந்தையானவர் எனக்கு அருகிலிருப்பவரை பத்தாவாக நியமித்து அவருக்கு என்னை தத்தஞ் செய்துவிட்டபடியால் இன்று முதல் இவரையே என் தெய்வமாகவும் என் குருவாகவும் எண்ணி என்மனைத் தொழிலை நடத்திவருவேன். இவர் வாழும் இல்லத்தை மடமாகவும், இவரை தெய்வமாகவும், இவருக்குச் செய்யும் பணிகளை நற்கிரியைகளாகவும், இவருக்கு வட்டிக்கும் பதார்த்தங்களை நெய்வேத்தியங்களாகவும், இவரை

சுத்திகரிக்கச்செய்யும் ஏவலை தூபதீபங்களாகவும் பாவித்து நடத்திவருவேன். இவரை தெய்வமாக பாவிப்பதை மறந்து வேறொரு காணாத் தெய்வத்தை சிந்திக்க மாட்டேன். இவரைக் கண்குளிரப் பார்ப்பதை மறந்து அன்னிய புருடர்களை என் தலை நிமிர்ந்து பார்க்கமாட்டேன். என் மனைத்தொழில்களை மறந்து வாசற்படி கடக்கமாட்டேன். அண்டைவீட்டு கலகச்சொல் அயல்வீட்டுக் கலகச்சொற்களாகும் நெறுப்பைக் கொண்டுவந்து என்வீட்டிற் கொளுத்தமாட்டேன். என்வீட்டிலுள்ள கலகச் சொற்களாகும் நெறுப்பை அயல் வீடுகளிற் கொண்டுபோய் எரியவிட மாட்டேன்.

அன்பான எண்ணத்தையும், சாந்தமான வார்த்தைகளையும் ஈகையுள்ள தருமச்செயல்களையும் மனையில் நடத்திவருவேன். மாமன் மாமி மாதுலன் மாதுவி இவர்களை மேன்மெயாக பாவித்து அன்புடன் ஏவல் செய்துவருவேன். அருந்ததி யென்னு மெமதம்மாள் தன் கணவனாகிய வதிட்டரை தெய்வமாக பாவித்து அவருக்குச் செய்யும் மனைத்தொழிலில் சாந்தம், ஈகை அன்பென்னுங் கற்புநிலையைப் பெருக்கிய பதிவிரதத்தினால் நாளதுவரையில் நாம் கொண்டாடும் நீதியொளியாய்ப் பிரகாசிப்பது போல் யானும் என்னாற் கூடியவரையில் பதிவிரதத்செயலால் கற்புநிலை நின்று என் பத்தாவாகிய இவரைக் கனஞ்செய்வேன். இதுவே சத்தியம் சத்தியம் சத்தியம் என ஒவ்வோர் வார்த்தையின் முடிவிலும் தானியத்தை சோதியி லிடும்படிச் செய்து உறுதிமொழிக் கூறவைப்பர்.

இவ்வகையான வாக்கு தத்தங்களை தன்ம கன்ம குருக்கள் ஏன் நிறைவேற்றி வந்தார்ளென்றால், புத்த தருமத்தைச் சார்ந்த புருஷர்கள் யாவரும் சற்குருவை தெய்வமெனசிந்தித்து பாவச்செயல்களை அகற்றி நன்மெக்கடைபிடித்து தங்கள் இதயத்தை சுத்திசெய்து வந்தார்கள்.

**வீரசோழியம்**

அருள்வீற்றிருந்த திருநிழற்போதி / முழுதுணர் முனிவனிற் பரவுதுந் தொழுதக வொருமனமெய்தி யிருவினைப் பிணிவிட / முப்பகை கடந்து நால்வகை பொருளுணர்ந் தோங்குநீ ருலகிடை யாவரு / நீங்க வின்பமொடு நீடுவாழ்கெனவே.

**சூளாமணி**

தன்னலாற் றெய்வ பேணார் சார்ந்தவர் தானுஞ் சார்ந்தார்க்
கென்னலா விவருக்குற்றா ரில்லையென்றிரங்கு நீரான்
பொன்னலா நிதியமாறப் பொழிந்திடுகின்ற பூமி
மன்னலா மவனையன்றி வணங்குவதில்லை மன்னா.

புத்ததருமத்தைச் சார்ந்த இஸ்திரிகள் யாவரும் தங்கள் புருஷர்களை தெய்வமாகச் சிந்தித்து மனைத்தொழில் நடத்தி கற்புநிலை நின்று தங்கள் பத்தாவைக் கனஞ் செய்து வந்தார்கள்.

3:40; மார்ச் 16, 1910 –

**மணிமேகலை**

தெய்வந் தொழா அள் கொழுநற்றொழுமவள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்

புத்த தருமத்தைச்சார்ந்த புத்திரர்கள் யாவரும் தங்கள் தாய் தந்தையரை தெய்வமென சிந்தித்து கலை நூல்களைக் கற்று சுயக்கியான நிலைனின்று உலகோபகார நித்தியச்செயல்களை செய்துவந்தார்கள்.

**அவ்வை நீதிவாசகம்**

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

தந்தையையும் தாயையும் தெய்வமென சிந்தித்த போதிலும் அவர்கள் பேரில் தங்களன்பை லயஞ்செய்து அவர்களை எக்காலும் தொழுது வருவதே நன்மெயாம். இதையே இரண்டாவது வாசகசீருள்

ஆலயந்தொழுவது சாலவுநன்று எனக் கூறியுள்ளாள்.

இதின் புத்ததரும அந்தரார்த்தம் உணராது கல்லையும் கட்டையையும் செம்பையும் எக்காலுந் தொழுது வருவது காலக்கேடேயாம். தந்தை தாயரைத் தெய்வமென சிந்திப்ப துடன் அவர்கள் மீதுள்ள நன்றியறி தலென்னும் அன்பை எக்காலும் லயம்பெறச் செய்வதே அதன் பயனாம். இதையே தந்தைதாய்ப் பேண் என வற்புறுத்திக் கூறியுள்ளார்.

புருடர்களையும், ஸ்தீரிகளையும், புத்திரர்களையும் நீதி நூல் ஒழுக்கங்களில் நிறுத்தி அவர்கள் சுகசீவிகளாக வாழ்வதற்கு தன்மகன்ம குருக்களாகிய வள்ளுவர்கள் முன்னின்று நற்கிரியைகளை விளக்கி வந்தார்கள். அவ்வகை தன்மகன்மங்களை நிறைவேற்றிவந்த வள்ளுவர்கள் தற்காலத்தில் தாராபலன், சந்திரபலனைக்கொண்டு இராசிபொருத்தம், கணபொருத்த மட்டிலும் பார்த்து பூர்வகாலத்தில் ஏழு செறுப்புத் தேயுமளவும் சுற்றி பெண்பார்க்கும் தேகபொருத்தத்தை மறந்து விவாககாரியங்களை நடத்தி வருகின்றனர். தாய்தந்தையர் பிள்ளைக்குப் பெண்பார்க்கும்போது வள்ளுவர்களை அழைத்துப் போவதையும் நாளுக்குநாள் மறந்துவிட்டார்கள். வள்ளுவர்களும் தேக பொருத்த சாஸ்திரங்களை மறந்து காரிய பொருத்தங்களை கைக்கொண்டார்கள்.

தேகபெருத்த லக்ஷணங்களாவன

| ஆண்பால் | பெண்பால் |
|---|---|
| குதிரை சாதி 16 | அத்தினி 16 |
| இரிடப் சாதி 12 | சங்கினி 12 |
| மான் சாதி 6 | சித்தினி 6 |
| முயல் சாதி 6 | பத்மினி 6 |

ஆகிய தேக பொருத்தந் தழுவிய குணம், குறி, நடை, நகை, தொனி, விழி முதலியவைகளை உணராது கறுப்பு சிவப்பென்னும் அழகு பொருத்தமும், தனவான் வீட்டின் பெண், பெரிய வீட்டுப் பெண்ணெனன்றும், ஏழையின் வீட்டின் பெண் சிறியவீட்டுப் பெண்ணெனன்றும் அந்தஸ்து பொருத்தமும் பார்த்து விவாகஞ் செய்வதில் குறிபேதத்தால் புத்திரப்பேரற்றும் மேகரோக முற்றும் தேகங்கள் நாளுக்குநாள் ஈனதிசை அடைவதுமன்றி விவாகம் முடிந்த நாலு நாளுள் சிலர் நற்குறி காணவில்லை என்னும் ஓர் கவலையினால் பெண்ணை வியபசாரியெனத் தூற்றுவதும், பிள்ளையை துக்கத்தில் ஆழ்த்துவதும், பணத்தைப் பாழாக்குவதுமாகிய பாரத்தில் ஆழ்ந்து விடுகின்றார்கள். தேக பொருத்தங்களை நன்குணர்ந்து விவாகம் செய்வார்களாயின் பெண்ணும் பிள்ளையும் வியாதியின்றி சுகதேகிகளாய் சுற்புத்திரரைப் பெற்று நீடு

வாழ்வார்கள். பெண்களும் தங்கட் புருடர்களை தெய்வமாகப் பாவித்துக் கனமடையச் செய்வார்கள்.

**கூர்மபுராணம்**

கற்பிற் கினியவ ருந்ததியார் கண்ணுமனமுந் தனிக்கவரும்
பெற்பிற் குயர்வா னுருப்பசியாப் புனித
வொழுக்க முடையாளாய்
வெற்போ ரணுவா மெனப்புடைத்துச் செம்மாந்தெழுந்து வீங்கு முலை
அற்போருருவு கொண்டனைய வணங்கை விழைவின் மணம் புரிக.

**வீடுமர்வாக்கு**

தன்கணவனைக் கடவுளென்று பலதன் மெய்
மன்முறை திருத்தி வழி பாடுகணிரைப்பேன்
நன்முறை யவர்க்கினிய நாடி யவை தேடி
யன்பொடு சமைத்தடி சினல்குவனடுத்தே.
தலைவனுந் தலைவியன்பார் தங்களிற் பக்கமன்பு நி
லைமன மொருமெயோடு நீணிலந்தன்னில் வாழ்தல்
பலனெவை யென்னில் வானிற் பரமமெய் யருள் பேரின்ப
நலனு நீ டூழிகால நன்கொடு வாழுவாரே.

**முடிவுரை**

ஒரு மனிதன் தன் தகப்பனுக்கு நூறு ரூபாய் சம்பாத்தியமுள்ள காலத்தில் புசிப்பிலும் உடையிலும் இல்லத்திலும் சுகபோகங்களை அனுபவித்து வருவான். தன் தகப்பன் இறந்தவுடன் தனக்கு சொத்துக்கள் யாதுமின்றி பத்து ரூபா சம்பாத்தியம் உண்டான போது முன் சுகங்கள் யாவையும் மறந்து தன் சம்பாதனைக்குத் தக்க சுகத்திலிருப்பான்.

அதுபோல் நமது மூதாதைகளின் புத்தரும் அரசாங்கம் இருக்குமளவும் குடை செடி விருதுகளாகிய பற்பல சின்னங்களுடன் ஆனந்தங் கொண்டாடி வந்தோம். தற்காலம் பராய மதஸ்தர்களின் வஞ்சினத்தால் நமது அரசபோகங் களும் குருப் பிரதாபங்களும் நசுங்குண்டு எழிய நிலையிலிருக்குங்கால் பூர்வ ஆடம்பரங்களைச் செய்வதில் மேலுமேலும் எழியநிலையுற்று துக்கவிருத்தி அடைகின்றோம்.'

இனியேனும் அவ்வகை ஆடம்பரச் செயல்களை நிறுத்தி குலகுருவின் போதனா ஒழுக்கத்தினின்று காலத்திற்கும் செயலுக்குந் தக்கவாறு நமது விவாக வீண் சிலவுகளை சுருக்கி சீலத்தையும் ஒழுக்கத்தையும் பெருக்கவேண்டு மென்பது சங்கத்தோரின் நன்னோக்கமாதலால் இதனை வாசித்துணரும் ஒவ்வோர் அன்பர்களுந் தங்கள் யுக்திக்கு எட்டியவரையில் விவாக சீர்திருத்தங் களையும், விவாகம் முடிந்தவுடன் மணமக்கள் கடனென்னும் கவலையில்லாமல் சுகத்தை அனுபவிக்கும் பாதைகளையும் எழுதி சங்கத்திற்கு அனுப்புவார் களானால் அவைகளை ஒருங்கு சேர்த்து நமது குலத்தாரின் பெருங்கூட்டமிட்டு பெருந்தொகையோர் சம்மதப்படி விவாக சீர்திருத்தம் செய்துக்கொள்ளலாம்.

திருப்பதி, மாவலி புரம், சிதம்பரம், ஸ்ரீரங்கம், காஞ்சிவுரம், திருவாளூர் மற்றமுள்ள பூர்வ கட்டிடங்கள் யாவும் புத்தரும் சமண முநிவர்களின் மடங்களா அல்லது தற்கால நூதன மதஸ்தர்களின் கட்டிடங்களாவெனத் தெரிந்துக் கொள்ள விருப்பமுடையவர்கள் நமது கருணை தங்கிய அரசாங்கத்தாரால் வித்தையிலும் புத்தியிலும் மிகுத்த ஒவ்வோர் ஆங்கிலேயர்களை நியமித்து இத்தேசத்திலுள்ள பூர்வக் கட்டிடங்களைத் தோண்டியதின் விருத்தாந்தங்களை தெரிவிக்கும்படி விட்டிருந்ததில் அவர்கள் ஒவ்வொருவரும் தங்களாற் கூடியவரையில் அங்கங்கு புதைக்கப்பட்டிருந்த சிலாசாசனங்களையும் சிலைகளையும் கண்டெடுத்து அப்படங்களுடன் சரித்திரங்களையும் விவரித்து புத்தகங்களையும் அச்சிட்டிருக்கின்றார்கள். அவர்கள் யாவரையும் எழுமூர் மியூசியம் புத்தகசாலையிலும், அடையாறு தியாசபி புத்தகசாலையிலும் சென்று வாசித் துணர்ந்துக் கொள்ளலாம். ஆயினும் பொய்ப் புராணக் கட்டுக்கதைகளை புலம்பித்திரியும் போலிப் புலவர்களுக்கு பூர்வ சரித்திரங்களை விளக்குவது செவிடன் காதில் சங்கு ஊதுவது போலாம்.

# 45. கிறீஸ்து நமக்காகப் பாடுபட்டார்

வினா : நமது நேயராம் கிறீஸ்தவர்கள் கிறீஸ்துவானவர் நமக்காகப் பாடுபட்டார். நம்முடைய பாபங்கள் நீங்கிவிட்டனவென்று கூறுகின்றார்கள். அவர்கள் வாக்கை மறுத்து முன் செய்துள்ள பாவங்கள் நீங்கிவிட்டதா இனி செய்யும் பாவங்களும் நீங்கிவிடுமாவென்று வினவுங்கால் யாதொரு விடையுமின்றி திகைக்கின்றார்கள்.

வி. ஏபிராம், குண்டூர்

விடை : முன் செய்துள்ள பாவத்திற்காக ஒருவர் தோன்றி பாடுபட்டாரென்னும் உறுதி உள்ளத்தில் லயிக்குமாயின் பின்னும் பாவங்களுக்காய் மற்றொருவர் தோன்றி பாடுபடுவார் என்னும் தைரியத்தால் தினேதினே பாவங்களை அஞ்சாது செய்வதற்காகும்.

ஆதலின் அவரவர்கள் அறியாது செய்த பாவத்திற்காய் ஒருவர் வந்து பாடுபட்டார் என்பது வீண்மொழியேயாம்.

கிறீஸ்து நமக்காகப் பாடுபட்டார் என்னும் மொழியின் அந்தரார்த்தம் யாதெனில், எருசலேமிலுள்ள விவேகிகள் கிறீஸ்துவின் மகத்துவத்தைப் பற்றிப் பேசுங்கால், அவர் தான் கண் கண்ட ஞானத்தின் காட்சியை தன் மட்டிலும் அனுபவித்துக் கொள்ளாது கருணைகொண்டு நமக்கும் அந்த பேரானந்த ஞானத்தை ஊட்டி ரட்சிக்க முயன்றபடியால் விவேகமற்றோர்களாகிய சதிசேயரும், பரிசேயரும் அவரைத் துன்பப்படுத்திக் கொல்ல ஆரம்பித்தார்கள். அதன் செயல் கொண்டு கிறீஸ்து நமக்காகப் பாடுபட்டார் என்று கூறியுள்ளார்கள்.

தான் கண்டு களித்த ஞானத்தைத் தன் மட்டிலும் அனுபவித்துக் கொள்ளாது நமக்கும் போதிக்க ஆரம்பித்தபடியால் இப்பாடுவந்து நேர்ந்தது. ஆதலின் நமக்காகப் பாடுபட்டாரென்னு மொழி நாளது வரையில் நிறைவேறி வருகின்றது. ஒருவன் செய்த பாவத்தை மற்றொருவர் நீக்கமுடியாது அவனவன் செய்த பாவத்தை அவனவனே அனுபவித்துத்தீரல் வேண்டும். “அளந்ததே அளக்கப்படு” மென்பது நீதிமொழியாம்.

3:38; மார்ச் 2, 1910 -

# 46. புத்ததன்மமும் ஆரியமதமும் ஒன்றாமோ

ஒருக்காலும் ஆகாவாம் காரணமோவென்னில், புத்ததன்மமென்பது பாலிமொழி சமஸ்கிருதத்தில் சத்தியதருமமென்றும், திராவிடத்தில் மெய்யறமென்றும் கூறப்படும். இத்தியாதி சிரேஷ்ட நிலையைப் பெற்றுள்ள புத்ததன்மத்துடன் மிலேச்சமாம் ஆரிய மதத்தை ஒப்பிடுவது ஒருக்காலும் பொருந்தாதென்று கூறினோம்.

ஆரியரென்பதற்குப் பொருள் மிலேச்சர்களென்று திவாகரத்திலும், நிகண்டிலும் பொருட்கூறியுள்ளவற்றிற்குப் பகரமாய் சூளாமணி யென்னும் பூர்வ காவியத்தில் இம்மிலேச்சர்கள் வந்து குடியேறியுள்ள இடத்தையும், அவர்கள் குணாகுணக் குறிகளையும், நாணமற்றச் செயல்களையும் பரக்க வரைந்து வைத்துள்ளார்கள். அத்தகைய மிலேச்சர்களாம் ஆரியர்கட் செயலுடன் புத்ததன்மத்தை ஒன்றுபடுத்துவது பொருந்தா வீண்பொருத்தமேயாம்.

புத்ததன்மமாம் மெய்யறமானது உலகெங்கும் பரவி உலகிலுள்ள விவேகிகள் யாவராலும் கொண்டாடி வந்தபோதிலும் அந்த சத்தியதருமத்தின் காட்சியும் அநுபவமும் சித்தார்த்தி திருமகன் பிறந்து வளர்ந்த குருகுல வம்மிஷவரிசையோராம் சாக்கையர்களுக்கே தெள்ளற விளங்குமன்றி ஏனையோர்க்கு எட்டுவது கஷ்டமேயாம். பூர்வ புத்ததன்மமானது சாதிபேதமென்னும் சத்துருபேத மில்லாமல் வாழ்ந்து வந்தது போல் குருகுல வம்மிஷவரிசையோரும் சாதி பேதமென்னும் ஒற்றுமெய்க் கேடில்லாமல் களங்கமற்ற நெஞ்சினர்களாக வாழ்ந்து வருகின்றார்கள். அத்தகையக் களங்கமற்றோர்களுடன் களங்கமுள்ளோர் சேருவார்கள் என்பது ஓர் சுயகாரிய தந்திரமாயிருக்கலாம்.

தங்களுக்குத் தாங்களே தொழிற்பெயர்கள் யாவையும் சாதிப் பெயர்களாக ஏற்படுத்திக்கொண்டு தங்கள் சுயகாரியங்கள் சுகமாக நிறைவேறிவருமளவும் பொய்சாதிக் கட்டுக்கதைகளுக்கு முட்டுக்கொடுப்பதற்காய் அந்த சாதி அப்படியிருக்கவேண்டும் இந்தசாதி இப்படி இருக்க வேண்டுமென்னும் கற்பனைகளை எழுதிவைத்துக்கொண்டு இளித்தவாயர்களை ஏமாற்றி வந்தார்கள். தற்கால பிரிட்டிஷ் துரைத்தன கல்வி விருத்தியால் மேற்சாதி யென்பான் யார், கீழ்ச்சாதி யென்பவன் யார், மேற்சாதி யென்பவனால் உலகத்திற்கு உண்டாகும் சுகமென்ன, கீழ்ச்சாதி என்பவனால் உலகத்திற்கு உண்டாகுந் சுகமென்ன, மேற்சாதி யென்போனுக்கு உண்டாகியுள்ள அடையாளமென்ன. கீழ்ச்சாதி யென்போனுக்குண்டாகும் அடையாள மென்னவென்று கேழ்க்க ஆரம்பித்துக் கொண்டதின் பேரில் ஆ, ஆ, நமது சாதிபேதக் கட்டுகளாகும் போய் மூட்டைகள் அவிழ்ந்துவிடுவதற்குக் காலம் வந்துவிட்டது. இனி நாம் சும்மாவிராது தாழ்ந்த வகுப்போர் யாவரையும் நமது சாதிகளுடன் கலந்துக்கொள்ள வேண்டுமென்று கலந்து சிலநாட் சென்றபின் தங்கள் காரியங்கள் கைகூடிவிடுமாயின் “பழைய குருடி கதவைத் திறவடி” என்னும் பழமொழிக்கிணங்க பழையசாதிப்பிரிவே பிரிவு, பழையசாதி ஆசாரமே அசாரமெனத் தங்களை சிறப்பித்துக்கொண்டு ஏனையோரை அடக்கும் வழியைத் தேடினும் தேடுவர்.

குதிரை வகுப்புடன் நாயையும், பன்றி வகுப்புடன் முயலையும் சேர்க்கப் பொருந்துமோ, ஒருக்காலும் பொருந்தா. குதிரைவகுப்புடன் குதிரைகளைப் பொருந்த வைக்கலாம். ஒருகாலத்தில் தங்கள் சுயப்பிரயோசனத்திற்காய் தங்களைப் பெரிய சாதியென்று உயர்த்திக்கொண்டு தங்களுக்குள் அடங்காதவர்களை சிறிய சாதியென்று பாழ்படுத்திவந்தார்கள். தற்காலம் தங்கள் சுயப்பிரயோசனம் மாறுபடுகிறபடியால் சகலசாதியோரையும் ஒன்று சேர்த்துக்கொள்ளப் பார்க்கின்றார்கள்.

ஆதலின் குருகுல வம்மிஷவரிசையோர்களாம் சாதிபேதமற்ற திராவிடர்களே, கேண்மின். தங்களுக்கு வேண்டிய சுயகாரியங்கள் கைகூடுமளவும் சாதிபேதம் உண்டென்று சாதிப்பதும் தங்கள் சுயகாரியங்கள் தவறுமாயின் சாதிபேதமில்லை யென்று சேர்த்துக்கொள்ளுவதுமாகியச் செயல்களைக் கொண்டே இச்சாதிபேதக் கட்டுக்கதைகள் யாவும் பட்டப்பகல் வேஷப்பொய்யென்று திட்டமாக அறிந்து

சத்துருக்கள் போதனைக்கு இணங்காமலும் பிரிட்டிஷ் ராஜவிசுவாசத்தினின்று மெய்யறத்தைப் பின்பற்றுங்கள். புத்த தன்மத்தையும் ஆரிய மதத்தையும் ஒன்றென்று எண்ணாதீர்கள். காலம் நேர்ந்துழில் இரண்டின் பேதாபேதங்களையும் விளக்குவாம்.

3:44; ஏப்ரல் 13, 1910 –

# 47. விதியும் மதியும்

வினா : விதி என்பது ஒன்று உண்டென்றும், அதன்படியே சகலமும் நடக்குமென்னும், மதியினால் ஒன்றும் ஆகாதென்றுஞ் சிலர் கூறுகின்றவை, “தானே தனக்குக்கரி” என்னும் நீதிவாக்கியத்திற்கு முறண்படுகின்றபடியால் அதனந்தரார்த்தம் அடியேனுக்கு விளங்கவில்லை ஆதலின் தமிழன் பத்திராதிபர் கிருபை கூர்ந்து விதி எனும் வாக்கியோர்ப்பவத்தையும் அதனந்தரார்த்தத்தையும் விளக்கி ஆட்கொள்ளும்படி வேண்டுகிறேன்.

வே.கி. மாணிக்கவேலு. செக்கண்டிராபாத்

விடை ; விதி என்பதின் பொருள், கட்டளை என்று கூறப்படும். அக் கட்டளையாகிய விதியின் முறையை ஆதிபகவனாகிய புத்தபிரான் முதனூலென்னும் பிடகத்தை வகுத்து விதிவழாதொழுகும் ஒழுக்கத்தில் விடுத்திருக்கின்றார்.

விதியாங் கட்டளையோவென்னில்: “பாபஞ்செய்யாதிருங்கள்” பாவஞ் செய்வீரேல், பலவகைத் துன்பங்களுக்கு ஆளாவீர்கள்.

“நன்மெய்க் கடைபிடியுங்கள்” நன்மெய்க் கடைபிடியாது நிற்பீரேல், தின்மெயாகி அதி தீவினைக்குள்ளாவீர்கள்.

“இதயத்தை சுத்தி செய்யுங்கள்” இதயத்தை சுத்தி செய்யாது துற்களங்கை நிறப்புவீரேல், ஓயா துக்கம் பெருகி மாயா பிறவியிற் சுழன்று திரிவீர்களென்று வகுத்துள்ளார்.

அவ்விதிகளின் பயனையே என் தலைவிதி என்றும், முன்வினை என்றும், ஊழ்வினை என்றும், முன் ஜெநநபலனென்றும், பூர்வ தீவினை என்றும் வழங்கி வருகின்றார்கள்.

அதனந்தரார்த்தமோவென்னில் தனது பேராசையால் ஒருவனைக்கெடுத்து துன்பப்படுத்திய தீவினையானது இவனை விடாது துன்பப்படுத்துவதற்கு பின்தொடர்ந்தே நிற்குமென்று கூறியுள்ளக் கட்டளையாம் விதியை உணராது செய்த தீவினையின் பயனை அனுபவிக்குங்கால் என் தலைவிதி, நான் முன்செய்த தீவினை என்று கட்டளையாம் விதிக்கு மீரிநடந்த செயலை ஓதி துக்கின்றான்.

துக்கவிருத்தி அடையுங்கால், இது என் தலைவிதி, இது நான் முன்செய்த தீவினை என உணர்ந்துக் கொண்டவன் தலைவிதியாம், ஆதிகட்டளையை மீராமலும், தீவினைகளுக்கு உட்படாமலும் இருப்பானாயின், அதன் சுகவிருத்தியால், என் தலைவிதி என்னும் சொல் நீங்கி, பூர்வபுண்ணியமென்று கொண்டாடுவான்.

ஆதலின் ஆதிபகவனது கட்டளையாம் விதியை மீரி நடந்து துக்கத்தை அனுபவிப்பவன், என் தலைவிதி, முன் செய்த தீவினை பயனென்று புலம்பித் திரிகின்றான்.

தீயவினையைச் செய்தால் தீய துன்பத்தை அனுபவிப்பாயென்னும், கட்டளையாகிய விதியானதை அனுபவிக்குங்கால் கட்டளையை மீரியச் செயலென்று உணர்ந்தும் தீவினையைச் செய்து வருவானாயின் மேலுமேலுந் துக்கத்தை அனுபவிப்பான். விதியின்படி தீவினைகளை அகற்றி நல்வினையில் நடப்பானாயின் நித்திய சுகத்தை அனுபவிப்பான். இத்தகைய செயல்களைக் கொண்டே விதியின் பயனே பயனென்று வற்புறுத்திக் கூறியுள்ளார்கள்,

ஆதிவிதி, தலைவிதி என்னும் பூர்வவினையை உணராதார்க்கு அதனந்தரார்த்தம் விளங்கவே விளங்காவாம். காலங்கள் நேர்ந்தவிடத்து இதன் கருத்தை விரிவாகக் கூறுவாம்.

3:45, ஏப்ரல் 20, 1910 -

# 48. தேக ஊரல்

வினா ; சில வைத்தியர்களும் வாதிகளும் “தன் தேகம் ஊரலற்றால் தாம்பரம் ஊரலறும்” எனக் கூறுகின்றார்கள். அதன் கருத்தை வினவுங்கால் தேகவூரல் அவர்களுக்கு விளங்கவில்லை.

ஏ. தருமலிங்கம், இரங்கூன்

விடை : "தன் தேகம் வூரலற்றால் தாம்பரம் வூரலறு” மென்னும் மொழியானது இரசவாதிகளுக்கே மொழிந்ததாகும். அதாவது அம்பரமென்னும் பொன்னானது தாய் அம்பரமாம் செம்பிலமைந்துள்ளது போல் தேய்வகமாம் தெய்வநிலை தேகமென விளங்கநிற்றலால் தேகத்துள்ள இராகத் துவேஷ மோகமென்னும் ஊரலற்ற போது தெய்வமென்னும் தேஜசும், சுயம்பிரகாசமுந் தோன்றும்.

தேகத்துள்ள இராகத் துவேஷ மோகமென்னும் திரிவூரலை அகற்றும் சாதனமுடையோர் செவிகளில் தாம்பரக் குண்டலங்களை அணிந்திருப்பினும் தேக வூரல் அறுந்துக்கொண்டே வருங்கால் செவியில் அணிந்துள்ள செம்பினூரலும் தாய் அம்பரமாம் பொன் பிரகாசமுண்டாம். அது கொண்டே இரசவாதம் செய்து கெடும் வாதிகளைக் கண்டிப்பான் வேண்டி, “செம்பதுகளிம்பதற்றால் செம்பொன்னா” மென்னு முதுமொழிக்கிணங்க தேகவூரலை அறுக்கும் பஞ்சசீலத்தில் ஒழுகுவோருக்கு திரிவூரலற்று தேவநிலை மாறுதலும், செவியிலிட்ட செம்பு அம்பரமாய் தேறுதலும் அனுபவக் காட்சியாதலின் வீணாசைகொண்டு வாதமூதாதீரென வேண திருட்டாந்த தாட்டாந்தங்களை விளக்கியுள்ளார்கள்.

# 49. அறன் செயல் விரும்பு

வினா: நமது திருவள்ளுவநாயனார் இயற்றியுள்ளத் திரிக்குறளில், அறன்வலி யுறுத்த" லென்னு மொழியின் அந்தரார்த்தம் அடியேனுக்கு விளங்காதபடியால் அதன் பொருள் காட்சிக்கும், அனுபவத்திற்கும் பொருந்த விளக்கி ஆட்கொள்ளும்படி வேண்டுகிறேன்.

க. சரவண பெருமாள், காஞ்சி

விடை : தாம் வினவிய சங்கை சாம்புனதமாதலின் இழுத்தவர்க்கெல்லாம் கம்பியாகவும், அடித்தவர்க்கெல்லாம் தகடாகவும் அகன்று நீண்டு இடங் கொடுக்கும் மொழியாதலின், எச்சமயத்தோருந் தங்கள் தங்கள் சமயத்திற்குத் தக்கவாறு பொருள்படுத்திக் கொள்ளுகின்றார்கள். அச்சமயங்களும் பூர்வ தன்மத்தினின்றே தோன்றியதாதலின் பொருளும் பொருந்துவதாகவே விளங்கும்.

அவ்வகை விளங்கினும் அந்தரார்த்தப் பொருள் அதுவாகாவாம்.

அதாவது," அற" மெனு மொழியை இல்லறமென்றும், துறவறமென்றும் இருவகையாகக் கூறப்படும்.

**வீரசோழியம் - மனையறச்செயல்**

கொடுத்தலும் அளித்தலுங் கோடலும் இன்மெயும்
ஒழுக்கத்தொடு புணர்தலும் புணர்ந்தோர் பேணலும்
வழுக்கில் பிறவு மனையற வகையே.

**துறவறச்செயல்**

துறவும் அடக்கமும் தூய்மெயுந் தவமும்
மறவினையோம்பலு மறத்தினை மறுத்தலும்
மனையினீங்கிய முனைவர்த மறமே.

இவ்வகைப் பிறிவால் ஒருவனை நோக்கி அறஞ்செய்ய விரும்பென்னில் அவன் துறவறத்தைச் செய்ய விரும்புவதா, இல்லறத்தைச் செய்யவிரும்புவதா இரண்டையுஞ் செய்யவேண்டுமென்னில் நட்டாற்றில் விட்டவனைப் போலும் இரண்டு எஜமானனிடத்தில் ஒரு ஊழியன்படும்பாடு போலும் முடியும்.

துறவறத்தையும், இல்லறத்தையும் ஒருவனே செய்யலாமென்று கூறுவதாயின் குடும்பிக்கு மாறுதலாக சங்கங்களையும், மடங்களையும் ஏற்படுத்தியுள்ள அநுபவமுங் காட்சியும் இராவாம்.

இல்லறத்தை சரிவர நடத்தியவனே துறவறத்திற்கு உரியவனென சங்கத்திற் சேர்ப்பது அனுபவமாயிருக்க ஈரறத்தையும் ஏககாலத்தில் ஒருவன் செய்வதியல்புக்கு மலைவாதலின் விவேகமிகுத்தோர் திருமொழி ஒருக்காலும் மலைவுறாதாம். “அறன் செயல் விரும்” பென்னும் மலைவில்லா மொழியையே ஆதாரமாகக் கொண்டு அறன்வலி யுறுத்தலெனக் கூறியுள்ளார்.

அதற்குப் பகரமாய்த் திருத்தக்கத்தேவர் தானியற்றியுள்ள சீவகசிந்தாமணியில் “முந்து அறன்மொழிந்த பொருள் முற்று” எனக் கூறியுள்ளார். இதற்கு ஆதாரமாகப் புத்தமித்திரனார் தான் இயற்றியுள்ள வீரசோழியத்தில்”வாடாத போதிநெறி நீழன்மேய வரதன் பயந்த அறநூ" லென்றும் மற்றும் யாப்பருங்கலக்காரிகையுள் “மனையற முந்துறவறமும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும் வினையறுக்கும் வகை தெரிந்து வீடொடு கட்டிவை யுரைத்த போதிவேந்தனும் ஆதிநாதனுமாகிய அறன் செயலை விரும்பு மென்னும் ஆண்பால் விகுதி கொண்டே நாயனாருந் தனது கடவுள் வாழ்த்தலில்,”பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீரொழுக்கம் நெறி நின்றார்

நீடுவாழ்வா" ரென்னும் அறன் செயலையே வற்புறுத்திக் கூறி புத்தேளான் செயலையும் வல்லபத்தையும் உறுத்திக் கூறுவான் வேண்டி அறன் வலியுறுத்த லென்னும் அதிகாரத்தையும் வகுத்துள்ளார்.

உலகமக்கள் ஈடேற்றத்தைக் கருதி ஈரறமோதிய ஒப்பிலா அப்பனை அறக்கடவுள் என்றும், அறவாழியானென்றும், அறப்பளீசனென்றும் அறனென்றும் வழங்கிவந்தது கொண்டு அறன் கூறியுள்ள முதநூலாம் அற நூலுக்கு வழி நூலும், சார்புநூலுங் கூறியவர்கள் அறனை மறவேலென்றும், அறன் செயல் விரும்பென்றும், அவரது நெறியில் நில்லுமென்றும், அவர் பற்றிய பற்றை பற்றுமென்றுங் கூறியிருக்கின்றார்கள்.

காரணமோ வென்னில் மெய்ப்பாட்டியல் சூத்திரம், “தீவினையை வெல்லும் அறவாழி தெய்வம் அஞ்ச” லென்றும்

அவர் பிறந்தது முதல் பரிநிருவாணமுற்ற வரையில் திரிகரணமாம் மனோசுத்தம், வாக்கு சுத்தம், தேகசுத்தமாஞ் செயலையுடையது கண்டு அறன் செயல் விரும்பென்று உறுத்திக் கூறியுள்ளார்கள்.

**வீரசோழியம்**

எறும்புகடை யானைமுத வெண்ணிறந்த வென்றுரைக்கப்
பிறந்திருந்த யோனிதொரும் பிரியாது சூழ்யோகி
யெவ்வுடம்பி லெவ்வுயிர்க்கும் யாதொன்றா லிடரெய்தி
லவ்வுடம்பி லுயிர்க்குயிரா யருள் பொழியுந் திருவுள்ளம்.
அறங்கூறு முலகனைத்துங் குளிர்வளர்க்கு மழைமுழக்கின்
திறங்கூற வரகதிருஞ் செழுங்கமல நனினான்
வொருமெய்க்க ணீரென்பா னுரைவிரிப்ப வுணர்பொருளா
லருமெய்க் ’கண் மலைவின்றி யடைந்தது நின்றிருவார்த்தை.
இருட்பார வினை நீக்கி யெவ்வுயிர்க்குங் காவலென்

தருட்பாரந்தனி சுமந்த வன்றுமுத லின்றளவு
மதுவொன்று மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும்
பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணியநின் றிருமேனி

3:47; மே 4, 1910 -

# ஒன்றுண்டாமே

1910 ஜூன் மாதம் 6 ஆம் தேதி வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகை 4 - ம் பக்கம் முப்பத்தி ஐந்தாவது வரியில் "ஸனாதன தர்மத்தின் சிறப்பு" எனும் மகுடமிட்டு கஸ்தூரி ரங்கன்,க்ஷ.ஹடு... அவர்கள் ஓர்கடிதம் எழுதியிருக்கின்றார். அதன் கருத்தோவென்னில் அவரது மதமானது சகல மதாசாரங்களையும் கிரகிக்கக் கூடிய மதமென்றும் எவ்வகை என்னில் வாலியென்பவன் தனக்கு எதிரியாகத் தோன்றுகிறவன் பலத்தைக் கிரகித்துக் கொள்ளுவது போலெனும் தாட்டாந்தமிட்டு அவ்வகைத் தங்கள் மதக்கிரகிப்பினுள் புத்தமதந் தெரியாமல் போய்விட்டதென்றும் கிறீஸ்துமதந் தலையெடுக்காமலாய்விட்டதென்றும் வரைந்துள்ளவற்றைக் கண்டு மிக்க வியப்புற்றோம். அதாவது வாலி என்பவனையோ இராட்சசனென்று கூறுகின்றார்கள். இராமரென்பவரையோ இவர்கள் தேவரென்று கொண்டாடு கின்றார்கள். இந்த இராமருக்கும் வாலிக்கும் யுத்தம் நடந்தபோது தன்பலத்தை வாலிகிரகித்துக் கொள்ளுவான் என்று பயந்து ஒளிந்து கொண்டு அம்பெய்து வாலியைக் கொன்றதாகக் கூறுகின்றார்கள். நமது டு.கூ அவர்களின் தேவராகிய இராமரே வாலியின் சக்த்தியைக் கிரகிப்பதற்கு சக்தியற்று ஒளிந்து கொன்றவராயிருக்க இவரது மதசக்த்தி எம்மதசக்த்தியை எவ்வகையால் எக்காலத்தில் கிரகித்ததென்று திருஷ்டாந்த தாட்டாந்தங்களுடன் வரைவரேல் டு. கூ. அவர்கள் சிறந்த விசாரிணைப் புருஷரேயாவர்.

தனது தேவனாலாகாத காரியம் மதத்தாலாயதென்பது விந்தையேயாம். இவரது மதத்தின் சிறப்பையும் அதிற் கூறுகின்றார். அதாவது கள்ளைக் குடிக்க பிரியமுடையவன் அன்னோர் தேவனுக்கு ஆராதனைச்செய்துக் குடிக்கலாமென்றும் திருடவேண்டியவன் தனது சொத்தைக் கோவில்களுக்கு சேர்த்துவிடலாம் என்றும்,

மாமிஷம் புசிக்கப் பிரியமுடையவன் யாகங்களிற் கொன்று தின்னலாமென்றும் வரைந்திருக்கின்றார்.

அன்னோர் மதக்கிரகிப்பின் சிறப்பை ஆராயுங்கால் கள் குடிக்கக் கூடாதென்னும் ஓர் மதத்தினர் முன் கள் குடிக்க வேண்டியவர்கள் ஓர்வகையால் குடிக்கலாம் என்பது சிறப்புற்றது போலும், திருடவேண்டியவர்கள் ஓர்வகைக்குத் திருடலாமென்றும் கூறும் மதம் சிறப்புற்றது போலும், சீவர்களை வதைக்க வேண்டாம் மாமிஷம் புசிக்கவேண்டாமென்னும் மதத்தினர் முன்பு கொலைச்செய்தாலும் மாமிஷம் புசித்தாலும் ஓர்வகையாகக் கொல்லலாம், ஓர்வகையாகப் புசிக்கலாமென்னும் மதம் சிறப்புற்றதுபோலும்.

அந்தோ இத்தகையப் பஞ்சபாதகங்களை ஓர் வகையாகச் செய்யலாமென்னும் மதத்தினர் முன்பு பஞ்சபாதகங்களை அகற்ற வேண்டுமென்னும் புத்த மதம் இருந்தவிடந் தெரியாமற்போனது ஓர் இழிவன்று. காரணம் பன்றியைக்கண்டு யானை ஒதுங்குவது இழிவாகாவாம். யானையைக்கண்டு பன்றி ஒதுங்குமாயின் பயத்தினால் அது ஒதுங்கிய விழிவெனத்தகும். இத்தியாதி சீலச்செயல்களையும் அசீலச்செயல்களையும் நமதன்பர் L.T. அவர்கள் உணராது தங்கள் மனம் போனவாறு தம்மதத்தைப் புகழ்ந்தும் எதிரிகளின் மதத்தை இகழ்ந்துங் கூறுவது பிசகேயாம். தம்மதத்தைப் புகழ்ந்தும் எதிரிகளின் மதத்தை இகழ்ந்துங்கூறுவது மதக்கடை வியபாரிகளின் இனிய இயல்பாதலின் கலாசாலை உபாத்தியாயராகும் ... அவர்கள் இத்தகையக் கூற்றில் இனிப் பிரவேசிக்க மாட்டாரென்று நம்புகிறோம்.

4:1; சூன் 15, 1910 –

# 51. மொட்டையும் மஞ்சளும்

வினா : இந்துக்களில் அநேகர் (ஏழுமலையான் கோவிலுள் திருப்பதியில் போய் மொட்டை அடித்துக்கொள்ளுகிறதும் மஞ்சள் ஆடை அணிந்துக் கொள்ளுகிறார்களே தமது பௌத்த மதத்திலும் அம்மாதரி மொட்டை அடித்துக் கொள்ளுகிறதும் மஞ்சள் ஆடைத் தரித்துக் கொள்ளுகிற வழக்கமுண்டா ?

தன்மப்பிரியன். பம்பாய்.

விடை : அதாவது தற்காலந்திருப்பதி என்றும் வெங்கடமென்றும் வழங்கும் படியான பீடம் இந்திரவியாரம் என்னும் பௌத்தர்கள் மடமேயாகும். அதன் வாயிற்படியில் நுழையுங் குகையுள்ளிருப்பது புத்தரது தன்மச்சக் கிரமென்னப்படும். வெங்கடவுச்சியில் நின்று நீதிபோதிப்பது போலிருக்குஞ் சிலைக்கு அவலோகீஸ்வரர் என்று பெயர் அதுவும் புத்தருக்குரிய சகஸ்திர நாமங்களில் ஒன்றாகும்.

**வீரசோழியம் - ஆயுங்குணத்தவலோகிதன்**

பக்கலகத்தியன் கேட், டேயும் புவனிக்கியம்பிய தண்டமிழீங்குரைக்க.
நீயுமுளையோவெனிற் கருடன் சென்ற நீள்விசும்பி,
லீயும் பறக்கு மிதற்கென் கொலோசொல்லு மேந்திழையே,

உலகயிதமாம் இன்பத்தை வெறுத்த அனுபவங்கள் கண்டு அவலோகித ரென்னும் பெயருடன் களங்கமற்ற சுப்பிர தேகியாய் விளங்கியது கண்டு வெங்கடயீச னென்றுங் கொண்டாடிவந்தார்கள்.

**சூளாமணி**

என்று தங்கதையோடிருநீண்முகிற்.
குன்று சூழ்ந்தகுழுமலர்க்கான கஞ்,
சென்றோர் வேங்கடங் சேர்ந்தனருச்சி மேனின்று
வெய்யவடை நிலங்காய்த்தினான்.

இத்தகைய வெங்கடயீசனென்றும் அவலோகித யீசனென்றும் பெயர் பெற்று, குடகம் வேங்கடமென்னும் தமிழ் நாட்டெல்லைக்கு மத்தியமாக விளங்கிய சிறப்புயாதெனில் புத்தபிரான் எண்ணருஞ்சக்கிரவாளமெங்கும் உலாவிவந்த காலத்தில் அம்மலையடிவாரத்தில் ஓர்லோக ஊற்று அதாவது ஜனிக்கும் நீர்சநிநீரிருந்ததை தனது சங்கத்தோருக்குக் காண்பித்து தேகத்திலுள்ள உரோமங்கள் யாவற்றையும் சிறைத்து அந்நீரில் முழுகினால் சிற்சில ரோகங்கள் நீங்குமென்று போதித்தார் அதனை உணர்ந்த சங்கத்தோர்களும் அத்தேசவாசிகளும் அந்நீரின் சுகானுபவங் கண்டு அடிவாரத்திலும் மலையின் உச்சியிலும் புத்தமடங்களைக்கட்டி சங்கத்தோர் ஞானவிசாரிணையில் நிலைத்திருந்ததுமன்றி, கோவென்னும் அரசன் துறவு பூண்டு வித்தையின் பெருமெயால் காண்பித்தலோக ஊற்றைநாடி வரும் உபாசகர்களுக்கு சமண முனிவர்களைப்போல் சிரோமயிர் யாவுங் கழித்து சநிநீரில் முழுகவைத்து மஞ்சளாடை அணிந்து அரசனின் விந்தைவிளங்க கோவிந்தம் கோவிந்தமென்றும் ஆனந்தக் கூச்சலுடன் அவரவர்கள் இல்லஞ்சேருவது வழக்கமாயிருந்தது அன்று முதல் தீர்த்தனென்னும் ஓர் பெயரும் அவருக்குண்டாயிற்று.

**சீவக சிந்தாமணி**

தீராவினை தீர்க்குந் தீர்த்தத் தெரிந்துய்த்து / வாராக்கதியுரைத்தவாமன்றான் யாரே வாராக்கதியுரைத்த வாமென்மவர்பதிந்த / காரார்ப்பூம்பிண்டி கடவுணீயன்றே.

அத்தகைய தீர்த்தத்தின் சிறப்பினால் நான்கு எல்லையிலுள்ள மக்களும் அவ்விடஞ்சென்று சநிநீராடி அடிவாரத்துள்ள தன்மச்சக்கிர வியாரங்கடந்து உச்சிமலையிலுள்ள வெங்கடவியாரஞ்சென்று தன்மம் வினவிபஞ்ச சீலம் பெற்று

ஆனந்த கோவிந்தநிலையில் இருக்குங்கால் அசத்தியர் குடியேறி, சத்திய சங்கத்தோர்களுக்கு அனந்தயிடுக்கங்கள் செய்து வந்ததுமன்றி மகமதிய கூட்டத் தோருக்கும் இவர்களை சத்துருக்களாக்கி வேங்கடத்திற்றங்கியிருந்த சங்கத்தோர்களை பல இடங்களிலும் விலகிப் போகச் செய்து விட்டார்கள்.

அக்காலம் வடதேசத்தினின்று பிச்சை இரந்தேதின்ன வேண்டுமென்னும் வைராக்கிகளின் கூட்டத்தோரில் சிலர் அவ்விடம் வந்து தங்கிவருந் தட்சணைகளை பெற்று சுகத்தில் உழ்க்கார்ந்து கொண்டபோதிலும் அவ்விடத்திய மடாதிபதிகளைப் பூர்வத்தில் மாகாயிந்திரர்களென்றே வழங்கிவந்தது இயல்பாம். அம்மகா இந்திரரென்னும் மொழிமறுவியே தற்காலமுள்ள வைராக்கிகளைமாயிந்துமகந்துவென வழங்கிவருகின்றார்கள். வெங்கடவியாரத்தை நூதனமாக பற்றிக்கொண்ட பைராக்கிகள் அவ்விடமுள்ள சிலைகளுக்கு சந்தனப்பூச்சு நெற்றியிலிட்டு பஜேகோவிந்தம் பகவான் பஜேகோவிந்தமென சிந்தித்து வந்து இராமானுஜர் காலத்திற்குப்பின்பு அவ்விடமுள்ள சிலைகளுக்கு (நாமமென்னும்) பொருளற்றச் சின்னங்கள் இட்டு வைஷ்ணவர் கோவிலென்று சொல்லும்படியாய் ஆரம்பித்துக் கொண்டார்கள். அத்தகைய வைணவர்களால் ஆழ்வார் தீர்த்தமென்னும் அசப்பிய மொழி பரவியவுடன் யதார்த்த சநிநீர் மறைந்து ரோகம் நீங்கும் அற்புதங்களும் பரந்துவிட்டது.

அதனுடன் பூர்வ சமணமுனிவர்களைப்போல் மொட்டை அடித்து மஞ்சளாடை அணிந்து நாளதுவரையில் நடத்தி வருகின்றார்கள் அஃது பௌத்த மடமே என்பதற்கு இன்னும் அனந்த ஆதாரங்களுமுண்டு. பௌத்த மடம் அல்லவென்று எதிர் தோன்றுவாராயின், அதையும் நிரூபிக்கக் கார்த்திருக்கின்றோம்.

4:8; ஆகஸ்டு 3, 1910 –

# 52. உபநயனம்

வினா : உபநயனம், உபநயனமென்று வழங்குகின்றார்களே அதன் பொருளும்

செயலும் விளங்கவில்லை .

வே. வடிவேலு, வேலூர்.

விடை : உபநயனமென்னுமொழி வடமொழியாகும். அதன் பொருள் உதவி விழியென்று கூறப்படும். ஊனக்கண்ணென்றும் ஞானக்கண்ணென்றும் வழங்கும் இருவகைப் பெயருள் ஞானக்கண்ணிற்கே உபநயனமென்று கூறியுள்ளார்கள்

பௌத்த மடங்களில் உள்ள சமணமுநிவர்களுக்கு அறஹத்துக்களாம் தென்புலத்தோர் ஞானக்கண் உணர்த்திய அடையாளத்திற்காய் மதாணிப் பூணூலென்னும் முப்பிரி நூலணிந்து வருவது வழக்கமாயிருந்தது. அந்நூலணையும் வழக்கமும் யாதுக்கென்னில் உபநயன மென்னும் ஞானக்கண் பெற்ற மாணாக்கன் வேறுதொழில் யாதுமின்றி தன்னைப்பார்க்கும் சாதனமே தொழிலாகக் கொண்டவனைக் கண்ட உபாசகர்கள் வேண உதவிபுரிந்து ஞானமகனை ஈடேற்று வதற்கேயாம்.

இத்தகைய ஞானக்கண் பெற்ற மக்களை ஆதரிக்கும் புருஷர்களை ஞான தந்தைகளென்றும் இஸ்திரீகளை ஞானத்தாயார்களென்றுங் கூறப்படும்.

**ஞானநிலை யுசாவல்**

ஊனக்கண் அன்றென் றுளக்கண்ணளித்தபின்
ஞான வனுபவ முறையென் றரைத்தது.

**கைவல்யம்**

அசத்திலெம் மட்டுண்டம் மட்டும் பராமுகமாகினாய்
நிசத்தி லுளவிழி பார்வை யிப்படி நிறந்தர பழக்கத்தால்
வசத்திலுன் மனம் நின்று சின் மாத்திர வடிவமாகிடின்மைந்தா
கசத்த தேகத்திலிருக்கினும் ஆனந்தக்கடல்வடி வாவாயே.

**பின் கலை நிகண்டு**

காப்புக்கு முன்னெடுக்குங் கடவுடான் மாலேயாகும்
பூப்புனை மலரின் செல்வி புனைபவனாதலானும்
காப்பவனாதலானுங் கதிர்முடி கடகத்தோடு
வாய்ப்பதா மதாணி பூனூல் வரிசையிற் புனைதலானும்.

இத்தகையாய் பௌத்த வியாரங்களிலுள்ள சமணமுனிவர்களின் பரிபக்குவம் அறிந்து ஞான விழியாம் உபநயனம் உணர்த்திய பின்னர் உலகோர் யாவரும் அவனைக் கண்டவுடன் அவனுக்கு வேண்டிய உதவி புரிந்து யாதொரு கவலையுமின்றி ஞான விழிப் பார்வையில் நிலைத்துப் பற்றறுப்பதற்காக அவனை உபநயனம் பெற்றோனென்றறிந்து உதவுவதற்கு மதாணி என்னும் பூணூல் அணிந்து வந்தார்கள்.

அதாவது தற்காலம் B.A. பட்டம் பெற்றவர்களென்று அறிந்துக் கொள்ளுவதற்கு ஓர் அறிகுறியாக நீண்ட கருப்பு செட்டை ஒன்றளித்திருப்பது போல் சமணருக்குள் உபநயனமாம் உள்விழிபெற்று புலன் தென்பட்ட தென்புலத்தார் என்றறிந்துக் கொள்ளுவதற்கோர் அறிகுறியாக மதாணி என்னும் பூணு நூலை மார்பில் அணிந்து வந்தார்கள்.

தென்புலத்தோர் என்று உலகோர் அறிந்துக் கொள்ளுவதுடன் அந்நூலை அணிந்துக்கொண்டவனும் முதநூல், உழிநூல், சார்பு நூல் மூன்றினையும் ஓதுதற்கும், ஓதிவைப்பதற்கும் மாறாக்கியாபகம் பதிந்து நிற்பதற்காய் முப்பிரிநூலாகவும் அணிந்திருந்தார்கள்.

**அருங்கலைச்செப்பு - மதாணி பூணூல் பத்து**

ஒப்புடனோதி யுணர்ந்தா ருளநிறைந்தார் முப்பிரிநூலின் முதல்
இதாதி புலத்தை யுணர்ந்தா ரிறையறிந்தார் மதானு நூலின் மணம்
துப்பறு முந்நூல் வழிநூற் சார்பும் முப்புரி நூலின் முதல்.

**மணிமேகலை**

புரிநூன் மார்பிற் றிரிபுரி வார்சடை மரவுரியாடையன் விருச்சிக னென் போன்

இதுவே உபநயனமென்பதின் பொருளும் செயலுமாகும். தற்காலம் இத்தேசத்தில் உபநயனமளிக்கும் ஆசிரியனுமில்லை , உபநயனம் பெறும் மாணாக்கர்களுமில்லை. ஆதலின் யதார்த்த பிராமணனுமில்லை என்பதாயிற்று.

4:9; ஆகஸ்டு 10, 1910 –

# 53. கர்மத்தால் உண்டாம் பிறவி

இந்திரதேயத்தோர்களாகும் பௌத்தர்கள் பிறவியால் உண்டாந் துக்கங்களையும், பிறவியால் உண்டாம் சுகங்களையும் செவ்வனே விளக்கிப் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வாய்மெகளை வகுத்துவைத்திருக்கின்றார்கள்.

ஓர் மனிதன் பிறக்கும் போதே கூன், குருடு, சப்பாணி, பேடுடன் பிறப்பது பெருந் துக்கம். அத்தகைய கூன், குருடு, சப்பாணி, பேடின்றி சுகதேகியாய் பிறப்பது சுகம். ஓர் மனிதன் பிறந்தது முதல் தனச்செல்வம், தானியச்செல்வமற்று அவன் எண்ணுந்தொழில் யாதுங் கை கூடாது பிச்சை இரந்துண்பது துக்கம், பிறக்கும் போதே தனச்செல்வம், தானியச் செல்வமுடையவனாய் வளர்ந்து முன் போன்ற பிச்சையிரப்போர்க்கு ஈய்ந்து புசிப்பின் கவலையற்றிருப்பது சுகம். இத்தகைய சுகத்தையுந் துக்கத்தையும் அநுபவிக்குங் காட்சியாக விளங்குகின்றது.

இத்தகைய அனுபவங்களைக் கண்காட்சியாகக் கண்டவர்களும் அகன் அனுபவங்களை உணர்ந்தவர்களும் இம்மெயில் புண்ணிய விருத்திச் செய்தவர்கள் மறுமெயில் சுகத்தை அனுபவிப்பார்களென்றும், இம்மெயில் பாவவிருத்திச் செய்தவர்கள் மறுமெயில் துக்கத்தை அனுபவிப்பார்களென்றுங் கூறி பாவச்செயல் களையும், புண்ணியச் செயல்களையும் விளக்கி சீவகா ருண்ய வாழ்க்கையில் வாழும்படி செய்திருக்கின்றார்கள்.

இத்தகையப் பிறவியால் உண்டாந் துக்கங்களை செயித்து பிறவியற்ற சுகநிலையை தன்னிற்றானே கண்டடைந்த ததாகதர்தான்பெற்ற நித்திய சுகத்தை உலகத்தில் தோன்றும் சருவசீவர்களும் பெற்று பிறவியின் துக்கத்தை ஒழிப்பதற்காக பாவத்தைப்

போக்கும் வழிகளையும், நன்மெய்க் கடைபிடிக்கும் வழிகளையும் மனமாசு கழுவும் வழிகளையும் விளக்கி சுருக்கத்தில் ஆசையாம் பற்றுக்கள் இருக்கும் வரையில் மாறா பிறவியின் துக்கமும் ஆசையாம் பற்றுக்களற்றவிடத்து பிறவியற்ற சுகமும் உண்டாமென்று தனதனுபவக் காட்சியையும் விளக்கியுள்ளார். இதையே கன்மத்திற்கேற்ற ஜென்மமென்றும் விட்டகுன றை தொட்டகுறையென்றும் பிறவியின் செயலைக் கூறுவதுடன் ஆதியில் இப்பிறவியைஜெயித்து நித்திய சுகமடைவதற்காகப்பகவன் போதித் துள்ள நீதிமொழிகளாம் கட்டளைகளை மீறி நடந்தவர்கள் துக்கச்செயல் அதிகரிக்கும்போது என் தலைவிதி என் தலைவிதியென்று முன் நீதிபோதத்தை வழுவி நடந்தவற்றால் உண்டாகியக் கேட்டை விளக்கிவருதலும் இயல்பாம்.

கன்மம் என்பதின் பொருள் செய்கை என்னப்படும். நற்கன்மத்தை நற்செய்கையென்றும், துற்கன்மத்தை துற்செய்கையென்றும், நல்வினைத் தீவினையென்றுங்கூறுவர். நல்வினையாம் நற்செய்கையின் பெருக்கத்தால் ஆசையென்னும் பற்றுக்களற்று பிறவியின் துக்கமொழிந்து பரிநிருவாணம் பெறுவர். தீவினையாம் தீயச்செய்கையின் பெருக்கத்தால் ஆசை யென்னும் பற்றுக்களதிகரித்து மாளாப்பிறவியிற் சுழன்று துக்கவிருத்தியால் தோன்றி தோன்றி மறைவர். இத்தகைய மறுப்பிறவியாம் தோற்றத்தில் தோன்றிய ஒருவன் தனது வளர்ச்சியில் கல்வியின் அவாவால் மேலுமேலும் வாசிப்பின் பற்றில் இருப்பானாயின் மறுமெயில் சிறுவயதிலேயே உயர்தரக் கல்வியில் தேறுவான். அதுபோல் மற்றொருவன் தனது வளர்ச்சியில் கைத்தொழில் விருத்தியில் மேலான வித்தைகளையுக்தியாலளாவி வித்தையின்விருத்திப்பற்றில் மடிந்தவன் மறுமெயில் சிறுவயதிலேயே சகலரும் ஆட்சரியப்படத்தக்க அரிய வித்தைகளைச் செய்வான். மற்றொருவன் தனது வளர்ச்சியில் குடி விபச்சார முதலிய துற்கிருத்தியப்பற்றில் அதிகரித்து மடிவானாயின் மறுமெயில் சிறுவயதிலேயே விபச்சாரம் குடி முதலிய துற்பழக்கம் பெருகி கேடுண்டழிவான். மற்றொருவன் தனது வளர்ச்சியில் கொள்ளல் கொடுத்தலென்னும் வியாபாரவிஷய விருத்திபற்றில் அதிகரித்து மடிந்து மறு மெயில் சகலரும் மெச்ச சிறுவயதிலேயே வியாபாரவிருத்தியிற் சீவிப்பான். மற்றொருவன் தனது வளர்ச்சியில் களவு, பொய், வஞ்சின முதலியச் செயல்விருத்தியிலிருந்து மடிந்து மறுமெய் அடைந்த

சிறுவயதிலேயே களவு, பொய், வஞ்சகம் முதலியச் செயல்களில் தீவிரமுடையவனாகிக் காராக்கிரகம் பெறும் கீழ்மகனெனத் திரிவான். மற்றொருவன் தனது வளர்ச்சியில் ஒரு கற்சிலையையும் ஒரு உலோகச்சிலையையும் வைத்து அதின்பற்றே மிகுதியுடைவனாகி அதையே தெய்வமென்று துதித்து அஞ்ஞானத்தைப் பெருக்கி மடிவானாயின் மறுமெயில் சிறு வயதிலேயே மேலுமேலும் கற்சிலைகளையும், உலோகச்சிலைகளையும் வைத்துத் தன் வயிற்றை போஷிப்பதற்கே விதியின்றி அஞ்ஞானத்திற் பெருகி அல்லலடைந்து திரிவான். மற்றொருவன் தனது வளர்ச்சியில் அறிவை வளர்க்குங் கலை நூற்களை வாசிக்கவும் பெரியோர்களை சேவிக்கவும் அவர்களை அடுத்து சுபவிசாரஞ்செய்யவும் அவர்களை அடுத்து நன்மார்க்கத்தில் அடக்கவுமாகிய நற்கன்ம விருத்தியினின்று மடிந்து மறுமெ யடைவானாயின் சிறுவயதிலே சுப இச்சை பெருகி சாந்தம், அன்பு, யீகை யென்னும் பற்றற்றான் பற்றில் நிலைத்து இராகத், துவேஷ, மோகமென்னும் பற்றினையறுத்து சிறுவயதிலேயே வாலறினென சகலருந் தொழூஉம் மேன்மகனென விளங்குவான். இதுவே தன்னுயிரைப்போல் மன்னுயிர்களைக் கார்க்கும் தண்மெயுடையவர்களாம் பௌத்த பிராமணர்களின் போதனையும் கன்மத்தால் தோன்றும் பிறவியின் தோற்றங்களும் நிகழ்ச்சிகளுமாகும்.

இத்தகையக் கன்மபாகத் தோற்றங்களையும் மறைவுகளையும் கண்டுணராத நாதனமாய சாதிபேதமுள்ளவர்களும், சமய பேதமுள்ளவர்களும் இப்பிறவியின் வகுப்பை எவ்வகையாக வகுத்து வைத்துக்கொண்டிருக்கின்றார் களென்னில், கன்மமென்னும் ஒன்றுண்டென ஒப்புக்கொண்டு உருவமில்லா பிரம்மா முகத்தில் பிராமணனும், புஜத்தில் க்ஷத்திரியனும், துடையில் வைசியனும், பாதத்தில் சூத்திரனும் பிறந்தார்களென்றும் வரைந்துவைத்துள்ளார் கள். இத்தகையக் நாதத் தோற்றமானது பிரம்ம கன்ம தோற்றமா, அன்றேல் மேல் தோற்றியுள்ள நால்வர் கன்மதோற்றமா. பிர்ம்ம கன்மதோற்றமாயின் சீவராசிகளின் கன்மத்தாலாய தோற்றமில்லையென்பது துணிபாம். சீவராசிகளாம் மேற்கூறிய நால்வர்களின் தோற்றத்திற்கு அவரவர்களின் கன்மங்களே ஆதாரமென்னில் பிரமமென்னும் உருவின் சிறப்பும் அதன் செயலும் ஒன்று மில்லாமறபோம். அத்தகைய பிரம்மத்திற்கே சிறப்பில்லாவிடத்து அதன்

முகத்தில் தோன்றிய ரொமணனுக்கும் சிறப்பில்லையென்பது சொல்லாமலே விளங்கும்.

இத்தகைய பிரம்மா முகத்தில்தோன்றிய நால்வருள் பிரம்மா பாதத்தில் இானாகப் பிறந்தவன் பிராமணனுக்கும், க்ஷத்திரியனுக்கும், வைசியனுக்கும் மிக்க பயபக்தியுடன் யேவல் புரிந்துவருவானாயின் வைசியனாகப் பிறப்பானென்றும், வைசியனாகப் பிறந்தவன் பிராமணனுக்கும், க்ஷத்திரியனுக்கும் மிக்க பயபக்த்தியுடன் ஏவல்புரிந்துவருவானாயின் அவன் க்ஷத்திரியனாகப் பிறப்பானென்றும், க்ஷத்திரியனாகப் பிறந்தவன் பிராமணனுக்கு மிக்க பயபக்த்தியுடன் ஏவல்புரிந்து வருவானாயின் பிராமணனாகப் பிறப்பானென்றும் வகுத்துப் போதித்து வருகின்றார்கள்.

இத்தகைய நான்குவகை ஜெந்தங்களின் தோற்றங்களுக்கும் அவரவர்களுக்கு ஏவல் புரியும் கன்மங்களே காரணமாயின், பரசுராமனென்பவன் க்ஷத்திரியர்கள் கருவில்லாமலே அழித்து விட்டானென்னுங் கதை தோன்றிவிட்டபடியால் வைசியனென்பவன் யாருக்கு ஏவல் புரிந்து க்ஷத்திரியனாகத் தோன்றுவான் அவ்வகைத் தோற்றமுள்ளதாயின் பரசுராமன் கருவறுத்த க்ஷத்திரியக் கூட்டம் வேறென்றே விளம்பல் வேண்டும். இரண்டுவகை க்ஷத்திரியக்கூட்டங்கள் இருக்குமாயின் பிரம்மா புஜத்திற் பிறந்த க்ஷத்திரியக்கூட்டம் தற்காலம் இல்லையென்பதே துணிபாம். இத்தகைய கன்மத்தால் பிரம்மாமுகத்திற் பிறந்த பிராமண கூட்டமொன்றும், பிராமணருக்கு ஏவல்புரிந்து பிராமணனாகப் பிறக்குங் கூட்டமொன்றுமாகிய யிருவகைக் கூட்டத்தோருள் விசுவாமித்திரனென்னும் க்ஷத்திரியன் எந்த பிராமணனுக்கும் ஏவல்புரியாது தன்னுடைய தபோபலத்தால் பிராமணனானா னென்று கூறுகிறபடியால் இவனோர்வகைத் தோற்ற பிராமணனாக விளங்குகின்றது. இம்மூவகை பிராமணர் தோற்றத்துள் பிரம்மாவின் முகத்தில் தோன்றினோர் யதார்த்த பிராமணர்களா, க்ஷத்திரியனாகிபிராமணனுக்கு ஏவல் செய்து தோன்றியவர்கள் யதார்த்த பிராமணர்களா, அன்றேல், க்ஷத்திரியன் தனது தபோபலத்தால் பிராமணனாயது யதார்த்த பிராமணக்கூட்டமா, மூன்றும் யதார்த்த பிராமணக்கூட்டமென்பாராயின் கன்மபாக நிலையறியா மூன்று கூட்டமும் பொய்ப்

பிராமணக்கூட்டமென்றே கூறல் வரும். மற்றோர்வகையில் சூத்திரனுக்கு ஏவல்புரியும் பிராமணன் யாவராகப் பிறப்பான் வைசியனுக்கு ஏவல்புரியும் பிராமணன் யாவராகப் பிறப்பான். க்ஷத்திரியனுக்கு ஏவல்புரியும் பிராமணன் யாவராகப் பிறப்பான். இதையும் அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கப் பிறப்பென்பதாயின் பிராமணனென்னும் பிறவி தோன்றுவதற்கு ஆதாரமில்லாமல் போம். அதாரமில்லாதிருந்தும் பிராமணக்கூட்டம் உண்டென்பாராயின், கன்மபாகை, அர்த்த பாகையற்று ஞான்பாகையாம் யாதார்த்த பிராமணக் கூட்டம் இல்லையென்றும் கன்மத்தாலாயப் பிறவிகளின் ரகசியமறியாதோர் எழுதியுள்ளக் கட்டுக் கதைகளென்றும் துணிந்து கூறுவாம்.

4:11; ஆகஸ்டு 24, 1910 –

# 54. பஞ்சபாதகங்களில் ஒன்றாங் குடி

இவ்விடம் குடியென்பவற்றுள் கட்குடி, சாராயக்குடி, கஞ்சாக்குடி, என்பவைகளேயாம். இவைகளின் குணாகுணங்களோவெனில், பித்தத்தை அதிகரிக்கச்செய்யும். அதிமயக்கத்தால் புத்தியைக் கெடுக்கும். அவற்றைக் குடித்தவன் வாய்திறந்து பேசுவானாயின் சகிக்க கூடாத துன்னாற்றம் நாறும். இத்தகைய லாகிரியை அருந்துபவன் சற்று காமாதிகாரனாயிருப்பானாயின் இவைகளின் வெறிமயக்கத்தால் தாய் தங்கை என்றும், அன்னியர் மனைவி தன் மனைவி என்றும், மாமி மாதுலியென்றுணராது கெடுப்பான். சற்றுக் களவுமிகுத்த குணமுள்ளவனாயின் எவ்விதத்தானும் அன்னியர் பொருளைக் களவாடி அவர்களை மனம் வருந்தச் செய்வான். சற்று மிலேச்சக்குடும்பத்திற் பிறந்துள்ளவனாயின் லாகிரியை அருந்தியவுடன் இவன் மித்துரு அவன் சத்துருவென்றும், இவன் யோக்கியன் அவன் அயோக்கியனென்றும், இவன் விவேகி அவன் அவிவேகியென்றும், இவன் சிறியோன் அவன் பெரியோ னென்றுணராது தனது மிலேச்சக்குடும்பத்திற் பிறந்த வழக்கச்செயல்கள் மாறாது கொடூர வார்த்தைகளும், இழிமொழிகளும் தூஷணச்சொற்களுங் கூறி அன்பர்களை மனனோகச் செய்வதுமன்றி அவர்களால் சகிக்க முடியாது (சாத்துக்காப்பென்னும்) கைபூஜையோ, கால்பூஜையோ, துடைப்புக்கட்டைப் பூஜையோ பெற்றுக்கொண்டும், பணத்தால் பெரியசாதியென்றுயர்த்திக் கொண்டிருந்த போதிலும் இந்த லாகிரியை அருந்தியவுடன், “குலத் தளவே யாகுமாங்குணம்” என்னும் பழமொழிக்கிணங்க பூர்வமிலேச்சகுல குணத்தை வெளிக்கு விசிரிம்பித்து யாவர் புத்தி கூறினும் அடங்காது ஈன்று வளர்த்தத் தாயார் வெறுக்கவும், தனது மனைவி இக்கொடிய பாதகன் முகத்திலும் விழிக்கப்போமொவென்று அகலவும், இவன் சுரணையற்றநிலை கண்டோர்கள் யாவருங் கைகொட்டி நகைக்கவும் உள்ள சொத்துக்கள் யாவையும் விற்றுக் குடித்து

குடிகேடனென்னும் பெயருமெடுத்துக் கடைசியாகப் பிச்சையிரக்க வெளிதோன்றியும் பிச்சைக்கிடைக்காதலையும் பெரும் பாதகனாகிவிடுகின்றான்.

இந்த லாகிரி வஸ்து பாவங்களுக்கெல்லாம் தலையானதென்று அறிந்து மற்றுமொருவன் சுவாமிப்பிறந்த நாள் ஒன்றில் தான் குடிப்பேனென்கின்றான். இன்னொருவன் முநியாண்டவன் பூசையன்று தான் குடிப்பேனென்கின்றான். வேறொருவன் சத்திபூசை செய்யும் போதுதான் நான் குடிப்பேனென்கின்றான். இவர்களே சுவாமி கும்பிடுவதில் முதல் பாவிகளாய் இருக்கின்றார்கள். எவ்வகையிலென்னில், இலாகிரியை அருந்தி மயக்குண்டு மதி கெடுவது பஞ்ச பாதகத்துள் ஒன்றென்றறிந்தும் அத்தகையப் பாவச்செயலை சுவாமிப்பிறந்த கொண்டாடச்செய்தேனென்றும், முனியாண்டவன் பூசைப் போடச் செய்தேனென்றும், சத்தி பூசைப் போடச் செய்தேனென்றும் சொல்லுவதினால் அன்னோர் தொழுஉம் சுவாமிகளே இவர்கள் பாவத்திற்கு முதற்பீடமாக விளங்குகின்றது. சுவாமிப் பிறந்தாரென்னும் நாளைக் கெண்டாடுவதற்கு அன்று பாவத்திற்குப் பீடமாம் இலாகிரியைப் பானஞ்செய்யாமல் ஒழித்து தெளிவிலிருப்பானாயின் அவனைப் புண்ணியவழித் தேடுவோன் என்னலாம். முனியாண்டவனைக் கும்பிடுபவன் அன்று லாகிரி அருந்தாமற் கும்பிடு வானாயின் அவனைப் புண்ணியவழித் தேடுவோன் என்னலாம். சத்திபூசை செய் பவன் அன்று குடியாமல் சுத்த நிலையில் இருப்பானாயின் அவனைப் புண்ணியத்தின் சுத்த வழித்தேடுகின்றான் என்னலாம். அங்ஙனமின்றி சாமிப் பிறந்தாரென்று சாராயப் புட்டியைத் திறப்பதும், முநியாண்டவன் பூசையில் சனியன் பிடித்தக் கள்ளைக் குடிப்பதும், சாத்தி பூசையில் அசுத்தமாங் கள்ளூ சாராயத்தைக் கலந்து குடிப்பதுமாகியப் பாவச்செயல்களுக்கு கும்பிடுஞ் சாமிகளையே காரணபூதங்களாக ஏற்றுக் கும்பிடுதலை ஒழித்து பாவத்தைப் போக்குவதழகாம். மேலுமேலும் பாவத்தை பெருக்குதற்குக் கும்பிடு தெய்வங்களே கூட்டாளிகளாக விருக்குமாயின் அவர்களுக்கு சதா துக்கமென்பதே சான்றாம்.

**பின்கலை நிகண்டு - பஞ்ச அங்கங்களும் பஞ்சபாதங்களும்**

பஞ்சாங்கம் திதியே வாரம் பகர்ந்தநாள் யோகத்தோடு
துஞ்சாத கரணமென்ப சூழ்கொலை களவு பொய்யும்
அஞ்சாது கள்ளருந்தல் ஆர்குரு நிந்தையென்ப
பஞ்சார் மெல்லடி நல்லாய் கேள் பஞ்சபாதகத்தின் பேரே.

**திரிக்குறள்**

சன்றாண்முகத்தேயுமின்னாதாலென் மற்றுச்
சான்றோர் முகத்துக்களி.
நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும் பேணாப்பெருங்குற்றத்தார்க்கு.

4 : 12 ஆகஸ்டு 31, 1910 –

# 55. பௌத்த தன்ம யாகங்கள்

வினா : ஐயமின், தாம் தமது பத்திரிகையில் வரைந்துவரும் சங்கதிகளில் சைவம், வைணவம், வேதாந்தமென்னும் விஷயங்கள் யாவற்றிற்கும் ஆதாரபீடம் பக்கதன்மமென்றே வரைந்து வருகின்றீர். அங்ஙனமாயின் அவர்களுட் சிலர் பாகம் யாகமென்று கூறி மாடுகளையும், குதிரைகளையும், சுட்டுத் தின்றதாக வரைந்து வைத்துக்கொண்டிருக்கின்றார்களே அவைகளும் புத்ததன்மங்களைச் சார்ந்ததாமோ. அவ்வகைச் சார்ந்ததாயின் புத்ததன்மம் அகிம்சை தன்மத்திற்கு விரோதமன்றோ . பிராணாதி பாதாவேறமணி என்னும் சீலமுந் தவருகிறதன்றோ .

பா. முநிசாமி ராஜு, பிரம்பூர்.

விடை : தாம் வினவிய யாக சங்கை பூர்வ பௌத்த சங்கத்தோர்களால் அக்கினி குண்டமாம் வேள்வித் தீ வளர்த்து ஏதேது காரியங்களைச் செய்து வந்தார்களோ அவைகளுக்கு எல்லாம் யாகமென்று கூறிவந்தது வழக்கமாகும்.

**முன்கலை திவாகரம்**

ஒமம், கிருது, வெச்சம், யாக, மிட்டி , யூபமகமிவை வேள்வி

குண்டம்வெட்டி அக்கினி வளர்த்து மருந்து புடமிடுவதும், ஈட்டிகளுக்குத் துவையலேற்றுவதும், ஈட்டியால் உண்டாம் மூர்ச்சையை இறக்குவதும், வானம் வருஷிக்கச்செய்வதும், மழையை விலகச்செய்வதும், ஒடதி சுக வஸ்துக்களைச் காச்சுதலும், தாமரை புட்ப சுன்னங்களை அரசர்களுக்கு தேக பலமும் மனோ உற்சாகமும் பெறச் செய்தலும், நரருக்கு கதிபெறச் செய்தலும், மக்களுக்கு சுகபுகை

யூட்டி ஞான நெறிகளைக் காட்டி தேவகதியாம் பிரமநிலைப் பெறச் செய்தலுமாகிய சோதிட்டோமயாகம், அக்கினிட்டோமயாகம், மத்தியாகினிட்டோ மயாகம், வாசபேய யாகம், மத்திராத்திர யாகம், சேமயாகம், காடகயாகம், சாதுரமாகி யாகம், சவித்திராமணியாகம், புண்டரீக யாகம், சிவகாம யாகம், மயேந்திரயாகம், மங்கிக்கனே யாகம், இராசசுக யாகம், அச்சுவமேதையாகம், விச்சுவதித்து யாகம், நரமிதயாகம், பிரமமித யாகமென 18 யாகங்களைச் செய்துவந்தார்கள்.

இவற்றுள் முக்கியமாக சகல மக்களும் தெரிவரச் செய்துவந்த யாகங்கள் சிலதுண்டு. அதாவது :- இட்டியாகம், எச்சயாகம், ஓமயாகம், கிருதயாகம் இவைகளேயாம். இவற்றுள் இட்டியாகமாவது யாதெனில், அரசர்கள் யுத்தகாலங்களிலும், வேட்டை காலங்களிலும் தங்களுக்கு வேண்டிய ஆயுதங்களாகும் பட்டா, ஈட்டி, பல்லயம், அம்பு முதலியவைகளைக் கொண்டுவந்து மடங்களிலுள்ள சமண முநிவர்களிற் சித்திப் பெற்ற சித்தர்களிடங் கொடுத்து இவ்வாயுதங்கள் மிருகங்களின் மீது பட்டபோதினும் மநுக்களின் மீது பட்ட போதினும் பிராண உபாயமின்றி மூர்ச்சையாகி விடும்படியானத் துவையலேற்றிக் கொடுக்கும்படிக் கேட்கும் போது யாககுண்டம் வெட்டி அவைகளுக்கான சில மூலிகைகளைக் குழியிலிட்டுத் தீமூட்டி எறியுங்கால் பசுவின் நெய் விட்டு விறகுகள் முழுவதும் பற்றி மெழுகுபதந்திரளுங்கால் ஆயுதங்களை ஒவ்வொன்றாக அதிற்சொருகி மணலைக்கொட்டி யாககுண்டத்தை மூடி மூன்றாநாள் திறந்து ஆயுதங்களை எடுத்து பிரமமூலி சாற்றிற் கழுவி யுத்தகளத்தில் உபயோகித்தால் காயமடைந்த ஒவ்வொருவருக்கும் மூர்ச்சையுண்டாகச் செய்விக்குமாம். இந்த யாகத்திற்கு வடமொழியில் கோமித யாகமென்றும், தென்மொழியில் இட்டியாகமென்றும் வழங்கிவந்தார்கள்.

அத்தகைய ஆயுதம் எய்யப் பெற்றோர் மூர்ச்சைத் தெளியாமல் பிரேதம்போற் கிடப்பார்களாயின் இன்னொரு யாககுண்டம் வெட்டி நிகும்பிலை அதாவது சஞ்சீவிப் பூண்டின் சமூலங் கொண்டுவந்து குழியிலிட்டு அக்கினி வளர்த்து பசுவின் கோமியத்தைக் கொஞ்சங்கொஞ்சமாகத் துளிர்த்துக் கொண்டுவந்து சாம்பல் பூர்த்தவுடன் எடுத்து சுத்தநீரில் கரைத்து யுத்தகளத்தில் வீழ்ந்துள்ளவர்களின் முகத்தில் தெளித்தவுடன் நித்திறை தெளிந்தெழுந்திருப் பவர்களைப்போல் எழுவார்களாம்.

இவ்வியாகத்தற்கு வடமொழியில் நிகும்பிலை யாகமென்றும், தென்மொழியில் எச்சயாக மென்றும் வழங்கி வந்தார்கள்.

இவ்வாயுதம் பட்ட காயங்கள் ஆறாமலிருக்குமாயின் இன்னொரு யாககுண்டம் வெட்டி ஆலம் விறகு, பருத்தி விறகு, அத்தி விறகு மூன்றையும் சமமாகக் குழியிலிட்டு வெண்குங்கிலியத்தைக் கொட்டி அக்கினி மூட்டி குதிரை நெய்யைக் கொஞ்சங் கொஞ்சமாக கொடுத்து விறகுகள் முற்றும் எரிந்து " குமிழ்க்கண் விடுங்கால் அவித்துக் களிம்பை எடுத்து பட்டக் காயங்களுக்குத் தடவிவந்தால் மூலிகை வேகம் நீங்கி இரண மாறிப்போகுமாம். இவ்வியாகத்திற்கு வடமொழியில் அச்சுவமித யாகமென்றும், தென்மொழியில் கிருத யாகமென்றும் வழங்கிவந்தார்கள்.

மற்றும் சிலகாலங்களில் சுக்கிரக்கோள் பின்னிட்டு சூரியன் முன்னிட்டேகுங் கால் மழைகுன்றி பஞ்சமென்னும் தானியமும் நீருமின்றி பசிதாகத்தால் வருந்தும் விருத்தி. விஷரோக பீடிதங்களால் துன்புரும் விருத்தி, 2. ஒருதேசத்தைவிட்டு மறுதேசங்களுக்கு ஓடும் விருத்தி 3. பூமியிலுள்ள நீர் வரண்டு காயும் அனல் விருத்தி. 4. சருவசீவர்களுக்கும் அழுகை, பற்கடிப்பு விருத்தி. 5. ஆக பஞ்சமாம் - அஞ்சுந்தோன்றி குடிகள் தவிக்குங்காலத்தில் ஊருக்குமத்தியில் பெருத்த யாககுண்டம் வெட்டி நாணற்புல்லைக் கொட்டி மட்டிப்பால், கற்பூரம், குங்கி சுயம், கேந்திக் கல், நீறுப்பாகிய பஞ்சமழை முகில் ஓடதிகளைக் கொட்டி, யாக குண்டத்தைச் சுற்றி 32-அடி உயரத்திறை எழுப்பி அதன் 8 மூலைகளிலும் விவேகமிகுத்த சமணமுநிவர்கள் உட்கார்ந்து கொண்டு அக்கினிமூட்டி ஓமவிறகும், பசுவின் நெய்யுங் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு ஐந்திரநிலையில் நிற்குங்கால் யாக புகை ஆகாயத்தை ஆளாவிய ஐந்து கடிகைக்குள் கருமுகில் தோன்றி பெருமழைப்பெய்து யாககுண்டம் நனைவதுடன் சருவசீவர்களுக்குமுள்ள அஞ்சு அவத்தையாம் பஞ்சம் நீங்கி சுகம்பெறுவார்களாம். இந்த யாகத்திற்கு வடமொழியில் பிரம்ம யாகமென்றும், இந்திர யாகமென்றும்; தென்மொழியில் ஓம் யாகமென்றும் வழங்கிவந்தார்கள்.

இத்தகைய 4 யாகங்களுக்கு மட்டிலும் அரசர்களால் வாழைக்கனி, அவுல், கடலை, தேங்காய் இவைகளைக் கொண்டுவந்து ஏராளமாக வைத்திருந்து மேற்சொன்னபடி

யாகங்கள் ஒவ்வொன்றும் முடிந்தவுடன் குடிகளுக்கு ஆனந்தமாகக்அ விற்பிரசாதங் கொடுத்துப் புசிக்கச்செய்வது வழக்கமாயிருந்ததாம்.

இத்தியாதி சத்தியதன்ம உபகாரச் செயல்கள் யாவும் வேஷ பிராமணர்களால் மாறுதலடைந்து புத்த சங்கங்களும், பௌத்தர்களும் சிதறி அசத்தியர்களின் ஜாலக்கூற்றுப் பெருகிவிட்டபடியால் யாகங்களின் செயலும் மிலேச்ச அதன்மத்தில் மாறுதல் அடைந்துவிட்டது. எவ்வகையில் என்பீரேல், இவ் வேஷ பிராமணர்களுக்கு புத்த்தன்ம யாதார்த்த பிராமணர்கள் செய்துவந்த சீவகாருண்யச் செயல்களும் அதனந்தரார்த்தங்களுந் தெரிய வேமாட்டாது. இவ்வகைத் தெரியாத வேஷ பிராமணர்களிடங் கல்வியற்றக் குடிகள் சென்று ஐயா! முன்பிருந்த மடத்துப் பெரியோர்கள் யாகஞ்செய்து எங்களுக்கெல் லோருக்கும் அவிற் பிரசாதங் கொடுப்பார்கள் அவ்வகையாக நீங்கள் ஒன்றையுங் கொடுப்பதைக் காணோமே என்று வினவுங்கால் வேஷ பிராமணர்களுக்கோ யாகமென்பது யாதென்று தெரியாது. அவர்களை நாடிக்கேட்குங் குடிகளுக்கு அவுல், கடலை தேங்காய், வாழைப்பழம் இவைகளைத் தின்ற ருசிமட்டுந் தெரியுமேயன்றி யாகங்கள் இன்னதென்றும் அதன் செயல்கள் இன்னதென்றும் அவர்கள் அறிய வேமாட்டார்கள்.

இவ்வேஷ பிராமணர்களோ தங்களது நாட்டில் ஆட்டு மாமிஷம், மாட்டு மாமிஷங்களைத் தின்று வளர்ந்தவர்கள் புத்ததன்ம நாட்டைச் சார்ந்தபோது மாமிலப் புசிப்புக்கேதும் இல்லாமல் திகைத்துநின்றவர்களுக்குத் திறைக்கட்டி பாகம் வளர்த்தலென்று கேழ்விப்பட்டவுடன் அவர்களைக்கொண்டே கொழுத்தப் பசுக்களையும் கொழுத்த குதிரைகளையுங் கொண்டுவரச்செய்து குண்டம் வெட்டி, திறைகட்டி, பசுக்களையும் குதிரைகளையும் உயிருடன் நெருப்பிலிட்டுச் சுட்டுத்தின்பதுடன் அவுல், கடலை, தேங்காய், வாழை, பழம் முதலியவைகளையுங் கொண்டுவரச்செய்து சகலவற்றையும் தாங்களே வாரி மட்டைக்கட்டிக்கொண்டு பசுவையும், குதிரையையும் சுட்டுத் தின்ற சாம்பலை வாரிக் கையிற்கொடுத்து இந்த சாம்பலை ஒவ்வொருவர் வீட்டிலும் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளுவீர் களானால் உங்களுக்கு எவ்வகை வியாதிகளும் அணுகாது நல்ல சம்பத்துள்ளவர்களாக வாழ்வீர்களென்று தறியவடன் யாகத்தின் பொருளறியா விவேகமற்றக் குடிகள் பசுமாடுகளையும்,

குதிரைகளையும் இழந்ததுடன் வாழைப்பழம், தேங்காய், அவுல், கடலை இவைகள் ஒன்றேனும் பெறாது வெறுஞ் சாம்பலைப் பெற்று வெறுமனே வீடேகுவார்களாம்.

இத்தகையப் பேதைக்குடிகளை வஞ்சித்து ஆடுகளையும், மாடுகளையும், குதிரைகளையும், உயிருடன் சுட்டுத் தின்பதை உணர்ந்த புத்ததன்ம விவேகிகள் உயிர்வதைச் செய்யும் பாபிகளை அடித்துத் துரத்தியும் சீவகாருண்யத்தை விளக்கியும் நெருப்பிற் சுட்டுத்தின்னுந் கொறூரக்கொலையை அகற்றியும் வந்தார்களாம்.

ஈதன்றி ஆரிய வேஷப் பிராமணர்களின் சுகத்தையும் அதிகாரத்தையும் கண்டுவரும் ஆந்திரசாதி, கன்னடசாதி, மராஷ்டகசாதி, திராவிடசாதியென வகுக்கப் பெற்றோராகும் இத்தேசத்து சோம்பேறிகளும், வஞ்சகர்களும் பிராமண வேஷம் எடுத்துக்கொண்டு வஞ்சகமிகுத்தப் பொய்யர்களும், சோம்பேறிகளும் ஆனபோதினும் கொலையும் புலையுமற்றவர்களாக வாழ்ந்தவர்களாதலின் ஆரிய வேஷப்பிராமணர்கள் ஆடுமாடுகளை சுட்டுத் தின்னுங் கொலைப்பாதகத்துள் இவர்கள் சேராது இவர்களுக்குள் நூதனமாகத் தோன்றிய வேஷப் பிராமணர்கள் மிகுந்துவிட்டபடியால் ஆரிய வேஷப் பிராமணர் யாகம் யாகமென வழங்கி மாடுகளையுங் குதிரைகளையுஞ் சுட்டுத்தின்ற வழக்கத்தைப் பரவச்செய்தற்கு ஏதுவில்லாமல் போய்விட்டது. ஆதலின் மாடுகள் குதிரைகளைச் சுட்டுத்தின்னும் யாகம் ஏடுகளில் எழுதிவைத்திருந்த போதினும் செயலில் நிகழாதொழிந்தது. பௌத்தர்களின் யாகமோ மாமாத்திரர் யாககுண்ட புடத்திலும், நிமித்தகர் விவாக யாகபுடத்திலும், மற்றும் அக்கினிச்செயலிலும் உள்ளதை நாளது வரையிற் காணலாம்.

**முன்கலை திவாகரம்**

பதினெண் யாகவகைப் பெயர் / சோதிட்டோம மக்கினிட்டோம, மத்தியக்கினிட்டோமம்
வாசபேய மத்திராத்திரஞ் சேமயாகங்காடகஞ்
சாதுர மாசியஞ் சவித்திரா மணியே / புண்டரீகஞ் சிவகாம மயேந்திர
மங்கிச சனேயி ராசசூய மச்சுவமேதம் விச்சுவதித்து
நாமேதம் பிரமமேத மென்னப் பதிநெட்டியாகப் பலப்பெயராமே.

இவற்றுள் அடங்கியுள்ள புண்டரீக யாகமென்பது தாமரைப் புட்பத்தை பஸ்பிக்கும் ஓர் புடவகையாகும். இதன் ரகசியந்தெரியாத வேஷ பிராமணர்கள் புண்டரீகயாகமென்னும் ஓர் அசுத்தச் செயலும் சகலரும் - யதுமா யவற்றைச் செய்திருக்கின்றார். அவற்றை நமது பத்திரிகையில் எழுதுவதால் பத்திரிகையும் அசுத்தமாமென்று எண்ணி அகற்றி விட்டோம்.

### குறுந்திரட்டு

புலையர்க்கூடி யாகமென்று பசுவுங் கன்றுஞ் சுட்டுப் புசித்தார்
வலையர்க்கூடி வன்னி வளர்த்து மச்சமட்டு மேதய முண்டார்
சிலையர்க்கூடி பரவைக ளெய்து செந்தீயிட்டு தின்று வளர்ந்தார்
கலையோர்க்கூடி கண்டு வகற்றி கருணாரம்பங் காட்டினரன்றே.

4:16; செப்டம்ப ர் 28, 1910 –

# 56. அங்கலயமும் இலிங்கமும்

வினா : ஆண்குறிபோலும், பெண்குறிபோலும் கல்லுகளிலடித்து அதன் மீது ஆமணக்கு நெய் வார்த்து ஜலங்கொட்டி புஷ்பமிட்டு இலிங்க பூஜை என செய்துவருகின்றார்களே அதன் பயன் யாது: அவ்வகையானச் செயல் பௌத்ததன்மத்தைத் தழுவியதாகுமா; ஆகுமாயின் “காமேசுமிச்சாசாறா” வென்னுஞ் சீலத்திற்கு மாறுபட்டு காமிகா அர்ச்சனை என்றும் கூறத்தகுமன்றோ. இவ்வர்ச்சனையால் மக்களுக்கு ஏதேனும் ஈடேற்றம் உண்டா,

பா. முநிவாமி ராஜூ, பிரம்பூர்.

விடை : அதாவது பௌத்த தன்மத்தில் மனோவயிக்கியத்தையும், தேக ஐக்கியத்தையும் அங்க லிங்க அயிக்கியமென்றும், லய அங்கமென்றும் அங்கலயமென்றும் லிங்கமென்றும் வழங்கி வந்தார்கள். அத்தகைய வழக்கக்காலமோ வெனில் பகவன் பரிநிருவாணமடைந்த பின்னர் தேகத்தை தகனஞ் செய்து அஸ்தியையும் சாம்பலையுங் கொண்டுபோய் ஏழரசர்கள் ஒவ்வோரிடங்களில் அடக்கஞ்செய்து மண்டப வியாரங்கள் கட்டியதுமன்றி அவ்வஸ்தியையும் சாம்பலையும் புதைத்தயிடக் குறிப்புத் தெரிந்துக்கொள்ளு வதற்காய் மரகதங்களினாலும் வைரங்களாலும் குழவிபோற் செய்து அவ்விடம் புதைத்து சித்தார்த்தியார் அங்கலய பீடமென்றும், லய அங்கபீடமென்றும் வழங்கி குறுக்கல் விகாரத்தால் லிங்க பீடமென வழங்கி வந்தார்கள்.

அதன்பின்னர் புத்தசங்கங்களிலுள்ள சமண முநிவர்கள் மனோலயத்தையே அங்கலிங்க ஐக்கியமெனவும் வழங்கிவந்தார்.

**திருவள்ளுவ சாம்பவனார் ஞானவெட்டி**

விரிவான துரியமெனு மூலவீட்டில் வேதமதுக் கெட்டாத ரூபமாகி
கருவாகி தெவிட்டாத கனியுமாகி கதிராகி மதியாகி காற்று மாகி
உருவாகி யுடலாகி வுயிருமாகி வொளியாகி வெளியாகி யுடலுக்குள்ளே
அருவாகி யருள்ஞான சொரூபியாகி அங்கமதி லிங்கமதா யமைந்தேனையே

இதன் அந்தர் அங்கரகசியார்த்தம் ஞான சாதனர்களுக்கு விளங்குமேயன்றி அங்கலய சாதனமற்ற அஞ்ஞானிகளுக்கு விளங்கமாட்டாது. இத்தகையப் பேரானந்த ரகசியமொழியின் அந்தரார்த்தத்தை கல்வியற்றப் பெருங்குடிகளும் அறியமாட்டார்கள். அவர்களால் குருக்களென்று அழைக்கப்பெற்ற வேஷ பிராமணர்களுக்கும் அவை தெரியமாட்டாது.

இத்தகையக் கல்வியற்றக்குடிகள் வேஷபிராமணர்களை அடுத்து அங்கலிங்க அயிக்கிய மதம் அருள் புரிவேண்டுமென்று கேட்டுக்கொண்டதன் பேரில் அதனந்த ரார்த்தம் அறியா பொய்க்குருக்கள் ஆண்குறி போலும், பெண்குறி போலும் கற்களால் செய்வித்து அதைப் பூசிக்கத்தக்கக் கட்டிடங் கட்டி அங்கமென்றால் தேகம், இலிங்கமென்றால் ஆண்குறி, அயிக்கியமென்றால் பெண்குறி. இவைதான் உலகசிருஷ்டிக்கு ஆதி. இதையே நீங்கள் பூசித்து எங்களுக்கு தட்சணை தாம்பூலம் அளிக்கவேண்டுமென்று கல்வியற்றக் குடிகளின் வார்த்தைகளைக் கொண்டே சீவன வழித் தேடிக்கொண்டார்கள்.

அங்கலிங்க அயிக்கியமென்பது ஐயிந்திரியம் வென்ற சமாதி சாதன மென்றுணராது தென்மேற்கு நாட்டில் ஆவிடையார் கோவிலென்று ஓர் கட்டிடங் கட்டி அவற்றுள் கல்லினால் ஆண்குறி பெண்குறி நாட்டியுள்ளதாகக் காவியங்களால் விளங்குகின்றது.

**திருவள்ளுவ சாம்பவனார் ஞானவெட்டி**

ஆவிடையார கோவிலிலே, யமைத்த குறி ஆதரவாகவே சேர்ந்து மாதர்களினால்
மேவியதோர் நாதவிந்து வெகுவிசித விற்பனையறியாவொரு கற்பனை சொல்வேன்
பாவிக ளிதை யறியார், கல்லுகள் தனில் பாவனை யொப்பாகவுமே தாபிதஞ்செய்தார்
ஆவியென்று மறியாமல், செலவழிய ஆத்தமலிங்கமதனைப் பார்த்துணராமல் (தந்தன)

இத்தகையாய்க் கல்வியற்ற பெருங்குடிகள் கேழ்க்கவும் பொய்க்குருக்கள் போதிக்கவுமாகிவிட்டது. இவ்விலிங்க பூசையைக் கண்டிக்க வைஷ்ணவர்கள் இலிங்கமதக் கண்டனமென ஓர் புத்தகம் எழுதியிருக்கின்றார்கள். அவற்றைக் காணின் பொய்க்குருக்களின் செயலும், அவர்களது போதனையும் பரக்கவிளங்கும்.

உளியிட்டக் கல்லுகள் சிலகால் வெய்யல்வேகத்தால் வெடித்துப் போகும் என்றெண்ணி சிலரூபத்தின் மீது ஆமணக்குநெய் தடவி நீர் கொட்டுவதாகும்.

4:17; அக்டோபர் 5, 1910 –

# 57. கற்பூரம் கொளுத்துதல்

வினா : நம் தேசத்தில் இறந்தவுடன் கற்பூரம் கொளுத்தி தேங்காய் உடைக்கின்றார்களே அது என்ன காரணத்தினால்?

தன்மப்பிரியன், பம்பாய்,

விடை : அதாவது சிலகாலங்களுக்கு முன்பு தோன்றிய காளிகாதேவி கன்னகா பரமேஸ்வரி இவர்களுக்கு ஆடுமாடுகளை கொலை செய்து பாதிப்பது போல் சாந்ததேவதையை பூசிப்போர் தேங்காயுடைக்கும் ஓர் வழக்கத்தை அநுசரித்து வந்தார்கள். பூர்வப் பலகாரம் அவுல், கடலை, வாழைப்பழம் தேங்காய் இவைகளே யாதலின் தேவதைப் பெயர்சொல்லி தேங்காயுடைத்து அவுல் கடலையுடன் சேர்த்துப் புசிப்பதற்கேயாம்.

கருப்பூரத்தைக் கொளுத்துங் குணம் அவ்விடமுள்ளக் கெட்ட நாற்றங்களைப் போக்கி சுத்தஞ்செய்வதற்கேயாம். அதை ஓர் மக்கள் சுகாதார ஔடதமென்றே கூறல் வேண்டும்.

4:18; அக்டோபர் 12, 1910 –

# 58. சைநரும் சமணரும்

சமணரென்பது பௌத்த சங்கத்து செயலுக்குரியப் பெயர், சைனரென்பது பௌத்தமார்க்கத்தினின்று பிரிந்த ஓர் கூட்டத்தோர் பெயர்.

மகடபாஷையில் சமணரென்றும், சகடபாஷையில் சிரமணரென்றும், கூறியுள்ள பெயர் பௌத்த சங்கத்தோர் முதற்சாதன நிலையாகும் இச்சமண முனிவர்களில் தேர்ந்தவர்களையே நமது தேசத்தோர் சித்தர்களென்று அழைத்துவந்தார்கள்.

**பின்கலை நிகண்டு**

"நீரினிற் பூவில் வானில் நினைந்துழி யொதுங்குகின்ற
"சாரண ரெண்மராவர் சமணரிற் சித்தி பெற்றோர்.
சைனரென்பது புத்தருக்குரிய ஆயிர நாமங்களில் ஒன்று.
விரவு சாக்கையனே சைநன் விநாயகன் சினந்தவிர்ந்தோன்

**பாலி நிகண்டு**

'பஞ்சமார ஜீனோதீதி ஜீனா.'

சைநர்களென்பது பௌத்த தன்மத்தினின்று பிரிந்துள்ள ஓர் கூட்டத் தோர் தற்கால சாதியாசாரத்தையும், சமயாசாரத்தையும் அனுசரித்துக்கொண்டு பௌத்த தன்மத்தின் நிருவாணமென்னும் கருத்தரியாது நிருமான உருவத்தை வைத்துப் பூசித்து வருகின்றார்கள்.

மற்றப்படி சன்னியாசிகள் என்போர் பகவனுடைய காலத்தில் நிருமானமாக இத்தேசத்தில் சஞ்சரித்ததுங்கிடையாது. அவர்கள் சரித்திரமுங் கிடையாது.

தற்காலமுள்ள சில சைந் கூட்டத்தோர் பகவனது காலத்திலேயே சில நிருமான சன்னியாசிகள் இருந்தது போலும் அவர்களை பகவன் கண்டித்தது போலும் மகப் பாஷையில் எழுதி இவ்விடம் வந்திருந்த யாத்திரைக்காரர்களிடங் கொடுக்க அவைகளை மொழிபெயர்த்து ஆங்கிலேயர்களால் வெளியிட்டிருக் கின்றார்கள். அதன் காரணமோவென்னில், நிருவாணமென்னும் மொழியின் பொருளறியாது நிருமான ரூபத்தைப் பூசிப்பவர்கள் பகவன் காலத்திலேயே இருந்ததாக ரூபித்து தங்கள் சமயத்தை மேற்படுத்திப் பேசுவதற்கேயாம்.

முற்காலத்திலுந் தற்காலத்திலுங் காட்டு முராண்டிகள் நிருமானமாகத் திரிந்திருப்பார்களன்றி சன்னியாசிகள் நிருமானமாகத் திரிந்திருந்தார்களென்பது பிசகு. அவ்வகைத் திரிவோரை சீலமிகுத்தோர் சேர்ப்பரோ, அவர்களை சன்னியாசி களென்றுங் கூறுவரோ ஒருக்காலுங் கூறமாட்டார்கள். நிருமான சன்னியாசிகள் இத்தேசத்தில் இருந்ததுமில்லை அவர்களை சன்மானித்தவர் களுமில்லை .

4:18; அக்டோபர் 12, 1910 –

# 59. மதக்கடைகளால் சுகமுண்டா? மண்டிக்கடை மளிகைக்கடைகளால் சுகமுண்டா?

மதக்கடைகளென்பது யாதெனில், கல்லுகளாலும், பித்தளைகளாலும், களிமண்களாலும், எலும்புகளினாலும் செய்துள்ள பலவகை சிலைகளைப் பரப்பி இந்தசாமி பெரியசாமி, அந்தசாமி சின்னசாமி, அந்தசாமி மோட்சத்திற்கு நேரே வழிகாட்டுஞ் சாமி, இந்தசாமி எதிரிகளையெல்லாங் கொல்லுஞ் சாமி, அந்தசாமி உங்கள் நோய்களைப் போக்கிவிடுஞ்சாமி, இந்த சாமி உங்கள் பாவங்களையெல்லாம் நீக்கிவிடுஞ்சாமி எனக்காட்டி தட்சணை தாம்பூலம் கொண்டுவாருங்கோளென்றும், உண்டி பெட்டிக்கு காசுகள் போட்டுக் கொண்டே வாருங்கோளென்றும், இந்த சாமிகள் பெயர்களால் உங்கள் வீடுகளில் வேறு உண்டிகள் சேர்த்து கொண்டுவந்து கொடுங்கோளென்றும், வேறு சாமிகள் உங்களுக்கு சுகங்கொடுக்கமாட்டாது எங்கள் சாமிதான் உங்களுக்கு சகலசுகமும் கொடுக்கும் வேறுசாமிகளை நீங்கள் தொழ வேண்டாம் எங்கள் சாமிகளை மட்டிலும் தொழூஉங்களென்றும் கூறி ஏழைகளது பொருள்களை பறித்து தங்கள் தேசங்களுக்குக் கொண்டுபோவதும் தங்கடங் பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றிக்கொண்டு சுகசோம்பலுற்றிருப்பது மாகியச் செயல்களே மதக்கடைச் செயல்களென்றும் அவைகளுக்கான காரியகுருக்களையே மதக்கடை வியாபாரிகளென்றுங் கூறப்படும்.

மண்டிக்கடைகளென்பது யாதெனில், அரிசி, கேழ்வரகு, சோளம், கடலை மொச்சை முதலிய தானியங்களைப் பரப்பிவைத்துக்கொண்டு அது மேலான சரக்கு, இது மேலான சரக்கென்று கூறி துட்டு பெற்றுக்கொண்டு தானியமளப்பது மண்டிக்கடையென்றும்,

அதனை விற்போர் மண்டிக்கடை வியாபாரிகளென்றும் கூறப்படும். மளிகைக் கடைகள் யாதெனில், உப்பு புளி, மிளகாய், வெல்லம், நெய், சருக்கரை முதலிய தினுசுகளைப் பரப்பி வைத்துக் கொண்டு, அது நல்லநெய், இது நல்ல வெல்லம், அது புதுப்புளி, இது பழைய மிளகாய் எனக்கூறி துட்டு பெற்றுக் கொண்டு சரக்குகளை விற்பது மளிகைக்கடை என்றும் அவைகளை விற்போர் மளிகைக் கடைக்காரர்களென்றும் கூறப்படும். இம்மண்டிக்கடை, மளிகைக்கடை வியாபாரிகளோ தங்கள் வியாபாரமும் துட்டும் பெருகுவதற்கு மற்றவர்களின் கடைசரக்குகளைத் தாழ்த்தி தங்கள் சரக்குகளை உயர்த்திக்கூறுவது வழக்கமாகும். இவ்விரு கடைக்காரர்களும் தங்கள் சரக்குகளை உயர்த்தி ஏனையோர் சரக்குகளைத் தாழ்த்தித் தங்கள் வியாபாரத்தையும் பொருளையும் பெருக்கிக்கொள்ளுவதாயினும் அவைகளைப் பணங் கொடுத்து வாங்குவோர் தங்கள் பெண்டு பிள்ளைகளுடன் புசித்து பசிதீர்ந்து சுகமடைந்து வருகின்றார்கள்.

மதக்கடை வியாபாரிகளோ, காணாத சாமிகளைக் கண்டதைப்போல் பொய்யைச் சொல்லிப் பொருள் பறிப்பதும், காணாத மோட்சமென்னு மிடத்திற்குப் போய்க் கண்டுவந்தவர்களைப்போல் பொய்யைச்சொல்லி பொருள் பறிப்பதும், காணாத நரகத்திற்குப் போய்க் கண்டுவந்தவர்களைப் போல் பயமுறுத்திப் பொய்யைச்சொல்லி பொருள் பரிப்பதும், கப்பலில் அபாயம் நேரிட்டால் எங்கள் சாமியை வேண்டிக் கொண்டு உண்டியை சேர்த்துக் கொண்டு வந்துக் கொடுங்கள். உங்களுக்கு வியாதி வந்தால் எங்கள் சாமியை வேண்டிக்கொண்டு உண்டி சேர்த்துக் கொண்டுவந்து செலுத்துங்கோளெனப் பலவகைப் பொய்யைச்சொல்லி அறிவிலி களை வஞ்சித்து பொருள் சேர்த்து தங்கள் தேசத்திற்கு அனுப்புவதும் தங்கள் பெண்டு பிள்ளைகளுடன் சுகமாக உண்டு உடுத்தி உலாவுவதுமாகியச் செயல்களுக் குரித்த இடங்களே மதக்கடைகளென்றும், பொய்யைக் கூறிப் பொருள் பறித்து சீவிப்போரே மதக்கடை வியாபாரிகளென்றும் கூறப்படும்.

இத்தகைய மதக்கடைகளும், மதக்கடை வியாபாரிகளும் உலகிலுள்ள எத்தேசத்திலும் விசேஷமாகக்கிடையாது. இந்து தேசத்தில் மட்டும் விசேஷமாகக் காணலாம். காரணமோவென்னில் விசாரிணையென்பதற்று சொன்னதைச் சொல்லுங் கிளிபோல்

சொல்லிலித்திரிவோர் பலர். சொல்லின் காரணகாரியத்தை விசாரிப்போர் சிலர். கடைச்சோம்பேரிகளாகிய யாதொரு தொழில் முயற்சியுமின்றி சாமி கொடுப்பார், சாமிகொடுப்பாரென் பண்ணாந்து பார்த்திருப்போர் பலர். தன்முயற்சியே தன்னைக் கார்க்குமென்று முயல்வோர் சிலர். இத்தகையாய் விசாரிணையற்றக் கூட்டத்தோர் பெருகியும் விசாரிணையுள்ளோர் சிறுகியும் விட்ட படியால் வஞ்சினத்தாலும் பொய் சொல்லியும் பொருள் பறித்தும் சீவிப்பவர்களுக்கு விசேஷயிடங் கொடுத்து விட்டது.

வஞ்சகர்களின் கூற்றும், பொய்யர்களின் புரளியும், கல்விகற்றுள்ளோம் அவர்களை ஏமாற்றுங்கால் கல்லாதவர்களை எவ்வகையால் வஞ்சிப்பார்களென்பதைக் கண்டு கற்றோரே தெளிந்துகொள்ளல் வேண்டும். காரணம், விவேகமிகுத்தோர்களால் கண்டுபடிப்பதே படிப்பு மற்றபடிப்பெல்லாம் தெண்டபடிப்பென்று கூறப்பட்டிருக்கின்றது.

கண்டுபடிக்கும் விசாரிணையாவது யாதெனில், ஒருவன் எங்கள் சாமியை வேண்டிக்கொண்டால் உங்கள் வியாதி நீங்கிவிடுமென்பானாயின் அப்பா உங்கள் சாமியை வைத்திருக்கும் இடத்தில் கண்டிருக்கும் உவாந்தி பேதியை தடைச்செய்வ தற்கியலாத சாமி என் வியாதியை நீக்கிவிடுமா என்னுடைய வியாதி நீங்குவதும் அதிகரிப்பதும் என்னுடையச் செயலாயிருக்க உங்கள் சாமியால் என் வியாதியை நீக்குவதற்கு ஏதுவில்லையே சருவச்செயலும் அவனவன் ஏதுக்குத் தக்க நிகழ்ச்சியாயிருக்க அவனையன்றி வேறு ஏதுவாவது நிகழ்ச்சியாவது கிடையாவே என்பான். கண்டுபடிக்காத விசாரிணையற்றவனிடம் ஒருவன் சென்று, அப்பா, எங்கள் சாமியை வேண்டிக்கொண்டால் உன் வியாதி நீங்கிவிடுமென்று சொன்னவுடன் தன்னால் தோன்றிய வியாதியைத் தா னுணராதவனாதலின் அவன் சொன்ன சாமியை விழுந்து கும்பிட்டு வேண்டிக்கொண்ட காலம் அவ்வியாதி நீங்குவதற்குக் காலமாயிருந்துவிடுமாயின் அவன் தொழுத சாமியை மெய்சாமியென் றெண்ணி அச்சாமிக்குப் பணங்கிடையாதென இவன் சம்பாதிக்கும் பணங்களைக் கொட்டிக் கொடுப்பான். சாமி இவனுக்குப் பணங் கொடுப்பதா, இவன் சாமிக்குப் பணம் கொடுப்பதாவென்று உணரான். மனிதர்கள் தான் லஞ்சம் வாங்கிக் கொண்டு உதவி புரிகின்றார்கள். சாமியும் லஞ்சம் வாங்கிக்கொண்டு வியாதியை நீக்குமாவென்று பகுத்தறியான்.

இத்தகைய பகுத்தறியாதோர் கூட்டம் பெருத்தும், பகுத்தறிவோர் கூட்டம் சிறுத்தும் விட்டபடியால் மதக்கடை பரப்பி சீவிக்கும் பொய்க் குருக்களாகிய வஞ்சகர்களுக்கு மேலும் மேலும் பொய்யைச் சொல்லி வஞ்சித்துப் பொருள் சம்பாதிக்கும் வழிகள் பலவகையாகப் பெருகிவிட்டது. இத்தகையப் பொய்க் குருக்களின் போதனைகளையும், மாறுபாடுகளையும், நம்பி சோம்பேறிகள் அதிகரித்துவிட்டபடியால் கல்வியின் விருத்தியும், கைத்தொழில் விருத்தியும், விவசாயவிருத்தியும் ஞானவிருத்தியும் பாழடைந்து இந்து தேசக்குடிகள் சீர்கெடுவதுடன் இந்துதேசமும் சிறப்புக் குன்றிபோய்விட்டது. ஆதலின் நமதன்பர்கள் மதக்கடை பரப்பி சீவிக்கும் பொய்க்குருக்கள் போதனைகளை நம்பி வீண்மோசம் போகாது மெய்க்குருக்களாகத் தோன்றி நிற்கும் பிரிட்டிஷ் ஆட்சியாரின் போதனையில் நிலைத்து சீர்பெற வேண்டுகிறோம்.

4:18, அக்டோபர் 12. 1910 –

# 60. பரதேசத்தில் தன்மம் போதித்தது

வினா : பண்டை காலத்தில் பிராமணரென்போர் சைனா, ஜப்பான் முதலிய தேசங்களுக்குச் சென்று பௌத்ததன் மங்களை போதித்து அதேயிடத்தில் சமாதி அடைந்திருப்பதாகவும், அச்சமாதி பீடம் நாளதுவரையிற் காணப்படுகிற தென்றும் சில இங்கிலீஷ் பத்திரிகைகளிலும் தமிழ்ப் பத்திரிகைகளிலும் வரைந்திருப் பதைக் கண்டேன். அவ்வகை சரித்திரம் ஏதேனும் உண்டா? அது மெய் சரித்திரமா.

கோ. வேதாஜலம், புரசைவாக்கம்.

விடை : தாம் வினவிய சங்கை யதார்த்த சரித்திரமேயாம். ஆயினும் தற்காலம் பெண்சாதி பிள்ளைகளுடன் இகபோகத்திருந்து அனந்தம் பிறவிக்கு ஆளாகும் வேஷபிராமணர்கள் அவ்வகை பரோபகாரங்கொண்டு பல தேசங்களுக்குச் சென்று தன்மம் போதித்தது கிடையாது சாதியில் தலைவர்களென வேஷமிட்டுக் கொண்டு சூத்திரனுக்கு வேதம் போதிக்கப்படாதென்னும் கட்டுப்பாடுகளை வகுத்துக்கொண்டுள்ள இவர்கள் சீனருக்கும் ஜப்பானியருக்கும் தன்மம் போதித்திருப்பார்களென்பது மெய்யாமோ இல்லை, இல்லை, பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை என்ன பற்றுக்களையும் அறுத்து சருவ உயிர்களையும் தன்னுயிர்போல் கார்க்கும்

பரிபூரணநிலை பெற்ற இருபிறப்பாளர் களாம் யதார்த்த பிராமணர்களே அவ்வகையாக சகல தேசங்களுக்குஞ் சென்று பௌத்த தன்மங்களை பரவச்செய்திருக்கின்றார்கள். அவர்கள் வம்மிஷவரிசையோ சாக்கைய குல திராவிடர்களேயாவர்.

இத்தகைய சாக்கைய குல திராவிடர்கள் அமேரிக்கா முதலிய தேசங்களுக்குச் சென்று பௌத்ததன்மத்தைப் பரவச்செய்த சரித்திரம் அவ்விடத்திய சிலாசாசனத்தில் பதிந்துள்ளதன்றி அதன் குறிப்பு சீனர்களுடைய புராதனப் புத்தகத்திலும் பதிவு செய்திருக்கின்றார்கள். அவ்வகைச் சென்ற திராவிடர்களுக்குள் பிராமணநிலை அடைந்த ஒருவர் சீனதேசத்திலும் ஜப்பான் தேசத்திலும் சத்தியதன்மத்தைப் பரவச்செய்து அவ்விடத்திலேயே பரிநிருவாணம் அடைந்ததும் யதார்த்தம். நாளதுவரையில் அவரது அங்கலயபீடம் இருப்பதும் யதார்த்தமேயாம்.

4:19; அக்டோபர் 19, 1910 –

# 61. பௌத்த தன்ம சிலாவணக்கம்

வினா : நாம் சிலைகளை வைத்து பூஜிக்கும் இவ்வணக்கத்திற்கும், பிற சமயிகள் இந்து, கிறிஸ்தவர்கள் உருவங்களை வைத்து பூஜித்து வணங்குவதற்குமுள்ள அந்தரார்த்தமும் பேதமும் யாது.

கே. பெருமாள், K.G.F

விடை : ஜகத் குருவாகிய புத்தபிரான் உலகெங்கும் சுற்றி அறக்கதிர் விரித்து சங்கங்களை நாட்டி வருங்கால் அந்தந்த சங்கவியாரங்களில் தன்னைச் சிந்தனைச் செய்யுங்கோள் என்றாயினும் தன்னைக் கனப்படுத்துங்கோ ளென்றாயினுங் கூறியது கிடையாது. அவர் பரிநிருவாணமடைந்த நெடுங்காலத்திற்குப் பின்பு தோன்றிய சங்கத்தலைவர்கள் குடிகளை நோக்கி சக்கிரவர்த்தித் திருமகன் நம்மெய்ப்போன்ற உருவினராகத் தோன்றி நமது முன்னின்று சத்தியதன்மத்தைப் போதித்தது போன்ற ஒருருவமும், அவர் ஞானசாதனம் சாதித்தது போன்ற ஒருருவமும் அவர் பரிநிருவாணமடைந்த யோகசயனத்தைப் போன்ற ஒருருவமும் வியாரங் கடோரும் செய்து வைத்துக் கொண்டு குருவைக்கண்டு மாணாக்கர் ஒடுங்கி நடந்துக்கொள்ளுவது போல் சங்கத்துள் வாழும் சமணமுநிவர்கள் அவரது போதனா உருவத்தைக் கண்டு ஞானசாதனங்களைச் செய்து வருவதும், அவரது யோகசயன உருவத்தைக் கண்டு அவரைப்போல் யோகசயனத்தில் முயற்சிப்பதுமாகியச் செயல்களை நடத்தி வந்தது இயல்பாகும். அவற்றைக் கண்டு வரும் உபாசகர்களும் அவ்வாறே மடங்களுக்குச் சென்று சற்குரு நாதனுக்கும், அவரது தன்மத்திற்கும், அவரது சங்கத் திற்கும் வந்தனை புரிந்து தங்களது சத்திய தன்மத்தின்படி சீவப்பிராணிகளுக்குத் துன்பஞ் செய்யமாட்டோம், பொய் சொல்லமாட்டோம், பிறர்

பொருளை அபகரிக்கமாட்டோம், அன்னியர் தாரத்தை இச்சிக்க மாட்டோம், எங்கள் மதியைக் கெடுக்கும் மதுபானத்தை அருந்தமாட்டோமென வாக்குறுதிக்கூறி வீடேகுவது வழக்கமாகும். மற்றப்படி அச்சிலைகளைக் கண்டு எங்கள் வியாதியை நீக்கவேண்டும், எங்களுக்கு தனம் பெருகவேண்டும். எங்களுக்கு மாடு கன்றுகள் பலுகவேண்டுமென்று கேட்கவும் மாட்டார்கள். அவ்வகை எண்ணங்கொள்ளவும் மாட்டார்கள். காரணமோவென்னில், அவாவர்கள் செய்த கருமங்களை அவரவர்களே அநுபவித்துத் தீரல் வேண்டு மென்பது பிரத்தியட்சம் ஆதலின் அத்தகைய வேண்டுகோளுங்கிடையாது, வேண்டுங் கைம்மாறுக்கு லஞ்சமுங் கொடுக்கமாட்டார்கள்.

அந்தந்த மடங்களில் வாசஞ்செய்யும் சமணமுநிவர்களும் தங்களுக்கு வேண்டிய ஒருவேளை புசிப்பின்றி பணங்களை ஏனும், நகைகளை ஏனும் தங்கள் கைகளை ஏந்தி வாங்கவே கூடாது. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை இம்மூன்றினையும் வெறுக்க வேண்டியதே அச்சங்கத்தோர் சாதனமாதலின் தாங்களே சகல பற்றுக்களையும் அறுக்கத்தக்க உபாயங்களைத் தேடுவதுடன் உலக மக்களும் பற்றுக்களில் அழுந்தி துக்கவிருத்தி அடையாமலிருக்கும் போதனைகளையும் செய்துவருவது வழக்கமாகும். பஞ்சசீல சாதனமே பற்றறுக்கும் பாதையாதலின் அவற்றைப் போதித்து நல்வழி காட்டிய நாதனை சிந்தித்து சீர்பெறுவதற்காக அவரது சிலா உருவங்களை கண்டவுடன் அவர் குமரப்பருவத்தில் சக்கிரவர்த்தி பீடத்தைத் துறந்த சிறப்பையும், அருமைந்த மனைவியை அகன்ற வல்லபத்தையும், அத்தகையப் பற்றற்ற செயலால் பரிபூரண சுகமாம் நிருவாணம் பெற்று அப்பேரானந்த சுகத்தை சகல மக்களுக்கும் போதித்து ஈடேற்றிய அன்பின் மிகுதியையுஞ் சிந்தித்துத் தாங்களும் அவரைப்போல் ததாகதம் பெருவதற்காகக் கனஞ்செய்து வருகின்றார்களன்றி வேறன்று.

தற்காலம் நமதுதேசத்தில் மண்றோ , குயின் விக்டோரியாள் எட்வர்ட் சக்கிரவர்த்தியார் இவர்களுடைய உருவ சிலைகளைக் கண்டு அவரவர்கள் வாழ்க்கைகால நீதிநெறியாம் செயல்களை சிந்தித்து வந்திப்பதுபோல் புத்தரது சிலாரூபங் கண்டவுடன் அவரது வாழ்க்கைகால நீதி நெறியாம் நற்செயல்களை சிந்தித்து வந்தித்து வருகின்றார்கள்.

மற்றப்படி அச்சிலைகள் இவர்களுக்கு மோட்சங்கொடுக்கும் என்றாயினும் இவர்கள் வியாதியை நீக்கிவிடும் என்றாயினும், இவர்கள் அல்லலை அகற்றிவிடும் என்றாயினும் சிந்திப்பதுங் கிடையாது, அச்சிலைகளுக்கென்று லஞ்சமாம் பரிதானம் அளிப்பதுங் கிடையாது.

இத்தகைய சிலாரூப ஆதரவைக்கொண்டே நூதனமாகத் தோன்றிய மதக்கடை வியாபாரிகள் நாலு கை, ஆறுகையுள்ள உருவ சிலைகளையும், இறக்கைகட்டி ஆகாயத்திற் பரக்கும் உருவ சிலைகளையும், உலகத்திற் காணா பேய்களென்னும் உருவ சிலைகளையும் செய்து தங்கள் கூடத்திற் பரப்பி பேதை மக்களுக்குக் காண்பித்து பயமுறுத்தி பொருள் சம்பாதித்து தங்கள் தேசங்களுக்கு மூட்டைக்கட்டியனுப்புவதுடன் சுதேச மதக்கடை வியாபாரிகள் தங்கள் தங்கள் பெண்சாதி பிள்ளைகளுடன் சுகமாகப் புசிப்பதற்கு அச்சிலாரூபங்களைக் காட்டி பேதை மக்களுக்குப் பொய்க்கதைகளைப் போதித்து பொருள் சம்பாதித்து அதைக் கொண்டே சீவித்து வருகின்றார்கள்.

இத்தகையப் பொருளாசை மிகுத்த பொய்க்குருக்களாம் மதக்கடை வியாபாரிகளுக்கும் பொருளாசையை நீக்கி பற்றறுக்க முயலும் மெய்க் குருக்களாம் பௌத்த சங்கத்தோர்களுக்கும் அனந்த பேதமுண்டு. இதன் மூலம் அறியவேண்டியவர்கள் இதனுள் இனி வரைந்துவரும் இந்திரதேச சரித்திரத்தால் உணர்ந்துக்கொள்ளலாம்.

4:20, அக்டோபர் 25, 1910 –

# 62. தீண்டாதவர்கள் மதத்தால் தீண்டப்படுவார்களோ தாழ்ந்தவர்கள் மதத்தால் உயர்வாவர்களோ

ஈதோர் புதின மொழிபோலும். அதாவது, ஓர் மதத்தினர் தீண்டாத நந்தனென்பவனை நெருப்பிலிட்டுச் சுட்டு சேர்த்துக்கொண்டதாக வரைந்திருக்க, தற்காலம் தீண்டாதவர்களை சுடாமற் சேர்த்துக் கொள்ளும் மதம் ஏதேனும் உளதோ. உளதாயின் தீண்டாதவன் பறையன் எனக் கூறும் பொறாமெய் மொழிகள் மாறுமோ. மாறுமென்பதாயின் திருவள்ளுவரூரில் அமைத்துள்ளக் கோவிலிலும் பறைப் பெருமாட் கோவிலென்பது மாறவில்லையே. நாயனார்களிலும் பறைநாயனார் பெயர் மாறவில்லையே. ஆழ்வார்களில் பறையாழ்வார் பெயர் மாறவில்லையே. இவ்வகையாலெல்லாம் உறுதிபெற இழிவுபடுத்தி ஓர் பெருங் கூட்டத்தோரை தங்கள் மதத்திலும் தாழ்வடையச் செய்தவர்கள் தற்காலம் அவர்களை உயர்வடையச் செய்யப்போகின்றோம் என்று வெளிதோன்றியுள்ளது விந்தையிலும் விந்தையென்றே கூறல்வேண்டும்.

காரணமோ வென்னில், ஆயிரத்திச்சில்லரைவருடங்களாக பௌத்ததன்ம விரோதத்தால் தங்களுக்குப்பராயர்களென்று கூறி பலவகையாலும் இழிவுபடுத்தி பாழடையச் செய்து வந்தார்கள். தற்காலம் ஏது காரணத்தைக் கொண்டோ அவர்களை சீர் பெறச் செய்யப்போகின்றோ மென்பதினாலேயாம்.

யதார்த்தத்தில் ஏழைகளை சீர்திருத்தி சுகம் பெறச் செய்யவேண்டு மென்னும் அன்பு இவர்களுக்கு இருக்குமாயின் தீண்டாதவர்கள், தீண்டாதவர்களென்றும், தாழ்ந்த

வகுப்பார், தாழ்ந்த வகுப்பாரென்றும் சொல்லிக்கொண்டே சீர்திருத்துவரோ, இல்லை. பொறாமெய்மிகுத்தோரால் தாழ்த்தப்பட்டவர்கள் கருணைதங்கிய பிரிட்டிஷ் ஆட்சியில் தன்னிற்றானே உயர்ந்துவரும் செயல்களைக் கண்டு சகிக்க ஏலாது ஏழைகளை சீர்திருத்துவது போல் அறுபது லட்சத்திற்கு மேற்பட்ட குடிகளைத் தீண்டாதவர்கள், தீண்டாதவர்களென்றும், தாழ்ந்த வகுப்பார், தாழ்ந்த வகுப்பாரென்றுங் கூறிவருவது பிரிட்டிஷ் ஆட்சியில் முன்னேறுகின்றவர்களை இன்னுந் தாழ்த்தி ஈடேறவிடாமற் செய்வதற்கு இதுவுமோர் தந்திரம் போலும்.

பொதுவாகியக் கோவிலுக்குள் விடாதவர்களும், பொதுவாகியக் குளத்து நீரை கிணற்றுநீரை மொண்டு குடிக்கவிடாதவர்களும், பொதுவாகிய அம்மட்டர்களை சவரஞ்செய்யவிடாதவர்களும், பொதுவாகிய வண்ணாரை வஸ்திரமெடுக்க விடாதவர்களுமாகிய பொறாமெயே உருக்கொண்ட இவர்களும் ஏழைகளை ஈடேற்றுவார்களோ அவர்கள் சுகபோகத்தைக் கண்டும் சகிப்பார்களோ அவர்களடையும் உயர் பதவிக்கு ஆனந்தமுங் கொள்ளுவார்களோ, இல்லை. இவர்களது பரிதாப நிலையும், வீடேற்று மொழிகளும், எத்தகையத்தென்னில் ஆடுகளெல்லாம் நனைகிறதென்று புலிகள் யாவும் புரண்டழுவதுபோலாம். பறையனைக்கொண்டு சங்கராச்சாரி வேதாந்தந் தெளிந்து கொண்டதாக டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகைக் கூறியதென சுதேச மித்திரன் கூறியது மெய்யாயின் அது கால் பறையன் ஜெகத்குருவா அல்லது சங்கராச்சாரி ஜெகத்குருவாவென்பதை விவேகிகளே தெளிந்துக்கொள்ளல் வேண்டும்.

4:20; அக்டோபர் 26, 1910 –

# 63. தீபாவளி கார்த்திகையென்னும் பண்டிகைகள்

இதுவே தீபவதி ஸ்நானம் கார்த்துல தீபமென்று கூறப்படும். இதன் செயல்களோவென்னில், பூர்வம் இத்தேசத்தில் பௌத்த தருமம் நிறைந்திருந்த போது அந்தந்த சங்கங்களிலுள்ள சமண முநிவர்கள் தங்கள் தங்கள் ஞானவிசாரிணை காலங்களும், ஞானசாதன காலங்களும் நீங்கலாக மற்றயகாலங்களில் புற் பூண்டுகளின் குணாகுணங்களையும், தானியங்களின் குணாகுணங்களையும், விருட்சங்களின் குணாகுணங்களையும், கனி வர்க்கங்களின் குணாகுணங்களையும், நெய்களின் குணாகுணங்களையும், ஓடதிகளாம் உபரசங்களின் குணாகுணங்களையும், பாஷாணங்களின் குணாகுணங்களையும், நீர்களின் குணாகுணங்களையும், மண்களின் குணா குணங்களையும் ஆராய்ச்சி செய்து சுகபலன் கண்டபோது அத்தேசத்து அரசர்களுக்கும், பௌத்த உபாசகர்களுக்குந் தெரிவித்து அதனை விருத்தி பெறச்செய்து சகல குடிகளுக்கும் உபயோகப்படும்படி செய்வார்கள். அத்தகைய பௌத்த சங்கத்தோர் முயற்சி நாளதுவரையில் ஜப்பானிய தேசத்தில் நிறைவேறிவருகின்றது.

இந்திய தேச நடவடிக்கைகள் ஜப்பான் தேசத்திற்கு எவ்வகைம் சென்ற தென்பீரேல், இத்தேசத்திய திராவிட பௌத்தர்கள் பலதேசங்களுக்குஞ் சென்று தங்கள் வியாபாரங்களை விருத்தி செய்து வந்ததுமன்றி திராவிடருக்குள் சங்கஞ் சேர்ந்து சிரமணநிலைகடந்து பிராணசித்திப்பெற்ற யதார்த்த பிராமணர்கள் ஜப்பான் தேசத்திற்குச் சென்று அ சங்கங்களை நாட்டியதுமன்றி மேற்கூறிய உபகாரவிருத்திகளையுஞ் செய்து வந்தார்கள். அத்தகைய விருத்திகள் யாதெனில்:

அத்தேச சங்கத்தோர் ஓர் தானியத்தையேனும், கனிவர்க்கங்களையேனுங் கண்டுபிடிப்பார்களாயின் அவற்றை அரசரைக்கொண்டேனும், குடிகளைக் கொண்டேனும் மிக்க விருத்தி செய்து தானியத்தையோ கனியையோ ஓரிடத்திற் சேர்த்து சகலமக்களையுந் தருவித்துப் புசித்து ஏழைகளுக்கும் ஈய்ந்து அக்கனிவகையைக் கண்டுபிடித்த முதல் நாளெனக் கொண்டாடி அதை விடாமுயற்சியில் விருத்தி செய்வதற்காய் அதனை கண்டுபிடித்து புசித்தநாளை வருஷந்தோருங் கொண்டாடுவது வழக்கமாம். அத்தகைய நடவடிக்கை நாளதுவரையில் அவ்விடத்தில் நடைபெற்று வருகின்றது.

அதுபோலவே நமது தேச பௌத்த சங்கத்தோர் எள்ளினது நெய்யை கண்டுபிடித்து அதைத் தலைமுழுகு தைலமாகவும் பதார்த்தங்களை வறுக்கும் நெய்யாகவும் உபயோகித்து சுகங்கண்டதின் பேரில் அதனை தங்கள் அரசனுக்குத் தெரிவிக்க அவன் அதனை அதிக விளைவித்து எள்ளி நெய்யெடுத்து தேசக்குடிகளைத் தருவித்து சகலருக்கும் போதுமான நெய்யீந்து அத்தேசத்தி லோடும் தீபவதி நதியில் ஸ்நானஞ் செய்தும் பலகாரங்களைச் சுட்டும் உபயோகித்து சுகபலன் காண்பீர்களாயின் எள்ளை மேலும் மேலும் விருத்தி செய்து நெய்யெடுத்து உபயோகித்துக் கொள்ளுங்கோளென்று உத்திரவளித்ததின் பேரில் சகல குடிகளும் எள்ளி நெய்யாம் எண்ணெய்யை சிரசில் தேய்த்து தீபவதி நதியில் முழுகியதுமன்றி அந்நெய்யில் பலகாரங்களும் சுட்டுப் புசித்து சுகங்கண்ட நாளை வருஷந்தோருந் தீபவதி ஸ்நானமெனக் கொண்டாடி பலகாரஞ்சுட்டு அன்பர்கள் வீட்டிற்கு இவர் களனுப்புவதும், இவர்கள் வீட்டிற்கு அவர்களனுப்புவதுமாகிய வழக்கத்தைப் பெருக்கி எள்ளிநெய்யை விருத்தி செய்துக்கொண்டு வந்தார்கள்.

தீபவதிஸ்நானமென்பதை தீபவொளி, தீபாவெளி ஸ்நானமென மாற்றிவிட்டார்கள். காரணமோ வென்னில், மாவலி மன்னன் பேரொளியால் கீப்வொளியெனக் கொண்டாடிய வார்த்தையைத் தீபவதி ஸ்நானத்தில் எள்ளிநெய்யின் இஸ்நானத்தை மறைத்து தீபாவெளி பண்டிகையென வழங்கிவருகின்றார்கள்.

கார்த்திகைத் தீபமோவென்னில் சமணமுநிவர்காளல் ஆமணக்கு நெய் கண்டுபிடித்து அத்தேசத்து அரசனிடமளிக்க அவ்வரசன் இவ்வாமணக்கு நெய்யின் தீபத்தால் குடிகளுக்கும் மற்றும் சீவராசிகளுக்கும் ஏதேனும் துன்பம் விளையுமோ வெனக் கருதி, அத்தேசத்திலுள்ள அண்ணாந்து மலையினுச்சியில் பள்ளத்தை வெட்டி அதில் ஆமணக்கு நெய்யைவிட்டு பெரும் வத்திகள் போட்டு தீபமேற்றி இரவும் பகலும் மூன்று நாள் எறியவிட்டு அவ்விடம் பார்த்தபோது அங்கு சூழ்ந்திருக்கும் ஆடுமாடுகளுக்கும் மற்ற பட்சிவகை களுக்கும் மனுக்களுக்கும் யாதொரு கெடுதியும் நேரிடாதிருப்பதைக் கண்ட அரசன் ஆமணக்குப் பயிர் அதிகவிளைவித்து அதன் நெய்யெடுத்து குடிகளெல் லோருக்குங் கொடுத்து வீடுகடோருந் தீபமேற்றி இருளை விளக்கி ஒளியில் வாழ்க்கை புரியுங் கார்த்துலதீபம் ஏற்றுங்கோளென்று ஆக்கியாபித்தான் குடிகள் யாவரும் ஆமணக்கு நெய்யைக் கொண்டு போய் தங்கள் வீடுகளுக்குள் அத்தீபத்தை ஏற்றுவதற்கு பயந்து வெளியிலே மூன்றுநாள் எரியவிட்டு யாதொரு துன்பமூங் காணாது சுகங்கண்டபடியால் வீட்டுக்குள் தீபமேற்றும் வழக்கத்தை அநுஷ்டித்ததுமன்றி தேசத்தோர் ஆமணக்கு நெய்யை மாறாது விருத்தி செய்வதற்காக வருஷந்தோரும் கார்த்துலதீபமெனக் கொண்டாடி வந்தார்கள். அப்பெயர் தற்காலம் மாறி கார்த்திகைத்தீபமென்று வழங்கியதற்குக் காரணமியாதெனில்: கார்த்திகை மாதத்தில் ஆமணக்குத் தீபமேற்றியதாதலின் இருளை விலக்கும் கார்த்துலதீபப் பெயரை மாற்றிக் கார்த்திகைத் தீபமென வழங்கி வருகின்றார்கள்.

பௌத்தர்களின் உலகவிருத்திச்செயல்களை வேஷப்பிராமணர்கள் மாற்றி தங்கள் சுயவிருத்திக்கான ஏதுக்களைத் தேடிக்கொண்டபடியால் எள்ளி நெய் விருத்தியும், ஆமணக்கு நெய் விருத்தியும் கெட்டு நாளுக்குநாள் நசிந்து வருகின்றது.

4:22, நவம்பர் 9,1910 -

# 64. பௌத்த தன்ம போதமும் அவற்றைக் கேட்போர்கள் நாதமும்

ஓர் போதகர் ஐரோப்பா கண்டத்தைப்பற்றி போதிப்போமெனக்கூறி அவை முடிந்த பின்னர் காலமிருக்குமாயின் அமேரிக்கா கண்டத்தைப்பற்றியும், ஆசியா கண்டத்தைப்பற்றியுங் கூறுவர். அவ்வகைக்கூற்றால் கேட்போருக்கு லாபமும் போதிப்போருக்கு நஷ்டமுமேயன்றி வேறில்லை. அத்தகைய போதத்தைக் கேட்போர் போதகருக்கு நன்றியறிந்த வந்தனஞ் செய்ய வேண்டியதை விடுத்து அவரைப் புறங்கூறி நாதமிடுவது பொறாமெய்க் கூற்றேயாம்.

அதாவது ஓர் பிரசங்கியார் போதத்தைக் கேட்கப்புகுவோர் சுத்த இதயத்துடன் சென்று போதத்தை கிரகிப்பாராயின் அன்னம் போல் நீரென்னும் வீண்போதத்தை அகற்றி பாலென்னும் பிரயோசனத்தைக் கிரகித்து சுகானந்தம் பெறுவர். அங்ஙன மின்றி போதங் கேட்கப் போம்போதே விரோத சிந்தை கொண்டு கேட்பதாயின் சேருநீரும்போல் கலக்குற்று அவிரோதமற்று சகோதரவாஞ்சையாம் அன்புஞ் செற்று தனக்குத்தானே துவேஷத்தைப் பெருக்கிக்கொள்ளுகின்றார்கள். இத்தகைய துவேஷநிலை தன்னைத்தானே துக்கத்திற்கு ஆளாக்கிவிடுமன்றி போதகருக்கு அத்துக்கம் அணுகாதென்பது துணிபு.

பௌத்த சங்கத்தோராம் சமண முநிவர்கள் வரைந்துள்ள நூற்கள் யாவிலும் கடவுளென்றும், தெய்வமென்றும், சாமியென்றும் வரைந்திருக்க அம்மொழியை சிரமேற்கொண்டு ஆண்டு வரும் பௌத்தர்கள் தெய்வமில்லை யென்றும், கடவுளில்லை யென்றுங் கூறுவரோ. ஆதியங் கடவுளும், ஆதி தெய்வமும் புத்தராகவேயிருக்க அவரை

இல்லையென்று துணிந்துங்கூறுவரோ ஒருக்காலுங் கூறார்கள். கடவுளென்னு மொழியும், தெய்வமென்னு மொழியும் பௌத்தர்களாலேயே தோன்றி பௌத்தர் களாலேயே வரைந்து, பௌத்தர்களாலேயே மொழிந்தும் வருபவற்றை ஏனைய மதத்தோர் ஏற்று அதன் பொருள் விளங்காது வீணேநிந்திப்பதில் யாது பயன்.

மக்களது நற்செயலைப்பற்றிய மொழிகளை வேறுருசெய்து மனோபிராந்தியால் சிந்திக்கினும் மனுவுருவாய சிந்தனையாமன்றி வேறுருவே ண்டாரென்பது திண்ணம். அதற்குமோர் தாட்டாந்தங் கூறுவாம். அதாவது லண்டன் பார்லிமெண்டு மெம்பராயிருந்து காலஞ்சென்ற சர்சார்ளஸ் பிராட்ளா என்பவர் அவருடைய மிக்க நேயரான ஓர் கத்தோலிக்குப் பாதிரியார் வீட்டிற்குச் சென்று வார்த்தையாடிக்கொண்டிருக்கும்போது அவருடைய நேயகூட மத்தியில் ஓர் விருத்தாப்பியக் கிழவனைப்போல் ஒருபடமும் அவரருகில் ஓர் சிறு குழந்தையும் இருப்பது போன்ற உருவம் அமைக்கப்பெற்றிருந்ததாம். அப்படத்தைக் கண்ட பிராட்ளா என்பவர் பாதிரியாரைநோக்கி ஐயா இப் படம் யாருடையதென்றாராம். பாதிரியார் சற்று நிதானித்து இப்பெரியவர் பிதா, இக்குழந்தை, கிறிஸ்துவென்று கூறினாராம். அதற்கு பிராட்ளா மறுதலித்துப் பிதாவென்றால் உங்கள் (காடோ) என்றாராம். அதற்குப் பாதிரியார் ஆமென்று கூறிய போது பிராட்ளா பாதிரியாரைநோக்கிக் கிறிஸ்துவானவர்க் குழந்தையாய் இருக்கும் போதே உங்கள் பிதாவென்னுந் (காடானவர்) இவ்வளவு விருத்தாப்பியக் கிழவனாயிருந்தபடியால் இதுவரையில் அவர் இறந்துபோயிருப்பாரல்லோவென்று கூறினாராம். அதை வினவிய பாதிரியார் நகைத்து எனது பிரியமான நேயரே, மனித உருவத்தைக்காட்டி மனிதர்களுக்கு மதி கூறவேண்டுமேயன்றி மனிதனையன்றி வேறுருகொண்ட பிதா இல்லையென்று கூறினராம். இதன் சரித்திர வாக்குவாதத்தை அவரது நாஷனல் ரீபார்மரென்னும் பத்திரிகையிற் காணலாம்.

இத்தகைய திருட்டாந்த தாட்டாந்தங்களைக் கொண்டே மனிதவுருவத்தைச் சுட்டி அதன் செயலால் கடவுளென்னு மொழியும், தெய்வமென்னு மொழியந் தோன்றியுள்ளதென்பதைத் தெள்ளறத் தெளிந்துக்கொள்ளலாம். அவற்றி னந்தார்க்கங்களை விசாரித்துணராது பௌத்தர்களால் வகித்துள்ளக் கடவுளென்னு

மொழியையும், தெய்வமென்னு மொழியையும் ஏற்று அதன் பொருளுணராது பௌத்தர்கள் கடவுளில்லை, தெய்வமில்லை என்று கூறுவதாக விதண்டவாதஞ் செய்வதழகின்மெயேயாம். மயிலை திருக்குளத்துத் தாமரைப்பூ புதிதோ பழயதோவென வினவில், கண்டறிந்து புதிது அல்லது பழயதென்று கூறிவிடலாம். அங்ஙனமின்றி ஆகாயப்பூ பழயதோ புதியதோவென வினவுவார்களாயின் ஆகாயப்பூ இல்லை யென்னும் விசாரிணை யற்ற மந்தமதிகள் வினாவென உணர்ந்து மவுனமுறுவது சுவாபம். மறுத்துங் கேட்பார்களாயின் இல்லையென்றே துணிந்து கூறுவர்.

அதுபோல் மநுமக்களையன்றி மக்களையும், மலைகளையும் உண்டு செய்த கடவுள் ஒருவரிருக்கின்றாராவென உசாவுவார்களாயின் அதனைக் காட்சியிலும், அநுபவத்திலும் உணராத மெய்யர்கள் மவுனஞ் சாதிப்பார்கள். மறுத்துங் கேட்பார் களாயின் இல்லையென்றே துணிந்து கூறுவர். காரணமோவென்னில், உண்டுசெய்யுங் கடவுளை கண்டு செல்லுவோர் ஒருவருமில்லாததினால் கண்டதை உண்டென்றும், காணாததையில்லை யென்றுங் கூறுவது பௌத்தர்களின் நெறியாகும்.

சருவ சீவர்களிடத்தும் தேய்வென்னும் ஒளியுண்டு. அதனழியா நிலை கண்டோர் சருவசீவர்களிலும் தெய்வம் நிறைந்துள்ள தென்னிற் பொருந்தும். சருவசீவர்களிடத்தும் அன்பென்னும் சிவமுண்டு. அதன் பெருக்க சுகங் கண்டோர் சருவசீவர்களிலும் சிவம் நிறைந்துள்ளதென்னிற் பொருந்தும். சருவசீவர்களிடத்தும் நன்மெயென்னுங் கடவுளுண்டு. நன்மெயின் சுகச்செயலைக் கண்டோர் சருவசீவர் களிலுங் கடவுள் நிறைந்துள்ளதென்னிற் பொருந்தும்.

இத்தகையுணர்ந்து கூறும் வாக்கியத்தை பௌத்தர்களும் ஏற்பர். மேற்கூறியுள்ள வாக்கியங்களின் அந்தரார்த்தங்களை உணராது தன்செயலற்று ஏனையோன் செயலொன்று உண்டென்பதை பௌத்தர்கள் இல்லையென்றே துணிந்து கூறுவர். அக்கூற்றின் நீதிபோத முணராதோர் பௌத்தர்கள் கிறீஸ்துமார்க்கத்தையுந் தூஷிக்கின்றார்களென்று தூற்றுவர் அத்தகையோர் தூற்றினை அறியாதோர் ஏற்பாரன்றி அறிவுடையார் ஏற்காரென்பது திண்ணம்.

பௌத்த தன்மத்தினின்றே கிறீஸ்துவின் தன்மம் தோன்றியுள்ளதென்பது அலக்சாண்டர் சரித்திரத்தாலும் தீபேத்திற்கும் ரோமைக்குமுள்ள யாத்திரா சரித்திரத்தாலும் உலகெங்கும் பிரசித்திப்பெற்றிருக்க பௌத்தர்கள் கிறிஸ்துவின் மார்க்கத்தை தூஷிப்பரோ, ஒருக்காலுந் தூஷிக்கமாட்டார்கள்.

தற்காலம் சில பௌத்தர்களுக்குள் யாவரேனும் கிறிஸ்துவின் மார்க்கத்தை தூஷித்திருக்கின்றார்களென்பதாயின் தன்னை அடிப்போனை அடிக்காவிடினுந் தடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமாதலின் தன்னைக்காக்கு நூல் தூஷணையாகாது. மற்றும் அவர்கள் அறியாமெயால் இவர்களை தூஷிக்கவும் இவர்களறியாமெயால் அவர்களை தூஷிக்கவும் ஏற்பட்டிருக்குமேயன்றி தோன்றிய ஏதுவை உணர்ந்தபின்னர் தோற்றத்தை தூஷிக்கமாட்டார்கள்.

ஏதுக்களை எவ்வகையால் உணர்வரென்னில் கத்தோலிக்குக் கிறீஸ்தவர் களுக்குள் புருஷர்கள்மட மென்றும், இஸ்திரீகள் மடமென்றும் தோன்றியதற்கு பேது பௌக்கமடங்களேயாகும். அதன் காலமும், சரித்திரமும், லாயிஸ் அலக்சாண்டர் காலமும், லூயிஸ் அலக்சாண்டர் சரித்திரங்களுமேயாம்.

பௌத்த போதகர்கள் நீங்கள் பௌத்தர்களானால் தான் சீர்பெறுவீர்களென்று கூறுகின்றார்கள். இதுவும் நியாயமோ என்கின்றார் களாம், அதுவும் நியாயமேயாம். காரணமோவென்னில், பஞ்சசீலம் பரிபவர்களே பௌத்தர்க ளாவர். ஒருவன் எம்மதத்தோனாயினும், எச்சமயத்தோனாயினும் சீவப்பிராணிகளைத் துன்பஞ் செய்யாமலும், பொய்சொல்லாமலும், அன்னியர் பொருளை அபகரிக்காமலும், அன்னியர் மனையாளை விரும்பாமலும், மதியை மயக்கும் லாகிரி பானத்தை அருந்தாமலும் இருப்பானாயின் அவன் பௌத்தனேயாவன்.

பஞ்சபாதகங்களை அகற்றுங்கோளென்பதும் பௌத்தர்களாகுங்கோள் என்பதும் ஒருபொருட்கிளவி யாதலின் அன்பர்களை நோக்கியும், வற்புறுத்தியும் நீங்கள் பௌத்தர்களாகுங்கோளென்று கூறுவது மக்கள் சீர்திருத்த முதன்மொழி யாதலின் விவேகிகளும், சீர்திருத்தக்காரர்களும் அவற்றை சிரமேந்தி ஆனந்திப்பார்கள்.

பஞ்சபாதகத்தோர் அம்மொழியை பழித்தும் புறங்கூறியும் அவலம்பிப்பார்கள். ஆதலின் பௌத்த போதனாசிரியர்களும், பௌத்ததன்மப் பிரியர்களும், பௌத்த உபாசகர்களும் பஞ்சபாதகர்களின் புகழ்வையும், இகழ்வையும் நோக்காது சத்தியதன்மத்தைப் பரவச்செய்யும்படி வேண்டுகிறோம்.

4:23; நவம்பர் 15, 1910 –

# 65. சுடலைச்சடங்குகள்

வினா : இத்தேசத்தோர்களாகிய நம்மவரில் யாரேனும் இறந்து வீட்டிலிருந்து சுடலைக் கெடுத்துச்செல்லும்போது அரிச்சந்திரன் கோவில் வரைக்கும் பிணம் வீட்டுப்பக்கம் பார்க்கும்படியாகவும், அரிச்சந்திரன் கோவிலண்டை இறக்கியவுடன் வெட்டியான் வந்து நின்று சில வசனங்களைச் சொல்லி கடைசியாக காளியம்மா கதவைத்திற அரிச்சந்திரா வழிவிடு என்பதின் மூல காரணத்தையும் அப்புறம் பிணம் சுடுகாட்டைப் பார்க்கும்படி எடுத்துச்செல்கிறார்களே அதின் மூல காரணங்களையும் விளக்கிக்காட்ட வேணுமாய்த் தங்கள் மேலான கனத்தைக் கோருகிறேன்.

வி. டாம். பட்லர், K.G.F. ஆஸ்பிட்டல்

விடை : தாம் வினவியுள்ள அரிச்சந்திரன் சங்கை அடியோடு பொய்யாதலின் அவன் சுடலையில் வழி விடுவதும், காளி கதவைத்திரப்பதும் கட்டுக்கதையேயாகும்.

அத்தகையக் கதை தோன்றியக் காரணமோவென்னில், விசுவாமித்திரன் மூச்சியினின்று இரண்டு பறைச்சிகள் பிறந்தார்களென்றும், சுடலை காக்கும் வீரவாகு பறையன் ஒருவன் இருந்தானென்றும் ஓர் கட்டுக்கதையை ஏற்படுத்தி பறையர்களென்னும் சாதியோர் பூர்வத்திலிருந்தே வருகின்றார்களென்று பூர்வ பௌத்தர்களை சீரழிப்பதற்காக சுடலையில் அரிச்சந்திரன் என்னுமோர் உருவு செய்து வழியில் வைப்பதுமன்றி குழி வெட்டவும், பிணஞ் சுடவுங் கார்த்திருக்கும் வெட்டியானுக்கும் ஓர்வகைப் பாடலைக் கற்பித்து பிணத்தை எடுத்து அவ்விடஞ் சென்றவுடன் வெட்டியானப்பாடலைப் பாடி காளியம்மா கதவைத்திர, அரிச்சந்திரா வழிவிடுமென்னும் அப்பிரயோசன மொழியை வழங்கி வருகின்றார்கள்.

மோட்சத்திற்கு வழிவிடவும் , கதவைத்திரக்கவுமுள்ள அதிகாரம் வெட்டியானிடம் இருக்கின்றதென்று எண்ணி பிணத்தை எடுத்துச் சென்று அரிச்சந்திரனிடம் வைக்கவும் வெட்டியானை வழி திரக்கச் சொல்லவும் உள்ளவர்களின் கல்வியும், விசாரிணையும், யோக ஞானங்களும் எத்தகையத் தென்பதைத் தாங்களே உணர்ந்துக்கொள்ள வேண்டியதுதான்.

ஆங்கிலேயர்ப் பிணங்களைப் புதைக்கும் செப்பிடு துரைக்குச் சென்று அவ்விடமுள்ள வெட்டியானைக் கதவைத் திரக்கவும், வழிவிடவுங் கூறுவதாயின் அனுபவத்திற்குங் காட்சிக்கும் அம்மொழி பொருந்தும் - ஏதுமற்ற வெட்ட வெளியாம் சுடலைக்குச்சென்று கதவைத் திரக்கவும், வழிவிடவும் சொல்லுவதும் அச்சொல்லுக்காகப் பிணத்தை வைத்துக் கார்ப்பதுமாகியச் செயல்கள் யாவும் பறையனென்னும் ஓர் சாதியோன் இருக்கின்றானென்று பழிக்கவும் அவனது பேதை நிலை இவ்வளவென்று கழிக்கவுமேயன்றி வேறில்லையாகும்.

சாதித்தலைவர்கள் சுடலைக்கும், மகமதியர்கள் மயாணத்துக்கும், கிறிஸ்தவர்கள் கல்லறைகளுக்கும் கதவைத் திரக்கவேண்டிய காளியம்மாளும், வழிவிடவேண்டிய அரிச்சந்திரனும் இல்லாமல் சிலக்கூட்டத்தோருக்கு மட்டிலும் இருப்பது அவர்களைத் தாழ்த்தி அலக்கழிப்பதற்கேயாம்.

காளியம்மாளென்பவள் வங்காளத்தைச்சேர்ந்த ஓர் பெண்ணரசி. அவளது வல்லபத்திற்கும் நீதிநெறி வழுவா ஆட்சிக்கும், அத்தேசத்தோர் அவளை தேவதையாகக் கொண்டாடி வருகின்றார்கள். வடதேசத்தோர் மிக்க சிறப்புடன் கொண்டாடுங் காளியம்மாள் தென்தேசத்தோர் சுடுகாட்டின் கதவைத் திரக்கவருவாளோ, அரிச் சந்திரன் கதையில் சுடுகாட்டிலிருந்து மறுபடியும் அரசாளப் போய்விட்டானென்று வரைந்திருக்க இவர்கள் இன்னும் சுடுகாட்டைக் கார்த்திருக்கின்றானென்று எண்ணில் அக்கதையை எழுதினவன் ஒப்புக்கொள்ளுவனோ. அக்கதையிலேனும் அரிச்சந்திரன் நாளதுவரையிற் சுடுகாடு கார்க்கின்றானென்று வரைந்திருக்கின்றதோ, இல்லை, அரிச்சந்திரன் கதையே அடியோடு பொய்யாயிருக்க அக்கதையுட்

கூறாது நாளதுவரையில் அரிச்சந்திரன் சுடுகாட்டிற்கு வழிவிட்டுக் கொண்டிருக்கின்றான் என்பது அதனினும் பொய்யாதலின் தாங்கள் அவற்றைப் பொருட்படுத்தாது ஏனையோருக்கும் இப்பொய்யை விளக்கி மெய்நெறியினை நிலைக்கச்செய்வதுடன் சுடலைக்குப் பிரேதங் கொண்டுபோம்போது அரிச்சந்திரன் கல்லிடம் நிறுத்தாமலும், வெட்டியான் பாட்டிற்கு இசையா மலுஞ் சென்று பிரேதத்தைத் தகனஞ்செய்வதே அழகாம். செத்தவன் கால் கிழக்கிருந்துமென்ன மேற்கிருந்தும் என்னவென்னும் பழமொழியை உணர்ந்துக்கொள்ளுவீராக.

4:26; டிசம்பர் 7, 1910 –

# 66. தருமராஜ துரோபதை கோவில்கள்

வினா : ஐயா நமது தேசத்தில் தருமராஜா கோவில் என்றும், துரோபதைக் கோவிலென்றுங் கொண்டாடி வருகின்றார்களே அவ்விருவரும் பாரதக கதையைச் சார்ந்தவர்களா அன்று வேறா என்பதை விளக்கி நூலாதாரத்துடனும், அவர்களைக் கொண்டாடக்கூடிய சிறப்பின் காரணத்துடனும் கண்டெழுதி அடியேனின் சங்கையைத் தெளிவிக்கும்படி வேண்டுகிறேன்.

த.கோபாலன், சித்தூர்.

விடை : பாரதத்திற் கூறியுள்ள தருமராஜனாயின் மக்கள் அவரை தெய்வமாகத் தொழவேண்டிய காரணமில்லை. அத்தகைய தெய்வ நிலையை அவர் அடைந்த வருமன்று. துரோபதையை சபையில் மானபங்கஞ் செய்யுங்கால் சகல சோதிரர்களும் கோபக்குறிப்பைக் காட்டியதாகவும், தருமராஜன் அக்கோபக் குறிப்பை வெளிக்குக் காட்டாது உள்ளுக்கு அடக்கியபோது நெல்லை அவர் முதுகின்மீது கொட்டப் பொரியாயிற்றென்று கதையுட் கூறியுள்ள படியால் அத்தகையக் கோபாக்கினி நிறைந்துள்ள புருடன் சாந்ததேவதையாவனோ.

ஈதன்றி தனக்குள்ள பூமி ஆளவேண்டுமென்னும் அவாவின் மிகுதியால் தன்பிள்ளை வேறு தனது தம்பி அர்ச்சுனன் பிள்ளை வேறென்று எண்ணி அர்ச்சுனன் பிள்ளை அரவானென்பவனைக் கொலைச்செய்து எதிரிகளை வென்று அத்தேசத்தை ஆண்டதாக பாரதங் கூறுகின்றது. இவ்வகைப் பிள்ளையைக் கொன்று பூமி ஆண்ட பாதகனும், பூமியின் ஆசை மிக்கோனுமாய தருமராஜனைத் தெய்வமாகக் கொள்வரோ ஒருக்காலுங் கொள்ளமாட்டார்கள்.

அப்பாரதக்கதையைச் சார்ந்தவளே துரோபதையுமாதலின் அவளையுந் தேவதையாகக் கொண்டாடுவதற்கு ஏதுவுமில்லை.

மற்றும் யாவரை புருஷதேவதையாகவும், இஸ்திரீ தேவதையாகவும் இத் தேசமெங்கும் இத்தேசத்தோர் கொண்டாடி வந்தார்கள் என்னில், கல்லாலமென்னும் அரசமரத்தடியில் வீற்று நித்தியானந்த ஞானமாம் நிருவாணம் பெற்ற புத்தபிரானையே மன்னர் சுவாமி என்றும், தருமதேவனென்றுங் கொண்டாடி வந்தார்கள். புத்தபிரான் உருவினை என்றும் சிரசிற்றாங்கி பூகமரமென்னும் வேம்பு மரத்தடியில் வீற்று மேலாய ஞானமாம் நிருவாணம் பெற்ற அம்பிகாதேவியையே அறச்செல்வி என்றும், பச்சையம்மனென்றும், சிந்தா விளக்கென்றும், சிந்தாதேவி என்றும், அம்மனென்றும், சாந்ததேவதை என்றுங் கொண்டாடி வந்தார்கள். அதற்குப்

பகரமாக தருமராஜன் கோவிலினுள்ளும், அம்மன் கோவிலினுளளும் அரசமரம் வேப்பமரம் நாட்டி இருப்பதை நாளதுவரையிலுங் காணலாம்.

தருமராஜனென்று தொழுவது புத்தபிரானையும், துரோபதையென்று தொழுவது அம்பிகா தேவி என்னும் சிந்தாதேவியையேயாம்.

**பின்கலை நிகண்டு**

தருமராசன் முந்நிந்திரன் சினன் பஞ்சதாரைவிட்டே
அருள்சுரந் தவுணர்க்கூட்டுந் ததாகதன் ஆதிதேவன்
விரவு சாக்கையனே சைனன் விநாயகன் சினந் தவிர்ந்தோன்
அரசு நீழலி ருந்தோன் அறியறன் பகவன் செல்வன்.
மரகத வல்லி பூக மரநிழ லுற்ற வஞ்சி
பரம சுந்தரி யியக்கி பகவதியம்மெ யெங்க
ளருகனை முடி தரித்தாளம்பிகை யறத்தின் செல்வி
தருமதேவதை பேரம்பாலிகை யென்றுஞ் சாற்றலாமே.

**மணிமேகலை**

சங்கதருமன்றாமெனக் கருளிய / சிந்தாவிளக்கே செழுங்கலைபாவாய்.

4:27, டிசம்பர் 14, 1910 -

# 67. பௌத்தர்களும் இந்துக்களும்

இந்திய தேச பௌத்தர்கள் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயம் சோதிரர்களே, நமது தேசத்தில் பௌத்தர்களென்றும், இந்துக்களென்றும் இரு வகுப்பாருண்டு அவர்களுக்குள் இந்துக்கள் என்பவருக்குள் சாதியாசாரம் என்னும் பிரிவினைகளுண்டு. பௌத்தர்களுக்குள் அத்தகையப் பிரிவினைபேதங் கிடையாது.

இந்துக்களென்போர் அவரவர்கள் ஏற்படுத்திக்கொண்டுள்ள அவரவர்கள் தேவதைகளைத் தொழுது அவர்களுக்குப் பூசை நெய்வேத்தியஞ் செய்துவந்தால் மோட்சமும் சுகமும் உண்டென்பார்கள். பௌத்தர்களோ நன்மார்க்க நடையில் சீலத்தைப் பின்பற்றி ஒழுக்கத்தில் நிலைப்போர்க்கு முத்திய சுகமுண்டென் பார்கள்.

இந்துக்கள் என்போர் அவர்கள் ஏற்படுத்திக்கொண்டுள்ள வேதத்தை நம்புவதுடன் சாதியாசாரம் சமயாசாரத்தில் லைத்திருக்க வேண்டுமென்பார்கள். பௌத்தர்களோ, தங்களது பௌத்தாகமப் போதத்தின்படி பாவச் செயல்களை அகற்றி நன்மெய்க் கடைபிடித்து இதய சுத்தி உடையவர்களாகி சருவசீவர்கள் மீதும் அன்பு பாராட்ட வேண்டும் என்பார்கள்.

இந்துக்களென் போர்களுக்கு தங்கள் சாதியாசாரங்களுக்குத்தக்க சாதிப்பெயரும் தொடர்மொழியும் இருப்பதுடன் நெற்றியிலும், கழுத்திலும் சமய சின்னங்களாகும் விபூதி, திருமண், உருத்திராட்சம் முதலியன இருத்தல் வேண்டும். பௌத்தர்களோ சகல மநுக்களையும் சகோதிரரென பாவித்து சகலரும் ஒற்றுமெயின் வாழ்க்கை பெற விரும்புதலும் பஞ்சபாதங்களை அகற்றி வாழ்தலே பௌத்த சின்னமென்று எண்ணி பஞ்சசீலத்தையே தியானமாகக் கொண்டு அம்மேறை நடப்பார்கள். அதன்

செயல்களைக்கொண்டு சென்னை சாக்கைய பௌத்த சங்கத்தோர்களும், கோலார் சாக்கைய பௌத்த சங்கத்தோர்களும், பெங்களூர் சாக்கைய பௌத்த சங்கத்தோர்களும், செக்கின்றாபாத் சாக்கைய பௌத்த சங்கத்தோர்களும், திருப்பத்தூர் சாக்கைய பௌத்த சங்கத்தோர்களும் இரங்கூன் சாக்கைய பௌத்த சங்கத்தோர்களும் அங்கங்கு ஒன்றுகூடி தற்காலம் எடுக்க ஆரம்பிக்கும் சென்ஸஸென்னும் குடி மதிப்புக் கணக்கில் பௌத்தர்களை வேறாகவும், இந்துக்களை வேறாகவும் பிரித்துக் கணக்கெடுக்கும்படி நமது கருணைதங்கிய கவர்ன்மெண்டாரை வினவி பௌத்தருக்கென்று வேறுகலமே பிரித்துக்கொள்ளும் ஏதுவைத் தேடுவதற்காக மேற்சொன்னபடி சங்க ஸ்தாபகரும், பொதுக் காரியதரிசியுமாகிய க. அயோத்திதாஸப் பண்டிதருக்குத் தங்கடங்கள் யேகவாக்கின் கையெழுத்துக்கள் அனுப்பி அவர்மூலமாக இராஜாங்கத்தோருக்கு விண்ணப்பம் அரைப்பு இராஜாங்கத்தோரும் அவற்றை நன்காராய்ந்து இந்த சென்ஸஸில் பௌத்தர்களுக்கு வேறு கலம், இந்துக்களுக்கு வேறு கலம் வகுக்கத்தக்க ஏதுக்களை செய்துவிட்டு சங்கங்களின் பொதுக் காரியதரிசி க. அயோத்திதாஸப் பண்டிதர் அவர்களுக்கும் மாறுத்திரம் அனுப்பிவிட்டார்கள்.

இத்தகையப் பிரிவினைகளைக் கண்டு நடந்துக்கொள்ள வேண்டியக் காரணங்கள் யாதெனில், சாதிப்பெயர்களும், சாதித் தொடர்மொழிகளும், சமயச் சின்னங்களும் இந்துக்களுக்கு உரியவைகளேயன்றி பௌத்தர்களுக்கு உரியவைகளன்றாம்.

ஆதலின் பௌத்தர்களென்று சொல்லுவோர்களை ஏனையோர்கள் நீங்கள் என்னசாதி என்று கேட்கும் ஆதாரமுங்கிடையாது, அவர்களும் தங்களுக்கு சாதியாசாரம் இல்லாதபடியால் தங்களை ஓர் சாதியானென சொல்லவும் மாட்டார்கள்.

மற்றப்படி பௌத்தர்களென்று கூறியவுடன் அதனை எழுதிக் கொள்ளாமல் பௌத்தர்களை இழிவுபடுத்த வேண்டுமென்று எண்ணி நீங்கள் முன்பென்னசாதி பின்பென்ன சாதி என்றும் பயமுறுத்தியும் கேட்டார்களாயின் தக்க சாட்சி ஆதாரங்களுடன் ராஜாங்கத்தோருக்கு விளக்கி அதற்குத்தக்க முயற்சி எடுத்துக் கொள்ளப்படும். அதுவுமன்றி பௌத்தர்களைத் தாழ்த்தி நாசமடையச் செய்வதற்காக ஓர் சாதிப்பெயரைக்குறித்து அழைத்தாலும் ஓர் சாதிப்பெயரைக்குறித்து பத்திரிகை

களிலேனும், புத்தகங்களிலேனும் பிரசுரஞ்செய்தாலும் வேண முயற்சிகளை நிறை வேற்றப்படும் இவற்றை இந்தியதேச பௌத்தர்கள் ஒவ்வொருவரும் நன்குணர்ந்து சத்தியதன்மத்தில் நடந்து இராஜ விசுவாசத்தில் நிலைத்து சீர்பெறுவீர்களென்று நம்புகிறோம்.

இங்ஙனம், சாக்கைய சங்காதிபர்கள்.

4:28; டிசம்பர் 21, 1910 –

# 68. பௌத்தர்களின் நம்பிக்கை

புத்தரையே பகவனென்றும், ஈசனென்றும், கடவுளென்றும், சிவனென்றும், பிரமமென்றும், பரமென்றும், திருமாலென்றும், அவரது நற்கிரியைகளுக்குத் தக்க ஆயிரநாமங்களை அளித்து சகஸ்திரநாம பகவனென்றும், ஆயிரநாமத் தாழியனென்றுங் கொண்டாடிப் பூர்வத் தமிழ் நூற்கள் யாவிலும் வரைந்துள்ள போதினும் அவரது அளவுபடா அன்பிற்கும், குறைவுபடா ஞானத்திற்கும் பொதுவாய புண்ணிய திருமேனிக்கும் அருள் நிறைந்த உள்ளத்திற்கும், மலைவுபடா அவரது வாய்மொழிக்குமே அமர்ந்தும் அன்பு கொண்டும் ஆனந்தமாக சிந்தித்தும் அவரது போதனா நீதிநெறி வாய்மெய் வழுவாது நடந்துவருவார்களன்றி, பகவனே எங்கள் பாவத்தைப் போக்க வேணும், கடவுளே எங்களைக் காப்பாற்றவேண்டும், பிரமனே எங்களைப் பாதுகாக்க வேண்டும், சிவனே எங்களை சீர்திருத்தவேண்டுமென சிந்திக்க மாட்டார்கள். காரணமோவென்னில், தாங்கள் செய்த தீவினையைத் தாங்களே அநுபவிக்க வேண்டுமென்னும் நம்பிக்கையும் அனுபவமும் உடையவர்களாதலின் தங்கள் தீவினைகளை வெல்லுதற்கு அறவாழியானின் அறமொழியில் அஞ்சலியஸ்தராகி அறநெறியில் நடந்து தாங்களே அத்தீவினையை வெல்லவேண்டிய தேயன்றி மற்றெவராலும் அத்தீவினையைப் போக்கலாகாதென்பதே நம்பிக்கையாகும்.

இதுவே பௌத்ததன் மத்தின் விசேஷ நம்பிக்கையாதலின் அன்னியர் பொருளை அபகரித்து அதிகாரிகளிடம் அகப்பட்டுக் கொண்டு ஆண்டவனே என்னைக் காப்பாற்ற வேண்டுமென்றால் காப்பாற்றுவரோ, இல்லை அன்னியர் பொருளை அபகரிக்கலாகாதென்று கூறியிருந்தும் அம்மொழியை சிரமேற்று நடவாது திருடிவிட்டு தண்டனை நேருங்கால், ஆண்டவனே, ஆண்டவனே, என்பதின் பயன் செய்த தீவினைக்குத் தக்க தண்டனையை அனுபவிக்க வேண்டியதே பயனாதலின்

பௌத்தர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் செய்த தீவினைக்கு பயன் தாங்களே அநுபவித்துத்தீரல் வேண்டுமென்பதே நம்பிக்கை யாகும். தங்களது துற்செயலாந் தீவினையை ஏனையோர் வந்து தீர்ப்பார் களென்று கனவிலும் நம்பமாட்டார்கள்.

இத்தகைய சிறந்த நம்பிக்கையற்று தங்கள் தங்கட் கொடூரச்செயலால் கொலை, களவு, குடிகேடு, வஞ்சினம், விபசாரம், பொய், கடுஞ்சொல் முதலியத் தீவினைகளைச் செய்துவிட்டு ஏனைய வொருவர் அத்தீவினைகளை நீக்கிவிடுவாரென்னும் பொய் நம்பிக்கை அதிகரித்துவிட்டபடியால் நாளுக்கு நாள் பொய்யும், திருடும், குடியும் , விபச்சாரமும், கொலையும் அதிகரித்து வாழ்க்கைத்துணை நயமின்றி ஒருவருக்கொருவர் நம்பிக்கையற்று சீர்கெடுவதுடன் வித்தையும் புத்தியுமற்று, யாதொரு தொழிலுமற்று சாமி கொடுப்பார், சாமிகொடுப்பாரென்னுஞ் சோம்பலேறி உள்ளதுங் கெட்டுப் பாழடையும் நம்பிக்கைகளே பலமாகிவிட்டது.

இத்தகைய சீர்கேட்டிற்கு மூலமாம் பாழ் நம்பிக்கைகளை விட்டு முயற்சி திருவினையாக்குமென்னும் நல்முயற்சி, நல்லூக்கம், நற்கடைபிடி என்னும் பௌத்தர்களது நம்பிக்கையைப் பின்பற்றி அதன் பயனைக் கண்டடைவார் களென்று நம்புகிறோம்.

“அவர்கள் அளந்ததையே அவர்களுக்களக்கப்படும்”

’’தினையை விளைத்தவன் தினையையே அறுப்பன்"

அவனவன் செய்வினைக்கு இதுவே அநுபவமுங் காட்சியுமாகும்.

4:31; சனவரி 11, 1911 –

# 69. உபநிடதங்களிலிருந்து பௌத்த தன்மந் தோன்றியதோ

இல்லை, இல்லை. பௌத்ததன்ம ஆராய்ச்சியைக் கனம் மாக்ஸ் முல்லரவர்களும் ரையிஸ் டேவிஸ் அவர்களும் தெள்ளற விசாரிணைச் செய்யாத காலத்தில் உபநிடதங்களிலிருந்து புத்தன் மந்தோன்றியதாகத் தங்கள் புத்தகங்களிலெழுதி விட்டார்கள்.நாளுக்குநாள் புத்ததன்ம ஆராய்ச்சியையும், பூர்வசாசனங்களையும் கண்டுணர்ந்ததின் பேரில் இப்போதவர்களெழுதியுள்ள புத்தகங்களில் புத்த தன்மத்தினின்றே சகல உபநிஷத்து சாராம்சங்களுந் தோன்றியுள்ளதென்று வரைந்துள்ளதன்றியும், தாங்கள் பிறந்து வளர்ந்த கிறீஸ்துவின் மதத்தையும் விட்டகன்று புத்ததன்மத்திற் சேர்ந்து லண்டனில் தற்காலம் புத்தசங்கங்களையும் நாட்டி சத்தியதன்மத்தைப் பரவச்செய்து வருகின்றார்கள். இதன் சங்கதியைத் தெளிவாகத் தெரிந்துக்கொள்ள வேண்டியவர்கள் லண்டனில் மூன்று மாதத்திற் கொருமுறை வெளிவரும் "'Buddhist Review" என்னும் பத்திரிகையால் தெள்ளறத்தெரிந்துக் கொள்ளலாம். ஈதன்றி வேதமின்னது, நூலின்னது, பிடகமின்னது, ஆகமமின்னது, சுருதியின்னது, உபநிடத மின்னதென் றறியாதவர்களுக்கு அதினந்தரார்த்தம் விளங்கவே மாட்டாது.

பௌத்தர்களின் முன் கலை நூலாம் திவாகரத்தால் தெள்ளறத் தெளிந்துக் கொள்ளலாம்: உபநிடதத்தின் பெயர் - உபநிடதம் வேதத்தினுட்பொருள் நுட்டம் - வேதத்தின் பெயர் - ஆதி நூலென்பது வேத நூற்பெயரே. நூலின் பெயர் - பிடகந்தந்திரம் நூலின் பெயரே மற்றும் நூலின் பெயர் - ஆகமம் பனுவல் ஆரிடம் சமயம் சூத்திர மைந்தும் நூலினைத் துலக்கும்.

இந்நூல் எவ்வகையாய்த் தோன்றியதென்னில்,

**அருங்கலைச்செப்பு**

என்று முண்டாகி இறையால் வெளிப்பட்டு / நின்றநூலென் றுணர்.

அந்நூலுள் முதல் நூல் எவையெனில்:

**யாப்பருங்கலை**

விளையினீங்கி விளங்கிய வறிவன் / முனைவன் கண்டது முதலாகும்.

இந்நூலாதாரங்களால் முதனூல் தோன்றியது புத்த பிரானாலென்றே தெளிவாக விளங்கிய போதினும் முதனூ லென்னும் வேதத்தை போதித்தவர் யாரென்று விசாரிக்குங்கால்;

**சீவகசிந்தாமணியில்**

ஆதிவேதம் பயந்தோய் நீ / அலர் மும்மாரி பொழிந்தோய் நீ

என புத்தபிரானையே சிந்தித்து விளக்கியிருக்கின்றார்கள்.

இத்தகைய முதனூலாம் ஆதிவேதத்தை போதித்தவரும் புத்தபிரான், அதனுட்பொருள் நுட்பமாம் உபநிடதங்களை விளக்கியவரும் புத்தபிரானென்றே தெளிவாகவிளங்குங்கால், கனந்தங்கிய மாக்ஸ்முல்லரவர் களும், கனந்தங்கிய ரைஸ்டேவிஸவர்களும் உபநிடதங்களினின்று புத்ததன் மந் தோன்றியதென்று முதலெழுதிய புத்தகம் முற்றும் பிசகேயாம். அஃது முழுவிசாரிணையற்றக் காலவரைவாதலின் அவர்களது முந்நூலுக்குப் பின்னூல் தோன்றியுள்ளவற்றைக் கண்டேனுந் தெளிந்துக்கொள்ளல் வேண்டும். அங்ஙனங் கண்டுதெளியாது ஒருவ ரெழுதிவைத்துள்ளதை உடனே நம்பிக்கொள்ளுவது அழகன்று. அவரெழுதியுள்ள நூலினையும் நன்காராய்ந்து அந்நூலெழுதியுள்ள பாஷையையும் அப்பாஷையின் ஆக்யோனையும் அப்பாஷை தோன்றியக் காலவரையையுங் கண்டுணர்வரேல்

பாஷையின் வரிவடிவிற்கு மூலகாரணரான புத்தபிரானே வேதபோதத்தின் உபநிடதங்களுக்கும் மூலகாரண ரெனத்தெள்ளென விளங்கும். அத்தகைய விளக்கத்தால் வேறொருவருக்கு விளக்குவதே விவேகிகளுக்கு அழகாம்.

4:35; பிப்ரவரி 8, 1911 –

# 70. தற்கால பிராமணர்கள் செய்யும் விவாகமும் முற்கால வள்ளுவர்கள் செய்யும் விவாகமும் இந்து விவாகமாமோ

ஒருக்காலுமாகாவாம். இந்துமதமென்பது யாவருடைய தென்னில், தற்காலம் பிராமணரென்று சொல்லிக் கொள்ளுவோர் போதனைகளுக் குட்பட்டதும், அவர்களது மதத்திற்கு அடங்கியதும், அவர்கள் வருத்துப்போக்குக்கு இடமாயதும், அவர்களது ஆலயத்துக்குட் பிரவேசிக்க சுதந்திரமுடையதும், பிராமணர்களென் போர்களுக்கு தானங்கொடுக்கக் கூடியவர்களுக்கும், பிராமணர்களென் போர்களையே, தெய்வமாகவும், குருவாகவும் சிந்திக்குங் கூட்டத்தோர்கள் யாரோ அவர்களே இந்துக்களென்று அழைக்கப்படுவார்கள் பிராமணர் களென்று சொல்லிக் கொள்ளுவோர் முதலாக நின்று விவாகக்கிரியைகளை நடாத்தி மங்கல்யம் சூட்டுவதாயின் அதையே இந்துவிவாகமென்று கூறப்படும். பிராமணர்களென் போர் வந்து முன்னின்று செய்யப்படாத விவாகங்களை இந்து விவாகங்களென்று சொல்லுவதற்கு ஆதாரமில்லை.

இந்துக்களென்னும் ஆரியவகுப்போர் இத்தேசத்தில் வந்து குடியேறுவதற்கு முன்பிருந்த பௌத்தவரசர்களும் பௌத்த வியாபாரிகளும், பௌத்த விவசாயிகளு மாகிய முத்தொழிலாளருக்கும் கன்மகுருக்களாயிருந்து தன்மகன்மங்களாம் விவாகக் கிரியைகளை பரம்பரையாக நடாத்தி வந்தவர்கள் வள்ளுவர்களேயாவர்.

பௌத்தர்களுக்குள் ஞானகுருக்களாம் பிராமணர் களென்றழைக்கப் பெற்றவர்கள் விவாகமுதலியக் கன்மக்கிரியைகளுக்குப் பிரவேசிக்கமாட்டார்கள், குடிகளுக்கு

நீதியையும், நெறியையும், வாய்மெயையும் போதிக்கும் தன்மச் செயலிலேயே நிற்பார்கள். வள்ளுவர், நிமித்தகர், சாக்கையரென்றழைக்கப் பெற்ற, கன்மகுருக்களே விவாக முதலிய தன்மகன்மங்களை நடாத்தியும் வந்தார்கள். நாளது வரையில் நடத்தியும் வருகின்றார்கள்.

**முன்கலை திவாகரம்**

வள்ளுவர் சாக்கையரெனும் பெயர் மன்னர்க்குன்படு கருமத் தலைவர்க் கொக்கும்.

**பின்கலை நிகண்டு**

வரு நிமித்தகன் பேர் சாக்கை வள்ளுவனென்றுமாகும்.

பௌத்தமார்க்க அரசர்களுக்கும், பௌத்தமார்க்க வியாபாரிகளுக்கும், பௌத்தமார்க்க விவசாயிகளுக்கும் வள்ளுவர், சாக்கையர் நிமித்தகரென் றழைக்கப்பெற்றவர்களே கன்மகுருக்களாயிருந்து விவாக முதலிய தன்மகன்மங் களை நிறைவேற்றியுள்ளவற்றை மணிமேகலை, சீவகசிந்தாமணி, சூளாமணி, சிலப்பதிகார முதலிய சமணமுனிவர்கள் நூலால் தெரிந்துக்கொள்ளலாம், தற்காலந் தோன்றியுள்ள இந்துமதச் செயல்களுக்கும் பூர்வபௌத்த மதச் செயல்களுக்கும் அனந்த பேதமுண்டு.

தற்காலந் தோன்றியுள்ள இந்துமதம் சிறப்புற்றும், பூர்வபௌத்ததன்மம் சிறப்புக்குன்றியும் இருக்கின்றபடியால் பூர்வசரித்திரங்களை ஆராய்ந்தறியா தவர்கள் எங்களது இந்துமதக் கிரியைகளைத்தான் வள்ளுவர்கள் செய்கின்றார் களென்று கூறுவதுமுண்டு. அத்தகையோர் கூற்று பௌத்ததன்ம கன்மங்களை அறியாதோர் வாய்மொழியேயாகும். பௌத்தர்களின் தன்மங்களை நன்காராய்ந்தும் உணர்ந்துமிருப்பார்களாயின் விவாககாலங்களில் அரச ஆணிக்கால் நடுவதும் சிந்தாவிளக்காம் குடவிளக்கேற்றுவதும், விவாக மண்டபத்தில் இந்திரத்தியான பலவர்ண நீலச்செப்புகள் வைப்பதுமாகியச் செயல்கள் பௌத்த தன்மச் செயல்களேயன்றி இந்துக்களின் செயல்களல்ல வென்று தெள்ளறத் தெளிந்துக்கொள்ளுவார்கள். பௌத்தர்களது கிரியைகளி னின்று சிலவற்றை தற்கால

பிராமணர்களேற்றுக் கொண்டு அக்கிரியைகள் யாவும் எங்கள் இந்து மதத்தைச் சார்ந்த தென்றும் கூறுவது ஆதாரமற்ற மொழியேயாம்.

வள்ளுவர்கள் நடாத்தும் விவாகக் கிரியைகளை இந்துக்கள் விவாக சம்மந்தத்துடன் சேர்ப்பதற்கு எள்ளளவேனும் இடங்கிடையாது பூர்வ வள்ளுவர்களின் கிரியைகளை தற்கால பிராமணர்கள் கிரியைகளுடன் பொருந்தவைக்கவுமாகாது.

தற்கால பிராமணர்களைக் கண்டவுடன் வள்ளுவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களுங்கூடி அடித்துத்துரத்தி சாணசட்டியை உடைப்பதும், வள்ளுவர் களையும் அவர்களைச் சார்ந்தவர்களையும், தற்காலப் பிராமணர்கள் தங்கள் வீதிகளிற் கண்டவுடன் அவ்வழியே வரவிடாமல் அடித்துத் துரத்துவதுமாகிய விரோதச் செயல்கள் நாளது வரையில் அநுபவக்காட்சியாய் இருப்பதையுணர்ந்தும், வள்ளுவர்களால் நடாத்தும் விவாகக்கிரியைகளை இந்துக்களது விவாகக் கிரியைகளுடன் சேர்ப்பது முற்றும் பிசகேயாம். இந்துக்களென்னும் தற்கால பிராமணர் களுக்கும் வள்ளுவர்களென்னும் பூர்வகன்ம குருக்களுக்கும் அவர்களைச் சார்ந்த வர்களுக்குமுள்ளத் தீராப்பகை நாளது வரையிலுமிருக்க இருவர் விவாகமும் ஒன்றாகாதென்பது துணிபு.

4:37, பிப்ரவரி 22, 1911 –

# 71. சாமிலஞ்சம் குருலஞ்சமே சதாலஞ்சமாக முடிந்தது

ஓர் மனிதனுக்கு சுரரோகம் உண்டாகுமாயின் அதன் தோற்றத்திற்குக் காரணமெது. உஷ்ணமா சீதளமா வாதமா என ஆராய்ந்து அதற்குத்தக்க சிகிட்சை புரியின் ரோகம் நீங்கி சுகமடைவான். அதனினும் ஒவ்வோர் சுரங்களுக்குக் கால அளவுகளுமுண்டு, அவற்றை நோக்காது பொய்க்குருக்கள் போதனைகளைக் கொண்டு, அந்த சாமிக்கு உண்டி பணம் லஞ்சங்கொடுக்க வேண்டும், இந்த சாமிக்குக் கண்ணைப் போல் கண்ணும், மூக்கைப்போல் மூக்கும், வெள்ளியினாலேனும் பொன்னினாலேனுஞ் செய்து லஞ்சங்கொடுக்க வேண்டும். அவற்றைக் கொடுப்பது மல்லாமல் அதைப் பெற்றுக்கொள்ளும் குருதட்சணை யாகும் குருலஞ்சங் கூடவே கொடுக்க வேண்டும், அப்போது சுரம் நீங்கிவிடுமென்று மதக்கடை வியாபாரிகள் கூறவும் அவர்கள் பொய்ம்மதப்போத மறியாப் பேதைகள் நோய்க்கண்ட காரணகாரியங்களறியாது விக்கிரக சாமிகளுக்கு லஞ்சம், குருக்களுக்கு லஞ்சங் கொடுத்து அவர்களை சுகம் பெறச் செய்துவிட்டு லஞ்சங்கொடுப்போர் பஞ்சைகளாகி பரதபிக்கின்றார்கள்.

காற்று பெருக்குள்ள காலத்தில் கப்பல்யாத்திரைச் செய்வதாயின் கனக் கஷ்டங்களுண்டாவது இயல்பேயாம். காற்று அடங்குநேரமடங்கி ஆறுதலடைவதும் இயல்பாம். காற்றடங்காது கொந்தளிப்பு மீறில் கப்பலுடன் சகலமும் நாசமாவது சகஜமாம். இதனை உணராத பேதை மக்கள் மதக்கடை பரப்பி சீவிக்கும் பொய்க் குருக்களின் போதனையால் அந்தம்மாளுக்கு லஞ்சங்கொடுப்பதாகப் பிராத்தித்துக் கொண்டால் காற்றடங்கிவிடுமென வேண்டிக்கொண்டு அடங்காவிடின் சகலரும் மடிவதும், காற்று அடங்கும் நேரம் வந்தடங்கில் அதற்கென்று உண்டியில்

சேர்த்துவைத்தப் பணங்களை அம்மாசாமிகளுக்கு லஞ்சங் கொடுத்து பஞ்சைகளாவதுடன் அச்சிலைகளுக்கு முதலாளிகளாக விளங்கும் பொய்க் குருக்களுக்கும் லஞ்சங் கொடுத்துப் பாழடைந்துபோகின்றார்கள். பேதைமக்களை வஞ்சித்து தங்களுக்கும் தங்கள் சாமிகளுக்கும் இலஞ்சம் வாங்கிப் புசிக்குங் குருக்களோ சோம்பலிலும் சுகசோம்பேறிகளாக சுகித்திருக்கின்றார்கள்.

அத்தகையாய் ஏழைக் குடிகளிடம் நெஞ்சிதக்கம்வையாது சாமிகளும் குருக்களுமே லஞ்சம் வாங்கிவருவதாயின் அதன் செயலைக் கண்டுவரும் கூலியாளர் முதல் எஜமானன்வரை இலஞ்சம், லஞ்சம். லஞ்சமென்னும் செயலே பெருகி சீவகாருண்யம் உபகாரமென்பதற்று கல்லையும் மண்ணையும் சுமக்கும் இரண்டணா கூலிக்காரனாயினும் அக்கூலிக்கார மேஸ்திரிகளுக்கு அவ்விரண்டணாவில் காலணாலஞ்சங் கொடுக்க வேண்டும். ஓர் எஜமானனைக் காணவேண்டி உத்தியோக சாலைக்குச் சென்று உள்ளேபோகவேண்டுமாயின் எஜமானன் உளரா, இலரா வெனக் கண்டறிவதற்காய் அங்குள்ள சிப்பந்தி சேவகனுக்கு ஓரணா லஞ்சங் கொடுத்தே தீரல்வேண்டும், அவ்வகைக் கொடாவிடின் எஜமானன் உள்ளதுந் தெரியாது, இல்லதுந் தெரியாது வெளியினின்று விழிக்கவேண்டியதாதலின் இலஞ்சங் கொடுத்தே தீரும் யேதுவாகிவிடுகின்றது. ஓர் உத்தியோகங் கிடைக்க வேண்டியதாயின் முதலாவது சேவகனுக்கு லஞ்சம், ஆபீசு பெரிய உத்தியோகஸ்தனுக்கு லஞ்சம், அவன் வலது பக்கத்து உத்தியோகஸ்தனுக்கு லஞ்சம், அவன் இடது பக்கத்து உத்தியோகஸ்தனுக்கு லஞ்சம், இத்தியாதி லஞ்சங்களுங் கொடுத்தது போதாது, மாதமாத சம்பளத்திலும், வாரவாரம் வாங்குங் கூலிகளிலும் லஞ்சம், மற்றும் விவசாயிகளிடம் விளையும் வாழக்காய் லஞ்சம் , வாழையிலை லஞ்சம், முருங்கக்காய் லஞ்சம், பூசணைக்காய் லஞ்சம், கத்தரிக்காய் முதலிய லஞ்சங்களுடன் ஏழைகளை ஆபீசுவேலை வாங்குவதுடன் தங்கள் வீட்டுவேலை வாங்கும் லஞ்சம், ஆகிய நெஞ்சிரக்கமற்ற லஞ்சப்பரிதானங்களினால் இலஞ்சமளிப்போர் நாளுக்குநாள் கிஞ்சித்து சீரழியினும் இலஞ்சம் வாங்குவோர் தாங்கள் சீரழிவதுடன் தங்கள் சந்ததியோரும் சீரழிவதை யுணராது மேலுமேலும் இலஞ்சக்கூற்றையே பெருக்கி வருகின்றார்கள். இத்தகையக் காருண்யமற்ற லஞ்சப்பெருக்கமே தேச சிறப்பையும் தேசத்தோர் அன்பையுங் கெடுத்து நிலைகுலையச் செய்துவருகின்றது. இத்தியாதி கேடுகளுக்கெல்லாம் மூலக்காரணம்

சாமிகளுக்கு லஞ்சமும் குருக்களுக்கு லஞ்சமுங் கொடுத்துவருவதேயாம். சாமிகளும், குருக்களும் லஞ்சம் வாங்கும்போது குடிகள் இலஞ்சம் வாங்குவதினால் யாதுகேடுண்டாமென்னுந் துணிபேயாம். சுயப் பிரயோசனத்தை நாடிய சோம்பேறி குருக்களின் லஞ்சப்பரிதானச் செயல்களானது சுடுகாடு சென்றும் விடாமல் நிற்கின்றது.

4:41; மார்ச் 22. 1911 –

# 72. கடவுளிலையோ கடவுளிலையோ

கடவுள் என்பதின் பொருள் "நன்மெய்" அதாவது பின்கலை நிகண்டினைக் காண்க. "கடவுடேமுநிநன்மெய்ப்பேர்."

அதன் தன்மமோ யாதெனில், சகலசீவராசிகள் மீதுங் கருணைகூர்ந்து நன்மெய் புரிதல் அத்தகைய நன்மெய்புரிதற்குத் தக்க செல்வப்பொருளுங் கல்விப் பொருளும் இல்லாவிடில் சகல சீவர்களிடத்தும் நல்லவனாக நடந்துக் கொள்ளுதல் இவ்விரண்டில் ஒன்று பூர்த்தி அடைந்தவிடமே கடவுளென்னும் பொருளைப்பெறும். அங்ஙனமிராது சொற்ப தின்மெய்க் களங்கு அவ்விடம் நிலைக்குமாயின் கடவுளென்னும் பெயர் பொருந்தாவாம். அக்கடவுள் என்னும் பெயரும் நரரென்றும், மக்கள் என்றும் அழைக்கப்பெற்ற மனுக்களது தோற்றத்தில் நிகழும் நீதிநெறி ஒழுக்கங்களில் உண்டாவதாதலின் தேவர் என்னும், ஏழாவது தோற்றமுண்டாகி கடவுள் என்று அழைக்கப்படுவதும் அத்தகையோர் பலராயின் கடவுளர்கள் என்று அழைக்கப்படுபவர்களுமானார்கள்.

இத்தகையக் கடவுளென்னும் மொழியையும் அதன் பொருளையும் வகுத்து வைத்துள்ளவர்கள் பௌத்தர்கள் என்னும் சமணமுநிவர்களே அன்றி மற்றெவரும் வகுத்துள்ளது கிடையாது.

பூர்வ பௌத்தர்கள் இத்தேசத்தில் தங்களது சத்துருக்களால் பலவகைத் துன்பமுற்று கல்வியற்றிருப்பினும் இக்கடவுள் என்னும் மொழியை மட்டிலும் மாறாமல் உச்சரித்தே வருவர்.

அதன் காரணமோவென்னில் புத்தபிரானுக்குரிய ஆயிர நாமங்களில் கடவுள் என்னும் பெயரும் அதில் ஒன்றாயதன்றி நன்மெய்க் கடைபிடித்தொழுகவேண்டும் என்பதும் வேதமொழியில் ஒன்றாதலின் பூர்வ பௌத்தர்கள் ஆதியங்கடவுளை கடவுள் கடவுள் என சிந்தித்து வந்ததுமன்றி அச்சிந்தனா ஒழுக்கத்தால் நன்மெய்க் கடைபிடிக்கும் சாதனங்களில் ஒழுகி வந்தார்கள்.

அங்ஙனமிருக்க பௌத்தர்கள் கடவுள் இல்லை என்று கூறுகிறார்கள் என்பது சுத்த பிசகேயாம். கடவுள் என்னும் மொழியும் அதன் பொருளும் அவர்களே வகுத்து அவர்களே வழங்கிவருதலால் அவற்றை இல்லையென மறந்துங் கூறமாட்டார்கள். ஆனால் கடவுளென்னும் ஓர் உருவங் கட்டைதடி போல் சட்ட திட்டமாக உட்கார்ந்துகொண்டு உலகத்தை சிருஷ்டிப்பவர் ஒருவர் இருக்கின்றார் என்னில் அதனை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். காரணமோவென்னில் வெளிச்சத்தினின்று அம்மொழி கூறாது இருட்டினின்று கூறுகிறபடியால் அம்மொழியையுஞ் செயலையுமேற்காது தூற்றிவருகின்றனர். அதாவது அனுபவத்திற்குங் காட்சிக்கும் பொருந்தியவைகள் யாவையும் ஏற்றுக்கொள்ளுவார்கள். அவைகளே உள்ளபடி வெளிச்சமென்னப் படும். அனுபவத்திற்குங் காட்சிக்கும் பொருந்தாதது எதுவோ அவைகள் யாவையும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். இதுவே இருள் என்னப்படும். ஒன்றைக் கண்டறிந்து பேசுவதே வெளிச்சமென்றுங் கண்டறியாது சொன்னதைச் சொல்லுங் கிளிபோற் பேசுவதே இருளென்றும் பௌத்த சாஸ்திரிகள் வகுத்துள்ளார்கள் மற்றும் பௌத்தர்களும் அம்மொழியை சிரமேற்கொண்டு ஒழுகிவருகின்றபடியால் இருளில் உள்ளோர் மொழியை

ஏற்காது அகற்றுகின்றார்கள்.

4:43, ஏப்ரல் 5. 1911 –

# 73. மகாபோதி பௌத்தம்

வினா: பௌத்ததன் மத்தைப் பரவச்செய்யவேண்டுமென்று புதுப்பேட்டைக் கோமளீஸ்வரன் கோவிலருகே மகாபோதி சங்கமென்னும் ஓர் கூட்டத்தார் தோன்றி தன்மத்தைப் பரவச்செய்துவருங்கால் அவ்விடந் தாங்கள் வராமலும் வந்திருந்து தன்மத்தைப் போதிக்காமலுமிருப்பது எங்கள் யாவருக்கும் பெரும் அயாசத்தையும் சங்கையையும் உண்டு செய்கின்றபடியால் இச் சங்கையைக் தெளிவற நிவர்த்திக்கும்படி வேண்டுகிறோம்.

வே. உ. மாணிக்கம். புரசவாக்கம்.

விடை - நமது சங்கத்தின் பெயர் சாக்கைய பௌத்த சங்கம். அவர்களுடைய சங்கத்தின் பெயர் மகாபோதி சங்கம். நமது சங்கத்தின் கருத்தோவென்னில் பொய்யாகிய சாதிக் கட்டுப்பாடுகளைக் கனவிலும் நம்பப்படாது. அதை அதுசரித்து ஒற்றுமெய்க் கேட்டை உண்டு செய்துக் கொள்ளப்படாதென்பது துணிபு.

அவர்களது சங்கத்தின் கருத்தோவென்னில் புத்ததன்மத்தில் சாதிபேத மென்னும் செயலேயில்லாதிருக்கத் தாங்கள் புத்ததன்மம் போதித்தோமென்று கூறி அவற்றை தாழ்ந்த வகுப்போர்களுக்குப் போதிக்கப் போகின்றோமென்று தங்களைத் தாங்களே உயர்த்திக்கொண்டு புத்ததன்மமென்று கூறுகின்றார்கள்.

நம்முடைய சங்கத்தின் சத்தியதன்ம போதமோவென்னில், ஒவ்வொரு மனிதனும் நீதிநெறி வாய்மெயில் நிலைத்து மெய்ப்பொருளுணர்ந்து தீவினைகளை ஒழித்து பிறவியின் துக்கத்தை ஜெயிக்கவேண்டும் என்பது கருத்தும் சத்திய சாதனமுமாகும்.

சென்னை மகாபோதி சங்கத்தோர் கருத்தோவென்னில் மெய்ப் பொருளென்பது ஒன்று கிடையாது. மறுபிறவியென்பதுங் கிடையாது. மனிதன் சாகவேண்டியதே முடிபென்றுங் கூறுவார்கள்.

இத்தகைய சாதி சம்மந்தத்திலும் தன்மசம்மந்தத்திலும் நோ விரோதமாயுள்ளபடியால் அச்சங்கத்தற்கு வருவதிலும் வந்தும் ஏதேனும் போதிப்பதிலும் யாதொரு பயனும் இல்லாதபடியால் வராமல் நின்றுவிட்டோம். இதுவே நமது கருத்தாகும்.

அவர்கள் பௌத்தர்களென வெளிதோன்றியும் தங்களை உயர்ந்தவகுப்போர்களாக எண்ணிக்கொண்டு தாழ்ந்த வகுப்போர்களுக்கு தன்மஞ் சொல்லப்போகின்றோமென்று கூறி வெளிவந்ததை கனந்தங்கிய தன்மபாலா அவர்கள் வெளியிட்டுவரும் மாதாந்த மகாபோதி ஜர்னலில் தெரிந்துக் கொள்ளுவதுமன்றி அச்சங்கத்தில் வந்துள்ள பிக்ஷுவின் கையிலிருக்குங் கடிதத்தினாலும் அறிந்துக் கொள்ளலாம். ஈதன்றி அவர்களது புத்த ஜயந்தி கொண்டாட்டத்தை இந்து' பத்திரிகையில் எவ்வகையாக எழுதியிருக்கின்றார் களென்னில் காட்டுமிராண்டிகளுக் கொப்பானவர்களும். அறிவில்லாதவர்களும், நீதிநெறி ஒழுக்கமற்றவர்களுமாகியக் கூட்டத்தோருக்கு தன்மம் போதிக்கப் போகின்றோம் என்றும் வரைந்திருக்கின்றார்கள். அத்தகையக் கூட்டத்தோர் யாரோ நமக்கு விளங்கவில்லை. இத்தகையக் கூட்டத்தோர் யாவரென்று தாங்களேனுந் தெரிந்துக் கூறுவீராயின் மிக்க உபகாரமாகும்.

தங்களுக்குள் அறிவிலிகளும் அசுத்தர்களும் அசப்பியர்களும் நீதிநெறி ஒழுக்கமற்றவர்களும் இருக்கின்றார்களா இல்லையாயென்று ஆராயந்துணராது அறிவில்லாதார்களும் நீதிநெறியற்றவர்களுமாகிய ஓர் கூட்டத்தோர் இருக்கின்றார்களென்றும் அவர்களை சீர்திருத்த வந்தோமென்றுங் கூறுகிற படியால் அக்கூட்டத்தோர் யாவரென்பதை நாம் தெரிந்துக் கொண்ட பின்னர் அவ்விடம் வரக் கார்த்திருக்கின்றோம்.

**திரிக்குறள்**

வெண்மெயெனப்படுவதி யாதெனினொண்மெ

# 74. வேளாண் சடங்குகள்

வினா : தென்னிந்தியாவில் விவசாயம் நடாத்தும் அனந்தமானவர்களும் சங்கராந்திகாலங்களில் மாடுகள் யாவையுங் கழுவி சுத்தஞ்செய்து வேண்டிய ஆபரணங்கள் பூட்டி நல்லவேளை என்னுங் காலவரையை அனுசரித்து பொன்னேறுக்கட்டுகின்றார்களே அவ்வாதாரம் எதை அனுசரித்தது. மறுபடியும் ஏரை விட்டுவிடுங் காலங்களில் வடக்குமுகமாய் சரிவரத் திருப்பி ஏரைவிட்டுவிடும் யாவருங் கையிலேந்துங் கோலையும் பயபக்தியுடன் கரமேந்தி இருகையையும் சிரசின் மேல் வைத்து வடக்கு முகமாய் கும்பிட்டு ஏரைவிட்டு விடுகிறார்களே இது எந்த அனுபவத்தை ஒட்டியது, இதற்கு சாஸ்திரமும் நூலாதாரமுமுண்டா. வடக்கு திக்கு நோக்கி கும்பிடும் வழக்கமொன்றிருக்க சிலர் மெய்ப்பொருளில்லை என்று கூறுகின்றார்களே மேல் குறித்தவர்கள் எந்த மெய்யைக்கண்டு கும்பிடுகிறார்கள். அவர்களைக் கேட்டால் பெரியோர்கள் வழக்கத்தை அனுசரித்து கும்பிட்டு வருகிறோமென்கிறார்கள்.

எ. நாராயணசாமி, ஓரத்தூர்

விடை : பௌத்தருள் வேளாளத் தொழில் செய்வோர் யாவரும் சங்கரர் அந்திய புண்ணியகாலமாகும் மார்கழி மாதக்கடையிலும், தைமீ முதலிலும் தங்கள் தங்கள் வயல்களில் விளைந்த தானியங்களைப் பொங்கலிட்டு இந்திரராம் புத்த பிரானை பூசிப்பதுடன் மாடுகளை சுத்தஞ்செய்து அவைகளையுங் கொண்டாடி மறுநாள் வேளாளத் தொழிலாளர்கள் ஒருவருக்கொருவரை காணும் பொங்கலென வழங்கி சந்தித்துக்கொள்ளுவார்கள்.

காணும் பொங்கலுக்கு மறுநாள் அதிகாலையில் எழுந்து பொன் தகடு வேய்ந்த ஏறினைக் கொண்டுபோய் வெண்ணெறுதுகள் பூட்டி உத்திர முகமென்னும் வடக்குதிக்கு நோக்கி சரணாகதி என்னும் இருகரத்தை சிரமேற்கூப்பி உத்தரகுருவாம் புத்த பிரானை சிந்திப்பதியல்பாம்.

இத்தகைய சிந்தனைக்கும் மூலகாரணர் சமணமுநிவர்களேயாகும். அறப்பள்ளிகளிலுள்ள ஞானசாதனர்கள் புத்தபிரான் அரசமரத்தடியில் வீற்று உத்திரமுகம் நோக்கி சித்தசுத்தி செய்து இந்திரியத்தை வென்று பற்றற்ற நிருவாணம் பெற்றது போல் தாங்களும் பெற்று நித்தியானந்தம் அடைவதற்கு உத்திரமுகம் நோக்கி சாதனை புரிந்துவருவதை நாளுக்குநாள் கண்டுவரும் வேளாளத் தொழிலாளர்களும் தங்களது வேளாண்மெய் விருத்தி பெறல் வேண்டி பொன்னேறு பூட்டி போதிநாதனை சிந்தித்து வந்தார்கள்.

அத்தகைய சிந்தனையினாலும், நீதிநெறி ஒழுக்கத்தினாலும் மாதம் மும்மாரி பெய்யவும் வரப்புயரவும், நீர் நிறம்பவும், பயிறு பெருகவும், குடிகள் சுகிக்கவும், கோன் உயரவுமாய செயலுற்றிருந்தது.

அத்தகைய சாத்தியசிந்தனையுமற்று நீதிநெறி ஒழுக்கங்களுங் கெட்டு பொய் வேதங்களும், பொய்ச்சாதி வேஷங்களும், பொய்ப் புராணங்களுந் தோன்றி, பொய்ப் பொருள் மலிந்து, மெய்ப்பொருள் விளக்கமற்றுவிட்டபடியால் பஞ்சமும் பெருவாரிக் காச்சலுமுண்டாகி குடிகளை சஞ்சலத்திற்கு உள்ளாக்கிவருகின்றது.

**நிட்டானுபூதி**

உத்தர முகமாய யாதனத்திருந்தே வுயர்குருபத மலர் தொழுது
முத்திரையெனுஞ்சாம்பவியினை பொருந்திமோனமா மன்னிலை வழாமல்
சித்திரதீபம்போல் அசைவறவே சிந்தையை நிலைநிறுத்துவனே
அத்தனடியை யடைவனென்றுறைக்கு மண்ணலாகமமெலா மெடுத்தே.

5:17, ஆகஸ்டு 23, 1911 –

# 75. ஏற்பது இகழ்ச்சி என்றால் என்னை

எங்கள் முன்னோர் எழுதிவைத்திருக்கின்றாரென்று கூறுவானாயின் அதன் மெய்யும் பொய்யும் நன்குணராது நம்புவது இகழ்ச்சி. எங்கள் தேவன் அப்பவுமிருக்கின்றார், இப்பவுமிருக்கின்றார், அப்போதும் அப்படி சொன்னார், இப்போதும் இப்படி சொன்னாரென்று கூறுவானாயின் இருந்ததினாலும் சொன்னதினாலும் நீவிரடைந்துள்ளப் பலன் யாதென உசாவாது அவன் வார்த்தையை நம்புவது இகழ்ச்சி. எங்கள் தேவன் கீழிருந்து மேலே போனார் மேலிருந்து கீழே வந்தாரென்பானாயின் மேலே போயதினாலுண்டாய சுகமென்ன, கீழே வந்ததினாலுண்டாய பயனென்னவென்று உசாவாது அவன் சொல்லியதை நம்புவது இகழ்ச்சி. எங்கள் தேவனே சகலரையுங் காப்பவரென்று கூறுவானாயின் உங்கள் தேவன் எங்களைக் கார்க்காமல் விட்டுவிடுவாரோ வென்று உசாவாது அவன் வார்த்தையை நம்புவது இகழ்ச்சி. எங்கள் தேவன் நம்பினால் கார்ப்பாரென்று கூறுவானாயின், உங்கள் தேவனை நம்பியுள்ளவர்கள் தேசத்தில் எரிமலைகள் பொங்கியும் நீர் பிரவாகமுற்றும் தத்தளித்து மடியுங்கால் நம்பியுள்ளோரைக் கார்க்காத தெய்வம் எங்களைக் கார்க்குமோவென்று உசாவாது அன்னோன் வார்த்தையை நம்புவது இகழ்ச்சி.

ஆதலின் எங்கள் தேவன் எழுதியப் புத்தகமென்று கூறியபோதினும் எங்கள் பெரிய பெரிய மனிதர்கள் எழுதிவைத்துள்ளப் புத்தகமென்ற போதினும் அதை தேற வாசித்து அதைக் கைப்பற்றியுள்ளோர் என்ன சுகத்திலிருக்கின்றார்கள், அன்னோர் கூட்டத்தோர் என்ன சுகத்திலிருக்கின்றார்கள், அன்னோர் கூட்டத்தோர் என்ன சுகச்சீர் பெற்றுள்ளாரென்று ஆராய்ந்து அதை நம்புவதே புகழ்ச்சி. தேற ஆய்ந்துணராது ஏற்பது யாவும் இகழ்ச்சி இகழ்ச்சியேயாம்.

# 76. பௌத்த சோதிரர்களுக்கு அறிக்கை

பௌத்த தன்மப் பிரியர்களே! சோதிரர்களே! சற்று கவனியுங்கள் இந்துக்களென்போர்களுக்கும், பௌத்தர்களென் போர்களுக்கும் யாதொரு சம்மந்தமுங் கிடையாது. காரணமோவென்னில், இந்துக்களுக்குரியது இந்து மதம், பௌத்தர்களுக்குரியது புத்ததன்மம். இந்துக்களென்போருக்குப் பலவகை சாதிப்பிரிவினை களுண்டு. பௌத்தர்களுக்கு தேசப்பிரிவினையும், பாஷைப்பிரிவினையும் உண்டேயன்றி பெரியசாதி, சின்னசாதி என்னும் ஒற்றுமெய்க்கேடும் மனுக்களைக் கண்டவுடன் மனுக்கள் முறுமுறுக்கும் பொறாமெய்க்கேடும் இவர்களுக்குள் கிடையா. பௌத்தர்களை ஏதேனும் ஓர்சாதிப் பெயரால் இழிவு கூறுவார்களாயின் பிரையாதுக்கு உட்படுவதுடன் தண்டனைக்குமுள்ளாவார்கள். ஆதலின் பௌத்த சோதிரர்கள் இந்துக்களென் போருள் சைவ, வைணவ, வேதாந்திகளென்னும் பிரிவினைகள் உள்ளோர் குடும்பத்தோர்களாயிருப்பினும் நீங்கள் பஞ்சசீலம் பெற்று பௌத்தர்களானப் பின் இந்துக்களுக்குட்பட்ட சைவ, வைணவ வேதாந்திகளாயுள்ளக் குடும்பத்தோரை நெருங்கி குடும்பத்தோர்களாக பாவிக்காது அன்னியர்களாகவே பாவித்து கொள்ளல் கொடுக்கல் முதலிய சம்மந்தங்களிலுங் கலக்காமலிருக்க வேண்டியது.

அவர்களும் பராயர்கள் மதத்தை ஒழித்து சுயதன்மசீலம் பெற்று பௌத்தர்களாகி நன்மார்ககத்தில் ஒழுகுவார்களாயின் அவர்களையே தங்கள் நெருங்கிய குடும்பத்தோர்களென்றெண்ணி கொடுக்கல், வாங்கல் முதலிய சம்பந்தங்கள் செய்துக்கொள்ளவேண்டியது.

அம்மை, அவ்வை, எனவழங்கும் கிறாமதேவதை நமது பௌத்த பிக்குணியாயினும், தற்காலம் அவளைச்சார்ந்த தேவதையாகக் கோறாது காளி, கன்னிகாபரமேஸ்வரி என்னும் துஷ்ட தேவதையாகக் கோறுகிறபடியால், நீங்களும் அவ்வகை சேராது, பெண்களுக்கென்னும் வேறு வியாரங்கட்டி சாந்த தேவதையை சுத்தோதயமாகப் பூசித்து அம்மன் சத்தியதன்ம திரிவாசகத்தைப் போதித்து வரவேண்டியது.

சாதி வித்தியாசத்திற் குட்பட்ட சில பராயசாதியார் தாங்களும் பௌத்தர்களௌன வேஷமிட்டுக்கொண்டு யதார்த்த பௌத்தர்கள் மத்தியிற் பிரவேசித்து சத்திய தன்மத்தை மாறுப்படுத்துவதுடன் அவர்களையுங் கெடுத்து முன்னேறாதிருக்கும் ஏதுக்களைச் செய்துவருகின்றார்கள். அத்தகையப் பராயசாதியோர் கூட்டத்திற் பிரவேசியாமலும் அவர்கள் போதனைகளைக் கேளாமலும் இருக்கவேண்டியது. சாதிபேதமில்லா கூட்டத்தோருட் சிலர் சாதிபேதமுள்ள பௌத்தர் கூட்டத்திற் சேர்ந்து தாங்களுமோர் பெரிய சாதிகளௌன அபிநயித்து உள்ளதையுங் கெடுக்க ஆரம்பித்துத் திரிகின்றார்கள். அத்தகைய மூதேவிகள் முகத்தில் விழிக்காமலும் அவர்கள் கூட்டுரவிற் சேராமலும் அவர்கள் வீட்டு வாயற்படிகளுள் தங்கட் படிகளை வையாமலும் இருக்கவேண்டியது.

சுய சாதியோரை சீர்திருத்தி சுயசாதியோரை முன்னேறக் கருதுவோர்கள் மறந்தும் பராயசாதியோரை சாரமாட்டார். காரணம் நாளெல்லாம் பராயசாதியோர்களால் தாழ்த்தி நலங்குலைந்திருப்பவர்கள் இப்போது அவர்களால் சீர்பெறுவோமென்று நம்புவர்களோ, ஒருக்காலும் நம்பமாட்டார்கள். ஆதலின் சுயசாதியோரை யதார்த்தத்தில் சீர்திருத்த முயலுவோர் சுயசாதியோர் மத்தியினின்றே சீர்திருத்த வேண்டும் அங்ஙனமின்றி பராயசாதியோர் மத்தியிற் சென்று சீர்திருத்துவரென்போர் சுயசாதியோரைக் கெடுப்பதுடன் தாங்களுங்கெட்டு சீரழிவோர்களேயாம்.

5:21; நவம்பர் 1, 1911 -

# 77. மக்களை மக்களாக ஏற்காதோரைத் தேவரெனப்போமா அன்றேல் நரகரென்னலாமோ

மக்களாம் மனுகுலத்தோரை, மக்களென்றும் மநுக்களென்றும் பாராது மிருகங்களினுந் தாழ்ச்சியாக எண்ணுவோரும், தாழ்ச்சியாக நடத்துவோரும், தேவர்களாவரோ, ஒருக்காலும் ஆக மாட்டார்கள்.

தேவர்களின் இலட்சணங் கூறுமிடத்து சருவசீவர்களையுந் தன்னுயிர்போல் பாதுகாக்குந் தண்மெ உடையவர்களென்றும், இராகத்துவேஷ மோகங்களை அற்றவர்களென்றும், பொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசை மூன்றையும் விட்டவர்களென்றும், செல்லல், நிகழல், வருங்கால மூன்றினையும் சொல்லுவோ ரென்றும், இரவு பகலற்றவர்களென்றுங் கூறுகிறபடியால், மக்களை மக்களாக பாவிக்காத வன்னெஞ்சர்களும், போராமெக்காரர்கள் ஒருக்காலும் தேவர்களாக மாட்டார்கள்.

மக்களை மக்களாக பாவிக்காதோரை நரர்களென்றே கூறத்தகும். அத்தகைய நரர் கூற்றினும் இவ்வன்னெஞ்சினர் வானரரோ அன்றேல் வாலற்ற நரரோவென் றோசிப்பதாகும்.

இவற்றுள் வானரரும் வாலற்ற நரரும் பகுத்தறிவில்லாக் குறைவால் மக்களைக் கண்டவுடன் ஒதுங்கி ஓடுவதியல்பாம். அவ்வியல்பு மாறாது வானரரும் வாலற்ற நரரும் பூர்வ புண்ணிய வசத்தால் மக்களாகத் தோன்றி நிற்கினும் பூர்வம் நரராயிருக்குங்கால்

மக்களைக் கண்டவுடன் ஓடுமியல்பு மாறாது. இம் மக்கள் ஜெனனமெனத்தோன்றினும் பூர்வஜென்மச்செயல் கொண்டு மக்களைக் கண்டவுடன் ஒதிங்கி ஓடுகின்றார்கள். கேட்போருக்கு அவர்களைத் தீண்டப்படாது, இவர்களைத் தீண்டப்படாதென்னும் படாடோபம் காட்டினும் பூர்வ விட்டகுறையின் செயலே சான்றாம். மற்றபடி மக்களை மக்கள் தீண்டக்கூடாதென் போன் மக்களில் மக்களுமாகான், மக்களில் தேவனுமாகான், மக்களில் நரர் நரரென்றே கூறத்தகும். அத்தகைய நரனது வாக்கையும், நரனது செயலையும் நன்கென்று ஏற்காது அவற்றை மனுகுல ஒற்றுமெக்கேடாம் தீது, தீதென்றே விலக்கல் வேண்டும்:

5:22; நவம்பர் 3, 1911 –

# 78. புறக்கருவி ஆராய்ச்சியும் பௌத்தமும்

வினா : தற்காலம் ஆங்கில பாஷையை வாசித்து அதிற் (சைன்ஸ்பிரபஸ) ரென்னும் பெயரெடுத்துள்ளவர்கள் சகலவற்றையும் ஆராய்ந்துள்ளவர்களாம் அதிற் சிலர் புத்த பிரானுக்குச் சமதையான ஆராய்ச்சிப் பெற்றவர்களாம் அவர்கள் புத்ததன்மங் கூறுகிறோமென வெளிதோன்றி மனிதன் மரணமடைவதுதான் முடிவு அதற்குப்பின் அவனுக்கு யாதொரு சுகதுக்கமுங் கிடையாதெனக் கூறுகின்றார்களாம். ஈதென்ன (சைன்சோ) ஈதென்ன ஆராய்ச்சியோ அடியேனுக்கு விளங்கவில்லை.

வே. கோ. பதுமநாபம், சென்னை.

விடை : தாம் விசாரிப்பதும் பிரபஸர்கள் கூறுவதும் புறக்கருவியினது ஆராய்ச்சியேயன்றி உட்கருவியினது ஆராய்ச்சி ஆகாவாம். புறக்கருவியினது ஆராய்ச்சி யாதெனில் கெந்தகமும், வெடியுப்புஞ் சேர்ந்தால் வெடிக்கும். சக்கிக் கல்லும், இரும்புதுண்டுஞ் சேர தட்டினால் நெருப்புண்டாகும். இன்னின்ன வஸ்துக்கள் சேர்ந்தால் இனிப்புண்டாகும், இன்னின்ன வஸ்துக்கள் சேர்ந்தால் துவர்ப்புண்டாகும், இன்ன வஸ்துவை முகர்ந்தால் மனிதன் இஸ்மரணையற்று விடுவான், இன்ன வஸ்துவை உட்கொண்டால் மனிதன் மரணமடைவான், நெருப்பும் நீருங் காற்றுஞ் சேர்ந்தால் ஓர் வஸ்துவை இழுக்கும், புகையுங் காற்றும் பாதரசமும் ஒர் வஸ்துவை ஆகாயத்திற் கிளப்பும் எனக் கைகளாலும் கருவிகளாலும் வஸ்துக்களை ஆராய்வது புறக்கருவி ஆராய்ச்சி என்னப்படும்.

இத்தகையப் புறக்கருவி ஆராய்ச்சியோர் தேகதத்துவ ஆராய்ச்சி செய்யுங்கால் பிணத்தை அறுத்து ஆராய்வார்களன்றி குணத்தை ஆராய மாட்டார்கள். குணத்தை

ஆராய வேண்டியவர்கள் தன்னைத்தானே ஆராயவேண்டுமேயன்றி தனக்கப் புறப்பட்டப் பிணத்தை ஆராய்வதால் பயனில்லை. சத்துவகுணம், ரசோகுணம், தமோகுணமென்னும் முக்குணங்களால் எழூஉம் காம, வெகுளி, மயக்கங்களில் காமாக்கினி எவ்விடத்தினின்றெழும்பி எவ்விடத்து அடங்குகிறதென்றும், கோபாக்கினி எவ்விடத்தினின்று எழும்பி எவ்விடத்து அடங்குகிறதென்றும், பசியாக்கினி எவ்விடத்தினின்றெழும்பி எவ்விடத்து அடங்குகிறதென்றும் கண்டறிந்தவனும், அறிவு மனத்தின்கண் ஒடுக்கமா, மனம் அறிவின் கண் ஒடுக்கமாவென்று ஆராய்ந்தொடுங்கினவனும் பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசையாம் பாசபந்தக் கயிறுகளை அறுத்து நிருவாணநிலைப் பெற்றவனும் எவனோ அவனே உண்மெய்ப்பொருள் உணர்ந்த மெய்யனாவன். தன்னிற்றானே இத்தியாதி விஷயங்களையுங் கண்டுணரா கடைச்சோம்பேறிகளால் கண்ட காட்சிகளைக் கொண்டு மனிதன் இறப்பதே முடிவு. இறந்தபின் யாதொரு சுகதுக்கங்களுங் கிடையாதென்பது பெரும் பொய் பொய்யேயாம்.

காரணம் பாசபந்தப் பற்றுக்கள் யாவையும் அறுத்து நிருவாணமுற்ற மெய்கண்ட தேவனை விவேகமிகுத்தோர் புத்தரென வரைந்திருக்கின்றார்கள். அத்தகைய பாசபந்த பற்றுக்கள் அறாதவர்களையும் மெய்கண்டறியாதவர் களையும் அந்நிலையில் உணர்ச்சியேனும் இல்லாதவர்களையும் புத்தருக்கு சமதையாகக் கூறுவது கஸ்தூரியுடன் கசிமலத்தை ஒப்பிடுவதொக்கும் எம்.ஏ. எல்எல்டி. கற்றவர்களாயினும் அதற்கு மேற்பட்ட பிரபஸர்களாயினும் கருவிகளைக் கொண்டு காணும் பொருட்களை சோதிப்பவர்களே அன்றி கருத்தைக் கொண்டு காணாப்பொருளைக் கண்டறிய மாட்டார்கள். அவ்வகையால் தன்னைத்தானே கண்டறியா மாந்தர்கட் போதனை களால் உலக மக்கள் அகங்கரித்துப் பாழடைவார்களென்பது சத்தியம். எங்ஙன மென்பீரேல், தன்னைத்தானே கண்டறிந்த விவேகமிகுத்தோராம் மேன்மக்கள் உலக மக்களை நோக்கி மக்களே நீங்கள் இம்மெயில் துற்கருமங்களாம் கொடியச் செய்கைகளைச் செய்துவரில் மறுமெயில் மாளாதுன்பத்தை அனுபவிப்பீர்கள். இம்மெயில் நற்கருமங்களாம் நல்ல செய்கைகளைச் செய்துவரில் மறுமெயில் நல்லசுகத்தை அடைவீர்களென்று கூன், குருடு, சாப்பாணிகளாகத் தோற்றும் புருவங்களையும், பிணியன், வரியன் என உழலும் பாடுகளையுந் தங்களனுபவக் காட்சியால் உணர்ந்து

பயமுறுத்தியிருக்கும் போதே மக்களும் மொழிகளை ஏற்காது தங்கள் தங்கள் துற்கன்மங்களையே பெருக்கித் துக்கவிருத்தியை அதிகரித்துக் கொண்டு தாங்கள் கெடுவதுடன் தங்களை அடுத்தோர்களையுங் கெடுத்துப் பாழ்படுத்தி வருகின்றார்கள். மனிதன் இறப்பதே முடிவு, இறந்த பின் யாதொரு சுகதுக்கமுங் கிடையாதெனக் கூறும் அபுத்தப்பிரசங்கிகள் இன்னும் பத்துபேர் தோன்றுவார் களாயின் இப்போதே கேட்டிற்குப் போகும் வழியை உண்டு செய்து வருகின்றவர்கள் மனிதனுக்கு முடிவு மரணந்தான் மற்றப்படி வேறு சுகதுக்கங் கிடையாதென்னும் மனோதிடத்தால் கேட்டுக்குப் போகும் வழிகளை விசாலப்படுத்தி மனம் போனப்படி தன்னுடைய சுகத்தை அனுபவிக்கக் கருதி அன்னியர் தாரத்தை இச்சிப்பதும், அன்னியர் பொருளை அபகரிப்பதும், மதுமாமிஷம் புசிப்பதுமாகிய துற்செயல்களில் புக்கி வீணே கெட்டழிவதுமன்றி தன்னை அடுத்தோனுக்கும் இம்மதியைக் கொடுத்துக் கெடுத்துப் பாழ்படுத்திவிடுவான். ஆதலின் மனிதனுக்கு மரணந்தான் முடிவு வேறு சுகதுக்கங் கிடையாதென்று கூறுங் கூட்டத்தோர் கூட்டுரவிலும் அவர்கள் முகத்திலும் விழிக்காமலிருப்பதே நீதியின் பாதைக்கழகாம். மற்றப்படி புலிகள் பசுவின் தோலைப் போர்த்துலாவுவதுபோல் சில சூன்ய மதஸ்தர்கள் தங்களை பௌத்தர்களென நடித்து சீர்பெற்றுவரும் யதார்த்த பௌத்தர்களைக் கெடுத்து சீரழிக்கப்பார்க்கின்றார்கள். அத்தகையக் கேட்டிற்குக் கொண்டு போகும் வழிக்கு மனவுற்சாகத்தையுந் திடத்தையுங் கொடுக்கும் சூன்ய மதஸ்த்தர்கள் கூட்டுரவிற் சேராமலும், அவர்களது சூன்ய போதங்களை கேளாமலும், அவர்களது சூன்ய புத்தகங்களைக் கண்களிற் பாராமலுமிருக்கும்படி வேண்டுகிறோம். அதாவது மக்களுலாவும் வீதிகளில் மலமூத்தராதிகளை விசுரிம்பிக்கலாகாதென்னும் சட்டத்தைப் பிறப்பித்து தெ எத்தனையோ பெயர் மலமூத்திர விசுரிம்பக் குற்ற தெண்டனையடைந்து வருகின்றார்கள். அத்தகைய சட்டமுங் கிடையாது தெண்டனையுங் கிடையாதாயின் வீதிகள் என்னக் குப்பைக் கேட்டை அடைந்திருக்கு மென்பது சொல்லாமலே விளங்கும். பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வாய்மெய்யையும் ஓர் மனிதன் இல்லையென்று மறுதலிக்க வியலாது அந்நான்கிலுமுண்டாகுந் துக்கமின்னது, துக்கோர்ப்பவ மின்னது, துக்க நிவாரணம் இன்னது, துக்க நிவாரணமார்க்கமின்னதென்று தெள்ளற வகுத்திருக்க அம்மார்க்கத்தில் நடந்து அதன் சுகதுக்கங்களை விளக்காது நடவாமலே பேசுவதும் சாதிக்காமல் போதிப்பதுமாகிய செயல்கள் சாக்கைய புத்த சங்கத்தோர்

தோற்றத்தையும் அவர்கள் சீரையும், அவர்களது முன்னேற்றத்தையுங் கெடுத்துப் பாழ்படுத்தத் தோன்றியதாக விளங்குகின்றது. ஆதலின் அவர்களது சுகதுக்கம் இல்லையென்னும் அடித்த போதனை களைச் செவிகளிற் கேளாமலும் அத்தகைய அபுத்தர்களின் சங்கதிகளை நமது பத்திரிகைக்கு எழுதாமலும் இருக்க வேண்டுகிறோம்.

துற்கருமத்தால் இம்மெயிலும், மறுமெயிலும், இன்னின்னக் கேடுகளுண்டு, நற்கருமத்தால் இம்மெயிலும் மறுமெயிலும் இன்னின்ன சுகமுண்டென்று கூறும் சத்திய சங்கத் தோரை அடுத்து அவர்களுக்கு பாதசேவை செய்வதே அழகாம். மற்றவை யாவும் நீதிநெறிக்கு இழிவாம்.

5:29, டிசம்பர் 27, 1911 -

# 79. இராயப்பேட்டை பௌத்தாச்சிரமத்தில் ஆதிவாரம் மாலையில் நடந்த சங்கறாந்தி பண்டிகைப் பிரசங்கம்

அன்பர்காள் இன்று சங்கராந்தி பண்டிகை என்றும் சங்கராந்தி புண்ணியகாலமென்றும், வழங்கும் படியான உற்சாக காலம் எம்மார்க்கத் தோரைச் சார்ந்ததென்றும், எச்சரித்திரத்தை அனுசரித்ததென்றும் விசாரித்து நடத்த வேண்டியதே விவேகிகளின் இயல்பாம். அங்ஙனம் விசாரியாது நடத்தல் சொன்னதைச்சொல்லுங் கிளிப்பிள்ளைக்கொத்ததென்றும், சொன்னதைச் செய்யும் ஏவலுக்கொத்ததென்றும் எண்ணப்படும். ஆதலின் இப்பண்டை ஈகையின் அந்தரார்த்தத்தை அனுபவ சரித்திரங்களைக் கொண்டு ஆராய்வோமாக

சங்கறர் என்பது புத்தருக்குரிய ஆயிரநாமங்களில் ஒன்றாம். அதாவது உலகெங்குஞ் சங்கங்களை நாட்டி அறத்தை ஊட்டிவைத்த காரணங்கொண்டு அவரை சங்கமித்தரென்றும், சங்கதருமரென்றும், சங்க அறரென்றும் வழங்கி வந்தவற்றை அடியிற் குறித்துள்ள பாடல்களால் அறிந்துக்கொள்ளலாம்.

**மணிமேகலை**

புத்த தரும் சங்கமென்னும் / முத்திற மணியை மும்மையின் வணங்கி
போதி மூலம் பொருந்தியிருந்து மாரனை வென்று வீரனாகி
குற்ற மூன்று முற்ற வறுக்கும் வாமன் வாய்மெ யே மக்கட்டுரை. மேற்சொன்னபடி 5.

காதை

சாதுயர் நீக்கிய தலைவன் றவமுனி சங்க தருமன்றா னெமக்கருளிய

இத்தகைய சங்க அறநிறையோனாம் ஒப்பிலா அப்பன், கல்லால விருட்சத்தினடியில் வீற்று தனது அதிதீவரபக்குவ ஞானசாதனத்தால் சகலபற்றுக்களு மற்று பங்குனிமாத பௌர்ணமியில் நிருவாணம் பெற்று காமனையுங் காலனையுஞ் ஜெயித்து நித்திய சுகம் பெற்ற சதானந்த நிலையைத் தன்மட்டிலும் சுகிக்காது உலகெங்குஞ் சுற்றி சங்கங்களை நாட்டி அறத்தை ஊட்டிவைத்துள்ளாரென்பது சரித்திர ஆதாரமாம்.

**மணிமேகலை**

எண்ணருஞ் சக்கரவாள மெங்கணும் / அண்ணலறக்கதிர் விரிக்குங்காலை.

என்னுஞ் செய்யுளாதாரத்துடன் தற்காலம் சைனா, ஜப்பான், பர்மா, சிலோன, ஆசாம், மங்கோலியா மற்றத் தேசங்களிலுள்ள தன்மசங்கங்களும் உலகிலுள்ள மநுகுலத்தோர் மொத்தத் தொகையில் அரையே அரைக்கால் பாகம் பெருந்தொகை பௌத்த கூட்டங்களிருக்குஞ் சிறப்பே போதுஞ்சான்றாம்.

உலகெங்குஞ் சென்று சங்கங்களை நாட்டி அறத்தை ஊட்டிய சங்கறா காசிகங்கை கரை என்னும் பேரியாற்றங்கரையில் மார்கழி மாதம் கடை நாள் பௌர்ணமி திதி திருவாதிரை நட்சத்திரம் விடியற்காலம் துலாலக்கினத்தில் தனது உச்சியிலும் தேகத்திலும் பஞ்சவருண சோதி வாள் போன்று வீச பரிநிருவாணமுற்றார்.

**வீரசோழியம்**

இவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருள் நீங்க
வெவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்த செஞ்சுடரென்ன
போதிமேவினை பொய்மெ யகற்றினை
சோதிவானவர் தொழவெழுந் தருளினை
ஆதிநாத நீனடி யினை பரவுதும்.

கூரார்வளையுகிர் வாளெ யிற்றுச் செங்கட்
கொலையுழுவை காய் பசியாற் கூர்ந்த வென்னோய் நீங்க
ஓராயிரம் கதிர்போல்வாள் விரிந்தமேனி
யுளம் விரும்பிச் சென்றாங் கியைந்தனை நீயென்றாற்
காரார் திறை முளைத்த செம்பவளமேவுங்
கடி முகழ் தன்சினைய காமரூபூம் போதி
யேரார் முனிவரர் வானவர்தங் கோரவே
யெந்தாயரோ நின்னை யேந்தாதார் யாரே.

**மணிமேகலை**

காயங்கரை யெனும் பேரியாற் றடைகரை / மாயமின் மாதவன் றன்னடி பணிந்து காசின் மாநகர் கடல்வயிறு புகாமல் / வாசவன் விழாக்கோல் மறவேனென்று.

**விம்பாசாரன்**

இறைமகற்காத னென்பானைந்திற் / குறைமிகு காலக் கூற்றங்கடிந்து
தக்கக்கடை நாட்டனுவாதிரையிற் / பக்கமங்கலம் பருமதகோலாய்
போதிநீழற் பொருந்திய புத்தேள் / சோதி பஞ்சகக் சூழொளியாகி
ஆனவைகறை யார்ப்ப வானவர் / போனக ... விழாக்கோள்.

இக்காலத்தையே சங்கரர் அந்தியகாலமென்றும் இக்காலத்தை அனுசரித்து ஆனந்த தன்மஞ்செய்வதை சங்கரர் அந்திய புண்ணியகாலமெ போதிநாதனது பண்டிகை ஆதலின் போதிபண்டிகை என்றும், ஐயிந்திரியங் களை வென்ற புத்தரது உற்சாககாலமாதலின், இந்திரர் பொங்கல், இந்திரர் விழா, இந்திரர் விழாக்கோ லென்றும் பௌத்தமார்க்க அரசர்கள் வருடந் தோறும் மார்கழிமாதம் முதல் கடை இருபத்தி எட்டு நாள் வரையில் தங்கள் தேசங்களிலுள்ளக் குடிகளை வீடுவாசல் முதலியவைகளை சுத்தஞ் செய்து தோரண முதலியவைகளைக் கட்டுவித்து வீதிகள் முழுவதும் புதுமணற்பரப்பி வாழைக் கரும்பு முதலியவைகளை நட்டு தேசமுழுவதும் அலங்கரித்து கடைநாளிற் சோதியை வளர்த்தி தீபசாந்தி கொண்டாடி வந்தார்கள்.

**மணிமேகலை**

மேலோர் விழைய விழாக்கோ லெடுத்த / நாலேழ் நாளினு நன்கினி துறைகென
மன்னன் கரிகால் வளவ நீங்கிய நாள் / தோரண வீதியும் தோமறு தொட்டியும்
பூரணகும்பமும் பொலம் பாலிகைகளும் / பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்
காய்குலைக் குமுகும் வாழையும் வஞ்சியும் / பூக்கொடி வல்லியுங் கரும்பு நடுமின்
பத்திவேதிகை பசும்பொற்றூணத்து முத்துத்தாமமு முறையொடு நாற்றுமின்
விழவுமலி மூதூர் வீதியு மன்றமும் / பழமணல்பாற்றுமின் புது மணல்பரப்புமின்
கதலிக் கொடியுங் காமனறு விவோதமும் / மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமின்
நாவலோங்கிய மாபெருந்தீவினுட் / காவேற் றெய்வந்தேவர் கோற்கெடுத்த
தீபசாந்தி செய்தருணன்னாள்.

அதை அநுசரித்தே நாளதுவரையில் மார்கழி மாத முழுவதுங் கொண்டாடி வருவதைக் காணலாம். சங்கரர் அந்தியகாலமானவுடன் அவரது மறைவுக்காற்றாது சங்கத்தோர்கள் துக்கங்கொண்டாடியதுமன்றி வீடுகடோரு முள்ள தன்மப் பிரியப் பெண்களும் அழுது துக்கங்கொண்டாடினார்கள். அதை அநுசரித்தே போதி பண்டிகை விடியர்காலத்தில் வீடுகடோருமுள்ள பெண்கள் துக்கங்கொண்டாடி வருகின்றார்கள்.

**வீரசோழியம்**

கொண்டன் முழங்கின் வாற் கோடற் பரந்தனவா வென்செய்கோம்யாம்.
வண்டுவரி பாடவார் தளவம் பூந்தனவாலென்செய்கோம்யாம்.
மறுளறுத்த பெரும் போதி மாதவரைக் கண்டிலமா லென்செய்கோம்யாம்
அருளிருந்த திருமொழியா லறவழக்கங் கேட்டிலமா லென்செய்கோம்யாம்
பொருளறிவு மருந்தவத்துப் புலவரைக் கண்டிலமா லென்செய்கோம்யாம்.

போதிபண்டிகை விடியற்காலத்தில் சோதியை வளர்த்திக் கொண்டாடி வந்த வழக்கம் மாறாது நாளதுவரையில் சோதியை வளர்த்திக்கொண்டு வருகின்றார்கள்.

**மணிமேகலை**

மதிநாண் முற்றிய மங்கலத்திருநாள் / பொதுவறி விகழ்ந்து புலம்பறுமாதவன் றிருவற மெய்துதல் சித்தமென்றுணர் நீ.

**சூளாமணி**

அருள்புரி யழலஞ் சோதி யாழியா னாதியில்லான்
மருள்புரி வினை கட் கென்று மறுதலை யாயவாம்
னிருள்புரி யுலகஞ்சேரா வியனெறி பயந்த பெம்மான்
பொருள்புரி விழவு காண்பார் புண்ணிய வுலகங் காண்பார்.

மார்கழிமாத முழுவதும் வீட்டுவாயலில் கோலமிட்டு முத்தந்தெரித்து வந்தது போல் நாளது வரையில் வீதிகளிற் கோலமிட்டு புட்பம் பரப்பி வருகின்றார்கள்.

**சூளாமணி**

விரையினால் மொழுகிய வீதிவாயெலாந்
திரையினாற் செழுமணி மூத்தஞ் சிந்தினார்
உரையினாலெண்ணயவ் வொளிகொள் மா நகர்
புரையினாற் பொன்னுல கிழிந்த தொத்ததே.
அழல் வளர்த்தனை யன தழையு மவ்வழற்
றழல் வளர்த்தனை யென் மலருந் தாமரை
பொழில்வளர் வளையமும் பொதுளி வண்டினங்
குழைவளர் அசோகன் மேற் குளிருகின்றவே.

விடியற்காலம் சோதியை வளர்க்குங்கால் வாத்தியகோஷம் செய்த வழக்கம் மாறாது நாளதுவரையில் போதி பண்டிகை விடியற்காலம் சிறுவர்கள் மேளவாத்திய கோஷத்துடன் கொண்டாடி வருகின்றார்கள்.

**சூளாமணி**

பூரண மணிக்குட நிறைத்த பொன்னணி
தோரண மெடுத்தன துதைந்த வெண்கொடி
வாரண முரசொடு வளைகளார்த்தரோ
காரணி கடலொலி கைதவிர்த்ததே.

சோதியை வளர்த்தி விடிந்தவுடன் இஸ்நானஞ்செய்து புதுவஸ்திர மணிந்து பரிநிருவாண சிறப்பைக் கொண்டாடி வந்தார்கள். அதை அநுசரித்தே நாளதுவரையில் இஸ்நானஞ்செய்து புதுவஸ்திரம் அணிந்து வருகின்றார்கள்.

வெண்டுகிலுடுத்து வெண்சாந்து மெய்வழித்
தெண்டிரன் மல்லிகை யொலியல் சூடினார்
வண்டிரண் மணிமுத்தும் வைரச்சாரியுங்
கொண்டிய லணியோடு கோலந்தாங்கினார்
மாமழைக் கண்ணியர் மருங்குபோல்வன்
தூமழை வளர்கொடி துவன்றிப் பத்திகள்
பாமழை யருவுகள் பலவுந் தோன்றவே
பூமழை பொன்னிரம் புதைய வீழ்ந்தவே

மங்கை பருவமில்லா சிறுபெண்கள் யாவரும் சோதிநாள் கொண்டாடுங் காலத்தில் அரசமரத்தை சுற்றி கும்மியடித்து குருநாதனை சிந்திப்பது வழக்கமாம். அதை அநுசரித்தே இக்காலத்தில் கும்மியடிப்பெண்காள் கும்மியடி குருபாதங்காணவே கும்மியடி நம்மெய் ஆண்ட ஆதிநாதனை நாடிக் கும்மி அடியுமடி அவனைத் தேடிக்கும்மியடியுமடி.

இத்தகையாக நகரவாசிகள் கொண்டாடி வந்தது வழக்கமாயினும் நாட்டுவாசிகள் இந்திரராகிய புத்தபிரானைப் பொங்கலிட்டுப் பூசித்து ஏழைகளுக்கு அன்னதானஞ்செய்த வழக்கமானது மாறாது நாளது வரையில் பொங்கலிட்டு

போதினாதனைப் பூசிப்பதுமன்றி மாடுகளை சுத்தஞ்செய்து பொன்னேரு பூட்டி பூமியை உழுது வடதிசைநோக்கிக் கைகூப்பிவடக்குமலை யானென்னும் வெங்கடபதியாம் இந்திரரை பூசித்து வருகின்றார்கள். இதுவே சங்கராந்தி புண்யகாலமென்பதின் கருத்தும் செயலும் என்னப்படும்.

**சிலப்பதிகாரம்**

வாரமுடைய திறல் வானவர்கோனுக் கெனவே
ஓரமுடையோ ருயிரிழப்ப - வீங்கு
முழவெடுத்த பேரொலியான் மூவுலகோரேத்த
விழவெடுத்தான் பூம்புகார் வேந்து.

5:32. சனவரி 17, 1912 –

# 80. கடவுளும் சாமியும்

வினா : கடவுளென்னும் பெயரின் உற்பவத்தையும், அதன் காரணத்தையும், சாமியென்னும் பெயரின் உற்பவத்தையும், அதன் காரணத்தையுங்கண்டு

அடியேனது சங்கையை விளக்கித் தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

கோ.வீ.ஜெயசேகரன், கொளம்பு.

விடை : தெய்வப்பெயர் மக்கட்பெயர் விலங்கின் பெயர் என்பவற்றுள் தாம் வினவிய காட்சிப்பொருளையும் - காட்சியற்றப்பொருளையும் தெய்வப்பெயர் தொகுதியிலேயே தெரிந்துக்கொள்ளலாம். தெய்வப் பெயருள் சூரிய, சந்திர குணியாகுங் காட்சிப்பெயரும், கடவுள், சாமி குணமாகும் செயல்பற்றிய பெயருமேயாம். உலகத்திற்கு உபகாரமாக விளங்கும் சூரியன், சந்திரன், பூமி, நீர் காற்று, நெருப்பு முதலியவைகளை தெய்வப் பெயர்களுள் வகுத்திருப்பினும் ஆறாவது தோற்றமாகிய மக்களெனத் தோன்றி ஞானவிசாரிணையால் தன்னை உணர்ந்து காம வெகுளி மயக்கங்களை ஜெயித்து பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கையுங்கடந்து நிருவாணமுற்று ஏழாவது தோற்றமாகிய தேவகதியில் நிலைத்திருப்போர்கள், சருவ சீவர்களுக்கும் உபகாரிகளாகும் நன்மெய்ச் செயலில் நிலைத்துள்ளபடியால் கடவுளென்றும் பரிநிருவாணமுற்று ஒளிமயமாக நட்சேத்திரம் பெற்று அகண்டத்தில் உலாவுகின்றபடியால் சாமி என்றும் சமணமுநிவர்கள் வரைந்திருக்கின்றார்கள்.

**பின்கலை நிகண்டு ககரவெதுகை**

ககனம் விண்படைகாடென்ப கடவுடேமுநி நன்மெப்பேர்.

**சீவகசிந்தாமணி - முத்தியிலம்பகம்**

தணக்குறப் பறித்த போது தானளைவிடுத்தல் செல்லா
நிணப்புடையுடம்பினாரை யாதிந்நீக்கலாகு
மணப்புடைமாலைமார்ப னொருசோலேயேதுவாகக்
கணைக்கவினழித்தகண்ணார்த் துறந்து போய் கடவுளானான்.
பான்மிடை யமிர்தம் போன்று பருகலாம் பயத்தவாகி
வானிடை முழக்கிற்கூறி வாலற வமுதமூட்டித்
தேனுடை மலர்கள் சிந்தித் திசைதொழச் சென்ற பின்னாட்
டானுடை யுலகங்கொள்ளச் சாமிநாள் சார்ந்ததன்றே.

என்றுங் கூறியச் செய்யுட்களே போதுஞ் சான்றாம். மற்றும் அவரவர்கள் மனப்போக்கின்படி மதக்கடைகளை வைத்து சீவிப்பவர்கள் கிழவனைப்போல் தாடி வைத்திருக்கும் ஓர் கடவுளும், நாலுதலைக்கடவுளும், ஆறுதலைக் கடவுளும், கையே கடவுளும் , காலே கடவுளும், தலையே கடவுளுமாக மக்களால் சிருஷ்டித்துக் கொண்ட கடவுளர்கள் அனந்தமுண்டு. இவைகள் யாவும் மதக்கடைபரப்பி சீவிக்கும் பொய்க்குருக்களின் போதனாக் கடவுளர் களும், பொய்க்குருக்கள் பேதை மக்களை வஞ்சித்துப் பொருள்பரிப்பதற்காக சிருஷ்டித்துக்கொண்ட கடவுளர்களென்னும் பொருளற்றப் பெயர்களேயாகும். கடவுள், சாமி என்னும் பெயர்களின் உற்பவங்களையும் அதன் பொருள்களையுந் தேறவிசாரித்துத் தெளிவார்களாயின் தற்காலம் மதக்கடைப்பரப்பி சீவிப்போ ரெல்லாந் தங்கள் தங்கள் கோவில் கதவுகளை மூடிவிட வேண்டியதேயாம்.

5:37. பிப்ரவரி 21, 1912 –

# 81. சென்னை சாக்கைய புத்த சங்க சட்டதிட்டங்கள்

இதுவே சென்னைத் தலைமெய்ச் சபையோரின் அநுட்டானமாதலின் மற்றதேசங்களில் ஆரம்பிக்குங் கிளைச்சபையோரும் இதனை அநுசரித்து தேச வசதிக்கும், மக்கள் சுகத்துக்குந் தக்கவாறு திருத்தி சங்க காரியாதிகளை நடத்திக் கொள்ளும்படி இதனைப் பத்திரிகையில் வெளியிட்டுள்ளோம்.

சங்கத்தின் பெயர் - சென்னை சாக்கிய புத்த சங்கம்

சாக்கைய புத்தசங்கமென்னும் பெயர் வந்த காரணம் - மணிமேகலையின் பொருளறியாதும் சரித்திர ஆதாரமின்றியும் பகவனுக்கு முன்பு சில புத்தர்கள் இருந்தாகக் கூறுகின்றபடியால் அக்கூற்றிற்கு இடந்தராது சரித்திர ஆதரவாலும் சிலாசாஸனங்களின் ஆதரவாலுங் காணக்கூடிய சாக்கைய வம்மிஷ வரிசையிற் தோன்றிய புத்தரே ஆதிபுத்தரென்பதை விளக்குவான் வேண்டி இச்சங்கத்திற்கு சாக்கைய புத்த சங்கம் என்னும் பெயரை அளித்துள்ளோம்.

சங்கத்தின் நோக்கம் - சாதிபேதமில்லா பூர்வீக திராவிடாள் புத்த தன்மத்தைச் சார்ந்தே நாளதுவரையில் சாதிபேதம் இல்லாதிருந்த போதினும் குலகுருவையும் குருவின் சரித்திரத்தையும் மறந்து தாய் தந்தையரை இழந்தப் பிள்ளைப்போல் நூதனமாகத் தோன்றியுள்ளப் பலமதங்களைத் தாவித்தாவி பிடித்து சம்பாதிக்கும் பொருளை பொய்க்குருக்களுக்கு அளித்து பஞ்சபாதகத் திற்கு உள்ளாவதுடன் நூதன சாதிபேதங்களை ஏற்படுத்திக்கொண்டுள்ள சத்துருக்களாலும் நிலைகுலைந்துப்

பாழ்பட்டு வருகின்றபடியால் இவர்களது பூர்வ சரித்திரங்களையும், நீதிநெறி ஒழுக்கங்களையும் நன்கு விளக்கித் தெளிவு பெறச் செய்து அங்கங்கு சங்கங்கள் நிலைபெற்றவுடன் கல்வி சான களையும், கைத்தொழிற்சாலைகளையும், விவசாய சாலைகளையும், வியாபார சாலைகளையும் எற்படுத்தி சகலவிருத்தியிலும் முன்னேறச்செய்வதுடன் விவேகவிருத்திப் பெற்றோர் சங்கத்து சமணமுநிவர்களிடம் பொன்னாடை பெற்றுக் கரபோலேந்தி இராகத்துவேஷ மோகங்களை அகற்றி அன்பு ஈகை சாந்தத்தைப் பெருக்கி என்றும் அழியா நித்தியானந்த நிலையாம் நிருவாணத்தைப் பெறுவதற்கேயாம்.

**சங்கத்தின் அங்கங்கள்**

இச்சங்கத்திற்கு புத்ததன்மம் போதிக்கத்தக்க ஓர் சபாநாயகரும், உதவி சபாநாயகரும், ஓர் காரியதரிசியும், ஒரு பொக்கிஷாதிபரும், தன்ம விவகாரம் அறிந்த பனிரண்டு அங்கங்களும் இருத்தல் வேண்டும். இவர்கள் யாவரும் தன்மத்தைப் பரவச்செய்யும் தன்மகர்த்தாக்களாதலின் சத்திய தன்மத்தை ஒவ்வொருவரும் அறிந்திருத்தல் வேண்டும் என்பது கருத்து.

**சங்கஞ் சேருங்கால் செய்ய வேண்டிய விதி**

சங்கத்தோர் யாவரும் வந்து சேர்ந்தவுடன் சபாநாயகரெழுந்து சற்குருவை சிந்தித்து தன்னாலாயினும், சமணமுநிவரைக் கொண்டாயினும் பஞ்சசீல பிரதிக்கினை முடிந்தவுடன், நம்மெயாண்டு ரட்சித்துவரும் பிரிட்டி

ஆட்சியாருக்கு நன்றியறிந்த வந்தன வாழ்த்தல் கூறி சங்கக்காரியாதிகளை நடத்தல் வேண்டும்.

**சங்கத்திற் சேருவோர்**

சங்கத்திற் சேரவிரும்புவோர் பஞ்சசீலம் பெற்றே சோல் வேண்டும். அப்போதே பஞ்சபாதகங்களை அகற்றி நித்திய சீவனை அடைய வழியுண்டாகும்.

**சங்கத்தின் செலவு**

சங்கத்திற்கு வாடகை வீடெடுத்திருப்பினும் சங்கத்தின் செலவுகளுக்கும் பகவன் பிறந்த வைகாசிமாதம் பௌர்ணமியிலும் அவர் துறவடைந்த மாசிமத பௌர்ணமியிலும் அவர் நிருவாணம் அடைந்த பங்குனி மாத பௌர்ணமியிலும், அவர் பரிநிருவாணம் அடைந்து நித்திய நிலைப்பெற்ற மார்கழி பௌர்ணமியிலும் அறப்பள்ளியைத் தீப் கிருதஞ்செய்து கண்டாமணி ஓசையால் ஏழைகளைத் தருவித்து அன்னதானம், வஸ்திரதானம், கனிவர்க்கதானஞ்செய்வதற்கும், பணவுதவி வேண்டியதாதலின் சங்கத்தோர் சக்திக்குத் தக்கவாறு விகிதமிட்டுப் பணத்தைச் சேர்த்துப் பொக்கிஷாதிபரிடம் அளித்து குறித்துள்ள பொக்கிஷச்சாலைக்கு அனுப்பிவிடல் வேண்டும்.

**சங்கச் செலவு செய்யும் விவரம்**

சேருந் தொகையை சபாநாயகரும், காரியதரிசியும், பொக்கிஷாதிபரும் கையெழுத்து வைத்து பொக்கிஷ சாலைக்கு அனுப்பவும் சங்கத்தின் ஏழுபெயர் கூடி முடிவு செய்தவாறு மேற்குறித்த மூவருங் கையெழுத்திட்டு பணத்தை எடுத்துக் கூட்டத்தோர் செய்துள்ள முடிவுப்படி செலவு செய்யல் வேண்டும்.

**மடவிஷயம்**

அறப்பள்ளிகள் கட்டவேண்டிய விஷயங்களுக்கும், சமண முனிவர்களுக்கும் அன்னமளிக்கவேண்டிய விஷயங்களுக்கும் சமயம் நேர்ந்த வழியில் காரியாதிகளைக் கூட்டத்தோரைக் கொண்டு நடத்திக்கொள்ளல் வேண்டும். சங்கவிருத்தி சகலத்திற்கும் தலைமெய்ச் சபையினின்று வெளிவரும் “தமிழன்” பத்திரிகையே ஆதாரமாயுள்ள படியாக அன்னியதேசங்களிலுள்ள சாக்கைய புத்தக் கிளைச்சங்கத்தோர்கள் யாவரும்

அன்புகூர்ந்து வருடந்தோரும் தங்களாலியன்ற பொருளுதவிச்செய்து ஆதரித்தல் வேண்டும்.

**சங்கத்தின் செயல்**

சங்கமானது தன்மத்தையே ஆதாரமாகக்கொண்டு சீர்திருத்தத்தை நாடியுள்ளதால் சங்கத்தவர் ஒவ்வொருவரும் அந்தந்த கிராமங்களுக்குச் சென்று நீதிநெறிகளைப் போதித்து சன்மாரக்கத்தில் நிலைபெறச் செய்யல் வேண்டும்.

**சங்கத்தோர் விரதம்**

சங்கத்தோர் பஞ்சசீலத்தை உறுதிபடுத்திக் கொள்ளுவதற்கு மதியைக் கெடுக்கும் மதுவினையும், கொழுமெய்க் கொடுக்கும் மாமிஷத்தையும் இச்சிக்காது சங்கத்தோர் அகற்ற வேண்டியதே அத்தியந்தச் செயலாகும்.

**சாதிபேதமுள்ளோர் சங்கத்திற் சேர்தல்**

சாதிபேதமுள்ளோர் சங்கத்திற் சேர விரும்புவார்களாயின் சமண முநிவர்களிடம் சீலம் பெற்று சாதிபேதமில்லாக் கூட்டத்தோர் மத்தியில் தங்கள் சாதிபேதத்தை அகற்றி சகல சம்பந்தங்களிலும் பொருந்திய வாழ்க்கை புரிதல் வேண்டும்.

**தன்மம் பொதுவாயது**

மக்களுள் ஏழைகளாயினும், கனவானாயினும், பிணியாளனாயினும், சுகதேகியாயினும், கற்றவனாயினும், கல்லாதவனாயினும் இத்தன்மம் பொதுவாதலின் யாதொரு பேதமுமின்றி சகலருக்கும் பொதுவாகப் போதித்தல் வேண்டும்.

**விவாகக் கிரியை மரணக் கிரியை**

சங்கத்தோருள் சீலம் பெற்றவர்களின் விவாகக்கிரியைகளையும், மரணக்கிரியைகளையும் சுருக்கமாகவும் அந்தஸ்தாகவும் வீண்செலவின்றியும் நடத்திக் கொள்ளுவதற்கு வேறு புத்தகங்கள் அனுப்பப்படும்.

கிளைசங்கத்தோர்களுக்கு மற்றும் வேண்டிய சங்கதிகளை எழுதித் தெரிந்துக் கொள்ளலாம்.

5:52. சூன் 5. 1912 -

# 82. AN APPEAL TO BUDDHIST SOCIETIES

Namo tassa Bhagavata Arahato

Samma Sambuddhassa.

The S.B.S. of Madras.

AN APPEAL

To

BUDDHIST SOCIETIES

in

Europe and America

The Buddhists of Madras met in the Sakya Buddhist Asrama, Royapettah on the 12th May 1911 and celebrated with great rejoicings the Festival of Vesakha Powrnami, in commemoration of the Birth Day of Lord Buddha. It was a day of momentous significance. Such a celebration every year, which 14 or 15 years ago would not have been even thought of, is a clear sign of the revival in the land of its birth of the holy religion of the Tathagato, who is now universally acknowledged to be the greatest man of

என்றான்.

தாபரவர்க்கங்களைப் புசிக்குங் கரடிகளுக்கும், யானைகளுக்கும், குதிரைகளுக்கும், ஒட்டகங்களுக்கும் சத்துவ மில்லையோ என்றான்.

மைந்தன் வினவிய வினாக்களுக்கு மாறுத்திரமளிக்க இயலாது மார்புடனணைத்து முத்தமிட்டு குழந்தாய், நீ சீவராசிகளின் சுபாசுபங்களைக் கண்டு களித்தது போதும் அரண்மனைச் சேரலாம் என்றழைத்து வருங்கால் அரச வம்மிஷ சிறுவரில் ஒருவன் ஆகாயத்திற் பரக்கும் புறாவை அம்பினால் எய்யவும் அஃது கௌதமச் சிறுவர்முன் வந்துவிழவும் அவர் அதைத் தாவி எடுத்து மார்புடன் அணைத்து அதனுடலில் தைத்திருந்த அம்பைப் பிடுங்கியவுடன் இரத்தஞ் சொரிவதைக்கண்டு பதரி உதிரத்தை இருகரத்தால் துடைத்து ஆதரிக்குங்கால் அப்புறாவை அம்பினால் எய்தச் சிறுவனும் அருகில் வந்து புறாவைக் கேட்டான். அவனைக் கண்ட கௌதமச் சிறுவர் புறா உடலில் தைத்திருந்த அம்பை எடுத்து அவன் உள்ளங்கையில் ஊன்றி உணர்ச்சி எவ்வகை என்றார். அதிகம் உளைக்கின்றதே என்றான். உதிரம் வாரா உணர்ச்சியில் அதிகம் உளைக்குங்கால் உதிரம் வெளிவரத் தைத்தப் புறாவின் உடலுக்கு எவ்வகை உளையுமென்பதை அறியாயோ என்றார்.

அதைக்கேட்ட சிறுவனுக்கு பயமும், உணர்ச்சியுந்தோன்றி அரச புத்திரா, என் அம்பைப் புறாவின் பேரில் எய்தது அதிதோஷமாகத் தோனுதலால் க்ஷமிக்கவேண்டுமென்றான்.

அதற்கு கௌதமச் சிறுவர் நேயனே, நீர் செய்த துன்பத்தை நான் க்ஷமிக்கக் காரணனல்ல இப்புறாவுக்கு நேரிட்ட துன்பத்தை நீயே ஆற்றி ரக்ஷிக்கவேண்டுமென்று கொடுத்துவிட்டு அரண்மனைச்சேர்ந்தார்.

இத்தியாதி செயல்களையுங் கண்ணுற்ற அரசனுக்கு ஆனந்தமும், பயமுந் தோன்றிற்று. அதாவது, பதினாறுவயதுக்குள் அறிவின் விருத்தி பெற்றிருக்கும் வாலறிஞன் பதினாறு வயதுக்குமேல் அரசபாரத் துன்பஞ் சகியாது துறந்து விடுவானென்றெண்ணி

மந்திரிகளைத் தருவித்து மைந்தன் மனதைக் கவர்ந்து இன்பத்தை பெருக்கும் மாளிகையை நிருமித்து மணத்தை முடிக்க ஆரம்பித்துக் கொண்டான்.

அரசபுத்திரன் வாலவயதிற் கொண்ட விவேக மிகுதிக்கு வாலறிஞன், வாலறிஞனென்னும் பெயரையும் அளித்தார்கள்.

அரசன் தனதரிய மைந்தன் சுகத்தை நாடி மலையரண், காட்டரண், மதிலரண், நீரரணாகும் நான்கரண்களில் மலையரணாகும் உச்சியில் ரத்தினாம்பரக் கலசமும், மத்தியில் நவநிறங்கள் பூர்த்த தாபரப் பூடுகளும் தென்றலுடன் குளிர் வீசும் ஜலதாரைகளும் மயில், குயில், நாரை அன்னந்தூக்குணான் வாழும் மடல்மேடைகளும், அடிவாரத்தில் கண்குளிரப் பசும்புற்களை அமைத்தும்;

**முன்கலை திவாகரம் – நால்வகையரண்**

மலையரண் காட்டரண் மதிலரண்ணீ ரர
ணிவையரு சிறப்பி நால்வகை யரணே.

காடரணென்னும் முல்லை, மல்லிகை, யிருவாட்சி, சண்பக, சந்தன, வைம்மண நிரைந்த புட்பவிருட்சங்களையும் வாழை, பலா, மா, அத்தி நிரைந்த கனி விருட்சங்களையும் மான், முயல், புறா முதலிய சீவன்களுலாவும் சோலைகளை அமைத்தும்;

நீராணென்னும் சுத்தநீர் வாவிகளும், பளிங்குகளிழைத்த பாக்கு நீரோடைகளும், கிரீடை வாவிகளும், எக்காலுங் குளிர்ந்த நீரூற்று சயன கற்களும், பன்னீரோடைகள் அமைத்தும்;

மதிலரண் விடுக்குமுன் பளிங்குகளிழைத்த கீதா மண்டபமும் பச்சைகளிழைத்த லீலா மண்டபமும், பவழங்களமைந்த உலாவு மண்டபம் அறுசுவை அருந்தும் அம்பர் மண்டபமும், மோகனா தோழிகள் வாழும் முத்து மண்டபமும், அவைகளைச் சுற்றி பொன் தகடுகள் வேய்ந்த மதிலும், அதற்கப்பால் வெள்ளி தகடுகள் வேய்ந்த மதிலும்,

அதற்கப்பால் இரும்புகளால் மைத்த மும்மதிலுங் கட்டிமுடித்து ராஜ கிருக மென்னும் பெயரைய மளித்தார்கள். சக்கிரவர்த்தித் திருமகன் வாழ்க்கையில் துக்கச் செயலாகும் அழுகை, பற்கடிப்பு முதலிய தோன்றாமலும் பிணிகொண்ட உடலும் மப்படைந்த தேகங்களுங் கண்ணிற்காணாமலும், ஆதுலர்கட் பரிதாபத் கூக்குரல் செவிகளிற் கேளாமலும், வெளியிலுள்ளவர்கள் உத்திரவில்லாமல் உள்ளுக்குப் பிரவேசியாமலும், உள்ளுக்கிருப்பவர்கள் வெளியேறாமலும் இருக்கக்கூடிய விச்சித்திர மாளிகைகளை நிருமித்து இரும்பு தகடுகள் வேய்ந்து மதிலும், வெள்ளித்தகடுகள் வேய்ந்த மதிலும், பொன் தகடுகள் வேய்ந்த மகிலமமைத்து மைந்தனுக்கு விவாகத்தை ஆரம்பித்து, மந்திரிகளைத் தருவிக்க கசரங்கச் சிறப்புகளாகும் ஆறலங்கிருதம், மலையலங்கிருதம், யானை பலங்கிருதம், குதிரை அலங்கருதம், நாடலங்கிருதம், நகரலங்கிருதும் கொடியலங்கிருதம், முரசலங்கிருதம், தாரலங்கிருதம், தேரலங்கிருதன் செய்யும்படி ஆக்கியாபித்தான்.

**முன்கலை திவாகரம்**

மும்மதில் பொன்னும் வெள்ளியு மிரும்பும்

**யாப்பருங்கலைச் சூத்திரம்**

சுற்மறி வனதுறை எல்லாம் . இறவீன் பனவில்லெல்லாம்,
மீன்றிரி வனகிடங்கெல்லாம் தேன்றாழ்வனபொழி லெல்லாம் எனவாங்கு தண்பனை தழீஇயவிருக்கை, மண்கொழு, நெடு, மதின் மன்னனூரே

**சீவக சிந்தாமணி**

இரும்பிடி தழீ இயயானை - இழிமதங்கவந்து சேராய்ச்
சுரும்பொடு மணி வண்டார்க்குந் துகிர் கொடி மாடவீதி,
பெருங்கடி நகரம் பேசி னிராசமாகிருக மென்ப.
ரருங்குடி யமரர்கோமா - னணிநகராயதொன்றே.

மந்திரிகளும் அவ்வாக்கியத்தை சிரமேற்கொண்டு தசாங்க சிறப்பை முடித்து மங்கலமுரசும் அறிவித்தார்கள். முரசம் வினவிய அரசன் மந்திரிகளை நோக்கி மைந்தன் சித்தார்த்தி பிறந்தகாலத்தில் வந்திருந்த சாக்கையக் கணிதர் குழந்தைக்கு பதினாறு வயது முடிந்தவுடன் மலையரசன் மகளை விவாகஞ் செய்துவிடும்படி ஆக்கியாபித்திருக்கின்றார். அவ்வாக்கியப்படி மலையரசன் சுப்ரபுத்திக்கும் ஓர் பெண் பிறந்து அவளுக்கும் பன்னிரண்டு வயது முடிந்து வி காண்கின்றது; மைந்தனுக்கும் பதினாறு வயது முடிந்துவிட்ட படியால் சென்றவயனமோதிய பெரியோன் சாக்கையர் வாக்கை நிறைவேற்ற வேண்டுமென்று ஆக்கியாபித்தான்.

2. **சித்தார்த்தர் திருமணக்காதை**

அவ்வாக்கியத்தை வினவிய மந்திரிகள் அரசே, தமது புத்திரர்க்கு மலையரசன் மகள் பேரில் பிரியமிருக்குமோ அன்றேல் மற்ற அரசபுத்திரிகளின் மீது மனமிருக்குமோ அதைத் தெரிந்துச் செய்ய வேண்டும் என்றார்கள்.

அஃதை எவ்வகையால் தெரிந்துக்கொள்ளக்கூடும் என்றான்.

சக்கிரவர்த்தித் திருமகன் அரசபுத்திரிகள் யாவருக்கும் பரிசளிக்கப் போகின்றார் யாவரும் வரவேண்டும் என்று ஆக்கியாபித்தால் அரசபுத்திரிகள் யாவரும் வருவார்கள். அப்பரிசளிக்குங்கால் மைந்தனுக்கு எப்பெண்ணின் பேரில் நோக்கமிருக்கின்றதோ அதை உணர்ந்து காரியத்தை முடிக்கலாம் என்றார்கள்.

அப்படியே அரசர்கள் யாவருக்குந் தெரிவித்து பரிசளிக்கும் பாக்கியங் களாகும் முத்துமாலை, பவழமாலை, பச்சைமாலை, வைரமாலை, சிவப்பு மாலை முதலியவைகளையும், மேகவர்ண, நாகவர்ண லோகவர்ண முதலிய பட்டுக்களையும் பரப்பி மைந்தன் விழி எப்பெண்ணைக் கவருமோ என்று கார்த்திருந்தார்கள்.

அரசபுத்திரிகள் ஒவ்வொருவரும் ஆடையாபரண வலங்கிருதராய் அன்னநடைக் கொண்டு அரசபுத்திரனை அணுகி முகமலர்ந்து பேசி அவரளிக்கும் பரிசை

ஆனந்தமாகப் பெற்று போனார்கள். அதில் மலையரசன் சுப்ரத்தியின் மகள் பார்ப்பதி அல்லது அசோதரை என்பவள் ஆனந்தமாக அரசபுத்திரன் அருகில் வந்து முகத்தைப் பார்த்தவுடன் தலைகுனிந்து பரிசுக்குக் கையை நீட்டாமலும் கேழ்க்காமலும் நின்றுவிட்டாள். அரசபுத்திரனும் யாதொன்றும் பேசாமல் தன் கழுத்தில் அணைந்திருந்த மோகன மாலையைக் கழட்டி அப்பெண்ணின் கழுத்தில் அணைந்துவிட்டு எழுந்து அரண்மனைக்குப் போய்விட்டார்.

இவைகளைக் கண்ணுற்ற அரசனும் மந்திரிகளும் அசோதரையாம் பார்ப்பதியே அரசபுத்திரனுக்குரிய வாணீயென்று உணர்ந்து மலையரசனுக்கு அறிவித்தார்கள்.

அதையறிந்த சுப்ரத்தி மண்முகவாகை அணுகி அரசே, உமது புத்திரர் வீரமற்றவராகத் தோன்றுகிறபடியால் என் பெண்ணைக் கொடுக்க சந்தேகிக்கின்றேன் என்றான்.

அதைக் கேட்ட அரயன் மைந்தனை அணுகி குழந்தாய் மலையரசன் புத்திரியை உமக்குக் கொடுப்பதற்கு சந்தேகிக்கின்றானே உமது அரச வல்லபம் எங்கு போய்விட்டதென்றான்.

மைந்தன் பிதாவை நோக்கி தந்தையே, அரசவல்லபத்தில் நான் எதைக் காட்டவேண்டுமென்றார்.

குழந்தாய், மலையரசன் புத்திரியை நாடி அவ்விடம் வந்திருக்கும் அரசர்களை ஜெயித்து அசோதரையைக் கைப்பற்றிக் கொள்ளுவாயாகில் அதுதான் உன்னுடைய அரசவல்லபமென்றான்.

அரசபுத்திரன் எழுந்து யுத்தசன்னத்தராய் தனியே வெளிவந்ததைக் கண்ட அரசன் பதினாறுவயதுள்ள சிறுவனாச்சுதே என்ன யுத்தஞ் செய்வானென்று பயந்து ரத கஜ துரக பதாதிகளாகுஞ் சதுரங்க சேனைகளைத் தொடரவிட்டான்

அந்த சதுரங்க சேனைகள் யாவையும் முன்னேரவிடாமல் தனியே முன்சென்று சகல அரசர்களையும் விற்போர், வாட்போர், மற்போர், வாகுபோரென்னும் சதுரங்க வீரத்தால்

ஜெயித்து அசோதரையைக் கைப்பற்றிக் கொண்டார்.

உடனே மலையரசனாகும் சுப்ரத்தி மண்முகவாகை அணுகி அரசே, எனது புத்திரி அசோதரை பிறந்தகாலத்தில் ஓர் பெரியோன் சாக்கைய கணிதர் வந்து குழந்தை பிறந்த காலவரைகளைக் கணக்கிட்டு இம்மகவை மணம் புரியும் மணாளன் மனோதிடமும், ஞானோதயனுமாக விளங்குவதன்றி அவன் கரங்களால் பூமியைப் பரித்து வருத்த வித்தை விதைக்கினு முளைக்கும். பட்டமரத்தை நாட்டினுந் துளிர்க்கும். அந்த காட்சியே எக்காலும் நித்திய மங்களமாக வழங்குமென்று கூறியிருக்கின்றார். அதையும் நான் சோதிக்க வேண்டியதாயிருக்கின்றதே என்றான்.

அம்மொழியைக் கேட்ட மண்முகவாகுக் கலக்கமுற்று வருத்தவித்து முளைப்பதும், பட்டமரந் துளிர்ப்பதும் இயல்பல்லவே. ஆயினும் சித்தார்த்தி குழந்தையாயிருந்தகாலத்தில் கன்றீணாப் பசுவும் பால் சுரந்தூட்டியிருப்பதால் இதையும் பார்ப்போமென்றுன்னி மைந்தனை அணுகிக் குழந்தாய் மலையரசன் புத்திரி அசோதரைக்கு நீர் உரிய கணவனாயின் வருத்தவித்து முளைக்கவும், பட்டமரந் துளிர்க்கவும் வேண்டும் என்கின்றான். இது கூடுஞ்செயலோ என்றான். அதற்கு வாலறிஞன் நகைத்து தந்தையே, அவர்கள் மனோரம்மியப்படி சோதித்துக் கொள்ளட்டும் என்றார்.

மண்முகவாகு பூரித்துக் கிளை சமூகங்களாகும் அமாத்தியர், சாக்கையர், சேனாதிபதியார்,

தூதுவர், சாரணர், காரணக் கிளைஞர் , கடைகாப்பாளர் நகரமாக்கள், படைத்தலைவர்,யானை வீரர், அடுத்த நட்டாளர் , மடைக் தொழிலாளர், மருத்துவ மாக்கள், கணித கலைஞர், உயர்குடை வேந்தர், முற்றும் சுற்றத்தவர் யாவர்க்கும் மங்கல முரசம் அறிவித்து சகலரையும் வரும்படிச் செய்தான்

அக்கால் மலையரசனாகும் சுப்ரத்தி தனது பார்ப்பதி அசோதரையை மண்முகவாகின் அரண்மனைக்குக் கொண்டுவராமலும், மணாளன் மனைக்கும் ஈரைங்காத வழியில்

கொண்டுவந்து நிறுத்திவிட்டு வாலறிஞன் வருத்த விதைகளையும், பட்டமரத்தையுந் துளிர்ப்பிக்கும் வரையில் புதல்வியை அழைத்து வருவதில்லை என்று மணாளன் வருகைக்கெதிர்பார்த்திருந்தான்.

இதன் விருத்தாந்தத்தை உணர்ந்த பெரியோர்கள் மண்முகனை அணுகி தலைத்தார்வேந்தே தமது புதல்வர் சகல அரசர்களையுஞ் செயித்து மலையரசன் புதல்வியைக் கைப்பற்றிக்கொண்டபோதே அசோதரைத் தமதரணில் வந்து சேர வேண்டியதிருக்க அவை தவிர்ந்து வருத்த வித்து முளைப்பதும், பட்டமரந் துளிர்ப்பது மாகிய போக்குகள் நேரிட்டக் காரணம் யாதென உசாவினார்கள்.

அதைக்கேட்ட மண்முகவாகு பெரியோர்களை அமர்த்தி அன்பர்களே, என் மனைவி மாயாதேவி சித்தார்த்தியைக் கருப்பையிற்றாங்குமுன் ஓர் சொற்பனங்கண்டு சொல்லினள், அதாவது தான் நித்திரை செய்யுங்கால் ஓர் சிறிய வெள்ளை யானையின் குட்டி சுயம்பிரகாச வடிவமாய்த் தன் வயிற்றில் நுழைந்ததென்பதே.

இக்கனவையும் நினைவையும் அறியவேண்டி அசித்த சாக்கையரை அமைத்து மாயாதேவியின் சொர்ப்பனத்தை வெளியிட்டேன் அவர் நிதானித்து முகமலர்ச்சியுடன் அரசே, உமக்கோர் ஆண்குழந்தை பிறக்கும் அது யானையின் உரத்தைப் பெற்று ஞானசூரியன்போற் பிரகாசிக்குமென்று சொல்லிப் போய்விட்டார். அதே சாக்கையர் அசோகரை பிறந்த காலக்கணிதங்களை வகுத்து இவ்வற்புதக்காட்சிகளையுங் குறிப்பிட்டிருக்கின்றார். ஆதலின் நாமனைவரும் மங்கல முரசுடன் மலையரசன் தங்கியிருக்கும் இடத்திற்கு சென்று நித்திய சகுனங்களைக் காண்பதுவே காட்சியென்றான்.

உடனே அரச வகுப்பார் பதினெண்மரும் சக்கிரவர்த்தித் திருமகனும் மங்கலமுரசம் அதிர்ப்ப மணக்கோலத்துடன் மலையரசன் தங்கியுள்ள இடத்திற் சென்று கலந்தார்கள்.

அப்போது அவ்விடமிருந்தவர்களிற் சிலர் பலதானியங்களையும் வருத்து வைத்துக்கொண்டிருந்ததுடன் பட்டமரத்திற்கு பதிலாய்ப் பூணிலா உலக்கையை யுங்

கொண்டுவந்து சித்தார்த்தி கரத்தில் அளித்து விதைகளை பூமியில் விதைப்பதுடன் இப்பட்டமரமாகும் உலக்கை கோலையும் பூமியில் நாட்டுங்கோ ளென்று வேண்டினார்கள்.

வாலறிஞன் அவற்றைக் கரத்தில் ஏந்தி பூமியைத் திருத்தி விதைகளை விதைத்து உலக்கையையும் பூமியில் ஊன்றினார்.

பதின் கடிகைபோதுள் பலதானியங்களும் முளை தோன்றியதுடன் உலக்கையும் கல்லாலிலைக் கொழுந்திட்டு வளர்ந்தது.

**மணிமேகலை**

அகமெய்யருளிய அறவாழியானெம். பகவன் தாணையிற் பன்மரம் பூர்க்கும்.

**பாகுபலி நாயனார் ஏட்டுப்பிரிதி. யாப்பருங்கலைக்காரிகை** சூத்திரம்

வண்டுலக்கை பூந்தார் வளங்கெழு செந்துளிர் சேய்வடிவேபோலத்
தண்டளிர் பூம்பிண்டித் தழையோங்க மாமணமுன் மணந்தோன் யாரே.
தண்டளிர்பூம் பிண்டி தழையோங்க வந்து நம்
பண்டைவினை கழற்றும் பாங்குபல மொழிந்து படந்தோனன்றோ
வேதவாய் மேன் மகனும் வேந்தன் மடமகளும், நீதியாற் செர்ந்து நிகழ்ந்த
நெடுங்குலம் போல், ஆதிசால்பாவும் அரசர் உயர்பாவும்,
ஓதியவாறோத வருட்பாவாய் ஓங்கிற்றே.

**சீவகசிந்தாமணி நாமக ளிலம்பகம்**

தொத்தணியிண்டி தொலைந்தற வீழ்ந்த தெண்
முத்தணிமாலை முடிக்கிடனாக ஒத்ததன் றாள் வழியே முளையோங்குபு.
வைத்தது போல் வளர்ந்ததை அன்றே

அதைக்கண்ட அரசர்களும் பெரியோர்களும் ஆட்சரியங்கொண்டு நிற்குங்கால் மணமகன் மணாளியின் கரத்தைப்பற்றி இரதமூர்ந்து நூதன மாளிகையைச் சேர்ந்தார்.

அவ்விடம் வந்திருந்த பெரியோர்கள் வருத்தவித்து முளைத்ததைப் பாலி என்றும், உலக்கைக் கொழுந்துவிட்டதைப் பிண்டி என்றும் பெயரளித்து,

பதினாறு வயதிற்கு மேற்பட்டக் குமரனும், பனிரண்டு வயதிற்கு மேற்பட்ட குமரியும் சுகவாழ்க்கையுற்றதை அநுசரித்து பின் சந்ததியாரும் பதினாறு வயதுக்கு மேற்பட்ட குமரர்களுக்கும், பனிரண்டு வயதிற்கு மேற்பட்ட குமரிகளுக்கும் விவாகம் நியமித்து நவதானிய முளைகள் எழும்பும் பாலிசோதனையோடு உலக்கையில் கல்லாலிலைக்கட்டி மங்கல பீடம் வகுத்துவந்தார்கள்.

**முன்கலை திவாகரம்**

பதினாறாட்டைக்குமரனும் விதிவழி,
பன்னீராட்டைக் குமரியுமாகி,
ஒத்த அன்பினும் ஒத்த நலத்தினுங்
கற்பகப் பிண்டி நற்பலனுதவ.
ஆகிய செய்யுந் தவத்தினும் அவ்வழி,
போக நுகர்வது போகபூமி.

அரசபுத்திரனும் அசோதரையும் முன்னரண்மனையை விடுத்து தங்களுக்கு என்று அமைத்திருக்கும் சிங்கார மண்டபத்தை நாடி இரும்பு மதில்வாயில், வெள்ளி மதில்வாயில், பொன்மதில்வாயில் மூன்றையுங் கடந்து மரகத மண்டபஞ்சேர்ந்து பளிக்கரை சப்பிரமஞ்சத்தில் சுகித்திருந்தார்கள்.

சுத்தவிதயன் தனது புத்திரனால் வருத்தவித்து முளைத்ததும் பட்டமரந் துளிர்த்ததுமாகிய அபூர்வச்செயல்களைக் கண்டு திகைத்து இக்குழந்தையின் இயல்பில் ஆச்சரியச்செயல்கள் தோன்றுகிறபடியால் நமதரசாங்கத்தை ஒருபொருளா

எண்ணி நடத்துமோ அன்றேல் துரும்பென்றெண்ணி துறக்குமோவென்னும் அச்சங்கொண்டு உலர்ந்த உலக்கை துளிர்த்தபடியால் பிண்டி நாதன் என்னும் மற்றோர் பெயரளித்து தன் புத்திரன் மனதை சிற்றின்ப லீலா வினோதத்தில் ஆழ்த்தி வைக்கவேண்டும் என்னும் நோக்கத்தினால் வீணையில் வல்லபமுள்ள ஊர்வசி என்னுமோர் குமரியையும், பரதநாட்டியத்தில் வல்லபமுள்ள அரம்பையென்னும் ஓர் குமரியையும், அபிநயத்தில் மிகுத்த திலோர்த்தமை என்னும் ஓர் குமரியையும், சங்கீதத்திற் சாதுரிய மேநகை என்னுங் குமரியையும் தருவித்து அவர்களுக்கு வேண்டிய பரிசுகள்ளித்து நீங்கள் நால்வரும் விசித்திரக்கூடத்திற்குச் சென்று என் புத்திரன் மனதை ஆயாசத்திலுந் துக்கத்திலுஞ் செல்லவிடாமல் எக்காலுஞ் சுகபோக சிந்தையில் நிறுத்தி வீணையிலும், அபிநயத்திலும், சங்கீதத்திலும், நாட்டியத்திலும் மயக்கி வைத்திருக்கும்படி ஆக்கியாபித்தான்.

அவ்வாக்கியத்தை சிரமேற்கொண்ட தோழிப்பெண்கள் நால்வரும் சித்திரக்கூடஞ் சேர்ந்து அசோதரைக்கு ஏவல்புரிந்து வருவதுடன் அரம்பை தன்னாட்டியத்திலும், திலோர்த்தமை தன்னபிநயத்திலும், மேனகை தன் சங்கீதத்திலும், பிண்டி நாதனை மகிழ்ப்பித்திருந்த போதிலும் ஊர்வசி மட்டிலும் தன் வீணையிற் தனக்கு நிகர் ஒருவருமில்லை என்னும் மமதை கொண்டிருந்தாள். அதை உணர்ந்த பிண்டிநாதன் ஓர்நாள் ஊர்வசியை அருகில் அழைத்து வீணையை மீட்டும்படி ஆக்கியாபித்தார் அவளும் வீணையைக் கையிலேந்தி ஏழாழ் முடிக்கி ஆ - சோ - ம - பு - கு -சு - ச என்னும் ஒலிவடிவ சப்த இசையால் வாசித்தனள்.

ஊர்வசி கரத்திலிருந்த வீணையைப் பிண்டி நாதன் கரத்திலேந்தி வீணையின் முதலாழ் தொனியை மயிலிரைச்சல் போலும், இரண்டாமாழ் தொனியை இடப் தொனிபோலும், மூன்றாமாழ் தொனியை ஆடு கரைதல் போலும், நான்காமாழ் தொனியை கொக்குளைத்தல் போலும், ஐந்தாமாழ் தொனியை குயிலோசை போலும், ஆறாம் ஆழ்தொனியை குதிரை கனைப்பைப் போலும் ஏழாம் யாழ் தொனியை யானை வீரிப்பு போலும் அமைத்து மிடற்றால் குறலும், நாவினாற்றுத்தமும், அண்ணத்தாற் கைக்கிளையும், சிரத்தாலுழையும், நெற்றியால் விளியும், நெஞ்சால் விளரியும், மூக்காற் ஆரமும் ஆகும் ஏழிசைகளைப் பெருக்கி வாசிக்குங்கால் அவ்விடமுள்ளவர்களில்

விழித்த கண்ணோர் விழித்த பார்வையிலும், மேனோக்கினோர் மேனோக்கிலும், நின்றவர்கள் இடம் விட்டுப் பேராமலும், அவரவர்கள் தேகங்கள் அசையாமலும், அயர்ந்து நின்றுவிட்டார்கள். மும்மதிலுக்கும் புறம்பேயுள்ளவர்கள் சப்ததாதுக்களாலெழும் வீணையின் ஓசையைக் கேட்டு சித்திரகூடத்தில் வசிக்கும் கோபாலன் அதாவது அரச புத்திரன் வீணை வாசிக்கின்றா ரென்றறிந்து இசைகளின் சுகத்தால் வீணைகோபாலன் வீணைகோபாலன் எனக் கொண்டாடிச் சென்றார்கள்

வீணைகோபாலன் வாசித்த வீணையின் நாதத்தையும், இசையையுங் கேட்ட ஊர்வசியானவள் தனது சிரத்தை கோபாலன் பாதத்திற்பட வணங்கி (சத்தாரி) சருவசீவர்களுக்கும் (ஆகம ) ஒழுக்கத்தை அருளும் (பதநீ) நின் கமலபாதத்தை சிந்திக்கின்றேனென்றாள்.

பாலிசுரசாயுத்ய சுருதி சூத்திரம் - சாத்தாரி ஆகம் - பதநி எனும் பாலி ஒலி மொழிகளை பாகித்து ச ரி - க - ம -ப-த-நீ என சப்தசுர ஒலியால் வீணையை நீட்டி சிந்தித்தாள். அன்று முதல் இதே சிந்தனையைக் கேட்டவர்களும், வீணை கற்றவர்களும், வாரசுரம் ஏழையும் விடுத்து சத்தாரி, ஆகம, பதநீ பாகிய சரி-க-ம-ப-த-நீ என வீணை கோபாலனை சிந்திக்கும் சப்தவொலிகள் நிலைக்க ஏழாழ் முடிக்கி ஏழோசை இசைத்து ஒலிவடிவ மாறலிசையால் வாசித்து வந்தார்கள்.

வீணைகோபாலன் வாசித்த ஏழாழினோசையால் கேழ்ப்பவர்களுக்கு மனோலய ஆனந்த சுகமுண்டாகி இதயாக்கினிதணிவதற்கோர் கலைக்கருவியாக விளங்கினபடியால் வீணைவிருத்த முதற்குருவானார் ஓர் சங்கத்திற்கு இதத்தைக் கொடுக்குங் கலைக்கியானத்திற்கு சங்கீதமென்னும் ஓர் பெயருண்டாயிற்று.

சக்கிரவர்த்தித் திருமகன் சங்கீதங் கோஷிக்குங்கால் அவர் முகம் பேரியாழ் முடிக்கி சச்சற்புடமிடுங்கால் சாத்தியோசாத முகமாகவும், சகோடயாழ் முடிக்கி சாசற்புடமிடுங்கால் வாமமுகமாகவும், மகரயாழ் முடிக்கி சம்பத்து வேட்ட மிடுங்கால் தற்புருட முகமாகவும் ஆகிய சதுர் முக தோற்றங்களுண்டாயிற்று. அதனாற் சித்தார்த்தரை சதுர்முகன் சதுர்முகனென்றும் அழைத்தார்கள்.

**பின்கலை நிகண்டு**

தேனவிழ்த் தளிர்களெல்லாஞ் - செவ்வழி பாடானின்ற,
பூனகைத் திலங்கு கஞ்சப் பொகுட்டின் மீதே ஒதுங்கும்,
நான்முகக் கடவுள் பாத - நாவினா னவிற்றி ஏத்தி,
மானவர்க்கியன்றபேரை - வகுத்திடுந்தொகுதி சொல்வாம்.

**நன்நூல்**

பூமலிய சோகின் புனை நிழலமர்ந்த
நான்முகன் தொழுது நன் கியம்புவனெழுத்தே

**சீவகசிந்தாமணி**

பதிகம் கோனைக்களிற்றுத் தொடித்தேரி உளிக்கடல் சூழ்.
வாண்மொய்த்த தானை அவன் தம்பியுந் தோழன் மாரும்,
பூண்மொய்த்த பொம்மன் முலையாரும் புலந்துறப்ப,
வீணைக்கிழவன் விருந்தார் கதிசென்றவாறும்.

சங்க இதத்திலும், வீணை அபிநயத்திலுந் தினேதினே சுகித்து மலைமகள் லீலாவினோதனாய் துக்கமென்பது அணுவேனுந் தோற்றாமல் ஆண்டாண்டு நிகழ்ச்சியில் அசோதரைக்கு கருப்பமுண்டாகி அன்பின் பெருக்கும், ஆலிங்கன விருப்பும் அதிகரித்து நிற்குங்கால் சதுர்முகர்க்கோர் சங்கை தோன்றிற்று, அதாவது தான் அறுசுவை புசிப்பிலும், அபிநய விழிப்பிலும், அணை சயனத்திலும் ஆனந்தித்திருப்பது போல் அரசுக்குள் அடங்கியக் குடிகளும் இத்தகைய ஆனந்தத்தில் இருப்பார்களோ என்பதேயாம்.

இவ்வகை சிரேஷ்டவெண்ணமுதித்தவுடன் அரசனை வரவழைத்து தந்தையே, நம்முடைய தேசக்குடிகளின் சுகாசுகங்களைக் கண்டறிய வேண்டி

விருப்புற்றிருக்கின்றேன் உத்திரவாகவேண்டுமென வினவினார்.

உடனே அரசன் திகைத்து மைந்தன் ஊர்வலம் வருங்கால் குடிகளின் அசுகபேதங் கண்களிற் தோற்றுமாயின் அதே துக்கத்திற் துறப்பாரென்னும் பீதியால் திருமகன் தேரூறும் வீதிகள் யாவையும் அலங்கரிக்கச்செய்து மைந்தனுக்கு ஊர்வல உத்திரவளித்தான்.

சித்தார்த்தி சதுர்முகன் சதுரங்க சேனைகள் சூழ ஊர்வலம் வருங்கால் வீதிகடோரும் வாழை, கமுகு, கரும்பு முதலியவைகளை நாட்டி பவழ தோரணம், முத்து தோரணங்கள் உயர்த்தி வீடுகடோரும் கற்புடை மாதர்க் கரங்களில் கர்பூராலமேந்தி கனகமழ் சுன்னந் தூவி நிற்கவும், அசுகபாவனையோர் எதிர்த்தோற்றாமல் எச்சரிக்கைக் கூறவும், பதாதி சேனைகள் வேறு பராக்குராமல் அரச பராக்கில் நிற்கும் ஜாக்கிரதையிலிருந்தும், ஓர் வீதியில் நரை திரை முதிர்ந்த ஓர் மனிதன் கூன் வளைந்து தடியூன்றி தள்ளாடி வருவதைக் கண்டவுடன் இரதத்தை நிறுத்தும்படி ஆக்கியாபித்துக் கீழிரங்கி மூப்பனை அணுகி நீவிர் யாரென்றார். அவன் மூப்பினாற் கண்பஞ்சடைந்து செவியுந் தூர்த்திருந்தபடியால் மறுமொழி யாதுங் கூறாமல் திகைத்து நின்றான்.

சித்தார்த்தி சதுர்முகன் அருகிலுள்ளவர்களை அழைத்து இஃது யாது. நம் போன்ற தேகியா அன்றேல் வேறு சீவனோவென உசாவினார். அதற்கு அவர்கள் அரசனே, இவன் நம்மெய்ப் போன்ற தேகியே ஆயினும் வயதேற தளர்ந்து தள்ளாடுவதுடன் கண்களின் பார்வையும், செவிகளின் கேட்டலும் அடங்கி விட்டது என்றார்கள்.

சதுர்முகன் அவர்களை நோக்கி நம்மெய்ச் சூழ்ந்து நிற்கும் சகலதேகிகளும் இன்னிலைமெய் அடைவார்களோ என்றார். ஆம் ஒவ்வோர் தேகமும் இவ்வகைத் தளர்வடையும் என்றார்கள்.

என் தேகமோ என்றார். அரசே, உமக்கும் அப்படியே என்றார்கள்.

வாலறிஞன் சித்தங்கலங்கி ரதமூர்ந்து மற்றோர் வீதியில் ஏகுங்கால் ஓர் மேடையின் மீது காசரோகங்கொண்டவன் உட்கார்ந்து கொண்டு மேல் சுவாச உபத்திரவத்தாலும், இருமலின் திணரலினாலும், கண்களில் நீரும் வாயிற் கோழையும் வடிய கைகளினால் மார்பை அழுத்திக் கொண்டிருப்பதைக் கண்டு இரதத்தை விட்டிரங்கி உமக்கென்ன கஷ்டமென்றார். அவனுக்குள்ள மாரடைப்பின் உபத்திரவத்தால் மாறுத்திரமளிக்க வேலாது தலைநிமிர்ந்துங் கவிழ்ந்து கொண்டான்.

அதைக்கண்ட சித்தார்த்தர் அருகிலுள்ளவர்களை நோக்கி இதன் காரண மென்ன என்றார். அதற்கு அவர்கள் அரசே, இவன் நெடு நாளாக சுவாச ரோகத்தால் பீடிக்கப்பட்டு நிலைகுலைந்திருக்கின்றான். அதினாற் தங்கள் கேள்விக்கு உத்திர வளிக்கக்கூடாமல் திக்கிட்டுக் கவிழ்ந்து கொண்டான் என்றார்கள்.

ஆனால் மநுடசீவர்கள் எல்லோருக்கும் இத்தகைய உபத்திரவம் உண்டாகுமோ என்றார். ஒவ்வோர் மநுடசீவர்களுக்கும் பற்பல வியாதிகள் தோன்றி உபத்திரவம் அடைவதுண்டு எனக் கூறினார்கள்.

எனக்கும் உங்களுக்கும் இவ்வகை உபத்திரவந் தோன்றுமோ என்றார். அரசே, ஒவ்வோர் உடலிலும் வியாதி உட்பிறந்து வாதிப்பது உள்ள சுபாவமாதலின் உமக்கும் எமக்கும் வியாதி தோன்றாமற்போகாதென்றார்கள்.

அவற்றை வினவிய சதுர்முகன் சற்று திகைத்து மறுபடியும் இரதமூர்ந்து மற்றோர் வீதியிற் செல்லுங்கால் பெருவெளி வழியே பாடையில் ஓர் பிரேதத்தைப் படுக்கிட்டு நான்குபேர் சுமந்து செல்லவும், அவர்களுக்குப் பின் சிலக் கூட்டத்தார் அழுதுகொண்டு செல்லவுங் கண்டு சாரதியை நோக்கி நமது ரத்தத்தை வீதி வழி செலுத்தாது வெளிவழி செலுத்தி அதோ செல்லுங் கூட்டத்தாரைப் பின்பற்றும் என்றார்.

உடனே சாரதி தனது ரதத்தை பிரேதத்தை எடுத்துச் செல்லுங் கூட்டத்தாரிடம் நெறிக்கியவுடன் அவர்களும் பிரேதத்தை வைத்துக் கொண்டு நின்றுவிட்டார்கள்.

திருமகன் ரதத்தை விட்டிரங்கி பாடையின் அருகில் சென்று அவ்விடமுள்ளவர்களை நோக்கி இஃதென்ன கோரம் என்றார்

அரசே, இவன் இறந்துவிட்டான் அடக்கஞ் செய்யப்போகிறோம் என்றார்கள்.

மனிதனே இவ்வகை நிலமெய்க்கு வந்திருக்கின்றானா அன்றேல் வேறு சீவனோ என்றார். மனிதனே, பேச்சும் மூச்சும் அடங்கி மரணமடைந்தானென்றார்கள்.

மரணமடைந்தால் மறுபடியும் எழுந்து பேசமாட்டானோ என்றார்.

அவனுக்கு பேச்சும் மூச்சும் இருக்குமானால் இடுகாட்டுக்கு எடுக்க மாட்டோம் என்றார்கள். இவன் வீடுவாசல் பெண்சாதி பிள்ளைகளை மறந்து விட்டானோ என்றார்.

அவ்வகை மறந்ததினால் இவனை இறந்தானென்று சொல்லுகிறோம் என்றார்கள்.

இறந்தவனென்றால் விழித்துப் பார்க்கானோ என்றார்.

பார்க்குங் கண்ணும், கேட்குஞ் செவியும், முகறும் மூக்கும், பேசும் வாயும், வளருந் தேகமும் ஓய்ந்துவிட்டபடியால் ஊரைவிட்டெடுத்துப்போய் இடுகாட்டில் இடப்போகின்றோம் என்றார்கள்.

’இவனொருவனே இன்னிலமெய் அடைந்தானா அன்றேல் மநுட சீவர்கள் யாவரும் இன்னிலமெய் அடைவார்களோ என்றார்.

ஒவ்வோர் மநுட சீவர்களும் இறந்தே தீரல் வேண்டும் என்றார்கள்.

ஆகையால் யானும் அவ்வகை இறப்பேனோ என்றார்.

ஒவ்வொருவரும் திகைத்து ஆம் நீரும் இறப்பீரென்றால் அரசபுத்திரன் பயந்து பிணிக்குள்ளாவரேல் சக்கிரவர்த்தி சினப்பாரென்னும் பீதியால் மாறுத்திரமளிக்காது மௌனத்திருந்தார்கள்.

மறுமொழிக் கிடைக்காததை உணர்ந்த மன்னுபுத்திரன் தனக்கும் இதுவே முடிவாக்கும் என்றெண்ணி சாரதியை நோக்கி நாம் கண்ட காட்சிகள் போதும் இரதத்தை அரண்மனைக்குச் செலுத்தும் என்றார்.

உடனே சாரதி இரத்தத்தைத் திருப்பி சித்திர மாளிகைச் சேர்த்தான்.

இரும்பு மதில், வெள்ளி மதில், பொன் மதில் மூன்றையும் முன்பு புகழ்ந்து சென்றவர் அன்று மூன்றையும் மண்மதில் என்றிகழ்ந்து மாளிகைச் சேர்ந்தக்கால் அவர் முகத்தைக் கண்ட அசோதரை அருகிற் சென்று என் பிராணநாயகா! நீவீர் செல்காலிருந்த செந்தாமரை முகம் வருங்கால் வாடியதென்னோ என வினவினாள்.

அதற்கு அசோதரை நாயகன் பெண்ணே நாமிதுவரை அடைந்த சுகத்திற்குமேல் துக்கமிருப்பதைக்கண்டு வாட்டமுற்றேனென்றார்.

அவ்வகை துக்கத்திற்கு நான் காரணமோ என்றாள். உம்மெய்யோ, தந்தை மெய்யோ, எம்மெய்யோ, காரணமென்றறியேன் என மறுமொழி கூறி நித்திய கடனை நிகழ்த்திவருங்கால் அசோதரைக்கோர் ஆண் குழந்தை பிறந்தது. அதைக் கேள்வியுற்ற மண்முகவாகு சித்திர மாளிகைச் சேர்ந்து மைந்தனையும், மகவையுங் கண்டு வீரவாகு சக்கிரவர்த்தி வம்மிஷவரிசையில் இரகுவாகுத் தோன்றிய குதூகலத்தால் சித்தார்த்தரை அணுகி நங்குடிகளுக்கு யாது செய்யுதும் என்றான்.

ஊர்வலம் வருங்காற் கண்ட மூப்பன் வருமெயும் பிணியாளநிலமெயுந் தன்னுள்ளத்தைக் கவர்ந்திருப்பதால் மூப்பர்களுக்கு அன்னமும், ஆடையும், பிணியாளருக்கு மருந்தும் அளிக்கவேண்டும் என்றார்.

**சீவகசிந்தாமணி - முத்தி**

கனகடல் சுவரச்செல்லுங் கணமழைத் தொகுதி போலு,
நனைமலர்ப் பிண்டி நாதன் நல்லறங் கொள்ளை சாற்றிப்
புனைமுடி மன்னரீண்டிப் பொன்னெயிற் புறத்துவிட்டார்,
வினையுடைத் தின்ப வெள்ளம் விரும்பிய வேட்கையானே.
அடி சில்வைகளாயிரம் அறப்புறமும் ஆயிரம்
கொடியனார் செய்கோலமும் வைகறோரும் ஆயிர
மடிவில் கம்மியர்களோடு மங்கலமும் ஆயிரம்
ஓடி விலையர் ஆயிரமோம்புவாரினோம்பவே.

சித்தார்த்தித் திருமகனுக்குக் குலமகன் பிறந்த குதூகலத்தால் தேசமெங்கும் பறையறைவித்து பிணியாளருக்கு மருந்தும் மூப்பர்களுக்கு அன்னமும் ஆடையும் அளிக்க வேண்டிய அறச்சாலைகளையும் அவுஷதச் சாலைகளையுங் கட்டி அறச்செயலை நிலைக்கச்செய்தார்கள்.

**மணிமேகலை**

மட்டறச்சாலையும் மருந்தினர் சாலையும், கட்டி டைச்சேவகக் காப்புடைத்தாக.

**சிலப்பதிகாரம்**

ஆயுள் வேதருங் காலக் கணிதரும், பால்வகைத் தெரிந்த பன்முறை இருக்கெயும்.

அறச்சாலைகளையும் அவுடதச்சாலைகளையும் நிருமித்த கருணையால் சித்தார்த்தரை தம்மராஜன் தம்மராஜனெனக் கொண்டாடினார்கள். குழவிபிறந்த மகிழ்வும் குடிகள் கொண்டாடும் புகழும் ஏககோஷத்தில் இருந்தபோதிலும் தம்மராஜன் உள்ளம் பிணி, மூப்பு, சாக்காடென்னும் மூவகைத்துக்க விசாரணை யினின்றது.

**அருங்கலைச்செப்பு**

பிணிமூப்புச்சாக்காடி வை மூன்றும் ஆய்தற் , துணிபுற்று நின்றானிறை.

3. **சித்தார்த்தர் வாய்மெய் விசாரிணைக் காதை**

தம்மராசன் வாய்மெய் விசாரிணையில் மூழ்கி தனதரிய தந்தையை வரவழைத்து எனதருமெய் தந்தையே, நமதாளுகைக்கு உட்பட்ட தேயங்களிலேனும் மற்றும் இடங்களிலேனும் விவேகமிகுத்தக் கூட்டத்தார்கள் இருப்பார் களானால் அவர்களை வரவழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

உடனே மண்முகவாகு தேசமெங்கும் பறையறைவித்து முதற் சங்கத்தைச் சார்ந்த விவேகிகளில் சிலரை அழைத்து மைந்தனிடம் அனுப்பினான்

அவர்களுஞ் சித்திரக்கூடஞ்சேர்ந்து சிற்றரசரைக்கக்கண்டு சபாமண்டபத்தில் உட்கார்ந்து நகரவிசாரிணை முடிந்தவுடன் தம்மராசன் முன் சங்கத்தி நோக்கி பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கமென்ன, அதன் பயன் யாதென உசாவினார்.

எங்கள் சங்கத்தின் நோக்கம்

இறப்பும், பிறப்பும், உயர்வும், தாழ்வும், நன்மெயும், தீமெயும், பஞ்சபூதங்களால் உண்டானபடியால் பஞ்சபூதங்களையே வணங்கவேண்டும் என்பதே யாம் என்றார்கள்.

**அருங்கலைச்செப்பு - முதற்சங்கவியல்**

இறப்பும் பிறப்பு மினியவை தீதுங் / குறிய வைம் பூதத்தியல்
ஓங்க லொடுங்க லுயர்வு தாழ்த / வாங்கவைம் பூதத்தளர்.
தோற்றும் பூதமைந்தும் வணங்க / லாற்றலென்றே யுணர்.

அங்ஙனம் வணங்குவதில் பயன் யாதென்றார். வணங்கிய பயன் யாதும் அறியோமென்றார்கள். பஞ்சபூதங்களென்றால் அஃதெவைகள் என்றார். நிலம், நீர், தீ,

காற்று, வெளி என்றார்கள். வெளியும் ஓர் பூதமாமோ என்றார். மாறுத்திரங் கூறாமல் திகைத்து நின்றார்கள்

பெரியோர்களே, பூதவிசாரிணை இருக்கட்டும். சீவர்களுக்குப் பிணியணுகா மருந்தும், மூப்பணுகா நிலையும், மரணமடையா வழியும் ஏதேனும் உண்டோ என்றார். அரசே, அவ்வகை ஏதுக்களை நாங்கள் கண்டதுமில்லை கேட்டதுமில்லை என்றார்கள்.

ஆனால் தங்கள் போகலாமென்று அனுப்பிவிட்டு இரண்டாவது சங்கத்தோர்களைத் தருவித்தார்.

அவர்களும் சித்திரகூடம் அணுகி சிற்றரசரைக்கண்டு சபாமண்டபத்தில் உட்கார்ந்து அரசே, எங்களை வரவழைத்தக் காரணம் யாதென உசாவினார்கள்

பெரியோர்களே, உங்கள் சங்கத்தின் நோக்கமும் அதன் பயனும் யாதென்றார்.

அரசே, இறந்தபின் மனிதன் மிருகமாகவும், மிருகம் மனிதனாகவும் பிறக்கமாட்டான். மனிதன் மனிதனாகவும், மிருகம் மிருகமாகவும் பிறக்கும். ஆதலின் ஒன்றை வணங்குவதால் பலனுமில்லை, வணங்காமலிருப்பதினால் கெடுதியுமில்லை என்பதே எங்கள் சங்கத்தின் நோக்கம் என்றார்கள்.

**அருங்கலைச்செப்பு - இரண்டாஞ்சங்கவியல்**

மாண்ட மக்கள் விலங்குகளாகி / யீண்டும் பிறப்பதிலர்.
மரித்த விலங்கு மக்களாகி விரித்துத் தோன்றா விழல்.
வணக்க மதினால் வருபயனில்லை / இணங்காததுவே நிலை.

பெரியோர்களே, மனிதன் மிருகமாகப் பிறக்கான் என்பதையும், மிருகம் மனிதனாகப் பிறக்காதென்பதையும் எவ்வகையால் அறிந்து கொண்டீர்களென்றார்.

அதனதன் உருவங்களே போதுமான சாட்சி என்றார்கள்.

ஆனால் மனிததேகத்தில் மாமிஷமும் எலும்பும் மிருகதேகத்தில் மண்ணும் மரமும் பொருந்தியிருக்குமோ என்றார்.

உருவ பேதமே காரணமென்றார்கள்.

உருவபேதத்தால் பிறவிபேதத்தை எவ்வகையிற் கண்டறிந்தீர்கள் என்றார். கண்டறிந்த காரணங் கூறாமல் திகைத்து நின்றார்கள்.

பெரியோர்களே பிறவிபேதமிருக்கட்டும், பிறந்தபின் உண்டாகும் பிணியின் பேகங்களையும், மூப்பின் பேதங்களையும், மரணபேதங்களையும் கண்டதுண்டோ என்றார்.

அரசே, தற்காலந் தங்களால் இயற்றியுள்ள வைத்தியசாலைகளின் திசைகளைக் கண்டோமன்றி வேறு சிகிட்சை அறியோமென்றார்கள்.

பிணிகள் தோற்றும் பீடங்களை ஏனுங் கண்டதுண்டோ என்றார்.

பிணிகளின் உற்பவ காரணம் அறியோமென்றார்கள்.

கண்காட்சியில் தோன்றும் பிணியோற்பவம் அறியாதார் பிறவியோற்பவம் அறிந்தாற்போல் பேசுவது பேதைமெய் அன்றோ என்றார்.

பேதைமெயே என்றொப்புக் கொண்டு அவரவர் இல்லஞ் சேர்ந்தார்கள்.

தம்மராசன் மூன்றாஞ் சங்கத் தோரை வரவழைத்து பெரியோர்களே தங்கள் சங்கத்தின் உத்தேசமும் அதன் பயனும் யாதென்றார்.

அரசே, எங்கள் உத்தேசம் மனிதனுக்கு யாதொரு

சுகமும் கிடையாது. பிறப்பது ஆதி, இறப்பது அந்தம், இறந்தபின் சகலமும் சூன்யமாதலால் விழித்திருப்பவன் சூனியத்தை விசாரிப்பதில் யாதொரு சுகமுங் கிடையாதென்பதே என்றார்கள்.

**அருங்கலைச்செப்பு - மூன்றாஞ் சங்கவியல்**

மக்கட் பிறப்பிற் சுகமு மில்லை / இக்கட்டிடு குறையால்.
பிறப்பதாதி யிறப்பதந்தங் / குறிப்பாம் பாழ்நிலையால்.
விழிப்போன் பாழை வினவுவதெல்லாம் / பழிப்பின் பகுதியேயாம்.

பெரியோர்களே, உலகத்தில் ஆணுக்குப் பெண்ணும், நன்மெய்க்குத் தின்மெயும், சூட்டிற்கு குளிர்ச்சியும், இருளுக்குப் பகலும், தூக்கத்திற்கு விழிப்பும் எதிரடையாகத் தோன்றுவதுபோல் துக்கத்திற்கு சுகம் எதிரடையாக வேண்டுமே. அங்ஙனம் இராததற்குக் காரணம் என்னை என்றார். மனிதன் பிறந்தது முதல் இறக்குமளவும் துக்கமே தோற்றமாதலின் சுகமில்லை என்பது கருத்தாம் என்றார்கள்.

உங்களுக்குச் சுகமென்னும் உணர்ச்சித் தோன்றியவிடத்தில் துக்கம் விளங்கிற்றா அன்று வேறாகத் தோன்றிற்றா என்றார். சுகம் உணரும் இடத்தில் துக்கம் விளங்குகிறதென்றார்கள். மனிதனுக்கு சுகமில்லை என்று கூறுங் காரணமென்னை என்றார். விசாரணைக் குறைவே என்று ஒப்புக்கொண்டார்கள்.

ஆதி என்னுந் தோற்றம் உண்டானபோதே அந்தமென்னும் முடிவும் இருப்பதாக விளங்குகின்றது. ஆதலின் தாங்கள் கூறும் பிறப்பிற்கும் இறப்பிற்குங் காரணம் எதுவென உசாவினார்.

அதன் காரணங்களை அறியோமென்றார்கள்.

பெரியோர்களே தங்கட் கண்களில் தோற்றும் பொருட்களை சூன்யம் என்கிறீர்களா தோற்றாப்பொருட்களை சூன்யம் என்குறீர்களா என்றார்.

தோற்றும் பொருட்கள் மறைந்தவிடத்தை சூன்யமென்றோமென்றார்கள். சூனியத்தினின்று எதேனுந் தோற்றுமோ என்றார்.

அதன் விளக்கம் அறியாது விழித்தார்கள்.

பெரியோர்களே, உங்களுக்குள்ள சூனியம் இருக்கட்டும் பிணிகளின் உற்பவம் ஏதேனுங் கண்டீர்களோ என்றார்.

அரசே, உபத்திரவங் கண்டு தீறும் பிணி ஒன்று, உபத்திரவங் கண்டு கொல்லும் பிணியொன்று ஆக இரண்டு பிணிகளைக் கண்டுள்ளோமென்றார்கள்.

பெரியோர்களே இவ்விரண்டு வகைப் பிணிகளின் உற்பவங்களைக் கண்டீர்களோ என்றார்.

அறியோமென்றார்கள்.

மனிதன் மூப்படையுங் காரணத்தையேனுங் கண்டதுண்டோ என்றார்.

அதையும் அறியோமென்றார்கள்.

மனிதன் மரணத்திற்கு உள்ளாகுங் காரணங்களையேனுங் கண்டதுண்டோ என்றார்.

அதையும் அறியோமென்றார்கள்.

பெரியோர்களே, தாங்கள் கொண்ட விசாரிணையால் உங்களுக்கேனும், உங்களைச் சார்ந்தவர்களுக்கேனும் பயனுண்டோ என்றார்.

யாதொரு பயனையும் அறியோம் என்றார்கள்.

பயனற்ற சங்கத்தைச் சாருதலும், பயனற்ற வார்த்தைகளைப் பேசுதலும், பாழாதலின் பெரியோர்களே தங்கடங்கள் இல்லங்களில் சேருங்கோளென்று அனுப்பிவிட்டார்.

சக்கிரவர்த்தித் திருமகன் நான்காம் சங்கத்தோரை வரவழைத்து ஆசனமீய்ந்து பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கம் யாது, அச்சங்கத்தால் தாங்கள் அடைந்த பலன்கள் என்னை அதை விவரிக்க வேண்டும் என்றார்.

அரசே, எங்கள் சங்கத்தின் நோக்கம் யாதென்பீரேல்,

சீவர்களுக்கு ஆதியுங்கிடையாது, அந்தமுங் கிடையாது, நன்மெயுங் கிடையாது, தீமெயுங்கிடையாது எல்லாம் தானே ஏற்றுக்கொள்ளுவதால் யாவுந் தற்செயலென்றே கொள்ளுவதாக்குமென்றார்கள்.

**அருங்கலைச்செப்பு - நான்காஞ் சங்கவியல்**

தோற்றும் பிறப்பின் முதலுமில்லை / யாற்றுங் கடையுமது.
நன்மெயுமில்லைத் தீமெயுமில்லை / புன்மெயூர் சீவர்க்கது.
முற்செயல் யாவை யூர்ந்து மேற்றல் / தற்செயலென்றே யறி

தம்மராஜன் அங்கு வந்துள்ள ஓர் பெரியவரைநோக்கி பெரியோய் உமக்கு வயதென்ன என்றார்.

அரசே, எனக்கு நாற்பது வயதாகின்றது என்றார். இவ்வயதை உமது ஆதி உற்பவங்கண்டு சொல்லுகின்றீரா, அன்றேல் அனாதியினின்று சொல்லுகின்றீரா என்றார்.

அரசே, என் ஆதியுற்பவங்கொண்டே சொல்லுகின்றேனென்றார்.

பெரியோய் அங்ஙனம் சீவர்களுக்கு ஆதியுமில்லை அந்தமும் இல்லை என்று கூறிய கருத்தென்னவென்றார்.

அரசே, சீவர்களுக்கு ஆதியுங் கிடையாது அந்தமுங் கிடையா தென்றார்கள்.

பெரியோர்களே, சீவர்களென்றால் ரூபிகளா அரூபிகளாவென்றார்.

அரசே, அரூபியே என்றார்கள்.

பெரியோர்களே, சீவர்கள் அரூபவஸ்துக்களாயின் மநுடசீவர்களென்றும் மிருக சீவர்களென்றும் ரூபங்களைக் குறிக்குங் காரணம் யாதென்றார்.

அரசே, தேகத்தை ஆட்டுவது சீவனேயன்றி தேகம் சீவனாகாதே என்றார்கள் பெரியோர்களே, உங்கள் கண்ணினால் தேகம் ஆடுவதைக் கண்டீர்களா தேகத்தை ஆட்டி வைப்பதைக் கண்டீர்களா என்றார்.

அரசே, தேகம் ஆடுவதையே கண்டோமென்றார்கள்.

பெரியோர்களே, தேகத்தை ஆட்டிவைப்பது ஓர் சீவனென்று கூறியது காணாமற் கூறும் பொய்யல்லவோ என்றார்.

அரசே, நாங்கள் கூறும் வழக்கமென்றார்கள்.

பெரியோர்களே, அறியாத சங்கதிகளை அடுத்துச்சொல்லி அயலாரைக் கெடுக்கும் பொய்யே தின்மெயாயிருக்க நன்மெயுமில்லை தின்மெயுமில்லை என்று கூறுவது பெரும் பொய்யல்லவோ என்றார்.

அரசே, நன்மெயுந் தின்மெயும் தீதென விளங்காமற் கூறுவது பொய்யாமோ என்றார்கள்.

பெரியோர்களே, விவேகிகளுக்கும் ஓர் சங்கம் வேண்டும், கள்ளர்களுக்கும் ஓர் சங்கம் வேண்டும், ஆதலின் தாங்கள் கூடியுள்ளது யாது சங்கமென்றார்.

அரசே, யாங்கள் கூடியுள்ளது விவேகிகள் சங்கமென்றார்கள்.

பெரியோர்களே, தங்கள் சங்கத்தை கள்ளர் சங்கமென்றாலோ என்றார்.

அரசே, யாங்கள் கள்ளர்களல்லவே என்றார்கள்.

பெரியோர்களே, கள்ளர்களென்றால் தீயச்செயலை உடையவர்களோ என்றார்.

அரசே, ஆமென்றார்கள்.

அப்போது நன்மெயுமில்லை தீமெயுமில்லை என்பது உங்கள் வழக்கமோ என்றார்.

அதற்கும் ஆமென்றார்கள்.

ஆதியுமில்லை, அந்தமுமில்லை, நன்மெயுமில்லை, தீமெயுமில்லை என்று சொல்லித்திரிவது உங்கள் சங்கத்தின் இயல்பு போலும் என்றார்.

மாறுத்திரங் கூறாமல் மௌனத்திலிருந்தார்கள்.

பெரியோர்களே, தாங்கள் ஒவ்வொருவரும் சொன்னதைச் சொல்லுங் கிள்ளை போன்றவர்களாதலின் உங்களால் உள்ள சங்கை விளங்காது, தங்கடங்கள் இல்லஞ்சேர்ந்து ஆதி அந்தத்தை ஆராய்ச்சி செய்யுங்கோள் என்று அனுப்பிவிட்டார்.

அதன்பின் சித்தார்த்தி சிறுவர் ஐந்தாவது சங்கத்தோர்களை வரவழைத்து பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கமும் அதன் பயனும் யாதென உசாவினார்.

ஐந்தாவது சங்கத்தார் சிறுவரை நோக்கி அரசே, எங்கள் சங்கத்தின் நோக்கம் புசிப்பை விரும்பாதவனும், தாகத்தை அடக்குவோனும், அக்கினியின் கொதிப்பை சகிப்பவனும், சூரியன் வெப்பத்தைத் தாங்குகிறவனும் எக்காலும் சுகமடைவான். இவைகளைத் தாங்காதவன் சுகமடைய மாட்டான் என்பதே என்றார்கள்.

**அருங்கலைச்செப்பு - ஐந்தாம் சங்கவியல்**

உண்ணலுணவை யொழிக்கு முளத்தான் / களங்கமகற்றுங்கரை
தீயவெப்பந்தாங்குந்தரியல் / ஆயசுகமென்றுணர்
இத்திரவொடுக்கமேவாதொருவன் / பற்றுஞ்சுகமற்றது.

பெரியோர்களே, தங்கள் தேகங்களில் பசி தானே தோற்றுகின்றதா அன்றேல் பசியைத் தாங்கள் தோற்றவைக்கின்றீர்களா என்றார்.

அரசே, பசி தானே தோற்றுகிறதென்றார்கள்.

அங்ஙனந் தானே தோற்றும் பசிக்குப் புசிப்பை விரும்பாமலிருக்கக் கூடுமோ என்றார்.

புசிப்பை விரும்பாமலிருந்தால் பசி எடுக்காமலிருக்கும் என்பது சங்கத்தின் கருத்தென்றார்கள்.

தற்காலந் தாங்கள் புசிப்புண்டு தேகத்தைப் போஷிக்கின்றீர்களா என்றார்.

அரசே, புசிப்புண்டு தேகத்தைப் போஷிக்கின்றோம் என்றார்கள்.

அங்ஙனம் புசிப்பை விரும்பாதிருத்தல் என்பதின் கருத்தென்னை என்றார்.

அஃதெங்கள் முன்னோர் பெரியோர்களே, முன்னோர் கருத்தை உணராமல் பின்னோராகச் சொல்லிக் கொண்டு திரிவது உங்கள் கருத்து போலும் என்றார்.

ஆமென்றார்கள்.

பெரியோர்களே, உங்கள் சங்கத்தோர்க்குப் பிணி, மூப்பு, சாக்காடு தோன்றுவதில்லையோ என்றார்.

அரசே, மூன்றுந் தோன்றுவதுண்டு என்றார்கள். பெரியோர்களே, இம்மூன்றின் உபத்திரவத்தால் உங்களுக்குத் துக்கம் உண்டா இல்லையா என்றார்.

அரசே, இம்மூன்றினாலும் எங்களுக்குத் துக்கம் உண்டு என்றார்கள்.

பெரியோர்களே, தங்கள் சங்கத்தோர் கருத்தின்படி நடந்தால் எக்காலுந் துக்கமணுகாவென்று கூறிய உங்களுக்கு இம்மூன்றினால் துக்கமணுகுங் காரண மென்னை என்றார்.

அரசே, எங்கள் சங்கத்தோர் நோக்கத்தைச் சொல்லிக்கொண்டு வருகிறோமன்றி அதன் பலனை அறியோமென்றார்கள்.

பெரியோர்களே, வியாபார சங்கமென்று சிலர்கூடி வியாபாரம் நடத்துவதில் ஓர் பயனைக் கருதி நடத்துகின்றார்களா பயனைக் கருதாமல் நடத்துகின்றார்களா. பூமியை விருத்தி செய்யும் ஓர் சங்கத்தார் உழுது பண்படுத்தி விதைப்பதில் அப்பயிற்றின் பயனைக் கருதி விதைக்கின்றார்களா கருதாமல் விதைக்கின்றார்களா என்று ஆராயுங்கால் ஓர் பயனையும் அதன் சுகத்தையுங் கருதியே செய்து வருவது கண்கண்ட காட்சியாகும்.

அங்ஙனமுள்ள தாங்கள் சங்கத்தின் கருத்தை சொல்லிக்கொண்டு அதன் பலனை அறியோமென்பது பாழல்லையோ என்றார்.

அரசே பயனற்ற சங்கம் பாழே என்று ஒப்புக் கொண்டார்கள்.

பெரியோர்களே, தாபரங்களுக்கும் ஓர் சங்கமுண்டு, பட்சிகளுக்கும் ஓர் சங்கமுண்டு, மிருகங்களுக்கும் ஓர் சங்கமுண்டு, மக்களுக்கும் ஓர் சங்கமுண்டு. இவைகளுள் தாபரசங்கமமாகுந் தோப்புகளினால் பட்சிகளுக்கும், மிருகங்களுக்கும், மக்களுக்கும் நிழலளிப்பதன்றி காய் கனி கிழங்குகள் ஈய்ந்துத் தாங்களும் விருத்தியடைகின்றது.

பட்சிகளின் சங்கங்களோ ஒன்றுகூடிக் கூச்சலிட்டுத் தங்களினங்களைக் கார்த்துக்கொள்ளுகின்றது. மிருகங்களோ அதனதன் வகுப்பில் ஒன்றுகூடித் தங்களைக் கார்த்துக்கொள்ளுகின்றது. மக்கள் சங்கமென்று கூடி யாதொரு பயனுமடையவில்லை என்பது பரிதாபமே.

ஆயினும் பெரியோர்கள் பயனற்ற சங்கத்தை நாட்டிப் பாழடைந்ததைப் போல் சிறுவர்களையும் பாழடையவிடாமல் பயனடையுஞ் சங்கத்தில் சேருங்கோள் என்றோதி அவர்களையும் அவர்களில்லங்களுக்கு அனுப்பிவிட்டார்.

வீணைகோபாலன் ஐந்து சங்கத்தோர்களையுந் தருவித்து விசாரிணைச் செய்தவற்றில் யாதும் விளங்காததால் தந்தைக்கு வேவுவிடுத்து மற்றும் விதரண சங்கத்தோர் வேறுளரோ என்று உசாவினார்.

அவற்றிற்கு சக்கிரவர்த்தியார் சற்று நிதானித்து தனது மூதாதை கலிவாகுச் சக்கிரவர்த்தியின் வம்மிஷவரிசையோர்களாகிய சாக்கையர்களே ஆறாவது கடைச்சங்கத் தோர்களாக நின்று கணிதாதிகளை விளக்கிவருகின்றபடியால் அவர்களில் சில பெரியோர்களைத் தருவிக்க வேண்டும் என்றெண்ணி மிக்கோர்களை வரவழைத்து சாக்காய் நமது குழந்தை ஊர்வலஞ்சென்ற நாள் முதல் தனக்கேதோ ஓர் சங்கை தோன்றி தேசங்களிலுள்ள ஐந்து சங்கத்தோர்களையுந் தருவித்து உசாவியும் தனது சங்கை நிவர்த்தியாகாமல் மற்றுமுளரோ என்றேவினார். அதுகண்டு தங்களை வரவழைத்தேன். நீவிரும் அவ்விடஞ்சென்று குழந்தைக்குற்ற சங்கையை விளக்குவதுடன் சித்திரமாளிகை யை விட்டு வெளியேறாதிருக்கும் விதரணைகளை ஊட்டி இளவரசை நிலைபெறச் செய்யுங்கோள் என்றனுப்பினான்.

சாக்காக்களும் சக்கிரவர்த்தியினாக்ளைப்படி சித்திரமாளிகைச் சென்று சித்தார்த்தரைத் தெரிசித்து ஆசனத்திருந்து அரசே, எங்களைத் தருவித்தக் காரணம் யாதென வினாவினார்கள்.

பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கங்களையும் அதன் பயன்களையும் அறியவேண்டியவனாயிருக்கின்றேன் விளக்குங்கோளென்றார்.

அரசே, எங்கள் சங்கத்தின் நோக்கமும் அதன் பயனும் யாதென்பீரேல்:

ஒன்பது கிரகங்கள் கூடி நடத்துஞ் செயல்களே உலகத்தில் பொருந்தும் நிகழ்ச்சி என்றும் ஒவ்வோர் காயங்களின் நிகழ்ச்சியும் நன்மெய் தின்மெயும் தோற்ற ஒடுக்கங்கள் யாவும் நவக்கோட்களின் ஆட்டங்கள் என்றறிந்து அதன் மேறை நடந்து வருகிறோமென்றார்கள்.

கௌதம் சிறுவர் பெரியோர்களை நோக்கி ஐயமின் உலக பொருத்தமும் காயங்களும் நன்மெய் தின்மெய்களும் தோற்ற ஒடுக்கங்களுமாகிய நிகழ்ச்சிகள் யாவும் நவக்கோட்களின் ஆட்டமென்றால் அச்செயல்கள் ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியா, நிகழ்ச்சிக்குத்தக்க ஏதுவாவென்றார்.

அரசே, சருவசெயலும் நவக்கோட்களின் நிகழ்ச்சியென்றார்கள். பெரியோர்களே, சருவ நிகழ்ச்சிகளுக்கும் நவக்கோட்களே ஏது வென்பீர்களோ என்றார்.

அரசே, சருவ நிகழ்ச்சிகளுக்கும் நவக்கோள்கள் தான் ஏதுவென்றார்கள். பெரியோர்களே, நன்மெய் தின்மெய்கள் இரண்டிற்கும் நவக்கோட்களே ஏதுவென்பீர்களோ என்றார்.

அரசே, தீக்கோட்கள் நோக்கமுருங்கால் தீயபலனையும், நற்கோட்கள் நோக்கமுறுங்கால் நல்ல பலனையுந் தருமென்றார்கள்.

பெரியோர்களே, நற்கோள் பார்வைக்கோர் ஏதுவும், தீக்கோள் பார்வைக்கோர் ஏதுவும் இருக்குமல்லவோ என்றார்.

அரசே, அவைகளிரண்டிற்கும் நவக்கோட்களே ஏதுவென்றார்கள்.

பெரியோர்களே, தீக்கோட்களென்றும், நற்கோட்களென்றும் பகுப்பு உண்டானதற்கு ஏதுக்களெவை என்றார்.

அரசே, அதனதன் செயல்களே ஏதுவென்றார்கள்.

பெரியோர்களே, தீச்செயலும், நற்செயலும் ஒழிந்தவிடத்தில் தீக்கோள் நற்கோளென்னும் பெயருண்டோ என்றார்.

மாறுத்திரங் கூறாமல் திகைத்து நின்றார்கள்.

பெரியோர்களே, தீக்கோட்கள் நல்ல பலனையும், நற்கோட்கள் தீயபலனையுந் தாராவோ என்றார்.

அரசே, அந்தந்த கிரகங்கள் நின்ற விராசி பேதத்தால் நற்கோட்கள் தீயபலனையும், தீக்கோட்கள் நல்ல பலனையும், தருமென்றார்கள்.

பெரியோர்களே, சருவ செயல்களுக்கும் நவக்கோட்களே ஏதுவென்று முன்பு கூறினீர்கள் இப்போது இராசியை ஏதுவாக்குகின்றீர்கள். ஆக இவ் விரண்டில் எவற்றை முக்கிய ஏதுவாகக் கொள்ளலாம் என்றார்

அரசே, இராசிகளையும் ஏதுவென்னலாம் என்றார்கள். பெரியோர்களே இராசிகளையும் கிரகங்களையும் ஏதுவாகக் கொள்ளுவதில் ஒவ்வொரு சீவராசிகளின் உற்பவங்களில் ஒரேராசியில் ஒரே கிரகம் பொருந்தி வருமோ என்றார்.

அரசே, காலத்திற்கு காலம் இராசிகளுங் கோட்களும் மாறுபட்டு வருமென்றார்கள்.

பெரியோர்களே, காலமும் ஒரே துவாகும் போலுமென்றார்.

அரசே, கிரகங்களை முதலேதுவாகவும், இராசியை இரண்டாமேதுவாகவும், காலத்தை மூன்றாவது ஏதுவாகவும் கொள்ளல் வேண்டு மென்றார்கள்.

பெரியோர்களே, காலத்தை அனுசரித்து இராசியும், இராசியை அநுசரித்துக் கிரகங்களும் இருக்கின்றபடியால் கிரகங்களை முதலேதுவாக எவ்வகையில் கொள்ளலாம் என்றார்.

அரசே, இம்மூன்றேதுக்களுள் முதலேதுவை எதுவென்று எங்களுக்கும் விளங்கவில்லையே என்றார்கள்.

பெரியோர்களே, மூன்று ஏதுக்களுக்கும் முதலேது அவரவர்கள் செயல்களென்றே விளங்குகிறதல்லவா என்றார்.

அரசே, அவரவர்கள் செயல்களே முதலே துக்களென்று நாங்கள் எவ்வகையில் கண்டடைவோமென்றார்கள்.

பெரியோர்களே, தாங்களென்னை நாடி இவ்விடம் வந்த பின்பு இன்னகாலத்தில் வந்தோமென்று குறிப்பீர்களா வராததற்கு முன்பே காலத்தைக் குறிப்பீர்களா என்றார்.

அரசே, இவ்விடம் வந்தபின்பே இக்காலத்தில் வந்தோமென்று குறிப்போமென்றார்கள்,

பெரியோர்களே, அதுகொண்டு தாங்கள் வந்த செயல் முந்தியதா காலம் முந்தியதா என்றார்.

அரசே, நாங்கள் வந்த செயலே முந்திய தென்றறிந்தோம் என்றார்கள். பெரியோர்களே, செயலைத் தழுவிக் காலமும், காலத்தைத் தழுவி இராசியும், இராசியைத் தழுவிக் கிரகமும் நிற்கின்றதல்லவாவென்றார்.

அரசே, அவரவர்கள் செய்கைகளையே முதலேதுவாகவும், காலத்தை இரண்டாமேதுவாகவும், இராசியை மூன்றாமேதுவாகவும், கிரகத்தை நான்காமேது வாகவுங் கொள்ளுவோமானால் நமது மூதாதை கலிவாகு சக்கிரவர்த்தி வகுத்துள்ள கலியுலகக் கணிதங்கள் மாறுபடுமல்லவோ என்றார்கள்.

பெரியோர்களே, தங்கள் கணிதங்களை யான் மாற்றுவதற்கு வரவில்லை முன் செயலைக் கொண்டு காலமுங் கணிதமும் விளங்குகிறபடியால் முன் செயலை விட்டுக் காலமுங் கணிதமும் விளங்காதல்லவோ என்றார்.

அரசே, உலகத்தில் தோற்றும் பொருட்களின் உதயத்தைக் கொண்டு பலன்களை கணிக்கின்றோமன்றி அவைகள் தோற்றுஞ் செயலை

அறியோமென்றார்கள்.

பெரியோர்களே,

ஒவ்வொரு சீவராசிகளின் உதயங்களுக்கு வேறு வேறு இராசிகளும், வேறுவேறு கிரகங்களும் மாறுகொண்டு தேருருளைப்போல் சுழன்று வருகிற படியால் முன் செயல்களே ஏதுக்களாகவும் தோற்றங்களே நிகழ்ச்சிகளாகவும் வருவது விளங்கவில்லையா என்றார்.

**அருங்கலைச்செப்பு - ஆறாவது சங்கவியல்**

நவக்கோள் கூடி நடத்து மாண்பு / உவப்பி நிகழ்ச்சியது
ஆயக் கோட்க ளாட்ட மதுவே / காய நிகழ்ச்சி யெனல்

நன்றுந் தீதும் நவக்கோளாட்ட / மென்று முணர்வ தது
தோற்ற வொடுக்கம் யாவுங் கோட்களாற்ற செயவென் றுணர்.

ஏதுக்குத் தக்க நிகழ்ச்சியென்பது செயலுக்குத்தக்கத் தோற்றமென்று விளக்கிய இவர் கலிவாகுச் சக்கிரவர்த்தியின் செயலே சித்தார்த்திச் சக்கிரவர்த்தி என்றுரு கொண்டனரோ என்னும் பீதியால் அரசே, நமது மூதாதை கலியுலகக் கணிதத்தில் தோற்றங்கண்டு மொழிந்து வரும் யாங்கள் செயலைக்கண்டு எவ்வகையில் கவனிப்போமென்றார்கள்.

பெரியோர்களே, முன் செயல்களைக் கொண்டு பின் செயல்கள் தோற்றுகிறபடியால் உங்கள் முன் செயலைக் கொண்டு உங்கள் தோற்றத்தையும் பலனையுங் கணியுங்கோள். அப்பலன் முன் சுகச்செயலைப் பற்றி வருமாயின் பூர்வபுண்ணியமாம் சுப்பலனும், அசுகச் செயல்பற்றிவருமாயின் பூர்வ பாவமாம் அசுபபலனும் அடைவீர்களென்றோதி கலியுலகாதி சுகம் ஒழுக்கமே முக்கியமென்று கணித்து எண்ணைப் பூர்த்தி செய்யுங்கோள் என்றாக்கியாபித்து அவரவர்கள் இல்லங்களுக்கு அனுப்பிவிட்டார்.

சித்தாத்தி சிறுவரிடம் சாக்காக்கள் விடைபெற்று தங்கடங்கள் இல்லங்களில் சேர்ந்து சக்கிரவர்த்தித்திருமகனால் போதித்த ஒழுக்கத்தைப் பின்பற்றுவதால் உழ்வினையற்று ஜெனனத்திற் புண்ணிய பலன் தோற்றமுணர்ந்து ஒவ்வொருவர் கணிதக் குறிப்பையும் ஒலிவடிவ பாலிபாஷையில் ஜநநீஜென்ம சௌக்கியானாம், வத்தநீ குலசம்பதாம், பதவி பூர்வபுண்யானா மென சுருதியாக ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியாகும் பூர்வச்செயலுக்குத் தக்க தோற்றங்களை விளக்கி ஒழுக்கத்தை விருத்தி செய்து கலிவாகுவின் கணிதத்தைப் பரவச்செய்து வந்தார்கள்.

**யாப்பருங்கலைக்காரிகை**

ஆர் கலியுலகத்து மக்கட்கெல்லாம் / ஓதலினன்றே ஒழுக்கமுடமெய்.

**சூளாமணி - ஒழுக்க விவரம்**

ஆதிநாளரசர் தங்களருங் குலமைந்துமாக்கி
யோதநீருலகின் மிக்க ஒழுக்கந் தொழிலுந் தோற்றித் தீ
துதீர்ந்திருந்த பெம்மான்றிருவடி சாரச்சென்று
நீதிநூற்றுலகங்காத்து நிலந்திரு மலரநின்றான்.

தம்மராசனோ ஆறு சங்கத்தோர்களையுந் தருவித்து பிணி, மூப்புச் சாக்காடென்னும் நான்கு வாய்மெய் விசாரிணையினின்றும் சங்கை விளங்காமல் புசிப்பை விரும்பாமலும், சயனங் கருதாமலும், நித்திரை பிடியாமலும், இடைவிடா விசாரிணையிலிருப்பதை உணர்ந்த வேவுகர்கள் அரசனுக்குத் தெரிவிக்க அரசனும் பெருங்கவலை உடையவனாய் பிள்ளை சித்திரமாளிகையை விட்டு வெளியேறா வண்ணம் வேவுகர்களுக்கு அறிக்கையிட்டு மிக்கப் பாதுகாப்பில் வைத்திருந்தான்.

ஓர் நாள் இரவு அரசபுத்திரனுடன் சயனித்திருந்த அசோதரைத் திடுக்கிட்டு எழுந்து கணவனையுங் குழவியையுந் தழுவி என் பிராணநாயகா நீவிர் எங்கள் இருவரையும் நீங்கி வெளியேறியது போலும், குழவியும் யானும் சயனத்துடன் பூமியில் இரங்குவது போலும் சொர்பனங்கண்டேன் இதன் பயன் யாதோ அறியேனென்று அலறினாள்.

அதை உணர்ந்த சித்தார்த்தர் அசோதரையைத் தழுவி, பெண்ணே, நீ யாதுக்கு அஞ்சுகின்றாய் அரசபத்தினிக்குள் சிறந்தவளாக விளங்குவாய் உன் ஆணிநிலைக்கும் ஓர் தாழ்ச்சியுண்டாகும். யான்கொண்ட நோக்க நிலைக்கு ஒருக்காலுந் தாழ்ச்சி வராது. எக்காலும் அரணி என விளங்குவாய். அன்பே அஞ்சவேண்டாமென்றமர்த்தி நித்திரைக்கொள்ளும்படி செய்து தான் நித்திரைக் கொள்ளாமல்,

சீவர்களுக்குத் தோன்றும் பிணி மூப்பு சாக்காட்டின் துன்பங்களை அகற்றும் சுகவழியைக் கண்டு சீர்பெறச் செய்விக்க வேண்டுமென்னுங் காருண்ணியக் கயிறு ஒருபக்கமிழுக்க மனைவி மகவென்னும் பாசக்கயிறு ஓர் பக்கம் இழுக்கத் திடங்கொண்டு உலகிலுள்ள சருவசீவர்களின் ஈடேற்றத்தின் பாகம் மனைவி மகவுக்கும் பொருந்துமென்று எண்ணி பாலிகலையில் கும்போபித மாதமென்றும், வடகலையில் கும்பமாதமென்றும், தென்கலையில் மாசிமாதமென்றும் வழங்கும் பௌர்ணமி

நள்ளிரவில் வெளியேறும் வழிகளை நோக்குங்கால் ஒவ்வோர் வேவுகர்களுந் தோழிகளும் எச்சரிக்கையில் விழித்திருப்பதைக்கண்டு புறம் போய் பொன்மதில் வெள்ளி மதில் இரும்பு மதில் மூன்றையுங் காலினால் மெறித்துத் தகர்த்து வெளியேறி குதிரைலயஞ் சென்று சன்னாவென்னும் அஸ்வசேவகனை அழைத்து பட்டத்து பரிக்கு சேணமிடச்சொன்னார். சேவகன் கலக்கமுற்று அரசே, தலைத்தார்வேந்தருக்குத் தாமோரறிக்கையுஞ் செய்யாமல்;

**சீவக சிந்தாமணி**

அடியுலக மேத்தியலர்மாரிதூவ / முடியுலகமூர்த்தி யுறநிமிர்ந்தோனியாரே முடியுலகமூர்த்தி யுறநிமிர்ந்தோன் மூன்று கடி மதிலுங் கட்டவிழ்த்தகாவலநீயன்றோ

**முன்கலைதிவாகரம்**

மும்மதில் பொன்னும் வெள்ளியுமிருப்பும் / மன்ன சிவன் முன்னழித்த முப்புரமே.

**நிகழ்காலத்திரங்கல்**

தேனடரு மானந்த செங்கமலத் தாளருள.
மானிடர்போல் மண்மிசையில் வந்தது அதிசயமே
மானிடராய் வந்து மரணமூப்புப் பிணியைத்
தானறிய மும்மதிலைத் தாண்டல் அதிசயமே.
தாண்டித் தலங்கடந்து தலைமுடியைத் தானறுத்து.
வேண்டு விம்பாநாடு மேவலதிசயமே.

**சூளாமணி - கலியுலக விவரம்**

மருங்கவை புணர்த்த பின்னை வானக வளாகமெல்லாம்,
கருங்கலொன்று அகன்றமேலார் கவித்தது கவித்தலோடு, மிருங்கலியுலகமெல்லாம் இருள்கொள வெருவிநோக்கி,
பொருங்கலி அரசர்தானை போக்கிடமற்றதன்றே.

**வீரசோழியம்**

மேருகிரி யிரண்டாமெனப் பணைத்த விருபுயங்கள் மாரனிதை யாவேட்டு மும்மதில் மிதித்தனையே

4. **சித்தார்த்தி மஹாராஜ துறவு காதை**

பிறைமுடி தரித்து வாகுல்லயம்பூண்டு வெளியேறுங் காரணம் யாதோவென வணங்கி நின்றான்.

சக்கிரவர்த்தி திருமகன் சன்னாவைக் கையமர்த்தி குதிரைக்கு சேணங் கட்டியவுடன் தாவியேறி விடிவதற்குமுன் விம்பசார நகரஞ்சேர்ந்து குதிரையை விட்டிரங்கி தனது திங்கள் முடி வாகுவல்லயம் மார்பதக்க முதலிய யாவையுங் கழற்றி சன்னாவிடங் கொடுத்து இவைகள் யாவையும் என் தந்தையிடஞ் செலுத்தி உமது மைந்தர் மூப்புப் பிணி சாக்காடென்னும் மூவரசர்கள் பேரில் யுத்தத்திற்குப் போயிருக்கின்றார். அவர்களை ஜெயித்து கூடிய சீக்கிரம் இவ்விடம் வந்து அதன் ஜெயபேரி தொனியையும் ஆனந்த நிலையையுந் தங்களுக்கு அருளுவாரென்றரைந்து போய்விட்டதாக சொல்லும்படி யாக்கியாபித்து தனது வாளை உருவி சிரோமுடியை அறுத்தெரிந்துவிட்டு வாளையும் அவன் கையில் கொடுத்தனுப்பி விட்டார்.

குதிரை சேவகன் சக்கிரவர்த்தியார் இடங்சென்று நடந்த வர்த்தமானங்கள் யாவையுங்கூறி தான் கைபெற்ற வாகு, பிறைமுடி, கச்சை, பதக்க முதலியவைகளையுங் கொடுத்தான்.

**வீரசோழியம்**

அன்னாயறங்கோனலங்கிளர் சேட்சென்னி,
ஒன்னாருடை புறம் போல நலங்கவர்ந்து,
துன்னான் துறந்துவிடல்.
பாவாயறங்கோனலங்கிளர் சேட்சென்னி,

மேவாருடைபுறம் போல நலங்கவர்ந்து,
காவான் துறந்து விடல்.

**காசிக்கலம்பகம்**

பாசத்தளையறுத்துப் பாவக்கடல் கலக்கி, / நேசத்தளைப்பட்டு நிற்குமே - மாசற்ற காரார்வரையீன்ற கன்னிப்பிடியளித்த, / ஓரனை வந்தெனுளத்து.

அரசன் அவைகளைக்கண்டவுடன் திகைத்து தான் கொண்ட எண்ணங்கள் யாவும் நிறைவேறாமல் சாக்கையர் கணிதம் போல் செய்கையின் தொடர்பாகும் விட்டகுறை எத்தன்மைத்தோவென்றேங்கி பாலபருவங்கடந்து குமர பருவத்துள் உன் சக்கிரவர்த்தி பீடத்தை துறந்தபோதிலும் உன் மனைவி பாசத்தை எவ்வகையில் துறந்தாய். உன் மனைவி பாசத்தைத் துறந்தபோதிலும் உன் மகவின் பாசத்தை எவ்வகையிற் துறந்தாய் மகனே என்று அலறி மறுபடியுந்தேறி தன் பௌத்திரனைக் கொண்டுவரச் செய்து வாரியெடுத்து முத்தமிட்டு குழந்தாய், உன் தந்தை சித்தார்த்தர் சித்திர மாளிகையில் இருக்கும் வரையில் தேசம் முழுவதும் பிரகாசித்திருந்தது. நீங்கியவுடன் இருளடைந்தபடியால் இனி உன் பெயர் இராகுலன் இராகுலனென்றோதி பட்டத்திற்கு பௌத்திரனிருக்கின்றானென்னுந் திடத்தால் கவலையை மாற்றி இராஜகீய சிந்தையிலிருந்தான்.

விடியர்கால வெள்ளி தோன்றியும் பட்சிகள் பாடும் நாதமெழாமலும், பசுக்களின் சப்தம் பிறவாமலும், தோழிகளின் கீதம் எழாமலும், மாளிகையுள் அசைவற்று இருளடைந்திருப்பதை அறிந்த அசோதரை அலரி எழுந்து கணவனைக் காணாமல் திகைக்குங்கால் வேவுகன் ஓடி வந்து அரணியை வணங்கி சக்கிரவர்த்தியார் பௌத்திரனைக் கொண்டுவரும்படி யாக்கியாபித்தாரென்றான்.

அசோதரைத் தன்னருமந்தக் குழவியை அவன் கரத்தில் அளித்துக் காரணம் யாதென உசாவினாள். மன்னுபுத்திரன் மாளிகையை விடுத்து மும்மதிலையுந் தவிர்த்து வேற்று நாடடைந்து தன் கைவாளினால்சிரோரோ மங்களை அறுத்தெரிந்து விட்டுச் சென்ற சங்கதிகள் யாவையும் விளக்கிப்போய் விட்டபின்னர் அரணி திகைத்து வாட்டமுற்று தன்

சிரோமுடியையும் கத்தரித்துக் கொண்டு சருவாலங்கிருதங்களையும் தவிர்த்து சுத்த புசிப்பையும் அகற்றி பிராந்தியுற் றபோதிலும் தன் கணவன் கொண்டு வருவேனென்று சொன்ன நித்திய போகத்திற்கு எதிர்பார்த்துக் கொண்டு தன் கணவனால் வகுத்துள்ள தருமசாலைகளைச் சீர்திருத்தி எவ்வெவ்வகையில் யாராருக்கறமளித்து ஆதரிக்கவேண்டுமென்னும் நிலைகண்டு தன்மத்தைப் பரவச் செய்துவந்தாள்.

**காசிக்கலம்பகம்**

உடுத்தகலையுமே கலையுமொழுகும் பணியும் விரும்பணியுந்
தொடுத்தவளையுங் கைவளையுந் துறந்தாளாலி துறந்தாலு
மடுத்தவுமது உரந்தானு மதனாலிதழி பரந்தாமம்
விடுத்து விடுவாள் எவளெனப்போய் விளம்பீர்காசி வேதியர்க்கே.

**யாப்பருங்கலைக்காரிகை**

இளநலமிவள்வாட வரும்பொருட்குப் பிரிவாயேல்
தளநல முகவெண்பற்றாழ்குழற் தளர்வாளோ
தகை நலமிவள் வாடத்தரும் பொருட்குப் பிரிவாயேல்
வகை நலம் இவள்வாடி வருந்தியில்லிருப்பாளோ
அணிநலமிவள் வாட வரும் பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசொடு மடிவாளோ.

**வீரசோழியம்**

விடா அது கழலுமென் வெள்வளையுந் தவிர்ப்பாய் மன்
கெடா அது பெருகுமென் கேண்மெயு நிறுப்பாயோ
ஒல்லாது கழலுமென்னொளிவளையுந் தவிர்ப்பாய் மன்
நில்லாது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ
தாங்காது கழலுமென்ற கைவளையுந் தவிர்ப்பாய் மன்

நீங்காது பெருகுமென்னெஞ்சமு நிறுப்பாயோ
மறவாதவன்பினேள் மனனிற்குமாரருளாய்
துறவாத தமருடையேள் துயர்தீரு மாறருளாய்
காதலார் மார்பன்றி காமக்கு மருந்துரையா
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய்
இணைபிரிந்தார் மார்பன்றி இன்பக்கு மருந்துரையாய்
துணை பிரிந்த தமருடையேள் துயர்தீரும் மாறுரையாய்
பகை போன்றது துறை பரிவாயினகுறி
நகையிழந்தது முகம் நணிநாடிற்று டம்பு
தகையிழந்தது தோள் தலைசிறந்தது துயர்
புகை பரந்தது மெய் பொறையாயிற்றென்னுயிர்.

**காசிக்கலம்பகம்**

இல்லாளே முப்பத்திரண்டறமுஞ் செய்திருப்ப
செல்லார் பொழிற் காசிச்செல்வனார் - மெல்ல
பரக்கின்ற புன்கை பருவகல்கொண் டைய
மிரக்கின்ற வாறறிகிலேன்.

மாசிமாதப் பௌர்ணமியில் துறவடைந்த மன்னன் விம்பாசார் நகரிலுள்ள ஓர் நதியிலிறங்கி தேகசுத்தஞ் செய்துக்கொண்டு ஆற்றுநீரை அருந்தி கரையேறி நகரவீதிச்சென்று சிரேஷ்டமுற்றக் கையில் ஓர் அகலையேந்தி பிச்சையேற்கும் குமரப்பருவமுற்ற கோமான் முகமலர்ச்சியையும் கண்ணொளியையுங் குளிர்ந்த பார்வையையும் தேஜசையுங் கண்ட லோபியர்களும் நாணிப் பிச்சமளித்தார்கள்.

**சீவக சிந்தாமணி**

மாசித் திங்கண் மாசினமுன்னமடி வெய்த
ஊசித்துன்ன மூசியவாடை உடையாகப்

பேசிப் பாவாய் பின்னுமிருக்கை அகலேந்த
கூசிக்கூசி நிற்பர் கொடுத்துண்டறியாதார்.

பௌர்ணமியில் பிறந்து பௌர்ணமியில் துறவடைந்த பூரணன் தன் கரத்துள்ள வகலில் கிடைத்த அன்னத்தை எடுத்துக்கொண்டுபோய் ஓர் ஆற்றங்கரையில் வைத்துக்கொண்டு தேகசுத்தி செய்து அன்னத்தைப் புசித்துக் கையலம்புங்கால் நீரிலுள்ள மட்சங்கள் ஓடிவந்து கரத்தில் கழிந்த அன்னங்களைப் புசிக்கக் கண்ட குமரர் அகலில் மிகுந்திருந்த அன்னங்களையும் எடுத்து கொஞ்சங்கொஞ்சமாய் நீரில் விடுங்கால் ஒரு மட்சத்தின் மீது மறுமட்சங்கள் விழுந்து சண்டையிட்டுப் புசிப்பதைக் கண்டு தவிர்த்தும் அவைகள் விடாது போரிடுவதை உணர்ந்து ஒன்றுக்கொன்று உண்டாகும் ஆசையின் மிகுதியே இக்கலகத்திற்குக் காரணமென்றறிந்து அவ்விடம் விட்டெழுந்து ஓர் கால்வாயருகில் தழைத்து நிழலுற்றிருக்கும் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு கால்வாயிலோடும் நீரை உற்றுநோக்குங்கால் ஓடும் நீரினுடன் மட்சங்கள் போகாமல் எதிர்நோக்கி ஏறுவதைக்கண்டு அவ்விடம் விட்டெழுந்து கடைக்காலண்டைச் சென்று பார்க்குங்கால் நீர் வயல்களில் பரவவும், அதில் சிதரியோடிய மட்சங்களைக் காகங்களுங் கொக்குகளும் பிடித்துத் தின்பதைக்கண்டு நீரில் எதிர்நோக்கியோடும் மட்சங்கள் எவ்விடம் போகுதென்று தொடர்ந்தேகுங்கால் வாய்க்கால் நீரிலேறி ஏரிநீரில் மறைந்துவிட்டதுகள். இவைகளைக் கண்ணுற்ற சித்தார்த்தர் நீரோடுங்கால் மட்சங்கள் எதிரேறுவது சுவாபமா அன்றேல் தன் பிராணனைக் கார்த்துக்கொள்ளற்காவென்று ஆராய்ச்சி செய்யுங்கால் ஓடும் நீரில் எதிரேறுவது சுவாபமாயின் சிலமட்சங்கள் வயல்வெளியில் சிக்குண்டு காகங்களுக்கும் கொக்குகளுக்கும் இறையாயிரா,

அவ்வகை இறையாவதைக்கண்ட மட்சங்கள் தங்கள் பிராணனைக் கார்த்துக்கொள்ளுவதற்கு எதிரேறும் இயல்பென்றறிந்து அவைகளுக்குள்ள பிராண பயத்தையுஞ் சிந்தித்துக்கொண்டிருக்குங்கால், நகரவீதியிலுள்ள விவேகிகள் அரசனிடஞ்சென்று வணங்கி அரசே, நமது வீதியில் குமரப்பருவமும், குளிர்ந்த பார்வையும், மிருது வசனமும் வாய்த்த ஒருவர் தன் கையிலுள்ள அகலில் பிச்சையேற்ற அன்னத்தை எடுத்துக்கொண்டுபோய் ஆற்றங்கரையில் புசித்துக் கொண்டிருக்கின்றார்.

அவர் நடையுடை பாவனைகளைப் பார்க்குங்கால் சிறந்த சீமான் போல் காணப்படுகிறதென்றுரைத்தார்கள்.

**அருங்கலைச்செப்பு**

தலைத்தார் வேல்போகஞ் சாலத் துறந்து / நிலைத்தானாய் நின்றானிறை.
இறையோன் அகலேந்தி ஏற்றவன்னமுண்டு / பொறையூர் புறம் உணர்ந்தான் பின்
மீனுமுடல்கொண்டலிற்போரிடங்கண்டு / தானுமிச்சை என்றானிறை.
நீரோட்டக்காலும் நேரோடும் மீனும் / பாரோட்டங் கண்டான் பயன்.
விம்பாசாரன்றன் வேண்டல் மிகுகொண்டு / அன்பாலடைந்தானறன்.
முன்னொருத்திமாள முனைந்தவம் மூப்பன் / தன்னாற்றன் னோயகற்றினான்.
பின்னொருத்தன் மூப்பன் பெண்பாலர் நோய் கண்டு / உன்னுதளர் கொண்டானுடல்.

**அசோதரை நெஞ்சுவிடுதூது**

*மதுரந்தருஞ் சாத்தனவன் கோயில் முன்னே சதுரங்கப் பலமாத்தங்கும் - குதிரைப் பரி தேராளேனும் பெயரும் செப்பியபேர் கொள்ளுரவு நேராது பொய்யென்று நீக்கியே - தேருமிடத்

அதைக் கேட்ட விம்பாசார அரசன் திடுக்கிட்டெழுந்து பல்லக்கை கொண்டுவரச்செய்து ஏறிக்கொண்டு ஆற்றங்கரை வந்து சேர்ந்து சித்தார்த்தரைக் கண்டு திகைத்து அருகில் சென்று, ஐயன்மின், நீவிரயாவரென்றான். யானோர் விசாரிணைப்போக்கனென்றார். தாங்கள் விசாரிணைப் போக்கராயினும் தேசம் யாதோவென்றான் கபிலைநகரென்றார். அங்கு தாங்கள் யாருடைய , புத்திரரென்றான். மண்முகவாகு சக்கிரவர்த்தியின் ஏகபுத்திரரென்றார். அதைக் கேட்ட விம்பாசாரன் அவரை வணங்கி தன் பல்லக்கில் ஏற்றிக்கொண்டு அரண்மனைச்சேர்ந்து ஆசனமளித்துத் தானும் அருகில் உட்கார்ந்து அரசே தாங்கள் உலக இன்பங்களைத் தவிரத்து ஓடேந்தியக் காரணமென்னை என்றான்.

எனக்குற்ற சங்கைகளை அரசபோகத்தினின்று அதிகாரவிசாரிணையால் எவ்வெவ்வரிடத்து விசாரித்தும் சங்கை விளங்காததினால் ஒடுக்க நிலையில் ஓடேந்தி வணக்கவிசாரிணையில் வெளியேறினேனென்றார்.

அதைக் கேட்ட விம்பாசார அரசன் திடுக்கிட்டு தம்மராயனை நோக்கி இறைவா, தங்கள் சக்கிரவர்த்தி பீடத்தையும் மனைவி மைந்தன் சுகத்தையும் விடுத்துக் கையில் ஓடேந்தி என்ன சுகத்தை அடையப்போகின்றீரென்றான்.

சோதிரரே, தாம் வறிய சுகங்களில் பிறப்பது துக்கம், பிணி துக்கம், மூப்பு துக்கம், மரண துக்கம் பிரத்தியட்ச அனுபவத்தில் இருக்கின்றதினால் எச்சுகத்தில் என்னை நிலைக்கச்சொல்லுகின்றீ ரென்றார்.

இறைவா, ஓர் குடித்தனக்காரனிலுங் கிறாமாதிபதி மேலானவன். கிராமாதிபதியிலுந் தேசாதிபதி மேலானவன். தேசாதிபதியிலும் அரசன் மேலானவன். அரசனிலுந் தார்வேந்தன் மேலானவன். தார்வேந்தனிலும் தலைத்தார்வேந்தன் மேலானவன். அவ்வகைத் தலைத்தார் வேந்தனின் ஏகபத்திரராகிய உமக்கு யாதொரு சுகமுமில்லை என்பீராயின் நாங்களென்ன சுகத்தை அடைவோமென்றான்.

**மணிமேகலை**

சாக்கையராளுந் தலைத்தார் வேந்த
யாக்கையுற்று தித்தனனாங்க வன்றானெனை.

சோதிரரே, ஒரு ஆட்டை மேய்ப்பவனுக்கு சாதாரணம். பத்து ஆடுகளை மேய்ப்பவனுக்கு சொற்ப கஷ்டம். நூறு ஆடுகளை மேய்ப்பவனுக்கு அதனினுங் கஷ்டம். ஆயிரம் ஆடுகளை மேய்ப்பவனுக்கு அதிக கஷ்டம் இருக்குமல்லவா என்றார்

இறைவா, தலைத்தார்வேந்தர் இராட்சியபாரம் அதிகமாயினும் அவ்வவர் பொருப்பில் ஆளுகையை விடுத்து ஆதிபத்தியம் நடத்துவோமாயின் சுகவாழ்க்கைப்

பெறலாமன்றோ என்றான்.

சோதிரரே, நமக்குள்ளடங்கிய சகலக் குடிகளின் சுகவாழ்க்கையால் நாம் சுகமடையலாமா அன்று குடிகளின் அசுகவாழ்க்கையால் சுகமடையலாமா என்றார்.

இறைவா, சகல குடிகளின் சுகவாழ்க்கையே நமக்கும் சுகநிலை என்றான். சோதிரரே, தங்கள் நாட்டிலுள்ள குடிகளின் சுகநிலைகள் யாவற்றையுங் கண்டதுண்டோ என்றார்.

இறைவா , ஒவ்வோர் மனிதனும் பிறப்பதிலுந் துக்கங் காண்கின்றேன், வளர்தலிலுந் துக்கங் காண்கின்றேன், அதனைக் காப்பாற்றுதலிலுந் துக்கத்தைக் காண்கின்றேன், அதன் சார்பால் என் அரசியலுந் துக்கத்தைக் காண்கின்றேன். ஆதலின் குடிகளின் சுகநிலை ஈதென விளங்கவில்லையே என்றான்.

சோதிரரே, தமது நாட்டுக் குடிகளிடத்திலுந் தமது அரசிலுந் துக்கமே விசேஷித்திருக்கக்கண்ட நீவிர் ஏதேனுஞ் சுகத்தைக் காணவில்லையோ என்றார்.

இறைவா, துக்கத்தைக் கருதாவிடத்து சுகமும், சுகத்தைக் கருதிய விடத்தல் துக்கத்தையும் காண்கின்றேனென்றான்.

சோதிரரே, சகல குடிகளையுந் துக்கத்தில் ஆழ்த்தி நாம் சுகமடையக் கருதுதல் சுகமாமோ என்றார்.

இறைவா, சகலர் சுகத்தையும் கருதுதலே சுகமென்றான்.

சோதிரரே, இருளுக்கு வெளிச்சமும், ஆணுக்குப் பெண்ணும், எதிரடையாகக் காணுதல் போல் துக்கத்திற்கு எதிரடை சுகமிருத்தல் வேண்டும். அந்தந்த துக்கங்களுக்குரிய உற்பவங்களைக் கண்டறிவோமானால் நித்திய சுகவாழ்க்கைத் தோன்றும்.

அந்த நித்திய சுகத்தை சருவ சீவர்களுக்கும் அளித்து அதில் நாமும் சுகமடைதல் மிக்க சுகமல்லவா என்றார்.

**மணிமேகலை**

தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயிரோம்பு
மன்னுயிர் முதல்வனறமுமிதென்றான்.

**வீரசோழியம்**

ஆருயிர்களனைத்தினையும் காப்பதற்கே அருள் பூண்டா
லோருயிர்க்கே உடம்பளித்தால் ஒப்புரவிங்கென்னாகும்.

இறைவா, அவ்வகை சுகத்தை இதுகாறுங் கண்டவர்களுமில்லை கேட்டவர்களுமில்லை, அனுபவித்தவர்களும் இல்லை. ஆதலின் தாங்கள் வீணில் அலைந்து சுகதேகத்தைப் பாழாக்கிக்கொள்ளாமல் இத்தேசராட்சிய பாரத்தைக் கைக்கொண்டு சுகவாழ்க்கை அடைய வேண்டுமென வணங்கினான்.

சோதிரரே, சருவ உயிர்களின் ஈடேற்றத்தை நாடி வெளிவந்தயான் தன் சுகத்தைப் பார்த்தல் துக்கமாதலின் என் துறவை தடுக்காதேயுங்களென்று வேண்டினார்.

அதைக் கேட்ட விம்பாசார அரசன் மனங்கலங்கி சருவசீவர்களின் சுகத்தைக் கருதி சக்கிரவர்த்திப் பீடத்தைத் துறந்ததும், மனைவியைத் துறந்ததும், அருமந்த மகவைத் துறந்ததும் பெரிதல்ல எக்காலமும் ஆனந்த நிலையிலிருந்த சுகத்தை எவ்வகையில் துறந்தீரென்று கதரி உலக இன்பத்தை தவிர்த்த (பாலி மொழியால்) அவலோகிதா அவலோகிதா என்றேற்றி தாங்கள் செல்லுமிடத்தையேனுஞ் சொல்லவேண்டுமென்று பணிந்தான்.

சோதிரரே, நானோரிடத்தைக் கருதி செல்லாமல் சுகவாழியைக் கருதி செல்லுகின்றேன். என்னை மறுக்காதீரென்று வெளியேறுங்கால் அவலோகிதரை லர் விருத்தன் மறுத்து தாம் வெளியேறிய சங்கை யாதென உசாவினான்.

அவலோகிதர் பெரியோனை நோக்கி ஐயன்மின் தாமடைந்துள்ள மூப்புநிலைக்கு நரை திறை சான்றாயினும் ஏதேனும் பிணிகண்டுளதோ என வினவினார்.

அவலோகிதா, எனக்கு உலகந் தெரிந்தவரையில் உடல் பிணி ஒன்றும் அறியேனென்றான்

பெரியோய், உமக்கு மனைவி மக்கள் உண்டா இல்லையா என உசாவினார்.

அவலோகிதா, சிறுவயதில் என் மனைவி மடிந்துவிட்டாள், மறு மனைவியை யான் தேடிக்கொள்ளவில்லை என்றான். அருகினிற் மற்றோர் பெரியோன் அவலோகிதா,யான் பிறந்து வளர்ந்து நார்ப்பது வயதுக்குள் மூன்று விவாகஞ்செய்து மூவரும் மடிந்து நான்காவது விவாகஞ்செய்திருக்கின்றேன் உடலில் பற்பல வியாதிகளும் தோன்றி உபத்திரவப்படுகின்றேன் என்றான்.

பெரியோய், விவாக சுகத்தை விரும்புதல் மனுகுல விருத்தியின் நன்மெய் ஒன்றும், அதே சுகத்தை அதிக விருப்பத்தால் பிணிகண்டு மடிக்குந் தின்மெயொன்றுமாகிய இருவினைச்செயல்கள் ஒருச்சுக இயல்பில் தோற்றுகிற தல்லவா என்றார்.

அவலோகிதா, எனது நேயர் மனைவியற்று ஒருமெயுற்று வியாதியற்றிருக் கின்றார். யானோ மாறா மனைவிகளைக் கொண்டு தீராப்பிணிகளுங்கண்டு தவிக்கின்றேன் என்றான்.

பெரியோய், தமக்குத் தோன்றியுள்ள பிணிகள் தம்மால் தோன்றியதா தானே தோன்றியதா என்றார்.

அவலோகிதா, என்னனுபவச் செயலால் இப்பிணிகள் யாவும் என்னால் தோன்றியதன்றி தானே தோற்றியதல்லவென்று உறுதியாகக் கூறுவேனென்றான்.

பெரியோய், உம்மால் தோற்றியதற்கு ஆதாரமென்னை என்றார். அவலோகிதா , யான் மாறிமாறி செய்து கொண்ட விவாக சங்கமச் செயல்களால் காலத்திற்குக்காலந் தோன்றிய பிணிகளின் உற்பவத்தைக் கொண்டும் என் மீறிய சேர்க்கைச் செயல்களைக்கொண்டு இப்பிணிகளின் உற்பவங்களுக்கு நானே காரணமென்றேன் என்றான்.

பெரியோய், உம்மால் தோன்றியப் பிணிகளின் உற்பவம் உணர்ந்தும் அஃது தோன்றாமல் கார்த்துக்கொள்ளாத காரணமென்னை என்றார்.

அவலோகிதா , அதி மோக இச்சையே அதற்குக் காரணமென்றான்.

பெரியோய்,தாங்கள் மோக இச்சையை அதிகரிக்கச் செய்து கொண்டபடியால் பிணி அதிகரித்துப் பீடிக்கப்படுகின்றீர். தமதருகிருக்கும் பெரியோர் மோக இச்சையை அதிகரிக்கவிடாமல் கார்த்துக் கொண்டபடியால் பிணியற்று சுகித்திருக் கின்றாரல்லவா என்றார்.

அவலோகிதா , எங்களுக்குரியச் செயல்களே எங்கள் அனுபவத்தில் விளங்குகிறதே என்றான்.

சக்கிரவர்த்தித் திருமகன் மற்றும் பிறந்த முதல் பிணி அறியேனென்ற பெரியோரை நோக்கி ஐயன்மின், தமது மனையாள் இறந்தபின் மறு மனையாளைத் தேடாதக் காரணமென்னை என்றார்.

அவலோகிதா, மடிந்த மனைவியின் குணமும், வடிவும், மிருதுவான வார்த்தையும் மற்றப் பெண்களிடம் காணாமெயே காரணமென்றான்.

அதனைக்கேட்ட தம்மராசன் காரணத்திற்குத் தக்கக் காரியங்கள், ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியாய் விளங்குவதை முற்றும் அறியவேண்டுமென்று வெளியேறுங்கால் பெரியோர்கள் வணங்கி அவலோகிதா, தமது சித்திர மாளிகையின் முன்பு இரத, கஜ, துரக பதாதிகள் யாவும் தமது ஏவலுக்கு எதிர்பார்த்திருக்க செந்தாமரைப்பாதம் புழுதியில் பட நடப்பதைக் காண என்னக் கொடுமெய் செய்தோம் இறைவனே என்று இறைஞ்சி விம்பாசாரன் பரிகளிலேனும் ஏறிச்செல்ல வேண்டுமென்று வருந்தினார்கள்.

ஒடுக்கத்திற்கு ஓடேந்தி விசாரிணையில் வெளியேறிய எமக்குப் பரியும் பளுவாம் என்றோதி விம்பாசாரன் நகரங் கடந்து காடுகளுள் நுழைந்து ஓர் மலையடிவாரத்தில் வருங்கால் அரவங்காட்டாது அடிவாரத்து ஒளிந்திருந்து வழிப்போக்கரை அடித்துப் பரிக்கும் அரக்கர்கள் ஐவர் அப்பனை வழிமறித்து அவர் முகத்தைக்கண்டு தங்கள் கொறூரச்செயல்களைத் தவிர்த்தும் அரசருக்குள் ஈகையில் மிகுத்தவராதலின் தியாகராயர் என்றும், தனத்தின் மிகுதியால் செல்வராயர் என்போர் செவியிலிருந்த பொற்குண்டலத்தைக் கழற்றிக்கொண்டு செப்புக் குண்டலத்தை செவியில் அணிந்துவிட்டுப் போய்விட்டார்கள்.

**நிகழ்காலத்திரங்கல்**

ஒப்பற்ற குண்டலத்தை ஊழரக்கர் வவ்வி / செப்புகுண்டலமிட்ட செய்தி அதிசயமே.

**அசோதரை நெஞ்சுவிடு தூது**

*காதிணையிற் பூண்ட கனச் செப்புக் குண்டலங்க / டீதறவே காட்டும் இருதிண்புயமுமோதவிட

தன்மராயன் தன் செவியிலிருந்து அரக்கர்கள் கழட்டிக்கொண்டது பொற்குண்டலமென்றும், அவர்களணிந்தது செப்புக்குண்டலம் என்றுங் கருதாது பின் சென்று பார்த்தபோது மறைந்துவிட்டார்கள். மற்றும் புறங்களில் பார்க்குங்கால் அரக்கர்களால் பொருட்களை அபகரித்துக்கொண்டு அடித்துக் தொன்றுப் போட்டுள்ளப் பிணங்களே மிக்கக் காணப்பட்டது. அவைகளைக்கண்ட சித்தார்த்தர் மனங்குழைந்து

உயிரைவதைத்து பொருள் சம்பாதிக்கத்தக்க மக்களும் உலகத்தில் உண்டோவென்று சொல்லிக்கொண்டு காடுமலைகளைக் கடந்து ஓர் சிற்றார் சேர்ந்து பிச்சையேற்றுண்டு சற்றளைப்பாறி அவ்வூரிலுள்ளோர் அதிக ஆடம்பரமும் கூச்சலும் இல்லாமல் தனதன் வேலைகளில் அமைதியற்றிருப்பதினால் அற்றலுற்றிருப்பதைக் கண்ட அவலோகிதர் அவ்விடஞ் சிலகால் தங்க வேண்டு மென்றெண்ணி ஓர் விருத்தக் கிழவி வாசமாயிருக்கும் சிறு குடிசையில் தங்கினார்.

**நிகழ்காலத்திரங்கல்**

*அழகன் திவாகரம்மண்ணலருள் வடிவன் / கிழவிச்சிறு குடிலங்காண்டல் அதிசயமே.

**வீரசோழியம்**

*கொய்தினைகாத்துக் குளவியடுக்கத்துப் பொய்தற் சிறுகுடி வாரனியையா – நலம் வேண்டின்

*ஆயதினை காத்து மருவியடுக்கத்தெம் ஆய்தற் சிறுகுடி வாரனியைய - நலம் வேண்டின் மென்றினைக்காத்து மிகுபூங்கமழ் சோலைக் குன்றச்சிறுகுடி வாரனீயைய - நலம் வேண்டின்

அவ்விடந்தங்கி இந்த சிற்றூர் அமைதியினால் எவ்வளவாற்றலுற்றுளதோ அதைப்போன்ற நிலையே நமக்கு சுகநிலையாகுமென்று எண்ணிசீவராசிகளின் உற்பவங்களையும் அதனதன் முடிவுகளையும் பட்சிகளின் தோற்றங்களையும் அதன் ஒடுக்கங்களையும் மக்கட் பிறப்புகளையும் அவர்கள் மரணங்களையும் பமியின் மீது நீர்க்கோமேதுவால் பற்பண்டுகளும், கிரநமிகளு பட்சிகளும், மிருகங்களும், மக்களுந் தோன்றும் நிகழ்ச்சிகளையும் நீரின் ஏதுவாலும், அக்கினியின் ஏதுவாலும், பிணிகளின் ஏதுவாலும், விஷங்களின் ஏதுவாலும் மறைதலின் நிகழ்ச்சிகளையும், பூர்த்தியாக அறிய வேண்டிய நோக்கத்தால் மீளவுஞ் சிறுகுடியில் தங்கி அவ்விடமுள்ள சீவராசிகளின் குணாகுணங்களை ஆராச்சி செய்வதும்,

மலையடிவாரங்களில் சென்று அவ்விடமுள்ள சீவராசிகள் உற்பவ ஒடுக்கங்களைக் காண்பதுவும், மலை சிகரங்களில் ஏறி அவ்விடத்திய தோற்ற ஒடுக்கங்களைக் கண்டறிவதுமாகியச் செயல்களில் பட்சிகள் தன்தன் கூட்டத்தை நாடி சேருவதும், மிருகங்கள் அதனதன் உருவங்களை நாடி அணுகுதலும், மனுக்களில் சுராபானம் அருந்துவோரிடம் சுராபான இச்சை யுள்ளோரால் அணுகுதலும், கள்ளச் செய்கையுள்ளோர்பால் கள்ளவுள்ள முள்ளோர் கலப்புருதலும் மூர்க்கச் செய்கைகளுள்ளோர்பால் மூர்க்கவிச்சை யுள்ளோர் அணுகுவதுமாகிய சேர்க்கைகளுடன்;

மனிதவுருவங் கண்டுங் குரங்குகளுக்குரிய செயல்களையும், குரங்குருவங் கண்டும் மனிதருக்குரிய விவேகங்களையும், மனித உருவங் கண்டும் நாயிக்குரிய பொறாமைக் குணங்களையும் நாயுருவங் கண்டும் மனிதனுக்குரிய விவேகச் செயல்கனளயம் பிரித்துணர்ந்து, மனத்தின் ஆசைப் பெருக்கமம் கோபப்பெருக்கமும் கருமத்தோற்ற ஒடுக்கங்களுக்குக் காரணமாயிருப்பதென்று கண்டு உள்ள ஏதுக்களுக்குங் காரணந் தானாகவும், உள்ள நிகழ்ச்சிகளுக்குங் காரியந் தானாகவும் விளங்குதலால் உள்ள நிலையை அறியவேண்டிய உசாவலால்;

தன்னை நோக்கி உள்ளத்தெழும்பும் ஆசையை எழவிடாமல் நசித்தும் தோற்றும் ஆசையை உள்ளத்திற் கொள்ளவிடாமல் அகற்றியும், உள்ளத்தில் எழுங் கோபத்தை எழவிடாமல் நசித்தும், தோற்றத்தால் வருங்கோபங்களை சாரவிடாமல் அகற்றியும், வந்தச் செயல்களினால் மனதுக்குண்டாகுஞ் சொற்ப ஆறுதலை உணர்ந்து;

யாவம் உள்ளச்செயலென்றறிந்து காமக்கொதிப்பை எழவிடாமலும், தோற்றுங் காமத்தை எண்ணவிடாமலும் அகற்றுங்கால் உதிரத்திரட்சியின் தணலே காமாக் கினியாக வீசுதலை உணர்ந்து, புசிப்பை அடக்க வேண்டும் என்று எண்ணி தான் சிறிதுகாலந் தங்கியிருந்த சிறுகுடிலையும் விட்டகன்று சிலக்குன்றுகளேறி வருங்கால் அவ்வழியாக ஓர் ஆட்டிடையன் மந்தைகளை மட்டும் போது பாதையில் ஓர் குட்டி தவறி விழுந்து காலுடைந்துவிட்டபடியால் நடக்கவியலாது நொண்டிக்கொண்டு மெதுவிற்போகவும் இடையன் ஓட்டும் பயத்தால் தாயாடானது முந்தி ஓடுவதும்

நடக்கமாட்டாமலிருக்குங் குட்டியிடம் அம்மே என்று ஓடிவருவதும் மறுபடியும் இடையன் ஓட்ட ஓடுவதுங் குட்டி தவிழ்ந்து கொண்டு தவிப்பதும் தாயாடு திரும்பி திரும்பி அம்கே வருவதுமாகியப் பரிதாபத்தைக் கண்டுவரும்;

சக்கிரவர்த்தித் திருமகன் இதங்கி ஆட்டின் குட்டியை வாறி மார்பில் அணைத்துக்கொண்டு தாய் ஆட்டை நோக்கி அம்மா உன் பிள்ளையை வீட்டுவரையிலுங் கொண்டுவந்துவிடுகிறேன் நீ பயப்படாமல் நடவென்று கொண்டுபோகுங்கால்;

இடையன் அருகில் வந்து பரிதாபத்தால் செம்மறிக்குட்டியை மட்டிலும் சுமக்கும் நீர் என்னால் சுமக்கமுடியாத இக்கம்பளிமூட்டையையும் வேண்டுமென்று அப்பன் தோளில் ஏற்றிவிட்டுப் போய்விட்டான்.

தம்மராசன் செம்மறிக்குட்டியையும், தோற்பை மூட்டையையும் நெடுஞ்தூரஞ் சுமந்துக்கொண்டுபோய் ஆட்டிடையன் வீட்டண்டை இரக்கிய போது அவன் மனைவி கண்டு அடப்பாவி யாரோ பெரியவற்போல் காண்கின்றது அவரிடஞ் சுமையை ஏற்றியது தன்மமல்லவே என்று அலரினாள். அப்போதுதான் இடையனுக்கும் பயமுண்டாகி வணங்கிக்கொண்டான். சித்தார்த்தரும் இடையனை நோக்கி உனக்கும் உன் பிள்ளைகளுக்கும் உண்டாகியத் துன்பம் போல் உன் ஆடுகளுக்கும் உன் ஆட்டின் குட்டிகளுக்கும் உண்டாகுந் துன்பங்களைக்கருதிப்பாரென்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.

தனிவழிப் போய்ப் பலதேசங்களையுங் கடந்து ஓர் மலைக்குகையில் சேர்ந்து நாளுக்கு நாள் புசிப்பைக் குறைத்துக்கொண்டே வந்ததினால் தேகத்துள்ள என்புகள் யாவுந் தோன்றக் கண்பஞ்சடைந்து சில தூரம் நடந்த ஆயாசத்தினால் மெய்மறந்து ஓர் மரத்தடியில் வீழ்ந்துவிட்டார்.

அவ்வழியாகத் தன் புருஷனுக்குக் கஞ்சி கொண்டுபோகும் ஓர் பெண்ணானவள் அப்பனை நெருங்கிப் பார்த்துவிட்டு தன் புருஷனிடஞ் சென்று ஐயே, சில காலங்களுக்கு

முன் நமது ஆட்டுக்குட்டியையும், மூட்டையையுஞ் சுமந்து வந்த பெரியவர் போல் ஒருவர் மிக்க ஆயாசத்தால் விழுந்து கிடக்கின்றார் பார்ப்போம் வாருங்கோள் என்றழைத்தாள்.

இருவருஞ்சென்று விழுந்திருப்பவரை உற்றுநோக்கி செம்மறிக்குட்டியை ஏந்தி வந்தப் பெரியவரென்றே பதரி எடுத்து மார்புடன் அணைத்து தன் மனைவி தனக்குக் கொண்டு வந்த பாற்கஞ்சியை சிறுக சிறுக ஊட்டினான்.

**அசோதரை நெஞ்சுவிடு தூது**

இடையன்பாற் சென்ற விருசெம்மலூனத் தொடருமறிக் குட்டியுடன் தோற்பை - எடுத்து கம்பளந்தண்டாதிக் கையேந்திக்கொண்டு விம்புமடியாதை மிகுநடந்து - நம்புந் தகைமெயுடையோராய்த்தக்க பணி செய்தே யகமுமுகமு மிகமலர்ந்து - சுகமாய்
செம்மறிதன் குட்டி திமிரகம்பளமளித்து நம்புமெய்யுள்ளன்பை நாட்டி - நம்மி.

**இடைக்காட்டு சித்தர் பாடல்**

மும்மலநீக்கிட முப்பொறிக்கப்பாலு / முப்பாழ் கடந்த வப்பாலில்
செம்மறி ஒட்டிய வேலையை மட்டுஞ் / சிந்ததையில் வைப்பீரே கோனாரே

**நிகழ்காலத்திரங்கல்**

*பைம்பொற்கலை கொண்டு பாராளுங்கையில் செம்மறியை ஏந்துஞ் செய்கை அதிசயமே. செம்மறியுந் தோற்பையுஞ் சேர்த்தகம்பளமேந்தி வம்மறியனில்லி வளித்தத்திசயமே பாரமிகவேந்தி படியில் மிக நடந்து, தாரமிகு அன்பை தரித்தது அதிசயமே.

*செங்கோலை ஏந்துங்கை செம்மறியை ஏற்ற நன்றி பொங்கும் பாற்கஞ்சருந்தப்போற்றல் அதிசயமே.

*போற்றியவரளித்தப் புன் புசிப்பையேற்று வாற்றலுறு மீகை அளித்த ததிசயமே.

அதனை அருந்திய அப்பன் இரண்டுநாழிகைக்கு மேல் கண்விழித்துப் பார்த்து ஆயாசந் தெளிந்த பின் நீவிர்யாவரென்று உசாவினார். அவர்களிருவரும் ஆனந்தங்கொண்டு ஐயே, தாங்கள் ஒருகால் எங்களாட்டுக்குட்டியை சுமந்துவந்தீர் அந்த நன்றியை யாங்கள் மறவாமல் தங்களுக்குப் பால்கஞ்சி சுமந்து வந்தோமென்றார்கள். அதைக் கேட்ட தம்மராஜன் தன்னறச்செய்கைத் தன்னைக் கார்த்ததை எண்ணி நகைத்து அவர்கள் இருவரையும் நோக்கி நான்செய்த நன்றி உங்களுக்குப் பெரிதல்ல நீங்கள் எனக்கு உண்டி கொடுத்து உயிர்கொடுத்த நன்றியை உலகம் எக்காலும் மறக்காதென்று வாக்களித்து அதே இடத்தில் சிலகாலந்தங்கி அவர்கள் போஷிப்பால் தேகத்தைத் திடப்படுத்திக்கொண்டு இனி தேகத்தை ஒடுக்குவதில் பயனில்லை மிதாகாரம் புசித்துக் காமநிலையைக் கருக்க வேண்டி,

**5. சித்தார்த்தர் பஞ்ச விந்தியத்தை வென்று இந்திரரும்**

**மெய்கண்டு புத்தருமாய காதை**

உள்ளக்கருவிக் காணாதிகளின் தோற்றங்களையும், ஒடுக்கங்களையும் ஆராய்ச்சிசெய்ய ஆரம்பித்தார். காரணம் அசத்தில் காணும் புறத்தோற்றங்கள் யாவுந் தோன்றுதலும் மறைதலும் பிறத்தலும் இறத்தலுமாகியச் செயல்களில்,

இன்று நாளை என்னுங் காலக்கணிதங்களும் பொய்த் தோற்றமாக விளங்கியபடியாலும் தோற்றிக்கொண்டே எழும்பும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்குட்சணம் அழிந்துக்கொண்டேவருஞ் சுவாபமென்றறிந்த படியாலும்;

உள்ளத் தோற்ற ஒடுக்கங்களாகும் இராகத்துவேஷம் மோகங்களென்னும் காம வெகுளி மயக்கங்களின் உற்பவங்களையும் அதன் செயல்களையும் அச்செயல்களினால் உண்டாகுந் துன்பங்களையும் அழிவுகளையும் நாளுக்குநாள் உள்ளுணர்ந்து வருவதுடன்;

தேகத்தால் ஊறு பேதங்களையும், கண்ணால் வருணபேதங்களையும், நாவால் சுவை பேதங்களையும், மூக்கால் நாற்றபேதங்களையும், செவியால் ஓசை பேதங்களையும் உள்ளுணர்ந்து மூக்கினால் நாற்றமறிதற்கு மண் காரணமென்றும், நாவினால் சுவை அறிதற்கு நீர் காரணமென்றும், கண்ணொளியால் பார்வை அறிதற்கு தீ காரணமென்றும், செவியால் சத்தமறிதற்கு ஆகாயங் காரணமென்றும், தேகத்தில் உணர்ச்சி அறிதற்கு வாயு காரணமென்றும் அறிந்து கொண்டதன்றி தீயும், ஆகாயமும், மனவிரிவுக்கும் மடிவுக்குங் காரணமென்றும் நீரும், காற்றும், மண்ணும் மூச்சுக்குக் காரணம் என்றுமுணர்ந்து மூச்சானது கழுத்தைப் பீடமாகக் கொண்டு பீஜத்திற்கும் நாசிக்கும் மாறலிடுவதும், மனமானது இருகண் மத்தியையும் மூக்கின் முனையையும் பீடமாகக்கொண்டு விரிந்து மடிவதுமாகிய செயலில் பாசபந்தப் பலபற்றுக்களால் மனம் விரிந்து உலகமாதலும், சாந்தம், ஈகை, அன்பு, பெருகி சிரேஷ்டநிலை தோற்றும் உள்ளுளவையும் நாளுக்குநாள் உணர்ந்து பிறப்பு, பிணி, மூப்பு, மரணமென்னும் நான்கு வாய்மெயின் துக்கம், துக்கோற்பவம், துக்கோற்பவக் காரணம், துக்க நிவாரணமாகும் நான்குமார்க்கங்களை அறியவேண்டி பூர்வம் முத்தாநதி என்று வழங்கி தற்காலம் கயாவென்று வழங்குமிடத்தில் தனது விவாககாலத்தில் உலக்கைத் தடியை ஊன்றிப் பிண்டிமரமெனத் துளிர்த்து ஐங்கிளைப் பிரிந்து வளர்ந்திருந்த பிண்டி மரத்தடியில் உட்கார்ந்துகொண்டு இராகத்துவேஷ மோகங்களென்னும் முக்குற்றங்களுக்குக் காரணச்சுழலாகும் இராசதம், தாமதம், சாத்துவிகமென்னும் முக்குணப் பிரிவுகளும் இடைகலை, பிங்கலை, சுழி முனை என்னு முச்சுவாச பிரிவுகளுமாகிய ஆறுள்ளங்க முகங்களை இருவிழி மத்திய ஓரங்கமாகும் உள்விழி பார்வையில் நிறுத்தி கண்பார்த்தவிடத்தில் மனம்போதலும், செவி கேட்டவிடத்தில் மனம்போதலும், நாவு உரிசித்தவிடத்தில் மனம் போதலும், மூக்கு முகர்ந்தவிடத்தில் மனம்போதலும், தேகஞ் சுகித்தவிடத்தில் மனம்போதலுமாகியச் செயல்களுக்குரிய சுவை, ஒளி, ஊறு, வோசை, நாற்றமிவற்றினிலையாம்,

பொறிவாயல்கள் ஐந்தினையுமவிக்கும் இடைவிடா அந்தர்முகப் பார்வையின் நிரந்தர பழக்கத்தால் மனமென்னும் பெயரற்று நாதவொலியுற்று பேரறிவாம் இரவுபகலற்றவிடந் தங்கி ஆனந்த நித்திறையடைந்து நித்திய *சுகமுற்று பங்குனிமாத பௌர்ணமியில் காமனென்னும் பெண்போக இச்சையை

யும் சிலேத்துமக் கபங்கண்டுக் கொல்லுங் காலனென்னும் மரணத்தையுஞ் ஜெயித்துக்கொண்டார்.

**குறள்**

*பொறிவாய லைந்த வித்தான் பொய்தீ ரொழுக்கம் / நெறிநின்றார் நீடு வாழ்வார்.

**அசோதரை நெஞ்சுவிடு தூது**

முறவாலுயர்வா லுனைப்போ லெனக்குப் பிறிதாருளரதனாற் பேணி - யறவாழி,
யான குமரதேவன்பால் அன்புடனே தூது செல்ல, நான் கருதி உன்பானவிற்றினேனி யான் புகலு. மவ்விறைவனென்று மமருமிடஞ் சொல்லக்கேண் , மௌவன்மணக்கு மலர் சோலை - செவ்விதரு.
முந்தாந்திசூழ் முதுகிரியாமாங்கு நீ, வித்தாரமாய்ச் செல்லும் வேளைதனிற் - கத்தும்.

**சித்தாந்தத் தொகை**

அருணெறியால் பாரமிதை யாறைந்து முடனடக்கிப்
பொருள் முழுதும் போதியின் கீழ் முழுதுணர்ந்த முநிவரன்ற,
னருள் மொழியானால் வாய் மெய் அறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியாம பிறநூலு மயக்கருக்கு மாறுளதோ.

**திரிமூலர் திரி மந்திரம்**
அற்றார் பிறவியவரிரு கண்களை / வைத்தார் புருவத்திடையே பார்க்க ஒத்தேயிருக்க உலகெல்லாந்தெரியும் / எத்தாலுஞ் சாவில்லை இறைவனாமே.

**பாம்பாட்டி சித்தர்**
ஒங்காரக்கம்பத்தினுச்சிமேலே / அதனுள்ளும் புரம்பையும் அறியவேண்டும் ஆங்காரக்

கோபத்தை அடக்கிவிட்டே / ஆனந்த வெள்ளத்தைத் தாக்கிக்கொண்டே தூங்காமல் தூங்கியே சுகம் பெறவே / தொந்தோம் தோந்தோமென் றாடாய் பாம்பே

**மணிமேகலை**

மாதவ ருரையிடங் காட்டிய மறையோன் சாதுயர் நீக்கிய தலைவன் தவமுனி காமனைக் காய்ந்தனை காலனைக் கடிந்தனை.

**சீவக சிந்தாமணி**

ஒன்றாய வூக்கவேர் பூட்டி யாக்கைக் கெறுவுழுது
நன்றாய நல்விரதச் சென்னல் வித்தி யொழுக்கநீர்
குன்றா மற்றாங் கொடுத்தைம் பொறியின் வேலிகாத்தோம்பின்
வென்றார் தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணோருலகின்றே

*தருமன் றண்ணளி யாற்றன தீகையால் வருணன் கூற்றுயிர் மாற்றலில் வாமனே.

இதையே பற்றற்ற அநித்தியவனாத்தும் நிருவாணநிலை என்பர். இந் நிலையால் நாம ரூபம் இரண்டுமற்று புளியம் பழம் போலும், ஓடுபோலும் பயிரங்கமும் அந்தரங்கமும் வேறாயவன்று முதல் சித்தார்த்தி என்னும் நாம் மற்று புத்தரென்று அழைக்கப்பெற்றார். உலர்ந்த உலக்கைத் துளிர்த்த மரத்தடியில் உட்கார்ந்தபடியால் பிண்டி மரமென்றும், மும்மல சோகமற்றபடியால் அசோகு மரமென்றும், அரசனே மரத்தடியில் உட்கார்ந்தபடியால் அரசன் மரமென்றும், மரத்தடியிலிருந்தே சத்திய தன்மத்தைப் போதித்தபடியால் கருங்கற் போன்ற மரமாதலால் கல்லால மரமென்றும் வழங்கிவந்தார்கள்.

**சிலப்பதிகாரம்**

பணையைந் தோங்கிய பாசிலைப் போதி, யணிதிகழ் நீழலறவோன்றிருமொழி

**சீவகசிந்தாமணி**

காசறு துறவின் மிக்கக் கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யனமுன்னி
யாசறு நடக்கு நாளு ளைங்கணைக் கிழவன் வைகிப்
பாசறை பரிவு தீர்க்கும் பங்குனி பருவஞ் செய்தான்.

**யாப்பருங்கலைக்காரிகை**

பிண்டியினீழற் பெருமான் பிடர்த்தலை, மண்டலந்தோன்று மால்வாழியன்னோய்

**சிலப்பதிகாரம்**

வெங்க நெடுவேள் வில்விழாக் காணும் , பங்குனிமுயக்கத்து பனியரசு யாண்டுளன்

**மணிமேகலை**

ஆலமர்ச் செல்வன் மதன் விழாக் கோல் கொள்
பாலமர் கொள்ளும் பங்குனிப் பருவம் காண்மினோ வெனக் கண்டு நிற்குனரும்.

பதினாறாவது வயதில் விவாகமுடிந்து இருபதுக்குமேல் புத்திரசந் தானமுண்டாகி சிலகால் தங்கி வெளியேறி முப்பதாவது வயதில் நிருவாண மற்றபடியால் அதை அநுசரித்துவந்த அரசர்களுங் குடிகளுங் தங்கள் வம்மிச வரிசைக்குப் புத்திரசந்தானம் உண்டானவுடன் முப்பதாவது வயதில் மடங்களில் சேருவது வழக்கமா இருந்தது.

**சீவக சிந்தாமணி**

ஐயாண்டெய்தி மெய்யாடி அறிந்தார் கலைகள் படை நவின்றார்
கொய் பூமாலை குழன் மின்னுங் கொழும்பொற்றோடுங் குண்டலமு
மையன் மார்கள் துளக்கின்றியாலுங் கலிமா வெகுண்டூர்ந்தார்
மொய்யாரலங்கன் மார்பற்கு முப்பதாகி நிறைந்ததே.

**நல்வழி**

*முப்பதாமாண்டளவின் மூன்றற் ஒருபொருளை / தப்பாமற்றன்னுட் பெறானாயின் - செப்புங் கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கண் / முலையளவே யாகுமா மூப்பு.

**நாயனார் குறள்**

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றை / பற்றுக பற்று விடற்கு

**மச்சமுனி ஞானம்**

நித்தமு நீசுத்தமதாய் நின்று பார்த்தால் / நின்தேகம் பிரம்மமடா நீதான் காண்பாய், சுத்தமுடன் சோதிமனக் கண்ணாலந்த / சுருதிமுடிவான சுடரொளியைக் கண்டால், பக்தியுள்ள தேகமது சுத்தமாச்சு / பாலகனே அவமிருத்து பரந்து போச்சு, வெற்றியுள்ள அஷ்டசித்துங் கைக்குள்ளாச்சு / வேதாந்த புருவமைய்ய மேவிநில்லே.

**சீவகசிந்தாமணி**

ஆசையார்வமோடைபமின்றியே / யோசை போயுல குண்ண நோற்றபி, னேசுபெண்ணொழித் திந்திரர்களாய் / தூயஞானமாய்த் துறக்க மெய்தினார்.

**அறநெறிச்சாரம்**

*இந்தியக் குஞ்சரத்தை ஞானப்பெருங்கயிற்றால், சிந்தனை தூண் பூட்டி சேர்த்தியே - பந்திப்பர்

*இம்மெப்புகழும் இனிச்சொல் கதிப்பயனும் / தம்மெத் தலைப்படுத்துவார்.

இராகத்துவேஷ மோக மூன்றையும் அறுத்து மெய்ப்பொருள் ஒன்றைப் பற்றுதல். அதாவது, உலகப் பற்றுக்கள் யாவையும் அறுத்து உண்மெய்ப் பொருளாம் ஒருபொருளைப்பற்றினபடியால்; உண்மெய் உணர்ந்த ததாகத் நிலையில் சுவர்க்க. மத்திய, பாதாள மூன்றுலகங்களையுந் தனக்குள் கண்டதன்றி செல்லல், நிகழல், வருங்காலமாகும் முக்காலங்களின் தோற்றங்களுந் தனக்குள் விளங்குவதைக் கண்ட ததாகதர் தானே கண்ட காட்சியைத் தனக்குள் அடக்கிக்கொள்ளவேண்டிய எண்ணம்

பிறந்தது. அதையே பைசாசநிலை என்றகற்றினார். இரண்டாவது உலகத் திலுள்ள சீவராசிகளின் அந்தகாரத்தை விலக்கி உள்ளொளி விளக்க வேண்டும் என்னும் ஓரெண்ணம் பிறந்தது. அதையே பிரம்ம நிலை என்றார்.

அதாவது, பூமியை உழுது பண்படுத்தி நஞ்சையாகுந் துன்பஞ் செய்தபோதிலும் அது நற்பலனைத் தருவது சுவாபமாதலின் அதுபோல் மக்கள் கூடிப் பலவகைத் துன்பந் தரினும் அதைக்கருதாது நன்மெய்செய்யுங் குணநிலைக்கு பிரமமென்னும் பெயரையும் வகுத்தார். உள்ளத்தில் எழும் அசுத்தங்களைத் தெள்ளர நீக்கி பெண்மயல் போக்கி பஞ்ச இந்திரியங்களை அடக்கிக் காமனை வென்றக் காட்சியால் ஐந்திரர் இந்திரரென்னும் பெயர் வாய்த்தது. யாதோர் ஆசிரியனும் இன்றி பிறப்பின் துக்கத்தையும், பிணியின் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையும் ஜெயித்துக் கொண்டபடியால் ஓதாமல் உணர்ந்த முனிவனென்றும் ஓர் சிறந்த பெயரை அளித்தார்கள்.

**அருங்கலைச்செப்பு**

*இந்தியத்தை வென்றான் தொடர்பாட்டோடாரம்ப / முந்து துறந்தான் முனி

**குறள்**

ஐந்தவித்தனாற் றலகல் விசும்புளார்க் கோமான் / இந்திரனே சாலுங்கரி.
பொறிவாயி லைந்தினை யவித்தற்குப் பயன் /புத்தரெனு மிந்திரரே போதுங் சான்று.

**சீவக சிந்தாமணி**

சுறவுக் கொடிக்கடவுளொடு காலத் தொலைத்தோயெம் /பிறவியறு கென்று பிறசிந்தை யிலராகி நறவுமலர் வேந்து நறுஞ்சாந்து நிலமெழுகித் துறவு நெறி கடவுளடி தூமமொடு தொழுதார். பாலனைய சிந்தை சுடரப்படர் செய்காதி / நாலுமுடனே யறிந்து நான்மெவரம்பாகி காலமொரு மூன்று முடனே யுணர்ந்த கடவுள் /கோலமலர்ச் சேவடிகள்

கொண்டு தொழுதும் யாம் முழங்கு கடநெற்றி சுடர்முளைத் தெழுந்தேபோ /லழுங்கல் வினைகளற நிமிந்தாங்குலக மூன்றும் விழுங்கியுமி ழாது குணம் வித்தியிருந்தோய்நின் னிழுங்கில் குணச் சேவடிகளேத்தி தொழுதும் யாம் ஏத்தரிய பல்குணங்கட் கெல்லைவரம் பாகி /நீத்தவிரு ளிந்திரனை நின்று தொழுதமரர் நாத்தழும்ப வேத்திதவ நங்கையவர் நண்ணித் / தோத்திரங்களோதி துகண் மாசுதுணிக்கின்றார்.

சக்கிரவர்த்தித் திருமகன் தன்னை மறைக்கும் அஞ்ஞான இருளாம் நித்திறையை நீக்கி சதா விழிப்பாம் ஆனந்தத்திற்றாம் இரவு பகலற்ற நித்திய நிலையினின் று சருவசீவர்களின் உள்ளங்களையும் கவர்ந்து அவரவர்களுக்கு உண்டாகுந் துக்கங்களையும், அதன் உற்பவங்களையும், அதன் நிவாரணங் களையும் போதிக்க ஆரம்பித்து முதலாவது;

சௌப்பாபஸ்ஸ அகரணங் குஸலஸ உபஸம்பதா ஸஸித்த பரியோதபனங் எனும் மூன்று நீதிநெறி பேதவாக்கிய அஸ்திபார கற்களாம் பாபஞ் செய்யாதிருங்கள், நன்மெய்க் கடைபிடியுங்கள், உங்கள் இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்னும் திரிபீடங்களை வகுத்தார்.

இத்திரி பீடங்களாகும் மூன்று பேதவாக்கியங்களை ஓர் ஓலையில் எழுதாமலும், பட்டைகளில் எழுதாமலும் ஒருவர் நாவினால் கூறவும் மற்றவர் செவிகளில் கேட்டுக்கொள்ளுவதுமாயிருந்த வரையாக் கேள்வி எழுதாக் கேள்வியிலிருந்தது. இதையே சுருதி என்று கூறினர். அக்கால் சாந்தம் நிறைந்த தண்மெயாம் அந்தண நிலையையும் அன்பே ஒருருகொண்ட வடிவையுங்கண்ட குடும்பத்து அரசபத்தினிகளும் மற்றுமுள்ளோரும் அருகில் வந்து வணங்கி, அரசன் மரத்தடியில் உட்கார்ந் திருப்பதை தவிர்த்து பொற்பீடங்களை அமைத்தும், வெள்ளியாசனங்களை விரித்தும், அவைகளின் பேரில் உட்காரும்படிக் கேட்டுக்கொண்டார்கள். சிம்மமும், இரிடபமும் அருகில் தாங்கி நின்றது. நாகங்கள் தோளிலுந் தாளிலும் புரண்டு லாவிய துகள்.மயில்கள் தோகையினால் வெயில் மறைத்ததுகள். அவைகளைக்கண்ட அரசர்கள் மூன்று பூச்சக்கரக்குடைகளைக் கொண்டுவந்து உதயசூரியன் சுடர் தாங்காமல் கிழக்கு சார்பில்

ஓர் குடையும், அஸ்தசூரியன் சுடர் தாங்காமல் மேற்கு சார்பில் ஓர் குடையும், மத்தியகால சுடர்தாங்காமல் உச்சிக்கு நேர் ஓர் குடையும் ஆக முக்குடைகளை நிழற்றி போதனை வினவி நின்றார்கள்.

அதை அறிந்த ததாகதர் அன்பர்களை அழைத்து தாமரைப் புட்பங்களையுந் தாமரைக் கொட்டைகளையுங் கொண்டுவரச்செய்து பூமியில் பரப்பி அதன் பேரில் உட்கார்ந்து கொண்டு இத்தாமரையானது நீரிலிருந்தும் நீர் ஒட்டாமலிருப்பது போல் ததாகதன் உங்களுடன் கலந்திருந்தும் உங்கள் பற்றுக்களற்று உண்மெயில் உட்கார்ந்திருக்கின்றேன். அந்த நித்திய பீடத்திற்கு இவ்வனித்திய பீடம் நிலையாகா என்று உணர்த்தினார். அன்று முதல் தாமரைக்கொட்டைக்கு குருமணி என்றும், தாமரை புட்பத்திற்கு குரு மலரென்றும் பெயருண்டாயிற்று.

**வீரசோழியம்**

முடைத்தலையை மதவேழந் தடைக்கையான் வெயின் மறைக்கும்,
பிடித்துறவடைந்தார்க்கே நடக்குமென் மனனேகாண்.
தாடினை இரும்போத்து தோகையான் வெயின் மறைக்கும்,
காடகமுரைந்தார்க்கே யோடுமென் மனனேகாண்,

**வாசிட்டம்**

புண்டரிக வாதனத்தில் புத்தன் போல் உத்தரமுகனாய்.

**யாப்பருங்கலை**

வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய அறிவனை வணங்கி அறைகுவன் யாப்பே.

**அறநெறிச்சாரம்**

தாவின்றி எப்பொருளுங் கண்டுணர்ந்து தாமரை பூவின்மேற் சென்றான் புகழடியை.

**குறள்**

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் / நிலமிசை நீடுவாழ்வார்.

**தாயுமானவர்**

செங்கமல பீடமேல் கல்லாலடிக்குள்வளர் சித்தாந்த முத்தி முதலே.

குருமணி இழைத்திட்ட சிம்மாதனத்தின் மிசை / கொலுவீற்றிருக்கு நின்னை.

**சூளாமணி**

துருமணித் தாமரைக் கொட்டை சூடிய திருமணிப் பீடமுஞ் செதுக்கவாயவும்.

**நிகழ்காலத்திரங்கல்**

*திருமலராந்தா மரையுட் சேர்ந்து கல்லாலடியில் / குரு மலராங் குப்பல் குவிந்தது அதிசயமே.

**சிலப்பதிகாரம்**

திங்கண் மூன்றடுக்கிய திருமுக்குடைக்கீழ்ச் , செங்கதிர்ஞாயிற்றுத் திகழொளி சிறந்து.

கோதைதாழ் பிண்டிக்கொழு நிழலிருந்த, / வாதியிறோற்றத்து அறிவனை வணங்கி,

மலர்மிசை அடைந்த மலரடிக்கல்லதென், தலைமிசையுச்சி தானணி பொறாது.

இரண்டாவது தன்னை அடுத்த மாணாக்கர்களுக்குத் திரிபீடங்களை விளக்குவதற்காய் அவர்களையும், மற்றுமுள்ளோரையும் நோக்கி அன்பர்காள் உலகத்தில் தோற்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்கட்சணம் அழிந்து கொண்டே வருகின்றபடியால் சகலமும் அநித்தியமாயிருக்கின்றது. -

அவ்வனித்தியவாழ்வை நித்தியமென்று தாவிபிடித்திருக்கும் ஒவ்வொரு வரும் தனக்கு நித்திறை மறைத்தக்கால் மனைவி மக்கள் பந்து மித்திரர் பொற்பூஷண திரவியங்கள் யாவும் எங்கு மறைந்திருந்தது. தன்னை மறைத்த அத்திறை எத்திறம் ஒத்தது. அதே திறை இரண்டுநாள் மூடுமாயின் இறந்தானென்று தகனஞ் செய்து விடுவார்கள்.

அடுத்தடுத்து இரவும் பகலும் மறைக்காவண்ணம் இரவு பகலற்றவிடத்தே விழித்திருக்கும் நித்திய நிலையை உண்மெய் என்று கூறப்படும்.

அதுவே மெய்ப்பொருளாதலின் அம்மெய்ப்பொருளை மறைக்குந் திரைச்சீலை அடுக்குகளாகும் பொருளாசை, கோபம், கள்ளருந்தல், முறட்டுத்தனம், வஞ்சகம், பிடிவாதம், பொறாமெய், தற்புகழ்ச்சி, புறங்கூறல், ஆணவம், கெடுமதி இவைகளேயாம்.

6. **ஆதி வேத வாக்கிய விவர காதை**

நித்திறையை சுகமென்று எண்ணி நாளுக்கு நாள் திரைச்சீலைகளால் மேலும் மேலும் மூடப்பட்டுவருவானாயின் சதா நித்திறையால் இம்மெய் நசிந்து வினைக்கீடாய் மறுமெய்யெடுப்பன்

குணப்பற்றுக்களின் நிலையை அறியவேண்டின் தசவாண்டுகளுக்கு முன் கண்ணினால் கண்ட காட்சியையும், மூக்கினால் முகர்ந்த நாற்றத்தையும், செவியினால் கேட்ட ஓசையையும், நாவினால் உருசித்த சுவையையும், தேகத்தால் கண்ட சுகத்தையுஞ் சிந்திக்குங்கால் தோற்றுவித்தடங்கும் ஞாபகநிலையில் இராகத்துவேஷ மோகம் பெருகி பிறவி தோற்றத்தால் உலகம் விரிந்து உண்மெய் மறைந்திருக்கின்றது.

அந்த ஞாபகநிலையை உள்விழியால் நோக்கி இராகத்துவேஷ மோகங்களைப் போக்கி சுத்த இதய சத்துவநிலையில் நிற்பீரேல் உண்மெய் விளங்கும்.

அவ்வுண்மெய்தான் நித்தியத்திற்கு வழியாயிருக்கின்றது. உண்மெய்தான் நித்தியமாய் இருக்கின்றது. உண்மெய்தான் நிருவாண நிலையும் என்றறிந்து அமுதமருந்தாமல்,

இம்மெய்மறைவதற்கும் மறுமெய் தோற்றுவதற்கும் போவா பற்றி நிற்கின்றீர்கள். அப்பற்றுக்களே பிறவிக்குக் காரணம் என்னப்படும்.

அதாவது மண் பெண் - பொன்னென்னும் பொருட்களைத் தாவும் இராகத்துவேஷ மோகமென்னும் இதயப்பற்றுக்களேயாம்.

அவ்விதய உற்பவம் மூன்று வகையாம். அதன் தோற்ற நிலைக்கு குணி என்றும், தோற்றி வைக்கும் நிலைக்கு குணமென்றும் பெயர்.

**பின்கலை நிகண்டு**

தாமதம் நிறைபேருண்டி சாம்புதல் சோம்புமூரி / காமமே நீதிகேடு கண்ணுறக்கம் பொச்சாப்பு நாமசஞ்சலமே தஞ்சம் நாட்டலாம் இம்மூப்பாலும் ஆமலி உடனேமற்ற மெலிவொடு சமனுமாமே. தானமே தவமே மற்ற தருமம் பேணுதலினோடு /ஞானமே கல்வி கேள்வி நலனிவை

தெரிதரானே

ஈனமொன்றில்லார் வைத்த விராசத குணங்களென்ப ஊனமின் முனிவன் முன்னாள்

உரைத்திடு முண்மெய்தானே.
ஏற்ற சாத்துவிதத்தோடே இராசதந்தா மதங்கள்
ஆற்றமுக் குணங்களாகும் மதிற்சத்து விதமே ஞானம்
சாற்றிடு தவமே மெய்மெய் சாலநல்லருளுண்டாதல்
போற்றிய வாய்மெயோடைம் புலனடக்குதலுமாமே.

இதில் பெருந்திண்டி, பேராசை, சோம்பல், கடுஞ்சினம், காமம், நீதிகேடு, பெரு நித்திறை, பொய், தன் முயற்சியின்றி பிறரை கெஞ்சுதலாகும் ஊக்கமற்ற தாமதகுணம் என்னப்படும்.

ஈகை, விரதம், தருமம் பேணுதல், அறிவின் விருத்தியை நாடல், கேள்வி முயலல், நன்று தீதென்று உணரலாதி முயற்சியை இராசதகுணமென்னப்படும்.

ஞானம், தவம், மெய்யுணர்ச்சி, அருள், வாய்மெய், ஐம்புலனடக்கலாதி நன்மெய்க் கடைபிடித்தல் சத்துவகுணமென்னப்படும்.

உலகதோற்றத்தில் மகிழ்ந்து இவன் மித்துரு அவன் சத்துருவென்றும், இவன் உன்னியன் அவன் அன்னியனென்றும், இவன் தாழ்ந்தவன் அவன் உயர்ந்தவன் என்றும், இவன் செல்லுமெயுடையவன் அவன் வருமெய் உடையவன் என்றும் ஒன்றுக்கொன்றை பேதிக்காமல் சகல சீவராசிகளுக்கும் உண்மெய் ஒன்று என்று உணர்ந்து சீவகாருண்யம் உடையவர்களாய் பொருமெய் என்னும் பொக்கிஷத்தைச் சேர்த்து சுகவழியைக் கண்டடையுங்கள்.

அச்சுகவழி யாதெனில், மாறாப்பிறவியில் சுழன்று மேலும் மேலுந் துக்கத்தை அதிகரிக்கச் செய்யுந் தீவினைகள் பத்தையும் அகற்றி நல்வினையாம் பத்துப் பாதையில் நடத்தல்;

அதாவது, அவாவின்மெய், அருள், தன்னை அறிதல் இம்மூன்றையும் மனத்தால் அனுசரிக்கவேண்டியது.

இனியவை கூறல், உண்மெய் கூறல், பயனுள கூறல், அறங்கூறல் இந்நான்கையும் நாவினால் அனுசரிக்கவேண்டியது.

பெரியோரை வணங்கல், தானமீதல், தவபீடமிடுதல் இம்மூன்றையும் தேகத்தால் அனுசரிக்க வேண்டியது.

பாரதம் தசரதமென்னும் பத்துப் பாதையையே சுகவழி என்றும் முத்திக்கேகுந் தசபாரமிதம் என்றுங் கூறப்படும்.

**மணிமேகலை**

தீவினை என்பதியாதென வினலி / னாய் தொடி நல்லாயாங்கத்து கேளாய்,
கொலையே களவே காமத்தீவினை / யலையா துடம்பிற தோன்றும் மூன்றும்,
பொய்யே குறளை கடுசொல் பயனில் / சொல்லே நாவில் தோன்றும் நான்கும்.
வெஃகல் வெகுளல் பொல்லாக்காட்சி / என்றுளந்தனினிருப்பன மூன்றும் என,
பத்துவகையால் பயன்தெரி புலவ / ரித்திறம்படார் படர்குவராயின்,
விலங்கும் பேயும், நரகருமாகிக் / கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர்.
நவ்வினை என்பதி யாதென வினவில் / சொல்லிய பத்தின் தொகுதியு நீத்துச்
சீலந்தாங்கி தானந்தலை நின்று / மேலெென வகுத்த ஒருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமருமாகி / மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் நுகர்வர்.

இச்சுகவழிக்குத்தடைகளாகும் தீயச்சிந்தை, பேராசை, கோபம் இம் மூன்றையும் மனத்தால் எழவிடாமல் அடக்கவேண்டியது.

கொலை, களவு, பயனற்றச் செய்கை இம்மூன்றையுந் தேகத்தால் செய்யாமல் இருக்கவேண்டியது.

இவ்வகையாக மனத்தால் செய்யுந் துர்க்கருமம் தேகத்தைப் பற்றிக் கொண்டும் தேகத்தால் செய்யுந் துர்க்கருமங்கள் மனதைப்பற்றிக்கொண்டும் துக்க விருத்தியை அதிகரிக்கச்செய்து, அநித்தியமாகிய மரணத்திற்குக் கொண்டு போகும் வழியைத் திறந்துவிடுவதுமல்லாமல் பிறவிக்கும் ஓர் வித்தாயிருக்கின்றது.

தேகத்தால் செய்யும் நற்கருமங்கள் மனதைப் பற்றிக்கொண்டும், மனதால் செய்யம் நற்கருமங்கள் தேகத்தைப் பற்றிக்கொண்டும், ஒன்றுக்கொன்று கலந்து அன்பையும் ஆற்றலையும் பெருக்கி உண்மெயாகிய நித்திய வழியைக் திறந்துவிடுவது மல்லாமல் பிறவிக் கேதுவாம் வித்தையும் அழித்துவிடுகின்றது

தன்னை அறிந்தவன் எவனோ அவன் சுகப்படுவான். உண்மெய்யை உணர்ந்தவன் எவனோ அவன் நித்தியமடைவான்,

மதுரமும் பெருமெயுமானது உண்மெய், துன்பசாகரத்திலிருந்து உங்களை விடுவிக்கச் செய்வதும் உண்மெய், உலகபாசங்களினின்று விடுவிக்கச் செய்யும் இரட்சகரும் உண்மெய் என்றறிந்துக்கொள்ளுவீர்களாக. நீங்கள் உங்கள் உண்மெய்யை அறிந்துக்கொள்ளுவதற்கு சக்தியற்ற வர்களாயிருந்தாலும் அவ்வமுதத்தைக் கசப்பென்று எண்ணினாலும் உங்கள் உண்மெயில் நம்பிக்கை வையுங்கள். உண்மெய்யை விரும்புங்கள். உண்மெய்யில் அன்பை வளர்த்துங்கள்.

யதார்த்தத்தில் உண்மெய்தான் எவற்றிற்குஞ் சிறந்தது. அதை யாதாமொருவா கூட்டவாவது குறைக்கவாவது மாற்றவாவது விருத்தி செய்ய வாவது முடியாதென்று கூறி தன்னை அடுத்த மாணாக்கர்களை அ ஒன்றுக்கொன்றை பற்றி பிறவிக்காளாகும் ஜின்முத்திரை பதினாறு வகை நிலைகளை விளக்கிவருங்கால் மாணாக்கர்கள் மனதில் அவைகள் பதியாமல் பரவுவதை உணர்ந்த பகவன் வரிவடிவாகும் அட்சரங்களை உண்டு செய்து அதன் வழியாக தன்மங்களைப் பதிவடையச்செய்ய வேண்டுமென்று எண்ணி வடமொழியையும் அதனதன் அட்சரங்களையும் தென்மொழியையும் அதன் அட்சரங்களையும் உற்பத்திச்செய்து

மாணாக்கருள் ஜனகர், வாமதேவர், நந்தி, ரோமரென்னப்பட்ட நால்வருக்கு ஜெயமுத்தி நிலையாகும் ஜின்முத்திரையை அளித்து தானியற்றிய வரிவடிவ பாஷையாகும் வடமொழி என்னும் சகடபாஷையை பாணினி யாருக்கும், தென்மொழியாகுந் திராவிடபாஷையை அகத்தியருக்கும் போதித்து ஞானத்தானம் அளித்து எட்டுத்திக்குகளிலும் மெய்யறத்தைப் பரவும்படிச் செய்தார்.

காரணம், மகடபாஷை என்றும், மூலபாஷை என்றும், பிராகிருத பாஷை என்றும், பாலிபாஷை என்றும், வழங்கிவரும் ஆதிபாஷை வரிவடிவம் இல்லாமல் ஒலிவடிவமாத்திரமாய் இருந்தபடியால் தன்மங்களை நிலைக்கச்

செய்வதற்கு வடமொழியையுந் தென்மொழியையும் உற்பத்திச் செய்தார்.

**வைராக்கிய சதகம்**

ஆலநீழலிலன் றொருநால்வருக் / கறநெறி யுரைத்தானை,
காலகாலனை சிவப்பிரகாசவென் கண்மணிதனையுன்னா.

**பதஞ்சலியார் ஞானம்**

வசனசுத்தி கபிலாதி மாமுனிவர் மகிதமான ஜனகாதியும்
வாம ரோம முநிநந்திதேவன் வடபாஷை யோதினர்கள் வண்மையே மேருலாவுவட
வீதிதோரும் உயர் வேதஞான ஜனகாதியர்
மேலை வீதி திருமூலர்வர்க்கமிகவே இருந்து விளையாடினார்
பாருங் கீழ்திசையி லையர்சட்டமுனி பானுமாமலையில் லாகினார்
பன்னுதென்றிசையிலே இருந்து தமிழ் பாஷையோதின அகத்தியன்
தாரிலே இவர்கள் சீஷவர்க்கமிது கோடி கோடி இவர் தம்மிலே
சாது சுந்திரனும் மச்ச கூர்மமுனி தாரசாரபதி கொங்கணன் சீ
ருலாவுவர தேமடங்களது செய்து சித்ததிகமாடினார்
தேசதேசசில பாஷையாலும் இவர் செப்புநூன்முறை தெரிந்திடே.

பாணினியவர்கள், கபிலர், ஜனகர், வாமதேவர், நந்தி, ரோமரைவருக்கும் சகடபாஷையையூட்டி வடநாடெங்கும் மெய்யறமாம் புத்ததன்மத்தைப் பரவச்செய்தார். அகத்தியருக்கும் திருமூலருக்கும் திராவிட பாஷையையூட்டி அவற்றுள் அகஸ்தியர் தென்திசை சென்று தமிழ்பாஷையையூட்டி வரிவடிவாம் அட்சரபதிவால் தன்மங்களைப் பரவச்செய்து மடங்களைக் கட்டுவித்து உலோகோபகார சித்துக்களுமாடி வைத்தியம், ஞானம், நீதி முதலிய

பொக்கிஷங்களை அளித்துவந்தார்.

**முன்கலைதிவாகரம்**

வடநூற்கரசன் தென்றமிழ்க்கவிஞன் / கவியரங்கேற்றும் உபயக்கவி புலவன்,
செரிகுணத்தம்பற் கிழவோன் சேந்த /னறிவுகரியாக தெரிசொற்றிவாகரத்து,

முதலாவது தெய்வப்பெயர்தொகுதி.

**வீரசோழியம்**

மதத்திற் பொலியும் வடசொற்கிடப்புந் தமிழ்மரபு
முதத்தில் பொலியேழை சொற்களின் குற்றமும் ஓங்குவினை
பதத்தில் சிதைவும் அறிந்தே முடிக்க பன்னூறாயிரம்
விதத்திற் பொலியும் புகழ்வலோகிதன் மெய்த்தமிழே.

மேற்சொன்னபடி பதிப்புரை -

திடமுடைய மும்மொழியாம் திரிபிடக நிறைவிற்காய்
வடமொழியை பாணினுக்கு வகுத்தருளியதற்கு இணையாத்
தொடர்புடையத் தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்த
குடமுநிக்கு வற்புருத்தார் கொல்லாற்று பாகர்.

**சிலப்பதிகாரம்**

கண்களிமயக்கத்துக் காலதலற்றிருந்த, / தண்டமிழாசான் சாத்தனிஃதுரைக்கு.

**தொல்காப்பியம்**

மயங்காமரபினெழுத்துமுறை காட்டி, / மல்குநீர் வரைப் பினைந்திரர்.

**மணிமேகலை**

ஆயிரநாமத் தாழியன் திருவடி

**கமலசூத்திரம்**

சகஸ்திரநாம பகவன்.

அவலோகிதரென்பதும், சாத்தனென்பதும், கிழவனென்பதும், இந்திர னென்பதும் பகவனுக்குரிய ஆயிர நாமங்களில் அடங்கியவைகளேயாம்.

உலக இதத்தைத் தவிர்த்து மலைவுபெறாமதுரவாக்கியங்களை ஊட்டின வராதலின் அவலோகிதரென்றும், விண்ணவரும் மண்ணவருஞ் சாற்றுதற் குரியவராதலின் சாத்தனென்றும். சகலமும் அறிந்தவராதலின் கிழவனென்றும், ஐயிந்திரியங்களை வென்றவராதலின் ஐந்திரர், இந்திரரென்றும் வழங்கப்பெற்றார்.

பூமியின்கண் நீரினேதுவால் தாபரவர்க்கங்கள் தோன்றி தாபரவர்க்கங் களின் ஏதுவால் ஊறுவனங்கள் தோன்றி ஊறுவனங்களின் ஏதுவால், மட்சங்கள் தோன்றி, மட்சங்களின் ஏதுவால், பட்சிகள் தோன்றி பட்சிகளின் ஏதுவால், விலங்குகள் தோன்றி விலங்குகளின் ஏதுவால், வால்னரர் வாலற்ற நரரென்னும் மக்கள் தோன்றி ஆறாவது தோற்றம் விரிந்து நின்ற மக்களுள் வாலவயதில் அறிவின் விருத்தியினின்ற வாலறிஞன் தனக்கோர் ஆசிரியன் இல்ல வரிவடிவமாகும் அட்சரபாஷை இல்லாமலும் தனதிடைவிடா விசாரிணையின் ஏதுவால் மெய்ப்பொருளை. ஓதாமல் உணர்ந்து முக்காலமும் அறிந்த முநீந்திரனென்னும் ஏழாவது தோற்ற தேவனாக விளங்கியபடியால், சகல சங்கத்தோர்களும் முன் இந்திரரை ஆதிகடவுளென்றும், ஆதிபகவன் என்றும், ஆதிநாதன் என்றும், ஆதி ஈசன் என்றும், ஆதிசிவனென்றும், ஆதிமூலமென்றும், ஆதிகுருவென்றுஞ், சகல நூற்களின் காப்புகளிலும் அவரையே தொழுதுவந்தது மன்றி மற்றுமுள்ள மக்களும் அவரை வணங்கி மெய்யறம் பற்றி தீவினையையும் அகற்றிக்கொள்ள வேண்டுமென்னும் முயற்சியிலிருக்கின்றார்கள்.

**மெய்ப்பாட்டியல் சூத்திரம்**

தீவினையை வெல்லும் அறவாழி தெய்வம் அஞ்சல்

**குறள்**

அறவாழியந்தணன் தாள் சேர்ந்தார்க்கல்லார் / பிறவாழி நீந்தலறிது.

**வீரசோழியம்**

பீடு கொண்ட வார்தளிர் பிரங்கு போதி யானையெம்

பிரானை நாளுமேத்து வார் பிறப்பிறப்பிலார்களே.

போதிவேந்தன் சரணலால் அரண்பு கோமென்று அரசர்கள் புடை சூழவும் மற்றுமுள்ள மாக்கள் சூழநிற்கவும் ஆலமர்க் கடவுள் திரிபேத வாக்கியங்களாகுந் திரிபீடங்களை வகுத்து அதன் முதன் மொழியாகும் பாபஞ் செய்யாதிருங்கோள் என்பதை கர்மபாகையாகவும், நன்மெய்க்கடை பிடியுங்கோள் என்பதை அர்த்தபாகையாகவும், இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்பதை ஞானபாகை யாகவுமுள்ள பேதத்தின் உட்பொருளை விளக்கி மகடபாஷையுள் மறைந்துள்ள மும்மறை வாக்கியங்களை அவனவன் தேகங்களில் உணருமாறு தென்மொழியில் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யன்பென்னும் அறம் பொருள் இன்பத்தை உணர்த்தி இப்பேரின்ப நிலையை அவனவன் அனுபவிக்க வேண்டியவனாதலின் அதையே அவன் முதிர்ந்த முத்தநிலை நிருவாணமென்றுங் கூறிவருங்கால் நாக சர்ப்பங்கள் அவர் தோளிலும் தாளிலும் புறண்டுலாவவும் யானைகள் தாமரை புட்பங்களைக் கொய்து வந்தர்ச்சிக்கவும் தனது மாணாக்கர்களில் சிலர் சித்துக்களை விளையாடவுங் கண்ட கருணாம்பரன் அவர்களை அருகிலழைத்து நீங்கள் செய்துவருஞ் சித்துக்கள் மெய்யறச் செயலாலும், மெய்ப்பொருள் உணர்ச்சியாலும், மெய்யின்ப சுகத்தாலும் எண்பத்தொன்பது சித்துக்களுந் தானே விளங்கும். அதைக் காணாமல் நீங்களே சித்தினெண்ணங்கொண்டு செய்வீர் களானால் டம்பம் அதிகரித்து

மெய்ப்பொருள் மறையும் என்று என்று கூறினார்.

அதை அவர்களுணராது ஆசிரியருக்கே சித்தினிலை தெரியாதென்றகங் கரித்த எண்ணத்தை அறிந்த அறிவன் விருட்சத்தடியிலிருந்து மறைந்து தான் வரும் வழியில் தனது பொற்குண்டலங்களை கழட்டிக் கொண்டு செப்புக் குண்டலத்தை செவியிலிட்ட வைந்தரக்கர்கள் முன் தோற்றினார்.

ஆதிவேதமென்னும் மூன்று பேதவாக்கியங்களை ஓதியவரும் அதில் மறைந்துள்ள நான்கு மறைப்பொருட்களாம் உபநிடதங்களை விளக்கியவரு மாகிய வேதியன் மரத்தடியிலிருந்து மறைந்தவுடன் அவ்விடம் நிறைந்துள்ள சகல மக்களுந் திகைத்து நின்றார்கள். அவர் ஆசனத்தைத் தாங்கினின்ற யானை, ரிஷபம், சிம்மம் இவைகள் அவரைத்தேடவும், அவர் தோளிலும் தாளிலும் புறண்டு விளையாடிக் கொண்டிருந்த சர்ப்பங்கள் ஓடிவந்து அவர் உட்கார்ந்து இருந்த மரத்தடியில் வந்து படமெடுத்து ஆடுகிறதும் வந்திருக்கும் மக்களைப் பார்த்துக் கவிழ்ந்து கொள்ளுவதுமாகியச் செய்கையிலிருந்ததுகள். அரசனை மரத்தடியில் காணாத மக்கள் சர்ப்பங்களை தரிசித்துக்கொண்டு போனார்கள். அவரை ஏந்தி செல்லும் ரிஷபமும் அவராசனத்தின் முன் வந்து சயனித்துக்கொள்ளுதலே தொழிலாயிற்று.

**சீவக சிந்தாமணி**

ஆதிவேதம் பயந்தோய் நீ யலர்பெய்மாரி யமர்ந்தோய் நீ
நீதி நெறியை உணர்ந்தோய் நீ நிகரில் காட்சிக் கிறையோய் நீ
நாதனென்னப்படுவோய் நீ நவைசெய் பிறவிக் கடலகத்துன்
பாதகமலந் தொழ வெங்கள் பசையாப்பவிழப் பணியாயே.

**அருங்கலைச்செப்பு**

வேதங்கடன்னை விளித்தான் மெய்யுரைத்தான் / போதி சேர் வேந்தன் புகழ்.

**சூளாமணி**

ஆதியங்கடவுளை யருமறை பயந்தனை, / போதியங் கிழவனை பூமிசை ஒதுங்கினை. போதியங் கிழவனை பூமிசை ஒதுங்கிய / சேதியஞ்செல்வ நின்றிருவடி வணங்கினம்.

**சீவக சிந்தாமணி**

குழலுடைச்சி கழிகைக் குமரன் தோளினை
கழலுடையிளையவர் கச்சின் வீக்கலி
னழலுடைக் கடவளை யரவு சேர்ந்தென
விழவுடைமுது நகர் விலாவிக்கின்றதே

**யாப்பருங்கலைக்காரிகை**

வாளார்ந்த மழைத் தடங்கள் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணாகங்குழை புறள் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன் முறையான் வந்தேத்த
சோலைதாழ் பிண்டிக்கீழ் சூழ்ந்தவர்தன் சொன் முறையான்

ஐந்துபேரும் அரவங்காட்டாது அடித்து பரிக்கும் அரக்கர்களாதலின் திகைத்துக்கண்ட பகவனின் தோற்றத்தால் தியங்கி தங்களால் செப்புக்குண்டலம் அளித்த தேசிகனென்று மயங்கி ஒருவருக்கொருவர் தங்கள் தங்கள் முகங்களைப் பார்த்துக்கொண்டு வாய் பேசாமல் நின்றார்கள்.

அதை உணர்ந்த பகவன் அரக்கர் ஐவர்களையும் நோக்கி அன்பர்களே! தங்கள் இருப்பிடங்கள் எங்கு, செய்யுந் தொழில்கள் என்னை, மனைவி மக்கள் எவ்விடம் என உசாவினார்.

அரவம் அடங்கியக்கால் அடித்து பரித்து ஏதோரிடமுமின்றி எதேச்சையாய்த் தின்று திரிபவர்களாதலின் பகவன் முகமலர்ச்சியையும், அவரது தேஜசையும், அன்பு மிகுத்த பார்வையும், மிருதுவான வார்த்தையையுங் கண்ட ஐந்தரக்கர்களுந் தங்களுக்குள் சதா குடிக்கொண்டிருந்த கள்ள விஷங்களாகும் அரவத்தை அகற்றி ஐயன் பாதத்தில் வீழ்ந்து எங்கள் அக்கிரமங்களைப் பொருக்க வேண்டுமென்று வணங்கினார்கள்.

அதை அறிந்த பகவன் ஐவரையும் எழுந்திரியுங்கோள் என்று கூறி ஓர் மரத்தடியில் உட்கார வைத்துக்கொண்டு அன்பர்களே தாங்கள் செய்துவந்த அக்கிரமங்கள் எவை

யான் பொருக்க வேண்டியவைகள் யாதென உசாவினார்,

அதற்கு ஐவர்களும் எழுந்து வணங்கி ஐயனே, சில காலங்களுக்கு முன் தாங்கள் இவ்வழியில் வந்தபோது தமது செவியிலிருந்த பொற் குண்டலங்களைக் கழட்டிக்கொண்டு செப்புக்குண்டலத்தை செவியிலிட்டுப் போய்விட்டோம். அதே செப்புக்குண்டலத்தை தங்கள் செவியில் காணுங்கால் முன்பு யாங்கள் கழட்டிக்கொண்ட பொற்குண்டலத்திற்கு மேலானப் பிரகாசமும் ஒளிவுங் காண்கின்றபடியால் எங்களுள்ளங் கலங்கியாங்கள் முன் செய்த அக்கிரமத்தைப் பொருக்கும்படி வேண்டினோமென்றார்கள்.

தாங்கள் முன் செய்த செய்கையை அக்கிரமம் என்றறிந்து கொண்டீர்களா என்றார்.

ஐயனே அதனை அக்கிரமம் என்றறிந்து கொண்டோம் என்றார்கள்.

இதுகாருந் தாங்கள் செய்துவந்த செய்கைகள் யாவும் அக்கிரமம் என்றறிந்துக் கொண்டீர்களா, கிரம்மென்று அறிந்து கொண்டீர்களா என்றார்.

ஐயனே, யாங்கள் செய்து வந்த செய்கைகள் யாவும் அக்கிரமமே என்றார்கள். தாங்கள் இதுவரையும் அறியாதக் கிரமங்களையும், அக்கிரமங்களையும் இன்று எவ்வகையில் அறிந்து கொண்டீர்கள் என்றார்.

ஐயனே, தாங்கள் செவியிலிட்டக் குண்டலங்களே எங்களை சீர்பெறச் செய்துவிட்டதென்றார்கள்.

தாங்கள் எமக்கு அளித்த செப்புக்குண்டலந் தங்களை எவ்வகையில் சீர்படுத்தியது என்றார்.

ஐயனே, அச்செப்புக் குண்டலம் எங்களிடம் இருக்குமளவும் களிம்பேறி இருளடைந்திருந்தது. அதைத் தங்கள் செவியிலிட்டபோது களிம்பற்று ஒளி வீசுகின்றது.

அவ்வொளியைக் கண்ட எங்களுள்ளத்து இருளகன்று இதுகாரும் யாங்கள் செய்து வந்த செய்கைகள் யாவும் அக்கிரமமென்று உணர்ந்து வருந்துகிறோம் என்றார்கள்.

**நிகழ்காலத்திரங்கல்**

*ஐந்தரக்கர் செய்துவந்த அறியாக் கொலைக்களவு / உந்தன் முகங்கண்டே ஒழிந்தது அதிசயமே. ஒழிந்த உள்ளத்துள்ளக்களங்க முழுதகற்றி / பழுதற்ற சங்கம் பதித்தது அதிசயமே.

அன்பர்களே, தாங்கள் அக்கிரமத்தை அக்கிரமமென்று எதுவரையில் தெரிந்து கொண்டீர்களோ அதுவரையிலும் அவற்றை நீக்கி கிரமத்தில் நடவுங்கள்.

உங்கள் பொருளை வேறொருவன் அபகரிக்காதிருக்க வேண்டுமாயின் அன்னியன் பொருளை நீங்கள் அபகரிக்காதீர்கள்.

உங்களை ஒருவன் அடித்து துன்பஞ் செய்யாமலிருக்க வேண்டிய விருப்புண்டாயின் நீங்கள் மற்றவர்களை அடித்துத் துன்பஞ்செய்யாமலிருங்கள்

உங்கள் மனைவியை ஒருவன் இச்சிக்கக்கூடாத எண்ணங்கொள்ளுவீர் களாயின் அன்னியன் மனைவியை நீங்கள் இச்சியாதிருங்கள்.

உங்களால் உங்கள் அறிவை விருத்தி செய்யாமல், மயங்கி நிற்பதை நீங்கள் அறிந்துக்கொள்வீர்களானால் இன்னும் உங்கள் அறிவை மயக்கக்கூடிய வஸ்துவை அருந்தாதிருங்கள்.

அன்னியர்கள் பொய் சொல்லி வஞ்சிப்பது உங்களுக்குப் பொருந்தா விடில் நீங்கள் அன்னியரைப் பொய்சொல்லி வஞ்சியாதிருங்கள்.

உங்களுக்குள்ள இராகத்துவேஷ மோகமென்னுங் களிம்புகள் அற்ற போது நீங்கள் அணிந்துள்ள செப்புக்களின் களிம்புகளுமற்றுக் கருணை பெருவீர்களென விளக்கிவிட்டு பிம்பாசார அரசநகரத்தை நாடிச்சென்றார். அரக்கர்கள் அனைவரும் ஐயனைப் பின்தொடர்ந்தார்கள்.

ஜெகத்குருவாகத் தோன்றிய நாதன் பிம்பாசார நகரத்துட் சென்று வீதியில் சிரங்கவிழ்ந்து இருகைகள் அசைவாடாமல் ஒடுக்கத்தில் நடப்பதையும் அவரைப் பின்தொடர்ந்து நடக்கும் ஐவர்கள் அடக்கத்தையுங் கண்டவர்கள் திகைத்து அரசனிடம் ஓடி ஐயே, நமது நகர வீதியில் யாரோ ஓர் குமரன் வருகின்றார் அவரைப் பின்பற்றி ஐவர்கள் வருகின்றார்கள். அவர் வடிவையுந் தேஜசையுஞ் சொல்லத் தரமன்றென்று கூறுங்கால் அரசன் எழுந்து முன் சென்று முன்னிவ்விடம் வந்திருந்த சக்கிரவர்த்தித் திருமகனென்று உணர்ந்து அருகில் சென்று முன்கண்ட வடிவில் மிகுத்த அவர்முக வஜிகரத்தையும் கருணைமிகுத்த பார்வையையுங் கண்டவுடன் பாதம் பணிந்தெழுந்து வர்த்தமனங்களை விசாரித்துக்கொண்டே அரண்மனைக்குச் செல்லும் விஷயத்தை உணர்ந்த விமலன் அரசனைத் தடுத்து அரண்மனைக்கேகலை விடுத்து எதிரிலுள்ள ஓர் மலைமீதேறி நிழலில் உட்கார்ந்து மெய்யறமாகும் புத்ததன்மத்தை விளக்கிவருங்கால் அரசன் எக்காலுங் கேட்கா அமுதவாக்கியத்தால் ஆனந்தம் பெருகி ஐயனை வணங்கி மெய்யனே என்னால் ஆகவேண்டிய செயல்களுக்கு ஆக்கியாபித்தல் வேண்டுமென வாய்பொத்தி நின்றான்,

ஆதிநாதன் அரசனை நோக்கி உன் தேசமெங்கும் சத்திய தன்மம் பெருகி குடிகள் ஒழுக்கத்திலும் நீதிநெறியிலும் நிற்கவேண்டியதாதலின் வரிவடிவாம் அட்சரங்களைக் கற்றுக்கொண்டு தசபாரமாம் பாரதப்பத்தை இப்பாறையில் பதிவு செய்து குடிகள் இதயத்தில் நிலைக்கச் செய்ய வேண்டுமென்று கூறினார்.

**அருங்கலைச் செப்பு - சிகரப்பத்து**

விம்ப அரசர்க்கு வரிவடிவம் / ஈய்ந்து வைம்மலை ஓர்ந்தானறன்.

அரசன் அவ்வாக்கியத்தை சிரமேற்கொண்டு வரிவடிவாம் வட அக்கரங்களையுந் தென்னக்கரங்களையுங் கற்று பாறையில் பதிக்குஞ் சீலத்தை வினவினான்.

அரசன் மனதில் வரிவடிவட்சரங்கள் பதியும் வரையில் அவ்விடமே புசித்து

ன்மங்களைப் போதிக்குங்கால் திரண்ட கூட்டங்கள் மலைக்கு வந்து தன்மத்தை வினவும் போக்குவருத்தில் இருந்தார்கள்.

அரசன் பாறைப்பதிவை வினவியகால் ஓர் பாறையைத் திருத்தி அடியில் குறித்துள்ள தசபாரங்களைப் பதியச் செய்தார்.

உங்களுக்குள்ள அன்பை மற்ற சீவராசிகளின் மீதருளி சீவர்களை
விருத்தி செய்வீர்களாக
உங்களுக்குள்ள பாக்கியத்தை நடுநிலைமெயினின்று எழிய மக்களுக்கியந்து
யீடேற்றுவீர்களாக
உங்கள் மனத்தைப் போகும் போக்கில் விடாமல் அடக்கத்தினின்று
ஆண்டு கொள்வீர்களாக
உங்களுக்குள்ள ஒழுக்கங்களை வழுவடையாது நற்பாதையில் நடத்து
வீர்களாக
உங்கள் மனைவியை மற்றவன் விரும்பாதிருக்க எண்ணுகிறவர்கள் அன்னியர்
மனையாளை யிச்சியாதிருப்பீர்களாக
உங்கள் பொருளை மற்றவர்கள் களவாடாதிருக்க விரும்புகிறவர்கள் அன்னியர்
பொருளை அபகரிக்காதிருப்பீர்களாக.
உங்களுடலுக்கு மற்ற சீவராசிகளால் கொலையும் தீங்கும் நேரிடாமல் இருக்க
விரும்புகிறவர்கள் மற்ற சீவராசிகளை கொலையும் தீங்கும்
செய்யாமலிருப்பீர்களாக.
உங்களறிவை விருத்தி செய்ய விரும்புவீர்களாகில் உங்களறிவை
மயக்கும் வஸ்துக்களை அருந்தாதிருப்பீர்களாக.
உங்களை ஒருவன் பொய் சொல்லி வஞ்சியாதிருக்க விரும்புகிறவர்கள்
நீங்கள் ஒருவரைப் பொய் சொல்லி வஞ்சியாதிருப்பீர்களாக.

உங்களிதயத்தில் எழும்பும் காம வெகுளி மயக்கங்களை எழவிடாமலும் தங்கவிடாமலும் அகற்றுவீர்களாக.

என்று ஒழுக்கங்களையும் சீலங்களையும் பதிவு செய்ததை உணர்ந்த அரசன் மற்றுமுள்ள பாறைகளிலும் பதியச் செய்து குடிகளும் அரசனும் தினேதினே உண்மெய் விசாரிணையிலிருந்தார்கள்.

**பாரதப்பத்து**

அன்பை பெருக்கியாருயிர்க்கூட்டி இன்பை விருத்திச்செயல்,
அறத்தை விருத்தியாருயிரோம்பல் புறமெய் நடுநிலையாம்.
மனத்தை ஒடுக்கி தாழுடலடக்கல் கனத்த கடனென்றறி,
உள்ள ஒழுக்கமுயரத்தோன்றல் விள்ளுஞ் சுகவழியாம்.
அன்னியர் மனைவி ஆசையேற்றல் உன்னியல் பாழ்மனையாம்.
ஊர் பொருளாசையுள்ளத் தெழுவல் பேர்மனை தற்பொருள் பாழ்.
தன்னுடல் கார்க்குந் தனையர்தரணி மன்னுயிர் காத்தல் மனு.
அறிவை பெருக்கி ஆற்றலடைவோர் தெறிவை மயக்கமறல்.
வஞ்சமகற்றி வாழ்வை விரும்பில் துஞ்சும் பொய்யையொழி.
காமவெகுளி மயக்க மகற்றி, ஏமவிதயத்திரு
பாரதம் பத்தும் பாறைப்பதிந்து சீரது தந்தான் சினன்.

மாரனை வென்று முத்திவழிக்கு முதல்வனாகவும் ஜெயமுத்தி என்னும் ஜின் முத்திரை அருளிய ஜினன் அம்மலையில் சிலநாள் தங்கி கலைவடிவும் சிலைப்பதிவும் அளித்தக்கால் (சினன் மலை என்றும், ஜினன் மலை என்றும்) சைனமலை என்றும் அதற்குப் பெயருண்டாயிற்று.

**பரம்பரபோதம் - வீரசோழியம்**

பேரரக்கரோரைவர்க்கரவமிழ்தம் பொழிந்தனையே
ஆரமிழ்த மணிநாகர்க்குலமுய்ய அருளினையே
வார்சிறைப் புள்ளரையர்க்கும் வாய்மெநெறி பகர்ந்தனையே
பார்மிசை இரைந்தும் பாவின்றி பயிற்றினையே.

**சிலப்பதிகாரம்**

வெங்கநெடு வேள்வில் விழாக்காணும்,
பங்குனி முழக்கத்துப் பனியரசு யாண்டுளன்.

**சீவகசிந்தாமணி**

காசறு துறவின்மிக்க கடவுளர் சிந்தைபோல,
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யயன முன்னி.
யாசறு நடக்குநாளுளைங்கணை கிழவன் வைகிப்
பாசறை பரிவு தீர்க்கும் பங்குனி பருவஞ் செய்தான்.

**மணிமேகலை**

ஆலமர்ச் செல்வன் மதன்விழாக் கோல்கொள
பாலமர் கொள்ளும் பங்குனி பருவங்,
காண்மினோவெனக் கண்டு நிற்குனரும்.

**பின் கலை நிகண்டு**

சிறந்திடுங் குன்ற வேந்தன் குணபுத்திரன் சீலநூலை,
மறஞ்செயாவாறே கற்று மதி மயக்கத்தினாலே,
குறைந்திடுந் தமது மேற்கோள் கொளீஇய மற்றது கரந்தே,
அறிந்ததும் அறியாதாரைப் போறலே அறிமடந்தான்.

விம்பாசார நகரமெங்கும் வரிவடிவ பாஷையும் தசபாரகோஷமும் பரவியவுடன் ஜினன் அந்நகரம் விட்டகன்று பூர்வம் பாலிபாஷையில் வாரணாசி என்னுங் காசிநகரடைந்து முதல் சங்கத்தை ஸ்தாபித்தார்.

**பின் கலை நிகண்டு**

தருமராசன் முந்திந்திரன் சினன் பஞ்சதாரைவிட்டே
அருள் சுரந்தவுணர்க்கூட்டுந் ததாகதன் ஆதிதேவன்
விரவுசாக்கையனே சைனன் விநாயகன் சினந்தவிர்ந்தோன்
அரசுநீழலிலிருந்தோன் அறி அறன் பகவன் செல்வன்.

வினாயகரென்னும் புத்தபிரான் பாரதத்தை மலையில் எழுதியுள்ளார் என்பதும் மகாபுராண பாடம்.

பாரதமென்பதுவும் தசபாரமென்பதும் பாரமிதமென்பதும் செய்யுட்களாய் இராது வாசகநடையில் எழுதியுள்ள தசசீலத்தின் பெயராம்.

விம்பாசாரன் தேசத்துள்ளக் குன்றின் மீது சிலநாள் தங்கி தசசீலங்களைப் பதிவு செய்து தசரத தன்மசக்கரம் உருட்டியக்கால் குன்றை வேந்தனென்றும் வேறுபெயரால் அழைக்கப்பெற்றார். ஆதி நூலென்றும், ஆதிவேதமென்றும், முதநூலென்றும் வழங்கிய திரிபீட வாக்கியங்களை வரிவடிவாம் அட்சரங் களில்லாமல் ஒலிவடிவாம் வார்த்தையால் கூறவும் செவியால் கேட்கவும் இருந்தகாலத்தில் அவற்றை ஏழு பேதமாக வழங்கி வந்தார்கள். அதாவது, ஆதிநால், எழுதாக்கேள்வி, ஆரணம், ஒத்து, சாசை, சுருதி, இருக்கு என்பதுவாம். வரிவடிவாம் அட்சரங்களையும் பகவன் ஈன்றருளியப் பின் அவர் ஆதி நூலை ஏமவகைப் பெயரால் வழங்கி வந்தார்கள். அதாவது ஆகமம், ஆரிடம், பிட்கம், தந்திரம், பனுவல், சமயம், சூத்திரம் என்பதுவாம். ஆதிவேதம், ஆதிநூலென வழங்கும் திரிபீடம், திரிபிடகமென்னும் திரிபேத வாக்கியங்கள் யாதெனில் -
பாபஞ் செய்யாதிருங்கள். நன்மெய்க் கடை பிடியுங்கள்.
உங்கள் இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்பதே.

**பின்கலை நிகண்டு**

ஆதிநூலெழுதாக் கேள்வி யாரணமொத்துச்சாகை
யேதமில் சுருதி தன்னோடிருக்கிவை ஏழும் வேதம்
வேதநூற் பொருளினாமம் விதித்திடு ஞானபாகை
யாதியாங் கருமபாகை யருத்தபாகையுமா மென்ப.
மெய்தெரிகாரணந்தான் வேதத்தின் ஞானபாகை
யுய்யுமெய் யறமுறைக்கு முற்ற நல்லர்த்த பாகை
துய்யநற் செயலைப்பற்றல் சுத்தநற் கருமபாகை
வெய்யபௌ டிகமேயாதி விரியுப நிடதமாகும்.
ஏமமா மிரண்டாம் வேதமிசை தயித்திரியத்தோடு
தோமிலா யசுவாமென்று சொல்லுவர் நீதிநூலோர்
சாமமேமூன்றாம் வேதஞ் சாற்றும் பேரின்பப்பேற்றை
வாமமுன் மொழியொன் றில்லா அதர்வண வேதமாமே.
தந்துரை புனைந்துரைத்தல் சார்ந்த பாயிரத் தினோடு
முந்திய பதிகமே நூன் முகவுரை முப்பேராகும்
அந்தமா மாகமத்தோர் யாரிடம் பிடகமற்றுந்
தந்திரம் பனுவலோடு சமயம் சூத்திரமு நூற்பேர்.

**முன்கலைதிவாகரம்**

உபநிடதம் வேதத்தின் உட்பொருள் நுட்பம்.

ஆதிபேத வாக்கியம் கன்மபாகை இதன் காரணம்; பாபஞ்செய்யாதிருத்தல் காரியம் மெய்ப்பொருளறிதல் இதன் பெயர். பொருட்பால் பௌடிகம் இருக்கென்று கூறப்படும். இரண்டாம் பேதவாக்கியம், அர்த்தபாகை இதன் காரணம் நன்மெய் கடைபிடித்தல் காரியம் மெய்யற உணர்ச்சி. இதன் பெயர் அறத்துப்பால், இயமம், தைத்தரியமென்னப்படும். மூன்றாம் பேதவாக்கியம், ஞானபாகை இதன் காரணம் இதயசுத்திசெய்தல் காரியம் மெய்யின்ப மரம் பேரின்ப உணர்ச்சி. இதன் பெயர் காமபபால் சாமமென்னப்படும். பேதவாக்கியங்கள் மூன்றேயன்றி நான்காவது

பேதவாக்கியமில்லை. ஒரு பொருள் ஏகமென்னும் வீட்டுப்பேறை குறிக்கும் நிருவாணமாம். பேரின்ப நிலையை நான்காவது பேதமெனக் கூறிய போதிலும் மொழிக்குமொழிருசிக்கும் மும்மொழியாம் மூன்று பேதவாக்கியங்களன்றி நான்காவது பேதவாக்கியங் கிடையா. அறம் பொருள் இன்பத்திற்கு ஆதாரமாம் வீடுபேற்றை அவனவன் உணர்ந்து பேரின்பஞ் சுகிக்க வேண்டியவனாதலின் அதன் பெயர் அதர்வண மென்று கூறிவிட்டார்கள். ஒன்றென்னும் வீடுபேற்றை அடைதற்கு மும்மொழிகளாம் மூன்று வாக்கியங்களும் மாறுபொருளால் நான்கு பேதமாயிருந்தது கொண்டு வடமொழியில் பேதமென்றும், தென்மொழியில் வேதமென்றுங் கூறினார்கள். மூன்று பேதவாக்கியங்களும் வீடும் விளங்குதற்கு வாக்கியமொன்றுக்கு எட்டு உபநிட்சயதார்த்தங்களாக நான்கு வாக்கியங்களுக்கும் முப்பத்திரண்டு கலையாம் உபநிடதங்களை விளக்கினார்.

**பாபமென்பதெவை**

உபநிடதமென்னும் உபநிட்சயார்த்த முதலெட்டு அருங்கலை செப்பு - கர்மபாகை அஷ்டகம் முதல் வேதவாக்கியம். பாபஞ் செய்யாதிருத்தல். 1. சீவர்களவத்தைச் செய்தொழில் யாவும், பாவமஃதென்றேயறி. 2. ஏனையோர் பொருளை எடுத்து மகிழ்தல், ஊனமுப்பாவமதாம். 3. உள்ளத்தீங்கை யுளத்தே நிறப்பல், கள்ளப் பாவமதாம். 4. அன்னியர்தார வாசை பெருக்கம், பின்னிய பாபப் புணை. 5. புலை யுனிச்சைப் பேணி வகுத்தல், கொலையாம் பாபக்குழி. 6. கண்ணியருள்ளங் கலங்கக்கூறல், பண்ணிய பாவமுதல். 7. நெஞ்ச மொளித்த வஞ்சம் யாவும், புஞ்செய்ப் பாவப்புனல், 8. அறிவை மயக்கி யாருயிர் வதைத்தல், நெறியை அகற்றும் பாவம்

1. அன்னியப் பிராணிகளின்மீது கோபங்கொண்டு துன்பஞ்செய்தல் பாபம். 2. அன்னியர் பொருளை அவர்கள் அனுமதியின்றி அபகரித்தல் பாபம். 3. அன்னியரைக் கெடுக்கவேண்டுமென்று தீங்குநினைத்தல் பாபம். 4. அன்னியர் ஸ்திரீகளை அபகரித்தல் பாபம். 5. அன்னிய சீவப்பிராணிகளைக் கொலை செய்தல் பாபம். 6. அன்னியர்மனம் புண்பட வார்த்தை பேசுதல் பாபம் 7.

அன்னியர்களை வஞ்சித்து வருந்தச் செய்தல் பாபம், 8. அன்னியர் அறிவை மதுவூட்டி

மயங்கச் செய்தல் பாபம்.

**நன்மெய் என்பதெவை**

உபநிடதமென்னும் உபநிட்சயார்த்தம் இரண்டாமெட்டு. அருங்கலைச்செப்பு.- அர்த்தபாகை அஷ்டகம்.

இரண்டாம் பேதவாக்கியம். நன்மெய்க் கடைபிடித்தல் - 1. ஆருயிர் துன்பமகற்றி ஆற்றல், பேருயிர் நன்மெய்ப்புகழ். 2. ஈந்து மளித்தும் ஏற்காதிருத்தல், சாந்தநன்மெய்த் துணை. 3. தன்னுயிர் தவிர்த்து மன்னுயிர் ரோம்பல், உன்னிய நன்மெய்யுறன். 4 அன்னியர் தாரமன்னை தங்கை, உன்னு நன்மெய்யுறல் 5. கொலையும் புலையுங் கொள்ளாதகற்றல், நிலையாம் நன்மெய் நிழல்..அமுதவாக்கு மன்பிநோக்குங், குமுத நன்மெய்க் குடை 7. வாக்கின் வாய்மெ வளம்பெற வோதல், நோக்கு நன்மெய் நெறி. 8. அமுதமூறு மறிவையேற்றல், சமய நன்மெய்ச்சுழி

1.அன்னியபிராணிகளுக்குண்டாகுந் துன்பங்களை நீக்கி ஆதரித்தல் நன்மெய் 2. அன்னியருக்கில்லாப் பொருளீயந்து தன்னைப்போல் சீர்பெறச்செய்தல்

3. அன்னியர்களைத் தன்னவர்கள் போல் நேசித்து ஆதரிப்பது நன்மெய் 4. அன்னியர் மனைவிகளை தாய் தங்கையர் போல் பாதுகாத்தல் நன்மெய் 5. அன்னிய சீவப்பிராணிகளைக் கொலைச் செய்யாமலும் கொலைக்கேவாமலும் இருப்பது நன்மெய் 6. அன்னியர் மனமும் உடலும் பூரிக்கும் மிருதுவான வார்த்தையாடுதல் நன்மெய். 7. அன்னியர்களுக்கு உபயோகம் உண்டாகும் வார்த்தைகளைப் பேசி விருத்தி பெறச்செய்தல் நன்மெய் 8. அன்னியர்களின் அறிவைப் பெருகச் செய்து அமுதுண்ணச்செய்தல் நன்மெய்

**இதய சுத்தம் என்பதெவை**

உபநிடதமென்னும் உபநிட்சயார்த்த மூன்றாமெட்டு. அருங்கலைச் செப்பு : ஞானபாகை அஷ்டகம். மூன்றாம் பேதவாக்கியம். இதயத்தை சுத்தி செய்தல் : 1. துள்ளுங்கோபம் அகற்றியாற்றல், உள்ளக் களங்கமறல். 2. காமமகற்றி கருணை விளித்த, லேமவுள்ளத்து ளிர் 3. மயக்கமகற்றி வானறி ஓம்பல், சுயம்பாமுள்ளக் கலை 4. வாழ்க்கைக் கருதி வஞ்சமகற்றல், சூழ்ச்சியுள்ளத் தவம் 5. மெய்ப்பொருள் நோக்கி வீணகமாற்றல், துய்யவுள்ளச் செயல் 6. அழியா இன்ப ஆற்றல் அடைதல் விழியா முள்ளக்குறி 7. அடக்கமமைந்து வாடமொழிதல், துடைக்குமுள்ளக்கரை 8. தீங்கினுருவத்தானைத் தேற்றல், பாங்கினுள்ளப் பயன்.

1. தன்னிடத்துண்டாங் கோபத்தை தங்கவிடாமல் அகற்றி சாந்தத்தைப் பெருக்குதல் இதய சுத்தம் 2. தன்னிடத்துண்டாங் காமத்தை தங்கவிடாமல் அகற்றி அன்பைப் பெருக்குதல் இதய சுத்தம் 3. தன்னிடத்துண்டாம் மயக்கங்களை அகற்றி அறிவை வளரச்செய்தல் இதய சுத்தம் 4. தன்னிடத் துண்டாம் வஞ்சினம் பொறாமெய்க் குணமகற்றி சகலர் சுகவாழ்க்கையை விரும்புதல் இதய சுத்தம் 5. தன்னிடத்துண்டாம் பொய்ப்பொருளாசையை அகற்றி மெய்ப்பொருளுசாவுதல் இதயசுத்தம். தன்னிடத்துண்டாம் சிற்றின்பச் செயல்களை அகற்றி பேரின்பத்தை நாடல் இதய சுத்தம் 7. தன்னிடத் துண்டாம் டம்பச்செயல்களை அகற்றி அடக்கத்தி நிற்றல் இதய சுத்தம் 8. கன்னை வஞ்சித்து துன்பப்படுத்தியவனை அன்புடன் ஆதரித்தல் இதய சுத்தம்.

**வீடு முத்தி நிருவாணம் என்பதெவை**

உபநிடதமென்னும் உபநிட்சயார்த்த நான்காவதெட்டு அருங்கலைச் செப்பு நிருவாண அஷ்டகம்.

நான்காம் வேதவாக்கியம் வீடுபேறு - 1. பற்றுக்களற்றுப் பழம்பொருளாற்ற, லுற்ற முத்திநிலை 2. தாங்கா விழிப்பிற் சுகநிலை காண்டல், பாங்காமுத்திப்பலன் 3. பிறப்பு

இறப்பின் பேற்றை செயித்தல், துறப்பின் முத்தி சுகம் 4. காமம் வெகுளி மயக்கமகற்றல், சேமமுத்திச்செயல் 5. தோற்றவொடுக்க மனத்தின் செயலை, யாற்றல் முத்தி சுகம் 6. மரண பயத்தை மாற்றி மகிழ்தல், திரண்ட முத்தித் திடம் 7. உண்மெய் கண்டு உள்ள மகிழ்தல், திண்ண முத்தித் திறம் 8. தானே தானே சுயம் பொளியாதல், வானோர் முத்தி வளம்.

1. தன்னிடத்துண்டாம் பற்றுக்களற்று சதானந்தத்திலிருப்பது நிருவாணம் 2. தன்னை மறைக்கும் நித்திறையை செயித்து சதாவிழிப்பிலிருப்பது நிருவாணம் 3. தன்னை மாறி மாறி பிறக்கச்செய்யும் மரணத்தை செயித்த நிலை நிருவாணம் 4. தன்னை சதா துக்கத்தில் ஆழ்த்தும் காம வெகுளி மயக்கங்களை அறுத்த நிலை நிருவாணம் 5. தானே தோன்றுகிறதும் கெடுகிறதுமாகிய மனதை தோன்றாமலுங் கெடாமலும் அலையற்ற கடல்போல் நிற்பது நிருவாணம் 6. தனக்குண்டாகும் மரணபயம் செநநபயமற்று யாதுக்குங் கலங்காமல் நிற்பது நிருவாணம் 7. தன்னுள் தானாய் விளங்கும் உண்மெய்யாம் பேரின்பமே நிருவாணம் 8. தானே தானே சுயம்பிரகாச சதாநித்திய சித்தாம் அகண்டநிலையே நிருவாணம்.

இவ்வகையாக சதுர்முகனென்னும் பெயர்பெற்ற சாக்கையமுநிவர் அருளிய பேதவாக்கியங்களும் அதன் உபநிட்சயார்த்தங்களென்னும் 32 உபநிடதங்களும் வடமொழியில் பொருள் மறைந்து மறைகளென்னும் பெயர்கொண்டிருந்த முத நூலாகுந் திரிபிடகத்திற்கு வழி நூலாகும் முப்பாலென்னுந் திரிக்குறளை சாக்கையகுல நாயனார் செந்தமிழில் இயற்றி தெளிவடையச்செய்தார்.

**வீரசோழியம்**

எண்பத்தொன்பது சித்தியியல் பினாலுளவென்று
பண்பொத்த நுண்பொருளை பாரறியப்பகர்ந்தனையே
துப்பியன்ற குணத்தோடு தொழில்களால் வேறுபட
முப்பதின் மேலிரண்டு கலை முரைமெயான் மொழிந்தனையே.

**திருவள்ளுவர் மாலை**

இன்பம் பொருளறம் வீடென்னும் இந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன் - மன்பதைகட்
குள்ளவரிதென்றலை வள்ளுவருகலங்
கொள்ள மொழிந்தார் குறள்.
நான் மறையின் மெய்ப் பொருளை
முப்பொருளா நான் முகத்தோன்
றான் மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த நூன்முறையே
வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்துக்க நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்கச்செவி.

**7. சதுர் சத்ய காதை**

பகவன் காசியை அடைந்து தரும் சங்கத்தை நாட்டி திரி பீடங்களாகுந் திரிபிடக மூன்று பேதவாக்கியங்களையும் ஒரு வீடுபேற்றையும் போதித்து ஒவ்வோர் பேதவாக்கியங்களுக்கும் எட்டு உபநிட்சயார்த்தங்களென்னும் முப்பத்திரண்டு உபநிடதங்களையும் விளக்கி வரிவடிவாகும் வடமொழி தென்மொழிகளையுமூட்டி ஒவ்வொருவர் இதயத்திலுமுள்ள இருளை அகற்றி தருமத்தைப்பரவச்செய்தப் பேருபகாரத்தாலும் அத்தருமமானது ஏழைகளுக் கும், தனவான்களுக்கும், விவேகிகளுக்கும், அவிவேகிகளுக்கும், சுகதேகிகளுக்கும், பிணியாளருக்கும் பொதுவாஞ்சுகமடையுஞ் சுகவழியாகக் கண்ட ஒவ்வொரு வரும் அவரைக்காசியீசனென்றும், காசி விசுவேசனென்றும், காசி விசுவநாதரென்றுங் கொண்டாடியதுமன்றி சீவராசிகளின் ஆறாவது தோற்ற மநுக்களுள் ஏழாவது தோற்ற முதற்றேவனாகத் தோற்றியபடியால் ஆதிதேவ னென்றும், முன் கடவுளாகத் தோற்றிய படியால் ஆதியங்கடவுளென்றும், முதலிந்திரராகத் தோற்றியபடியால் முன்னிந்திரரென்றும், முதல் நாதனாகத் தோற்றியபடியால் ஆதிநாதனென்றும் போற்றி அரசனாகப் பிறந்து சற்குருவாக விளங்கிய சம்பிரமத்தை பலதேச அரசர்கள் முதல் குடிகள் வரையில் கொண்டாடி வந்தார்கள்.

**சிவஞானவிளக்கம்**

பச்சை மரத்தாணிபோல் பாய்ந்திருந்த மும்மலத்தைத்
தைச்சிருந்த மும்மலத்தைத் தானீக்கி - அச்சமிலாத்
தானீன்ற தற்பரத்தைத் தந்தருளி எந்தனுக்கு
கோனாகி வந்தான் குரு.

**மணிமேகலை**

காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கொள் மறவேனென்று
காயங் கரையெனும் பேரியாற்றடைகரை
மாயமின் மாதவன் தன்னடி பணிந்து
தருமங்கேட்டு தாடொழுதேத்தி

**சீவக சிந்தாமணி**

முனிவரு முயன்று வான்கண்மூப்பிகந்துடையவின்ப
கனிகவர் கண்ணுமேத்தக் காதிகணறிந்த காசித்
தனிமுதற்கடவுட் கோயிறான் வலங்கொண்டு செல்வான்
குனிதிரை முளைத்த வெய்யோன் குன்றுசூழ் அதனை ஒத்தான்.

பேதவாக்கியங்களையும், உபநிடதங்களையும் விளக்கிய பகவன் அவற்றை உணரவேண்டியதற்குக் காரணமாகும் நான்கு வாய்மெகளை விளக்க ஆரம்பித்தார்.

அந்நான்கு வகை வாய் மெய் உணர்ச்சியே நான்கு பரிசுத்த சத்தியங்களென்று கூறப்படும். இப்பரிசுத்த சத்தியமானது நேராகக் காட்டக்கூடியதும், உரைக்கக் கூடியதும், வெளியரங்கமானதும், ஆழ்ந்து பார்க்கக்கூடியதும், பிரத்தியட்சமாய்க் காட்டக்கூடியவைகளுமாம்.

நான்கு பரிசுத்த சத்தியங்களாவது.- பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு இவை நான்கிலுந் துக்கமுண்டாமென்பது சாத்தியம். இவற்றை விசாரிக்கப்புகின்,

சப்பே சது சக்யங்.ஜானாஸி கரோதீதி ஜீனோ.

சப்பேசது சத்யங்.

நான்கு பரிசுத்த சத்தியங்களாவது

1. துக்கா சத்யா 1. துக்கம்

2. துக்காசமூதய சத்யா 2. துக்கோற்பத்தி

3. துக்க நிரோத சத்யா 3. துக்க நிவாரணம்

4. துக்க நிரோத காமினிபிரதி பதா சத்யா 4. துக்க நிவாரணமார்க்கம்

என்னப்படும்.

**மணிமேகலை**

துன்பந்தோற்றம் பற்றே காரண,
இன்பம் வீடே பற்றி காரண,
மொன்றிய உரையே வாய்மெ நான்காவது

**சீவகசிந்தாமணி**

நூனெறி வகையி நோக்கி நுண்ணிதி னுழைந்து தீமெப்,
பானெறி பலவுநீக்கிப் பரிதியங் கடவுளன்ன,

கோனெறி தழுவினின்ற குணத்தொடு புணரின்மாதோ, நானெறிவகையினின்ற நல்லுயிர்க்கு அமிர்தமென்றான்.

அருமெயினெய்தும் யாக்கையும் யாக்கையதழிவுந்.
திருமெய் நீங்கிய துன்பமுந் தெளிபொருட் டுணிவும்,
குருமெய் எய்திய குணநிலை கொடைபெறு பயனும்,
பெருமெ வீட்டொடும் பேசுவல் கேளிது பெரியோய்.

இந்நான்கு வாய்மெயினாழ்ந்த சத்தியத்தை கண்டடைவைது மிக்கக் கஷ்டமாயிருப்பினும் உண்மெயில் உள்ளன்பு உள்ளவன் தனது சாந்தத்தையே ஈகையாகக் கொடுக்கக்கடவன்.

உலகம் சுகத்தையே நாடுகின்றது. சுகத்தில் சிக்குப்பட்டிருக்கிறது. கதமயக்கத்தில் சுழல்கின்றது. இவ்வகை விழிப்பதும் மறைப்பதும் தோன்று ஒதுங் கெடுவதுமாகிய சுகத்தை நாடுகிறவர்களுக்கும் அதே சுக மயக்கத்திலிருப்ப வர்களுக்கும் ஆசையை ஒழித்து நிருவாணசுகத்தை அடைவது கஷ்டமா யிருக்கும். அதன் சத்தியம் விளங்கவும் விளங்காது.

**முதலாவது துக்க சத்யம்**

ஓ! சகோதிரர்களே! துக்கமென்பது தூய்மெயான சத்தியம். அஃது யாதென்பீரேல் :-

பிறப்பது துக்கம், பிணி துக்கம், மூப்பு துக்கம், மரணம் துக்கம், பொருளை சம்பாதித்தலுந் துக்கம், அது அழிதலுந் துக்கம், வேண்டிய பொருள் கிட்டாதது துக்கம், சுருக்கமாகச் சொல்லின் ஐம்புலப் பற்றுக்களே துக்கமென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! பிறப்பென்பது யாதெனில்:

உற்பேதம் பிறப்பு, கற்போற்பத்தி பிறப்பு, பஞ்சஸ்கந்த உருவமாதல் பிறப்பு, சுருக்கத்தில் ஐந்து புலன்கள் சேர்ந்து உருவமைந்து தோற்றலே பிறப்பென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! பிணி என்பது யாதெனில்:

ஆசையாம் அதிபோகத்தால் உண்டாதல் பிணி, அல்லலடைதற் பிணி, ஆறா சினம் பிணி, அதிபுசிப்புப் பிணி, சுருக்கமாக தேகம் சகிக்கக்கூடாத துன்பமடைதலைப் பிணி என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே மூப்பென்பது யாதெனில்:

முதிர்ந்த வயதுற்று தள்ளாடல் மூப்பு, நரை திறை தோன்றுதல் மூப்பு, நாடிகள் தளர்தல் மூப்பு, சுருக்கத்தில் ஐம்புல நுகர்ச்சிகள் குறைந்துக்கொண்டு வருதலே மூப்பென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! இறப்பென்பது யாதெனில்:

பிறிவு இறப்பு, மறைதல் இறப்பு, தேகம் நீற்று நீராதல் இறப்பு, இரு ளடைதல் இறப்பு, சுருக்கத்தில் பஞ்சஸ்கந்தங்களின் பிரிவுகளாற்றாது ஐம்புல நுகர்ச்சிகளால் பஞ்சாவஸ்தைகள் தோன்றி மடிதலை இறப்பென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! பஞ்சஸ்கந்தங்கள் யாதெனில்:-

முதலாவது ரூபஸ்கந்தம். இதையே தேகமென்னப்படும். இரண்டாவது வேதனா ஸ்கந்தம். இதையே உணர்ச்சி என்னப்படும். மூன்றாவது சன்ஹா ஸ்கந்தம். இதையே அறுவகை இந்திரியங்களின் உணர்ச்சிகள் என்னப்படும். நான்காவது சங்காரா ஸ்கந்தம். இதையே மனோவாக்குக் காயங்களால் உண்டாகும் உணர்ச்சிகள் என்னப்படும். ஐந்தாவது விக்ஞானா ஸ்கந்தம். இதையே அறிவென்னப் படும். இவ்வைந்தும் அமைந்துள்ள உருவத்தையே வடமொழியில் ஆன்மனென்றும், புருஷனென்றும், தென் மொழியில் மானிடனென்றும், மகனென்றுங் கூறப்படும்.

ஓ! சகோதிரர்களே! ரூபஸ்கந்தங்கள் யாதெனில்:

அஃது நான்கு வகைப்படும். முதலாவது படவிதாது. இரண்டாவது அபோதாது. மூன்றாவது தேஜோதாது. நான்காவது வாயுதாது என்னப்படும்.

முதலாவது, படவிதாதுவின் விவரம். உறுதியானதுங் கனத்ததுமான உரோமம், நகம், பல், தோல், சதை, நரம்பு, எலும்பு, ஈரல், இருதயம், குண்டிக்காய், மண்ணீரல், நுரையீரல், இரைக்குடல், குடல், மணிக்குடல் மற்றும் தடித்த உருவங்களுள்ளதை படவிதாது என்னப்படும்.

பண்டி அல்லது வண்டி என்றபோது சக்கரம், இருசு, ஏற்கால், முதலியவைகள் சேர்ந்துள்ள வஸ்துவாகும். அங்ஙனமின்றி இருசை மட்டும் வண்டி என்று கூறலாகா. வீடென்றபோது கல், மண், கதவு, சன்னல், தூண் முதலியவைகள் சேர்ந்துள்ள வஸ்துவாகும். அங்ஙனமின்றி தூணை மட்டும் வீடென்று கூறலாகா. சதை, எலும்பு, நரம்பு முதலிய படவிதாதுக்களே ரூபஸ்கந்த முதலாதாரங்களாகும்.

சகோதிரர்களே! அப்போதாதென்பது யாதெனில்: உதிரம், கபம், சீழ், வியர்வை, நிணநீர், கண்ணீர், சிறுநீர், கீலூன் முதலியவைகளேயாம். தேஜோ தாதுவென்பது யாதெனில்: கோபாக்கினி, பசியாக்கினி, காமாக்கினியாகும் மூன்றுக்கும் ஆதாரமாகிக் கீல்களிலுள்ள ஊன்களை உருக்கி நீட்டவும், முடக்கவும் முன்னாதாரமாகு முன்னனலென்னப்படும். வாயுதாதென்பது யாதெனில்: சுவாசமென்னும் பெயர்கொண்டு உதிரத்தைப் பரவச்செய்தற்கு ஆதாரமாகும் ஆவி என்னப்படும். இத்தியாதி மண், நீர், தீ, காற்று சேர்ந்தவைகளை உருவமென்றும், ரூபமென்றும், தேகமென்றுங் கூறப்படும்.

ஓ! சகோதிரர்களே! வீடென்றபோது கல், மண், கதவு, தூண், சன்னல் முதலியவைகள் சேர்ந்துள்ள வஸ்துவாகும். அதேபிரகாரம் நரம்பு, சதை, தோல், எலும்பு முதலியவைகள் சேர்ந்துள்ளதையே நாம் தேகமென்றுங் கூறுகிறோம்.

ஓ! சகோதிரர்களே ! சுத்த பார்வையையுடைய ஒருவன் எப்பொருளையும் பார்க்காமலும் கண்ணிற்கும் பொருளுக்கும் சம்பந்தமில்லாதிருக்குமாயின் அதற்குத் தக்க

உணர்ச்சியின் ரூபந்தோன்றா.

சுத்த பார்வையை உடைய ஒருவன் ஒரு பொருளைப்பார்த்து கண்ணிற்கும் பொருளுக்கும் சம்பந்தமில்லையாயின் அப்போதும் அதற்குத் தக்க உணர்ச்சியின் ரூபந்தோன்றா.

ஓ! சகோதிரர்களே! சுத்த பார்வையையுடைய ஒருவன் ஒரு பொருளைப் பார்த்து கண்ணிற்கும் பொருளுக்கும் சம்பந்தமிருப்பின் அப்போது அதற்குத்தக்க உணர்ச்சியின் ரூபந்தோன்றும். ஆகவே ஏதுக்குத் தக்க உணர்ச்சி உதிக்கின்றது. எதுவில்லாவிடில் உணர்ச்சி தோன்றா . உணர்ச்சி உதிப்பதற்கு ஏதுக்களே காரணம்.

1. கண்ணுக்கு உருவந்தோன்றி உதிக்கும் உணர்ச்சிக்கு ஸக்சுவிக்ஞானம் அல்லது ஸக்சு பிரசாதரூபமென்றும், 2. காதிற்கு சப்தம் கேட்டு அதினின்று உதிக்கும் உணர்ச்சிக்கு சுரோட்சவிக்ஞானம் அல்லது சுரோட்சபிரசாத ரூபமென்றும், 3. மூக்குமுகர்ந்து அதினின்று உதிக்கும் உணர்ச்சிக்கு ஆக்ராஹணவிக்ஞானம் அல்லது கராஹணபிரசாத ரூபமென்றும் 4. நாவு ருசி பார்த்து அதினின்று உதிக்கும் உணர்ச்சிக்கு சுவை விக்ஞானம் அல்லது தீவபிரசாத ரூபமென்றும், 5. தேகத்தோடு தேகம் உராய்ந்து அதினின்று உதிக்கும் உணர்ச்சிக்கு காயவிக்ஞானம் அல்லது காய்பிரசாத ரூபமென்றும், மனத்தோடு எண்ணம் கலந்து அதினின்று எழும் உணர்ச்சிக்கு மனோ விக்ஞானம் அல்லது மனோபிரசாத ரூபமென்றுங் கூறப்படும்.

(விக்ஞானம் ). ஒவ்வொரு க்ஷணத்திலும் தேகத்தினின்று உதிக்கும் உணர்ச்சிகள் யாவும் ரூபஸ்கந்தத்தைச் சேர்ந்தவை. 2. எதெது உணர்ச்சியை உண்டாக்குகின்றதோ அவை வேதனாஸ்கந்தத்தைச் சேர்ந்தவை. 3. எதெது புலன்களின் உணர்ச்சியை உண்டாக்குகின்றதோ அவை சன்ஹாஸ்கந்தத்தைச் சேர்ந்தவை 4. எதெது மனோவாக்கு காயத்தினின்று உணர்ச்சியை

தோ அவை சங்காராகந்தத்தைச் சேர்ந்தவை. எதெது சித்தத்தின் உணர்ச்சியைச் சேர்ந்ததோ அவை யாவும் விக்ஞனஸ்கந்தத்தைச் சேர்ந்தவை.

ஓ சகோதிரர்களே! தோற்றத்தையும் அதன் மடிவையும் உணர்ச்சியின் வளர்ச்சியையும் அதன் விருத்தியையும் ரூபஸ்கந்தம், வேதனாஸ்கந்தம், சன்ஹாஸ்கந்தம், சங்காராஸ்கந்தம் இவைகளின் தனித்தனி வேறுபாடுகளை ஒருவன் விவரித்துக் கூறுவது அசாத்தியம்.

ஓ! சகோதிரர்களே! சகலமும் அநித்யமாயிருக்கிறது. தேகம் அநித்யம், உணர்வு அநித்யம், காட்சி அநித்யம், அறுவகை இந்திரியங்களால் உண்டாகும் உணர்ச்சி அநித்யம், தோன்றி கெடுவதும் விசாரித்து மயங்குவதுமாகிய அறிவும் அநித்யம். ஆனால் எது அநித்யமாயிருக்கின்றதோ அதே துக்கம், நிலையற்றதும் வருத்தமுள்ளதும் மாறக்கூடியதுமான இவைகளை ஒருவன் இது என்னுடையது இதே நானாயிருக்கின்றேன் இதே நான் என்று கூற பாங்கிறாது.

ஓ! சகோதரர்களே! எதெது ரூபஸ்கந்தத்தைச் சேர்ந்ததாயிருந்தாலும், லேகனாஸ்கந்தத்தைச் சேர்ந்ததாயிருந்தாலும், சன்ஹாவைச்சேர்ந்ததா பிருந்தாலும், சங்காராவைச் சேர்ந்ததாயிருந்தாலும் அல்லது விக்ஞானத்தைச் சேர்ந்ததா யிருந்தாலும், ஒருவனுடையதாயிருந்தாலும், மற்றவனுடையதாய் இருந்தாலும், சுத்தமாயிருந்தாலும், அசுத்தமாயிருந்தாலும், உயர்ந்திருந்தாலும், தாழ்ந்திருந்தாலும், தூரமிருந்தாலும், அருகிலிருந்தாலும் சத்தியத்தின்படி நுண்ணறிவால் உள்ளதை உள்ளபடி தெரிந்தவன் அவை தன்னுடையதல்ல என்றும் அவனுடையதல்லவென்றும் நான் என்பது கிடையாதென்றுங் கூறுவன்.

ஓ! சகோதிரர்களே! எவனொருவன் தன் தேகத்தால் ஆனந்தப்படுகின்றானோ உணர்வில் ஆனந்தப்படுகின்றானோ காட்சியில் ஆனந்தப்படு கின்றானோ அறுவகை இந்திரியங்களால் உண்டாகும் உணர்ச்சி நிலையினால் ஆனந்தப்படு கின்றானோ அறிவினில் ஆனந்தப்படுகின்றானோ அவன் துக்கத்தில் ஆனந்தப்படு கின்றான்.

துக்கத்தில் எப்போது ஆனந்தப்படுகின்றானோ துக்கத்திலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது. ஆகையால் ததாகதன் கூறுவேனாக.

ஓ! சகோதிரர்களே! இவ்வகை துக்கத்திலுள்ள ஒருவன் எப்படி நகைக்கமுடியும். உலகப் பொருட்களின் பேரில் இச்சைகொண்டு எப்படி ஆனந்திக்க முடியும். உண்மெயாகவே இருளிலிருக்கின்றான். உங்களில் வயதுள்ள ஆணோ பெண்ணோ எண்பது, வயதுள்ளவனோ உள்ளவளோ, தொண்ணூறு வயதுள்ளவனோ உள்ளவளோ, நூறுவயதுள்ளவனோ உள்ளவளோ இவர்களை நீங்கள் பார்த்த தில்லையா? விருத்தாப்பியத்தால் மெலிந்தவர்களையும், கூனர்களையும், பார்த்த தில்லையா. அதேவிதமாறாது உங்களுக்கும் சம்பவிக்குமென்று உணரவில்லையா. அதே மூப்பு உங்களுக்கும் வருமென்று சிந்திக்கவில்லையா. வயதுள்ள ஆணோ பெண்ணோ பெருத்த வியாதிகளால் துன்பப்படுவதைப் பார்த்ததில்லையா. பிணியால் சூழப்பட்டுள்ளவர்களை நிறுத்தி வைத்தாலும் நிற்க சக்தியற்று விழுவதை நீங்கள் பார்த்ததில்லையா. அதேவிதமாய் உங்களுக்கும் சம்பவிக்குமென்று உணரவில்லையா. அதே பிணி உங்களுக்கும் வருமென்று சிந்திக்கவில்லையா ஆணோ பெண்ணோ இறந்து இரண்டு அல்லது மூன்று நாள் இருந்து தேகம் உப்பலிட்டு நீலநிறமாக மாறி கேவலஸ்திதி அடைவதை நீங்கள் பார்த்ததில்லையா. அதே இறப்பு உங்களுக்கும் வருமென்று சிந்திக்கவில்லையா?

ஓ! சகோதிரர்களே! இந்த சம்சாரம் ஆதியந்தமில்லாததாய் இருக்கின்றது. இதன் அந்தரார்த்தத்தை உலகம் அறியாமலே இருக்கின்றது. உலகஜீவர்கள் பிறப்பதும் இறப்பதும் மறுஜனனம் எடுப்பதுமாக மாளா பிறப்பிலும் இறப்பிலும் சுழன்றுக்கொண்டு வருகின்றனர்.

ஓ! சகோதிரர்களே! அனேக ஜென்மங்கள் தோறும் இறப்பாலும், பிறப்பாலும் விரும்பியதை அடையாது விரும்பாததை அடைதல். இவைகளின் துன்பத்தால் ஒவ்வொரு ஜென்மத்திலும் புலம்பி கண்ணீர்விட்ட ஜலத்தை அளவிடில் நான்கு மஹாசமுத்திரமும் இதன் முன் நிற்கா.

ஓ! சகோதிரர்களே! அனேக ஜென்மங்கள் தோறும் ஒவ்வொரு பிறப்பிலும் தாய் இறந்ததைப்பற்றி புலம்பவில்லையா, குமாரன் இறந்ததைப் பற்றி புலம்பவில்லையா. ஒவ்வொரு பிறப்பிலுஞ் சகோதிரர் இறந்ததைப்பற்றி புலம்பவில்லையா. சகோதரிகள் இறந்ததைப்பற்றி புலம்பவில்லையா. ஒவ்வொரு பிறப்பிலும் பொருள் காணாததைப்பற்றி துக்கிக்கவில்லையா. இவ்வகையாக தாய் தகப்பன், குமாரன், குமாரத்தி சகோதிரர் சகோதிரிகள் வைவொரு பிறப்பிலும் இறந்ததைக் கண்டுங்காணாத பொருள்களைப்பற்றி கண்டும் இவைகளால் அநேக ஜென்மங்களாக ஒவ்வொரு பிறப்பிலும் புலம்பிய கண்ணீரின் வெள்ளப்பெருக்கத்தின் முன் நான்கு மஹாசமுத்திரங்களும் நிற்கா.

**சீவக சிந்தாமணி**

பிரிந்தவற் கிரங்கிய பேதுற்றமுத நங்கண்ணினீர்கள்
சொரிந்தவை தொகுத்து நோக்கிற்றொடு கடல் வெள்ளமாற்றா
முரிந்தநம் பிறவிமேனாண் முற்றிழை இன்னு நோக்கால்
பரிந்தழுவதற்குப் பாவா அடியிட்டவாறு கண்டாய்.

ஓ. சகோதிரர்களே! அனேக ஜென்மங்களில் நீங்கள் ஒவ்வொரு பிறப்பிலும் கொலை புரிந்து அவைகளால் பெருகிய இரத்தவெள்ளத்தின் முன் நான்கு மஹாசமுத்திரங்களும் நிற்கா.

ஓ! சகோதிரர்களே! அனேக ஜென்மங்கள் தோறும் ஒவ்வொரு இறப்பிலும் பிறப்பிலும் திருட்டினாலும் விபச்சாரத்தாலும் பெருகிய இரத்தவெள்ள பெருக்கின் முன் நான்கு மஹாசமுத்திரங்களும் நிற்கா.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக அநேக ஜென்மங்களின் பிறப்பிலும் இறப்பிலும் ஜீவர்களால் உண்டான இரத்த வெள்ளத்தின் பெருக்கும், கண்ணீரின் பெருக்கும் உலகிலுள்ள நான்கு மஹாசமுத்திரங்களைவிட பெரிதாகவே இருக்கின்றது.

ஓ! சகோதிரர்களே! அநேக ஜென்மங்கள் தோறும் துக்கத்தை அனுபவித்து வருகின்றீர்கள். அநேக ஜென்மங்கள் தோறும் நிற்பாக்கியராயிருந்து வருகின்றீர்கள். அநேக ஜென்மங்கள் தோறும் இறந்து இறந்து சுடலையும் நிறம்பிவிட்டது. பூமியில் எலும்பு தோன்றா இடமில்லை. பட்டதுயரம் போதும். மெய்யாகவே என் சகோதிரர்கள் இவ்வகை துக்கத்தில் வெகுநாள் வாதைப்படவேண்டாம். சுருக்காகவே இத்துக்கத்தினின்று தப்பித்துக் கொள்ளுங்கள். பட்ட துயரம் போதும்.

கதமஞ்சே பிக்கவேதுக்கங் அறியசக்யானி?

ஜாத்தியி துக்கா . ஜராபி துக்கா , வியாதிபி துக்கா, மரணாபி துக்கா,

சோகா, பிரிதேவா துக்கத் தாம்னாஸ்ஸே உபாயாஸாபி துக்காயாங்கவிஸ்ச்சங்கல்பாஸ்திடம் பிதுக்கங் ஸஞ்செட்டேனோ பஞ்சஞ்சப்பதங் அற்சந்தங் துக்கா இதங்விஜ்ஜாதி பிக்கவேதுக்கங்

அரியசக்யானி.

**இரண்டாவது துக்கோற்பத்தி சத்யம்**

ஓ! சகோதிரர்களே! துக்கோற்பத்தியாகிய தூய்மெயான சத்தியம் யாதென்பீரேல் - அவைகள் முறையே இன்பத்தைநாடி ஆவலுண்ட அவா, அங்குமிங்கும் எக்காலும் சந்தோஷத்தை நாடும் அவா, அவையே - காமதன்ஹா புலன்களால் உண்டாகும் அவாவென்னப்படும். பவாதன்ஹா - உயிர் வாழ்க்கையின் பேரில் உண்டாகும் அவா என்னப்படும். விபவாதன்ஹா - அநித்தியமாகும் சொற்ப இன்பத்தாலுண்டாகும் அவாவென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! இவ்வேட்கையின்பற்று எங்கிருந்து உதிக்கின்றது, எங்குநின்றெழும்புகின்றது, எங்கு நிலைக்கின்றது, இதன் வேர் எங்கிருக்கின்றது என்பீரேல்;

(அறுவகை சேதனராஜ்யங்கள்) கண்ணானது மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும், இன்பசுகத்தைத் தருவதுமாய் இருக்கின்றது. அவ்விடத்திலேயே அவ்வவா உதித்து எழும்பி நிலைத்து வேரூன்றுகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம்

இவைகளானது மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும், இன்ப சுகத்தைத் தருவதுமாய் இருக்கின்றது. அவ்வவ்விடங்களிலேயே அந்தந்த அவாக்களுதித்து நிலைத்து வேரூன்றுகிறது.

(அறுவகை சேதனா இந்திரியங்கள்) உருவங்கள், ஒலிகள், கந்தங்கள், சுவைகள், தேகத்தின் பரிசங்கள், மனத்தில் எண்ணங்கள் யாவும் மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும் இன்பசுகத்தைத் தருவதுமாய் இருக்கின்றன. அவ்வவ் இடங்களிலேயே அந்தந்த அவாக்கள் உதித்து தோன்றி நிலைத்து வேரூன்றுகின்றது.

(அறுவகை ஆரமணங்கள்) மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் இவைகளின் பற்றால் உதிக்கும் அறிவுகள், உணர்ச்சிகள் மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும் இன்ப சுகத்தைத் தருவதுமாய் இருக்கின்றன. அவ்வவ்விடங்களிலேயே அந்தந்த அவாக்கள் உதித்து எழும்பி நிலைத்து வேரூன்றுகிறது.

(அறுவகை யூறுகள்) மெய் சுகித்தவிடத்தை மனம் பற்றுதலும், வாய் உருதிக்கவிடத்தில் மனம் பற்றுதலும், கண்கண்ட பொருளை மனம் பற்றுதலும், மூக்கு முகர்ந்த வாசனையை மனம் பற்றுதலும், செவி கேட்ட நாதத்தை மனம் பற்றுதலுமாகிய பாசப்பற்றில் மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும், இன்புளுகந் தருவதுமாயிருந்து அவ்வவ் விடங்களிலேயே அந்தந்த அவாக்கள் உதித்து எழும்பி நிலைத்து வேரூன்றுகிறது.

(அறுவகை உணர்ச்சிகள்) பார்வை, கேள்வி, முகரல், உருசித்தல், பரிசித்தல், எண்ணல் இவைகளினின்று உதிக்கும் உணர்ச்சிகள் மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும், இன்ப சுகத்தைத் தருவதுமாயிருந்து அவ்வவ்விடங்களிலேயே அந்தந்த அவாக்கள் உதித்து எழும்பி நிலைத்து வேரூன்றுகிறது.

(அறுவகை சைதன்யங்கள்) பார்வை, கேள்வி, முகரல், உருசித்தல், பரிசித்தல், எண்ணல் இவைகளின் பேரிலுள்ள சிந்தனைகளும் நோக்கமும் மனிதர்களைச் சந்தோஷிக்கச்

செய்து இன்ப சுகங்களைத் தருவதுமாயிருக்கின்றன. அவ்வவ விடங்களிலேயே அந்தந்த அவாக்களுதித்து எழும்பி நிலைத்து வேரூன்றுகின்றது.

(அறுவகை அவாக்கள்) பார்வையாலுதிக்கும் அவா பற்று. கேட்டலால் உண்டாகும் அவா பற்று. உருசித்தலால் உண்டாகும் அவா பற்று. பரிசித்தலால் உண்டாகும் அவா பற்று. எண்ணங்களால் உண்டாகும் அவா பற்று. இத்தியாதி பற்றுக்கள் யாவும் மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும் இன்பசுகத்தைத் தருவதுமாயிருந்து அவ்வவ்விடங்களிலேயே அந்தந்த அவாக்கள் உதித்து எழும்பி நிலைத்து பாசபற்றில் வேரூன்றுகிறது.

(அறுவகை சிந்தனைகள்) பார்வையின் மீதும், கேட்டலின் மீதும், முகர்தலின்மீதும், சுவைத்தலின் மீதும், பரிசித்தலின் மீதும், எண்ணங்களின் மீதும் எண்ணுவதும் மறப்பதும் மறுபடியுந் தோன்றுவதுமாகிய உணர்வுகள் யாவும் மனிதர்களை சந்தோஷிப்பிக்கச் செய்வதும் இன்பங்களைத் தருவதுமாயிருந்து அவ்வவ்விடங்களிலேயே அந்தந்த எண்ணமும், மடிவும், மீளும் எண்ணமும் உதித்து எழும்பி நிலைத்து வேரூன்றுகிறது.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு மனிதன் கண்ணால் ரூபத்தைப் பார்ப்பதும், காதால் சப்தத்தைக் கேட்பதும், மூக்கால் வாசனை அறிவதும், நாவால் உருசியைப் பார்ப்பதும், தேகத்தால் சுகத்தை அறிவதும், மனத்தால் எண்ணங்களை வளர்ப்பதுமாய் இருக்கின்றான். இவைகள் ஒன்றில் சுகத்தைக் காணுவானாயின் அதனில் ஆழ்ந்த நாட்டமுள்ளவனாய் இருப்பான். அதை

விட்டு இவைகள் ஒன்றில் அசுகத்தைக் காணுவானாயின் வெறுப்படைவான். ஒருவன் சுகவேதனா சுகவுணர்ச்சியில் அப்பியாசப்பட்டாலும், துக்கவேதனா துக்க உணர்ச்சியில் அப்பியாசப்பட்டாலும், உபேக்ஷாவேதனா சுகத்திற்குந் துக்கத்திற்கும் நடுநிலையான உணர்ச்சியில் அப்பியாசப்பட்டாலும் அவைகளை நல்லவை என்று நம்பி அதே உணர்ச்சியில் தேற்சியடைந்து அவைகளில் ஐக்கியப்படுகின்றான். இவ்வகைச் செயலில் தேற்சியடைந்து ஐக்கியப்படு கிறவனிடம் (தன்ஹா) ஆசை உதிக்கின்றது.

தன்ஹா அவாவிலிருந்து (உபாதானா) பற்று உண்டாகின்றது. உபாதானா பற்றிலிருந்து (பவா) பிறப்புக்கு மூலமான கருமக்கூட்டம் உண்டாகின்றது. பவாவென்னுங் கருமக் கூட்டத்தினின்று (ஜாத்தி) பிறப்புண்டாகின்றது. பிறப்பினின்று பிணியும், மூப்பும், மரணமும், வலியும், அழுகையும், துன்பமும், கவலையும், ஏக்கமுமாகிய வினைப் பயன்கள் உண்டாகின்றன. துன்பமென்கின்ற கூட்டத்திற்கெல்லாம் இவைகள் தான் உற்பத்தி என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! மேற்கூறியுள்ளவைகளையே துக்கோற்பத்தியின் தூய்மெயான சத்தியமென்னப்படும். மனுக்கள் இம்மிருதுவான அவாவினால் தாண்டப்பட்டும், இம்மிருதுவான அவாவினால் இழுக்கப்பட்டும், இம் மிருதுவான அவாவினால் நடமாடியும் வருகின்றனர். இவ்வித வீணவாவால் அரசர்களுடன் அரசர்கள் போர்புரிவதும் நிமித்தகர்களுடன் நிமித்தர்கள் வாதிடுதலும், குடியானவர்களுடன் குடியானவர்கள் சச்சரவு செய்தலும், தாய் பிள்ளையிடம் சண்டை செய்தலும், பிள்ளை தாயிடஞ் சண்டை செய்தலும், தகப்பன் பிள்ளையுடன் போர் புரிதலும், பிள்ளை தகப்பனுடன் போர் புரிதலும். அண்ணன் தம்பியுடன் வழக்காடுதலும் தம்பி அண்ணனுடன் வழக்காடுதலும், அண்ணன் தங்கையை மனனோகப் பேசுதலும், தங்கை அண்ணனை மன்னோகப் பேசுதலும், சகோதிரிகளுடன் சகோதிரிகளும், சினேகிதர்களுடன் சினேகிதர்களும் போர்புரிய நேரிட்டு கற்களாலும், தடிகளாலும், கத்திகளாலும் சண்டை செய்து மாளுதலும் காயமடைந்து வாதைப்படுகிறவர்களுமாய் இருக்கின்றார்கள்.

ஓ! சகோதிரர்களே! இவைகள் தான் துக்கத்தின் மிருதுவான அவா. இவைகள் தான் காணக்கூடிய துக்கங்கள். இவைகள் தான் மிருதுவான அவா வினால் உண்டானவைகள். மிருதுவான அவாவினால் கட்டுப்பட்டவைகள். மிருதுவான அவாவினால் நிலைக்கப்பட்டவைகள். மிருதுவான அவாவினால் வேரூன்றியவைகள். இவ்வகை மிருதுவான் அவாவாலன்றோ அவ்வகைத்தான பெருங் கலகங்கள் பயிரங்கமாய் துக்கத்தை உண்டாக்குகின்றது.

பின்னும் ஓ! சகோதிரர்களே! இம்மிருதுவான அவாவின் தூண்டுதலாலும், இம்மிருதுவான அவாவின் நடமாட்டத்தினாலும் இவ் வகையானப் பிரயோசனமற்ற அவாக்களுண்டாய் மக்களுக்குள் உண்டாக்கிய உடன்படிக்கைகளை ஒருவருக்கொருவர் மறைத்தாலும், அன்னியர் பொருளை அபகரித்தலும், ஒருவருக்கொருவர் கோட்சொல்லித் திரிதலும், மாங்கல்ய ஸ்திரீகளைக் கற்பழித்தலும் ஆகிய துற்செயல்களுக்காய் அரசர்களால் கசைகளால் அடிக்கச் செய்வதும், தடிகளால் அடிக்கச்செய்வதும், பிரம்புகளால் அடிக்கச்செய்வதும், கை கால்களை வெட்டச் செய்வதும், ஒரு காலையோ ஒரு கையையோ வாங்கச் செய்வதும், நாய்களால் கடிக்கச் செய்வதும், கற்காணத்திலாட்டச்செய்வதும், தலையை துண்டித்தலுமாகியக் கொடிய தண்டனைக்கு உள்ளாகின்றார்கள்.

ஓ ! சகோதிரர்களே ! இவைகள் யாவும் மிருதுவான அவாவினால் உண்டான துக்கம். அவாவின் நடமாட்டத்தால் உண்டான துக்கம். மிருதுவான அவா இழுப்பதினால் உண்டான துக்கம். மிருதுவான அவாவில் ஐக்கியப்பட்டதால் உண்டான துக்கம். சீவகோடிகள் இம்மிருது அவாவினால் தூண்டப்பட்டும், இம்மிருதுவான அவாவின் ஐக்கியத்தினால் நடமாடியும் வருகின்றது. இவ்விதப் பிரயோசனமற்ற அவாவினால் தங்கள் தேகத்தால் தீயச்செய்கைகளைச் செய்தாலும், வாக்கால் சுடச் சொல்லுதலும், மனத்தால் தீய எண்ணங்களை எண்ணுதலுமாய் இருக்கின்றனர். மனோ வாக்குக் காயங்களால் செய்துவந்தத் தீயச்செயல்களின் முடிவு மரணமேயாம். மரணமடைந்த பிறகோ கன்மக்கூட்டமென்னுந் தீவினைத் திரட்சியே ஓர் உருகொண்டு மறுபிறவித் தோன்றி முன்தொடர்ச்சியைத் தொட்டு வளர்ந்து பயனுகர்ந்து கேவலநிலை அடைந்து பிறப்பதும் இறப்பதுமாகியத் துக்கச்செயலில் காற்றில் பாந்துவிடுவேன் என்றாலும், சமுத்திரத்தில் ஒளிந்துக்கொள்ளுவேன் என்றாலும், மலைகளின் குகைகளில் ஒளிந்துக் கொள்ளுவேன் என்றாலும் வினைப்பயன் விடுவதில்லை. காரணம், வினையே திரண்டு உரு தோன்றலால் அவனவன் செய்வினைக்கீடாய் மாளாப்பிறவியில் சுழன்று பிறப்பதும், துக்கத்தை அநுபவிப்பதுமாகியச் செயல்கள் யாவும் மிருதுவான அவாவின் தூண்டுதலினாலும் மிருதுவான அவாவின் ஐக்கியத்தினாலுமேயாம்.

ஓ! சகோதிரர்களே! மஹா சமுத்திரமுங் காய்ந்து தண்ணீரில்லாமல் வரண்டுபோகுங்காலம் வரினும் வரும். ஆனால் இத்துக்கத்தின் முடிவை சொல்லத் தரமன்று. இறப்பதும் பிறப்பதும், பிறப்பதும் இறப்பதுமாகிய கன்மச் சக்கிரத்தின் முடிவை யாவரால் சொல்லமுடியும்.

ஓ! சகோதிரர்களே! இப்பூமியும் அக்கினிக்கு இரையாகி ஒழிந்து தோன்றுங்காலம் வரினும் வரும். ஆனால் இத்துக்கத்தின் ஒழிவை யாரால் கூறத்தகும். உலக சீவர்கள் அவாவின் ஏதுவால் துக்க நிகழ்ச்சியில் மூழ்கி இறப்பதும் பிறப்பதும், பிறப்பதும் இறப்பதுமான கன்மச் சக்கரத்தில் சிக்குண்டு சுழல்கின்றார்கள். இச்சிக்கை அறுத்து கன்மச்சக்கரத்தினின்று விடுபடுங்காலம் யாவரால் சொல்ல முடியும். ஏனென்பீரேல், துக்கத்திற்குக் கொண்டுபோகும் வழி விசாலமாய் இருக்கின்றது.

**மூன்றாவது துக்க நிவாரண சத்யம்**

ஓ! சகோதிரர்களே! துக்கநிவாரண தூய்மெயான சத்தியம் யாதென்பீரேல், அனாவைப் பற்றற ஒழித்து அதைத் தன்னைவிட்டு நீக்கித் தள்ளுவதும், தன்னை அதிலிருந்து பிரித்துக்கொண்டு அதற்கிடங்கொடாமல் முற்றும் நாசஞ்செய்தலினால் உண்டாகும் முற்கூறியுள்ள அவாவின் அழிவுதான் நிவாரண மூலமாகும். இந்த அவா எவ்விதமாக வந்து தோன்றுகிறதென்றும், மறைகிறதென்றும் உங்களுக்குத் தெரியுமா, எவ்விதமாகக் கசிந்து உருகுகிறதென்றும் உங்களுக்குத் தெரியுமா. இவ்வுலகிலுள்ள மக்களை எவ்வெவ்விடங்களில் சந்தோஷிப்பிக்கச்செய்வதும் இன்ப சுகந்தருவதுமாய் இருக்கின்றனவே பவ்வவ்விடங்களில் எல்லாம் இவ்வாசையானது தோன்றி மறைகிறதும் கசிந்து உருகுகிறதுமாய் இருக்கின்றது. இவ்வகையால் அவாவை ஒழிக்க ஒருவன் காமதன்ஹா என்னும் புலன்களால் உண்டாகும் அவாவிலிருந்து விடுதலைப்பட்டாலும் பவாதன்ஹா என்னும் உயிர்வாழ்க்கையின் பேரில் உண்டாகும் அவாவிலிருந்து விடுதலைப்பட்டாலும் முழுபற்றை ஒழிக்கமுடியாது. ஏனெனில் இவ்விரண்டுவித அவா முற்றும் ஒழிந்தால் உபாதானாவாகும் பற்றொழியும். அப்பற்றொழிய பிறப்புக்கு மூலமாகும் கருமக் கூட்டங்கள் ஒழியும். கருமக் கூட்டங்கள் ஒழியப் பிறப்பொழியும். பிறப்பொழிய மூப்பொழியும். மூப்பொழிய மரணமொழியும்,

மரணமொழிய அதனவத்தை ஒழியும். அவத்தை ஒழிய அழுகை ஒழியும். அழுகை ஒழிய கவலையும் ஏக்கமும் ஒழியும். துன்பமென்னும் இராட்சியத்திற்கெல்லாம் இதுதான் நிவர்த்தி இதுதான் துக்க நிவாரணமென்னுந் தூய்மெயான சத்தியம்.

**நான்காவது துக்க நிவாரணமார்க்க சத்யம்**

ஓ! சகோதிரர்களே! துக்க நிவாரணமென்னும் தூய்மெயான சத்தியம் யாதென்பீரேல், அவைதான் பரிசுத்த அஷ்டாங்கமார்க்கமென்னப்படும்.

1. சம்மாதித்தி நற்காட்சி 1. பிரஞ்ஞை ஞானம்
2. சம்மா சங்கப்போ நற்சிந்தை
3. சம்மா வாசா நல்வசனம்
4. சம்மா கம்மந்தோ நற்செய்கை 2. சீலம் நீதி
5. சம்மா அஜீவோ நல் வாழ்க்கை
6. சம்மா வாயமோ நல்ஊக்கம்
7. சம்மா சத்தி நற்கருத்து 3. சமாதி சலனமற்ற மனம் மன ஆறுதல்.
8. சம்மா சமாதி நல் அமைதி

ஓ! சகோதிரர்களே! இப்பரிசுத்தமும் நெருக்கமுமாகிய பாதையைக் கண்டுபிடிப்பதற்கே என். சக்கிரவர்த்திப் பீடத்தைத் துறந்தேன், என் மனைவி மைந்தனை விடுத்தேன், உற்றார் உரவினரை மறந்தேன், சுக புசிப்பைத் தவிர்த்தேன், சுகநித்திரை அகன்றேன், இத்தகைய இன்பசுகங்கள் யாவும் தோன்றுவதும், மறைவதும், சிற்றின்பத்தைக்காட்டுவதும், பெருந்துக்கத்தில் ஆழ்த்துவதும், நித்தியம் போலாளுவதும், அநித்தியத்தில் மாளுவதுமாகிய செயல்களில் துக்கமே சுகத்திற்கு வழியாகவும் அநித்தியமே நித்திய நடையாகவும், துவிதமென்னும் நாமரூபமே அத்துவித நிருவாணமாகுந் ததாகதமுற்றேன். இதனை நீங்கள் ஒவ்வொருவரும் ஆழ்ந்து சிந்தித்து அதனினின்று சாந்தத்துள் ஐக்கியப்பட்டு பகுத்தறிவுண்டாகி தெளிவடைந்து மனவமைதி உண்டானவுடன் துக்கமற்று வாதனை அற்று அழுகையற்று தோன்றி தோன்றி மறையும் பிறப்பற்று சகல துன்பங்களுமற்று ததாகதமென்னுஞ்

சலனமற்ற நிலையை அடைவீர்கள். இதற்குச் சமதையான வழி வேறொன்றுங் கிடையாது.

ஓ! சகோதிரர்களே! இப்பரிசுத்த மார்க்கத்தில் நடப்பீர்களாகில் துக்கத்தின் முடிவைக் காணுவீர்கள். இத்துக்கத்தை நீக்குவதற்கு இன்னொரு வரைத் தேடவேண்டாம். அவரவர்களுடைய துக்கம் அவரவர்களைத் தொடர்ந்துக்கொண்டே நிற்கின்றது. ததாகதரோ வழிகாட்டியாவேன் நீங்கள் ஒவ்வொருவரும் அவ்வழியில் நடந்து சோம்பலின்றி யாத்திரையை முடிப்பீர்களாக.

ஓ! சகோதிரர்களே! என் வாய்மெய்ப் பொக்கிஷத்தை செவிகளில் நிறப்புங்கள். ஏனெனில் அழிவற்றதைக் கண்டுபிடித்துள்ளேன் என்னால் கூறுவது சாத்தியம். தாதாகதர் கூறியபடி நடப்பீர்களாகில் இல்வாழ்க்கையிலும் பரிசுத்த சுகவாழ்க்கையை அடைவீர்கள். இப்பரிசுத்தவாழ்க்கையை அடைவதற்கே பெருங் குடும்பக்குமரர்கள் இனி வெளியேறி இப்பரிசுத்த மார்க்கத்தே சென்று சுகநிலைகண்டு புத்தர்களாவார்கள்.

**அஷ்டாங்கமார்க்கத்தின் முதற்படி - சம்மாதித்தி**

**நற்காட்சி உணர்வு**

ஓ! சகோதிரர்களே! நற்காட்சியின் உணர்வுயாதென்பீரேல், ஒரு மாணாக்கன் துற்கருமம் இன்னதென்றும், துற்கருமத்திற்கு மூலம் இது வென்றும், நற்கருமம் இன்னதென்றும், நற்கருமத்திற்கு மூலம் இன்னதென்றுங் கண்டுணர்வானாயின் இதையே நற்காட்சி என்று கூறப்படும்.

ஓ! சகோதிரர்களே! அகுசலம் அல்லது துற்கருமம் என்பதை விளக்குவாம். 1. கொலை, சீவப்பிராணிகளைத் துன்பஞ் செய்தல் துற்கருமம் . 2. களவு, அன்னியர்பொருளை அபரித்தல் துற்கருமம் 3. விபச்சாரம், அன்னியர் மனைவியை இச்சித்தல் துற்கருமம். (இதுவே காயகன்மா) தேகத்தாலாகுங் குற்றங்கள் 4. பொய், தாங்கள் காணாததையும் அறியாததையும் கண்டதைப் போலும் அறிந்ததைப் போலுங் கூறுதல் துற்கருமம். 5.

கோட்சொல்லுதல், ஒருவருக்கொருவர் கோட்சொல்லிவிரோதத்தைப் பெருக்கி அன்பைக் கலைத்தல் துற்கருமம் 6. கடுஞ்சொல், மற்றொருவர் மனம் புண்படக் கூறுவது துற்கருமம் 7. வீண் வார்த்தை , பயனற்ற வார்த்தைகளைப் பேசுதலும், பழிக்கூறித் திரிதலும், வெறும் பந்தியங் கூறுதலும், வித்தை விரும்பாதுளரலும் துற்கருமம். (இதுவே வஸிகன்மா) வாக்கினால் உண்டாகுங் குற்றங்கள் 8. பொருளாசை, அன்னியர் பொருட்களின் பேரில் அவாக்கொண்டலைதல் துற்கருமம். 9. துட்டகுணம், அன்பில்லாமல் மற்றவர்களைச் சீறி சினமிகுத்தல் துற்கருமம் 10. கெட்ட எண்ணம், எதிரிகள் நற்சுகத்தையேனும் செல்வத்தையேனும் பொறாது முறுமுறுத்தல் துற்கருமம். (இதுவே மனோ கன்மா) மனத்தாலாகுங் குற்றங்கள்.

ஓ! சகோதிரர்களே! இத்தியாதி துற் கருமத்திற்கும் மூலம் யாதென்பீரேல், லோபா - பேராசையே துற்கருமங்களுக்கு மூலம். தோஸா - கோபமே துற்கருமங்களுக்கு மூலம் மோஹா - காமியமே துற்கருமத்திற்கு மூலம். லோபமும், தோஸமும் எப்போதும் மனதைத் தொடர்ந்துவரும்

ஓ! சகோதரர்களே! குசலா அல்லது நற்கருமம் யாதென்பீரேல், 1. கொலை செய்யாதிருத்தல், அன்னியப்பிராணிகளுக்குத் துன்பஞ் செய்யா திருத்தல் நற்கருமம் 2. களவு செய்யாதிருத்தல், அன்னியர் பொருளை கனவிலேனும் அபகரிக்காதிருத்தல் நற்கருமம் 3. விபச்சாரஞ் செய்யாதிருத்தல், அன்னியர் தாரத்தை மனதிலேனும் இச்சியாதிருத்தல் நற்கருமம். (இதுவே காய நற்கன்மா )

4. பொய் சொல்லாதிருத்தல், தான் காணாததையும் அறியாததையுஞ் சொல்லுதற்கு அஞ்சுதல் நற்கருமம் 5. கோட்சொல்லாதிருத்தல், ஒருவர் வார்த்தையை மற்றவருக்கு ஓதி கலகஞ்செய்தற்கு நாணுதல் நற்கருமம் 6. கடுஞ்சொல் கூறாதிருத்தல், அன்னியரை மனநோகப் பேசாமல் அடக்கத்தைக் கருதுதல் நற்கருமம் 7. வீண் வார்த்தைப் பேசாதிருத்தல், பயனற்ற வார்த்தைகளைப் பேசாதொழித்தல் நற்கருமம். (இதுவே வஸீநற்கன்மா) வாக்கின் நற்கருமம்.

5. பொருளாசை இல்லாதிருத்தல், அன்னியர் பொருளின் ஆசையை அகற்றுதல் நற்கருமம் 9. துஷ்டகுணம் இல்லாதிருத்தல், கொடிய எண்ணங்கள் மனதில் எழாமல் தடுத்தல் நற்கருமம் 10. கெட்ட எண்ணங்களைத் தடுத்தல், மற்றவரை வஞ்சிக்குங் குணத்தை அகற்றுதல் நற்கருமம். (இதுவே மனோ நற்கன்மா )

ஓ! சகோதிரர்களே! இத்தகைய நற் கருமங்களுக்கு மூலங்கள் யாதென்பீரேல், அலோபா - பேராசையை அகற்றுவதே நற்கருமத்திற்கு மூலம். அத்துவேஷா - கோபத்தை அகற்றுவதே நற்கருமத்திற்கு மூலம். அமோஹா - காமியத்தை அடக்குதலே நற்கருமத்திற்கு மூலம்.

ஓ! சகோதிரர்களே! சிஷியன் ஒருவன் துக்கம் இன்னதென்றும் துக்க உற்பத்தி இன்னதென்றும், துக்க நிவாரணம் இன்னதென்றும், துக்க நிவாரண மார்க்கம் இன்னதென்றும் அறிந்துக்கொள்வதே நற்காட்சி என்னப்படும்.

அங்ஙனமின்றி வீண்காலப் போக்கன் ஒருவன் ததாகதரை நோக்கி ஐயனே, உலகம் நித்தியமா? அநித்தியமா? உலகம் ஒருவரால் உண்டாக்கப் பட்டதா? தானே தோன்றியதா? ஒருவன் உண்டாக்கினாரெனில், உன்டாக்கினவர் உண்டான தெவ்விடம். தானே தோன்றிற்றென்னில் முன்னிருந்தே தோன்றிற்றா இல்லாமல் தோன்றிற்றா என்றுங்கேட்க முயலுவான்.

இத்தகைய வீண் வினாக்களினால் அருந்தியுந் தாகந் தீரப்போகிறதில்லை, புசித்தும் பசியாரப்போகிறதில்லை என்னும் பழமொழிக்கிணங்கப் பாழ்விடை தோன்றி பழியும் பாவமுந் திரண்டே உருபெறும்.

அதாவது, விஷங்கலந்த அம்பினால் தைக்கப்பட்ட ஒருவன் அவ்வம்பைப் பிடிங்கி எறிந்துவிட்டு அவ்விஷத்தை முறிக்கக்கூடிய அவுடதங்களைப் பூசாமலும் அருந்தாமலும் இவ்வம்பானது யாவரால் எய்யப்பட்டது எய்தவன் அரச குடும்பமா அன்னிய குடும்பமா அவன் சத்துருவா நமது மித்துருவா அவ்வம்பிற்கு விஷமேற்றித் தந்தவர்கள் தன்னவர்களா அன்னியர்களா என்று விசாரித்தறிதற்குள் விஷமேறி மடிவது திண்ணம்.

உமியைக்குத்தி கைசலித்தவாறுபோல் உலகத்தையும், உலகத் தோற்றத்தையும் விசாரிக்கும் அன்பர்கள் தன்னை நோக்கித் தான் நித்தியனா அநித்தியனா என்றுந் தன் செயல்கள் யாவும் நித்தியச் செயல்களா அநித்தியச் செயல்களா என்றும், தான்தோன்றிய தேகம் தோன்றும் வஸ்துவினின்று தோன்றியதா தோன்றா வஸ்துவினின்று தோன்றியதா என்றும் தோன்றும் வஸ்துவினின்று தோன்றுவது காட்சியாதலின் பூர்வப்பற்றிருந்தே தோன்றினானா இல்லாமல் தோன்றினானா என்று உசாவுவனேல் தோன்றும் வஸ்துக்களின்று தோற்றவைக்கும் பற்றுக்களாகும் இராகத்துவேஷ மோகங்களை அறுத்து மறுபிறவி தோற்றாமலிருக்கும் நிப்பானம் பரமாங் சுகமென்னும் நிருவாண பரமசுகமடைவான்,

உலகம் நித்தியமாய் இருந்தால் என்ன அநித்தியமாய் இருந்தால் என்ன உலகம் ஒருவனால் உண்டு செய்தால் என்ன தானே தோன்றினால் என்ன. உலகம் முடிவு பெற்றால் என்ன முடியாமல் இருந்தால் என்ன.

ஒவ்வொருவனும் பிறப்பில் தோன்றி பிணியடைவதும், மூப்படைவதும், மரணமடைவதுமாகிய துக்கவிருத்தியால் அழுகையுங் கவலையும் ஏக்கமும் பெருகி மாளாக்கவலையால் மடிவதைக்கண்ணுற்றும் அம்மடிவின் செயலை உணரா சோதிரர்களே இப்பிறவியிலேயே அத்துக்கத்தினின்று விலகி தப்பித்துக்கொள்ளும்படி உங்களை ஜாக்கிரதைப்படுத்துகின்றேன்.

பரிசுத்தப் புருஷர்களிடம் அணுகாதவனும், பரிசுத்தப் புருஷர்களின் போதனையைக் கேளாதவனும், பரிசுத்தப் புருஷர்கள் பழகும் ஒழுக்கத்திற் பழகாதவனுமான ஒருவனுக்கு நற்கருமமும் அதற்கு மூலமும் யாதென்று தெரியாது. அதன் நிலை தெரியாமல் தடுக்க முயல்வான்.

காரணம்.- நன்மெய் இன்னதென்று தெரியாமெயினாலேயும் நற்கருமத்திற் பழகாததினாலேயுமாம்.

இவ்வகை நிலைமெயிலிருப்பவன் (1) உச்சேத அல்லது விபவதிருஷ்டி. இறந்த பிறகு நான் எனும் பொருள் அழிந்துவிடுமென்றும், (2) சஸ்ஸேத அல்லது பவதிருஷ்டி இறந்த பிறகு நான் எனும் பொருள் நிலைத்திருக்குமென்றும் ஆகிய இவ்விரண்டு நம்பிக்கைகளால் சக்காயதிருஷ்டி தேகம் நிலையுள்ளதென்றும் மாய்கையில் சிக்குப்பட்டவனாகி புறக்கிரியைகளிலும் காமவிகாரத்திலும் கோபத்திலும் முழு நம்பிக்கை வைத்து தன் இருதயத்தை சந்தேகமென்னும் இருட்டறைக்குச் செல்லவிடுகின்றான்.

இவ்வகை இருட்டறை என்னும் வலையிலகப்பட்டுள்ள ஒருவன் தன்னைத்தான் எப்படி விடுதலை செய்துக்கொள்ளமுடியும்.

இவைகள் அவனுக்கு உண்மெயாக தெரியாதாதலால் இவ்வலையில் சிக்குண்டு தாழ்ந்த பிறவிக்கேகுகின்றான்.

ஏனெனில் அவைகளை அவன் அதனதன் கிளர்ச்சியில் தடுக்காமல் விட்டபடியால் துற்கருமக் களிம்பு தடிப்பேறிவிடுகின்றது,

சிந்திக்கவேண்டிய முக்கிய விஷயங்களில் பழக்கமில்லாமலும் சிந்திக்கத்தகாத விஷயங்களில் பழக்கமுள்ளவனுமாகிய ஒருவன் பிரயோசனமற்றதை சிந்திப்பானன்றி பிரயோசன முள்ளவைகளை சிந்திக்கமாட்டான்.

முக்காலங்களைப்பற்றிய பதினாறுவகை சந்தேகங்களை விவேகக்குறைவால் கீழ்வருமாறு சிந்திக்க ஆரம்பிக்கின்றான்

முன்பிறப்பில் நானிருந்தேனா? இருக்கவில்லையா? முன்பிறப்பில் எவ்விதமாய் இருந்தேன்? முன் என்னிலைமெயிலிருந்து என்னிலைக்கு மாறினேன்? இனிமேல் பிறப்பேனா பிறக்கமாட்டானே? எவ்விதமாய் இருப்பேன்? என்னிலைக்கு மாறுவேன்? நான் இப்போது இருக்கின்றேனா? இல்லையா? நான் யார் ? நான் எவ்விதமாய் இருக்கின்றேன்? இத்தேகம் எங்கிருந்துவந்தது? எங்கே போகப்போகின்றது.

என்னும் வீணான துற்சிந்தனைகளால் ஆத்தும மென்னும் வார்த்தையைப் பற்றிக்கொண்டு ஒருவித அல்லது ஆறுவிதமான எண்ணங்களை உதிக்கச் செய்வான்.

ஆத்தா ஆத்துமா அழியாததென்று எண்ணி அவ்வெண்ணத்தையே உறுதியாக சாதித்தலும் அல்லது அழியாத ஆத்துமா கிடையாதென்று எண்ணி அவ்வெண்ணத்தையே உறுதியாக சாதித்தலும்.

ஓ! சகோதிரர்களே! அல்லது சுத்த ஆன்மாவைக் கொண்டு சுத்த ஆன்மாவைக் கிரகிப்பேன் என்று எண்ணி அதையே உறுதியாக சாதித்தலும் அல்லது சுத்த ஆன்மாவைக்கொண்ட அநாத்தா அனாத்துமத்தை உணர்வேன் என்று எண்ணி அதையே உறுதியாக சாதித்தலும் அல்லது அனாத்துமத்தைக் கொண்டு சுத்த ஆன்மாவை உணர்வேன் என்று எண்ணி அதையே உறுதியாக சாதித்தலும் அல்லது இங்கு எங்கு சுகித்தாலும் என் ஆன்மாவை மறுபடியுங் காணக்கூடும். நன்மெய் செய்தாலுந் தின்மெய் செய்தாலும் என் ஆன்மா காணப்படும். என் ஆன்மா அழியாதது. நிலையுள்ளது. எப்போதும் உள்ளது. மாறுதல் அடையாதது. என் ஆன்மா இவ்விதமாக எக்காலும் நிலையுள்ளது என்பான்.

இவ்வகையால் என் ஆன்மா) என்பவன் (என்) என்பவனுக்கு என்னப்பெயரளிப்பானோ அறியேன். என்வீடு, என் மனைவி, என் பிள்ளை என்பதுபோல் என் ஆன்மா, என் தேகம் என்பதில் என்னென்பவன் பெயர் யாகம் அறியான். இவ்வகை மயக்கத்திற்குள்ளாக்கும் ஆன்மாவே புருஷன் புருஷனே ஆன்மா என்பதும் அறியான். பஞ்சஸ்கந்த திறட்சியே ஆன்மா என்பதும், பஞ்சஸ்கந்த திறட்சிகள் கலைந்தவிடமே அநாத்துமா என்பதும் அறியான். இவைகள் யாவும் உண்மெய் விசாரணை அற்றவர்களின் கோட்பாடுகளாகும்.

ஓ! சகோதிரர்களே! மேற்கூறியவைகள் யாவும் வீண் சிந்தனை, சடுதிநேரச் சிந்தனை, தடுமாற்றுச்செய்யுஞ் சிந்தனை, பொய்ம்மெய் ஆட்டத்தைப் போன்ற சிந்தனை, சிக்குகளை உண்டாக்குஞ் சிந்தனைகளாகும்.

ஓ! சகோதிரர்களே! சத்தியத்தை அறியாத உலகம் மறுபிறப்பென்னும் சக்கரத்தினின்று தப்பித்துக்கொள்ள முடியாது. பிணி, மூப்பு, சாக்காடு, துக்கம், அழுகை, ஏக்கம் இவைகளினின்றுந் தப்பித்துக் கொள்ள முடியாது. இவற்றை ததாகதன் உங்களுக்கு உறுதியாக சொல்லுகின்றேன். உண்மெய்யை உணருங்கள். உண்மெய்யில் அன்பை வளர்த்துங்கள்.

ஓ! சகோதிரர்களே ! சத்தியத்தை அறிந்த பரிசுத்த சிஷியர்கள் பரிசுத்த பருஷர்களுக்கு வந்தன உபசாரமளிப்பர். பரிசுத்த புருஷர்களின் போதனையைத் தெரிந்தவர்களாயிருப்பர். பரிசுத்தப் புருஷர்களிடம் பழகியதால் நல்விஷயத்திற்கு விங்கொடுப்பர். அதினால் நல்விஷயங்களைத் தெரிந்தவர்களாகின்றார்கள். சத்விஷயத்தில் தேறியவர்களாகின்றார்கள். சிந்திக்கவேண்டியவைகள் இவை இவை என அறிந்துக்கொள்ளுகின்றார்கள். சிந்திக்கத்தகாதவைகள் இன்னின்னவைகள் என்று அறிந்து நீக்கிக்கொள்ளுகின்றார்கள்.

முக்கியமாக சிந்திக்கவேண்டிய விஷயங்களில் பழகியும் சிந்திக்கத் தகாத விஷயங்களில் பழகாமலும் தேற விசாரிணையில் நம்பத்தக்கினவிஷயங்களில் நம்பிக்கையும் நம்பத்தகாத விஷயங்களில் நம்பிக்கை அற்றும் இருப்பார்கள்.

தேற விசாரிணையுள்ள புருஷன் இதுதான் துக்கம், இதுதான் துக்கோற்பத்தி, இதுதான் துக்கநிவாரணம், இதுதான் துக்கநிவாரண மார்க்கமென்று ஆழ்ந்து சிந்திக்கின்றான். இவ்வித மெய்ஞானத் தெளிவால், 1. உடம்பு நித்தியமானதென்னும் எண்ணம் 2. சந்தேகம் 3. பயனைக் கருதிச்செய்யும் விரதங்கள். இம்மூவித பந்தத்தினின்று தப்பித்துக் கொண்டவனாகின்றான். அவ்வகை தப்பித்துக் கொண்டவன் யாரோ அவன் தர்மத்தை சிந்திப்பவனாகின்றான். வாதனையற்று ஞானத்தைப் பெற ஏதுவாய் இருக்கின்றவன் சோடாபன்னா என்றழைக்கப்படுவான்.

ஓ! சகோதிரர்களே! உங்கள் சகோதிரர்களில் ஒருவர் உங்களை நோக்கி நமதாசான் கௌதமர் ஒரு கோட்பாட்டை உடையவரா என்று கேட்பார்களாயின் அதற்கு பதிலாக, ததாகதர் எவ்வித கோட்பாடுகளுக்கும் உட்பட்டவரல்லர். ஏனெனில் இந்த தேகம்

இவ்வகையானது இவ்விதமாக வளருகிறது இவ்விதமாக மடிகிறதென்றும், புலன்கள் இவ்வகையானது இவ்வகையாக உதிக்கின்றது இவ்வகையாக மடிகிறதென்றும் மனதுக் கடுத்தவைகள் இவ்விதமானது இவ்விதமாக உதிக்கின்றது இவ்விதமாக மடிகிறதென்றுந் தேறக் கண்டு தெளிந்திருக்கின்றார். ஆதலின் சகலவித கோட்பாடுகளினின்றும், சகல எண்ணங்களினின்றும், சகல வித தப்பபிப் பிராயங்களினின்றும், தற்பெருமெயினின்றும், தன்னயத்தினின்றும் முற்றும் நீங்கியுள்ளவர் என்று அறிந்து கூறுவீர்களாக.

ஓ! சகோதிரர்களே ! ததாகதர் உலகில் அவதரித்தாலும் அவதரிக்கா விட்டாலும் உலகிலுள்ள சகலமுந் தோன்றி தோன்றி கெடும் அநித்தியமாய் இருக்கிறதென்னும் நிலைமெயானதும் அவசியமானதுமான ஒரு உண்மெய் இருந்தே இருக்கின்றது.

எவ்வகையில் என்பீரேல், தேகம் அநித்தியம், உணர்ச்சி அநித்தியம் , புலன்கள் அநித்தியம், மனதுக்கடுத்தவைகள் யாவும் அநித்தியம், அறிவும் அநித்தியமாய் இருக்கின்றது.

ஓ! சகோதிரர்களே! ததாகதர் உலகில் அவதரித்தாலும் அவதரிக்கா விட்டாலும் உலகிலுள்ள சகலமும் துக்கத்திற்கு ஆளாகின்றன என்னும் நிலைமெயானதும் அவசியமானதுமாகும் ஓருண்மெய் நிலை இருந்தே யிருக்கின்றது. அதாவது, தேகம் துக்கத்திற்கு உட்பட்டிருக்கின்றது உணர்ச்சி துக்கத்திற்கு உட்பட்டிருக்கின்றது, புலன்கள் துக்கத்திற்கு உட்பட்டிருக்கின்றது, மனதுக்கடுத்தவைகள் துக்கத்திற்கு உட்பட்டிருக்கின்றது, அறிவு துக்கத்திற்கு உட்பட்டிருக்கின்றது. ஆதலின் உலகில் தனிமெயான அத்தா ஒன்றுமில்லை என்னும் அவசியமான ஓருண்மெய் இருந்தே இருக்கின்றது. தேகந் தனியல்ல, அத்தா உணர்வு தனியல்ல, புலன்கள் தனியல்ல, மனதுக்கடுத்தவைகள் தனியல்ல, அறிவு தனியல்ல. ஒரு தேகம், ஒரு உணர்வு, ஒரு காட்சி, ஒரு மனதுக் கடுத்தவை, ஒரு அறிவு என்பவைகள் சாஸ்வதமாகவும், என்றும் அழியாததும், எக்காலும் மாறக்கூடாததுமாக உலகில் இருந்ததில்லை. நற்காட்சியை அறிந்த புருஷன் அறியாதோர் நிலையுள்ள தென்னுங் கொள்கையை ஒருக்காலும் மதியான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் உணர்ச்சியையே தன் ஆன்மா அத்தாவென்று கூறுவான். அவனுக்குப் பின்வருமாறு விடையளிப்பீர்களாக உணர்ச்சியில் மூன்றுவகை உணர்ச்சிகளுண்டு. அதாவது, இன்பத்தை நுகரக்கூடிய உணர்ச்சி ஒன்று, துன்பத்தை நுகரக்கூடிய உணர்ச்சி ஒன்று, இன்பந் துன்பம் இவ்விரண்டையும் நுகரக்கூடிய உணர்ச்சி ஒன்று ஆக மூன்று வகை உணர்ச்சிகளில் எந்த உணர்ச்சியை அத்தா ஆன்மா என்று நினைக்கின்றாய். ஒருவித உணர்ச்சியை நீர் சாதித்துவருகையில் மற்றும் இருவகை உணர்ச்சிகளை அதேகாலத்தில் அதே சாதனத்தில் இல்லாததைக் காண்கின்றீர். இவ்வகை ஒருகாலத்திலுள்ள உணர்ச்சியும் நுகரலும் மறுகாலத்தில் மடிந்துவிடுகிறபடியால் இம்மூன்றையும் அநித்தியமென்று கூறப்படும். இத்தகைய ஒருகாலத்திலுள்ள உணர்ச்சியும் நுகரலும் மறுகாலத்தில் மடிந்துவிடுகிறபடியால் இம்மூன்றையும் அநித்தியமென்று கூறப்படும். இத்தகைய காரணங்களால் தோன்றிய காரியங்கள் அழிவுக்குக் கீழ்படிதல் வேண்டும், மரணத்திற்குக் கீழ்படிதல் வேண்டும். அவைகளின் இருப்பே பிறிதலிலும் மறைதலிலும் அடக்கப்பட்டுள்ளன. இவ்வகை உணர்ச்சிகளில் ஒன்றை எவன் கண்டுக்கொள்ளுகின்றானோ அவன் பின்வருமாறு கூற ஆரம்பிப்பான். இது என் ஆன்மா என்று முன்புகூறி பின்பு இந்த உணர்ச்சியின் மறைவால் என் ஆன்மா அழிந்ததென்பான். இவ்வகை சிந்தித்த அதே காலத்தில் இந்நிலையற்ற வாழ்க்கையாம் உணர்ச்சியால் என் ஆன்மா அநித்தியமென்று சம்மதித்துக் கொள்ளுவான்.

ஓ! சகோதிரர்களே! இன்னொரு சகோதிரன் உணர்ச்சியையே என் சுத்த ஆன்மமல்ல, என் சுத்த ஆன்மம் உணர்ச்சிக்கு உட்படாத தாயிருக்கின்ற தென்பான். அவனுக்குப் பின்வருமாறு விடையளிப்பீர்களாக.

ஓ! சகோதிரனே! உமக்கு உணர்ச்சியில்லாவிட்டால் நான் வருகின்றேன், போகின்றேன், கூறுகின்றேன் என்னும் வாக்கியந் தோற்றுமாவென வினவி உணர்ச்சியின்றி இவ்வாக்கியங்கள் தோன்றாதென விளக்கி அப்பிரயோசன வார்த்தைகளை விலக்கல் வேண்டும்.

மற்றும் இன்னோர் சகோதிரன் உணர்ச்சியே என் ஆன்மாவல்ல உணர்ச்சி ஆன்மாவுக்கு அப்புறப்பட்டதென்று கூறுவதும் பிசகு. ஆனால் என் சுத்த ஆன்மாவே உணர்ச்சியை அறிந்து கொள்ளுகின்றது. என் ஆன்மாவுக்கு அவ்வகை அறியுஞ் சக்தி உண்டென்றுங் கூறுவான். அவ்வகையால் கூறுஞ் சகோதிரனுக்குப் பின்வருமாறு விடையளிப்பீர்களாக. உணர்ச்சியற்று அதன் தொடர்ச்சி யாதொன்றுமில்லாமல் உணர்ச்சியே நிர்மூலமானபின்பு உணர்ச்சியற்ற சூன்யத்தில் நான் இருக்கின்றேன், நான் போகின்றேன், நான் கூறுகிறேனென்னும் வாக்கியம் எழ முடியாதல்லவா. ஆதலின் இத்தகைய அப்பிரயோசன வார்த்தைகளையும் அகற்றல் வேண்டும்.

இன்னொரு சகோதிரன் எண்ணங்களை சுத்த ஆன்மா என்பான். அதுவும் சூன்ய அஸ்திபாரமேயாம். ஏனெனில் எண்ணும் எண்ணங்கள் எழுவதும் மடிவதும் தோன்றுவதும் கெடுவதும் அனுபவக் காட்சியாயிருக்க ஆன்மாவும் தோன்றுவதுங் கெடுவதுமாக முடியும். ஆதலின் எண்ணமே ஆன்மாவென்பதும் அப்பிரயோசன வார்த்தையாகும்.

மற்றுமோர் சகோதிரன் எண்ணத்தை அறியும் உணர்ச்சியாகும் அறிவே சுத்த ஆன்மமென்பான். அவ்வாக்கும் சூன்ய அஸ்திபாரமாகும் எவ்வகையில் என்றால் எண்ணத்தாலாய அறிவு தோன்றுவதையுங் கெடுவதையும் அறிகிறோம் அறிவு கெட்டவன் என்னும் மொழியையுங் கேட்கின்றோம். ஆதலின் எண்ணத்தாலாய அறிவே ஆன்மா என்பதும் அப்பிரயோசன வார்த்தையாம்.

இன்னொரு சகோதிரன் மனமே சுத்த ஆன்மா என்பான். அதுவும் சூன்ய அஸ்திபாரமேயாம். இயாதெனில், மனமானது தோன்றுவதுங் கெடுவதுமாகக் காண்கின்றோம். அதுபோல் ஆன்மா கெடுவதுந் தோன்றுவது மாயின் சுத்த ஆன்மாவாகா. ஆதலின் அதுவும் அப்பிரயோசன வாக்கியமாம்.

ஓ! சகோதிரர்களே! மனம், எண்ணம், உணர்ச்சி என்னும் பெயர்களை ஆன்மாவென்று கூறுவதினும் நான்கு பூத சேர்க்கையால் தோன்றுந் தேகமென்னும் ரூபமே ஆன்மாவென்று கூறியிருப்பது பிசகன்று. ஏனென்பீரேல், நான்கு பூதத்தின்

சேர்க்கையாலாய தேகம் ஒருவருஷம் பத்து வருஷம் நூறு வருஷம் நிலைத் தேனுமிருக்கும். ஆனால் மனம் உணர்வு அறிவ இவைகள் இரவும் பகலும் க்ஷணத்திற்கு க்ஷணம் தோன்றுவதும் மறைவதுமாய் இருக்கின்றது. ஆதலின் தேகம் சடபதார்த்தத்தைச் சேர்ந்ததாயிருந்தாலும், உணர்ச்சியை சேர்ந்ததாயிருந்தாலும், புலன்களைச் சேர்ந்ததாயிருந்தாலும், அறிவைச் சேர்ந்ததாயிருந்தாலும், ஒருவனுடையதாய் இருந்தாலும், மற்றவனுடையதாய் இருந்தாலும், சுத்தமுள்ளதாய் இருந்தாலும், அசுத்தமுள்ள தாயிருந்தாலும், அருகிலிருந்தாலும், தூரமிருந்தாலும் உண்மெயாக சத்தியஞானமென்னும் மெய்யறிவினின்று இது என்னைச் சார்ந்ததல்ல இது நான் அல்ல நானென்பது கிடையாது. அநாத்தா இது அநான்மமென்று தெரிந்துகொள்ளல் வேண்டும்.

ஓ! சகோதிரர்களே! மற்றொரு சகோதிரன் உங்களை நோக்கி முன்பு நீங்கள் இருந்திருக்கின்றீர்களா இல்லையா, இனி இருக்கப்போகின்றீர்களா இல்லையா, இப்போது இருக்கின்றீர்களா இல்லையா என்பான். அந்த சகோதிரனுக்கு பின்வருமாறு விடை அளிப்பீர்களாக.

ஒருவிதத்தில் முன்பு நீயிருந்தாய், மற்றொரு விதத்தில் நீ இல்லை , ஒருவிதத்தில் நீ இருக்கப்போகின்றாய், மற்றொரு விதத்தில் நீ இருக்கப் போகிறதில்லை, இப்போது நீ இருக்கின்றாய், மற்றொரு விதத்தில் நீ இல்லை.

எந்த ஒரு சகோதிரன் காரணத்தாலாயது பிறப்பென்று உணர்கின்றானோ அவனே சத்தியத்தைத் தெரிந்தவன் ஆகின்றான். எவ்வகையில் எனில், பசுமடியினின்று பாலும், பாலினின்று தயிறு கட்டியும், தயிறு கட்டியினின்று வெண்ணெயும் உண்டாகின்றது. ஆனால் பாலாயிருக்குங்கால் அதனை வெண்ணெய் என்று கூறுவாரில்லை. தயிறானது கட்டியாய் உறாய்ந் திருக்குங்கால் அதனை பாலென்றேனும் வெண்ணெய் என்றேனுங் கூறுவாரில்லை. வேறெந்தப் பெயராலும் அழைப்பாருமில்லை. அதுபோல் இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் இவைகளில் ஒரு காலத்தைக் குறிக்குங்கால் மற்றும் இரண்டு காலமுந் தோற்றுவதில்லை. இரண்டு காலத்தையுஞ் சேர்த்துக் குறிப்பாராயின் முக்காலமென்னும் பெயரில்லாமல் போம். ஆதலின் வார்த்தைக்கு

வார்த்தை வீண்பொருட் கூறி தானும் அறியாமல் தங்களை அடுத்தோரையுங் கெடுத்து வீண்காலம் போக்காமல் உலக சீவராசிகளுக்கேனும் நன்மெய் புரியுங்கள். அன்றேல் உங்களுக்குள்ள நன்மெய்யையேனும் வளர்த்துங்கள்.

ஓ! சகோதிரர்களே! நாம் காணும் தேகம் அழிந்த பிறகு நான் என்பதும் அழியும் என்று நம்புவதால் அழிவிலா பரிசுத்தமார்க்கம் அதற்கு வேண்டாமற்போம். நாம் காணும் தேகத்தில் நான் என்பது தனியாகவே இருக்கின்றது. தேகம் அழிந்த பிறகு நான் என்பது அழியாதென்று நம்புவதாலும் அழிவிலாபரிசுத்தமார்க்கம் அதற்கு வேண்டாமற்போம். விபவதிருஷ்டியோ இந்த தேகம் அழிந்த பிறகு நான் எனும் தனி ஆன்மாவும் அழிந்துவிடும் என்று எண்ணுவான்.

பவதிருஷ்டியோ இந்த தேகத்திற் புறப்பட்ட தனி ஆன்மா ஒன்றுண்டு. அது தேகம் அழிந்தபின்னும் சாஸ்வதமானதென்று எண்ணுவான். இவ்விரண்டு வகைக் கொள்கைக்கும் பரிசுத்தமார்க்கமுடிவின் அழிவிலா வாழ்க்கை வேண்டாமற் போம்.

ஏனெனில் தனி ஆன்மாவைப்பற்றிய பவதன் ஹாவாகிய வீண் அவாவைக்கொண்டு இறந்தபிறகும் தேகத்தைவிட்டத் தனி ஆன்மா சாஸ்வதமென்ற சஸ்ஸே திருஷ்டி இருந்தே இருக்கின்றதென்று எண்ணுவான். இத்தகையக் கொள்கைகள் யாவும் பரிசுத்தமார்க்கத்தை மறைக்கும் வருங்கால ஏதுக்களாகும் அக்காலம் உங்கள் காலங்களை வீணில் போக்காமல் பரிசுத்தமார்க்க மத்திய பாதையில் நடக்கும் நடைகளை விவரிக்கின்றேன். அவைகளை உள்ளுணர்ந்து உசாவி உருதியில் நிலைப்பீர்களாக.

**மணிமேகலை**

பேதை மெய் சார்வாச் செய்கை யாகுஞ் / செய்கை சார்வா உணர்ச்சியாகு , முணர்ச்சி சார்வா வருவுருவாகு / மருவுருச் சார்வா வாயிலாகும்.
வாயில் சார்வா வூறாகும்மே / யூறு சார்ந்து நுகர்ச்சியாகும்,
நுகர்ச்சி சார்ந்து வேட்கையாகும் வேட்கை சார்ந்து பற்றாகும்மே,

பற்றிற்றோன்றுங் கருமத்தொகுதி / கருமத்தொகுதி காரணமாக,
வருமேயேனை வழிமுறைத் தோற்றம் / தோற்றஞ் சார்பின் மூப்புப் பிணிசாக்கா டவல மாற்றுக் கவலை கையாறெனத் / தவலி றுன்பந் தலைவருமென்ப,
ஊழின் மண்டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி

**துவாதஸ நிதானங்கள்**

"அவிஜ்ஜா பஸ்யா ஸங்காரா, ஸங்காரா பஸ்யா விஞ்ஞானா, விஞ்ஞானா பஸ்யா நாமரூபா, நாமரூபா பஸ்யா ஸலாயதனா, ஸலாயதனா பஸ்யா பஸ்ஸோ , பஸ்ஸோ பஸ்யா வேதனா, வேதனா பஸ்யா தன்ஹா, தன்ஹா பஸ்யா உபாதானா , உபாதானா பஸ்யா பவோ, பவோ பஸ்யா ஜாட்தி, ஜாட்தி பஸ்யா ஜராமரணா, ஸோகபரித்தேவ, துக்கா, தோம்னஸ்ஸ, உபாயாஸா ஸம்பவன்தி.''

1. (அவித்தை) பேதைமெ அல்லது பொய்க்காட்சியிலிருந்து ஏதுக்குத் தக்க ஸ்கந்தசேர்க்கையால் குஸல அகுஸல கன்மங்களாகிய ஸம்ஸ்காரங்கள் செய்கைகள் உண்டாகின்றன.
2. (ஸம்ஸ்காரங்கள்) செய்கைகளிலிருந்து மறுபிறப்பை உண்டு செய்ய கற்பந்தரிக்கும் விஞ்ஞானம் உணர்வு உண்டாகின்றன.
3. (விஞ்ஞானம்) உணர்விலிருந்து நாமரூபங்களாகும் அருவுரு உண்டாகின்றன.
4. (நாமரூபமாகும்) அருவுருவிலிருந்து ஷடாயதனங்களாகும் அறுவகை வாயில்கள் உண்டாகின்றன.
5. (ஷடாதனங்கள்) சப்த, பரிச, ரூப, ரச, கந்த எண்ண ங்களாகும் அறுவகை வாயில்களிலிருந்து பதோ ஊறு உண்டாகின்றன.
6. (பதோ) இன்ப துன்பம் ஊறுகளினின்று வேதனை நுகர்வு உண்டாகின்றன.
7. (வேதனை) நுகர்விலிருந்து தன்ஹா வேட்கை உண்டாகின்றன.
8. (தன்ஹா) வேட்கையிலிருந்து உபாதானம் பற்று உண்டாகின்றன.
9. (உபாதானம்) பற்றிலிருந்து பிறப்புக்கு மூலமான கருமக்கூட்டம் பவோ உண்டாகின்றன.

10. (பவோ) பிறப்புக்கு மூலமாகுங் கருமக்கூட்டத்திலிருந்து ஜாத்தி மறுபிறப்பு உண்டாகின்றன.
11. (ஜாத்தி) மறுபிறப்புண்டாகி அதிலிருந்து ஜய - மூப்பு, மர்ணா - மரணம், ஸோகா - வலியும், பரிதேவா - அழுகையும், துக்கா - துன்பமும், தாம் நாஸே - கவலையும், சம்பாந்தே - ஏக்கமும் ஆகிய துக்கோற்பவ மூலமாம் வினைப்பயன்கள் உண்டாகின்றன.

**மணிமேகலை**

பேதைமெய் மீளச்செய்கை மீளுஞ் / செய்கை மீள உணர்ச்சி மீளு,
முணர்ச்சி மீள வருவுரு மீளு / மருவுருமீள வாயின் மீளும்,
வாயின் மீள வூறு மீளு / மூறு மீள நுகர்ச்சி மீளு,
நுகர்ச்சி மீள வேட்கை மீளும் / வேட்கை மீளப் பற்று மீளும்,
பற்று மீளக் கருமத்தொகுதி மீளும் / கருமத் தொகுதி மீளத்
தோற்ற மீளுந் தோற்ற மீளப் பிறப்பு மீளும் / பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடவல , மாற்றுக் கவலை கையாரின்றிக் கடையி றுன்ப மெல்லா மீளும்.

**துவாதஸ நிதானங்கள்**

"அவிஜ்ஜா நிரோதா ஸங்காரா, ஸங்காரா நிரோதா விஞ்ஞானா, விஞ்ஞானா நிரோதா நாமர்பா நாமரூபா நிரோதாளலாயதனா, ஸலாயதனா நிரோதா பஸ்ஸோ , பஸ்ஸோ நிரோதா வேதனா, வேதனா நிரோதா தன்ஹா, தன்ஹா நிரோதா உபாதானா, உபாதானா நிரோதாபவோ, பவோநிரோதா ஜாட்தி, ஜாட்தி நிரோதா ஹாமாணா, ஸோக பரித்தேவ, துக்கா,தோம்னஸ்ஸ, உபாயாஸாஸம்பவந்தி.'

அவிஜ்ஜ - பேதைமெய் - பொய்காட்சி

அறியாமெ ஒழிந்தால் அதினின்றெழும் ஸம்ஸ்காரங்களென்னும் செய்கைகள் ஒழியும்.

ஸம்ஸ்காரங்களென்னும் செய்கைகள் ஒழியின் அதனின்றெழும் நாமரூபங்களென்னும் அருவுரு ஒழியும்,

நாமரூபங்களென்னும் அருவுரு வொழியின் அதனினின்றெமும் நாகனங்கள் என்னும் அறுவாயல்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் இவைகள் மூலமாக உண்டாகும் சப்த, பரிச, ரூப, ரச கந்த எண்ணங்களாகிய ஆறும் ஒழியும்.

சடாயதனங்கள் ஒழியின் அதனினின்றெழும் பதோ என்னும் பரிசம் அல்லது ஊறு ஒழியும்.

பதோ என்னும் பரிசம் ஒழியின் அதனினின்றெழும் வேதனா நுகர்ச்சி ஒழியும்.

வேதனா என்னும் நுகர்ச்சி ஒழியின் அதனினின்றெழும் தன்ஹா வேட் கை ஒழியும்.

தன்ஹா என்னும் வேட்கை ஒழியின் அதனினின் றெழும் உபாதானா பற்று ஒழியும்.

உபாதனா என்னும் பற்றுக்கள் ஒழியின் அதனினின்றெழும்பவோ பிறப்புக்கு மூலமாகுங் கருமக்கூட்டங்கள் ஒழியும்.

பவோ என்னும் பிறப்புக்கு மூலமாகும் கருமக்கூட்டங்கள் ஒழியின் அதனினின்றெழும் ஜாத்தி மறுபிறப்பொழியும்.

ஜாத்தி என்னும் பிறப்பொழியின் பிணி, மூப்பு, மரணம், அழுகை, துன்பம், கவலை, ஏக்கம் என்னும் துக்கம் நிவாரணமாம்.

ஓ! சகோதிரர்களே! ஜீவர்கள் அறியாமெயில் மூழ்கி அவாவால் கட்டுண்டு அங்குமிங்கும் ஓடி கண்டதை நாடி புதியவானந்தத்தை அனுபவிக்க விரும்புவதினால் புதிய புதிய பிறப்புகள் மாறி மாறி தோன்றி சுழன்று வருகின்றது.

லோபா - பேராசையாலும், தோஷா - கோபத்தாலும், மோஹா - அறியாமெயினாலும் உதித்த சீவர்களது கருமமானது பேராசையிலிருந்தேனும், கோபத்திலிருந்தேனும், அறியாமெயிலிருந்தேனும் உற்பத்தியாகி, பேராசை யிலாவது, கோபத்திலாவது, அறியாமெயிலாவது விருத்தியடைந்து; பேராசையைக் கொண்டும், கோபத்தைக் கொண்டும், அறியாமெயைக் கொண்டும் சீவர்கள் எங்கெங்கிருக் கின்றனவோ அங்கங்கு பரவி உள்ள சீவர்கள் செய்த கருமத்தின் பிரகாரம் இப்போதோ மறுபிறப்பிலோ அந்தந்த கருமத்திற்குத் தக்க பலனை அனுபவிக்கின்றனர்.

சீவர்கள் அறியாமெயினின்று விலகுவதாலும், விவேகவிருத்தியினாலும், பேரவாவை நாசஞ் செய்வதாலும் மறுபிறப்பிற்காம் ஏதுக்கள் யாதுமில்லாமற் போம்.

எவ்வகையிலென்னில், சீவர்களது கருமமானது பேராசையாலாவது, கோபத்தாலாவது, அறியாமெயாலாவது நேர்ந்ததல்ல.

பேராசையிலிருந்தாவது, கோபத்திலிருந்தாவது, அறியாமெயிலிருந்தாவது உற்பத்தியாயதல்ல.

பேராசையாகவே இருந்தேனும், கோபமாகவே இருந்தேனும், அறியாமெயாகவே இருந்தேனும் அக்கருமம் விருத்தியடைந்ததல்லவென்று எப்போது ஏற்படுகின்றதோ அப்போதே பேராசையும், கோபமும், அறியாமெயும் ஒழிந்து கருமமும் அழிந்துபோமென்பது திண்ணம்.

அதாவது ஓர் பனைமரத்தை வேரோடு வெட்டி எறிந்துவிட்டபின் மறுபடியுந் துளிர்க்காமல் எப்படி மடிந்துவிடுகின்றதோ அதுபோல் மேற்கண்ட கருமங்களை எப்போது வேருடன் களைந்துவிடப்படுகின்றதோ அப்போதே கருமக்கூட் டோற்பவம் மடிந்துபோமென்பதாம்.

பேராசையை நாசஞ்செய்யவேண்டுமென்றும், கோபத்தை நாசஞ் செய்ய வேண்டுமென்றும், அறியாமெயை நாசஞ்செய்ய வேண்டுமென்றும், துர்நடத்தையை

நாசஞ்செய்யவேண்டும் என்றும், மனதிற்கு சுகயீனமான வைகளை நாசஞ் செய்ய வேண்டும் என்றும் போதித்து வருகின்றபடியால் பேராசை, கோபம், அறியாமெய் நிறைந்த சீவர்கள் என்னை சூன்யக் கோட்பாட்டை உடையவரென்றும், பேராசை, கோபம், அறியாமெயற்ற சீவர்கள் என்னை அசூன்யக் கோட்பாட்டை உடையவரென்றுங் கூறுவர்.

தேகவிருத்திக்குத் தக்க புசிப்பும், பருமனும், உணர்வும், சிற்றின்பமுந் தோன்றுவது போல், விவேகவிருத்திக்குத்தக்க சுகமும் ஆனந்தமும் பேரின்பமுந் தோன்றும்.

**சம்மா சங்கப்போ - நல்லூக்கம்**

ஓ! சகோதிரர்களே! இவ்விடத்தில் நல்லூக்கத்தை ததாகதன் விளக்குகின்றேன்.

அதாவது - பகையில்லா வாழ்க்கையிலிருக்க வேண்டும் என்னும் எண்ணம், நமதுள்ளத்தில் பொறாமெயை நிலைக்கவைக்கக் கூடாதென்னும் எண்ணம், ஒருவருக்குத் தீங்கு செய்யலாகாதென்னும் எண்ணம், தீங்கான குணங்களை உள்ளத்திற் குடிக் கொள்ள வைக்கலாகாதென்னும் எண்ணம், முன்பு பிறனுடைய சுகத்தைக் கருதிப் பின்பு தன்னுடைய சுகத்தைக் கருதும் எண்ணம்.

இத்தகைய எண்ணங்கள் விருத்தியடைவதற்கு மனை தடையுண்டாக்கிக்கொண்டு வருமாதலின் சாதுசங்கத்திற் சேருந் துறவறத்தை விரும்பும் எண்ணம் இவைகளையே நல்லூக்கம் என்னப்படும்.

உதாரணமாக ஒரு குடியானவனோ அவன் புத்திரனோ மற்றும் யாவனேனும் ததாகதர் போதனையைக் கேட்டு அதனிலையை தெரிந்து கொள்ளுவானாயின் அவன் பின்வருமாறு சிந்திக்க எண்ணங்கொள்ளுவான். அதாவது, இந்த சமுசார வாழ்க்கையிலிருப்பது சிறையிலிருப்பதென்றும் முள்ளுகள் நிறைந்த காட்டிலிருப்பதென்றும் குப்பைகள் நிறைந்த குழியிலிருப்பதென்றும் எண்ணி சமுசாரச்

சிறையினின்றும் முட்காட்டினின்றுங் குப்பைக்குழியினின்றும் விலகுவதற்கான முயற்சியினிற்பான்.

தன் தேகத்தாலும், நாவினாலும், எண்ணத்தினாலும் உண்டாகிக் கொண்டுவருந் துற்கருமப் பற்றுக்களை மனையறத்திருந்தே பற்றறுக்க முயலுவான். அம்முயற்சியானது சமுசாரச்சிறையின் இடுக்கத்தாலும், முட்காட்டின் குத்துதலாலும், குப்பைக்குழியின் துந்நாற்றத்தினாலுங் கெட்டு கீழிவான். மறுபடியும் துறவறத்தோராம் சங்கத்தோரை நோக்குவான்,

நோக்கி சிரசை மொட்டையடிப்பதில் பயனென்னை. தாடியை சிறைத்துவிடுவதில் பயனென்னை மஞ்சளாடையைப் புனைவதிற் பயனென்னை என்று எண்ணுவான். அவ்வெண்ணங்கள் யாவும் முந்நூக்கத்தால் மடிந்து மனையறத்தோர் பல கஷ்டத்தோடும் சம்பாதித்தப் பொருட் கள்ளர் கொண்டு போவார்கள், வேற்றரசன் பரித்துக் கொள்ளுவான், கறையானென்னுஞ் சிதல் உண்டுவிடும்.

ஆனால் முடியைப் பரித்துவிட்டும், தாடியை சிறைத்துவிட்டும், பட்டாடைகளை அகற்றிவிட்டும், மஞ்சளாடை ஏற்று நான்குவாய்மெயாம் நல்லூரக்க பொக்கிஷத்தை

ஷத்தை சேர்த்துவருகிறவர்களாதலின் அப்பொக்கிஷத்தைக் கள்ளர்களேனும், வேற்றரசரேனும், சிதல்களேனும் அழிப்பதற்கு முடியாதென்று உணர்ந்து அவ்வழியாய்ப் பொருளை சேர்க்கும் ஊக்கத்தால் அரசாங்கத்திருந் தேனும், பெரிய குடும்பத்திலிருந்தேனும், சிறந்த வியாபாரத்திலிருந்தேனும் விடுபட்டு துறவறமாம் தன்மசங்கஞ்சார்ந்து சிரம் மொட்டையடித்தும், தாடியை சிறைத்தும், மஞ்சளாடை போர்த்தும் பொன் போன்ற பிரகாச பரிசுத்த வாழ்க்கையில் நிலைப்பான். பேராசையற்று, கோபமற்று லோபமற்று நல்லாக்கம் உடையவனது உலகப் பொருட்களை கள்ளர் பரிக்கினுங் கவலையற்று ஆனந்தத்திலிருப்பன்.

காரணம் யாதெனில், உள்ளப் பொருளாம் நல்லூக்கத்தினிற்பவன் உலக பொருளின் பற்றுக்களற்றுக்கொண்டே வருவதினாலேயாம். அதுவுமன்றி அசைவிலா

நல்லூக்கத்தினின்றவன்பால் எத்தகைய இடுக்கண்கள் தோன்றினும் உலகப் பொருளழியினும் உள்ளங்கலங்கானென்பது திண்ணம். கொடிகளானது வெள்ளப் பெருக்கத்தினுந் தளராது ஓங்கி நிற்பது போல் நல்லூக்க மிகுத்தவனை பல்வகை இடுக்கங்கள் வந்து மோதினும் உள்ளங் கலங்கானென்பது துணிபு. யுத்தகளத்திற் பாய்ந்த யானையினதுடல் முழுவதும் அம்பின் கும்புகள் நிறைந்து தைக்கினும் நிலை பிரழாது நிற்பதுபோல் நல்லூக்க மிகுத்தோன் உள்ளத்தில் நீடிய இடுக்கண்கள் தோன்றினும் நல்லூக்க நிலை தளரானாவன்.

ஓரரசனானவன் குடிகளைக் காக்கும் ஊக்கத்திலும் படைகளை பயிற்றும் ஊக்கத்திலும் அமைச்சர்களை நிதானத்தமைக்கும் ஊக்கத்திலும் மிகுத்திருப்பானாயின் அவனை நோக்கும் வேற்றரசர்கள் அஞ்சி நிற்பர். அதுபோல் நல்லூக்க மிகுத்த உள்ளத்தின்கண் பலவகை இடுக்கண்களும் சார்வதற்கஞ்சி ஒதுங்கும் என்பதாம்.

விருட்சங்களானது தன் முயற்சியின்றி வளர்ந்து வளர்ந்த இடத்திற்கெடும், மக்களும் அவ்வகை முயற்சியற்றிருப்பின் மரமென்னத்தகும். மக்களுள் முயற்சியின் மிகுத்து மாளாநிற்கின் மக்களென்னும் பெயர் மாறி தேவர் களென்னும் பெயரைப் பெறுவார்கள். இதையே நல்லூக்கப் பலனென்னப்படும்.

**சம்மா வாசா - நல்வசனம்**

ஓ! சகோதிரர்களே! இனி நல்வாழ்க்கையை ததாகதன் விவரிக்கின்றேன். 1. அதாவது, (பொய்சொல்லாமெய் ) ஒரு மனிதன் பொய் பேசுவதை விடுத்து பொய்யினின்று நீங்கியிருப்பானாயின் அவன் சத்தியத்தைப் பேசுவான். உண்மெயில் சிந்தனை உடையவனாய் இருப்பான். உண்மெயில் பற்றுள்ளவனாவான். சகலராலும் யோக்கியனென மதிக்கப்படுவான்.

அத்தகைய சத்தியவானை ஜனக்கூட்டங்களிலாவது குடும்பங்களிலாவது காணுவார்களானால் ஒவ்வொருவரும் அஞ்சுவார்கள். நியாயாதிபதியினிடம் அவனைக்கொண்டுபோன போதிலும் தனக்குத் தெரிந்ததைத் தெரியுமென்றும்,

தெரியாததைத் தெரியாதென்றுங் கூறுவான். அதினால் நியாயாதிபன் சத்தியவாக்கனை நோக்கி நல்ல மனிதனே, நீர் கண்டதைச் சொல்லவேண்டுமென்றால் மன உறுதியுடன் அஞ்சாமல் நான் கண்டதைச் சொல்லுவேன் காணாததைச் சொல்லமாட்டேன் என்பான். அவன் மற்றவர்களுடைய சுகத்துக்கேனுந் தன்னுடைய சுகத்துக்கேனும் மெய்யைப் பேசுவானேயன்றி பொய்யைப் பேசமாட்டான். இத்தகைய மெய் வார்த்தையைப் பேசுதலினால் தனக்குச் சுகமும் மதிப்பு முண்டாவதுமன்றி சகல சீவர்களுக்குந் தீங்கை உண்டு செய்யாதவனாகின்றான்.

2. (புறங்கூறாமெய்) அதாவது, ஒருவருக்கொருவர் புறங்கூறுதலையும் மற்றவர்களைப் புறங்கூறி மனத்தாங்கலை உண்டு செய்தலையும் எதிரில் கண்டபோது ஓர் வார்த்தைக் காணாதவிடத்தோர் வார்த்தைப் பேசுவதையும் அகற்றி நிற்பானாயின் மற்றவர்களை தூஷிப்பதைவிட்டொழிவான். ஒருவருக்கொருவர் கோட்சொல்லி கொடூரமுண்டு செய்யும் வாக்கை அகற்றுவான். இத்தகையச் செயல்களால் ஒருவருக்கொருவர் பகைத்து பிரித்துள்ளவர்களை சேர்த்தும் தன் வார்த்தையால் மற்றவர்களுக்கு அன்பை வளர்த்தியும் புறங்கூறாச் செயலால் ஆனந்தப்பரவசத்திலிருப்பான்.

தருமத்தைக் கூறிக்கொண்டிருப்பவன் ஓர்கால் மறந்தும் புறங்கூறாமலிருப் பானாயின் ஆறுதலடைவான். தனது குடும்பத்தோரையேனும் தன்னேயர் களையேனுங் கண்டவிடத்தில் புகழ்தலுங் காணாதவிடத்தில் இகழ்தலுமாகியச் செயலற்றவன் அழியா தருமத்தைச் செய்ததற்கு ஒப்பாவான். அங்ஙனமின்றி அறிந்தோரைக் கண்டயிடத்து புகழ்தலும் காணாவிடத்தி லிகழ்தலுமாகியப் புண்ணாக்குடையவன் உலகத்தில் சீவித்திருப்பதைப்பார்க்கினும் சீவனற்று விடுவானாயின் சத்தியதருமத்தில் நிலைத்தவனாவான்.

சத்தியதன்மத்தில் நிலைத்தவன் தனது நேயனை கண்டயிடத்தி லிகழ்தலின்றி காணாவிடத்திற் புகழ்ந்து நிற்பன்.

ஒருவன் தன்னிடத்திற் பேசிவிட்டுப் போம்போதே யவனையிழிகூறலும், அவன் மறைந்தபின் அவனைப்பழி கூறலுமாகிய புறங்கூறலை சத்தியதன்மம் உணர்ந்தவன் மறந்தும் புறங்கூறான்.

3. (கொடுஞ்சொற்) கூறாமெய் அதாவது இனியவைகூறல், ஒருமனிதன் சுடச்சொல்லுங் கொடூரவார்த்தையைப் பேசுதலிலிருந்து மீண்டவன் மறுபடியும் அக்கொடுஞ்சொற் கூறுதற்கஞ்சவான். செவிக்குளிரும் வார்த்தை பேசுவான். இதயத்தில் அன்பு பதியும் வார்த்தையைப் பேசுவான். அன்புடன் பேசுவான். சந்தோஷம் உண்டாகும்படி பேசுவான். யீடேற்றத்தைத் தரும்படியான வார்த்தைகளைப் பேசுவான். ஏனித்தகைய வார்த்தைகளைப் பேசுவானென்னில் அவனென்னை அவதூராக வைதான், அடித்தான், என்னை வென்றான், என்பொருளைத் திருடினானென்று கூறும் ஒருவனுடைய எண்ணங்கள் யாதால் வந்ததென்று மேற்கண்ட அறிவுடையோன் தெரிந்துக் கொள்ளுவதுடன் அவ்வகையான மனதையுடையவன் கொடூரத்தினின்று மீளமாட்டான் என்று அறிவான். ஏனெனில், கோபத்தைக் கோபத்தால் வெல்ல முடியாது. கோபத்தை சாந்தத்தால் வெல்லக்கூடும் என்பதை உணர்ந்திருப்பதினாலேயாம்.

ஒருவன் தான் செய்யுந் தருமத்தைப் பேசிக் கொடுத்தலினும் முக மலர்ந்து இனிய வார்த்தைகளைப் பேசுதல் அதி தன்மமாம், தன்மத்தினொளியானது அன்புடன் முகமலர்ந்தீயுந் கொடையினிற்கும் என்பதாம். அன்பும் உபசரிப்பும் முகமலர்ச்சியும் உடைய இனிய சொற்களாலீயுந் தருமத்தை உடையவனைத் துன்பம் அணுகா திருப்பதுடன் வறுமையும் அகலும் என்பதாம்.

ஒவ்வொரு மனிதனையும் பிரகாசிக்கச் செய்யும் ஆபரணங்கள் யாதெனில், பெரியோர்களை வணங்குதலும், முகமலர்ச்சியும், இனிய வார்த்தைகளுமேயாம்.

ஓ! சகோதிரர்களே! இத்தகைய ஒழுக்கமும், முகமலர்ச்சியும், இனிய வார்த்தையையும் அநுஷ்டிக்கின்றவன் எவனோ அவன் புத்ததேவனுலகை அறிந்தவனாகின்றான்.

இவ்வநுஷ்டானத்தை உடையவன் திருடர்களையேனுங் கொலையாளி களையேனுங் கண்டபோது கலக்கமில்லாமல் இருப்பான். மனதில் கெட்ட எண்ணங்கள் இருந்தால் வாக்குக் கொடூரத்தில் எழும்பும் மனதில் அன்பும் சமாதானமும் பெருகிநிற்கில் முகத்தில் மலர்ச்சியும், வாக்கில் இனிய வாக்கும் எழும்.

கோபத்திற்கும் பொறாமெய்க்கும் வேரில்லாமலும், எல்லையில்லாமலும், ஆழமில்லாமலும் அடியோடும் எறிந்துவிட்ட புருஷனின் பற்றிருக்கவேண்டும்.

4. (விண்வார்த்தை ) அதாவது பயனில் சொல்லாமெய். ஓ! சகோதிரர்களே! ஒரு மனிதன் வீண்வார்த்தைப் பேசுவதைவிட்டு நீங்குவானாயின் அவன் மறுபடியும் பேசவேண்டிய காரியங்களைப் பேசி பேசவேண்டாத காரியங்களை அகற்றிவிடுவான். எப்போதுந் தனக்கும் எதிரிக்கும் பிரயோசனம் உண்டாகுந் தன்மத்தைப் பற்றியுஞ் சங்கத்தைப் பற்றியும் பேசுவான். தான் சொல்லும் வார்த்தைகளால் எதிரிகளுக்கு யாதாமொருப் பிரயோசனமும் இல்லையென்று தெரிந்து கொண்டவன் நாணமுற்று மறுபடியும் பயனிலா சொற்களைப் பேசாதிருத்தல் வேண்டும்.

தனது பந்துக்களிடத்தும், நேயர்களிடத்தும் பயனிலா சொற்களைப் பேசுதல் தீதென்றறிந்து கொண்டவன் கனவிலும் பயனற்ற சொற்களை கருதலாகாது. பயனற்ற வார்த்தைகளைப் பேசித் திரிதலின் பயன் யாதெனில், உள்ள நீதியும் நெறியும் அகன்று சற்குணநிலை பெயன்று போமென்பதாம். பயனற்ற சொற்களைப் பன்னிப்பன்னிப் பேசுபவனை பெரியோர்கள் பதரென்று கூறுவார்களென்று உணர்ந்து மறந்தும் பயனற்ற வார்த்தைகளைப் பேசலாகாது. சத்திய தன்மத்தை உணர்ந்தவர்கள் மிருதுவான வார்த்தைகளைப் பேசாவிடினும் பயனற்ற வார்த்தைகளைப் பேசாதிருத்தல் வேண்டும்.

இத்தகைய வாக்குநிலை பெற்றவன் செயல் சுகத்தைக் கொடுக்கக் கூடியதாகும். இரண்டு விதமான விஷயத்தில் பற்றுள்ளவனாகின்றான். அதாவது, பயனுள்ள தருமத்தை சம்பாஷிக்கவேண்டும் என்பதோர்பற்று. அவ்வகை தருமநிலையினின்று

சாந்தத்தை நிறப்பவேண்டும் என்பதோர் பற்று. இப்பற்றாகும் பயன் தரும் பொருளே பற்றற்றான் பற்றாகும் நல்வசனம் எனப்படும்.

**சம்மா கம்மந்தா - நற்செய்கை**

1வது கொலை ஓ! சகோதிரர்களே! நற்செய்கையைப்பற்றி தகாகதன் விளக்குகின்றேன். ஒரு மனிதன் கொலைத்தொழிலை விட்டு இனி அக்கொலைத் தொழிலை செய்வதில்லையென்று நோன்பு கொண்டு தனது கைகளிற் கத்திகளை யேனந் தடிகளையேனுந் தொடாமல் சருவசீவர்களின் பேரிலும் அன்பு பாராட்டலாலும் சீவர்கள் இம்சைக்குப் பரிதாபப்படுதலினாலும் உயிர்களை ஆதரிக்கத் தக்கவனாகின்றான். தனக்குக் கிடைத்துள்ள ஆகாரத்தை சருவ சீவர்களுக்கும் ஈய்ந்து அவைகளின் பசியாற்றி ஆதரிக்கும் நோன்பினை உடையவன் கொல்லாநோன்பின் குணமிகுத்தோனாதலின் எல்லா தருமங்களினும் மேலான தருமத்தை அடைந்திருக்கின்றான். பொய்ப்பேசுதலை ஒழித்தவன் எத்தகைய சுகத்தின்று உண்மெயறியும் நிலையை அடைகின்றானோ அவனருகில் கொலையைத் தவிர்த்து சீவகாருண்ய மிகுத்தவனாக நிற்பான். முத்தியென்றும், மோட்சமென்றும், நிருவாணமென்றுஞ் சொல்லுஞ் சுகநிலையின் பீடம் எதினால் அமைக்கப் பட்டிருப்பதென்னில், கொலையைத்தவிர்த்த சீவகாருண்ணியத்தினாலேயாம் ஒரு மனிதனை நல்லவனென்று மற்ற மனிதர்கள் சொல்லுவதுடன் சருவ சீவராசிகளும் நல்லவனென்று அருகிற் சென்று அன்பு பாராட்டுமாயின் அவனது சீவகாருண்ய அன்பையே சுகவாரி எனப்படும். மாறிமாறி பிறக்கும் மாளாப்பிறவியின் துக்கத்தை நீக்கிப் பிறப்பறுக்கும் உள்ளத்துறவை நோக்குபவன் கொலையை அகற்றி சீவகாருண்யத்தை நோக்குவனேல் துறவின் வழி வெள்ள விளங்கும். சருவசீவர்களையுந் தன் புசிப்புக்கென்று கொல்லாமலுங் கோபத்தாற் கொல்லாமலுங் காருண்யமிதத்துத் தான் கொலை பரிவதை கொலை புரிபவனையுந் தடுத்தாட்கொள்ளுவானாயின் தன்னைக் கொலையுண்ணும் இயம்மென்னுங் காலனணுகானென்பதாம். ம புசிப்பால் தன் யாக்கையைப் பெரிதாக்க முயலுவோன் சருவ சுகத்தையுஞ் சுருக்கித் துன்பத்தைப் பெருக்கிக் கொள்கின்றான். தேகம் வளர்ப்போன் பிணிப்பீடையால் வாதைப்படுவதை உணர்ந்தும் விவேகிகள்

வெறுக்கத்தக்கப் புலால் இச்சையால் கொலை புரிந்து அதன் விருத்தியைக் கெடுப்பதினும் தன் தேகத்தை சுருக்கிக்கொள்ளுபவன் சுகமடைவான். அதாவது, புற்பூண்டுகளிலிருந்து புழுக் கீடாதிகளும், புழுக்கீடாதிகளின்று மட்சம் பட்சிகளும், மட்சம் பட்சிகளினின்று ஊர்வன மிருகாதிகளும், மிருகாதிகளினின்று வாலற்ற நரர்களாம் மக்களும், மக்களினின்று தேவர்களும், ஒன்றிலிருந்தொன்று உயர்ந்துகொண்டே போவது உலகத்தோற்றமாதலின் சீவராசிகளின் உயர்வைக் கெடுக்குங் கொலைத் தன்னுயிர் நீங்கினுஞ் செய்யாதிருக்கக்கடவன்.

2வது களவு ஓ! சகோதிரர்களே! ஒரு மனிதன் களவு செய்யுந் தொழிலினின்று நீங்கி அதைச் செய்வதில்லையென்று விரதங்கொண்டவன் தனக்குக் கொடுப்பதைப் பெற்றுக்கொள்ளுவான். கொடாததை எடுக்க மாட்டான். அவன் வாங்கவேண்டியப் பொருள் எவ்வளவோ அவ்வளவுங் கார்த்திருந்து வாங்கிக் கொள்ளுவான். உரியவன் உத்திரவின்றி தொடமாட்டான். வஞ்சினத்தாலுங் களவினாலும் மற்றோர் பொருளை அபகரிக்கலாகாதென்னும் எண்ணத்தை உறுதிபடுத்தினவன் இதய பரிசுத்தம் அடைவான். நித்திய சுகத்தை விரும்புகிறவன் மறந்தும் அன்னியன் பொருளை அபகரித்து அவன் மனதைப் பெருமூச்சுடன் அலையவிடமாட்டான். அதாவது, விவேகமிகுத்தோர் தன துள்ளத்தில் எழும் களங்கங்களாம் வஞ்சினம், தீங்கு, களவு முதலியன ஏழாமல் அகற்ற வேண்டியது அழகாதலின் உலக மாக்கள் கனவினுங் களவை எண்ணாதிருத்தல் நன்று. ஓர் மனிதன் களவினால் சேகரித்தப் பொருள் தனது மூத்தோர் பொருளையுஞ் சேர்த்துக்கொண்டு சென்றுவிடும். அதுபோல் களவின் பொருளைக் கருதினவன் அருளைக் கருதான். அருளைக் கருதினவன் பொருளைக் கருதான். அருளையும் பொருளையுங் கருதினவன் இருளினின்று தவிப்பான். பொருளை விரும்புகிறவன் புண்ணியவச தேகத்தை வருத்தி சம்பாதித்தல் வேண்டும். அங்ஙனமின்றி வருத்தியு முயற்சியுமுற்று சம்பாதித்தவன் பொருளை யவனை யறியாது களவு செய்துக் கொள்பவன் அப்பொருட்களைத் தன்னையறியாது இழந்து சகலராலும் அவமதிக்கப் படுவான். அருளைக்கருதினவன் பொருளையும் பொருளுக்குடையவனையும் நோக்காமல் சீவர்களின் சுகத்தை நோக்குபவனாதலின் களவென்னுங் கருத்தே அவன் உள்ளத்திலுதிக்காதென்பதாம். ஆசையின் மிகுதியால் அன்னியன் பொருளை அபகரித்து ஆனந்தமுறுதல் படிப்படியே துக்கத்திலிறங்கி சதா

துக்கத்திலாழ்த்திவிடும். உலகத்தார் ஒருவனைக் கள்ளனென்றறிந்துக் கொண்டவுடன் அவன் வரும் இடங்களிலும் போகும் இடங்களிலுங் கண்ணோக்க முற்றிருப்பார்கள். அவ்வவர் நோக்கமே அவனைத் துன்பத்தில் ஆழ்த்தி மாளா துக்கத்தில் ஆழ்த்திவிடும். ஆதலின் களவை அகற்றி களங்கமறுப்பதே முத்திக்கு வித்தென்னப்படும்.

3-வது காமம். ஓ! சகோதிரர்களே! ஒரு மனிதன் தன் தாரமன்றி அன்னியர் தாரத்தையேனும் அன்னியர் இஸ்திரீகளையேனும் விரும்பு வதில்லை என்று விரதம் பூண்டவன் பிதாவினாலாவது, மாதாவினாலாவது, மூத்தோராலாவது, சகோதிரனாலாவது, சகோதிரியாலாவது பாதுகாக்கப்பட்ட கன்னிகையை யேனும் மாங்கல்ய ஸ்திரீயையேனும், அடிமைப்பெண்ணையேனும், வேசியையேனும், இச்சிக்கமாட்டான். ஒருவனது இல்வாழ்க்கைக்கும் சுகத்திற்கும் இல்லாளே காரணமாதலின் அவ்வில்லாளை மற்றொருவன் இச்சித்து அவள் புருஷனுக்கும் அவளுக்கும் மிகுந்த அன்பையும் ஒற்றுமெயையுங் கெடுத்துப் பாழாக்கியபோது அவன் இல்லமும் குடும்பமுங் கூடி வாழும் வாழ்க்கைக் கெட்டு குலைந்து விடுவதினால் அத்தகையக்குடிக்குக் கேடுண்டு செய்வதைப் பார்க்கினுந் தான் ஒருவன் கெடுவது நலமென்று எண்ணித் தனதுயிரைப் போக்கிக் கொள்ளுவான். அதுவுமின்றி தன் தாரத்தை மற்றொருவன் இச்சித்தபோது தனக்கெவ்வளவு மனத்தாங்கலுங் கோபமும் பிறந்து குடிகெடும்படி நேரிடுகின்றதோ அதுபோல் மற்றவனது குடியுங் கெடுமென்றெண்ணி அன்னியதாரத்தைக் கனவிலும் நினையாதிருப்பன். அன்னியர் மனைவியை யேனும், கன்னியையேனும், அடிமைப்பெண்ணை யேனும் இச்சிப்பவனுக்கு மற்றவர்கள் பகையும் அவள் சீரைக் கெடுத்த பாவமும் அவள் குடும்பத்தோர் எவ்விதத்தும் அடிப்பார்களென்னும் பயமும் ஓர் பெண்ணின் சீரைக் கெடுத்தாயே ஆடோ பாவி என்னும் பழியும் இவன் சீவிய காலமெல்லாம் நிலைத்துவிடுமென்று எண்ணிகாமிய இச்சையைக் கண்டித்து அவ்வாசையை அகற்றிவிடுவான். ஈகையில் மிகுத் தோனென்றும் வாக்கில் மிருதுவானவன் என்றும் சொல்லக் கூடியவனாயினும் அன்னியன் மனையாளை இச்சித்து அக்குடியைப் பாழாக்கினானென்று பெரியோர் கேழ்விப்படுவாராயின் தன் மனையின் அருகிலேனுஞ் சேர்க்காரென்று எண்ணி அச்சமுண்டாகிக் காமத்தை எறித்துக்கொண்டே வருவான். கொலை களவு மிகுத்த பாபிஷ்டிகளுடன் சேர்ந்து ஓர்

குடியைக் காலமெல்லாந் துக்கத்தில் ஆழ்த்துங் காமிஷ்ட்டி என்னும் பெயரையும் வகிக்கமாட்டான். இதுவே நற்கன்மங்களென்னப்படும். இந்நற்கன்மங்கள் யாவுந் திரண்டப் பொதுப்பெயரே கடவுளென்னப்படும்.

**சம்மா அஜீவா - நல்வாழ்க்கை**

ஓ! சகோதரர்களே! நல்வாழ்க்கையை ததாகதன் விவரிக்கின்றேன். அதாவது மனையறத்திலிருப்பவன் மனையறமென்பது யாது, துறவறம் என்பது யாது என உசாவி மனையறத்துனின்று இல்வாழ்க்கையை நோக்கி தனக்குத் தக்க இல்லாளை சேர்த்துக் கொள்ளக்கடவன். அவ்வில்லாள் பிறந்த குடும்பத்தில் அவனைக் கொலை புரிந்தான் இவனை வஞ்சித்தான் அன்னியன் தாரத்தை இச்சித்து அவன் குடும்பத்தைக் கெடுத்தான் இவன் சொத்தை அபகரித்துக்கொண்டான் என்னும் பழியில்லாமலும், கொலைத் தொழிலே கொடூரமாகக் கொண்டவன் உள்ளத்தில் எக்காலும் வஞ்சத்தை உடையவன் என்னும் பாவமில்லாமலும், கோபமே வோருருவாகக் கொண்டவனும் கத்திரியைப் போல் ஒவ்வோர் குடும்பத்தைச் சேராமற்கத்திரிப்பவனும் எக்காலும் விரோதச்சிந்தையே கொண்டவனுமாகிய பகையில்லாமலும், இவன் கள்ளன் இவன் கொலைஞன், இவன் வஞ்சன், இவன் வழி பரிப்போன் என்னும் அச்சமும், நோயில்லாமலும் உள்ளக் குடும்பியாயிருப் பாளாயின் தனக்கோர் பழி நேராமலும், பகை நேராமலும், பிணி நேராமலும், பயம் நேராமலும் சுகவாழ்க்கையிலிருப்பான். அவ்வாழ்க்கை யினால் இல்லஞ் சார்ந்த குடும்பிகளுக்கும், சங்கஞ்சார்ந்த சமணர்களுக்கும், சமணநீத்து சித்துநிலை வாய்ந்த அந்தணர்களாம் அறஹத்துக்களுக்குத் துணையாக விளங்குவான். வித்தியா குரு, ஞான குரு, ஆதரித்தோன், தாய்தந்தையர் ஐவர்களையுங் கண்டவுடன் அன்புடன் வணங்கி ஆதரித்து முகமலரச் செய்பவன் தனதில் வாழ்க்கைத் துணைவியுடன் வாழ்க்கைத்துணை நலனுமடைவான்.

வித்தியா முயற்சியிலும் தேக முயற்சியிலுஞ் சம்பாதிக்கத்தக்க பொருள் பழிபாவத்திற்கு ஏதுவில்லாமலும் பிறன்மனம் வருந்தாமலுங் கொணர்ந்து தலைவனுந் தலைவியும் யாக்கை இரண்டாயினும் மனமும் அன்பும் பொருந்த நின்று நடாத்தும்

தருமமே வாழ்க்கை தருமமாகும். உலக நோன்புகளாகும் பஞ்சபாதகங்களை நீக்குவோருக்கும் பஞ்ச பொறிகளின் வாயல் அவிப்போர்களுக்குப் பக்கத்துணை வாழ்க்கையுற்று பூரணப் பக்குவம் அடையச் செய்பவனாதலின் இவனது ஒழுக்க வாழ்க்கையே உண்மைய உணர்த்தும் உத்தம் வாழ்க்கையாகும்.

தருமமென்பதே இல்வாழ்வோன் பீடமாயிருத்தலின் அவ்வில் வாழ்வோன் நீதியிலும், நெறியிலும், வாய்மெயிலும் பற்றுள்ளவனாய் இருப்பானாயின் அவன் மண்ணுலகத்தானாயினும் விண்ணுலகத்தாரெண்ணில் வைக்கப் பட்டவனாகின்றான்.

இல்வாழ்வோனுக்குப் பழிபாவம் ஏற்கும் சம்பாத்தியம் யாதெனில், ஒருவன் மதியை மயக்கி அவன் குடும்பத்தைக் கெடுக்கத்தக்க வஸ்துக்களும், பல உயிர்களைக் கொன்று விற்கத்தக்க மாமிஷங்களும், விஷங்களை ஏற்றி விற்கத்தக்க ஆயுதங்களும் மனிதர்களை அடிமை பிடித்து விற்குந் தொழில்களும், சூது விளையாடுவோருக்கும் கள்ளர்களுக்கும் இடங்கொடுத்து அதினால் சீவிக்குந் தொழில்களும் பழி பாவத்துக்குரிய தொழில்கள் யாவையும் அகற்றிப் பரநிலையில் வாழக்கடவன்.

இத்தகைய வாழ்க்கை உடையவனுக்குத் துணைநலமாக வந்தவள் தன் கணவனையே தன்னைக் காக்குந் தெய்வமாகவும் தன் கணவனையே தன்னை ஆதரிக்கும் ஆசானாகவும் தன் கணவனையே தன்னைக் காக்கும் காவலாளியாகவும் பல பதார்த்தங்களை வட்டித்து தன் கணவனுக்கூட்டி திருப்தியடையச் செய்தலே ஆனந்தமாகவும் தன் கணவன் மகிழ்வடைய மிருதுவான தொனி கொண்டு வார்த்தைப் பேசுதலே இன்பமாகவும் உடையவளே வாழ்க்கைக்குத் துணைநலமாவள். மனைக்குடையவள் எப்பெரியோரைக் காணிலும் அவர்களை வணங்கி உபசரித்தலும் பரபுஷர்களைக் காணில் அவர்களுக்குத் தன் முகத்தையுந் தேகத்தையும் மறைத்துக் கொண்டு நாணமுறுதலும் அன்னிய புருஷர்களில் பெரியோர்கள் கரமேனுஞ் சிறியோர்கள் கரமேனுந் தன் தேகத்தில் படில் பயிற்புறுதலும் எப்போதுந் தன் பார்வையையும் நடக்கையையும் அடக்கி ஆண்டுவருபவள் வாழ்க்கைக்குத் துணை நலமாவள். தன் கணவனுக்குத் திரண்ட திரவியங் கிடைத்தவிடத்து சந்தோஷமில்லாமலும் திரவியமில்லாத போது துக்கமில்லாமலும் கணவனைத்

திருப்தி செய்துக் கொண்டு கணவன் வார்த்தைக்கு எதிர்மொழி பேசாமலும் கணவன் செய்யுந் தருமச்செயல்களுக்கு எதிர்மறைக் கூறாமலிருப்பவள் வாழ்க்கைக்குத் துணை நலமாவாள் - கணவன் புசிக்கத்தக்கப் பதார்த்தங்களை வட்டித்து அவன் பசிவேளை அறிந்து புசிக்கச் செய்து தேக சுகத்திற்கும், தேக போஷிப்பிற்கும் ஆதார நோக்கத்திலிருப்பவள் வாழ்க்கைத்துணைநல மன தாயிக்குமொப்பாவாள். தன் கணவன் மதுப்பிரியத்தால் மயங்கி வெறிக்குங்கால் அவனுக்கு அன்பின் மதியூட்டி அவ்வருந்தலை மறக்கச் செய்தலும், தன் கணவன் பரஸ்திரீகமனத்தில் நுழைவானாயின் அவனுக்குக் கோபக்குறிக்காட்டாது இன்ப வார்த்தைகள் பேசி மிக்க அன்பு பாராட்டி ஆலிங்கனமுற்று அன்னியஸ்திரீகளின் எண்ணங்களை மாற்றுவதிலும் பழிபாவ யாசகத் தொழிலின்றி வருத்தி சம்பாதிக்கத்தக்க முயற்சியில் நடவும்படிச் செய்வதுடன் தானும் முயற்சியினின்று நற்கருமங்களை நடாத்தச் செய்பவள் வாழ்க்கைத் துணை நலமாவதுடன் மந்திரிக்கும் ஒப்பாவாள். பெண்ணெனத்தோன்றும் ஓர் உருவமே தனது துற்கருமச் செயல்களினால் இயமனெனனின்று இல்லத்தின் சுகங்களைக் கெடுத்துப் பாழாகிவிடுவாள். பெண்ணெனத் தோன்றும் ஓர் உருவமே தனது நற்கருமச்செயல்களினால் தனக்குத் தாய்போல் விளங்கி ஞானாமுதூட்டும் நல்வழிக்குந் துணையாவாள். ஓர் இஸ்திரீயை தன் கணவன் கார்ப்பனென்றுந் தன் பந்துக்கள் கார்ப்பரென்றுங் கூறுவதில் பயனில்லை. இஸ்திரீயானவள் தன்னுடைய கற்பைத் தானே கார்த்துக்கொள்ளுவது சிரேஷ்டமாக விளங்குவதால் வாழ்க்கைத் துணைக்கும் அவளே துணையாவாள். இத்தகைய வாழ்க்கை சுகமுண்டாக்கும். பெண்களும் பிள்ளைகளும் நற்கருமத் தொடற்சியின் வழியாய் வளர்பவர்களின் பலனாதலின் இல்லத்தில் வாழுங் கற்புடையாள் வாக்கு இகத்தை அழிக்கவும், இகத்தை வளர்க்கவுங்கூடியதாயிருக்கின்றது.

இல்வாழ்க்கைத் துணை நல் மனைவியும் துணையாம் நல்மனைவியின் கணவனும் தங்கள் நற்கருமப் பலன்களால் சுகவாழ்க்கையுற்றுத் தங்களை அடுத்தவர்களையுஞ் சுகமுறச்செய்து சத்திய தரும் சங்கத்தையும் நிலைபெறச் செய்வதால் இவர்கள் வாழ்க்கையே சுகவாழ்க்கையாம், இதையே நல்வாழ்க்கை என்று கூறப்படும்.

**சம்மா வாயமா - நன்முயற்சி**

ஓ! சகோதிரர்களே! நன்முயற்சியை விளக்குகின்றேன். மனிதன் செய்ய வேண்டிய முயற்சிகளில் முக்கியமானப்பெருமுயற்சிகள் நான்கு வகையான் முயலப்படும். அதாவது 1. ஒவ்வொரு மனிதனும் தன்னிடத்திலிருந்து நீக்கவேண்டிய முயற்சி. 2. தன்னை அணுகாமல் தடுக்க வேண்டிய முயற்சி 3. தன்னிடத்தினின்று மேலும் மேலும் உதிப்பிக்கச் செய்ய வேண்டிய முயற்சி 4. தன்னிடத்துள்ளதைப் பாதுகாக்கவேண்டிய முயற்சி இத்தகைய நான்கு முயற்சிகளையுந் தெளிந்தவன் சுகமற்றத் தீங்குகளை தன் சித்தத்தில் எழவிடாமல் அதேமுயற்சியில் போராடி முழு தைரியத்துடன் தன் மனதைத் திடப்படுத்திக் கொள்ளுவான். தன் கண்ணால் அதிரூபத்தையேனும் ரூபவஸ்துக்களையேனுங் கண்ட போதிலும் இனிய சப்தங்களைச் செவியில் கேட்ட போதிலும் பரிமளகந்தத்தை நாசியில் முகர்ந்த போதிலும் உருசியுள்ள பதார்த்தங்களை நாவில் சுவைத்தபோதிலும் சுகநிலையில் தேகத்தைப் பரிசித்த போதிலும் பலவகையான எண்ணங்கள் மனதில் எண்ணிய போதிலும் அதில் நிலைக்கத்தக்க இடங்கொடுக்கமாட்டான். மிதமீறிய உணர்ச்சியால் உதிக்குந் தீங்குகளையும் அவாக்களையும் திருப்த்தியில்லாதவைகளையும் தன் மனதில் தங்கவிடாமல் நீக்கிக் கொண்டே வருவான்.

எவ்வகை உணர்ச்சிக்கும் அவாவிற்கும் இடங்கொடுக்காமல் தனக்குள் அடக்கி ஆண்டு உணர்ச்சிகளின் பேரில் ஜாக்கிரதையாயிருப்பவன் தீங்குகளற்ற சுகநிலை காண்பான். இத்தகைய சுகநிலை காண வேண்டியவன் தனதைம் பல நுகர்ச்சிகளால் எழுந் தீங்குகள் யாவற்றையும் பேரவாவையும் தனதுள்ளத்திலும் உணர்ச்சியிலுந் தங்கவிடாமல் நீக்கும் முயற்சியிலிருப்பான். இதையே நீக்க வேண்டிய சித்தமுயர்ச்சி என்னப்படும்.

தனதுணர்ச்சியிலும் உள்ளத்திலும் எழுந் தீங்குகளையும் அவாக்களையும் உதிக்கவிடாமலுந் தோற்றவிடாமலுந் தடுக்கும் விழிப்பிலுஞ் ஜாக்கிரதையிலு மிருந்து அவைகளுடன் போராடி தன் மனதைத் திடப்படுத்திக்கொள்ளுவான். பேராசைக் கோபம் பொய்க் காட்சியால் உதிக்கும் எண்ணங்களைத் தடுத்து அவைகள் வேரூன்றி நிற்க இடங்கொடுக்க மாட்டான். அதை எக்காலும் எழ விடாமல் நசுக்கி நிர்மூலமாகும் படிப் பிரயாசைப்படுவான். தீங்குகளுக்கு மலமாகுஞ் சொற்ப எண்ணம் உள்ளத்தில்

தங்கிவிடுமாயின் உடனுக்குடன் கோபம், பேராசை, பொய்க்காட்சிகள் தோன்றி சுகமற்ற எண்ணங்கள் உதித்துவிடும். ஆதலின் சுகமற்ற எண்ணங்கள் சொற்பமேனும் உள்ளத்தில் தங்கவிடாமல் தடுத்துக்கொண்டுவருவான்.

தனது ஆழ்ந்த சிந்தனையால் உள்ளத்திலும், உணர்ச்சியிலும், இன்னின்ன துன்பத்திற்கு ஆதாரத் தீங்குகள் உதிக்கின்றன என்றும் இன்னின்னவகை விழிப்பிலும் ஜாக்கிரதையிலும் அதை வேரூன்றவிடாமல் செய்யவேண்டும் என்றும் கண்டுணர்ந்து அதே விருப்பத்திலிருப்பான். அதாவது தன்னைப் பாழாககக்கூடிய எண்ணங்கள் எவ்விடத்து உதிக்கின்றன என்றும் அவனை உதிக்கும் எண்ணங்களின் வித்துக்கள் எவை என்றும் ஆராய்ந்து அவைகளைப் பாழாக்கவுந் தடுக்கவும் முயல்வான். அல்லது ஒரே வைராக்கியத்தினின்று தன உள்ளத்தில் எழும் கோபம், பேராசை, பொய்க் காட்சியாம் எண்ணங்களைத் தடுத்து நிற்பதால் தீய எண்ணங்கள் யாவும் நசிந்து மனமானது அலையற்ற கடல் போல் நிற்கும். இதையே தீச்செயல் தோற்றங்களைத் தடுக்க வேண்டிய சித்த முயற்சி என்னப்படும்.

இத்தகைய விழிப்புஞ் ஜாக்கிரதையும் உடையவன் சிந்தனை, விவேகம், வக்கம், ஆனந்தம், ஆறுதல், மனநிறை, சமாதானம், சாந்தம் உண்டாக்கும் அறிவை விருத்தி செய்யக்கூடிய ஆதாரங்களையும், ஊன்றியவைகளைப் பாக்கக்கூடிய ஆதாரங்களையம், நிர்மூலப்படுத்தக்கூடிய ஆதாரங்களையும் துறவுக்கு ஆளாக்கும் ஆதாரங்களையும் உதிக்கச்செய்கின்றான். அதினால் சருவச்வர்களையும் அதரிக்கக்கூடிய உதிப்பம், சருவசீவர்களுந் தன்னைப்போல் சுகமடையவேண்டும் என்னும் உதிப்புஞ் சருவ சீவர்களுஞ் சுகவாழ்க்கை யிலிருக்கத் தான் காணவேண்டு மென்னும் உதிப்புஞ் சீவர்களுக்கு எக்காலுந் தருமங்களை ஊட்ட வேண்டுமென்னும் உதிப்புந் தன்ம வார்த்தைகளே செவியில் கேட்கவேண்டுமென்னும் உதிப்பும் உள்ளத்தில் வளர வேண்டிய முயற்சியையே உதிக்கச் செய்யவேண்டிய முயற்சிகள் என்னப்படும்.

இத்தகைய சுகவழியாம் எண்ணங்களைப் பாதுகாத்து அவைகளை நாசமாகவிடாமல் நல்லூக்கத்தால் முன்னுக்குக் கொண்டுவந்து இடைவிடா விழிப்பினின்று

தைரியத்துடன் மனதை நிலைக்கச் செய்கின்றான். இவ்வகை நல்லுணர்வை பாதுகாப்பவன் அதிதீவர பக்குவ ஜாக்கிரதையிலிருக்கின்றான். சோம்பலற்று சுருசுருப்பினின்று மத்திய பாதையில் நடப்பான். அதாவது தராசின் முள்ளானது சரிநிறைப் பெற்று மத்தியில் நிற்பதுபோல் வேண்டுதலும் வேண்டாதலுமாகிய மத்தியநிலையில் நிற்பான். அவனது மாமிஷம், நரம்பு, என்பு, தோல் முதலியவைகள் சுருங்கி மாறுபடினும் தனது நன்முயற்சிகள் மாறுபடாது விடாமுயற்சியிலும் ஆண்மெயிலும் இடைவிடா சாதனத்திலும் உள்ள நிலையைப் பாதுகாக்க வேண்டிய முயற்சிகள் என்னப்படும். இவைகளே நன்முயற்சிகளாம்.

**சம்மா ஸத்தி - நற்சிந்தனை**

ஓ! சகோதிரர்களே! இவ்விடம் நற்சிந்தனையை விளக்குகின்றேன். நற்சிந்தனையில் நான்குவகை உண்டு. அதாவது :- 1. காயா சம்யக்ஸ்மிருதி 2வேதனா சம்யக் ஸ்மிருதி 3. சித்தா சம்யக் ஸ்மிருதி. 4. தம்ம சம்யக் ஸ்மிருதி (இதன் விவரம்) 1. தேகத்தை மலபாண்டமென்றும், அசுத்தமென்றும் சிந்தித்தல் 2. உணர்ச்சிகளிலிருந்து உண்டாகுங் கேடுகளை சிந்தித்தல் 3. எண்ணங்களில் நிலையில்லா செய்கைகளை சிந்தித்தல் 4. அந்தரங்கத்தோர் விகாரங்களை சுத்த அறிவுடனும் புலன்கள் விழிப்பினின்றும், உலக அவாவினின்றும், துக்கத்தினின்றும், தருமசிந்தனையை சிந்தித்தல் இவ் விநான்கையே சத்தி பதானங்களென்றும் அல்லது முக்கிய தியானத்தின் நான்கு பாதைகள் என்றுங் கூறப்படும்.

இவற்றுள் 1-வது (காயா) ஸம்யக் ஸ்மிருதி தேகத்தைப்பற்றியச் செயலும், சிந்தனையும் யாதெனில், தேகத்தில் அமைந்துள்ள நவத்துவாரங்களிலும் மயிர்க்கால் பீரல்களிலும் படிந்துள்ள தூசுகளை சுத்தநீரில் கழுவி சுத்தவஸ்திரம் அணைந்து அரவமற்ற ஏகாந்த ஸ்தானத்திலேனும், வனங்களிலுள்ள விருட்சத்தின் அடியிலேனும் சுகசீலத்தில் உட்கார்ந்து உலகதோற்றமாம் சருவசீவர்களின் சுகத்தை சிந்திக்க வேண்டும்.

அவ்வகை அன்பின் பெருக்க சிந்தனையால் ஊசியில் கோர்த்துள்ள சரடு உளசி செல்லுமிடங்களில் துடர்ந்து செல்லுவது போல் மனதில் தொந்தித்த அடிச்சானது

மனதைத் தொடர்ந்து சிந்தனை லயிக்குமிடத்தில் மூச்சானது உள்ளுக்கடங்கியும் சிந்தனை பரவி நிற்குங்கால் மூச்சானது வெளிக்கோடியும் வரும். இவ்வகையாக மூச்சு உள்ளுக்கடங்குவதும், வெளிக்குப் பரவுவதும் தோற்றங்கள் விரிகிறதும் மறுபடியும் மடிகிறதுமாகியச் செயல்கள் யாவும்

னத்தின் செயலென்றே சிந்தித்தல் வேண்டும். இவ்வகை சத்திய சிந்தனை பெருக்கத்தால் மூச்சானது இவ்வளவு நேரந்தனக்குள் அடங்கியிருந்ததென்றும் இவ்வளவு நேரம் வெளிக்குச் சென்றதென்றும் உணருவான். இவ்வகை உணர்ச்சியால் மனமும் மூச்சும் மூக்கு முனையில் சேர்வதைக் காண்பான். அவ்வகைச் சேர்க்கையைக் காணுங்கால் தன் தாயின் கருப்பையில் கட்டுண்டு ஒன்பதா மாதத்தில் துள்ளி விளையாடும் போது மூச்சோடிக்கொண்டிருந்த ரந்தனத்தைச் சுழிமுனையில் காண்பான். அக்காட்சியால் மூச்சு ஒடுங்கு நிலையும் விரியு நிலையுந் திட்டமாயறிந்து முன் ஜெநநத்தின் கன்மகாட்சிகளைக் காண்பான். முன் கன்ம காட்சியைக் கண்டவுடன் இனி தோற்றுங் கன்மங்களுக்கு இடங்கொடாமல் விழிப்பிலும் நற்சிந்தையிலும் நிலைப்பான்.

இவ்வகையால் நிலைத்தவன் தன் தேகத்தையும் எதிரி தேகத்தையும் நோக்குவான். அவ்வகை நோக்குவோன் தேகமானது பதவிதாது அபோதாது, தேஜோதாது, வாயோதாது என்னும் நான்குவகை பூதச்சேர்க்கையின் ஏதுவால் தோன்றியதென்றும் அத்தோற்றத்தில் மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் இவைகளின் பிரிவென்றும்; சப்த, பரிச , ஒருப, ரச , கந்த, எண்ணங்களாம் அதன் செயல்களென்றும் உணர்ந்து அவ்வகைக் கூர்ந்த உணர்ச்சியால் விக்ஞானமென்னும் அறிவினின்று அதே விக்ஞான அறிவிநிலையில் நாமஸ் கந்தத்தையும், ரூபஸ்கந்தத்தையும் அறிகின்றான்.

இதில் வாய், கண், செவி, மூக்கென்னுந் தோற்ற ஸ்கந்தங்களே ரூபமென்றும், வேதனா, ஸஞ்ஞா, ஸம்ஸ்காரம், விஞ்ஞானம், நுகர்ச்சி, குறிப்பு , பாவனை, அறிவு என்றுஞ் செயலின் ஸ்கந்தங்களே நாமமென்றுங் கூறப்படும்.

இத்தகைய நாம், ரூபம் இரண்டையும் உணர்ந்தவன் தன் தேகத் தையும், எதிரி தேகத்தையும் பஞ்சஸ்கந்த சேர்க்கைகளென்றே தெரிந்து கூறுவான்.

தன்தேகம் எதிரிதேகம் உண்டாகிய கன்மங்களையும் தன்தேகமடிவுக்கும், எதிரிதேக மடிவுக்கும் ஏதுவாகிய கன்மங்களையுஞ் சிந்தித்து தேகமென்னும் ரூபமும் பாழ், உயிரென்னும் நாமமும் பாழென்னும் இரண்டற்ற நிலையில் நிற்பான்.

நான் உட்கார்ந்தேன், நான் படுத்தேன், நான் நின்றேன், நான் சாய்ந்தேனென்னும் ஒரு பொருள் தனியே இருக்கவில்லை. நான் என்பது எப்படி உட்காரும், நிற்கும், படுக்கும் என விசாரித்து இது வீண் வார்த்தை என்று அறிந்து தன் தேகத்தைப் பற்றியும் அன்னியர் தேகத்தைப் பற்றியுஞ் சிந்திப்பான்.

இந்த தேகம் உரோமத்தால் சூழ்ந்து நகம், பல், சதை, என்பு, மூளை, குண்டிக்காய், ஈரல், பித்தம், கபம், உதிரம், சீழ், உயிர் நீர், வியர்வை , சளி, மத்திரம், கண்ணீர் , தாது முதலிய உருப்புகள் சேர்ந்திருக்கின்றனவென்றும் இது காலத்திற்குக்காலந் துற்கந்தத்தைக் கொடுத்துக்கொண்டே வருமென்றும்; இவைகளில் ஒன்று கெடுமாயின் சகலமுங் கெடுமென்றுஞ் சிந்திப்பான்.

இவ்வகையாற் கெட்டழியுந் தேகம் மயானத்தில் இன்னு மாறுபட்டு நிறமுங் கெட்டு ஊதலிட்டிருப்பதைக்கண்டு தன் தேகமும் பிறர் தேகமும் இதுபோல் கெடுமல்லவா என்று சிந்திப்பான்.

இன்னோர் இடத்தில் கெட்டுள்ள தேகத்தை நரிகளுங் கழுகுகளும் பிடுங்கித்தின்பதைக்கண்டு நம்முடைய தேகத்தையும் பிறனுடைய தேகத்தையும் நரிகள் பிடுங்கித்தின்னுமல்லவா என்று சிந்திப்பான்.

அவ்விடத்திற் கிடக்குந் துண்டெலும்புகளைப்போலுங் குப்பல் எலும்புகளைப்போலுந் தன்னுடைய என்புகளும் பிறனுடைய என்புகளுஞ் சேர்க்கப்படுமல்லவா என்று சிந்திப்பான்.

கால் என்புகள் ஒருபுரமும், கை என்புகள் ஒருபுரமும், தலை என்புகள் ஒருபுறமும் பலர் கால்களிலும் உதைப்பட்டு உருளுவதைக் கண்டு நம்முடைய என்றுகளும் பிறனுடைய என்புகளும் மிதியும் உதையும் பட்டு உருளுமோ என்று சிந்திப்பான்.

அவ்வகையால் ஆழ்ந்து சிந்திப்பவனும், தேகத்தின் செயல்களை ஆராய்பவனும், தேகத்தில் வெறுப்படைந்த புண்ணியனும் தனது இடைவிடா விசாரிணையினால் பத்துவகை நற்குணங்களை அடைகின்றான்.

1.வெறுப்பும் விருப்புமற்ற நிலையே இடமாகக் கொண்டு நிற்பன்.

2. பயத்தையும் ஆவலையும் வெல்லுவான். ஆவலுக்கும் பயத்திற்கும் இடங் கொடான்.
3. குளிர்ச்சியையும், உஷ்ணத்தையும், பசியையும், தாகத்தையும் நோக்காமல் நிற்பன்.
4. கொசுக்களாலும், பூச்சுகளாலும், பல ஜெந்துக்களாலும் உண்டாகுந் துன்பங்களைத் துன்பமாகக்கருதாமலும், மற்ற ஜெந்துக்களால் உண்டாகும் இன்பங்களை இன்பமாகக் கருதாமலும் இருப்பன்.

இத்தகைய சிந்தனா மிகுதியாலும், விசாரிணைப் பூர்த்தியாலும் காம வெகுளி, மயக்கங்களற்று சாந்தம், ஈகை, அன்பு பெருகி சுழிமுனையில் சதாவிழிப்பில் இருக்குங்கால் மனதின் எண்ணத்திற்கு ஆதாரமாயிருந்த மூச்சானது மனத்தின் நல்லெண்ணமிகுதியால் அதனைப்பின் பற்றி சுழிமுனைத் திறந்து உள்ளடங்கியபோது அவனுக்குப் பலவிதமான தொனிகள் செவியில் சப்திக்கும். அவ்வகைத் தொனியையும் ஓர் பொருளாகக் கருதாமல் நிற்பான்.

5. அருகிலுந் தூரத்திலுமுள்ள சப்தங்களைப்போல் ஐம்பொறிகள் அடங்கியவிடத்து நாதவொலிகள் தொனிக்கும்.

6. தன்னிற்றானே தோற்றிய நாதவொலி அடங்கியவுடன் வெளியிலுள்ளப் பொருட்கள் யாவுந் தனக்குள் தோன்றும்.

7. அவ்வகைத் தோற்றத்தால் செல்காலம், வருங்காலமென்னும் முக்காலச் செயல்களையுங் கூறுவான். ஒவ்வொருவர் இதயத்தில் எண்ணும் எண்ணங்களையும் அறிந்து சொல்லுவான் ஆசாபாசங்களால் தனக்குள் தோன்றும் எண்ணங்கள் எவ்விடத்தில் அடங்கியதோ அதே இடத்தில் சருவமுந் தோன்றும். அவ்வகைத் தோற்ற இயல்பால் எண்பத்தொன்பது சித்துக்களும் வாய்க்கும்.

8. முன்பிறப்பிற்கு ஆதாரமான கன்மங்களையும், முன் பிறப்பையுங் கண்டறிவான்.

9. ஊனக்கண் பார்வையற்று ஞானக்கண்ணின் பார்வையால் சருவதோற்றங்களும், ஒடுக்கங்களும் முன்வினையின் பயனென்றறிந்து சருவ சீவர்களுக்கும் நீதிநெறிகளைப் புகட்டுவன்.

10. இத்தகைய ஞானக்கண் பெற்று சதா விழிப்பிலிருப்பவன் பிறப்பென்னுஞ் சமுத்திரத்தைக் கடப்பான்.

**மௌனதெரிசனம்**

அருமெயென்ற மௌனத்தை மூட்டு மூட்டு, வடங்காத கரணமது வடங்கிப்போம்,

இருமெயென்ற விந்திரிய மாண்டு போகு, மிருள்மலம்போம் திரோதையில்லை மயக்கம் நீங்கும். வெருவுபல கோடி கன்மங் கணத்தினீங்கும், வெளியினுள்ளே வொளிதோன்றும் நாதங்கேட்கும், உரிமெயுடன் மௌனசித்தியாகவாக, உருவமுனக் கானந்த உருவமாமே.

**மச்சமுனிவர்**

விழித்து மிகப் பார்த்திடவே பொறிதான் வீசும்.
முச்சந்தி வீதியிலே தீபத் தோன்றும் ,
சுழுத்தியிலே பொசாம லொருமனதாய் நின்றால்,
சுத்தமேன்ற நாதவொலிக் காதில் கேட்கும்,
இழுத்ததென்று நீகூடத் தொடர்ந்தாயானால்,
எண்ணெண்ணா பிறப்பிறப்பு எய்தும் பாரு ,
அழுத்தி மனக் கேசரத்தி நின்று மைந்தா,
அப்பனே லலாடத்தில் தூங்குவாயே.

**ஞானிகள் நிலை**

தந்த முதலைம்புவனை அடக்கி நாப்பண், | கருத்தமைத்து சாம்ப விநோக்கத்னை மேவி, தந்தையறத் தான் சரிக்குமிடங்கடன்னில் | செறிந்திடைய திருந்திணையா நிட்டைகூட வந்தெழம்பு மணிசலதி சிலம்பு சங்கு, | வண்டிசையாங் குழல்பேரி முழக்கங்காண. இந்தவகை சிவயோகத் திருப்பான்ஞானி, | இனியவாக்குப் பிறவியுமுண்டென்னலாமோ.

**ஔவைக் குறள்**

செல்லல் நிகழல் வருங்கால் மூன்றினையுஞ் | சொல்லுமௌனத் தொழில்

இவைகள் யாவும் தேகவிசாரிணையால் இதயத்தை சுத்தீகரித்தவிடத்தில் தோன்றும் காட்சிகளாம்.

2-வது வேதனா (சத்தி பதானா) சம்யக் ஸ்மிருதி, அதாவது, நுகர்வுகளிலிருந்து உண்டாகுங் கேடுகளை விவரிக்கின்றேன்.

ஓ! சகோதிரர்களே! நுகர்வுகளை தியானிக்கத்தக்க மனிதன் பின்வருமாறு சிந்திப்பான். நுகர்வுகளென்னும் உணர்ச்சியை ஆராயும் விருப்புள்ளவன் நுகர்வுக ளின்னதென்றும்,

வெறுப்புள்ள நுகர்வுக ளின்னதென்றும், நடுநிலையுள்ள நுகர்வுகளின்னதென்றும் சத்திய தருமத்தின்படித் தெளிவான்.

இலௌகீகத்திற்கடுத்த விருப்புள்ள நுகர்வுகளின்னதென்றும் வெறுப்புள்ள நுகர்வுகளின்னதென்றும் இலௌகீகத்திற்கு அடுத்த நடுநிலையுள்ள நுகர்வுக ளின்னதென்றும் சத்தியதன்மப்படி தெளிகின்றான்.

இவ்விதமாகத் தன்னிடத் துண்டாகும் நுகர்ச்சிகளாம் உணர்ச்சிகளைப் பற்றி சிந்திப்பான். அந்நியனிடத் துண்டாகும் நுகர்ச்சிகளென்னும் உணர்ச்சி களைப் பற்றி சிந்திப்பான்.

இவ்விதமாகத் தன்னிடத்துண்டாகும் நுகர்ச்சிகள் எவ்வகையிலுதிக் கின்றனவென்றும், அன்னியனிடத் துண்டாகும் நுகர்ச்சிகள் எவ்வகையால் உதிக்கின்றனவென்றும், தனக்குள் மறையும் நுகர்ச்சிகளைப்பற்றியும் பிறனுக்குள் மறையும் நுகர்ச்சிகளைப் பற்றியும் நடுநிலையில் மறையும் நுகர்ச்சிகளைப் பற்றியும் சிந்திப்பான்.

நுகர்ச்சிகளின் உதிப்புகள் யாவையும் உற்று நோக்குவான்.

இவ்வகையில் உற்றுநோக்கும் உணர்ச்சிகள் உற்றுநோக்குமிடத்தில் உதிப்பதென்றும் உணர்வான்

இத்தகைய நுகர்வின் நுண்ணறிவு தோன்றிய காரணம் யாதெனில் தன்னையுந் தன் செயலையும் விசாரித்து உணர்ந்த சத்தியதன்மத்தின் பற்றற்ற நிலையேயாம்.

உலகில் நான் உணர்கின்றேன் என்ற பதத்தை சுத்த சிந்தனையிலிருந்து ஒருவன் சாதாரண பேச்சு முறையன்றென்றும் இஸ்திரமானதல்லவென்றும் உற்றுநோக்குமிடத்துத் தானே உணர்பவனென்று தெளிகின்றான்

இவ்வகை ஆழ்ந்த அறிவுடன் உணர்ச்சிகளைப்பற்றி சிந்திக்குஞ் சிந்த னையே நுகர்வாகும் வேதனா தியானம் எனப்படும்.

3வது சித்த (சத்தியதானா) சம்யக் ஸ்மிருதி. அதாவது, எண்ணங்களின் நிலையில்லா செய்கைகளைப்பற்றிய தியானத்தை விளக்குகின்றேன்.

அதாவது உதிக்கும் எண்ணத்தை நோக்குகின்றவன் எண்ணங்களின் தோற்றுதலை கிறகிக்கின்றான்.

1 பேராசையின் யெண்ணங்களையும், பேராசையற்ற எண்ணங்களையும். 2. கோபத்தை எழுப்பும் எண்ணங்களையும், கோபத்தினின்று மீண்ட எண்ணங்களையும், 3. பொய்க்காட்சிகளது எண்ணங்களையும், பொய்க் காட்சிகளினின்று மீண்ட எண்ணங்களையும். 4. மனதை ஒன்றிலே செலுத்திய எண்ணங்களையும், மனதைப் பலவகையில் சிதரவிட்ட எண்ணங்களையும். 5. தாழ்ந்த எண்ணங்களையும், மகத்துவமுள்ள எண்ணங்களையும், 6. நீச்ச எண்ணங்களையும், புகழத்தக்க எண்ணங்களையும், 7. மனங்குவியும் எண்ணங்களையும், மனத்தின் நிலையற்ற எண்ணங்களையும். 8. சிக்கற்ற சுயக்கியான நேரான எண்ணங்களையும், விலங்கிலகப்பட்ட எண்ணங்களையும் ஆழ்ந்து சிந்திப்பவனாகின்றான்.

இவ்வகை ஆழ்ந்த சிந்தனையில் தன்னிடத்துதிக்கும் எண்ணங்களையும், அன்னியரிடத்துதிக்கும் எண்ணங்களையும், எண்ணங்கள் உதிக்கத்தக்க படங்களையும், அவைகள் ஒடுங்கும் இடங்களையும் ஆராய்வான். எண்ணங்கள் தோற்றுதற்கும் மறைவதற்கும் உள்ள காலவரைகளை சிந்திப்பான் தோற்றுதற்கும் மறைவதற்கும் உள்ள யேதுக்களை நோக்குவான்.

இவ்வகை நோக்கத்தின் மிகுதியும் நுண்ணறிவும் உண்டாகும் ஏதுக்கள் யாதெனில், தன்னையுந் தன் செயலையும் ஆராயும் பற்றற்ற நிலையேயாம்.

இத்தகைய ஆராய்ச்சியின் ஆழ்ந்த விழிப்பே எண்ணங்களின் தியானம் எனப்படும்.

4வது காம்பீர தம்ம (சத்திபதானா) சம்யக் ஸ்மிருதியை விளக்குகின்றேன் அதாவது, அந்தரங்கத் தோற்றங்களின் விகாரங்களைப் பற்றிய அறியுஞ் சிந்தனை என்னும் தியானமேயாம்.

இக்காம்பீர தன்மம் ஐந்து வகை உள்ளடக்கத்தை உடையது.

1. பஞ்சநீவர்னீய. 2. பஞ்சஸ்கந்த. 3. ஆயதன. 4. சத்த சம்போஜங்கய. 5. சதுர் சத்ய வென்பவைகளாம்.

1வது பஞ்சநீவர்னியத்தில் 1. காமச்சந்த. 2. வியாபாத. 3. தீனமித்த 4. உத்தச்சக்குக்கச்ச. 5. விஸிகிச்சா என்னும் ஐந்து பிரிவுகளுண்டு.

1. இதிற் (காமசந்தா) யாதெனில் ஒருவன் காமாக்கினியில் வெதும்புங்கால் காமயிச்சைப் பெருக்கத்திலிருக்கின்றான் என்றும் இக்காமாக்கினி மறுபடியும் எவ்விடமிருந்து எழும்புகிறதென்றும் எவ்விடத்தில் இல்லாமல் அடங்குகிற தென்றும் அவ்வகை எழும்புங் காமாக்கினியால் உண்டாகும் இன்பம் தன் தேகத்தில் ஜெநிக்கின்றதா அந்நிய தேகத்தில் ஜெநிக்கின் தாவென்று உணர்ந்து காமத்தில் எரிவுக்குங் காம எரிவின் இன்பத்திற்குந் தன் தேகமே காரணமாதலின் இச்சிற்றின்பத்தின் வீணவாவால் தேகத்தைப் பிணிக்குள்ளாக்கி கேடுண்டாக்கிக் கொள்ளுவது தகாதென்றறிந்து காமாக்கினியை அவித்து அதனின்று தப்பித்து அவ்விச்சையில் விடுபட்டவனாகின்றான்.

2. (வியாபாத) வென்னுங்கோபக்கினியானது தன்னையொருவன் மனனோகப் பேசியவிடத்திலும் தன் தேகத்தை நோக புடைத்தவிடத்திலும் தன் பொருளை யபகரித்த விடத்திலும் பிறத்தலால் இக்கோபாக்கினியின் தோற்றத்திற்கு பேரவாவின் பீடமே நிலையென்று உணர்ந்து கோபத்தையும் அவாவையுஞ் சீர் தூக்கி உணர்ந்து தன்னுடையது பிறனுடையதென்னும் அவாவின் மூலாக்கினியே கோபாக்கினியாயதால் அவாவை யடக்கிக் கோபத்தைத் தணிக்க முயலுகின்றான்.

அம்முயற்சியே அவாவையறுத்து கோபாக்கினியை யவித்து அவ்வக்கினிக்குத் தப்பித்து கோபத்தினின்று விடுப்பட்டவனாகின்றான்

3. (தீன் மீத்த) வென்னும் சோம்பலானது மிதமின்றி புசிக்கும் பொசிப்பினிடத்துஞ் சதா மதோன்மத்தத்திடத்து முதிப்பதென்றுணர்ந்து மிதாகாரம் புசித்து மதோன்மத்தம் போக்கி சோம்பலை நோக்குவான். அச்சோம்பலும் அசதியும் நீக்கியவிடத்து தனக்குள் எழுஞ் சுருசுருப்பையும் ஆனந்தத்தையும் உணருவான். அன்று முதல் சோம்பலுக்கும் அசதிக்கும் மூலமாகும் மித புசிப்பையும் மதோன்மத்தத்தையும் அகற்றி சோம்பலும் அசதியுந் தன்னை யணுகாமல் அகற்றி அதனின்று விடுப்பட்டவனாவான்.

4. (உத்தச் சக்குக்குச்ச) வென்னும் பெருமகிழ்ச்சியும் அதனிறை வியாகூலமும் உண்டாவதற்கு மூலம் தனக்குள்ள பூநிதியும் தனநிதியும் பசுநிதியுங் குரைவில்லாமல் இருக்குங்கால் பெருமகிழ்ச்சியடைவான். அவைகள் மாண்டவிடத்து மாளா வியாகூலமடைவான். இவ்வகை மகிழ்ச்சிக்கும் வியாகூலத்திற்கும் பொருள் சேர்க்கையின் பெருந் தோற்றமும் பொருளழிவின் சிறுந்தோற்றமுங் காரணமென்றுணர்ந்து திரண்ட திரவியஞ்சேரினும் பெருமகிழ்ச்சி அடையாமல் பெருந்திரவியம் அழியினும் வியாகூலமடையாமல் உலகப் பொருட்கள் தோற்றுவதும் மடிவதும் உள்ள சுவாபமென்று உணர்ந்து மகிழ்ச்சிக்கும் வியாகூலத்திற்கும் மத்தியில் நின்று பெரு மகிழ்ச்சியையும் வியாகூலத்தையும் வெல்லுவான், தற்புகழ்ச்சியாம் மகிழ்ச்சியையும் வியாகூலத்தையும் வென்றவன் அவைகளினின்று சதா விடுபட்டவனாகின்றான்.

5. (விசிகிச்சா) வென்னும் சந்தேகமென்பது ஒருவன் மரணமடைந்தபின் சுகமுண்டென்னும் இடத்திலும், மற்றொருவன் மரணமடைவதற்குமுன் சுகமடைய வேண்டுமென்னும் இடத்தில் உதிப்பதை உணர்வான்.

அச்சந்தேகத்தை மரணமடைந்தபின் சகலமுமடிந்து வினைபோகத்துக் கீடாய் மறுதேகத் தோற்றலைக் காண்பான். அக்காட்சியால் துற்கன்ம நற்கன் மச் செயல்களின்

பலன்களை உணர்ந்து சந்தேகமற தன்தேக நற்கன்ம பலன்களைப் பெருக்கி சதானந்தமும் நித்திய சுகமும் மரணத்தை ஜெயித்தவிடமாம் சந்தேகமற்ற சதா விழிப்பினிடத்திலுள்ள தென்று உணர்ந்து சந்தேகத்தினின்று விலகி சதா விடுபட்டவனாகின்றான்.

இவ்வகையாக சந்தேகங்களை அகற்றி தன் தேக அந்தரங்கத் தோற்றங்களையும் அதன் களைகளையும் வேரறக் களைந்து தோற்றுங் களைகளெழாது சிந்திப்பான்.

இவ்வகைச் சிந்தனா தியாகம் எவ்விடத்துதித்ததென்னில் இடைவிடா நுட்ப விசாரிணையாலும் சத்திய தரிசனையாலுந் தன்னை உணர்ந்து வெறுப்படைந்த புண்ணியத்தாலும் ஆழ்ந்த சிந்தனையாலும் உலகபந்தத்தில் சிக்குண்ணா ஜாக்கிரதையாலும் உண்டாகும் நல்லிச்சையின் நடுநிலையாம் சுபயிச்சை விசாரணை தியானமென்னப்படும்.

இத்தகைய நல்லிச்சை விசாரிணை தியானமாகிய பஞ்சஸ்கந்த தம்மேய வென்னும் ஐந்து மூலதத்துவங்களை விசாரிக்கின்றான்.

1. ரூபம் எவ்விதமாகத் தோன்றி எவ்விதமாக மறைகிறதென்றும் 2. உணர்ச்சி எங்கிருந்து தோன்றி எங்கு மறைகிறதென்றும், 3. குறிப்பு எவ்விடத்தினின்று தோன்றி எவ்விடத்தில் மறைகிறதென்றும், 4. பாவனை எவ்வகை ஆதரவால் தோன்றி எவ்வாதரவால் மறைகிறதென்றும், 5. அறிவு எவ்வகை சுகத்தால் தோன்றி எவ்வகை அசுகத்தால் மறைகிறதென்றும் உசாவுகின்றான்.

பஞ்சஸ்கந்த தோற்றமாகும் அறுவகை சம்பந்த விஷயமாகுங் கருமத் தொகுதியைப் பற்றியுங் கரும் உற்பவங்களைப் பற்றியுஞ் சிந்திப்பான்.

அதாவது ஆயதன தம்மேயவென்னப்படும். விஷய சம்பந்த கருமத்தொகுதியைப் பற்றியுங் கரும் உற்பவங்களைப் பற்றியுஞ் சிந்திப்பான்.

அதாவது ஆயதன தம்மேயவென்னப்படும். விஷய சம்பந்த கருமத் தொகுதிகளுக்கு ஆதாரம் அறுவகைப் பீடங்களாகும்.

1. சக்கு. 2. சோத. 3. மாஹன. 4. ஜீவ்ஹ. 5. காய. 6.மனோ . இதுவே 1. கண், 2 செவி, 3. மூக்கு, 4. வாய் , 5. மெய், 6. மனம்

இதிற்றோன்றும் அறுவகைக் கருமத்தொகுதிகளின் தோற்றங்கள் யாதெனில் 1.சப்த, 2. பரிச, 3. ரூப, 4. ரஸ, 5. கந்த, 6. மனோ கருமங்களாகும்.

இவ்வறுவகைக் கருமத்தொகுதியாம் விஷயசம்மந்தமாகும் உள்ளுணர்ச்சியின் தோற்றங்களை யாராய்வான்.

அதாவது, அவன் கதி ஈதென்றுங் கண்ட ரூபங்கள் இஃதென்றும் அதினின்றெழும் பற்றுக்கள் இவையென்றும் அப்பற்றுக்களின் எழுச்சி எவ்விதமாய் எழும்புகிறதென்றும் எவ்வகையால் மடிகிறதென்றும் எவ்விதத்தால் மேற்கொள்ளுகிற தென்றும் எவ்விதத்தால் அதினினின்று மீண்டு சதா விடுபட்டோமென்பதையும் அறிகின்றான்.

இவ்வகை விசாரிணையால் 1. கண்ணையும் பார்வையையும், 2. செவியையும் சப்தத்தையும், 3. மூக்கையுங் கந்தத்தையும், 4. வாயையும் உருசியையும், 5. மெய்யையும் உணர்ச்சியையும், 6. மனதையும் எண்ணங்களையும், அதனதன் கட்டுகளையும் ஒன்றைக்கொண்டு ஒன்று தாவியிருப்பதையும் அதனதன் பற்றுக்களையுந் தோற்றங்களையும் மறைவுகளையும் அழிவுகளையும் அவ்வகைத் தோற்றங்களுக்கும் பற்றுக்களுக்கும் இடங்கொடாது சதா விழிப்பில் நின்று விடும் பற்றற்ற நிலைகளை அறிகின்றான்.

அவ்வகைப் பற்றறுக்கும் ஆயுதங்களாகும் சத்த போஜங்கய தன்மேயவென்னு அறிவைத்துலக்கும் அந்தரங்க எழுவகையான மூலங்களை ஆராய்வான்.

அதாவது - 1. சதிசம்போஜங்காய, 2. தம்மவிசய சம்போஜங்காய், , கீரியசம்போஜங்காய, 4. பிரீதிசம்போஜங்காய, 5. பஸ்ஸதத்தி சம்போஜங்காய், 5. சமாதி சம்போஜங்காய, 7. உபேய சம்போஜங்காய எனப்படும்.

1.ஞாபகம் எப்போதுந் தன்னிலிருக்கின்றதென்றும், 2. நுட்ப விசாரிணை எப்போதுந் தன்னில் இருக்கின்றதென்றும், 3. முயற்சி எப்போதுந் தன்னில் இருக்கின்றதென்றும், 4. ஆனந்தம் எப்போதும் தன்னில் இருக்கின்றதென்றும், 5. சந்தி எப்போதுந் தன்னில் இருக்கிறதென்றும், 6. மனனம் எப்போதும் தன்னில் இருக்கின்றதென்றும், 7. சம்திருஷ்டி எப்போதும் தன்னில் இருக்கின்ற தென்றும் இவைகளின் விடா நோக்கங்களே அறிவின் விருத்தி என்றும் விவேக மிகுதியென்றுங் கண்டறிகிறான்.

இவ்வகைக் குணங்கள் தன்னிலுள்ளபோது இருப்பதென்றும் இல்லாத போது இல்லை என்றுந் தெரிகின்றான். இவ்விதமாய் மனக்களிம்பகற்றும் மூலயேதுக்கள் எவ்விதமாக வுதிக்கின்றதென்றும் எவ்விதமாகப் பூரணப்படுகிற தென்றும் அறிகின்றான். அப்பூரண நிலையாகும் நான்கு சத்தியத்தைப் பற்றி சிந்திப்பான்.

1. துக்கசத்ய, 2. சமுத்ய சத்ய, 3. நீரோத சத்ய, 4. மார்க்க சத்ய எனப்படும். இவ்வகை நான்கு சத்திய விசாரிணையால் 1.பஞ்சஸ்கந்தங்களே துக்கத்திற்கு மூலமென்றும், அதினால் உண்டாகும் 2 அவாக்களே துக்கத்தின் மூலகாரணம் என்றும் , 3. அவாவறுத்தலே துக்க நிவாரணமென்றும், 4. அவாக்களை யறுக்கும் மார்க்கங்களே பரிசுத்த அஷ்டாங்க மார்க்கங் களென்று அறிகின்றான்.

இவ்வகை அறிந்தவன் அந்தரங்கத்தில் தனக்குள்ள சத்திய தன்மங்களையும் அதினாற்றா னடைந்துள்ள ஆறுதல்களையும் அன்னியன் அந்தரங்கத்துள்ள அசத்திய தன்மங்களையும் அதினால் அவனடையும் அல்லல்களையுங் கண்டறிகின்றான். இவ்வகை அந்தரங்க சத்தியங்களை அறிதற்கு நுட்ப அறிவும் பற்றற்ற நிலையும் புண்ணிய சிந்தையும் நன்மண வாசமுமே காரணமென்று அறிவான் இதய பரிசுத்த மடையும் அழிவிலா வாழ்க்கையை அடையவும் துக்கத்தினின்று விடுபடவும்

அழுகையிலும், ஏக்கத்திலும், பற்கடிப்பிலும் நின்று நீங்கவும் நான்கு சத்திய தானங்களே ஆதாரமும் நிருவாணத்தின் பாதையும் என்றறிவான்.

ஓ! சகோதிரர்களே! ஓர் காட்டு யானையைப் படுகுழிவெட்டிப் பிடித்து நாளுக்குநாள் அதன் மதோன்மத்தங்களை அடக்கி காட்டில் ஏதேச்சையாய் உலாவித்திரியுங்காலிருந்த கொடுஞ்செயல்களை ஒடுக்கி ஊரிலுள்ள மக்களுடன் பழகிவருமளவுஞ் சதா விழிப்பிலும் நின்று வயப்படுத்துவதுபோல், இதய பரிசுத்தத்தை நாடும் அன்பனொருவன் தன்னெண்ணத்தில் நான்கு சத்தி பதானங்களை நோக்கி காம வெகுளி மயக்கங்களைப் போக்கி உலகப் பற்றுக்களை நீக்கி சதா விழிப்பால் தன்னைத்தானே கார்த்து தன்னை சுத்திகரிக்குஞ் சாதனத்தினின்று சத்திய தரிசனமாம் பரிசுத்த முத்தி என்னும் நிருவாணத்தை அடைவான்.

**சம்மா சமாதி - நல் அமைதி**

ஓ! சகோதிரர்களே! மன அமைதியாஞ் சாந்தத்தைப் பற்றி இவ்விடம் விளக்குகின்றேன். அவையே, 1. காயானாபஸ்ஸன்னா 2. வேதனானுபஸ்ஸன்னா 3. சித்தானுபஸ்ஸன்னா 4. தம்மானு பஸ்ஸன்னா என்னும் நான்குவித சத்திபதானங்கள் என்னப்படும். அதாவது, 1. அசுத்தத்தாலாய தேகத்தைப்பற்றி சிந்தித்தல் 2. வேதனா சகல உணர்ச்சிகளினின்று உண்டாகுங் கேடுகளைப்பற்றி சிந்தித்தல் 3. மனத்தினது எண்ணங்களின் ஓட்டங்களையும் மறதிகளையும் உதயங்களையும் சிந்தித்தல் 4. உலகத்தில் தோற்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்கு க்ஷணங் கெட்டுக்கொண்டே வருகிறதென்று சிந்தித்தல் சாந்தத்தின் பெருக்கத்தையும், மன அமைதியையும், இதய சுத்தத்தையுங் கோறும் ஒவ்வொரு மனிதனும் மேற்கூறியுள்ள நான்குவகை சத்திபதானங்களையே தியானிக்கக் கடவன்.

இத்தகைய சிந்தனையாம் மன அமைதிக்கும், இதய சுத்தத்திற்கும் வழிகள் யாதெனில்:- சம்வாப்பதானா 2. பஹானப்பதானா 3. பாவனாப்பதானா 4. பிரக்கமாப்பதானா என்னும் நான்கு தானங்களே மன அமைதிக்கும் இதய சுத்தத்திற்கும் பாதைகளென்னப்படும்.

அதாவது, 1. தங்களுக்குள் கெட்ட எண்ணங்கள் உண்டாகாமல் தடுக்கும் முயற்சியிலிருத்தல் 2. தங்களுக்குள் உள்ள கெட்ட எண்ணங்களை நீக்க வேண்டுமென்று சதா முயற்சி செய்தல் 3. தங்களுக்குள் முன்னில்லாத நல்லெண்ணங்களையும் நன் முயற்சிகளையும் இடைவிடாது விருத்தி செய்தல் 4. தங்களுக்குள் உண்டாயிருக்கும் நல்லெண்ணங்களையும் நன்முயற்சிகளையும் மேலும் மேலும் விருத்தியடைய முயற்சித்தல் இன்னான்குமே மன அமைதிக்கும் இதய சுத்தத்திற்கும் நெறுங்கிய பாதைகளாகும்.

இவைகள் இடைவிடா பழக்கத்திற்கும் விருத்திக்குங் கொண்டு வருவதே நற்றியானம், நற்சிந்தனை என்னப்படும். இத்தகைய நல்லறமாம் ஒழுக்கத்தினாலும், பரிசுத்த வாழ்க்கையினாலும், உணர்ச்சிகளைத் தன்னிடத்தில் வசப்படுத்திக் கொள்ளுவதினாலும் விவேகவிருத்தி அடைந்த மாணாக்கனுக்குத் தனித்தவிடத்திற் செல்லவேண்டிய நோக்கம் பிறக்கும்.

அதினால் காடுகளிலேனும், மரத்தினடியிலேனும், மலைக்குகை களிலேனும், அடர்ந்த தோப்புகளிலேனுஞ் சலனமற்று அடங்கி ஒடுங்குமிடந் தேடுவான் இவ்வகைத் தேடி ஓடி ஓரிடந் தங்கி பிச்சை பாத்திரத்தாலேனும் தானத்தாலேனுங் கிடைக்கும் அன்னத்தை ஒருவேளை புசித்து சம்பளம் போட்டு உட்கார்ந்து சிரநிமிர்ந்து நீ தானமென்னுஞ் சுழிமுனையாம் உள்விழி

பார்வையால் மனதை அமைதியடையச் செய்வான்.

**ஞானவாசிட்டம்**

மனமணிபேதச் சேற்றின் மறைந்தொருவருக்குத் தோன்றா
கனமுறுவிவேக நீராற் கழுவினாற் சித்திகாட்டும்
வினவுறுவிவேகவன் பான்மெய்மெயை மதியாற்கண்டு
சினமுறுபொறியை வென்று தீர்வரும் பிறவிதீர்வாய்.

1. இத்தகைய சாதனமுடையோன் முன்பே காம இச்சையைத் தவிர்த்திருப்ப வனாதலின் காம அவாவினின்று விலகி பரிசுத்த இதயமுடையவனாவான்.

2. இச்சாதனத்தால் முன்பே கோபத்தைத் தவிர்த்தவனாதலின் குரூரச்சிந்தையை அகற்றி பரிசுத்த இதயமுள்ளவனாவான்.

3. இச்சாதனத்தால் முன்பே பிராந்தியின்று நீங்கி இருப்பவனாதலின் சதா விழிப்பிலும் ஜாக்கிரதையிலும் விருத்தி அறிவிலும் நின்று பிராந்தியில் பற்றற நீங்கி ஒளியில் அன்புகூர்ந்து பரிசுத்த இதயமுள்ளவனாக விளங்குவான்.

4. இச்சாதனத்தால் அமைதியற்ற வியாகூலத்தை முன்பே தவிர்த்திருப்ப வனாதலின் மனம் மாறாமலுஞ் சாந்தம் பேராமலும் வியாகூலத்தினின்று விலகி நித்யானந்தனாகி பரிசுத்த இதயமுள்ளவனாக விளங்குவான்

5. இச்சாதனத்தால் மனமாறுதல்களை முன்பே தவிர்த்திருப்பவனாதலின் நன்மெயாம் உண்மெயில் அன்பை வளர்த்தி பரிசுத்த இதயமுள்ளவனாக விளங்குவான். ஆகிய இவ்வைந்து தடைகளை முன்பே களைந்து எறிந்து விட்டதினால் மனதின் சுய நிலையை அடையப் பிரயத்தினப்படுவான்

அதாவது, மயக்கத்தினின்று விடுபட்டவனாகியும் உணர்ச்சிகளாலாய எண்ணங்களுக்கு அதீதப்பட்டவனாகியும் துர்நடத்தைகளுக்கு அப்புறப்பட்ட வனாகியும் இருப்பதுடன் தன்னை இவைகளினின்று விலக்கிக் கொண்டு மனத்துடனும் ஆராய்ச்சியுடனும் கூடி மன அமைதியாம் முதல் தியானமாகும் பிரீதி, சுகா, சித்த, ஏக்கதா என்னுஞ் சந்தோஷமயம், ஏக சிந்தனை இவைகளின் உட்பிரவேசிப்பான்.

இம்முதல் தியானத்தில் 1. காமம் 2. கோபம் 3. பிராந்தி 4. அமைதியற்ற வியாகூலம் 5. மனமலைவு இவ்வைந்தும் ஒழிந்து

1. மனனம் 2. ஆராய்ச்சி 3. சந்தோஷம் 4. ஆனந்தம் 5. ஏக சிந்தை ஆகிய ஐந்தும் உதிக்கின்றன.

இரண்டாந் தியானத்தில், மனனத்தையும் ஆராய்ச்சியையுந் தவிர்த்து சாந்தமுடையவனாகியும் ஆனந்தமுடையவனாகியும் இருப்பான்

அவைகள் அடக்கப்பட்டிருக்குஞ் சாந்தியும் ஏக சிந்தனையும் உதிக்கும். இதை பிரீதி, சுகா, ஏககதா என்னப்படும் இரண்டாந் தியானத்திலிருப்பான்.

மூன்றாந் தியானத்தில் மேற்கண்ட சந்தோஷத்தினின்றுக் கொண்டு நித்தியானந்தம் உடையவனாகியும், சதா விழிப்புள்ளவனாகியும், விவேகவிருத்தி உள்ளவனாகியும் மனமணியின் சுயப்பிரகாச பேரின்ப சுகத்தைத் தானே அனுபவிக்கும் மூன்றாந்தியானத்திலிருப்பான்.

நான்காவது தியானத்தில் அவனது சுகதுக்கங்களை விலக்கி பற்றற்று மனநிறைவில் சென்று துக்கமுஞ் சுகமுமற்றிருக்கின்ற மனநிறை அல்லது உபேட்சை சித்த ஏக்கதா என்னும் பரிசுத்த நிலையாம் நான்காந் தியானத்திலிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! முன்பு கூறியுள்ள நான்குவகை தியானங்களில் பூர்த்தியான நிலை அடைந்தவுடன் ஐந்து வகை பாவனையில் நிலைப்பன்

1. மைத்திரீபாவனா : அதாவது, உலகில் தோன்றியுள்ள சருவ சீவர்களும் ஆனந்தத்தில் வாழ்கவேண்டுமென்று பாவிப்பான். சீவராசிகள் யாவும் பேராசை, துக்கம், வியாதி, துராசையினின்று மீளவேண்டுமென்று பாவிப்பான். சருவ மநுட சீவர்களும் பிறவி என்னும் நரகவாதனையில் சுழன்று திரியாமல் சுகநிலை அடைய வேண்டுமென்று பாவிப்பான்.

2. கருணாபாவனா : ஏழைகளும், பிணியாளரும் செல்வம் நிறைந்து சுகதேகிகளாக வாழவேண்டுமென்று பாவிப்பான்.

3. முதிதபாவனா : ஒவ்வோர் மநுடசீவர்களும் தங்கள் தங்கள் நல்வினைகளைப் பெருக்கி நற்பயனை அடையவேண்டுமென்று பாவிப்பான்.

4. அசுபபாவனா : சரீரமானது பலவகைக் குற்றங்களால் ஆக்கப்பட்டதென்றுஞ் சாணக்குவியலில் தோன்றி வளருகின்ற புழுக்களைப் போல் கருப்பையில் உண்டாகிறதென்றும், ஒன்பது துவாரங்களின் வழியே ஒப்பத்தகாத கசிவு ஓயாமல் சொறிகிறதென்றும் ஊற்றை சாரளத்தைப் போல் வெறுக்கத்தக்க நாற்றத்தை அது வெளிப்படுத்துகிறதென்றுஞ் சரீரத்தின் கால அளவு மின்னிலைப்போன்றதும் நுரையைப்போன்றதும் நீரிலிட்ட உப்பைப் போன்றதும் காய்ந்தப் புல்லைப் பற்றிய நெருப்பைப் போன்றதும் கடலின் அலையைப் போன்றதும் புல் நுனியின் மீதுள்ளப் பனித்துளியைப் போன்றது மாகிய நிலையற்ற தேகமென்று ஒவ்வோர் மநுட சீவர்களும் ஆழ்ந்து ஆயுளைப்பற்றி அஞ்சவேண்டுமென்று பாவிப்பான்.

5. உபேட்சபாவனா : சகல உயிர்களையுஞ் சமமாகப் பாவித்தலும் வேண்டுதல் வேண்டாமெ என்னும் வெறுப்பு விருப்பின்றி இருத்தல் வேண்டுமென்றும் பாவிப்பான்.

நான் என்பதும் வீணெண்ணம். நானல்ல என்பதும் வீணெண்ணம். நான் இருக்கின்றேனென்பதும் வீணெண்ணம். நான் இல்லை என்பதும் வீணெண்ணம். நான் ரூபமுள்ளவனென்பதும் வீணெண்ணம். நான் ரூபமில்லாதவனென்பதும் வீணெண்ணம்.

ஓ! சகோதிரர்களே! வீணெண்ணங்கள் விரிவதே பிணி. வீணெண்ணங்கள் விரிவதே துக்கம். வீணெண்ணங்கள் விரிவதே பிராந்தி. வீணெண்ணங்கள் விரிவதினின்று குறிகி வீணெண்ணங்களில் ஓடாமல் மீண்டவன் எவனோ அவனையே ஞானவரம்பிட்ட மவுனி என்று கூறத்தகும்.

இம்மவுனி மறுபடியும் பிறக்கவுமாட்டான், தோன்றவுமாட்டான் இறக்கவுமாட்டான். ஏனெனில் வீணெண்ணங்களும், வீண்வாக்களும், வீண் வார்த்தைகளும், வீண்

செயல்களுமற்று அதனினின்று எப்போது மீண்டானோ அப்போதே வீணெண்ணங்களுக்கும், வீண்வாக்களுக்கும், வீண் வார்த்தைகளுக் கும், வீண்செயல்களுக்கும் ஏதுக்களில்லாமல் சருகு புழுப்போல் அடங்கி விடுகின்றான்.

அதாவது சருகு புழுக்களானது சிறு புழுக்களா இருக்குமளவுந் தவிழ்ந்து இலைகளைப் புசித்து ஊர்ந்து முதிர்ந்தகாலத்தில் தான் பிடித்துத் திரிந்த இலையால் தன்னை மூடிக்கொண்டு தன்னாவின் பசையால் சுழன்று தன்னுருமாறி கோவைக் காய்கள் போல் சிலநாள் அவ்விலையின் காம்பில் தொங்கிக்கொண்டிருந்து வெடித்து சருகு பட்சிகளாய் வெளியிற் பறந்தோடுவது இயல்பாம். அதுபோல் மனிதனும் பேராசை, கோபம், காமம், பொய்க்காட்சி, வீணெண்ணம் இவைகளினின்று விடுபட்டு சாந்தம், ஈகை, அன்பு மூன்றும் பெருகியவிடத்து இதயசுத்தம் உண்டாகி கலை வளர்ந்து பூரணமடைந்து தோற்றங்களில் உண்டாகும் பற்றுக்களற்று பிறவியினின்று மீண்டு நித்திறை என்பதற்று சதா விழிப்புள்ளவனாய் இரவு பகலற்ற பரிபூரண மௌனநிலை அடைகின்றான்.

அவ்வகை மௌனபாக்கியந் திரண்டவுடன் முன்பு அநித்தியத்தினின்றவன் நித்தியனாகின்றான். ஆத்துமாவினின்றவன் அனாத்துமனாகின்றான். ஐந்நங்கள் தோறும் பொய்யனாக நின்றவன் உண்மெய்யனாகின்றான். அப்பொய்யற்ற மெய்யே நிருவாணமென்னப்படும்.

இதுவே அதீதப்பட்ட ஞானம். இதுவே துக்கம் நீங்கிய இடம். இதுவே பிறப்பிறப்பற்ற நிலை. இதுவே சத்திய பீடம். இதுவே உள்ளத்துறவு. இதுவே பரமசாந்தி. இதுவே சுகவாரி. இதுவே பரமானந்தம். இதுவே பரிபூரணம். இதுவே சருவ உலகங்களையுந் தோற்ற வைக்கும் பளிங்கு. இதுவே சருவ உள்ளங்களையும் அறியத்தக்க பளிங்கு. இதுவே சாந்தம் நிறைந்த பிரமம். இதுவே அன்பு நிறைந்த சிவம், இதுவே யீகை நிறைந்த ஈசன். இதுவே சுகமுத்தி. இதுவே பரமோக்ஷம். இதுவே நிருவாணமுமாம்.

இத்தகைய மெய்கண்ட நிருவாணநிலை அடைந்தவனே புத்தனாவன். இவ்வகைப் புத்தனானோன் சருவசீவர்களின் யீடேற்றங் கருதி ஒவ்வொரு சீவப்பிராணிகளின்

மீதும் அன்பு பாராட்டி அஹிம்சா தருமத்தை நாட்டி புற்பூண்டுகளிலிருந்து உயர்ந்து புழுக்கீடாதிகளாக தோற்றுவதற்கு இடை யூறுகள் நேரிடாமலும் புழுக்கீடாதிகளிலிருந்து உயர்ந்து மட்சம் பட்சிகளாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், மட்சம் பட்சிகளிலிருந்து

து மிருகாதிகளாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், மிருகாதிகளினின்று உயர்ந்து மக்களென்னும் மனுக்களாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், மனுக்களிலிருந்து உயர்ந்து தேவர்களாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலுந் தடுத்து சத்திய தன்மம் என்னும் மெய்யறமாம் சுகவழியைக் காட்டி துக்க நிவர்த்தியாம் பிறப்பறச் செய்வான்.

**விவேகசிந்தாமணி**

மெய்யதைச் சொல்வாராகில் விளங்கிடு மேலுநன்மெய்
வையகமதனைக் கொள்வார் மனிதரிற்றேவராவார்
பொய்யதைச் சொல்வராகிற் போசன மற்பமாகும்
நொய்யவரிவர்களென்று நோக்கிடாரறிவுள்ளோரே.

**சீவகசிந்தாமணி**

உன் சுவைத்து உடம்புவீக்கி நரகத்திலுரைதனன்றோ
ஊன்றினாது உடம்புவாட்டி தேவராயுரை தனன்றொ
ஊன்றியில் இரண்டினுள்ளும் உறுதி உரைதி என்ன
ஊன்றினாதொழிந்து புத்தேளாவதே உறுதி என்றான்.

**திரிக்குறள்**

தன்னுயிர் தான்றப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந்தொழும்.

கொல்லான் புலாலை மறுத்தானைக் கை கூப்பி
எல்லா உயிருந் தொழும்.

ஓ! சகோதிரர்களே! நிருவாணம் பெற்றவனாகும் நித்தியனுக்கு இத்தகைய சுத்திகுணம் உண்டாகி சருவ சீவப்பிராணிகளுக்கும் உண்டாகும் துக்கங்களை நிவர்த்திக்க வேண்டிய எண்ணம் பிறப்பதுடன் துன்பங்களின்று விடுபட்டு மேற்பிறவியடைய வேண்டிய நீதிநெறிகளையும் புகட்டுவது காரணம் யாதெனில், தான் அடைந்த சாந்தத்தை மற்றவர்களும் அடைய வேண்டும் என்றும், தான் பெற்ற சுகத்தை மற்றவர்களுஞ் சுகிக்கவேண்டியதென்றும், தானடைந்த மனவமைதியை மற்றவர்களும் அடைய வேண்டும் என்றும், கனக்குள் கண்ட சுயம்பிரகாசத்தை மற்றவர்களுந் தங்களுக்குள் காண வேண்டியதென்றும், தன்னிற்றானே பற்றறுத்து கண்ட காட்சியால் புளியம்பழம் வேறு ஓடு வேறுபோல் தேகம் வேறு ஒளி வேறாய் தானே சுயம்பாதலும், தனக்குள் சகலமுந் தோற்றுதலுஞ், சுயம்பிரகாச தூய உடம்பினனாதலும் இயற்கையாகிய உணர்வில் நிற்றலும், பாசபந்தங்களினின்று நீங்கும் இயல்பிலும், அன்பின் மிகுதியிலும், சதா ஆறுதலிலும், பேரின்பத்திலும் நின்று எண்குணத்தனாகி சகல துக்கங்களுஞ் சாறாது நிற்பதற்கேயாம். அதாவது தண்மெயாம் சாந்த பெருக்கத்தால் தேகதேயுதிரண்டு குளிர்ந்துள்ள மெயால் கற்பாறையைத் தீபிறக்கக் காய்த்து இவனை அதன்மீது கிடத்தின போதிலுங் குளிர்ந்த பாறையில் படுத்திருப்பது போல் காண்பான். பாசபந்தங் களினின்று நீங்கி புளியம்பழத்தைப் போலும் ஓட்டைப்போலும் உள்ளவனாதலின் இவன் தேகத்தின்மீது பலர் கூடி அம்பு கும்பலை எய்தபோதிலும் யாதொரு உபத்திரவுமின்றி ஆனந்தத்திலிருப்பன்.

**ஞான வாசிட்டம்**

*சரமலர்கள் நெய்தல் மலர் மழையை ஒக்கும், / தழற்பள்ளி பனிநீரிற் சயனமொக்கும்,

*சிரமறிதல் சுகமுறு நித்திறையை ஒக்கும். / தெகமறிவ துக்கலவைச் செரிப்பூச்சொக்கும், நிரவறியநாராச மறுமம் பாய்தல் / நெடுங்கோடை சிவிரியினன்

னீரையொக்கும் விரகறிய விடயமெனும் விடை விடூசி / விவேக மிகுத்தவர்க்கலால் விலக்கொணாதே .

**திரிக்குறள் புத்தர் வாழ்த்து**

கோளில் பொழியில் குணமிலவே எண்குணத்தான் / தாளை வணங்காத்தலை.

**சூளாமணி**

காதலரில் பிழையாராய்க் கள்ளுன்றேன் கடிந்தகற்றி
யிதலே டில்லிருக்கு மிளம் பிடியர் முதலாயா
ரோதின முன்தேவரா உயர்ந்தவர்க்குள் உயர்ந்துளராய்
சோதியும் பே ரெண்குணமுந் துப்புரவுந் துன்னுவரே.
இமையாத செங்கண்ணர் இரவறியார் பகலறியா
ரமையாத பிறப்பறியா ரழலறியார் பனியறியார்
சுமையாகி மணிமாலை சுடர்ந்திலந்து நெடுமுடியா
ரமையாத தல்லுலகி னகை மணிப் பூணமரரே.

**சீவகசிந்தாமணி**

சோலையினரும்பித்திங்கட் சுடரொளி பூத்ததேபோல்
மாலையுங் கலனு மீன்று வடகுமுந்துகிலு நான்று
காலையும் இரவும் இல்லா கற்பக மரத்தி நீழற்
பாலையாழ் மழலை வேறாய்ப் பழமணிக் கொம்பினின்றாள்
உலகுணர் கடவுளை உருகெழு திறலினை
நிவவிரி கதிரணி நிகரறு நெறியினை
நிலவரி கதிரணி நிகரறு நெறியினை
னலர் கொழு மரை மலரடியிணை தொழுதும்

**மணிமேகலை**

முற்றுமுணர்ந்த மூதறிவாளன்

இவன் பெருக்கிக்கொண்ட அன்பின் மிகுதியால் மற்றவர்களின் கொ டுஞ்சினமும், குரூரச்செயலும் இவன் அருகில் நெருங்காது. இனிய மொழியால் நீதி நெறிகளாம் அழியாச் செல்வத்தை அன்னியர் செவிகளிலோதி ஆதரிப்பவனாதலின் அவிவேகிகளால் இவன் செவியில் ஈயத்தைக் காய்த்து விட்டபோதிலும் அதன் துன்பமின்றி சுகந்த தைலத்தை செவியில் விடுவது போலிருப்பன். தனக்குண்டாகுஞ் சகலபற்றுக்களையும் அறுத்தெரிந்ததுமன்றி மற்றவர்கள் பற்றுக்களையும் அறுக்கும் உபாயங்களை ஊட்டி சுக மடையச் செய்வதால் அவிவேகிகளால் இவன் தேக மாமிஷத்தைக் கத்திகொண்டு கழித்த போதிலும் சந்தனசாந்தணிவதுபோல் சுகித்திருப்பன். சகல உயிர்களையுந் தன்னுயிர்போல் காற்பதுடன் சதா விழிப்பாம் ஆனந்த நித்திறையினின்று எனையோர்களுக்கும் அவ்வுயிர்களைக் கார்க்கும் அகிம்சாதருமத்தை ஊட்டி ஆதரிப்பவனாதலின் அவிவேகிகளால் இவன் சிரசை அறுத்தபோதிலும் யாதொரு துன்பமுமின்றி சுகநித்திறையிலிருப்பது போல் இருப்பன். ஆறாவது மங்குலத் தோற்றத்திற்கு மாறுபட்ட சிரேஷ்ட செயலைப் பெற்றுள்ளபடியால் இவன் மநுரூபியாகத் தோற்றிய போதிலும் தேய்வு ஒளிவமைந்த தேவனென்னும் ஏழாவது தோற்றமாக உயர்ந்து உயர்ந்தோர் மாட்டே உலகென்னும் ஒப்புவமெயுற்றிருப்பன். மநுகுலத்தோனே தனது நன்முயற்சியால் தேவனென்னும் ஏழாவது தோற்றமடைவன்.

**சங்கங்களின் ஸ்தாபனம்**

இத்தகைய அஷ்டாங்கமார்க்கத்தால் மன அமைதிப் பெற்று துக்க மற்ற அறஹத்துக்களும் தங்கள் சிஷியர்களுக்கு இதே மார்க்கத்தைப் போதிப்பரென்பது சத்தியம். அச்சிஷியர்களும் போதிநிலையாம் ததாகத மடைந்து அவர்கள் சிஷியர்களுக்கும் போதிக்கும் பரிசுத்த சாந்தியுமொன்று, மார்க்கமுமொன்று அடையும் முத்தியும் ஒன்றேயாகும்.

ஓ! சகோதிரர்களே! சாந்தமும், அமைதியும், அன்பும், கருணையுமான ததாகதருடைய மார்க்கத்தின் பலனை யாதென்று கூறுவோமாயின் ததாகதருடைய நிகரில்லா தருமத்தைக் கண்ட சிஷியனை காடுகளழைக்கும், தனித்த இடங்களை அழைக்கும். ஆதலின் சத்தியதன்ம விசாரிணை உங்களைக் கூப்பிட்டழைக்குங்கால் தாமதியாது புறப்படுங்கள். பரிசுத்த தியானத்தில் நில்லுங்கள். நின்றவிடத்தில் ததாகதர் அருளிய ஞானமாம் மௌன மனவமைதிப்பெற்று ததாகதர் நிலையை அடையுங்கள். அப்போது சஞ்சலத்தில் ஆழமாட்டீர்கள். சத்திய தன்மத்தையே ஆசானாகக் கொள்ளுங்கள். சகல தோற்றங்களும் அழியத்தக்கவைகளாதலின் ஜாக்கிரதையுடன் சுகவழியாம் அஷ்டாங்க மார்க்கத்தில் நடந்து வீடடையுங்கள் வீடடையுங்கோளென்றார்.

இவ்வகையாக புத்தபிரான் நான்கு வாய்மெகளின் விவரங்களையும் அஷ்டாங்கமார்க்கத் தெளிவையும் அதன் பலனையும் இதே தேகத்தில் அறியவேண்டிய சுபேச்சையையும் ஊட்டி சுகமடையச் செய்த பெருநன்றிக்கேற்ற பிரிதிபலனளிக்கப் போதாவாரணாசி வாசிகள் யாவரும் ஒன்றுகூடி அவரது ஈகையின் செயலாம் தன்மத்தை முன்னிட்டு வாரணாசி காசி விசுவநாதா, காசிவிசுவேசா , காசியப்பனே எங்களி தயங்களில் சதா குடி கொண்டிருந்த இருளை அகற்றிய பகவனே பகவனே என்று வணங்கிக் கொண்டார்கள்.

**சீவகசிந்தாமணி**

குருகுலஞ் சீவக குமரன் கோத்திர, / மருகலில் காசிப னடிகள் வாழியென் றெரிமணி. முடி நிலைமுறுத்தி யேத்தினான், / புரிமணி வீணைகள் புலம்பவென்பவே.

**காசிக் கலம்பகம்**

கலைமதியின் கீற்றணிந்த காசியகிலேசர்
சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனர்காணம் மானை.

காசி விசுவநாதர் வாரணாசியில் சாதுசங்கங்களை நாட்டி சிஷியர்கள் யாவரையும் வரவழைத்து நீங்கள் ஒவ்வொருவருந் தனித்திருப்பீர்களாயின் நீங்கள் அநுசரிப்பதாகத் தீர்மானித்துக்கொண்ட சத்தியதருமத்தை உங்கள் பலயீனத்தால் பழயப்படி வழுவடையச் செய்துக்கொள்ளுவீர்கள். ஆதலின் நீங்கள் ஒவ்வொருவருந் தனித்திராது ஒவ்வோர் கூட்டங்களாகவுமிருந்து ஒவ்வொருவருக்கும் உள்ள தரும சங்கைகளை ஒருவருக்கொருவர் விளக்குஞ் சங்கங்களாகுங்கோள் என்று ஆக்கியாபித்தார்.

தரும சங்கைகளை விளக்கி ஒருவருக்கொருவர் தெளிந்துக்கொள்ள வேண்டிய சங்கத்தோர் சகோதிரர்களைப்போல் அன்பில் ஒன்றாகவும் சுத்தத்தில் ஒன்றாகவும், முயற்சியில் ஒன்றாகவுங் கூடிவாழுங்கள்.

உலகிலுள்ள சீவராசிகள் யாவுந் தரும் ராட்சியத்தின் குடைக்கீழ் வாழும்படி அகிம்சா தருமத்தை ஊட்டுங்கள். சத்தியதர்மத்தை நான்கு திசைகளிலுஞ் சென்று பிரசங்கியுங்கள்.

இதுதான் பரிசுத்த சகோதிரக்கூட்டம். இதுதான் புத்தசங்கம். இது தான் சகல சீவர்களின் அடைக்கல ஸ்தானமென புத்த சங்கங்களை ஸ்தாபித்தார்.

இத்தகைய வாரணாசி சங்கஸ்தாபனத்துள் கவுண்டியனென்பவன் காசி விஸ்வேசன் போதனைகளைக் கவனமுறக்கேட்டு கருத்தில் பதிவு செய்வதைக் கண் கடவுள் நித்தியமாகவே கௌண்டண்யன் சத்தியதன்மத்தை உணர்ந்தானென்றார்.

அன்று முதல் சத்தியதன்மத்தை உணர்ந்த கௌண்டியனென்று அழைக்கப்பட்டான்.

அவ்வகைப் போற்றப்பெற்ற கௌண்டியன் காசிநாதனை வணங்கி ஒப்பிலா அப்பனே, தன்ம சேனனே, எனையனே பகவனால் யான் சங்கத்தின் கட்டளைப் பெறவேண்டுமென்றான். அவனன்பின் மிகுதியையும், ஒழுக்கத்தின் அவாவையும் உணர்ந்த நாதன் தனது மாணாக்கர்களை நோக்கி சுகவழியாகும் சத்தியதன்மம் உங்களுக்குப் போதிக்கப்பட்டிருக்கின்றது.

நீங்கள் அதன்மேறை நடந்து துக்கநிவர்த்தியாகும்படி பரிசுத்தமாக வாழக்கடவீர்களென்றார். அதன்பின் கௌண்டன்யனும் மற்றுமுள்ளோருஞ் சேர்ந்து திரிரத்தினங்களாகும் மூன்று அழியா நிதிகளைச் சேர்த்துக் கொண்டார்கள். அதாவது,

**தாமரைப்புட்பத்தில் வீற்றிருந்த ததாகதரே முதல் நிதியாகும் பதுமநிதி**

புத்தரை விசுவாசிப்போம், புத்தரே பகவன், புத்தரே அருகன், நமதறிவை விளக்குங் குருநாதன், ஓதாமலுணர்ந்த முனிவன், சகலமுந்தெரிந்த அறிவன், அவரே ஜெகந்நாதன். அவரே ஜெகத்குரு, சருவசீவர்களுக்கும் அன்பன், சருவ சீவராசிகளுக்கும் போதகன், உலகத்தோர் முதற் கண்ட தெய்வம் அவரே, ஆதியாங் கடவுளும் அவரே, உலக சீர்திருத்தக்காரருள் முதன்மெயானவரும் அவரே ஆதலின் ஆதிபகவனாகும் புத்தரை வாழ்த்துவோம்.

**இரண்டாவது தன்மநிதி**

காசிவிசுவேசராகும் புத்தரால் போதித்த சத்தியதன்மத்தை விசுவாசிப்போம். பகவனால் சத்தியதன்மம் நன்கு பிரசங்கிக்கப்பட்டது. காலத்துக்கும், இடத்துக்கும் அதீதப்பட்டது. சொன்னதைச் சொல்லாகுங் கிள்ளை போலிராமல் விசாரித்துத் தெளிய வேண்டுமென்னுங் கற்பாறையின் பேரில் ஸ்தாபிக்கப்பட்டது. குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் பொதுவாயுள்ளது. வியாதியுள்ளோனும் சுகதேகியும் உணரக்கூடியது. சிறியோர்களும் பெரியோர்களும் அறியக்கூடியது. கற்றவர்களுங் கல்லாதவர்களுந் தெரியக் கூடியது. விசாரிணைக்கொண்ட சகல மனுக்களையும் மெய்ஞ்ஞான சுகத்துக்குக் கொண்டுபோகப்பட்டது. அறிவில் சிறந்தோரால் நன்குமதிக்கப்பட்டது. சருவ துக்கங்களையும் நிவர்த்திக்கக்கூடியது, யாதொரு துன்பமுமின்றி சுகவழியே சென்று வீடடையக்கூடியது. வேண்டுதல் வேண்டாமெய் என்னும் மத்தியபாதையை உடையதுமாகிய மெய்யறமாம் புத்ததன்மத்தை வாழ்த்துவோம்.

**மூன்றாவது சங்கநிதி**

**மணிமேகலை**

*புத்ததன்ம சங்கமென்னும் முத்திர மணியை, மும்மெயில் வணங்கி

ஆதிபகவனால் ஸ்தாபித்த புத்தசங்கத்தை விசுவாசிப்போம். புத்த சங்கத்தோர் சத்தியதன்மத்தை விளக்குகின்றவர்கள், நன்னடக்கையை யாவருக்குந் தெரியச் செய்கின்றவர்கள், சகலரையும் சத்தியதன் மத்தின் படி நடக்கும்படியாகப் போதிக்கின்றவர்கள், தாங்களும் அந்த சத்திய தருமத்தின்படி நடந்துக்காட்டு கின்றவர்கள், அவாக்களை அறுக்கும் ஆண்மெய் உடையவர்கள், அரசர் முதல் குடிகள் வரையும் சமதிருஷ்டியுள்ளவர்கள், நானென்னும் அகங்காரத்தை வெல்லும் ஆயுதத்தைக்கொண்டவர்கள், நீதியையும் நெறியையும் தாகமாகக் கொண்டவர்கள் ஒழுக்கத்தை புசிப்பாக உண்டவர்கள், புத்த சங்கத்தோர் விருப்பும் வெறுப்பும் அற்றவர்கள், சகலராலும் போற்றி வணங்குதற்குப் பாத்திரமுடையவர்கள். ஆதலின் புத்த சங்கத்தை வாழ்த்துவோம்.

**சங்க நிபந்தனை**

எண்குணத்தான் வாரணாசியிலுள்ள சங்கத்தோர் யாவரையும் வரவழைத்து ஓ! சகோதிரர்களே! உங்கள் கூட்டத்தார் ஐந்துவகைப்பெயரால் அழைக்கப் படுவார்கள். அதாவது:- மகட பாஷையில் (சமணரென்றும்) சகடபாஷையில் (சிரமணரென்றும்) திராவிடபாஷையில் (மநுமக்களென்றும்) வழங்கும் சற்சங்கத்தோருள் உத்த மக்களென்றும், விதரண மக்களென்றும், உள்விழி மக்களென்றும், விஞ்ஞை மக்களென்றும், ஐந்திர மக்களென்றும் ஐவகையோருண்டு.

**சீவகசிந்தாமணி**

உறுதிமுன் செய்ததின்றி யொழுகினேனென்று நெஞ்சின்
மறுகணிபற்றோார்வம் விட்டிடு மாணவச்சத்
திறுகனீயிறைவன் சொன்ன வைம்பத அமிர்தமுண்பாற்
பெறுதி நற்கதியை என்று பெருந்ளை அகற்றினானே.

**அருங்கலைச்செப்பு**

**சங்க நிபந்தனைப் பத்து**

சுத்த வால் அறிவை வளர்த்தல் உத்தமக்களுணர்.

உதிரசுகத்தினுறத்தை அறுத்தல் விதரண மக்களூறம்.

தெள்ளவுணர்ந்தோர் தெந்நூலீதல் உள்விழி மக்கள் நிலை

மெஞ்ஞானத்தின் மிகு நிலையாற்றல் விஞ்ஞை

மக்கட்டி ரள் அந்தண பூத அறவோனாதல் ஐந்திர மக்க சுகம்.

தூயவாடை சிறுமகற்கீதல் ஆயதுற விலர்க்காம்.

பொன்னிற வாடைத் துறவோர்க்கீதவ் நன்னுடல் போர்வையதாம். முற்பகலுண்டி யுண்டு விழித்தல் தற்பகலிரவறு மெய்

வானப்பெருக்க மாரிகாலந்தானக் கூட்டுரவாம்.

ஒருவருக் கொருவருள்ளக் குற்றந்திரு உளமகற்றித் தெரி.

அவர்களுந் தங்கள் துற்சங்கங்களாகும் பொய்யை மெய்யென வழங்குங் கூட்டத்தை விடுத்து, கள்ளை அருந்தி மதிமயங்கி நிற்குங் கயவர் கூட்டத்தை விடுத்து, அன்னியர் பொருளை அபகரிக்குங் கள்ளர் கூட்டத்தை விடுத்து சருவ சீவர்களையுங் கொன்று புலால் புசிக்கும் புலையர் கூட்டத்தை விடுத்து காமிய இச்சையைப் பெருக்கி அன்னியர் இஸ்திரீகளையும் அக்குடும்பத்தையுங் கெடுக்கும் அற்பர் கூட்டங்களையும் விடுத்து ததாகதர் சற்சங்கஞ்சேர விரும்புவார்களாயின்;

ஐந்து வயதுள்ள சிறுவர்களையுஞ் சிறுமிகளையும் வெள்ளை ஆடை உடுத்தி வியாரங்களில் விடுத்து கல்வி விருத்திச்செய்து தெளிவடைந்து மனுகுல ஒழுக்கமுஞ் சீரும் உணர்ந்து சிறுவர்களுக்கு பதினாறு வயதுஞ் சிறுமிகளுக்குப் பத்துவயதும் முடிந்தவுடன் அவரவர்கள் குடும்பங்களில் சேர்த்து பஞ்சசீல ஒழுக்கத்திற் பழகும்படி யாக்கியாபித்தல் வேண்டும். இவர்களே 1-வது உத்தமக்களாவர். அச்சிறுவர்களுஞ் சிறுமிகளும் குடும்ப துன்பத்திற் சேராமல் சற்சங்கத்தைச் சார்ந்து சுகமடைய விரும்புவார்களாயின் புருஷர்களுக்கு வேறு வியாரமும், பெண்களுக்கு வேறு

வியாரமும் அமைத்து சிறுவர்களுக்கு இருபது வயதளவுஞ் சிறுமிகளுக்குப் பதினாறு வயதளவும் உள்ள ஒழுக்கங் களையும் நெறிகளையும் ஆராய்ந்து திரிகரண அமைதி காணுமாயின் சற்சங்கத்தில் சேர்த்து மனதை துற்குணத்திலும் துற்செயலிலும் விடுத்து துக்கத்தைப் பெருக்கி மாளாப்பிறவிக்கு ஆளாகாமல் பொன் போன்ற சுயம்பிரகாச அமைதியினின்று பிறவியறுக்கும் அடையாள சிறுமஞ்சளுஞ் சிறுசிவப்புங்கலந்த துவராடை அளித்து தேகமுழுவதும் மறைக்கச்செய்து சிரமுடியகற்றி தான் அரசபுத்திரனென்று மமதையும் குரு புத்திரனென்னுங் கர்வமும் பிரபு புத்திரனென்னும் பெருமெயுங்கொள்ளாது இராகத்துவேஷ மோகங்களற்று தன்னடக்கமும் அமைதியும் உண்டாவதற்கு பிச்சாபாத்திரம் ஈய்ந்து வீதிகளிலுள்ள வீடுகடோறுஞ் சென்று வாயற்படியினின்று உத்த மக்கள் வந்திருப்பது குடும்பிகளுக்குத் தெரியவும் அவர்களும் பஞ்ச மந்திரங்களை மறவாமல் அநுட்டித்துவரவும் பஞ்சசீல ஜாக்கிரதா பஞ்சசீல ஹாக்கிரதா பஞ்சசீல ஜாக்கிரதா என்று மூன்று சத்தமிட்டு பேசாமலிருக்க வேண்டியது.

**அருங்கலைச்செப்பு - அரசபுத்திரர் சங்கஞ்சேருங்கால் சிரமயிர் களைதல்**

திருந்திய கீழ்திரை நோக்கிச் செல்வனே இருந்ததோரிடிக்குரச் சிங்கம் பொங்கிமேற்,
சரிந்து தன்னுளை மயிர் துறப்பதொத்தன. னெரிந்தெழுமிளஞ்சுடரிலங்குமார் பினான்.

இச்சங்கதிகளைக் குடும்பிகளுக்கும் அறிக்கைச்செய்து உத்தமக்கள் ஜாக்கிர சத்தங் கேட்டவுடனே அன்னமளித்து அனுப்பிவிடும்படி உத்திரவு செய்யவேண்டியது, உத்தமக்கள் பிச்சாபாத்திரத்திற்கொண்டு வந்த அனைததை ஐம்மக்களும் புசித்து மிகுதியை ஏழைகளுக்கும், மற்ற சீவராசிகளுக்கும் பரிமாறிவிடவேண்டியது.

**அருங்கலைச்செப்பு - அகலேந்தி அறமோதி பிச்சையன்ன மேற்றல்**

அம்பொற்கலத்துளடு பாலமர்ந்துண்ணாவரிவை அந்தோ
வெம்பிப்பசி நலிய எவ்வினையின் வேறாயோ ரகல்கையேந்திக்
கொம்பிற் கொளவொசிந்து பிச்சை எனக் கூறிநிற்பாட் கண்டு
நம்பன்மின் செல்வ நமரங்காணல்லறமே நினைமின் கண்டீர்.

எவ்வகைப் பதார்த்தங்களேனும் அன்னமேனுங் கொஞ்சமும் அதிகமும் இல்லாமல் முற்பகல் உதயாதி முதல் பதினைந்து நாழிகைக்குள்ளாகப் புசித்துத் தீறல் வேண்டும்.

பிற்பகல் முதல் இரவு முழுவதும் ஜலபானமின்றி மற்றக் கடினவஸ்துக்களைப் புசிக்கலாகாது. ஐம்பத மாக்களும் மழை காலங்களில் வியாரங்களை விட்டு யாத்திரைப் போகலாகாது. குடும்பிகளை அட்டமி, பௌர்ணமி, அமாவாசை இம்மூன்று நாளும் வியாரத்துள் வரவழைத்து பஞ்சசீலம் நிலைக்கச் செய்ய வேண்டியது. இவ்வகை சுஷ்கச் செய்யவேண்டிய காரணம் யாதென்பீரேல் அதிக புசிப்பை விரும்பியகாலத்திலுண்டாய மமதையும், முற்றும் புசிப்பை அகற்றியிருந்தகாலத்தில் உண்டாய அமைதியையும் ததாகதர் உணர்ந்தவராதலின் அதிகமுங் கொஞ்சமும் இல்லா மிதாகாரத்தில் நிலைக்கச்செய்தார். அத்தகைய மிதாகாரத்தை அதிகமுங் கொஞ்சமும் இல்லாமல் முற்பகல் முழுவதும் புசித்து பிற்பகலும் இரவும் யாதொரு கடின வஸ்துக்களும் இராது ஜலபான மட்டிலும் அருந்த வேண்டிய காரணம் யாதென்பீரேல் மிகு புசிப்பால் மதோன்மத்தம் உண்டாம் அதி நித்திறை கொண்டு காமனிடஞ்சிக்கி அயர்ந்து போவார்கள். ஆதலின் இரவு புசிப்பை தவிர்த்து நல்விசாரிணையிலும் சுகத்தியானத்திலும் விழித்திருப்பார் களாயின் இரவு பகலற்ற இடத்தில் தூங்காமற் தூங்குவார்கள். இவர்களையே 2-வது விதரண மக்களென்னப்படும்.

**பின்கலை நிகண்டு**

பகவனது சங்க வரிசையில் பூணுநாற் புனைந்த விவரம்.
காப்புக்கு முன்னெடுக்குங் கடவுள் தான்மாலேயாகும்
பூப்புனை மலரின் செல்வி புனைபவனாதலானும்
காப்பவனாதலானுங் கடவுளர் முதல்வனாகி
வாய்ப்பதா மதாணி பூநூல் வரிசையிற் புனைதலானும்

இவர்கள் அதிதீவிர விதரணக்குறைவால் தூங்காமற்றூங்கும் நிலை தவரி நோக்கி நோக்கி நழுவியும், விழித்து விழித்து பேருரக்கங் கொள்வார்களாயின் தன்னை மறந்து பிறவிக்காளாவார்கள் என்று உணரும் அறஹத்துக்கள் விதரண மக்கள் அதி தீவர

நோக்கற்றிருப்பதற்கிரங்கி உபநயனமாம் உள்விழியைத் திறந்து ஊனக்கண் பார்வையைத் தவிர்த்து ஞானக்கண் பார்வையிலிருத்தி உபநயனம் பெற்றவனென்று உலகோர் அறிந்து வேண்டிய உதவி புரிந்துவருதற்கு மதாணி பூணநூலென்னும் ஓர் அடையாளந் தரித்து கடைத்தேறற் செய்யவேண்டும். இவர்களையே 3-வது உள்விழிமாக்களென்னப்படும்.

**சீவக சிந்தாமணி**

அட்டமீ, அமரவாசி, பூரணவாசி, ஒடுக்கம்.
ஓவாவிரண்டுவ்வு மட்டமியும் பட்டினிவிட்டொழுக்கங்காத்த நாவாததவமென்றார் தண் மதிபோன் முக்குடைக்கீழ் தாதை பாதம்
பூவே புகை சாந்தஞ் சுண்ணம் விளக்கிவற்றாப் புனை தனாளு
மேவா லிவை பிறவும் பூசனையென்றீண்டிய நூல் கரைகண்டோரே.

**பின் கலை நிகண்டு**

விஞ்ஞைஞயர் சாரணரென்போற் செய்கை.
நீரினாற் பூவில் வானில் நினைந்திட மொதுங்குகின்ற
சாரணரெண்மராவர் சமணரிற் சித்திபெற்றோர்

**சீவக சிந்தாமணி**
நலத்திரு மடமகணயந்த தாமரை / நிலத்திருந்திருசுடர் நிமிர்ந்து செல்வபோ நுலப்பருந் தவத்தினாலோங்கு சாரணர் / செலத்திரு விசும்பொறி சிறந்த தென்பவே.

இத்தகைய உள்விழிப்பார்வையால் சதாவிழிப்பாம் ஞான நித்திறையில் தசநாடிகளுந் தசவாயுக்களுமடங்குங்கால் தசநாதங்களாம் சுரமண்டல தொனிகளெழும்பும். அத்தொனியை நோக்கி நிற்பார்களாயின் நித்திறைக் கிழுத்து மாளாப் பிறவிக்காளாக்கும். அத்தொனியில் அவாக்கொள்ளாது கேட்பதுங் கேளாததுமாகும்

உட்பார்வையிலிருப்பார்களாயின் எண்பத் தொன்பது சித்தும் இயல்பிற்றோன்றுஞ் சாரணர்களாகும் இவர்களையே 4-வது விஞ்ஞை மக்களென்னப்படும்.

இவ்விஞ்ஞையாம் சித்துக்களை விரும்பி வீண்செயற்களில் தங்களை ஏனைய மநுக்கள் புகழவேண்டிய மகிழ்ச்சியிலிருப்பார்களாயின் மநுக்களின் துற்கன்ம பீடிதரோகங்கட் சார்ந்து இவர்கள் தேகசுகத்தைக் கெடுப்பதுடன் நற்கன் மதான சுகங்களுங் கெட்டு சித்துக்களின் டம்பமே மறுபிறவிக்கு ஆளாக்கிவிடும்.

ஆதலின் விஞ்ஞைமக்கள் இயல்பினால் உண்டாகுங் சித்துக்கள் நீங்கலாக ஏனையோர் மகிழ்ச்சியை நோக்கி டம்ப சித்துக்களாடாது சுத்தவிதயமாம் மனக்களங்குகளை அகற்றி கண்டயிடம் மனம் போகாமலும், முகர்ந்தயிடம் மனம் போகாமலும், கேட்டயிடம் மனம் போகாமலும், உருசித்தயிடம் மனம் போகாமலும், பரிசித்தயிடம் மனம் போகாமலும் தண்மெயாம் குளிர்ந்த நிலையில் பொறிவாயிலைந்தினையும் அவித்து சருவசீவர்களைத் தங்களுயிர்கள் போலும் தங்களால் ஆதரித்து சீர்பெறவேண்டிய சீவர்களென்றுங் கருதி உண்மெயுணர்ந்து இறப்பும் பிறப்புமற்று மெய்யறத்தி நின்று அறஹத்துக்களாய் விளங்கியிருக்கும் இவர்களை 5-வது ஐந்திர மக்களென்று கூறப்படும்.

சங்கத்தோருள் ஐவகை சாதனரும் மிக்க ஜாக்கிரதையால் சதாவிழிப்பினின்று மக்களென்னும் ஆறாவது தோற்றங்கடந்து தேவர்களென்னும் ஏழாவது தோற்றமுண்டாயினும் ஜாக்கிரதா நிலையற்றிருப்பரேல் அங்குந் தீய நிலை தோன்றும். ஆதலின் மிக்க ஜாக்கிரதையோர் விழிப்பே மேன் மெய்யாம் சுயம்பிரகாச ரூபத்தைப் பெறுமென்றோதி சங்கத்தோர் ஐவகைச் சாதன கட்டளைகளைப் பூர்த்திசெய்தார்.

ஐந்திர மக்கள் ஐம்பொறிகார்த்து ஏழாவது தேவதோற்றம் பெறினும் ஜாக்கிரதையிலிருக்கவேண்டுமென்பதாம்.

**சீவகசிந்தாமணி**

ஒழுக்கத்தினின்று ஐம்பொறிகாத்தலே வீட்டின்பந்தரும்.

ஒன்றாய ஊக்கவேர் பூட்டி யாக்கைக்கெறுவுழுது
நன்றாய நல்வரகுச் செந்நெல் வித்தி ஒழுக்க நீர்
குன்றாமற்றாங்கொடுத் தைம் பொறியின் வேலிகாத்தோம் பின்,
வென்றார் தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணோருலகின்றே.

**நாயனார் திரிக்குறள்**

எழுபிறப்புந்தீயவை தீண்ட பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெரின்

**8. சங்கங்களின் ஸ்தாபன காதை**

காசி விசுவநாதன் வாரணாசியில் தன்ம சங்கங்களை நாட்டி சங்க நிபந்தனைகளையும் ஊட்டி திரிபேத வாக்கியங்களாகும் திரிபீடங்களையும் அதன் உபநிட்சயார்த்தங்களாகும் உபநிடதங்களையும் சங்கத்தோர் இதயங்களிற் பதியச்செய்து சதானந்த நிலையை விளக்கிவருங்கால் அத்தேசவாசியாம் ஓர் சிறந்த வியாபாரியின் புத்திரன் யட்சன் என்பவனிருந்தான். அவனோ அவன் தபால் சேகரித்த பெருந்திரவிய சம்பத்திருந்தும் தனக்கோர் மனவமைதியம் தைலம் இல்லாமல் பொருளை சேகரிக்கும் பேராசையால் பலவகை பாதங்களும் மனசஞ்சலங்களும் பெருகுவதை உணர்ந்து ஓர்நாள் நள்ளிரவில் எழுந்து வீட்டைவிட்டு காசி விசுவேசனாம் பகவன் தங்கியிருக்கும் இடத்திற்குச் எழுந்து வீட்டை விட்டு காசி விசுவேசனாம்த சென்றான்.

செல்வச் சிறுவன் தன்னை நாடி தாரத்தில் வருவதைக் கண்ணுற்றார். அவனும் பகவன் அருகிற் சென்று வணங்கி ஐயனே, யான் பெருத்த திரவிய சம்பத்துடையோன் மைந்தனாயிருந்தும் சகிக்கமுடியா பெருந்துக்கத்தில் ஆழ்ந்து தவிக்கின்றேன். இஃது யாது உபத்திரவம் என்று அலரினான்.

அதைக் கேட்ட பகவன் யட்சனை நோக்கி குழந்தாய், உனக்கு வேண்டிய திரவிய சம்பத் திருந்தும் மாளாதுக்கந் தோன்றிய காரணம் யாதென்றார் அதைக்கேட்ட சிறுவன்

மெய்யனை வணங்கி பெரியோய், எனது தந்தை திரவியத்தை சேகரிக்கவும் அதை பாதுகாக்கவும் விருத்தி செய்யவுமுள்ள காலத்தில் இரவும் பகலும் பெருமூச்சிறைந்து புரண்டிருப்பதைக் கண்டிருக்கின்றேன். ஆயினும் அதன்காரணம் எனக்கு விளங்காமலிருந்தது.

என் தந்தையார் சேகரித்த திரவியங்களையும் அதன் பாதுகாப்பையும் விருத்தியையும் என்னிடம் ஒப்படைத்துவிட்டதுமுதல் அவர் பெருமூசசும புரட்டலும் நின்று சுகநித்திறையிலிருக்கின்றார். யானோ திரவிய சேகரிப்பாலும் அதன் பாதுகாப்பாலும் விரயத்தினாலும் மாளா துக்கத்திலும் பெருமூச்சிலும் புரட்டலிலும் நின்றலரி உம்மை வந்தடைந்தேன் என்றான்.

அதைக்கேட்ட பகவன் யட்சனை நோக்கி சிறுவனே, இவ்விடத்தில் யாதொரு துக்கமுமில்லை, இவ்விடத்தில் யாதொரு உபத்திரவமும் இல்லை. என்னை நாடிவந்த உனக்கு சத்தியதன்மமாம் அழியா திரவியத்தைக் கொடுக்கின்றேன். அதை சிதலழிக்காது கள்ளர்கள் அபகரிக்க மாட்டார்கள். அதன் சேகரிப்பால் உன் பெருமூச்சடங்கி யாட்டல் மற்ற துக்கத்திலும் உபத்திரவத்திலும் நிலைக்காமல் மீட்குமென்றார்.

ததாகதர் திருமொழியைக் கேட்ட யட்சன் மனோதிருப்தியடைந்தான். துக்கமுமில்லை விசாரமுமில்லை என்ற பகவனுடைய வார்த்தைகள் அச்சிறுவன் மனக்கவலையைப் போக்கியது. உள்ளத்தில் ஆறுதல் அடையும்படிச் செய்தது. அவ்வானந்தத்தால் அருகனென்றுணர்ந்து அருகில் உட்கார்ந்தான். பகவன் சிறுவனை நோக்கிக் குழந்தாய்! உன் தேகம் வளர்ந்து சுகதேஜசிலிருப்பதும் உன் தாதை தேகம் சுஷ்கி நரைதிரை கொண்டிருப்பதைக் கண்டீரா காண

வில்லையா என்று உசாவினார்.

அதைக்கேட்ட யட்சன் பெரியோய் எனது தாதை கண் பஞ்சடைந்து தேகந் தளர்ந்து சருமஞ் சுருங்கி முதுகும் வளைந்திருப்பதைக் கண்டே னென்றான்.

குழந்தாய்! அதே தோற்றத்தை உன் தேகமும் அடையுமா அடையாதா என்றார்.

அதைக் கேட்ட யட்சன் இன்னும் திகைத்து ஐயனே! என் தேகத்தையும், என் தந்தை தேகத்தையும் என் தாதை தேகத்தையும் நோக்கிப் பார்க்குங்கால் ஓர் புட்பமானது மொக்கிட்டு மலர்ந்து மணம் வீசி காய்ந்து மடிவதுபோல் என் தேகமும் மடியும் போற் காணுகின்றேன் என்றான்.

மலரின் மணமானது சகலருக்குஞ் சுகந்தத்தை வீசி ஆனந்தமுறச் செய்வதைக் கண்டாய். அதுபோல் உன் தேகத்தில் வீசும் சுகமணம் யாதேனும் உண்டா என்றார்.

ஐயனே என் தேகத்தில் மலமூத்திராதிகளின் துற்கந்தங்களையும் வாய் கொப்புழ் இவைகளின் துற்கந்தங்களையும் முகருகிறேனன்றி நற்கந்தம் ஒருநாளுங் கண்டிலேன் என்றான்.

தன்னிற்றானே தோன்றி வளர்ந்த புற்பூண்டுகளிற்றோன்றும் புஷ்பங்களின் மணம் சகல துன்மணங்களையும் போக்கி நன்மணம் வீசுங்கால் சிரேஷ்டமுற்ற மநுக்களாம் தாய் தந்தையர் சேர்ந்து ஜெநித்த உனது தேகத்தில் மணமில்லாமற் போயதென்னோ என்றார்.

ஐயனே! அவற்றை யான் இதுவரையுங் கண்டதுமில்லை கேட்டதுமில்லை முகர்ந்ததுமில்லை என்றான்.

குழந்தாய்! புற்பூண்டுகளில் தோற்றுவது புஷ்பமணமும் பிண்டங்களில் தோற்றுவது பிரம் மணமுமாம். அப்பிரமமணத்தை முகர்ந்தவன் துக்கத்தினின்று விடுபடுவான். பிணியினின்று அகலுவான். ஆறுதலில் நிலைப்பா னென்றார்.

அதைக்கேட்ட யட்சனெழுந்து அருகனை சரணாகதி அடைந்து ஐயனே! இவ்வாரணாசியிலுள்ள ஒரு மனுக்களிடத்தேனும் அம்மணத்தைக் காணேன். எல்லாமுணர்ந்த உம்மிடத்தே அம்மண மிருக்கக் கண்டேன். என் மனக்கூற்றுக்கள்

யாவையும் விண்டேன். சதாதுக்கத்தை அகற்றி ஆனந்தங் கொண்டேன். உமது அளவுபடா சத்தியதன்ம அமுதத்தை உண்டேன் என்று கூறி உலகத்தின்மீது கொண்டுள்ள விருப்பைத் தவிர்த்து மெய்யுணர்வுற்று பரிசுத்த ஞானமாங் குளிர்ந்த நிலையினின்று தன் தேகத்திலில்லா மணம் அணைந்துள்ள பட்டாடைகளிலும் இரத்தினாபரணங்களிலும் உண்டோ வென்று நோக்கினான்.

அவ்வாடைகளிலும் ஆபரணங்களிலும் சேர்க்கைமணம் உள்ளதேயன்றி இயற்கை மணமில்லாததைக் கண்டான். டம்பமென்று விண்டான். நாணத்தைக் கொண்டான்.

இத்தகைய நாணங்கொண்ட யட்சன் பகவனை நோக்கி ஐயன்மின் தமது தேகத்தில் சிறப்புற்ற ஆடைகளில்லாமலும், விலையுயர்ந்த ஆபரணங் களில்லாமலும் இருந்தபோதினும் தாமரைப் புட்பம் மலர்ந்திருப்பதுபோல் உமது முகம் மலர்ந்திருப்பதும், புட்ப தேஜசு விளங்குவதுபோல் உமது விழி யினால் தோன்றும் அன்பின் மிகுதியும், புட்டத்தின் வாசம் வீசுவது போல் உமது நாவினின்றெழும் அமுத வாக்கும் என்னைக் கவர்ந்து முன்னிருந்த பயத்தையும் அளவுபடா துக்கத்தையும் போக்கி என்னை ஆறுதலில் நிலைக்கச் செய்ததென்று

டையையும், நெறியாகும் ஆபரணங்களையும் விட்டு பொன் சுமக்கும் பூதமானோமென்று எண்ணி ஏக்கமுற்றான்.

அவனுக்குள்ள நாணத்தை உணர்ந்த காசி விசுவேசன் சிறுவனை நோக்கிக் குழந்தாய்! ஒருவனுடைய தேகம் ஆபரணாதிகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தபோதினும் அவன் ஐம்புலன்கள் அடக்கப்பட்டிருக்கலாம். வெளித்தோற்றமானது அவனுடைய மனதையாயினும் அவன் செயலையாயினும் பாதிக்காது ஒரு சிரமணன் துவராடை அணைந்துக்கொண்டாலும் அவன் மனம் சமுசாரப் பற்றுக்களில் மூழ்கியிருக்கும்.

ஒருவன் ஆடையாபரணங்களைத் தவிர்த்து காட்டுக்குச் சென்று உலக இன்பத்தைத் தாவுவானாயின் அவன் உலகப் பற்றுடையவனேயாவான். மற்றொருவன் ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தபோதினும் அவன் உலக

இன்பங்களைத் தாவாமலிருப்பானாயின் அவனே உலகப் பற்றுக்களை ஒழித்தவனாவான்.

உலகிலுள்ளோர் நானென்னும் அகங்காரத்தை ஒழிப்பார்களாயின் இல்வாழ்பவர்களுக்குந் துறவிகளுக்கும் யாதொரு வித்தியாசமும் இல்லையென்று கூறி சங்கத்தினின்று சாதிக்குஞ் சாதனங்களின் தெளிவையும் இல்லத்தினின்று சாதிகும் சாதனங்களின் வழுவையும் விளக்கிய போதுயட்சன் சார்ந்தே சாதனம் பெறவேண்டுமென்று அவாக்கொண்டான்.

அதனை உணர்ந்த பகவன் யட்சனுக்குச் சங்க நிபந்தனைகளை யூட்டி சிரமுடிகழித்து காஷாயமீய்ந்து கரவோடளித்து திரிமணிகளில் நிலைக்கச் செய்தார்.

அதன்பின் யட்சனுக்கு மெய்யறத்தை மேலுமேலும் விளக்கிவருங்கால் யட்சனுடைய பிதா வெளியில் வந்து நின்று ஐயனே! எனது மைந்தன் இவ்விடம் வந்ததுண்டோ என்றான்.

அதை வினவிய பகவன் யட்சன் பிதாவை நோக்கி தாம் உள்ளே வாரும் உமது மைந்தனைப் பாருமென்று கூறினார். யட்சன் பிதா உள்ளே சென்று தமது மைந்தன் அருகில் உட்கார்ந்தும் இவனே தனது மைந்தன் என்றறியக் கூடாமலிருந்தான்.

ஆதிபகவன் அவ்வேளையில் மெய்யறத்தின் மார்க்கத்தையும் மெய்ப் பெர்களின் விளக்கத்தையும் மெய்யின்ப சுகத்தையும் போதித்துவருவதைக் கேட்டுணர்ந்த யட்சனுடைய பிதா பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்.

ஐயனே, உமது மெய்யறப் பாதை மாட்சிபெற்றது. உமதுமெய்ப்பொருள் விளக்கம் உலகம் அறியாதது. உமது மெய்யின்பப் பேறுதான் தானே உணர்வதென்னும் முயற்சியில் நிலைத்தது. இவ்வரும் பெருந்தானத்தை உலகோர்க்கீயும் ஈசனாம் புத்தரே எமதாசான். ஒழுங்கற்றிருக்கும் நீதிகளை ஒழுங்கடையச்செய்கின்றார். மறைந்திருக்கும் நீதிகளை வெளிப்படுத்துகின்றார். திசை தப்பி நடப்போருக்கு வழி

காட்டுகின்றார். அஞ்ஞானிகளாங் குருடர்களுக்கு மெஞ்ஞானத்தின் விழியை அளிக்கின்றார். இருளிலிருக்கும் அறிவீனர்களுக்கு வெளிச்சமாம் அறிவின் விருத்தி செய்கின்றார். ஆதலின் புத்தரிடம் யான் அடைக்கலம். அவர் தெரியச்செய்த சத்தியதருமத்தில் யான் அடைக்கலம் அம் மெய்யறத்தை தெரிந்துய்த்த சத்திய சங்கத்தில் அடைக்கலம். அடைக்கலம் புகுந்த வென்னை இன்று முதல் யான் உலகிற் தோன்றும் வரையில் என்னை ஓர் சிஷியனாக ஏற்றுக்கொள்ள வேண்டு மென்றடி பணிந்தான்.

இல்லற வாழ்க்கையிலிருந்து புத்த சங்கத்துள் சேர்ந்தவர்களுள் முதலானவன் யட்சனின் பிதா ஒருவனேயாம்.

இங்ஙனம் புத்தசங்கஞ்சார்ந்து காஷாயம் பெற்றுக்கொண்ட வர்த்தகன் தன்னைப்போல் தன் மகனுங் காஷாயந்தரித்து முகமலர்ந்திருப்பதைக்கண்டு குதூகலித்து மைந்தனை நோக்கி குழ வருந்தி பிரலாபித்திருக்கின்றாள் நீ வீடு சென்று உன் தாயாருக்குத் தேறுதற் சொல்லுமென்றான்.

இதைக் கேட்டயட்சன் பகவனைப் பார்க்கவும் பகவன் வர்த்தகனை நோக்கி இப்போது தெளிந்த மனதுடனிருக்கும் யட்சன் மாதாவுடன் சென்று உலகப்பற்றை அடைந்து கலங்கிய மனத்தனாகுவானாயின் யாது செய்வீரென்றார்.

யட்சன் பிதா அதற்கு மாறுத்திரமாக மைந்தன் உம்மிடந் தங்கியிருத்தல் நலமெனக் கருதுவானாயின் தங்கியிருக்கட்டும். அவன் உலகப்பற்றை ஒழித்த புநிதனாகுவானென்றான்

அக்கால் பகவன் ஒடுக்கத்தால் அமையுஞ் சுகத்தையும் விரிவாலுண்டாகுங் கேட்டையும் விளக்கி நீதியையும், நெறியையும், வாய்மெயையும் போதித்து அவ்விருவரையும் ஆற்றலடையச் செய்யுங்கால் அவர்கள் குதூகலித்து பகவனை வணங்கி மாதவனே! தாமும் யட்சனும் மனைக்குவந்து புசிப்பெடுத்துக்கொண்டு எனதில்லாளுக்கும் நல்லறத்தை நவிலவேண்டுமென்று விண்ணப்பித்தான்.

அவனன் பின் மிகுதியை உணர்ந்த குருநாதன் எழுந்து காஷாயத்தால் உடல் முழுவதும் மூடிக்கொண்டு பிச்சாபாத்திரங் கையிலேந்தி யட்சன் வீட்டிற்குச் சென்றார்.

இவர்கள் வரவை அறிந்த யட்சனுடைய தாயும் அவன் மனைவியும் எதிர்நோக்கிவந்து பகவனை வணங்கி ஆசனமளித்து உட்காரச்செய்து வர்த்தகன் உத்திரவின்படி அன்னமளித்து அவர் புசித்து தீர்ந்தவுடன் மற்றுமுள்ள யாவரும் புசித்து அருகனைச்சுற்றி வணக்க வழியில் உட்கார்ந்து ஐயனே! உமது அளவுபடா சத்தியதன்மத்தை எங்களுக்கும் அளிக்கலாகாதோ என்று விண்ணப்பித்தார்கள்.

அதைக் கேட்ட விமலன் யட்சன் மாதாவை நோக்கி அம்மா! உம்முடைய கணவனும், மைந்தனுங் காஷாயம் பெற்றுக்கொண்டது போல் நீங்களும் பெற்றுக்கொள்ள விருப்பங்கொண்டீர்களோ என்றார்.

ஆம் ஐயனே என்றடிபணிந்தார்கள்.

அவ்வகை அடிபணிந்தோர் உள்ளங்களை உணர்ந்த வள்ளல் அவர்களை நோக்கி அம்மே! உங்கள் கோரிக்கை ஈடேறும். ஆயினும் ஆண்மெய்யிற்கும், பெண்மெயிற்கும் உள்ள பேதாபேதங்களை முதலாவது விளக்குகின்றேன். அதாவது:

ஆண்மெய் என்பது சகலரையும் ஆண்டு இரட்சிக்கும் புருஷனென்னப் படுவான். பெண்மெய் என்பது சகலராலும் இச்சிக்கக்கூடிய இஸ்திரீ

என்னப்படுவாள். இவ்விருவருள் ஆண்மெய் வீரிய வான்ம வடிவமென்றும் பெண்மெய் பேதை யான்மவடிவமென்றுங் கூறப்படும்.

பேதை யான்ம தோற்றமுள்ள நீங்கள் சகலராலும் இச்சிக்கக்கூடிய வடிவுள்ளவர்களாதலின் நீங்கள் ஒவ்வொருவரும் நாணம், அச்சம், மடம், பயிர்ப்பென்னும் நான்கு கற்பின் தன்மத்தில் நிலைக்கவேண்டும். இந்நான்கு வகைக் கற்பின் தன்மத்தையே நல்லாடைகளாகவும், நல்லாபரணங்களாகவும்,

நன்மணமாகவும், நல்லுணவாகவும் எண்ணி கற்பின் நான்கு பாத தன்மத்தில் நடக்கவேண்டும்.

**அருங்கலைச்செப்பு**

**பெண்மெயுற்றோர் கற்பின் நான்கு தன்மபாதப்பத்து**

பகவனுரைத்தப் பெண்ணற நான்கி , லகமுத நாணத்துறை
அச்சம் பயிர்ப்பு மடநாற் கற்பி, னிச்சை முதலென்றறி
அன்னிய புருடரங்கங்காண , லுன்னிய நாணநிலை
தனித்து நிற்றல் தனிவழிச் சேர , லினித்த அச்சத்திறை
புருடன் தன்னைப் போற்றி பயற்றல், அருள்சேரச்சத்தவம்
பெண்மெ ஒடுக்கிப் பேதை மெய் ஆற்றல், உண்மெய் பயிர்ப்பின் வழி
கணவன் வாக்கைக் கடவாதொழுகல், மணமெய் ஒடுக்க நிலை
ஈருடலொத்து ஒருமன வாழ்க்கை , பேருடல் ஒடுக்க பலன்
குற்றங் கடிந்து கொழுனனோடொழுகல், உற்றவொடுக்க நிலை
ஒக்க விரதமைந்துங் காக்கல், துக்க நிவர்த்தி வழி

1வது (நாணமென்னுங் கற்பின் தன்மம்) அன்னிய புருஷர் யாரைக்கண்ட போதிலும் நாணமுற்று தலை கவிழ்தலும், தனது முகத்தையும், தேகத்தையும் அன்னிய புருஷர்கள் கண்டார்களேயென்று வெட்கமடைதல் வேண்டும்.

2-வது (அச்சமாங் கற்பின் தன்மம்) தனது கணவனும் மைந்தர்களும் இல்லத்திலில்லாத போது அச்சவாழ்க்கையில் இல்லறம் நடாத்துதலும், தனியே வெளியிற் போகுங்கால் ஓர் சிறுவனையேனும் கையாதரவு கொண்டு செல்லலும், அன்னிய புருஷர் முகங்களை நோக்குதற்கு பயப்படுதலும், தன் கணவனே தன்னை ஆண்டுரட்சிக்கும் ஆண்டவனாதலின் அவனுக்கு வேண்டிய பதார்த்தத்தை வட்டித்தலும், வேண் புசிப்பை அளித்தலும், ஆன நித்திறை படுத்தலுமாகிய செயல்களில் அவன் மனங்கோணாது திருப்த்தியுறுமளவும் அச்சத்தில் நின்று ஆனந்திக்கவேண்டும்.

3-வது (பயிர்ப்பென்னுங் கற்பின் தன்மம்) அன்னிய புருஷரைக் காணுமிடத்து வெறுப்படைதலும், தனக்குக் கிடைத்துள்ள ஆடைகளில் திருப்தியுற்று அன்னியர் சிரேஷ்ட வாடைகளில் வெறுப்படைதலும், தனக்குள்ள ஆபரணங்களில் போதுமென்று திருப்த்தியுற்று அன்னியர் சிரேஷ்ட ஆபரணங்களில் வெறுப்படைதலும், தன் கணவனால் கிடைத்துவரும் புசிப்பில் போதுமான திருப்த்தியுற்று அன்னியர் சிரேஷ்ட புசிப்பில் வெறுப்படைதலு மாகிய செயலுற்று தனக்குக் கிடைத்தவரையில் திருப்த்தியடைதல் வேண்டும்.

4-வது (மடமென்னுங் கற்பின் தன்மம்), தனது கணவன் வாக்குக்கு மீறாது நடத்தல் முதலொடுக்கம். பெரியோர்களிடம் அடங்கி வார்த்தை பேசதல் இரண்டாமொடுக்கம். கணவனுக்கு எதிர்மொழி பேசாதிருத்தல் முன்றாவது ஒடுக்கம். கணவனிடம் எக்காலும் மிருதுவான வார்த்தை பேசுதல் நான்காம் ஒடுக்கம். அந்நிய புருஷர்கள் தன்னைப் பார்க்காமல் ஒடுக்கிக்கொள்ளுதல் ஐந்தாம் ஒடுக்கம். அன்னியர் மெச்சும் ஆடையாபரணங்களை அகற்றி தன்கணவன் கண்குளிரும் அலங்கிருதத்தில் நிற்றல் ஆறாம் ஒடுக்கம். தங்கணவன் தேகமும் தன்தேகமும் வேறாகத் தோன்றினும் அன்பும் மனமும் ஒன்றாய் ஒத்துவாழ்தல் ஏழாம் ஒடுக்கம். கணவனுக்குப் பின் புசித்தலும், கணவனுடன் புசித்தலும் எட்டாம் ஒடுக்கம். கணவனுக்குப்பின் சயனித்தலும், உடன் சயனித்தலும் ஒன்பதாம் ஒடுக்கம். பஞ்சசீலத்தின் ஒழுக்க விரதங்காத்தல் பத்தாம் ஒடுக்கம் என்னப்படும்.

**நிகழ்காலத்திரங்கல்**

*எண்குணத்தானோது மேதா நாற் கற்புநிலை / பெண்மெய் அருந்ததிபாற் பெற்றது அதிசயமே. பெற்றவர் பாற் பெற்றார் பேறுநாற் கற்புநிலை / உற்றவொளிவடமீனோம்பல் அதிசயமெ.

*பங்கடவளுற்றக் கணவனென்றே / தேம்பாற் பணிமெய்ச் செய்யல் அதிசயமே.

இத்தகையக்கற்பின் நான்கு தன்மவேலிக்குள் அடங்கி நிற்பீர்களாயின் உலகில் உங்களைப்போன்ற இஸ்திரீகள் யாவரும் உங்கள் பொய்யா விரதத்திற்குப் போற்றி செய்வார்கள். கொல்லா விரதத்தைக் கொண்டாடு வார்கள். களவா விரதத்தில் கண்களிப்பார்கள். மயங்காவிரதத்தில் மகிழ்ச்சியடைவார்கள். அன்னியர் முகம்பாரா விரதத்தில் ஆனந்தமடைவார்கள்.

இத்துடன் கணவன் சொற் கடவா காட்சியையும், மிருதுவார்த்தைகளின் மீட்சியையும், மனமொன்றாகக் கணவனுடன் ஒத்துவாழும் மாட்சியையுங் காண்பரேல் உலகத்தில் தோன்றியுள்ள இஸ்திரீகளில் இவர்களே உத்தமி களென்றும், இவர்களே சுகசீவிகளென்றும், இவர்களே பெண்மணிகளில் கண்மணிகளென்றும் போற்றி ஜெயபோற்றி செய்வார்கள்.

நீங்களும் உங்களுக்குள்ள கற்பின் விரதகாப்பிலும் சீலகாப்பிலுந் தலைவனுந் தலைவியும் மனமொத்து வாழும் ஒருமெயிலும் முத்தி மோட்சமென்னும் நிர்வாணசுகம் அடைவீர்களென்றார்.

அருகன் அருள்மொழியைக்கேட்ட மங்கை மடந்தை பேதை பெதும்பை என்னும் இஸ்திரீகள் யாவரும் பரமானந்தமுற்று, ஐயனே! என்று மழியா மெய்யனே! உமது சத்தியதன்மம் மாட்சி பெற்றது. உமதீகையோ அளவு படாதது. உமதுருவோ ஓரன்பாயது. உமது மிருதுவாகிய வாக்கோ ஓரமுதாயது. உமது சாந்தமோ எம்போலியர்க்கு நிழலாயது. பரிசுத்தமாய புத்தரே! எம்முடைய ஆசான் ஒழுங்கற்றிருக்கும் நீதியை ஒழுங்கடையச்செய்கின்றார். மறைந்திருக்கும் ஒழுக்கங்களை வெளிப்படுத்துகின்றார். திகைதப்பிப்போன மிதப்பர்களுக்கு வழி காட்டுகின்றார். அஞ்ஞான இருளிலிருக்கும் அறிவீனர்களுக்கு மெய்ஞ் ஞான வெளிச்சத்தைக் காட்டுகின்றார்.

இத்தகைய அருளறமூட்டும் அருகனாம் புத்தரிடம் அடைக்கலம். அவர் தெரியச்செய்த சத்தியதன்மத்தில் அடைக்கலம். அவர் ஸ்தாபித்த சத்திய சங்கத்தில் அடைக்கலமென்று வணங்கி நாங்கள் சீவித்திருக்கும் வரையில் தங்கள் சிஷ்யர்களாக அங்கீகரிக்க வேண்டுமென்று வணங்கிக்கொண்டார்கள்.

இல்லறத்தைச் சேர்ந்த இஸ்திரீகளில் அவலோகிதராகும் புத்த பிரானிடங் கற்பினறங்கேட்டு பிக்குணி சங்கத்திற் சேர்ந்தவர்களில் ஆதியாகச் சிரமயிர் கழித்து காஷாயம் பெற்றுக்கொண்டவர்கள் யட்சனுடையத் தாயும் அவன் மனைவியுமேயாம்.

வாரணாசியில் மிக்க தனவந்தர் குடும்பங்களில் யட்சனுடைய சிநேகிதர் களாகும் விபலன், சுவாகு, புண்ணிய சித்தன், கவாம்பி என்னும் நால்வரிருந்தார்கள்.

அவர்கள் நால்வரும் யட்சனுடைய சங்கதிகளைக் கேள்வியுற்று மிக்க ஆனந்தமுடையவர்களாய் நமது யட்சன் விவேக விருத்தியிலும் வியாபார விருத்தியிலுந் தேர்ந்தவன். ஈதன்றி சாந்தத்திலும் பகுத்தறிவிலும் மிகுத்தவன்

இத்தகைய குணநிறைந்த யட்சன் சிரமயிர் கழித்து காஷாயம் பெற்று பிச்சா பாத்திரங் கையில் ஏந்திக்கொண்டு புத்த சங்கத்தில் சேர்ந்து விட்டானென்றால் அஃது சாமான்ய சங்கமாயிராது, சிரேஷ்ட சங்கமாகவே இருத்தல் வேண்டுமென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு யட்சனிடஞ் சென்றார்கள்:

யட்சனும் பகவனை வணங்கி எங்களையனே ! இந்நால்வரும் எனதன்பு மிகுத்த நேயர்கள். இவர்களுக்குத் தங்கள் அளவுபடா தன்மத்தைப் போதித்து புனிதர்களாக விளங்கச் செய்ய வேண்டுமென்று வருந்தினான்.

அவனன்பையும், அவனது நேயர்கள் நால்வரின் விசாரிணை மிகுத்த அவாவையும் உணர்ந்த அருகன் அவர்களை அருகில் உட்காரும்படிச் செய்து சிறுவர்களே! உங்கள் தாய்தந்தையர் போதுமான முதலளித்து வியாபாரத்தைப் பெருக்குங்கோள் என்று உத்திரவளித்திருக்க நீங்கள் அவைகளை விடுத்து என்னை வந்தடுத்தக் காரணம் யாதென்று உசாவினார்.

அதைக் கேட்ட சிறுவர்கள் தருமனை வணங்கி மெய்யனே! எங்கள் தந்தை அளித்துள்ள முதலை கள்ளர்களும் வஞ்சகரும் வழிப்போக்கரும் அபகரித்துக்கொள்ளுவதை அறிந்திருக்கின்றோம்.

ஆனால் தாங்களளிக்கும் சத்திய தன்ம முதலைக் கள்ளர்கள் அபகரிக்கவாவது, வஞ்சினர்கள் பொஞ்சிக்கவாவது, வழிப்போக்கர் எடுக்கவாவது முடியாதென்று கேழ்விப்பட்டு அந்த சத்தியதன்ம முதலைப் பெற வேண்டி தங்களை சரணடைந்தோம். தாங்களும் அருள்சுரந்து சத்திய தன்ம அமுதாகும் முதலை ஊட்டி ஆதரிக்க வேண்டுமென்றார்கள்.

இவர்களது அதி தீவிரத்தையும் அன்பின் மிகுதியையுங் கண்ட அருகன் சிறுவர்களை நோக்கி நீங்கள் நால்வரும் ஒவ்வோர் மனைவியை அடைந்து மக்களை ஈன்று உலக விருத்தி செய்து சுகமடைய வேண்டிய திருக்க என்னை நாடி யாது சுகம் பெற வந்தீர்களென்றார்.

ஒப்பிலா அப்பனே! உலகத்தில் தோன்றியுள்ள சருவசீவர்களும் பொருளைச் சேர்ப்பதும் அதன் போக்கால் வருந்துவதும் பெண்களைச் சேர்ப்பதும் அதன் மாறுதலால் வருந்துவதும் பிள்ளைகளைப் பெறுவதும் அதன் பிணியின் உபத்திரவங்களால் வருந்துவதுமாகியச் செயல்களைக் கேட்டும் இருக்கின்றோம், கண்டும் இருக்கின்றோம். ஆதலின் அவர்களைப்போல் சதா துக்கநிலை சாராமல் தங்களைப்போல் சதா சுகநிலைப் பெற வந்தோம் என்றார்கள்.

அதையுணர்ந்த அருகன் புந்நகைக்கொண்டு சிறுவர்களை நோக்கி உலகசீவர்கட்படும் சதா துக்கத்தை உங்கள் கண்களால் பார்ப்பதுமன்றி கேட்டுமிருக்கின்றீர்கள்.

ஆயினும் ததாகதர் சதானந்தத்திலிருப்பதை எவ்வகையால் அறிந்துக் கொண்டீர்களென்றார்.

சிறுவர்கள் ஜினனை வணங்கி சினேந்திரா! ஈதுவேண்டும் வேண்டா மென்னும் புசிப்பினாலும் இவ்வுடை வேண்டும் வேண்டாமென்னும் போர்வையினாலும் இவ்விடம் வேண்டும் வேண்டாமென்னும் நிலையினாலும் உமது முகத்தில் எக்காலுங் காணும் ஆனந்த தேஜசினாலும் நாளுக்குநாள் போதனா சக்த்தியால் மிகுத்துவரும் இனிதான வாக்கினாலும் இரவும் பகலும் நித்திறையற்று சதா விழிப்பிற்

சுகித்திருக்குஞ்சுகத்தினாலும் நீவிரெக்காலும் சதானந்தத்தில் சுகித்திருக்கின்றீரென்று கண்டோமென்றார்கள்.

அதைக்கேட்ட பகவன் சிறுவர்களை நோக்கி அத்தகைய சதானந்தத்தை விரும்பும் ஒவ்வொருவனும் புத்ததரும் சங்கத்தைச் சார்ந்து அற நூல் விசாரிணைப் புரிந்து அன்பைப் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்றார்.

அதற்கு சிறுவர்கள் பகவனை நோக்கி ஐயனே! தாங்கள் அளித்துள்ள அறநூலால் ஒழுக்கங்களைப் பெருக்கிக்கொண்டபோதிலும் எங்களுக்குள்ள அன்பை எவ்வகையாற் பெருக்கிக்கொள்ளுவோமென்றார்கள்.

பகவன் நால்வர்களையும் நோக்கி சிறுவர்களே! நீங்கள் நால்வருங் குடும்பத்திலுள்ள குழந்தைகள் முதல் பெரியோர்களீறாக அன்பு பாராட்டி வந்தீர்களா இல்லையா. யட்சனைத் தேடி வந்தது அன்பு பாராட்டியா இல்லையா என்றார்.

சிறியோர்கள் மேலோனை வணங்கி சினேகித அன்பின் மிகுதியால் அவனைத் தேடிவந்தோமென்றார்கள். சிறுவர்களே! சினேகிதமென்பது யாதெனில்:- ஒருவனை நேசித்தபோது அவனுக்குள்ள இடுக்கங்களைத் தனக்கு வந்த இடுக்கங்களைப் போல் கருதி தீர்த்தலும், அவனுக்குள்ள பசியின் உபத்திரவங்களை தன் உபத்திரவம் போல் கருதி ஆற்றலும், தன்மனையில் யாதொரு கோபச்செயலிலிருந்தபோதினும் அவனைக் கண்டவுடன் சினமகற்றி இதம் பாராட்டுதலுமாகியச் செயல்களையே அன்பென்றும் சிநயிதமென்றுங் கூறப்படும்.

'இத்தகைய குணநிலையை மகடபாஷையில் சிவமென்றும், சகட பாஷையில் இதமென்றும், திராவிட பாஷையில் அன்பென்றும் வழங்கப்பெறும். அன்பின் மிகுதியால் சருவசீவர்களின் குற்றங்களையும் பொறுத்து ஆதரிக்குங் குண நிலைக்கு மகடபாஷையில் பிரமமென்றும், சகடபாவையில் சாந்தமென்றும், திராவிட பாஷையில் தண்மெயென்றுங் கூறப்படும். அன்பின் மிகுதியால் சருவசீவப்பிராணிகளுக்கும் புசிப்பூட்டி நல்வழி காட்டுங் குண நிலைக்கு மகட பாஷையில் ஈசனென்றும்,

சகடபாஷையில் தன்மமென்றும், திராவிட பாஷையில் ஈகையென்றுங் கூறப்படுமென்று விளக்கினார்.

இதைக்கேட்ட சிறுவர்கள் பகவனை வணங்கி தேவரீர் தாம் கூற வந்த பிரமமென்னுந் தண்மெயும், சிவமென்னும் அன்பும், ஈசனென்னும் ஈகையும் சருவ மக்களிடத்தில் உண்டோவென்றார்கள். சிறுவர்களின் புன்மொழிக் கேட்ட பகவன் ஆனந்தித்து சாந்தம், ஈகை, அன்பு என்னும் முச்செயல்களும் சருவமக்களிடம் மட்டிலும் உள்ளதல்ல. உலகத்தில் தோன்றியுள்ள சருவசீவராசிகளிடத்திலும் நிறைந்திருக்கின்றது. அன்பென்னும் ஓர் செயல் சருவசீவராசிகளிடத்தும் நிறைந்துள்ளபடியால் பட்சிகள் தன்குஞ்சுகளையும், மிருகங்கள் தன்குட்டிகளையும் வேளைக்கு வேளை புசிப்பூட்டி பாதுகாத்து விருத்தி செய்துவருகின்றது. சருவசீவராசிகளிடத்தும் அன்பென்னுஞ் செயல் அகன்றிருக்குமாயின் பட்சிகளின் குஞ்சுகள் பாதுகாப்பற்றுப்போம். மிருகங்களின் குட்டிகள் மாண்டு மறைந்துபோம் மக்களின் மகவும் மயாணபூமிக்கிறையாவர்.

அங்ஙனம் அகலாது சருவசீவராசிகளுக்குள்ளுஞ் சிவமென்னும் அன்பும், பிரமமென்னுஞ் சாந்தமும், ஈசனென்னும் ஈகையும் நிறைந்துள்ளபடியால் அதனதன் கூட்டத்தை பாதுகாத்து ஒன்றுகூடி விருத்தி செய்து வருகின்றது. ஆனால் பட்சிகள் அதனதன் குஞ்சுகளை மட்டுலும் பாதுகாத்து விருத்தி செய்யும். மக்களென்னும் மனுக்களோ பட்சிகளைப்போலுந் தலைகுனிந்து தன்னினத்தில் அன்பு செலுத்துவது போலிராது தலை நிமிர்ந்து சருவசீவர் களிடத்தும் அன்புபாராட்டி ஆதரிக்க வேண்டியவர்களாயிருக்கின்றார்கள்.

இவ்வகைத் தலை நிமிர்ந்து மக்களாகத் தோன்றினோர் சருவசீவர்களின் மீதும் அன்பு பாராட்டாது தன்மனைவிமகவு மீதுமட்டும் அன்பு பாராட்டு வரேல் தலைநிமிர்ந்த மக்களென்று கருதாது தலைநிமிர்ந்த நரகரென்று கூறுவர். நீங்கள் நால்வரோ தலைகுனிந்த வானரரினின்று நிமிர்ந்து நரரென்னும் தோற்றமுண்டாகிவிவேகமிகுதியால் மக்களென்னும் பெயர் பெற்றுள்ளபடியால் விசாரிணையினின்று உங்களுக்குள்ள அன்பையும், சாந்தத்தையும், ஈகையையும்

பெருக்கிக்கொள்ளுவீர்களாயின் இரவு பகலற்ற தேவர்களென்னும் ஏழாவது தோற்றமுண்டாகி சதா சுகமும் நித்தியானந்தமும் பெற்று வாழ்வீர்கள் அங்ஙனமின்றி இராகத்துவேஷ மோகங்களென்னுங் காம வெகுளி மயக்கங்களைப் பெருக்கிக்கொண்டு நரகர் நிலைகளை அடைவீரேல், சதா துக்கத்தில் மூழ்கி மாறாப்பிறவியில் சுழன்று திரிகுவீர்களென்றார்.

சிறுவர்கள் நால்வரும் எழுந்து நின்று பகவனை நோக்கி போதிசத்துவா! புண்ணியநாதா! பொய்தீரொழுக்கா ! தாமோதிய அருள்வாக்யங்களில் அன்பு, ஈகை, சாந்தம் இம்மூன்றும் நிறைந்த நிலையில் சுகமுண்டென்று உணர்ந்தோம். காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றும் நிறைந்த நிலையில் துக்கம் உண்டென்று உணர்ந்தோம். ஆயினும் இத்தேகம் உள்ளளவும் அத்துக்கத்தை அனுபவிப்பது நிட்சயமாகும். இத்தேகம் மறைந்த பின் இம்மெய்யில் செய்த தீவினைகளை மறுமெயில் அனுபவிப்பதற்கு மாறாப்பிறவியில் சுழன்று திரிவானென்பதில் மனங் காரணமா தேகங்கணமா என்பது விளங்காததினால் அதை விளக்கி ஆதரிக்க வேண்டுமென்றடிபணிந்தார்கள்.

கருணாகரக்கடவுள் நால்வரையும் நோக்கி சிறுவர்களே! தேகமில்லாமல் மனமும் மனமில்லாமல் புருஷனென்னும் ஆன்மாவும் இருப்பதைக் கண்டீர்களோ என்றார். சிறுவர்கள் செல்வனை வணங்கி, மெய்யனே! தேகமில்லாவிடத்து மனதை அறியோம். மனமும் தேகமும் பொருந்திய செயலில்லாவிடத்து புருஷனென்னும் ஆன்மாவையும் அறியோமென்றார்கள்.

அநாத்மனாகும் அறிவன் நால்வரை நோக்கி சிறுவர்களே! சருவ தோற்றங்களும் அநித்தியம், சருவ ஆன்மாக்களும் அநாத்மம் என்பதே மோட்சமென்னும் நிருவாணத்திற்கு ஏதுவாகும் சருவ தோற்றங்களும் நித்தியம், சருவ ஆன்மாக்களும் நித்தியமென்பதே நரகமென்னும் பிறவிக்கேதுவாகும். எழு நரகமென்னும் எழுபிறவிகளுக்கு ஏதுக்கள் யாதென்பீரேல் காம, வெகுளி, மயக்கங்களால் உண்டாகும் பற்றுக்களேயாம். அக்காம வெகுளி மயக்கங்களின் செயல்கள் அவனவனுக்குள் தங்கி மாறாபிறவியிற் சுழன்று மீண்டும் அச்செயலைப் பற்றுவதை அவனவன் தூக்கத்திலும் விழிப்பிலும் உண்டாயதைக் காணலாம்.

**நாயனார் திருக்குறள்**

பற்றற்றக் கண்ணே பிறப்பறுக்கு, / மற்று நிலையாமெய்க் காட்டி விடும்.

**இடைக்காட்டு சித்தர்**

பற்றே பிறப்புண்டாக்குந் தாண்டவக்கோனே

அதை பற்றாதறுத்துவிடு தாண்டவக்கோனே.

**மணிமேகலை**

சீலந்தாங்கி ஆனந்த நிலைநின்று, மேலென வகுத்த ஒரு மூன்று திறத்துத்

தேவரு மக்களும் பிரமருமாகி, மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் னுகர்வர்.

ஒருச்செயலை செய்திருந்தவன் தூங்கி விழித்தவுடன் விட்டச்செயலை தொடர்ந்து செய்யத் தேடுவான். அதுபோல் மரணமடைந்தானெ தூங்கினான் என்பதும் ஒருபொருளாதலின் விட்டபற்றைத் தொடர்ந்து பற்றலுக்கு தேகத்தில் தோய்ந்த மனமும், மனதில் தோய்ந்த பற்றுதலும் பிறவிக்கு ஏதுவாதலின் பற்றுதலுக்கு ஈடாய் மனம் விரிந்து தேகந்தோன்றி விட்ட பற்றைத் தொடர்ந்து செய்வது உள்ளத்தியல்பாம்.

என பகவன் போதித்துவருங்கால் நால்வருமெழுந்து காசிநாதனை வணங்கி கருணையெங்கடலே! கற்பகத்தருவே! கமலநாயகனே! அவாவின் மிகுதியால் தாவி நிற்கும் பற்றுக்களே பிறவிக்கு மூலமென்றும், மறுமெய்யைத் தோற்றவைக்கும் வித்தென்றும் விளங்கினோமாயினும் நித்தியானந்தமென்றும் சதா சுகமென்றுங் கூறும் அனுபவநிலையில் தேகம் உள்ளவரையிலும் அச்சுகத்தை அனுபவிப்பதா தேகமற்ற போதும் அச்சுகத்தை அனுபவிப்பதா அதனைத் தேற விளக்கவேண்டுமென்றார்கள், சங்க தரும்னென்னுங் கணநாயகன் நால்வரையும் நோக்கி சிறுவர்களே! (ஆரோக்கிய) பரமலாபா, (சந்துட்டி பரமானந்தா (விசவாசி ) பரம் ஞாதி, (நிப்பானங் பரமாங் சுகம் என்பவற்றுள் ஒரு மனிதன் நோயற்ற வாழ்க்கையிலிருப்பானாயின் அவனை என்னென்று கருதுவீர்கள். ஒருவன் எக்காலும் சந்தோஷத்திலிருப்பானாயின் அவனை என்னென்று கருதுவீர்கள். ஒருவன் தன்குடும்பத்தில் யாதாமொரு கவலையும் இல்லாமல் வாழ்வானாயின் அவனை

என்னென்று கருதுவீர்கள். ஒருவன் தன்னதென்னும் பற்றற்று நானென்னும் அகம்பாவமற்று இஃது வேண்டும் வேண்டாமென்னும் விருப்பு வெறுப்பற்று தூங்கல் விழிப்பென்னும் இரவுபகலற்று சுழிப்பத்தி, ஜாக்கிரமென்னும் அசதியற்று இன்று நாளை என்னும் மறதியற்று பாலன் விருத்தனென்னும் பருவமற்று சதா விழிப்பிலும், சதானந்தத்திலும், சதா போதத்திலும், சதா நீதியிலும், சதா சாந்தத்திலும், சதா ஈகையிலும், சதா அன்பிலும் இருப்பானாயின் அவனை என்னென்று கருதுவீர்களென்றார்.

அதனை வினவிய சிறுவர்கள் ஆனந்தமுங் குதூகலமுங் கொண்டு ஆதிதேவனை வணங்கி ஒதாமல் உணர்ந்த தூயனே! ஒப்பிலா மெய்யனே! ஒரு மனிதன் உலகத்தில் வியாதியில்லாமல் வாழ்வதரிது. அவ்வகை வியாதியில்லாமல் வாழ்வானாயின் அழியும் லாபத்தைத் திரளாக அடைபவனைப்பார்க்கினும் அவனே அழியா லாபத்தை அடைந்தவனாவன்.

ஒரு மனிதன் எப்போதும் சந்தோஷமாயிருப்பதரிது. அவ்வகை சந்தோஷத்திலிருப்பானாயின் அவனே அழியா ஆனந்தமுடையவனாவான். ஒரு மனிதன் குடும்பத்தில் எக்காலம் விசுவாசம் வைப்பதரிது. அக்குடும்பத்தோருந் தானும் ஒருவருக்கொருவர் விசுவாசமுற்று வாழ்வார்களாயின் அவனே அக்குடும்பத்திற் சிரேஷ்டனும் ஞாதியுடைய மாலுன் ஒருமனிதன் தன்னதென்னும் பற்றறுத்தல் அரிது. நானென்னும் அகம்பாமற்றல் அரிது. வேண்டும் வேண்டாமென்னும் விருப்ப, நறுப்பற்றல் அரிது. தூங்கலற்றல் அரிது. சதா விழிப்பில் இருத்தலரிது. சுழுப்த்தி என்னும் சேரம்பலறுத்தல் அரிது, துற்செயல் அணுகாமல் ஜாக்கிரதையில் நிற்றலரிது. மறவாநிலைப்பெற்று நிற்றலரிது. பால விருத்தமற்று எக்காலுங் குமரனாகக் காண்டலரிது. சதானந்தத்தில் இருப்பதரிது. சதா போதத்தில் இருப்பதரிது. சதா நீதியிலிருப்பதரிது. சதாவன்பிலிருப்பதுமரிது.

இத்தகையச் செயல்களையுங் குணங்களையும் யாவரிடத்துங் கண்டறியோம். ஆயினும் உலகத்தில் சிரேஷ்டமென்னும் பரமலாபத்தைக் கண்டடைந்தவர் தாங்களென்றே

காண்கின்றோம். உலகத்தில் சிரேஷ்ட ஆனந்தமாகும் பரமானந்தத்தைக் கண்டடைந்தவர் தாங்களென்றே அறிகிறோம்.

ஓர் குடும்பத் தலைவருள் சிரேஷ்ட நீதியதிபதியைவிட உலகத்திற்குத் தலைவராய் நீதிபோதராய் விளங்குபவர் தாங்களென்றே காண்கின்றோம். ஆதலின் சதா ஈகை அமைந்த ஆதி ஈசரும் நீரே, சதானந்தமுற்ற ஆதிபரனும் நீரே, சதா அன்புமிகுத்த ஆதிசிவனும் நீரே, சதானந்தமுற்ற ஆதிபரனும் நீரே, சதா அன்பு மிகுத்த ஆதிசிவனும் நீரே, சதா சாந்தமிகுத்த சுயப்பிரமமும் நீரே, சதா நன்மெய் பெற்ற ஆதியங் கடவுளும் நீரே ஆதலின் எங்கள் அநித்திய நிதிகளை மாற்றி நித்தியமாம் பதுமநிதியாகும் உம்மெயும், தன்மநிதியாகும் அறத்தையும், சங்கநிதியாகும் கூட்டத்தையும் நாடினோம்.

எங்களையுந் தங்கள் சங்கத்திற் சேர்த்து தங்கள் அளவுபடா சத்தியதன்மத்தைப் போதித்து தேகமுள்ளபோதே சதானந்தத்தை சாதித்து நிருவாண சுகத்தை அடையும் வழிக்கு ஆளாக்க வேண்டுமென்றார்கள்.

அவ்வாக்கியங்களைக் கேட்ட பகவன் புந்நகைக்கொண்டு சிறுவர்களே! உங்களை ஆளாக்குவதற்குத் ததாகதன் ஆக்குவோனல்லன். நீங்களே அறிந்து தீங்கான எண்ணங்களை அகற்றிக்கொண்டேவரவும், நல்ல எண்ணங்களை விருத்தி செய்துக்கொண்டே வரவும், சீவர்களின் மீதுள்ள அன்பைப் பெருக்கிக்கொண்டே வரவும், சீவ ஹிம்சைகளை அகற்றிக்கொண்டே வரவும், தன்ம சிந்தையைப் பெருக்கிக்கொண்டே வரவும், உலோபசிந்தையை அகற்றிக் கொண்டே வரவும், மயக்கத்தை உண்டு செய்யும் வஸ்துக்களை எக்காலுங் சேரவிடாமல் அகற்றிக்கொண்டே வரவுமாகிய விழிப்பிலிருந்து மனக்களங்கங் களை அகற்றி சுத்த இதயமுண்டாகினோமா என்று உங்களை நீங்களே அறிந்து உண்மெய்யை உணர்ந்துக்கொள்ளுவீர்களாயின் உங்களிடைவிடா விசாரிணையும், திடமுயற்சியுமே உங்களை ஈடேற்றி தேகந் தோன்றினும் அழியினும் சத்தியதன்மமாம் உண்மெய் என்றுமழியாது சதானந்தத்திலும் நித்திய சுகத்திலும் இருப்பீர்களென்றார்.

நால்வரும் சிரமுடி அகற்றி காஷாயம் பெற்று பிச்சாபாத்திரங் கையிலேந்தி சங்கத்திற் சேர்ந்தவுடன் காசி விசுவேசன் வாரணாசியை விட்டு நீங்கி மற்றுந் தேசங்களில் தன்ம சங்கங்களை நாட்ட வேண்டுமென்று செல்லுங்கால் யட்சனுடன் நால்வரும் பின் சென்று சங்க அறனை சிலதூரந்தொடர்ந்து ஓரிடத்தினின்று தேவரீர் நாங்கள் முன்ஜெநநத்தில் என்ன ஜெநநமாக இருந் திருப்போமென்று எவ்வகையில் அறிந்துக்கொள்ளக்கூடும் என்றார்கள்.

சங்கறர் ஐவர்களையும் நோக்கி சிறுவர்களே! நாமனைவரும் நேற்று வாசஞ்செய்திருந்த வியாரமாகிய கட்டிடத் தெரிகிறதா என்றார். தேவரீர் நாம் சில தோப்புகளையும் வனங்களையுங் கடந்து வந்துவிட்டபடியால் அக்கட்டிடத் தோன்றவில்லை என்றார்கள். சிறுவர்களே! நாமிப்போது வாசஞ்செய்ததும் தற்காலம் விட்டுவந்ததுமாகியக் கட்டிடம் சொற்ப நேரத்திலுந் தூரத்திலும் மறைந்து தெரியாமற்போமாயின், நான்கு பூதங்களால் அமைந்த தேகமானது ஒன்று குறைந்தும், ஒன்று நிறைந்தும் நசிந்து அந்தந்த பூதங்களுடன் கலந்தும் பற்றியப்பற்றுக்கள் மட்டுந் தனித்துரைந்தும் நூதன பூதத்தால் பரந்தும் மறுஜெநந தோற்றமுண்டாயபோது பாலதானச் செயலால் முன் ஜெநந விட்டகுறை ஈதென்று மற்றோர் விவேகிகள் அறிவரன்றி பற்றியச் செயலை விட்டவன் அறியும் உணர்ச்சிகளற்றுப்போம்.

அதினால் வாலவயது பதினாறு கடந்து குமரபருவம் அடைந்துள்ள இச் செந்நத்தில் மரணத்தில் மறைந்தும், மாதுரு கருப்பத்தில் மறைந்தும், பாலதானத்தில் மறைந்தும் நிற்கும் முன்ஜெநநத்தைத் திரும்பிப்பார்ப்பதானால் அனந்தச் சுழலும் அரியப்படலங்களும் மறைந்திருக்கின்றது. அப்படலங்களாம் இராகத்துவேஷ மோகத்திறைகளை நீக்கி இதைய சுத்தமாம் சுழுப்த்தியற்ற சுப்ரப்பளிங்கினின்று பார்ப்பீர்களானால் முன்ஜெநந தோற்றமும் அதின் கன்மப்பற்றுக்களாஞ் செயலும் கன்மப் பற்றுக்களே உருவெடுத்தாளும் முன் செய்வினையின் பகுதியும் தெள்ளற விளங்கும். அங்ஙனமின்றி ஓர் மயிரையெடுத்து இரவில் பார்ப்பவனுக்குத் தெரியாதது போல் காம, வெகுளி, மயக்கமாம் அஞ்ஞான இருளிலிருந்து முன்ஜெநநத்தை நோக்குதல் தன் வினைப்பயனால் விட்டகுறை தொடர்ச்சி தனக்குளிருந்தும் அஃது விளங்குவதரிதேயாம்.

ஆதலின் நீங்கள் ஒவ்வொருவரும் முன்ஜெநநம் யாது பின்ஜெநநம் ஏதென்று உசாவி வீண்காலங்கழிக்காது காமத்தாலுண்டாகுங் கேடுகளை நோக்குதலும், அவைகளை நாளுக்குநாள் நீக்குதலும், கோபத்தாலுண்டாகுங் கேடுகளை நோக்குதலும், அவைகளை நாளுக்குநாள் நீக்குதலும் மயக்கத்தாலுண்டாகுங் கேடுகளை விழித்து நோக்குதலும் அவற்றை நாளுக்குநாள் நீக்குதலுமாகிய நற்கடைபிடியினின்று இதயத்தை சுத்தி செய்தலென்னும் மனக்களங்கங்களை அகற்றி விடுவீர்களாயின் செல்காலத் தோற்றம் நிகழ்காலத்தோற்றம் வருங்காலத் தோற்றம் யாவும் உங்களுக் குளுணர்ந்து உதய சூரியன் பிரகாசிப்பீர்களென்றோதி அறிவு பெருகு கவென வாழ்த்தி ஐவர்களையும் வாரணாசி வியாரத்திற்கு அனுப்பிவிட்டு ஓர் ஆரணத்தின் மத்தியில் நுழைந்துவிட்டார்.

**வீரசோழியம்**

அருள் வீற்றிருந்த திருநிழற்போதி / முழுதுணர்முநிவனிற்பரவுதுந் தொழுதக ஒருமனமெய்தி இருவினைப் பிணிவிட / முப்பகை கடந்து நால்வகை பொருளுணர்ந் தோங்குநீருலகிடையாவரு / நீங்காலின்பம் ஒடுநீடுவாழ்கெனவே.

**9. மானைக்கார்த்து மழுவேந்திய காதை**

ஆரணமத்தியில் நுழைந்த அவலோகிதர் செல்லும் வழியில் ஓர் புலியானது மானைப் பற்றிக்கொள்ள அது பதருவதைக் கண்ட கருணாகரன் அருகிற் சென்று மானைவிடுத்து தன்னுடலைப் புலிக்கு தத்தந் செய்தார்.

புலியுடலுடன் பொய்யா மொழியோன் உடல் பொருந்தியவுடன் அப்புலிக்கும் கருணைதோன்றி இருவரையும் விட்டுப்போய் விட்டது. கருணாகரக்கடவுள் மானுடலில் வடியும் உதிரத்தைத் துடைத்தும் காயங்களைப் பொருத்தியும் விட்டு நடக்குங்கால் அம்மான் கன்று மாதவனைப் பின் தொடர்ந்தே சென்றது. அவரும் அதன் அன்பையும் பயத்தையும் து யாதொன்றும் பேசாமற் சென்றார்.

**வீரசோழியம்**

கற்புடை மாரனைக் காய் சினந்தவிர்த்தனை,
பொற்புடைநாகர் தந்துயரம் போக்கினை
மீனுருவாகி மெய்ம்மையிற் படிந்தனை,
மானுருகார்த்து வான் குணமியற்றினை.
உலகுமிக மனந்தளர்வுற் , உயர் நெறியோர் நெறியழுங்கப்
புலநசைப்ப பெருஞ்சினத்து, புலிக்குடம்பு கொடுத்தனையே
தீதியில் புலியது பசிகெடுவகை நின.
திருவுருவருளிய திறமுறுபெருமெயை.

**அருங்கலைச்செப்பு**

மன்னுயிர் காக்கத் தன்னுயிரளித்தல். விண்ணுயர் வேந்தன்றிறம்.

**நிகழ்காலத்திரங்கல்**

மெலிந்திரைந்த மான்கன்றை வேதியனார் கார்த்து.
புலிக்குடம் பளித்தாண்ட போத அதிசயமே.

மான் கன்று மாதவன் செல்லுங்கால் செல்லுதலும், அவர் நிற்குங்கால் மேயுதலுமாகியச் செயலுற்று அவர் பிச்சாபாத்திரமேந்தி அன்னத்திற்கு செல்லுங்கால் கூடவே நடத்தலும், அவர் யோகசயம் உறுங்கால் கூடவே சயனித்தலும். அவரெழுந்திருக்குங்கால் கூடவே எழுதலுமாகப் பின் சென்றது.

இறைவனுங் கானகங்களைக் கடந்து கராடர் நாடடைந்து ஓர் மரத்தடியில் உட்கார்ந்து மக்களுக்கு தன்மோபதேசஞ் செய்ய ஆரம்பித்தார். மான் கன்றும் அவரருகில் உட்கார்ந்து கொண்டது. அவ்விடம் இரும்பூதிக்கொண்டிருந்தக் கன்னான் பகவனை நோக்கிப் பெரியோய்! சருவத்தையும் விட்டு வெளியேறியத் தாங்கள் இம்மான் கன்றை விடாதக் காரணம் என்னை என்றான்

அதை வினவிய பகவன் கன்னானை நோக்கி மக்களுக்கு மிருகசீவர்கள் மீது அன்பில்லாவிடினும் மிருகசீவனாகிய இதற்கு மக்கள் மீது அன்பு பொருந்தி தொடர்ந்து நிற்கின்றதென்றார். கன்னான் பகவனை நோக்கி மருகராசிகளிடத்தும் அன்பண்டோ என்றான். பகவன் கன்னானை நோக்கி சருவசீவர்களிடத்தும் அன்பில்லாமற்போமாயின் ஒவ்வோர் சீவராசிகளும் சீவிப்பதரிதென்று அறியாயோ என்றார்.

கருணாகரக் கடவுள் வாக்கையும் அவர் செயலையும் அறியாத கன்னான் ஊதுலையில் மழுகக் காய்ந்திருந்த இரும்பு குண்டை இறைவன் முன்னுருட்டி இதனினும் அன்புண்டோ என்று பரிகசித்தான்.

அருகக்கடவுளோ அவனறியாமெய்க் கிரங்கி அக்காய்த் துருகு மழுவை தன் கரத்திலேந்தி கன்னானை நோக்கியபோது அத்தழலானது ததாகதர் கரத்திற்றாவாது மேனோக்கி வீசிற்று. அதைக் கண்ணுற்ற கன்னான் அச்சுவாலை மேனோக்கி வீசுவதையும் அதன் தான்டவத்தையும் உணர்ந்து திகைத்து நின்றான்

**வீரசோழியம்**

பூதலத்தில் எவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி
மாதவநீ என்பதற்கு ஓர் மறுதலையாக் காட்டதோ
கழலடைந்த உலக்கணத்துக் காயுலைவா உருமழுவா
மழலெழுந்த கரத்தொடு மற்றன்றருளை ஏற்றினையே.

**திருமூலர் திரி மந்திரம்**

உருகிய மழுவை உள்ளங்கையேந்தி / அருளொடு வாய்மெய் ஆற்றலருளி
கருவில் அமைந்த காட்சி அமைப்பை திருவையினுள்ள செயலிதென்றானே.

**காசிக்கலம்பகம்**

கண்ணிருக்குந் திருநுதலுங் கனலிருக்குந் திருகரமுங் கலந்தோருள்ளத்
துண்ணிருக்கு மின்னமுதும் பிறைமுடியும் உடைவாளும் அகற்றி கானில்
வெண்ணிறைந்த கணத்தோடு மனந்தவனத் திருப்பாரை எங்கே காண்பேன்
பண்ணிருந்த மறைபுகழ்முக் கண்ணனை அண்ணலர் அமரர் பரனைத் தானே.

இறைவனோ, தன்கரத்தேந்தியமழுவை எறிந்துவிடாது இன்னும் மேலேற்றி கன்னானை நோக்கி அன்பரே! உன்னிடத்துள்ள காமாக்கினியின் சுடுகையை உணராமலும், கோபாக்கினியின் சுடுகையை உணராமலும், பசியாக்கினியின் சுடுகையை உணராமலும் இம்மழுவன் சுடுகையை மட்டும் உணர்ந்து மகிழ்ச்சி கொண்டதென்னோ என்றார்.

கன்னான் திகைத்து கருணாகரன் அடியில் வீழ்ந்து ஐயனே, காமாக்கினி, பசியாக்கினி இவைகளின் சுடுகைகளை அறியாது இவ்வுலையிற் காய்ந்த மழுவின் சுடுகையை மட்டும் அறிந்தவனாதலின் தங்கள் தண்மெய் நோக்கின்றி தரிதலையானேன் பிழை பொருத்து புண்ணியபலனைப் பகரல் வேண்டும் என்றான்.

கருணாகரர் கன்னானை நோக்கி அன்பரே! உலையில் காய்ந்த மழுவு உம்மெச்சுடுமென்றறிந்த நீவிர்மற்றவரை சுட்டு உபத்திரவம் அடையட்டுமென்று எண்ணலாமோ என்றார். கன்னான் கமலநாயகனை வணங்கி - ஐயனே! இம்மழுவைத் தமது கரத்தில் எடுக்கமாட்டீரென்று உரைத்தேனன்றி உம்மெய் உபத்திரவத்தில் ஆழ்த்தக் கருதினேனில்லை. ஆதலின் எனதுன்மத்தச் செயலை க்ஷமித்து ரட்சிப்பதுடன் எனக்குள் உள்ள அக்கினியை விவரிக்க வேண்டும் என்று வருந்தினான்.

பகவன் கன்னானை நோக்கி அன்பரே! உமக்குள்ளெழும் பசியாக்கினியின் வெப்பத்தை அறிந்திருப்பீர். அவ்வெப்பத்தைத் தணிக்கும் புசிப்பை உட்கொண்டவுடன் தணிந்து ஆயாசம் நீங்கும். அன்னம் புசிப்பின்றி இருப்பீராயின் அவ்வக்கினி கீழிழிந்து மலமூத்திராதிகளைக் கவர்ந்து தேகம் முழுவதும் பரந்து சிற்சில வியாதிகளை உற்பத்தி செய்து மாளா உபத்திரவத்தை உண்டு செய்யும். கோபாக்கினியானது உம்மிடத்து எழுந்து பரந்து எதிரிக்கும் அவ்வக்கினியை எழுப்பிப் போர்புரிந்து பற்பல இடங்களில்

காயங்கள் உண்டாய் உபாதைப்படுத்துவதுடன் அதிகாரிகளிடத்துந் துன்பத்தை அனுபவிக்கச்செய்யும்.

காமாக்கினியானது உம்மிடத்து எழும்புவதையும் அடங்குவதையும் அநுபவத்தில் அறிந்து வருகின்றீர். அவ்வக்கினியை தவிற்காது மேலும் மேலும் பெருக்கிக்கொள்ளுவதால் காமாக்கினியின் பெயரற்று மேகாக்கினி என்றும் பெயர் பெற்று சப்த தாதுக்களுங் கொதிப்புற்று பற்பல வியாதிகளால் துன்பத்தை அநுபவிக்கச்செய்யும். ஆதலின் உம்மிடத்துண்டாகும் மூவக்கனியின் கொதிப்பையும் அதினால் உண்டாகும் ஊன்களின் உருக்கையும், உபாதைகளின் பெருக்கையும் கண்டுணராது உமக்கு அப்புறப்பட்ட மழுவின் கொதிப்பை மட்டிலும் அறிந்திருப்பதால் யாது பயன்.

**சீவகசிந்தாமணி**

தன்னுயிர் தான் பரிந்தோம்புமாறு போன் மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமே லின்னுயிர்க்கிறைவனாய் இன்ப மூர்த்தியாய் பொன்னுயிராய் பிறந்து உயர்ந்து போகுமே. நெருப்புயிரக் காக்கி நோய் செய்யினிச்சமு முருப்புயிரின் இருவினை உதைப்ப வீழ்ந்த பின்
புரிப்பரிக் கொண்டு போய்ப் பொதிந்துக் கட்டிட விருப்புயிராகி வெந்தெரியுள் வீழுமே.

உம்மிடத்தெழுவும் மூவக்கினியின் கொதிப்பை அடக்குவதினால் சகல மதிப்பும் உண்டாய் சீவகாருண்யனென்னும் பெயர் பெற்று மக்கள் நிலை கடந்து தேவர் பிரமரென்னுஞ் சுகநிலைப் பெற்று வாழ்வீர். அங்ஙனமின்றி இப்பேதை ஜெந்துவாகிய மானைக்கண்டவுடன் உமது காருண்யத்தைக் காட்டாது துவேஷமுறுவதால் உம்மிடத்துண்டாகும் இராகத்துவேஷமோகோற்பவமாம், காம வெகுளி மயக்கங்கள் கொதிப்பேறி பிணி, மூப்பு, சாக்காடுண்டாகி மாறாப் பிறவியில் சுழன்று தீரா துக்கத்திற்கு ஆளாக்கும். இத்தகைய துக்கத்தை நீக்கிக்கொள்ளவேண்டிய நீவிர் சீவராசிகளுக்குண்டாகுந் துன்பங்களை உமக்குண்டாய துன்பம் போல் கருதி அவைகளை ஆதரித்துவருவீராயின் மேற் பிறவியை நோக்கி வாழும் ஒவ்வோர் சீவப்பிராணிகளும் பெருகி பலுகி சுகமடையும் வாழ்க்கையைத் தாங்களும் அறிந்து

அன்பின் பெருக்கத்தால் உண்டாகுங் கருணையின் பலனை ஆராய்ந்து கதி பெருகுவீரென்றார்.

கன்னான் கலைநாயகனை வணங்கி ஐயனே, இங்கு காய்ந்து மழுவாய் உருகிய இரும்பு பட்டவிடமெங்குஞ் சுடுவதாயிருக்க தமது கரத்தை சுடாத்தின் காரணமென்னோ விளக்கல் வேண்டுமென்றான்.

கரமழுவேந்தி கன்னானை நோக்கி அன்பரே, நீர் தண்மெய் அடைவீராயின் சகலமுந் தண்ணுறும். நீர் சுடுமெய் அடைவீராயின் சகலமும் உம்மெச்சுடுமென்றார்.

தண்மெய் என்பதும் சுடுமெய் என்பதும் விளங்கவில்லையே என்றான்.

அன்பரே! உமக்குள் சாந்தமென்னுங் குளிர்ந்த நிலை கோடலே தண்மெய் என்றும், காமங் கோபமென்னுங் கொடுநிலைக் கோடலே சுடுமெயென்றுங் கூறப்படும்.

வாக்கால் ஒருவரை மனனோகப் பேசுதலும் சுடுமெய்க்காதாரமாம். தேகத்தால் மற்றோரை நோக வடித்தலுஞ் சுடுமெய்க்கு ஆதாரமாம். மற்றோரைக் கெடுக்க வஞ்சநெஞ்சங் கொள்ளுவதுஞ் சுடுமெய்க்கு ஆதாரமாம்.

மிருதுவான வாக்கும், அன்பான மொழியும், பிரயோசனமான வார்த்தைகளும் நாவினால் கூறுதல் தண்மெய்க்கு ஆதாரமாம்.

மற்றோர் தேகத்திற்குண்டான தீங்கை தன் தேகத்தால் கார்த்தலுந் தன் தேகத்தை வருத்தி சம்பாதித்து மற்ற தேகங்களைப் போஷித்தலும் தண்மெய்க்கு ஆதாரமாம்.

மற்றோர் செய்த தீங்குகளை நினையாமலும் அதை மனதில் தங்கவிடாமல் செய்கலாம், மற்றொருவர் செய்த நன்றியை நினைத்தலும், அந்நன்றியை என்றும் மறவாமலிருத்தலுந் தண்மெய்க்கு ஆதாரமாம்.

இத்தகையத் தண்மெய் அடைதற்கு தென்புலமே தோற்றமாகும். அதாவது நாவினால் அறுசுவைகளை அறிதலும், மூக்கினால் நற்கந்தம் துற்கந்தங்களை அறிதலும், செவியினால் சப்தங்களைக் கேட்டலும், கண்களால் உருவங்களைப் பார்த்தலும், தேகத்தால் பரிசித்தலென்னும் உணர்ச்சி நுகர்தலுமாகியப் புலன்களும் எண்ணங்களுந் தென்பட உசாவுவனேல் தென்புலத்தானாவன்.

அத்தென்பல நுகர்ச்சியால் கண் பார்த்தவிடத்தை மனமிச்சித்தலும், நாவுருசித்த பதார்த்தத்தை மனம் இச்சித்தலும், நாசி முகர்ந்த வஸ்துவை மனம் இச்சித்தலும், செவி கேட்ட சப்தத்தை மனம் இச்சித்தலும், தேகஞ் சுகித்த இடத்தை மனம் இச்சிக்கலமாகியச் செயல்கள் மனங்கோறிய வஸ்துக்கள் கிடைத்தவிடத்து சந்தோஷமும் கிடைக்காதவிடத்து துக்கமும் பற்கடிப்பும் உண்டாய் காம வெகுளி மயக்கங் கொதிப்பேறி தன்னை அடுத்த களையுங் கெடுத்து தானும் கெட்டு மாளா துக்கத்தில் சுழன்று திரிவான்.

மனம் இச்சித்தலாகும் பற்றுக்களற்று சருவ சீவர்களின் மீதும் அன்புற்று சத்தியதானத்தில் நிலைபெற்று நிற்குஞ் சாதனத்தால் சாந்தம், அன்பு ஈகை திரண்டு தண்மெயுண்டாய் அந்தணனாகுவன்.

அந்தணநிலை அடைந்து சந்தத சுகம் உண்டாகி தேவர் பிரமரென்னும் ஏழாவது தோற்றம் பெற்று எங்கும் உலாவுவர்.

இன்னிலைபெற முயற்சிக்கும் தென்புலத்தாருக்கும் தேவர்களாகும் ஏழாவது தோற்ற அறஹத்துக்களுக்கும் அன்னமிட்டு வருவது ஆனந்ததானமாகும்.

இத்தானத்தை நாடியும் அவர்களே வரமாட்டார்கள். நீங்களே உங்கள் அன்னபதார்த்தங்களை பதினைந்து நாழிகைக்குள் முடித்து வெளிவந்து (அறஹத்தோ அறஹத்தோ அறஹத்தோ) என்று மூன்று சப்தமிட்டு பார்ப்பீர்களானால் ஒரு சங்கத்தை விட்டு மறு சங்கங்களுக்குச் செல்லுந் தென்புலத்தாரும், அறஹத்துக்களாம்

தேவர்களும் வருவார்கள். அவர்களுக்கு அன்னமிட்டு நீங்களும் புசித்து ஆனந்தமடையுங்கள்.

**திரிவெண்பா**

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் என்னும் இவர்
இன்புறத்தாணுண்டல் இனிதாமே - அன்பில், தக்கவரையன்றி
தனித்துண்ண றாவிமீன், கொக்கருந்தென்றே குறி.

**திரிக்குறள்**

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம் பறவை.

இத்தகைய தென்புலத்தார்க்கு அன்னமீயந்து அவர்கள் சத்தியதன்மத்தைக் கேட்பீர்களாயின் நீங்களும் ஐம்புலனடக்கம் அதி சீக்கிரம் பெற்று அறஹத்துக் களாவீர்கள் என்று முடித்தார்.

கன்னானும் அங்குள்ள சில விவேகிகளுங் கணநாதனை நோக்கி அறநிறைக்கடலே, அன்பின் உடலே! தமதரிய கமலபாதத்திலும், சத்திய தன்மத்திலும், அனந்த சங்கத்திலும் அடைக்கலம் புகுந்தோம். எங்களையுந் தங்களரிய சங்கத்தவர்களாக சேர்த்து சரணாகதித்தரல் வேண்டும் என்று கைகூப்பினார்கள்.

கணநாயகன் அவர்கள் சரணாகதிக்கிரங்கி கராடர் நாட்டிலுள்ளக் கனவான்களைக்கொண்டு புருஷர்களுக்கோர் வியாரமும், இஸ்திரீகளுக்கோர் வியாரமுங் கட்டுவித்து அவ்விடஞ் சிலநாள் தங்கி புருஷர்களுக்கு நான்கு வாய்மெயாஞ் சத்திய தன்மங்களையும், இஸ்திரீகளுக்கு நான்கு கற்பு நிலையாஞ் சத்திய தன்மங்களையும் ஊட்டி துக்க நிவர்த்தியாம் வழியைக்காட்டி சகல பாசபந்தங்களையும்

ஒட்டி சருவவியாரங்களிலும் வெண்ணிறமாந் தன்மக் கொடியை நாட்டி புத்ததன்மத்தோர் சேர்ந்து வாழுஞ் சேரிகளைச் சுகம் பெறச் செய்தார்.

**நிகழ்காலத்திரங்கல்**

*கராடர் நாடங்கு கன்னான் மழுவால் / விராடர் பொன் வியாரம் விளித்த ததிசயமே.

**வீரசோழியம்**

ஆவியனைத்துங்க, ச, த, ந, ப, மவ்வரியும் வவ்வி
லேவிய வெட்டும் யவ்வாறு ஞந்நான்கும் எல்லாம் உலகு
மேவிய வெண்குடைச் செம்பியன் வீர ராஜேந்திரன்றன்
நாவியல் செந்தமிழ்ச் சொல்லின் மொழி முதனன்னுதலே.

**சீவக சிந்தாமணி**

தேனுலாமதுச்செய்கோதை தேம்புகை கமழவூட்டி
வானுலாச் சுடர்கண்மூடி மாநகரிரவு செய்ய
பானிலாச் சொரிந்த நல்லாரணிகலம் பகலைச் செய்ய
வேனிலான் விழைந்த (சேரி) மேலுலகனைய தொன்றே.
வேரியின் மெழுக்கார்ந்த மென்பூநிலத்,
தாரியாகவஞ் சாந்தந்தனித்த பின்,
வாரி நித்திலம் வைப்பபொற்பூவொடு,
சேரிதோறிது செல்வது இயற்கையே.

**10. சதுரகிரிக்காதை**

அறவாழி அந்தணன் கராடர் நாட்டில் தன்ம சங்கத்தை நாட்டிவிட்டு சதுரகிரி என்றும், இரத்தன தீவகமென்றும் வழங்கும் ஓர் மலையின்மீது ஏறியபோது அடிவாரத்தில்

வாசஞ்செய்திருந்தக் குடிகள் யாவரும் பின்தொடர்ந்து உச்சியில் சென்று ஐயனைச் சூழ்ந்து நின்றார்கள்.

அறவாழியான் சகலரையும் நோக்கி அன்பர்களே! உங்களை ஒத்த மனுக்கள் முதல் புழுக்கீடாம் எறும்புகளீராக உள்ள சீவர்களை ஒருவருக் கொருவர் அன்பு பாராட்டி ஆதரித்து வருகின்றீர்களா, அன்றேல் தங்களுடைய போஷிப்பையுஞ் சுகத்தையும் பார்த்துக்கொண்டு மற்ற சீவர்களை வதைத்து வருகின்றார்களா என்றார்.

தேவரீர் தாங்கள் இவ்விடம் வந்தவுடன் இக்கரடி புலி சிம்மம் யாவும் உம்மெச் சூழ்ந்து ஆனந்தமாகப் பார்த்திருக்கின்றது. இத்தகைய கரடியும் புலியும் சிம்மமும் எங்களைத் தனியாகக்காணுமாயின் அடித்துக் கொன்று விடுவது நிட்சயம். இவ்வகைக் கொடூர ஜெந்துக்கள் மீது யாங்கள் எவ்வகையில் அன்பு செலுத்தி ஆதரிப்போமென்றார்கள்.

அதைக் கேட்ட பகவன் கூட்டத்தாரை நோக்கி அன்பர்களே! ததாகதன் உங்களை ஒத்த மனிதனாயிருக்க இம்மிருக சீவன்கள் எம்மீது அன்பு பாராட்டி அருகில் வீற்றிருப்பதும் உங்களைக் கண்டவுடன் கொல்லுவதுமாகியக் காரணம் யாதென்றார்.

ஐயனே! இதினந்தரங்கம் யாங்கள் அறியோமே என்றார்கள்.

அருங்கலையோன் அக்குடிகளை நோக்கி அவ்விடம் இருந்த ஓர் நீர்ப்பாம்பையும் விஷப்பாம்பையும் காண்பித்து அவைகளைப் பிடித்து வாருங்கோள் என்றார்.

சிலர் அவைகளைப் பின்சென்று பிடிக்க ஆரம்பித்தபோது நீர்ப்பாம்ப மட்டிலும் எங்கும் ஓடாமல் அவ்விடமே தங்கினின்று கையில் பிடிப்பட்டது. விஷப்பாம்போ இவர்களைக் கண்டவுடன் ஒடிவொளித்துக் கொண்டது.

வேறுசிலரைநோக்கி அவ்விடமிருந்த ஓர் பல்லியையுந் தேளையங் காண்பித்து அவ்விரண்டையும் பிடித்து வாருங்கோள் என்றார்.

அவற்றை சிலர் தொடர்ந்து பிடிக்க ஆரம்பித்தபோது பல்லியானது எங்கும் ஓடாமல் தங்கள் கைகளில் பிடிப்பட்டுக்கொண்டது. * தேளோவெனில், இவர்கள் அருகில் நெறுங்கியவுடன் ஓடி ஒளித்துக் கொண்டது.

இவைகளைக் கண்ட இறைவன் குடிகளை நோக்கி அன்பர்களே! ஒரு பாம்பு ஓடி ஒளிந்துக்கொள்ளவும் மற்றொன்று உங்கள் கையில் பிடிப்படவும் கேளானது உங்களைக் கண்டவுடன் ஓடி ஒளிக்கவும் பல்லியானது ஓடாது உங்கள் கையில் பிடிபடவும் நேர்ந்த காரணங்கள் யாதென்று வினவினார்.

தேவரீர் அதன் காரணமும் யாங்கள் அறியோமென்றார்கள்.

குமாரதேவன் குடிகளை நோக்கி அன்பர்களே! சீவர்களை இம்சிக்கக் கூடிய நஞ்சென்னும் விஷமானது எந்த ஜெந்துவினிடமிருக்கின்றதோ அந்த ஜெந்துவானது நம்மிடங் கொடிய விஷமுள்ளபடியால் நம்மெக்கண்டோர் கொன்றுவிடுவார்கள் என்று பயந்து ஒளிப்பது இயல்பாகும்.

சீவர்களை இம்சிக்கக்கூடாத விஷமற்ற ஜெந்துக்கள் தன்னிடத்து யாதொரு நஞ்சுமில்லாமெயால் நம்மெ யாருங் கொல்லமாட்டார்களென்று எண்ணி அஞ்சாமல் நிற்பது அதனியல்பாகும் என்றார்.

அவற்றை வினவியக் குடிகள் அருகக்கடவுளை வணங்கி எமதை யனே! தோற்றியுள்ள ஜெந்துக்களில் சிலது விஷமுள்ளதாயுஞ் சிலது விஷமற்றதாயுந் தோற்றுங் காரணம் யாதென்று வினவினார்கள்.

அன்பர்களே! காரணத்திற்குத்தக்கக் காரியமென்னும் ஏதுக்குத் தக்கச் செயல்களும் உண்டாகும்.

அதாவது அக்கினியின் வெப்பமும் புழுக்கமும் உண்டாகும் இடங்களில் விஷமுள்ள ஜெந்துக்கள் தோற்றுவது இயல்பாம்.

வாயுவுங் குளிர்ச்சியும் நிறைந்த இடங்களில் விஷமற்ற ஜெந்துக்கள் தோற்றுவது இயல்பாம்.

இவ்விரண்டிற்கும் பூதபேதங்களே காரணமாகும். அதுபோல் உங்களுக் குள்ள காமாக்கினி கோபாக்கினியின் பெருக்கத்தால் விஷம் ஏறி மற்றவர்களை வஞ்சித்துந் துன்பப்படுத்தியும் வருகின்றீர்கள். அத்தகைய விஷத்தை நீங்கள் உள்ளடக்கி உள்ளவர்களாதலின் மற்ற சீவர்களுக்கும் அதிகாரிகளுக்கும் ஒளிந்துவருகின்றீர்கள்.

உங்களுக்குள்ள மோக துவேஷ அக்கினி அவிந்து கொடுவிஷம் நீங்கி சாந்தம் அன்பென்னும் குளிர்ந்த நிலைபெருகி அமுதுண்ட கருணை முகங்காணும் அக்காலத்தில் சருவ சீவன்களும் உங்கள் மீது அன்பு பொருந்தி உங்கள் ஏவலை எதிர்நோக்கும் அதினால் நீங்களும் சுகமடைவீர்கள் என்றார்.

அக்கால் மலையின் உச்சி நிறம்பப் பெருங்கூட்டங்கட் சேர்ந்து அருளாழியான் அமுதவாக்கை நோக்கினின்ற யாவரும் அவரடி பணிந்து தங்கள் சீர்பாதமே அடைக்கலம், சத்திய தன்மமே அடைக்கலம் என்றார்கள்.

அவற்றை வினவிய அண்ணல் கூட்டத்தோரை நோக்கி அன்பர்களே! சீர்பாதமே தன்மபாதம். தன்மபாதமே சீர்பாதமாதலின் ததாகதரோதுந் தன்மபாதத்தை ஒவ்வொருவர் இதயத்திலும் பதித்து விஷத்தை நீக்கி அமுதை நிறப்புங்கோளென்று தன்மபாதத்தை விளக்கலானார்.

**துவித வாக்கியவர்க்கம்**

நம்முடைய எண்ணங்களே நாமாயிருக்கின்றோம், நம்முடைய எண்ணங்களே நமக்காதாரம், நம்முடைய எண்ணங்களால் நாம் அமைந்திருக்கின்றோம். ஒருவன் கெட்ட எண்ணங்களை எண்ணுவானாயின், கெட்ட செய்கைகளைச் செய்வானாயின் வண்டியை இழுக்கும் எருதின் காலை சக்கரமானது பின்பற்றித் தொடர்வதுபோல துக்கமானது தொடர்ந்தே நிற்கும்.

அவன் என்னை அவமதித்தான், அவன் என்னை அடித்தான், அவன் என்னைத் தோற்கடித்தான், அவன் என்னை வஞ்சித்தான் என்று எழும் எண்ணங்களுக்கு ஒருவன் இடங்கொடுப்பானேல் பகை அவனைவிட்டு அகலாது.

அவன் என்னை அவமதித்தான், அவன் என்னை அடித்தான், அவன் என்னைத் தோற்கடித்தான், அவன் என்னை வஞ்சித்தான் என்று எழும் எண்ணங்களுக்கு ஒருவன் இடங்கொடாதிருப்பனேல் பகை அவனை விட்டகலும், ஏனெனில் பகை பகையால் எக்காலத்தும் விலகுவதில்லை. பகை அன்பால் விலகும்.

எவனொருவன் ஐம்புல நுகர்ச்சி தென்படா பெருந் திண்டியிலும், சோம்பலிலும், விவேகக் குறைவிலும் இருந்து சிற்றின்பத்தில் கண்ணாந்து நிற்பவன் காற்றால் மோதுண்டு விழும் மரத்தைப்போல் மாரனால் கீழ்ப்பட்டு மடிவான்

எவனொருவன் சுருசுருப்பிலும், ஜாக்கிரதையிலும், விடாமுயற்சியிலும் நின்று புலன்கள் தென்படு நுகர்ச்சியினின்று தென்புலத்தானாகின்றானோ அவனைக் காற்றானது மலையை அசைக்காதது போல மாரனுடைய மாறுபடுச் செய்கைகளால் அவனை மயக்கலாகாது.

சீலங்களைக் கவனியாதும், பாவத்தை ஒழிக்காதும், சத்தியதரிசனமாம் நான்குவாய் மெய்களை அறியாதும் ஒருவன் இருப்பனேல் அவன் காஷாயமாம் சீவரத்தை தறிக்கத்தகுந்தவனல்லன்.

சீலங்களைப் பெற்று பாபத்தை ஒழித்து நீதியில் நின்று சத்திய தரிசனமாம் நான்கு வாய்மெய்களை அறியும் சக்தியுள்ள ஒருவன் இருப்பனேல் அவன் காஷாயமாம் சீவரத்தை தறிக்க உத்தமனாவான்.

எவனொருவன் சத்தியத்தை அசத்தியமாகவும், அசத்தியத்தை சாத்தியமாகவும் கருதுகின்றோனோ அவனுக்கு சத்தியம் விளங்காது வீண் அவாவையே பின்பற்றி விரோதியாக நிற்பான்.

எவனொருவன் சத்தியத்தை சத்தியமாகவும், அசத்தியத்தை அசத்தியமாகவும் கருதுகின்றானோ அவனுக்கு சத்தியம் விளங்கி பற்றற்ற நிலையை பற்றி சகலருக்கும் அன்பனாக விளங்குவான்.

செவ்வனே திருத்திக் கட்டப்படாத கூறைவீட்டுள் மழைத்துளிகள் ஒழுகுதல் போல் ஞான விழிப்பும், விசாரிணையுமற்ற மனத்தின் வழியாய் காமக்குரோதாதிகள் நுழையும்.

செவ்வனே திருத்தி கட்டப்பட்ட கூறைவீட்டுள் மழைதுளி நுழையாதது போல் ஞானத்தில் சதா விழிப்பும், ஜாக்கிரதையுமுள்ள மனத்தின் வழியாய் காமக்குரோதாதிகள் நுழைய மாட்டாது.

சீலமற்றவன் துக்கத்தில் ஆழ்ந்தி கிடப்பான். அவன் செய்துவந்த பாபங்களை நினைத்து மிக்க வியாகூலமடைவான். அவன் பாபவழியை அநுசரிக்கும் போது அதிக துக்கமடைகிறான்.

சீலத்தை அனுஷ்டிப்பவன் ஆனந்தத்திலிருப்பான். அவன் செய்துவந்த நற்கன்மங்களை நினைத்து மிக்க ஆனந்தமடைவான். அவன் நல்ல வழியை அநுஷ்டிக்கும் போது சொல்லவொண்ணா ஆனந்தமடைகின்றான்.

சிந்தனையற்ற ஒருவன் பெருத்த நீதி வசனங்களை பிறருக்கு ஓதியும் தான் அந்நீதிகளின்படி நடவாது காமம், வெகுளி, பொறாமை இவற்றில் இருப்பானாயின் அவன் ஏனையோரது மாடுகளை கணக்கெடுக்கும் இடையனாவான். விவேகி ஒருவன் ஒரு சிறு நீதி வசனத்தைப் பிறருக்கு போதித்து காமம், பகை, குடிகெடுப்பு, வஞ்சினம் இவைகளற்று நீதியில் நின்று மன அமைதி பெற்று, உலக பற்றற்றுவருவனேல் அவனே சிரமண நிலைக்கு சமமாவான்.

**பண்டிதவர்க்கம்**

சகோதிரர்களே! அறிவுடையோன் ஒருவன் நித்திய வழியைக் காட்டி அநித்திய வழிகளைப் போக்கும்படி போதிப்பானேல் அவன் வழியைப் பின்தொடருங்கள்.

புத்திமதி கூறவும், நன்மார்க்கத்தை போதிக்கவும் அவனுக்கிடங் கொடுங்கள், கெட்டவை இவை என தெளிவரக் காட்டப்படும். அவன் நல்லோரால் புகழப்பட்டு தீயோரால் இகழப்படுவான். தீயோருடன் நேசம் பாராட்டாதீர்கள். கீழோராம் அவிவேகிகளை அணுகாதீர்கள். மேலோராம் விவேகிகளின் நேசம் பாராட்ட பன்முறை அணுகுங்கள்.

அறிவுடையோர் புகழ்ச்சியாலும் இகழ்ச்சியாலும் நிலைகுலையார்கள். அவர்களோ சதா நீதியுணர்வினின்று அலையற்ற தடாகம் போல் ஆறுதலுற்றிருப் பார்கள்.

**பிராஹ்மணவர்க்கம்**

சகோதிரர்களே! எவனொருவன் அவாவை அறுத்து துக்க சாகரமென்னும் பெருங்கடலை நீந்தி கரை சேர்ந்து அமிர்தமாம் நிருவாணத்தை அடைந்தானோ அவனே பிராஹ்மணன்.

எவனொருவன் அறிவுடையோனாகவும் குற்றமற்றவனாகவும் ஒரே நிலையானவனாகவும் காமமற்றவனாகவும் மேலான பதவியை அடைந்தவனு மாயிருக்கின்றானோ அவனே பிராஹ்மணன்.

பகலில் சூரியனும், இரவில் சந்திரனும், கவசத்தால் போர்வீரனும், தியானத்தால் பிராஹ்மணனும் பிரகாசிப்பது போல் ததாகதர் இரவும் பகலும் சதா விழிப்புள்ளோ ரகத்து பிரகாசிக்கின்றார்.

பாபத்தினின்று விலகினபடியால் பிராஹ்மணனென்றும், சாந்த வாழ்க்கையில் நடப்பதால் சமணனென்றும், பாப குற்றங்களை விலக்கிவருகிற படியால் பிரவர்ஜிதாவென்று அழைக்கப்படுவான்.

மனோ வாக்கு காயத்தால் ஜீவர்களுக்கு யாதொரு துன்பமும் செய்யாதிருப்பவன் எவனோ அவனே பிராஹ்மணன்.

கடுகை ஊசியின் நுனியிலிருந்து விழச்செய்வதுபோல் எவனொருவன் கோபம், பொறாமெய், பெருமெய், பகை இவைகளை விட்டொழிக்கின்றானோ அவனே பிராஹ்மணன்.

யாவர்பேரிலும் குற்றங் குறை கூறாதும், கொலை செய்யாமலும், கொலை செய்ய ஏதுவாகாதிருப்பவன் எவனோ அவனே பிராஹ்மணன்.

ஆவலோடு அலைபவர்களின் மத்தியில் ஆவலில்லாமலும், கோபமுள்ளவர்களின் மத்தியில் கோபமில்லாமலும், பொய்யர்கள் மத்தியில் மெய்யர்களாகவும் வாழ்கின்றவன் எவனோ அவனே பிராஹ்மணன்.

துன்பஞ் செய்வோர்களை துன்பஞ்செய்யாது துன்பமின்றியும், வஞ்சகமுற்றோர் மத்தியில் வஞ்சமின்றியும் வாழ்பவன் எவனோ அவனே பிராஹ்மணன்.

ஓ சகோதிரர்களே! எவனொருவன் இவ்வுலகில் நல்லவை, தீயவை இவைகளுக்கு அதீதப்பட்டவனும் துக்கம், துற்குணம், பாபம் என்னும் கட்டுகளினின்று விலகினவன் எவனோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் பரிசுத்தமும் மன அமைதியும் துராசையும் அற்றிருக் கின்றானோ அவனே பிராமணன்

எவனொருவன் சேறுள்ள பாதையையும், கடக்கமுடியாத உலகத்தையும், இவ்வுலகத்தின் பெருந் துக்கத்தையுங் கடந்து அக்கரையைச் சேர்ந்து கபடமற்றவனும், திருப்தியும் யோசனையுமுடையவன் எவனோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் இவ்வுலகில் உலகபற்றற்றவனும், துறவியாகத்திரிபவனும், மோகமற்றவனுமாக விருப்பவனெவனோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் இன்பத்திற்கும், சுகத்திற்கும் இடங்கொடாதும், சாந்தரூபியாயும், பாப உலகத்தை வென்ற வீரனாகவும் இருக்கின்றானோ அவனே பிராம்மணன்.

பிறவிக்கு ஆளாக்குமார்க்கம் இது, பிறவியை வெல்லும் மார்க்கம் இது எனவும் தெரிந்து சகலபற்றும் அற்ற பகவனாம் புருஷ உத்தமன் பற்றிய பற்றைப் பற்றினவனெவனோ அவனே பிராம்மணன்

உலக பற்றற்றவனும், ஏழையுமாய் இருப்பவன் எவனோ அவனே பிராம்மணன்.

முற்பிறப்புகளைத் தெரிந்தவனும், மோக்ஷம் இது நரகமிதுவென அறிந்தவனும், பிறப்பற்றவனும், பரிபூரண ஞானியும், பெருந் துறவியும், பரிசுத்தனுமானவன் எவனோ அவனே பிராம்மணன்.

**தண்டவர்க்கம்**

ஓ சகோதிரர்களே! இவ்வுலகில் மனுக்கள் தண்டனைக்கு நடுங்குகின்றனர். மரணத்திற்குப் பயப்படுகின்றனர். நீங்கள் எல்லோரும் அவர்களைப் போன்றவர்களன்றோ. ஆகையால் கொலை புரியாதிருங்கள். கொலைக்குக் காரணக்கர்த்தர்களாக இராதிருங்கள்.

இவ்வுலகில் மனுக்கள் தண்டனைக்கு நடுங்குகின்றனர். பிராணனை காப்பாற்ற முயல்கின்றனர். நீங்கள் எல்லோரும் அவர்களைப்போன்றவர் களன்றோ. ஆகையால் கொலை புரியாதிருங்கள். கொலைக்குக் காரணகர்த்தர் களாக இராதிருங்கள்.

தன்சுகத்தைக் கோறும் ஒருவன் அதேசுகத்தைக் கோறும் ஏனைய ஜீவர்களை தண்டியாதும், கொலை புரியாதும் வருவனேல் அவன் சுகத்தை அடைவான்.

எவரையும் கடுஞ்சொற்களால் சுடாதிருங்கள். ஏனெனில் கடுஞ்சொற் களே உங்களைச் சுட திரும்பும். கோபமான வார்த்தை துன்பத்தை உண்டாக்கு வதுடன் பெரும் விபத்தையும் நேரிடச்செய்யும்.

வெங்கல மணியின் நாக்கை எடுத்துவிட்டால் சப்தம் இல்லாமல் போமன்றோ. அதுபோல் உங்களின் இராக துவேஷ மோகங்களைத் தவிர்த்து விட்டால் அமிர்தமாம் நிப்பானத்தை அடைவீர்கள். விவாதம் உங்களை அணுகா.

இடையனொருவன் தன் கோலின் உதவியினால் பசுக்களை சாலைக்கு நடத்திச்செல்வனோ அதுபோல் வயதும், மரணமும் ஜீவர்களை நடத்திச் செல்கின்றன.

இவ்வுலகில் ஒருவன் அம்மணமாய் இருந்தாலும், ரோமங்களைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தாலும், தினேதினே நீரில் முழுகினாலும், பசியால் வருந்தினாலும், பூமியில் நெடுகப் படுத்திருந்தாலும் , கற்களால் தேகத்தை வாதை செய்தாலும் அசையாது உட்கார்ந்திருந்தாலும் அவாவை வெல்லாதவன் ஒருக்காலும் பரிசுத்தனாகமாட்டான்.

பழகிய குதிரையானது சாட்டையால் தொட்டவுடன் சுருசுருப்பாய் ஓடுமோ அதுபோல் உண்மெயாலும், நற்குணத்தாலும், முயற்சியாலும் தியானத்தாலும் ஒருவன் பெருங்கடலாகிய துக்க சாகரத்தை வென்று ததாகத்நிலையை அடைவான்.

கிணற்றுநீரை வேண்டிய இடங்களுக்குக் கொண்டுபோவது போலும், அம்பை தன் மனதிற்கு இசைந்தவாறு வளைப்பதுபோலும், மரக்கட்டையை மனவிச்சைப்படி செப்பனிடுவது போலும் அறிவுடையோர் தங்களை ஒழுங்குபடுத்திக்கொள்ளுவார்கள்.

**லோகவர்க்கம்**

ஓ சகோதிரர்களே! அநீதிமார்க்கத்தை அனுசரியாதீர்கள். யோசனையற்று வாழாதீர்கள். தப்பான மார்க்கங்களை பின் தொடராதீர்கள்.

நீதிமார்க்கத்தை அனுசரியுங்கள். பாபமார்க்கத்தை விலக்குங்கள். ஏனெனில் நீதியால் இவ்வுலகில் பாக்கியவான்களாகலாம்.

இவ்வுலகம் நீர்க்குமிழியையும், கானலையும் ஒத்தது என அறியுங்கள். அறிந்த ஒருவனிடத்தில் இமயனென்னுங் காலன் அணுகமாட்டான்.

சகல ஆடம்பரம் பொருந்திய இவ்வுலகை சக்கரமென நினையுங்கள் அறிவுள்ளோர் அதனின்று விலகிக்கொள்வர். அறிவிலார் அதனைக் கவர்ந்து நிற்பர்

எவனொருவன் முன் கவலையற்றவனாயிருந்து பின் தெளிந்து அறிவுடை யோனாகின்றானோ அவன் மேகத்தால் கவரப்படாத சந்திரனைப்போல் உலகில் பிரகாசிப்பான்

இவ்வுலகம் இருளாய் இருக்கின்றது. சிலரால் பார்க்கமுடியும். வெகு சிலர் வலையினின்று தப்பும் பட்சி போல் உலகினின்று தப்பித்துக் கொள்வார்கள்.

தருமசிந்தை இல்லாதவன் தெய்வ நிலையை அடையமாட்டான். அறிவற்றவன் எவனோ அவன் ஈகையைப்பற்றி இகழ்வான். அறிவுள்ளோர் ஈகையைப் பற்றிப் புகழ்வார். அதே ஈகையில் வாழ்வார்கள்.

உலகையே ஆள்வதைவிட, உலகில் கீர்த்தி பெருவதைவிட நிர்வாண பாதையாம் முதற்பாதையாகிய ஸ்ரோதாபதி மார்க்கத்தை அடைவதே சிரேஷ்டம்.

**பிக்குவர்க்கம்**

ஓ சகோதிரர்களே! கண்விஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். செய்விஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். நாசிவிஷயத்தில் ஜாக்கிரதை பாயிருக்கல் உத்தமம். நாவுவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். தேகவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். வாக்குவிஷயத்தில்

ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். எண்ண விஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். சகல விஷயத்திலும் ஜாக்கிரதையா இருத்தல் உத்தமம். சகல பாயத்தலும் ஜாக்கிரதையாயுள்ள பிக் சகலதுக்கத்தினின்று விலகன் வனாவான்.

எவனொருவன் கையை காத்துக்கொள்பவனாயும், காலைக் காத்துக் கொள்பவனாயும், வாக்கைக் காத்துக்கொள்பவனாயும், சகலத்தையும், அடைந்த வனாயும், ஏகாந்தமானவனாகவும், அறுதலையுடையவனாகவும் இருக்கிறானோ அவனே பிக்க்ஷு.

நாவைக் காத்துக்கொண்ட பிக்கு ஒருவன் அறிவுடனும், சாந்தத்துடனும் பேசுவான். ஞானத்தின் அர்த்தங்களையும், நீதியின் தெளிவையும் போதிக்கும் பிக்குவின் வார்த்தை அமிர்தமாக இருக்கும்.

நீதியின் பிரகாரம் நடப்பவன் ஒருவனோ அவன் நீதியில் ஆன்ந்த்தார் அடைகின்றான். நீதியில் தியானத்தை செலுத்துகின்றவன் நதியின் நடக்கின்றான். அவ்வகைத்தான பிக்கு நீதியினின்று பிரழான்.

தனக்கு கொடுக்கப்பட்டவைகளை அலட்சியஞ்செய்யாமலும், யாவரையும் விரோதியாமலும் இருக்கட்டும். பிறனை விரோதிக்கின்ற துறவி சித்தசாந்த நிலையை அடையமாட்டான்.

எவனொருவன் நாமரூபமாம் தேகத்தையும், சித்தத்தையும் ஒருபொருட்டாக மதியாதும், மேலும் மேலும் பொருள் சேர்க்கும் அவாவில்லாதும், மேலான பதவியை நாடுகின்றானோ அவனே பிக்கு.

அன்பையே சதா சாதிப்பவனும், புத்தரது தன்மத்தில் அடங்கினவனுமான பிக்கு அமிர்தமாம் நிப்பானத்தை அடைவான்.

ஓ பிக்குகளே! இப்படகை காலிசெய்யுங்கள். அப்படிச் செய்வதால் படகானது சுருக்காகச் செல்லும், காமத்தையும் பொறாமெயையும் விட்டகலுங்கள். நிப்பானத்தை அடைவீர்கள்.

ஓ பிக்குகளே! தியானியுங்கள். சிரத்தையற்றவர்களாய் இராதீர்கள். இன்பத்தைத் தரும் வழிகளுக்கு உங்களுடைய எண்ணங்களை செலுத்தாதீர்கள்.

ஏனெனில் நீங்கள் சிரத்தையற்றும் உங்களை குடிகெடுக்கும் நெஞ்சத்துக்கு இடந்தருவீர்களாகில் துக்கமென்னும் அக்கினியில் சிக்கி வாதைப்படல் வேண்டும்.

அறிவில்லாவிடத்து தியானங் கிடையா. தியானமில்லாவிடத்து அறிவு கிடையா. எவனொருவன் அறிவோடும், தியானத்தோடும் இருக்கின்றானோ அவனே நிப்பான பதவிக்கு சமீபத்திலிருப்பவனாவன்.

தேகத்தின் நான்கு பூதங்களின் உற்பவத்தையும், இவைகளின் அழிவையுங் கண்டவன் எவனோ அவன் ஆனந்தத்தையும் சுகத்தையும் தரும் அழிவிலா நிப்பானத்தைப் பெற பாத்தியதை உடையவனாவான்.

**சுகவர்க்கம்**

ஓ சகோதிரர்களே! சுகத்துடன் வாழ உங்களுக்கு மனம் வாய்க்குமேல் உங்களை வெறுப்பவர்களை நீங்கள் வெறுக்காமல் அவர்கள் மத்தியில் வாழ்வீர்களாக. உங்களை வெறுப்பவர்களின் மத்தியில் நீங்கள் வெறுப்பின்றி வாழ்வீர்களாக. துன்பத்தை அனுபவிப்போர் மத்தியில் நீங்கள் துன்பமின்றி வாழ்வீர்களாக.

சுகத்துடன் வாழ உங்களுக்கு மனம் வாய்க்குமேல் வஞ்சகமுள்ளோர் மத்தியில் நீங்கள் வஞ்சகமின்றி வாழ்வீர்களாக. வஞ்சகத்தால் வாதைப்படுவோர் மத்தியில் வஞ்சமின்றி வாழ்வீர்களாக.

காமமே ஓர் பெருந்தீ. பகையே ஓர் கொடிய விஷம். தேகமே ஒரு பெருந் துன்பம். ஆனால் பற்றற்று ததாகத நிலையை அடைவதே பரம சுகம்.

நோய்களில் கொடிது பசி. துன்பங்களில் கொடிது தேகம் என அவ்வந்தரங்க சத்தியத்தை அறிந்தோனெவனோ அவனே பரமசுகத்தைக் கண்டவனாவன்.

ஆரோக்கியமே பரமலாபம். திருப்த்தியே பெருஞ்செல்வம். நன்மார்க்க நம்பிக்கையே விசேஷ சம்பத்து. நிப்பானமே பேரானந்தம்.

துறவுபூண்டு சாந்தநிலையின் சுகத்தைக் கண்டவனெவனோ அவன் பயமும், பாபமுமற்றவனாய் நீதியில் சதாஜாக்கிரதையுடனிருந்து நீதியின் சுகத்தில் ஆனந்தித்திருப்பான்.

அரியர்களை (அறஹத்துக்களை)த் தரிசித்தல் புண்ணியம். அவர்களுடன் வாழ்தல் சதாசுகத்தைத் தரும். ஒருவன் கீழோர்களாம் துன்மார்ககர்களை தரிசியாதிருப்பானேல் அவன் சத்தியமாகவே சுகம் பெறுவான்.

கீழோர்களுடன் ஒருவன் பழகிவருவனேல் அவன் மிக்க துன்பத்தை அநுபவிப்பான். கீழோர்களிடத்தும், விரோதிகளிடத்தும் நேசம் பாராட்டல் சதா துக்கமே. மேலோர்களாம் நன்மார்க்கமுள்ளோரிடத்தில் ஒருவன் நேசம் பாராட்டி வருவனேல் அவன் தெளிவடைவதுடன் சுகம் பெறுவான்.

ஆகையால் ஒருவன் மேலோர்களிடத்தும், விவேகிகளிடத்தும், பண்டிதர்களிடத்தும், பொருமையாளரிடத்தும், போதனாசிரியர்களிடத்தும், அறஹத்துக்களிடத்தும் அணுகி பழகவேண்டும்.

**மார்க்க வர்க்கம்**

ஓ சகோதிரர்களே! மார்க்கங்களில் அரிய அஷ்டாங்க மார்க்கமே சிறந்தது. சத்தியங்களில் சதுர்வித சத்தியமே விசேஷித்தது. ஒழுக்கங்களில் காமமற்றிருத்தலே சிரேஷ்டம். மனுக்களில் அன்பின் மிகுத்த பார்வை யுள்ளோரே உத்தமமானவர்.

பரிசுத்தத்திற்கு வழி இதுவே, இதைவிட வேறுவழி கிடையா. இவ்வழியைப் பற்றி நில்லுங்கள். ஏனைய வழிகள் மாரனால்

ஏமாற்றும் வழிகளே.

நீங்கள் இவ்வழியின் பிரகாரம் பழகிவருவீர்களாகில் துக்கத்தினின்று விடுபடுவீர்கள். சதையில் தைத்த முள்ளை பிடுங்கி எறிந்துவிடுங்கள்.

உங்களையே நீங்கள் சீர்படுத்திக்கொள்ளுங்கள். ததாகதர் போதிக்கும் ஆசான் இம்மார்க்கத்தை பின்பற்றி நடக்கும் அறிவுடையோனிடம் மாரன் அணுகான்.

அநுசரிக்க வேண்டியவை அஷ்டாங்கமார்க்கம்.

3. சம்யக் வசனா நல்வசனம்

4. சம்யக் கர்மந்தா நற்செய்கை

5. சமயக் அஜீவா நல்வாழ்க்கை 1. சீலம் நீதி.

6. சம்யக் வீரியா நல்ஊக்கம்.

7. சம்யக்ஸ்மிருதி நல்எண்ணம்.

8. சம்யக் சமாதி நல் அமைதி. 2. சமாதி மன ஆறுதல்

9. சம்யக்திருஷ்டி நற்காட்சி

10. சம்யக் சங்கல்ப நற்சிந்தை. 3. பிரஞ்ஞை ஞானம்.

விலக்கவேண்டியவை.

3. மிஸ்சாவசனா துர்வசனம்.

4. மிஸ்சாகர்மந்தா துற்செய்கை

5. மிஸ்சா அஜீவா துன்வாழ்க்கை 1. அசீலம் அநீதி

6. மிஸ்சா வீரியா துன்முயற்சி

7. மிஸ்சாஸ்மிருதி துன் எண்ணம்.

8. மிஸ்சா சமாதி மோஹம் . மோஹம். 2. மோஹம்

9. மிஸ்சாதிருஷ்டி துற்காட்சி

2... மிஸ்சாசங்கல்ப துற்சிந்தை 3. அஞ்ஞானம்.

சதுர் சத்யம் - 1. துக்கசத்யா. 2. துக்க சமூத்ய சத்யா, 3. துக்கநிரோத சத்யா. 4. துக்க நிரோதாகாமினி பிரதிபதசத்யா.

நான்கு வாய்மெய் - 1. துக்கம். 2. துக்கோற்பத்தி . 3. துக்க நிவாரணம். 4. துக்க நிவாரண மார்க்கம்.

மாரன் - மாரன் அணுகான் 1. தன்ஹா - வேட்கை . 2. அறட்தி - குரோதம். 3. ராகா - காமம்.

உலகில் தோற்றும் பொருட்கள் யாவும் கெடும் என அறிந்தவன் துக்கத்தைக் கண்டு இஃதே அதற்கு மார்க்கமென அறிவன்.

மனோவாக்குக் காயத்தால் யாதொரு குற்றமும் செய்யாதிருக்கக் கடவன். இம்மன்று வழிகளைத் திருத்தி நன்மார்க்கத்தை விருத்தி செய்து வருவனேல் அறஹத்துக்கள் அடையும் நிலையை அடைவான்.

ஓ! சகோதிரர்களே! மனோவாக்குக்காயத்தால் யாதொரு குற்றமுஞ் செய்யாதிருக்கக்கடவன். இம்மூன்று வழிகளைத் திருத்தி நன்மார்க்கத்தை விருத்தி செய்துவருவனேல் அறஹத்துக்கள் அடையும் நிலையை அடைவான்.

காயத்தால் தோற்றுவ மூன்று - 1. கொலை. 2. களவு, 3. காமம்.

வாக்கால் தோற்றுவ நான்கு. 4. பொய் 5. கோட் சொல்லுதல். 6. கடுஞ்சொல் 7. வீண் வார்த்தை

மனத்தால் தோற்றுவ மூன்று.- 8. துராசை. 9. படுபகை. 10. பொல்லாக் காட்சி.

எழுந்திருக்கவேண்டிய காலங்களில் எழாதவனும், ஒன்று செய்ய வேண்டிய காலங்களில் செய்யாதவனும், இளமெயும் வலிமெயுமிருந்தும் நிறம்ப சோம்பலும் மந்தபுத்தியுள்ளவனும் மனோதிடமற்றவனுஞ் சபல சித்தமுடையவனும், பேராசை ரூபியும், பெருந்திண்டிக்காரனும் தெளிவு பெரு மார்க்கத்திற்கு பாத்திரவானாக மாட்டான்.

காமமென்னுங் காட்டை வெட்டி சமமட்டமாக்கிவிடுங்கள். ஒரு மரமேனுங் வளரவிடாதீர்கள். காமமென்னுங் காட்டினால் விளையுந் தீங்கோ கொரூரமானது. காட்டையும் வேறோடே வெட்டி சமமாக்கிவிட்ட போதன்றோ பிக்குக்களே நீங்கள் பயமின்றி காட்டின் வழி செல்ல முடியும்.

எதுவரையில் ஒருவன் ஒரு ஸ்திரீயின் பேரில் அவாவை சிறிதளவேனும் செலுத்தி அந்த அவாவினின்று விட்டகலாதிருக்கின்றானோ அது வரையில் அவன் மனம்

அடிமைத்தனத்தினின்று விலகாது. கன்றானது தன் தாயின் பாலை அடிக்கடி அருந்த ஆவல் கொள்ளுவது போலாகும்.

**தன்ஹா வர்க்கம்**

ஓ சகோதிரர்களே! அறிவிழந்தவனிடத்தினின்று உதிக்கும் அவாவானது கொடியைப் போல் படரும். அவன் காட்டிலுள்ள குரங்கானது ஒரு மரத்தை விட்டு வேறொரு மரத்தைத் தாவி பிடிப்பது போல் ஒரு பிறவியினின்று மறுபிறவிக்குச் செல்வான்.

அவாவை வென்ற ஒருவனை உலகத்தார் வெல்லமுடியாது. துக்கமானது தாமரை இலையின் மேல் விழுந்த நீர் துளிகள் விழுந்துவிடுவது போல நீங்கிவிடும். ஒரு மரத்தை வெட்டி விடினும் அதன் வேறிருப்பதால் திரும்ப வளருமன்றோ. வேறையே வெட்டிவிடின் மரம் உதிக்க ஏதுவுண்டா. அவா அற்றவிடத்து துக்கம் ஒழியும்.

அவாவை இன்பத்தின் வழியே ஒருவன் செலுத்துவானாயின் அவனை முப்பத்தியாறு கூர்கால்களால் கொண்டுபோகப்பட்டு தப்புவழியில் சிக்கின அவனை அலைகள் அடித்துச்செல்லும். (காமக்குரோதாதிகள்)

அக்கடற்கால்கள் பலவிடங்களில் ஓட காமக்குரோதாதிகள் என்னும் படர்கொடியானது முளைத்து நிற்கும். அப்படர்கொடி துளிர்த்து வருவதைக் காணில் அறிவால் அதன் வேறை வெட்டித்தள்ளுங்கள்.

ஜீவர்கள் கோறும் இன்பங்களின் பெருக்கமோ அளவிடக்கூடாததும், திருப்தியற்றதுமாயிருக்கின்றன. காமக்குரோதாதிகளால் சிக்குண்டு இன்பத்தை நாடுவதால் ஜீவர்கள் மாறி மாறி பிறப்பதும் இறப்பதுமாய் இருக்கின்றனர்.

ஜீவர்கள் அவாவால் செலுத்தப்பட்டு கண்ணியில் அகப்பட்ட முயல்போல் இங்குமங்கும் அலைகின்றனர். ஜீவர்கள் பலபல பற்றுக்களால் கட்டுண்டு பற்பல துன்பங்களை பலப்பல பிறப்புகளில் அனுபவித்துமாளாமல் பிறந்தும் இறந்தும் வருகின்றனர்.

ஜீவர்கள் அவாவால் செலுத்தப்பட்டு கண்ணியில் அகப்பட்ட முயல் போல் இங்குமங்கும் அலைகின்றனர். ஆகையால் சகோதிரர்களே! காமக்குரோதாதி களினின்று விலகி அவாவிற்கு இடந்தராது நில்லுங்கள்.

ஓ! சகோதிரர்களே! இரும்பாலாய விலங்குகளை ஒருபொருட்டாக மதியார். மனைவி, புத்திரர்கள், பொன் இவைகளினாலாய விலங்கே மிக்க பயங்கரமானது என்பர். அறிவுடையோர்களால் பயங்கரமானதென மதிக்கப்படும் விலங்கினின்று விடுபடுவது மிக்க கடினம். ஆயினும் அதினின்று விடுபட்டால் ஜீவர்கள் உலகைத்துறந்து கவலையற்று அவாவற்று இன்பத்துக்கிடந்தராது நிற்பர்.

சிலந்திப்பூச்சானது தன் நூலால் நெய்த வலையின் மத்தியிலிருந்து ஈயாவது, பட்டுப்பூச்சாவது தனது வலையில் விழுந்தால் திடீரென அவைகளின் பேரில் பாய்ந்து அவைகளின் சாரத்தை உரிந்துவிட்டபின் பழைய இடத்திற்கு சென்று தங்குவதுபோல் காமவலையில் அகப்பட்டவர்கள் பொறாமெயால் சீரழிந்தும், கோபத்தால் பைத்தியம் பிடித்தும் அவர்களாலேயே தேடிக்கொண்ட அவாவென்னும் வெள்ளம் அடித்துச்சென்று கடக்க முடியாது விழிப்பர். அவாவை அறுத்துவிடுவார்களாயின் கடையில் உலகைத்துறந்து கவலையற்று இன்பத்துக்கிடந்தராது நிற்பர்.

ஒருவன் சந்தேகத்தால் அலைபவனாகவும், காமமுள்ளவனாகவும், இன்பத்திற்கே அண்ணாந்திருப்பவனாகவும் இருப்பானாயின் அவனது அவாவானது விருத்தியாகி அவாவின் விலங்கால் கட்டுப்பட்டவனாவான்.

பூரண ஸ்திதியை அடைந்தவனும், பாபமற்றவனுமாய் இருப்பவன் எவனோ அவன் வாழ்க்கையின் முட்களை உடைத்தெரிந்தவனும் இனி தேகத்துடன் வாழ பாத்தியதை உடையவனும் ஆகமாட்டான்.

சகலத்தையும் வென்ற ஒருவன் சகலமும் அறிந்தவனாவன். சகலத்தையும் ஒழித்த ஒருவன் சகல அவாக்களினின்று விலகினவனாவன். சகலமும் உணர்ந்து ததாகதனான ஒருவன் தான் கண்ட காட்சியை யாவருக்குப் போதிப்போமென தேடித்திரிவன்.

சகலதானங்களிலும் நிதானமே சிரேஷ்டம். சகல இன்பங்களிலும் நீதியின் இன்பமே விசேஷித்தது. ஆனந்தங்களில் ஈகையிலும், அன்பிலும் ஆனந்திப்பதே துக்கம் ஒழிந்துபோம்.

களைகளால் பயிர்கள் நாசமடைகின்றன. காமத்தால் ஜீவர்கள் அழிகின்றனர். ஆகையால் காமத்தையே வெட்டி எறிந்து விடுவதே சுகத்தைத் தரும்.

களைகளால் பயிர்கள் கெடுகின்றன. பொறாமெயால் ஜீவர்கள் நாசமடைகின்றனர். ஆகையால் பொறாமெயற்று சாந்தத்துடன் வாழ்வதே பெரும்பலனைத் தரும்.

களைகளால் வயல்கள் நாசமடைகின்றன. பெருமையால் ஜீவர்கள் அழிகின்றனர். ஆகையால் பெருமையற்று சமதிருஷ்டியுடன் வாழ்வதே பரமசுகத்தைத் தரும்.

களைகளால் வயல்கள் கெடுகின்றன. துராசையால் ஜீவர்கள் நாசமடைகின்றனர். ஆகையால் துராசையற்றிருப்பதே சுகத்தை விளைக்கும்.

**புட்பவர்க்கம்**

ஓ! சகோதிரர்களே! வண்டானது மலரிலுள்ள மணத்தையேனும் அதன் அழகையேனுங் கெடுக்காமல் தேனை உண்டு செல்லுவதுபோல் ஜீவர்கள் உலகத்தில் வாழ்க்கைப் பெறவேண்டும்.

விவேகி ஒருவன் அயலாரின் தாருமாறான நடத்தைகளைக் கண்டாயினும் அவர்களின் குற்றாகுற்றங்களை நோக்கியாயினுங் கவலையுராமல் தான் செய்த குற்றங்களைப்பற்றியும், தன்னுடைய சோர்வைப்பற்றியும் கவலையறுவான்.

ஒரு அழகிய புஷ்பமானது பலவருணங்கள் அமைந்தும் மணமற்றிருப்பதுபோல் ஒருவன் இன்பமானதும் பிரயோஜனமற்றதுமான போதனைகளைக்கூறி அதன்படி நடவாதிருப்பன்.

ஒரு அழகிய புஷ்பமானது பலவருணங்கள் அமைந்தும் பரிமளிப்பது போல் வருவன் இன்பமாகவும், பிரயோஜனமுள்ளதுமான போதனைகளைக் கூறி அதன்படி நடப்பவனாகியும் இருப்பான்.

பலபுஷ்பங்களைக்கொண்டு ஒரு மாலைக்கட்டுவது போல் பல நற்கருமங்கள் செய்து வந்தவன் புண்ணிய புருஷனாக அவதரிப்பான்.

புஷ்பங்களின் மணமானது காற்றின் முகத்தில் அதிதூரஞ்செல்லாது.

ஆனால் புண்ணிய புருஷர்களின் மணமானது காற்றின் முகத்தில் அதிகாரமாகச் செல்லும் புண்ணியன் மணம் எங்கும் வியாபித்து வீசும்.

சந்தணம், தாமரைப்புஷ்பம் இவைகளின் கந்தமோ மிக்க மதிக்கத் தக்கது. அனால் இவ்வாசனைகளுக்கெல்லாம் அத்தப்பட்டது புண்ணியத்தின் மணமே.

சந்தணம், தாமரைப்புஷ்பம் இவைகளினின்று வெளிவரும் கந்தமோ அற்பமானது. ஆனால் புண்ணியர்களின் மணமோ அளவிடக்கூடாததுமான தெய்வ மணமாம்.

புண்ணிய மணம் வீசும் பெரியோர்களிடத்தில் மாரன் அணுகான்.

சேற்றினின்று பரிமளத்துடன் தாமரை முளைத்து இன்பந்தருவது போல் பேரவாவாகும் இருளில் அறிவுமயக்கி நிற்கும் மக்களுக்கு புத்த தன்மமாம் மெய்யறந் தோன்றுங்கால் பேரறிவு விளங்கும்.

**பாபவர்க்கம்**

ஓ! சகோதிரர்களே! கெட்ட எண்ணங்களைக்கொள்ளாமலும், கெட்ட செய்கைகளைச் செய்யாமலும் ஒழித்தலே நலமாகும். ஏனென்பரேல், சொற்பநேரத்தில் கெட்ட

எண்ணங்களை எண்ணுவோனும், கெட்ட செய்கைகளைச்செய்வோனும் நீடியதுக்கத்தை அனுபவிக்கின்றான்.

நல்ல எண்ணங்கொள்ளுவோனும், நல்ல செய்கைகளைச் செய்வோனும் சதா சுகத்தை அனுபவிக்கின்றான். அவன் தன் நற்செய்கைகளுக்கு ஆனந்தமடைவான்.

பாபிக்குக் குற்றம் தேனைப்போலிருக்கும். அதன்பலனை உணரும் வரையில் இன்பமாகவே நோக்குவான். அதன் பலனை உணர்ந்தபின்பு பாபமென்று காண்பான். அதுபோல் புண்ணியவான் தன்மத்தின் பலனை உணரும் வரையில் அதனை பாரமாகவும் கஷ்டமாகவம் நோக்குவான். அதன் பலனும் சுகமும் விளங்கிய போது ஆனந்தத்தைக்கண்டடைவான்.

உங்களிடத்தில் தீவினை அணுகாதென்று அஜாக்கிரதையில் இருக்க வேண்டாம். சிறு துளிகள் சேர்ந்து பெருவெள்ளமாவதுபோல் சிறுக சிறுக சேர்ந்த தீவினைகள் பெருகி நிறம்ப துக்கத்தில் ஆழ்த்திவிடும்.

உங்களிடத்தில் நன்மெய் அணுகாதென்று விலகி நிற்காதீர்கள். உள்ள நன்மெயின் செயல்களே சிறுதுளிகள் பெருவெள்ளமாவதுபோல் நாளுக்குநாள் பெருகி உங்களை நிறம்ப சுகத்தில் மூழ்கவைக்கும்.

ஓ சகோதிரர்களே! விழித்தவனுக்கு இரவு நீடித்திருக்கும். அயர்ந்தவனுக்குப் பிரயாணம் தூரமாயிருக்கும். அதுபோல் உண்மெய் உணர்ச்சியில்லாத அவிவேகிக்கு வாழ் நாள் கஷ்டமாயிருக்கும்.

வழிப் பிரயாணி ஒருவன் தனக்கு மேலான அந்தஸ்துடையவனுடனேனும், தனக்கு சமானமானவன் உடனேனும் பிரயாணஞ் செய்யக் கடவன். வஞ்சகனுடனேனும், வழிபரிப்போனுடனேனுஞ் செல்லலாகாது.

இவர்கள் என்மக்கள் இவர்கள் எனக்கு சொந்தம் என்றும் இந்த சொத்து எனக்கு சுயாதீனம் என்றும் எண்ணுகிற எண்ணமே ஒரு அவிவேகியை வாதைப்படுத்தும். தானே தனக்கு சொந்தமல்லாத போது மக்களும் சொத்துக்களும் எவ்விதத்தில் சொந்தமாவார்கள்.

தன்னுடைய அவிவேகத்தை அறிந்த அவிவேகி அதுவரைக்கும் விவேகி யாவான். தன்னை விவேகியென்று மதித்த அவிவேகி யதார்த்தத்தில் அவிவேகியாவான்.

அவிவேகி செய்த கெட்ட செய்கையின் பலன் உணரும் வரையில் தேனைப்போல் மதிப்பான். அதன் பலனை உணர்ந்தபின் அதனை அநு பவிப்பதுமன்றி துக்கப்படுவான்.

விவேகி ஒருவன் மாதத்துக்கொருமுறை விடாது புல் நுனி அளவு அன்னம் புசித்து வந்தாலும் நீதி மார்க்கத்தில் நடக்கும் ஒருவனுக்கு பதினாறில் ஒருபாகமேனும் சமமாக மாட்டான்.

துற்செய்கையானது பாலைக்கறந்தவுடன் கெடாதிருப்பதுபோல் இருக்கும். அனல் கொண்டு சாம்பலால் மூடப்பட்ட தீப்போல் துற் செய்கை யானது தொடர்ந்தே நிற்கும்.

அவிவேகி ஒருவன் தான் செய்த துற்செய்கையின் பலனை அறிந்தபோது துக்கப்படுகின்றான். துக்கப்படுங்கால் அவனிலிருந்த துலக்கம் நசிய துக்கமானது அவனில் பதிந்துவிடுகின்றது.

அவிவேகி ஒருவன் தன் அவிவேகத்தை உணர்ந்தபோது கீர்த்திக்கும் புகழ்ச்சிக்கும் நாளைக் கழிக்காது நிருவாண பாதையைக் கடைபிடிக்க முயல்வான்.

**நியாயவர்க்கம்**

ஓ! சகோதிரர்களே! கொடூரமாக ஒருவன் காரியத்தை நிறை வேற்றுவானாயின் அவன் நியாயவானவனோ? இல்லை. இது தகுந்தது இஃது தகாததென பகுத்தறியும் சக்தியும்

ஏனையோர்களை அறிவுடன் செலுத்தும் மார்க்கமும் அறிந்தவன் எவனோ அவனே நியாய முடையவன். தன்மவழியும், நீதிநிறையும் வாய்த்து நீதியுடனும் அறிவுடனும் நடத்துபவன் எவனோ அவனே நியாயமுடையவன்.

ஒருவன் மிக்க சாமர்த்தியமாய் பேசுவதனால் கலைவல்லோனாவனோ? இல்லை. பொறாமெயும் பயமுமற்ற பொருமெயுடன் இருப்பவன் எவனோ அவனே கலைவல்லோனாவன்.

ஒருவன் மிக்க சாமர்த்தியமாய் பேசுவதினால் தன்மத்தை உணர்ந்தவனாகான். ஒருவன் சிறிதளவு தன்மத்தை அறிந்து அதன்படி ஒழுகி வருவானாகில் அவனே தன்மம் தெரிந்து நீதியில் நடப்பவனாவான்.

உரோமம் நரைத்திருப்பதால் ஒருவனை பெரியோனெனக் கூறமுடியாது. வயதில் பெரியவனாய் இருக்கலாம். ஆனால் ஆசை நரைக்காவிடில் வயதால் பெரியோனென அழைப்பது வீணே.

எவனிடத்தில் சத்தியம், ஒழுக்கம், நட்பு, அடக்கம், மத்தியபாதை, பரிசுத்தம் இவைகள் அமைந்திருக்கின்றதோ அவனே பெரியோன்.

பொறாமெயும், பேராசையும் நாணயமும் பொருந்திய ஒருவன் அதிகம் பேசுவதால் மதிப்படைய மாட்டான். பொறாமெயும், பேராசையும், நாணயமும் பொருந்திய ஒருவன் மிக்க அழகுடையவனாக இருப்பதாலும் மதிப்புடைய மாட்டான்.

தலையை முண்டனஞ்செய்து சீலமற்று பொய்பகருவானாகில் அவன் சிரமணனாகமாட்டான். அவாவும், பேராசையும் மேற்கொண்ட ஒருவனை எவ்விதமாக சிரமணனென அழைக்கலாம்.

சகல பாபங்களையும் தன்னில் அகற்றி அவைகளுக்கு இடந்தராது அடக்கமுடையவனாய் இருப்பவன் எவனோ அவனே சிரமணன்.

பிட்சாபாத்திரம் ஏந்தி ஏனையோரிடத்தில் பிச்சை கேட்பதால் பிக்ஷுவாகமாட்டான். தன்மத்தில் பூர்த்தி பெற்று பரிபூரண படித் தரத்தில் பழகிவருபவனும் பிச்சை கேட்க வருபவன் எவனோ அவனையே மோன முடையவன் என்றும் முனி என்றும் அழைக்கப்படும்.

கொலை செய்யாதிருப்பதால் ஒருவன் அறஹத்தாக மாட்டான். எவனொருவன் ஜீவர்கண்மீது காருண்யத்தை செலுத்துகின்றானோ அவனே அறஹத்தாவான். .

ததாகதர் சீலம், தபயோகம், தனிமெயாய் படுத்திருத்தல் இவைகளால் மட்டும் சுகத்தைப் பெறவில்லை . இந்த ரகசியத்தை உலகம் அறியாது. சகோதிரர்களே! ஜாக்கிரதையாயிருங்கள். அவா ஒழியுமட்டும் ஒன்றும் பெறப் போகிறதில்லை .

ஒ சகோதிரர்களே! ஒருவன் தன்னை தீவைப்போல் ஆக்கிக் கொள்ளட்டும், கன்மத்தில் சிந்தனையை செலுத்தி ஞானியாகட்டும், சகல பாபகன்மங்களையும் ஊதிவிடட்டும், ஊதிவிட்ட அந்தக்ஷணமே அரிய நிலையைப் பெற்றவனாவான்.

ஒருவன் தன்னை தீவைப்போல் ஆக்கிக்கொள்ளட்டும், தன்மத்தில் சிந்தனையை செலுத்தி ஞானியாகட்டும், சகல பாபகன்மங்களை ஊதி விரட்டும், ஊதிவிட்ட அந்தக்ஷணமே மறுபடியும் பிறப்பதற்கும் இறப்பதற்கும் ஏதுவில்லாமற்போம்.

வெள்ளியின் அசுத்தத்தை சிறுகசிறுக தினேதினே சுத்தி செய்தல் போல் அறிவுடைய ஒருவன் தன்னிடத்திலுள்ள பாபகன்மங்களை சிறுகசிறுக தினேதினே விட்டொழிக்கட்டும்.

எப்படி இரும்பினிடத்திலிருந்து துரும்பு சேர்ந்து விருத்தியாகி இரும்பையே கெடுக்கின்றதோ அதுபோல் தவறுதலையுடையவன் தன் சொந்த தவறுதலால் பாபகன்மத்துக்கீடுபடுகின்றான்.

தன்மத்தை தினகாலஞ் சிந்தியாதிருத்தலே அன்றாடம் கறைப்படுத்துகிறது. சுறுசுறுப்பாயில்லாதிருத்தலால் குடும்பிகளை கறையாக்குகிறது. சோம்பலாயிருப்பதால் தேகத்தை கறையாக்குகிறது. அசட்டையாயிருப்பதால் பெருத்த காரியத்தை கறையாக்குகிறது.

துஷ்ட செய்கையே பெண்களுக்கு கறையாயிருக்கின்றது. உபகாரிக்கு பேராசை கறையாயிருக்கின்றது. உலகில் செய்யும் சகல பாப கன்மங்களும் கறைப்படுத்துவனவாய் இருக்கின்றன.

ஓ! சகோதிரர்களே! இந்தக் கறைகள் யாவற்றையும்விட பெருத்தது அறியாமெய் என்னும் கறையே இந்தக்கறையினின்று விலகி கறைபடாதிருக்க தப்பித்துக்கொள்ளுங்கள்.

வெட்கமற்றவனுக்கும், பெருமெய் பாராட்டுபவனுக்கும், தீங்கு செய்பவனுக்கும் பழிப்பவனுக்கும் துணிகரமுள்ளவனுக்கும் பகைக்கத்தக்க வனுக்கும் உலகின் வாழ்க்கை மிக்க எளிதாயிருக்கும்.

பரிசுத்தத்தையே நாடியும், தன்னயம் பாராட்டாமலும், அடக்கமும், குற்றமற்றும், அறிவுடனுமுள்ள ஒழுக்க நடையிலுள்ள ஒருவனுக்கு உலகின் வாழ்க்கை மிக்க கடினமாயிருக்கும்.

ஜீவ்வதை செய்தும், பொய் சொல்லியும், களவாடியும், விபச்சாரம் செய்தும், மயக்கத்தைத்தரும் மதுபானம் அருந்தியும் ஒருவன் வருவானாகில் அவன் தான் அடையப்போகும் பெரும் பேற்றின் அஸ்திபாரத்தையே பெயர்த்துவிடுகின்றான்.

அளவுகடந்து செய்யும் துற்செய்கையானது செட்ட ஸ்திதிக்குக் கொண்டு போகும் என்று உணருங்கள். பேராசையும், பொல்லாங்கும் வெகு நாளைக்கு நிலைக்காதென்று கண்டு ஜாக்ரதையாயிருங்கள்.

காமமே ஓர் பெருந்தீ, கோபமே ஓர் கூறான அம்பு, அறிவீனமே ஓர் கண்ணி, பேராசையே ஓர் பெருமழையாய் இருக்கின்றது.

பிறர் குற்றத்தை உணர்வது எளிது. தன் குற்றத்தை உணர்வது அறிது. அயலான் குற்றத்தை பதரைப்போல் பிடுங்கிக்காட்டுவான். தன் குற்றத்தை நஞ்சரவம் போல் ஒளிப்பான்.

ஆகாயமார்க்கமாக ஓர் பாதையுங் கிடையா. வெளியரங்கமான செய்கையால் ஒருவன் சிரமணனாகமாட்டான். உலகம் பெருமெயில் ஆனந்திக்கின்றது. அறவணவடிகள் பெருமெயற்றிருப்பர்.

ஆகாயமார்க்கமாக ஓர் பாதையுங் கிடையா. வெளியரங்கமான செய்கையால் ஒருவன் சிரமணனாகமாட்டான். நிலையாக உள்ள ஜீவர்கள் கிடையா அறவணவடிகளே எக்காலும் உளர்.

உலகில் மனிதர்களாய் பிறப்பதே அரிது. அதில் நீதிமான்களாய் நடப்பது அதிலும் அரிது. அதிலும் சத்திய தன்மத்தைக் கேட்டல் அரிது அதிலும் பிறப்பை வென்று நிப்பாணம் பெறுவது அதினும் அரிது.

**சம்மா சம்புத்தவர்க்கம்**

ஓ! சகோதிரர்களே! மனுக்களாய் பிறப்பது கடினம், மானுஷீக தன்மம் வாய்ப்பது கடினம், சத்திய தன்மத்தைக் கேட்பது கடினம், பரிபூரணநிலையைப் பெறுவது கடினம்.

பாபஞ் செய்யாதிருத்தல், நன்மெய்க் கடைபிடித்தல், இதயத்தை சுத்திசெய்தல் இஃதே பகவனது போதனை.

சாந்தமாய் இருத்தலே அகோரதபம் செய்வதாகும். பலநாள் துன்பத்தை அனுபவித்தல் பேரின்பத்தைப் பெற ஏறும். ஏனெனில் பல ஜீவர்களைப்பற்றி கேடு நினைத்து வந்தவன்

சிரமணனுமல்ல. பழிகூறாமலும், தையற்சொற் கூறாதும் புலனையும், மனதையும் ஒடுக்கி நீதியில் நின்று மிதமின்றி உண்ணாமல் தனிமெயாய் உட்கார்ந்து உறங்கும் போதும் விழித்திருக்கும் போதும் மேலான எண்ணங்களில் சித்தத்தை செலுத்தல் வேண்டும். இவைகளே பகவனது போதனை.

காம இச்சைக்கு திருப்தி செய்தல் கூடாதகாரியம். தங்கப் பொடிகளை மழைபோல் சொரிந்தாலும் திருப்தி செய்ய முடியாது. காம இச்சையின் அளவையும் அதனால் நேரும் துன்பத்தைக் கண்டறிந்தவன் எவனோ அவனே அறிவுடையோன்.

சகல அவாக்களையும் பற்றற்று நிற்கும் துறவிக்கு பற்றற்று நிற்றலிலேயே ஆனந்தமயமாய் இருப்பான். உலகில் ஜீவர்கள் நாடி நிற்கும் ஆனந்தத்தில் திருப்தியற்றவனாய் இருப்பான்.

ஜீவர்கள் பயத்தால் பல இடங்களில் சென்று அடைக்கலம் புகுகின்றனர். மலைகளுக்கும், காடுகளுக்கும் செல்கின்றனர். தோப்புகளையும், மரங்களையும் தேடிச் செல்கின்றனர். ஆனால் இவ்வகைத்தான அடைக்கலம் சுகத்தைத் தராது. ஏனெனில் அங்கு சென்றும் துக்கத்தினின்று விடுபடாமலிருக்கின்றான்.

எவனொருவன் புத்ததன்ம சங்கமென்னும் மும்மணியில் அடைக்கலம் பெற்று துக்கம் , துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரணமார்க்கம் இன்னவை என அறிந்து துக்கத்தினின்று விடுவிக்கும் பரிசுத்த அரிய அஷ்டாங்கமார்க்கத்தை அனுஷ்டிக்கின்றானோ அவனே மேலோன். இது தான் மேலான அடைக்கலமும் பயங்கரமற்றதுமான அடைக்கலமும் பெறல். இவ்வகையான அடைக்கலம் பெறுவதால் ஜீவர்கள் துக்கத்தினின்று விடுபட்டவர்களாவார்கள்.

பேரவாவை ஒழித்தலே சுகவழியும் சிறந்த தருமமுமாகும். எல்லா தருமங்களைப் பார்க்கினும் புத்த தருமமென்னும் மெய்யறமே சிறந்தது. அம்மெய்யறமே மெய்ப்பொருளை விளக்கும். அம்மெய்ப்பொருள் விளக்கமே மெய் இன்பமாம் பேரின்பம் பயக்கும். அப்பேரின்பமே

துக்க நிவாரணமாகும்.

பேரவாவாகிய நதியைக்கடந்து அக்கரையாம் நிருவாணமடைபவர்கள் உலகில் சிலரே. ஆயினும் பலரோ அந்நதியின் கரையோரங்களில் அங்குமிங்கும் ஓடுகிறவர்கள். ஆனால் அந்நதியைக் கடந்தவர்களுக்குத் தான் துக்கமில்லை . சேற்றினின்று பரிமளத்துடன் தாமரை முளைத்து இன்பந்தருவது போல் பேரவாவாகும் இருளில் அறிவுமயங்கி நிற்கும் மக்களுக்கு புத்ததன்மமாம் மெய்யறந்தோன்றுங்கால் பேரறிவு விளங்கும்.

பொய்யர்கள் மத்தியில் மெய்யர்களாக வாழ்வீர்களாக. பொய்யர்கள் பாதையை உங்கள் மெய்யில் விளக்குவீர்களாக.

கொலைஞர்கள் மத்தியில் சீவகாருண்யர்களாக வாழ்வீர்களாக. கொலைஞர்கள் மத்தியில் உங்கள் காருண்யத்தை விளக்குவீர்களாக.

ஓ! சகோதிரர்களே! காமியர்கள் மத்தியில் நிஷ்காமிகளாக வாழ்வீர்களாக. மதிமயங்குங் கூட்டத்தோரின் மயக்கையகற்றி வாழ்வீர்களாக.

களவு செய்வோர் மத்தியில் நீங்கள் களவின்றி வாழ்வீர்களாக. களவு பொருட்கிட்டினும் அதைக் கண்காணாது அகலுவீர்களாக.

அன்பர்களே! பகலில் சூரியனும், இரவில் சந்திரனும், கவசத்தால் போர்வீரனும், யோசனையால் ஞானியும் பிரகாசிப்பது போல் ததாகதர் இரவுபகலற்றவிடத்தும், சதாவிழிப்புள்ளோர் அகத்தும் பிரகாசிக்கின்றா ரென்று தனது தன்மபாதகீதையை நிறுத்தினார்.

**சூளாமணி**

ஒளியாகி உலகாகி நீ விரிந்தாய் என்கோ
உலகெலா நின்னொளியினுள் உள்ளடங்கிற்றென்கோ
வளியார உலக நீ யாள்கின்றா என்கோ
வ மருலகு தானின்ன தடியடைந்த தென்கோ
விளியாத மெய்ப்பொருளை நீவிரித்தாய் என்கோ
நீவிரித்தவாறே மெய்ப்பொருள் விரிந்த தென்கோ
தெளியாமல் இல்லை நின் திருவடி கன் மெய்மெய்
தெளிந்தா லுஞ் செவ்வனே தெரிந்துரைக்கலாமே.

தருமராஜனானவர் தன்மபாத போதத்தை இருவகையால் விளக்கி ஒவ்வொருவர் இதயமும் உருகி அன்பு ததும்ப போதித்தபோது சருவ சீவர்களின், உள்ளங்கள் யாவும் பரவசம் உற்றதுமன்றி அவர் பாதம் படிந்திருந்தக் கல்லும் உறுகி கமலபாத ரேகைப்பதியப்பெற்றது.

**அருங்கலைச்செப்பு - சொற்சுவைபத்து**

கல்லுமுருகிக் கமலத்தைப் பெற்றதெனில், சொல்லு முருகாததென்.

உதயகாலத்தில் உச்சிமலை ஏறி பதினைந்து நாழிகை வரையில் தன்மபாதத்தை விளக்கியபோது அவரை சுற்றிலும் இருந்த மக்கள் யாவரும் தங்கள் தங்கள் சிந்தைகள் யாவையும் வேறு செலுத்தாது ததாகதர் போதத்தை நோக்கி நின்றவர்களாதலின் அவர்போதம் நின்றவுடன் கலைந்து தாகவிடாயின் மிகுதியால் தவிக்கலாயினர்.

அவர்கள் தவிப்பை உணர்ந்த அண்ணல் தனது ஏகசடையைக் கரத்திலேந்தி நீட்டியபோது அதனின்று பெருகிய நீர்ப் பிரவாகமாய்ப் பரந்து சகல சீவர்களும் பருகி விடாய்தீர்ந்ததுகள்.

**வீரசோழிய உதாரணச் செய்யுள்**

குறியாரெனவே புனலின் மீ / துறுதாமரைமேல் உரைவார் தா
நெறியார் சடையாய் நின்பாதம் / அறிவார் இனி யார் அறிவாரே.
புரிவுள சடையும் புரிவுள் சடைமேற் புனலும் பிறழுமே.

**அருங்கலைச்செப்பு - காக்கல்பத்து**

வினைதீர்த்தான்தாகவிடாய்தீர்த்தான் கங்கை முனை பேர்த்தானன்றே முநி.

**சீவக சிந்தாமணி**

இலங்க வாழியி நான்களிற்றீட்டம் போல்
கலங்கு தெண்டிரை மேய்ந்து கண மழை
பொலங்கொள் கொன்றையினான் சடை போன் மின்னி
விலங்கல் சேர்ந்து விண்ணேறி விட்டார்த்தவே.

பாறை எங்கும் கங்கைப்பிரவாகமுற்றிருப்பதைக் கண்ட கருணாகரன் அங்குள்ள அன்பர்களைக் கொண்டு அவ்விடம் பரவும் அருவி நீரோடையை அடிவாரத்தில் கொணர்ந்து சகலசீவர்களுக்கும் உதவும்படி துவாரமிட்டு மலையின் அருவிநீர் பூமியில் வற்றாமல் ஓடி சீவர்களைக் காக்கும்படி செய்துவிட்டார்.

அம்மலையில் செய்த ஜலதாரை வழிக்கு பகவன் பெயரில் ஒன்றாகிய அறித்துவாரமென்னும் பெயரைக்கொடுத்ததுமன்றி அக்கங்கை நதி பெருகி ஓடுதற்கு கங்கை நதி என்றும் புத்தபிரானே அதற்கு ஆதாரமாய் இருந்தபடியால் அவரை கங்கை ஆதாரனென்றும் போற்றினார்கள்.

**வீரசோழிய உதாரணச் செய்யுள்**

அம்பொற் பணைமுகத்துத் திண்கோட்டணிநாகம்
வம்புற்றவோடை மலர்ந்திலங்க - வும்பர்

நவம்புரியு நாண்மதியுங் கங்கையு நண்ணி
தவம் புரிவார்க்கு இன்பந்தரும்.

**சிலப்பதிகாரம்**

போதித்தானம் புரிந்தறங் கொள்ளவு,
மென்வாய்க் கேட்டோர் இறந்தோர் உண்மெயி
னன்னீர்கங்கையாடப் போந்தேன்
வாடகமாடத் தரிதுயில் அமர்ந்தோன்
சேடங்கொண்டு சிலர்நின்றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடிவைத்தல்
முடிவளையுடைத்தோன் முதல்வன் சென்னி என்
றிடையுடைப் பெருமழை தெய்தா தேகப்

**மணிமேகலை**

செங்கதிர்ச்செல்வன் திருவறம் விளக்குங்
கஞ்சை வேட்கைக் கரந்தாண்ட
அமரர் முநிவன் அகத்தியன் தனாது.

இத்தகைய ஜடாபாரத்தில் தோன்றிய கங்கை என்னும் மகத்துவத்தைக்கொண்டு சகலதேசத்தோர்களும் அவற்றை தரிசிப்பதுடன் தன்ம சங்கத்தோர்களும் பூரணச்சந்திர நாள் நோக்கி அவ்விடம் சென்று தங்கள் தவத்தையும் முடிக்க ஆரம்பித்துக்கொண்டார்கள்.

ஆதிநாள் அறக்கதிர் விளக்கிய ஒப்பிலா அப்பன் அருமொழியை அநுசரித்தே பின் அறிவுரைச் சந்ததியாரும் திரிமந்திராலோசனை விளக்கி இருக்கின்றார்கள்.

**சிலப்பதிகாரம்**

தெய்வந் தெளிமின் றெளிந்தோர் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் கூறன்மின்
உனூன் அகற்றுமின் உயிர்கொலை யஞ்சுமின்
தானஞ் செய்மின் றவம்பல தாங்குமின்
செய்நன்றி மறவன்மின் றீனட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொரு நீங்கன்மின்
அறவோ ரவைக்கள் மகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சமின் பிழையுயி ரகலுமின்
அறமனை காமி பொல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியம் விரகினி லொழிமின்
இளமெயுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
வுள்ள நாள் வரையீ தொல்ல லொழியாது
செல்லுந் தே அத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென

மலைமீதேறி போதித்த தன்மபாத அன்பின் மிகுதியும், அளவு படா நீதியும், ஆற்றலளிக்கு நெறியும், கல்லுறுகப் பதிந்தக் கமலபாதத்தால் விளங்கியது மன்றி அவர் கருணைமிகுதியால் பொழிந்த சடாபார நீரின் பெருக்குமே கங்கை நதிக்கு ஆதாரமானதும், நீரருவிக்குத் திறந்தவழியே அறித்துவாரம் என்னும் பெயர்பெற்றதுமாகிய நித்தியதன்மத்தை நிலைக்கச் செய்து மலையின் சிகரத்திற்கும் அடிவாரத்திற்கும் மத்தியில் பொதியை வியாரம் நிருமித்து அகஸ்தியரைப் பிரதம குருவாக வகித்து மெய்யறத்தை வளர்க்கச்செய்தார்.

பாலி பாஷையில் பொதியை என்பது மலையைத் துளைத்து போதிய அறைகள் நிருமிப்பதேயாம்.

மலையினின்றிழியும் சலதாரையாம் அறித்துவாரம் ஏற்பட்டதும் அழியா கங்கை நதி உண்டாயதும் கற்பாறையில் கமலபாதம் பதிந்ததுமாகிய அறச்செயல்கள் தேசமெங்கும் பரவி பகவன் தந்தையாகிய சுத்தோதயன் அல்லது மண்முகவாகென்னுஞ் சக்கிரவர்த்திக்கு எட்டியவுடன் முத்திரைமோதிரம் ஈய்ந்து வேவுகர்களை விடுத்து மைந்தனை அழைத்துவரும்படி ஆவல் கொண்டான்.

சக்கிரவர்த்தி வார்த்தையை சிரமேற்கொண்ட வேவுகர்கள் பல நாடு நகரங்களையும் நதிகளையுங் கடந்து பொதிய சாரலை அடைந்து கங்காதரனை அணுகி கமலபாதத்தை வணங்கி ஐயனே! நமது சக்கிரவர்த்தியார் தம்மெய்க் காணவேண்டும் என்னும் அவாவின் மிகுதியால் எங்களை அனுப்பியிருக்கின்றார் தாம் வந்து தந்தைக்குத் தரிசனந்தரவேண்டும் என்று வேண்டி நின்றார்கள்.

அவற்றை வினவிய கோபாலன் ஆனந்தமுற்று நமது சக்கிரவர்த்தியார் எம்மெய்க் காணவேண்டிய ஆவலிலிருக்கின்றபடியால் ததாகதன் தடையின்றி வருவேன் என்று எழுந்து பிச்சாபாத்திரத்தைக் கையில் ஏந்தி வேவுகர்களைப் பின் தொடர்ந்தார்.

வேவுகர்கள் சக்கிரவர்த்தித் திருமகன் யாதொரு வாகனமுமின்றி கால் நடையில் வருவதைக்கண்டு கண்கலங்கி கமலாசனனே, கருணாகரனே நங்கை அகாரனே உமது கமலபாதம் புழுதியில் நடக்கவும் அதனையாங்களை காணவும் என்ன கன்மஞ் செய்தோமோ என்று கலங்கினார்கள்

கங்கை ஆதாரன் வேவுகர்களை நோக்கி அன்பர்களே! கலங்காதீர்கள். ஒருகால் ஓடத்தை வண்டி ஏற்றிக்கொண்டு செல்லுவதைக் கண்டிருக்கின்றீர்கள். மற்றொருகால் வண்டியை ஓடம் ஏற்றிக்கொண்டு செல்லுவதை கண்டிருக்கிறீர்கள், ஆதலின் ததாகதன் வெறுமனே பூமியில் நடப்பதும், இரதமூர்ந்து பூமியில் செல்லுவதும் ஒன்றென்றே தெரிந்துக் கொள்ளுங்கோள் என்று சொல்லிக்கொண்டே நடந்து வருவதை முன் வேவுகாகளால் அறிந்துககொண்ட கபிலை நகரவாசிகளும், மகதநாட்டு வாக்க வீதிகளெங்கும் சுத்தஞ்செய்து வாமைக் கமுகுகள் நட்டு அரசிலைத் தோரணங்கள் கட்டி

கந்ததூபங்களிட்டு சன்னச்சாந்துக்கள் பூசி சக்கிரவர்த்தித திருமகன் வருகையைக் கண்ணிமைப்பின்றி எகிர்நோக்கி நின்றார்கள்.

அக்கால் கபிலைநகருள் சென்ற தங்கை ஆதாரன் பொன்னிற காவி அணைந்துள்ள தன்மசங்கத்தோர் தன்னைப் புடைச்சூழ்ந்து நிற்கவும் தானும் அக்காவியை அணைந்து கபோலங் காக்கிலேந்தி குமுத முகமலா கண்டலம் பிரகாசிக்க வருவதைக் கண்டவர்கள் யாவரும் குதிகான் சக்கிரவர்த்தித் திருமகன் சதானந்தன் வருகின்றார் வருகின்றார் என்றும், வீணையில் வல்ல வேணுகோபாலன் வருகின்றார் வருகின்றார் என்றும் அசோதரையை வெறுத்த அவலோகிதர் வருகின்றார் வருகின்றார் என்றும், குமரப்பருவம் குறையா குணசேகரன் வருகின்றார் வருகின்றார் என்றும், எங்கள் இதயத்திருளை அகற்றும் இறைவனாம் ஞான சூரியன் வருகின்றார் வருகின்றார் என்றும், கமலாசன ஞானக்கண்ணன் வருகின்றார் வருகின்றார் என்றும், சர்ப்பங்கள் தழுவி விளையாடும் சாக்கைய முநிவர் வருகின்றார் வருகின்றார் என்றும், பிறவுயிராம் மானைக்கார்க்க புலிக்கு உடம்பைக் கொடுத்த புண்ணியன் வருகின்றார் வருகின்றார் என்றும், கங்கைந்திக்கு ஆதார கருணாகரன் வருகின்றார் வருகின்றார் என்று ஆனந்தக் கூச்சலிட்டு கற்புடைய மாதர்கள் கற்பூர ஆலாத்தி ஏந்தி சாமரை ஆலவட்டங்கள் வீசி கண்ணன் வாழி என்போரும், கமலாசனன் வாழி என்போரும், அண்ணல்வாழி என்போரும், அறவாழியான் வாழி என்போரும், ஆதி வாழி என்போரும், ஆதிநாதன் வாழி என்போருமாக ஆர்ப்பரித்து ஆனந்தகோஷஞ் செய்ய அருகக்கடவுள் அரண்மனை வீதி சேர்ந்தார்.

இத்தகைய கோஷங்களை உணர்ந்த இறைவன் மண்முகவாகென்னும் சுத்த இதயச் சக்கிரவர்த்தி இரதமூர்ந்து எதிற் சென்று தனதுமைந்தன் மஞ்சளாடை அணைந்து ஓடேந்தியும், அவரது முகதேஜசும், வடிவும் குன்றாதிருப்பதைக் கண்டு திகைத்து இரதத்தை விட்டிரங்காது மைந்தன் தானோ என்று திகைப்பான். அங்கபாக முப்பத்திரண்டு லட்சணங்களும் மென்மேலும் பிரகாசிப்பதைக் கண்டு மைந்தனென்றே உறுதி கொண்டு இரதத்தைவிட்டிரங்கி அருகில் சென்று மைந்தனை அணைத்து முத்தமிடலா மென்று எண்ணுவான். உலக ரட்சகனாயினனே என்று திகைப்பான். தனது

மைந்தன் சித்தாத்தனென்றே மதிப்பான். மறுத்துந்தேறி ஜெகத்குரு வாயினனே என்று திகைப்பான்.

இத்தகைய திகைப்பகன்று பழைய சித்தாத்தி, பெயரகன்ற புத்தராமே என்று மகிழ்ந்து அவர் கரத்தைப்பற்றி மகனே என்னைவிட்டுச் சென்ற எம் வருடமும் என்னை மறந்து நின்ற காரணமென்னோ . நீவிர் செங்கோலேந்த வேண்டிய கரத்தில் ஓடேந்திய காரணமென்னோ என்று கலங்கினான்.

11. **தந்தைக்கு மைந்தன் குருவாய காதை.**

அவரது கலக்கத்தை உணர்ந்த அண்ணல் உலகத்தில் தோற்றும் உருக்களை மறப்பதுடன் உம்மெயும் மறந்திருக்கலாம். புத்தராகவேண்டிய வழிக்கு இப்பாத்திரம் ஏந்தியும் இருக்கலாம் என்றார். அவற்றை வினவிய மண்முகவாகு மைந்தனை நோக்கி குழந்தாய்! இப்பாத்திரமேந்தாது புத்தநிலை அடையலாகாதோ என்றார்.

செங்கோலேந்துஞ் செருக்கை இப்பாத்திரமே அறுக்குமென்று விடை பகர்ந்தார்.

உமது மூதாதைகள் மரபில் தோன்றிவரும் சக்கிரவர்த்திகள் செருக்கும் அறுமோ என்றார்.

.

சக்கிரவர்த்திகளாய் இருந்தபோதிலும் அவர்களுக்கு உண்டாகும் நானென்னுஞ் செருக்கை அறுப்பது இவ்வோடேயாகும். சக்கிரவர்த்திகளாய் இருந்தாலும் அவர்களுக்குள்ள தானென்னும் அகம்பாவத்தைப் போக்குவதும் இவ்வோடேயாகும். ஆதலின் சதா சுகத்தை அடைய வேண்டிய ஒவ்வொருவனும் தன்னை அடக்கியாள இவ்வோட்டைக் கையிலேந்தி அதில் கிடைக்கும் பிச்சை அன்னத்தை உண்டு பசியாறி அகம்பாவத்தைப் போக்கி இதயத்தை சுத்திகரிக்கவேண்டுமென்று பேசிக்கொண்டே

அரண்மனைக்குச் சென்று தந்தையுந் தானுந் தனித்துட்கார்ந்து தாமிதுவரையினும் செய்துவந்த ஆளுகையில் யாது சுகத்தைக் கண்டீரென்றார்.

அவற்றை வினவிய சுத்தோதயன் குழந்தாய்! நீர் அரண்மனையை விட்டகன்று காடேகி உமது முடியை அறுத்துவிட்டீரென்று கேழ்விப் பட்டவுடன் அசோதரையும் தனது முடியை அறுத்தெரிந்துவிட்டாள். நீவிர் பிச்சாபாத்திரம் ஏந்தி அன்னமேற்று உண்கின்றீர் என்று கேழ்விப்பட்டவுடன் அசோதரையும் ஒரு ஓடு கையில் ஏந்தி அதில் அன்னத்தை வாங்கி உண்டு வருகின்றாள். ஆயினும் உமக்குள்ள ஈகையின் குணம் அவளுக்கும் மாறாமல் என்றும் தருமத்தைச் செய்துக்கொண்டு ஆனந்தத்தில் இருக்கின்றாள். யானோ சக்கிரவர்த்தி பீடத்தை வகித்தும் சதா துக்கத்தில் இருக்கின்றேனென்றார்.

அசோதரையானவள் என்னை பிரிந்தும் உமதடக்கத்திலிருந்தும் சருவ சுகத்தை இழந்தும் தனது ஈகையின் பெருக்கத்தால் ஆனந்தத்தில் இருக்கின்றாளென்றீர். தாமோ சக்கிரவர்த்தி பீடத்திருந்து சர்வ அதிகாரமுற்றும் சஞ்சலம் மாறவில்லை என்பது யாது காரணம் என்றார்.

எமதரிய குழந்தாய்! அதன் காரணம் யானறியேனே என்றான். அவற்றை வினவிய பகவன் சக்கிரவர்த்தியை நோக்கி அரசே! நீர் போட்ட இடத்தில் பொருளைத் தேடினால் கிடைக்குமேயன்றி போடா இடத்தில் தேடுவது பொய்த் தேடலாகும். அதுபோல் துக்கந் தோன்றிய இடத்தில் அதன் காரணத்தை விசாரியாது துக்கத்தைப் பெருக்குதல் மேலும் மேலும் துக்கத்திற்கு ஆளாக்கும்.

**சீவக சிந்தாமணி**

வேட்டன பெறாமெ துன்பம் விழைநரைப் பிரிதறுன்பம்,
மோட்டெழி விளமெய் நீங்க மூப்பு வந்தடைத றுன்பம்,
மேட்டெழுத்த றிதலின்றி யெள்ளர்பா டுள்ளிட் டெல்லாஞ் .
சூட்டணிந் திலங்கும் வேலோய் துன்பமே மாந்தர்க்கென்றான்.

அதாவது விரும்பிய பொருள் கிட்டாவிடத்து துக்கம் பெருகும். விருப்பமாகும் அவாவின் பெருக்கமே துக்கத்திற்கு மூலமென அறிந்து அவாவை அறுத்தவிடத்து துக்கம் நீங்கும். தேகத்திற்கு நரை திறை உண்டாவது துக்கம். அதற்கு மூலம் யாதென்று ஆராயுங்கால் தேகத்தில் நிகழுங் காம வெகுளி மயக்கங்களென்றே தெளிந்து அவைகளைத் தடுத்தவிடத்து நரை திறையின் துக்கம் நீங்கும்.

மனைவி மக்களைப் பிரிதலும் துக்கம், தனது திரவியத்தை இழத்தலுந் துக்கம், தனது நாடு நகரை பரிகொடுத்தலுந் துக்கம். அவைகளுக்கு மூலம் யாதென்று ஆராயுங்கால் மனைவி மக்கள் மீதுள்ள பற்றுக்களே மூலமாகும். திரவியத்தின்மீதுள்ள அவாவே மூலமாகும். நாடு நகரின் மீதுள்ளப் பெரும் ஆசையே மூலமென்றறிந்து பற்றுக்களையும், பேராசையையும் அகற்றி மனைவி மக்களுந் தோன்றி கடிகையில் கெடுவர். தானிய சம்பத்தும் தனசம்பத்துந் தோன்றி கடிகையில் கெடும். நாடு நகரங்களும் தோன்றி கடிகையில் கெடுமென்று உணர்ந்து தெளிந்து பற்றற்றவிடத்தே துக்கம் நீங்கும்.

இளமெய் நீங்கி முதுமெய் தோற்றுங்காலத்து துக்கமுண்டாகும். அத்தகைய துக்கத்திற்கு மூலம் யாதென்று ஆராயுங்கால் முதுமெய் வருமெய் என்றுணராது இளமெய் அவாவினின்று ஏது சுகமுமற்று இந்திரியங்கள் கலங்குங்காலத்து முதுமெய் வந்ததென்று துக்கிக்கின்றார்கள்.

இளமெய் என்னும் வாக்கியம் எப்போது இத்தேகத்திற்கு உண்டாயதோ அப்போதே முதுமெய் என்னும் வாக்கியம் அதற்கு எதிர்மொழியாய் உண்டென்பதை அறிந்துக்கொள்ளல் வேண்டும். அவ்வகை அறிந்தவிடத்து இளமெயும், முதுமெயும் தேக்தோற்றக் கெடுதியின் தொடர்பென்று உணர்ந்து அதனவாவை அறுத்தவிடத்து துக்கம் நீங்கும்.

தேகத்துக்குரிய பிணி மூப்புச் சாக்காடென்னும் துக்கத்தையும், அதனுற்பவத்தையுங் காணாது சதா அவாவையும், சதா இன்பத்தையும் பெருக்க நிற்றலால் சதா துக்கத்தில் வருந்துகின்றீர்.

துக்கந் தோன்றியவிடத்து அதன் உற்பவத்தை நோக்குவீரேல் அங்கு பற்றிய அவாவிடுத்து அதனால் உண்டாய துக்கம் நீங்கும். அதுபோல் மற்றுந் துக்கோற்பவங்களை உணர்ந்து அதனதன் பற்றுக்களை அறுத்துக்கொண்டே வருவீராயின் சதா துக்கம் நீங்கி சதா சுகமடைவீரென்றார்.

மைந்தன் அமுதவாக்கில் பிறந்த ஞானபோதத்தைக் கேட்ட சுத்தோதயச் சக்கிரவர்த்தி அகமகிழ்ந்து பகவன் முன் எழுந்து நின்று புத்தராம் மெய்யனை யான் புத்திரனாகப் பெற்ற பாக்கியமே பாக்கியமென்று ஆனந்தக்கண்ணீர் பெருக இருகரங்கூப்பி என்னை துக்கசாகரத்தினின்று கரையேற்றிய ஞானவள்ளலே! துக்கவிருளில் திகைத்து நின்ற எனக்கு ஞானசுடர்விளக்கேற்றிய சுந்திரனே! உம்மெ முன்பு பார்த்தபோது காவி ஆடையாலும், கரபோலாலும் கலங்கினேன். தற்போது உமது அமுதவாக்கின் மிகுதியால் பொன்னா டையையும், திருவோட்டையும் புகழ்ந்தேன்.

இப்பொன்னாடையே புவனாதாரமென்றும், திருவோடே சித்த சுத்தி என்றும் தெரிந்துக்கொண்டேன். உமது உறவினால் உண்டாய அன்பின் மிகுதியையும், அளவுபடா ஞானத்தையும் கண்டேன். உலகுய்யும் உமது சத்திய தன்மத்தை விளக்கி என்னை ஆட்கொள்ள வேண்டும் என்றான் புத்தபிரான் தனது தந்தையாகிய சுத்தோதயச் சக்கிரவர்த்திக்கு குருவாக விளங்கினதுகொண்டு “தகப்பன் சுவாமி” என்றும், “பிதாவிதாதா” என்றும் அழைக்கலானார்கள்.

**பின்கலை நிகண்டு**

பிரமன்மேதினி சிறந்தோன் பிதாமகன் பிதாவிதாதா
நிரந்தரன் கமலயோகி நீநிலம் அளந்த பாதன்
திரமிக உடைய பூதன் தேவர்கள் முதல்வன் சாது
வரன்றன் முதநூலாசான் மாதவன் நரசிம்மன்.

ததாகதர் தனது தந்தைக்கு ஞானோபதேசஞ் செய்துவிட்டு அசோதரை வாசஞ்செய்யும் இடத்தை நாடி வாயற்படியில் நின்று ததாகதன் வரலாமோ என்றார். தேவிகாலோத்திரம்

தடையின்றி வரலாமென்னும் மிருதுவாக்கு எழும்பிற்று. அதனை வினவிய பகவன் அறைக்குள் சென்று அசோதரையை நோக்கி அம்மே! சுகமோ என்றார். அசோதரையோ நமதையன் பாதத்தை இருகப் பற்றிக்கொண்டு ஐயனே! உமது கருணா நோக்கத்தால் இம்மட்டும் சுகமே என்றாள்.

அம்மே! யாதொரு துக்கமும் இல்லையோ என்றார்.

ஐயே! உம்மெப் பிரிந்ததுக்கம் ஒன்றேயன்றி வேறு துக்கம் யாதும் அறியேனென்றாள்.

ததாகதர் சகலருக்குந் தோற்றி நமக்குத் தோற்றாமல் இருக்கின்றாரே என்று துக்கித்தாயா அன்றேல் ததாகதர் தோற்றமே மறைந்துவிட்டதென்று துக்கித்தாயா என்றார்,

உலகெங்கும் சத்தியதருமமாம் அமுதத்தை ஊட்டி வரும் ஐயன் உடலுயிர் பொருந்தி வாழ்ந்த அடியாளுக்கு அப்பேரின்ப அமுதை ஊட்டாது பிறிந்துநின்ற குறையே பெருந்துக்கத்தில் ஆழ்த்தியது என்றாள்.

அம்மே! நீவிர் தோன்றி கெடும் சிற்றின்பமாம் உலக இச்சையை ஆசிக்கின்றாயா அன்றேல் என்றுங் கெடாமல் நித்தியமாம் பேரின்ப சதாசுகத்தைத் தெரிந்துக்கொள்ள ஆசிக்கின்றாயா என்றார்.

ஐயனே! சதாசுக நித்திய தன்மமாம் பேரின்பத்தையே தெரிந்துகொள்ள ஆசிக்கின்றேனென்றாள்.

**காசிக்கலம்பகம் - அசோதரை இந்திரர் அரணியாதல்**

இல்லாவே முப்பத்திரண்டறமுஞ் செய்திருப்ப
செல்வார் பொழிற்காசிச் செல்வனார் - மெல்ல

பரக்கின்ற புன்கை பருவகல் கொண்டைய
மிரக்கின்றவா ரறிசிலேன்.

அம்மே! நீவிர் இதுவரையுஞ் செய்துவருந்தருமத்தை உமது மணாளன் அரண்மனை வந்து சேரவேண்டும், சுகத்துடன் வாழவேண்டுமென்று ஓர் பலனைக்கருதி செய்துவருகின்றாயா அன்றேல் ஓர் பிரிதி பலனையும் கருதாமல் செய்துவருகின்றாயா என்றார்.

அவ்வாக்கியத்தைக் கேட்ட அசோதரைத் திடுக்கிட்டு நமதுள்ளத்தில் கருதி செய்யுஞ் செயலை யாவருக்கும் வெளியிட்டதில்லையே. அத்தகைய அந்தரங்க நோக்கத்தையும் உள்ள எண்ணத்தையும் அறிந்துகொண்ட நமதையன் சகலத்தையும் அறிந்தவர், சகலத்தையும் அறிபவர், சகலத்தையும் அறிவோர் என்று எண்ணி மீண்டும் ஐயன் பாதத்தைப் பற்றி எனதுள்ளத்தை உணர்ந்த மெய்யனே! உமது வரவைக்கோறும் ஓர் பலனைக் கருதியே என் தருமத்தைச் செய்துவந்தேனென்றாள்.

அம்மே! நீவிர் செய்துவந்த தருமம் ஓர் பலனைக்கருதி செய்தவை நிஷ்ப்பலனேயாகும். அதாவது, நீவிர் தருமபாதையில் நடக்கவேண்டின் நான்கு பாதத்தில் நடக்கல்வேண்டும். முதலாவது (சீலபாதம்) இரண்டாவது (அருட்பாதம்.) மூன்றாவது (மங்கலபாதம்) நான்காவது (சுபபாதமேயாம்)

இவற்றுள் முதலாவது பொய்சொல்லாமெய், களவு செய்யாமெய், கொலை செய்யாமெய், பரபுருஷனையேனும் பரஸ்திரீயை ஏனும் இச்சியாமெய், மயக்க வஸ்துக்களை அருந்தாமெய் ஆகிய சுத்ததேகியாக நின்றீயும் தருமமே (சீலபாத)மாகும்.

இரண்டாவது, தன் பிள்ளை தன்பந்துவின் மீது வைத்துள்ள அன்பு போல் மற்ற மக்கள் மீதும் சருவ சீவராசிகளின் மீதும் அன்பு பாராட்டி ஈயும் தருமமே (அருட்பாதமாகும்.

மூன்றாவது உம்மிடத்தில் வந்து தருமம் பெறும் மக்கள் எக்காலும் ஒருவர் ஈகையை நாடாது ஆனந்தமாக வாழவேண்டும் என்று முகம் மலர்ந்து ஆசிகூறிச் செய்யுந் தருமமே

(மங்கலபாதமாகும்.

நான்காவது, தன் சுகம் கெடினும் அன்னியர் சுகம் கெடாத வழிகளைப் போதித்தும், அவர்களை ஆதரித்தும் ஈயுந்தருமமே (சுப்பாதமாகும்.

இத்தகைய நான்கு பாதத்தில் நடத்தலே சத்திய தன்ம மார்க்கம் ஆகும் என்றார்.

அவற்றை வினவிய அசோதரை நமதையனை நோக்கி கபிலைப்பதியே, கமலாசனனே, கருணை வள்ளலே, கங்கையாதரனே! என்னை மீண்டும் கியானவடிமை ஆக்கிக்கொண்ட அருளிறையே! உமது அளவுபடா சத்திய தன்மபோதத்தை அடியாளுக்குத் தெளிவுற உணர்த்தல் வேண்டுமென்று வணங்கினாள். .

அம்மே! முற்கூறிய தன்மபாதத்தில் நடக்குங்கால் நூதன வஸ்துவைக் காணுமிடத்து ஆசைக்கொள்ளுதலும், கொறூர ஜெந்துக்களைக் காணுமிடத்து பயங்கொள்ளுதலும், தனக்கடங்கிய ஜெந்துக்களைக் காணுமிடத்து அகங்கரித்தலுமாகியச் செயல்களைத் தவிர்த்து மணாளன் மகவென்னும் பாசபந்தங்களை அகற்றி அன்பையோர் உருவாக்கி அறிவை ஆடையாக வனைதல் வேண்டும்.

சத்தியதன்மத்தில் நிலைப்பதற்கு ஒழுக்கமும் அறிவின் பெருக்கமுமே மூலமாகும்.

அம்மூலாதரவினால் உனக்குள் எழும் காம, வெகுளி, மயக்கமாம் விஷயங்களைச் சேரவிடாமலும், தங்கவிடாமலும் அகற்றி உனக்குள் எழும் சாந்தம், ஈகை, அன்பென்னும் அமுதத்தைப் பெருக்கிக்கொண்டே வருவாயாயின் இதயசுத்தமாம் மனக்களங்கமற்று அலையற்ற கடலாம் சுகவாரி நிலையினிற்பாய்.

அங்ஙனமின்றி மனதின் கண் இராகத்துவேஷ மோகக் களங்கங்களாம் விஷம் கிஞ்சித்திருக்குமாயின் சாந்தம், ஈகை, அன்பென்னும் அமுதமும் விஷமாகிப்போம்.

அமுதத்தைப் பெருக்கி அருட்பெறவேண்டுமாயின் காம வெகுளி மயக்கங்களால் எழும் பாசபந்த பற்றுக்களை அறுத்து இதயதனை சுத்தி செய்தல் வேண்டும். இதயசுத்தி உண்டாய் மனமணிப்பிரகாசிக்குமாயின் நித்திறையை ஜெயித்து இரவுபகலற்ற நிருவாணம் பெறுவாய். அக்கால் உம்மெக்காணும் சருவ விவேகிகளும் நான்கு தன்மபாதத்தால் நடக்கும் தரும் தேவதை எனக் கொண்டாடுவார்கள். விவேக பெருக்கை நாடும் மேலோர் சத்தியதன்ம மார்க்கத்தை நான்கு தன்மபாதத்தால் நடந்து அவர்களும் பிறவி சமுத்திரத்தைக் கடப்பார்களென்று ஓதி அம்மன் அஞ்ஞான இருளை அகற்றிவிட்டு தனது சங்கத்தோருடன் கலந்து பிச்சாபாத்திரம் ஏந்தி அரசன் வட்டித்த அன்னத்தைப் புசித்து அங்கோர் சோலையில் தங்கினார்.

அசோதரையம்மை அண்ணல்பால் உபநயனமாம் ஞானவிழிப்பெற்றும் சக்கிரவர்த்தி மருமகளென்னும் மமதையும், சக்கிரவர்த்தித் திருமகன் மனைவி என்னுஞ் செருக்குந் தன்னைவிட்டகலாமல் இருந்தது கொண்டு நிதானித்து தனதேகமைந்தன் இராகுலனை உப்பரிகை மீதழைத்துப் போய் சன்னலின் வழியாய் பகவன் வீற்றிருக்குஞ் சோலையைக் காண்பித்து அப்பா உனதரிய தந்தையாகிய நாரசிம்மம் அதோவீற்றிருக்கின்றது பார். நீ அவரிடஞ்சென்று அவர் சேகரித்து வைத்திருக்கும் அழியா நிதியில் உனக்கு சேரவேண்டிய பாகத்தைப் பெற்றுக்கொள்ளலாம் என்று அனுப்பிவிட்டு தான் அணைந்துள்ள ஆடையுடன் பிச்சாபாத்திரங்கையிலேந்தி அரண்மனை வீதியில் சென்று அன்னமேற்றுப் புசித்து ஆனந்தசாதனத்திலிருந்தாள்.

**சீவகசிந்தாமணி**

அதேநிலை பெற்ற பிக்குணிகள் செயல்.
அம்பொற் கலத்துளடு பாலமர்ந் துண்ணு மரிவையந்தோ
வெம்பிப்பசி நலிய வெவ்வினையின் வேறாயோரகல் கையேந்தி கொம்பிற்கொள வொசிந்து பிச்சை எனக் கூறி நிற்பாட் கண்டு
நம்பன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே நினைமின் கண்டீர்.

சோலையில் தங்கியிருந்த பகவன் அசோதரைத் தன்னைப்போல் அகம்பாவமற்று ஓடேந்தி வெளிவந்த சங்கதியை அறிந்தானந்தமுற்று அவ்விடத்துக் காட்டிற்கும் நாட்டிற்கும் மத்தியில் பெண்களாம் பிக்குணிகளுக்கென்று ஓர் வியாரமும், புருஷர்களாம் பிக்ஷுக்களுக்கோர் வியாரமுங் கட்டும்படிச் செய்து சங்கத்தின் ஞானசாதகர்களுக்கு வேண்டிய உதவி புரியத்தக்க ஏதுக்களையுஞ் செய்து வைத்தார்.

மாதுரு வாக்கையின்படி இராகுலன் தனது பிதுருவாகிய ஓடேந்தும் பிஞ்சகனிடஞ்சென்று அவர் கரத்தை இருகப் பற்றிக்கொண்டு நாயனே! நீவிர் எமக்கு சேரவேண்டிய பாகத்தை அருளல் வேண்டும் என்றான்.

சங்கங்களுக்கு அறத்தை நிறப்புஞ் சங்கரன் தனது கரத்தை விடாமல் பற்றியுள்ள சிறுவனின் அதி தீவர பக்குவத்தை உணர்ந்து இவன் நம்மெ விபாகண்டனென்றறிந்து சிரரோமங் கழித்து மரவுரியாம் மஞ்சளாடை ஈய்ந்து வற்றாத ஓடு கரத்தளித்து தனது சங்கத்தில் சேர்த்து கண்டுபடிக்குஞ் கல்வியாம் கலைநூல் விருத்தியில் விடுத்தார்.

அசோதரை யம்மனோ இராகத்துவேஷ மோகங்களால் எழும் உள்ளக் களங்கங்கள் யாவையும் பற்றறுத்து புறவிழி பார்வை போக்கி உள்விழி பார்வையை நோக்கி தூங்காமற்றூங்கி இந்திரியத்தை வென்று நிருவாணநிலை பெற்றாள்.

“இந்தியத்தை வென்றான் தொடர்பாட்டோ டாரம்ப
முந்தி துறந்தான் முநி.”

என்பதாம் ஐயிந்திரியங்களை வென்ற வல்லபஞ்கொண்டு சித்தார்த்தரை ஐந்திரர், இந்திரரென்று வழங்கிவந்தது போல் அவர் மனைவி அசோதரையம்மனும் ஐயிந்திரியங்களை அடக்கிய வல்லபங்கண்டு இந்திரர் அணி இந்திராணி என்று அழைக்கலானார்கள்.

சித்தார்த்தரது சித்திரகூடத்தில் அசோதரையாம் இந்திராணிக்குத் தோழிப்பெண்களாயிருந்த அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோர்தமை என்னும் நால்வருள் அரம்பையும், ஊர்வசியும் இல்லற தன்மத்தை நாடி

புத்திரசந்தானவிருத்தியில் ஆழ்ந்துவிட்டார்கள். மேனகையும், திலோர்தமையும் துறவற தன்மத்தை நாடி பிக்குணிகள் சங்கத்திற் சேர்ந்து இந்திராணிக்கு

அங்குந் தோழிகளாய் ஆனந்த சாதனத்தில் இருந்துவிட்டார்கள்.

**அருங்கலைச்செப்பு**

இந்திரர்க்கரணியா ஏற்ற அசோதரையாள்
சிந்தைத் தெளிந்தாள் சிவம்
முந்தியார் தோழிகள் முநிந்தார் இருவர்
பிந்தியோர் இல்லறத்தானார் மேனகையோடு முற்றத்திலோர்தமை, போனக வம்மையானார்
ஆயவரம்பையும் ஊர்வசியே இவர், தோயுமில் ஆழ்ந்தனர் பால்

**நிகழ்காலத்திரங்கல்**

தானடைந்த பேற்றை தந்தைக்கருளியலால்
மானனையாட் கீய்ந்த மோன அதிசயமே
மாமனையாளோடு மைந்தன் வழி சிறப்ப
கோமனையோர் யாவுங் குளிர்ந்த ததிசயமே
தலத்தோர் தார்வேந்தன் தலமும் விடுத்து தென்,
புலத்தாரோடோடு தரித்தது அதிசயமே.

ததாகதர் தனது தந்தைக்கே குருவாகத் தோன்றி ஞானோபதேசஞ் செய்ததுமன்றி மனைவி மைந்தனுக்கும் அருளூட்டி தங்களை விட்டுத் துறந்தனரே என்னுந் துக்கத்தை ஓட்டி சதானந்த நிலையில் நிறுத்திவிட்டார்.

இத்தகைய காலத்தில் ஓர் நாள் அவ்விடமுள்ள நூதன வியாரத்துள்ள சங்கத்தோருக்கு சற்குருநாதனானவர் சத்திய தன்மத்தை விளக்கி வருங்கால் மனைவி மைந்தர்

இருவரும் அவ்விடம் வந்து நின்றார்கள்.

அவர்கள் அந்தர அங்கமறியா சங்கத்தோர்கள் குமாரதேவனுக்கும் குமரதேவிக்கும் இன்பமில்லாமல் போமோவென்று தங்களுக்குள் தாங்களே சிந்தித்துக் கொண்டார்கள்.

சங்கத்தோர் அந்தரங்க எண்ணத்தை இந்திராணி அறிந்துகொண்டு தகப்பன் மடியில் தனது பெண்குழந்தை சென்று உட்கார்ந்து கொள்ளுவது போல் யாதொரு மனக்களங்கமின்றி நெறுங்கி இந்திரராம் புத்தபிரான் துடைமீது உட்கார்ந்துகொண்டாள்.

சங்கத்தோர் அழுக்காறு எண்ணத்தையும் அவற்றை அகமுகத்தறிந்த அசோதரையானவள் தனது துடைமீதுவந்து உட்கார்ந்த களங்கமற்றச் செயலையுமுணர்ந்த நமதையன் குதூகலித்து உச்சமுருகி அம்மே! சுகமோ என்றார்.

**அருங்கலைச்செப்பு**

துணைவியாள் தன்னை துடைமீ திறுத்தி கணஞான மூட்டுங் கதிர்.
சங்கத்தோர் உள்ளச் சழக்கையறிந்தா ளெங்கடாய் வீற்றாள் மேற்கால்.

அவற்றை வினவியதாய் அருகனை நோக்கி தாதா உமது கருணையால் ஞானவழித் திறந்தது முதல் துக்கமென்பது ஈதென்றும், சுகமென்பது ஈதென்றும் அடியாள் அறியேனே என்றாள்.

ததாகதர் சங்கத்தோரை நோக்கி அன்பர்களே! உங்கள் சங்கத் இரண்டும் அறியேனென்கிறாளே இஃது நியாயமோ என்றார்.

சங்கத்தோருள் தலைமெயான ஆனந்தனென்பவர் பகவனை நோக்கி கத்திரசக! எழுதம்மனின் அந்தர அங்கமாம் உண்மெய்ச்செயலும், பயிர அங்கமாம் புறமெய்ச்செயலும் யாங்களறியோம். எங்கள் பேதை எண்ணத்தால் தமாக்கடவுளுக்கும்,

குமாரதேவிக்கும் இன்பமில்லாமல் போகுமாவென்று எண்ணினோம். அவ்வெண்ணத்தை அறிந்துக்கொண்ட எமது தாய் அவ்வின்பமற்றவளென்பதை ரூபிக்க தந்தை மடியில் மகள் வந்து உட்காருவதுபோல் யாதொரு மனக்களங்கமுமின்றி தமது மடியில் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

தாங்களோ தேவியின் களங்கமற்ற எண்ணத்தையும் எங்கள் பேதை குணத்தால் எழுவிய களங்கத்தையும் உணர்ந்து மகளைத் தந்தையானவா உச்சமுருகி யாதொரு களங்கமுமின்றி பயிரங்க மடியில் உட்கார வைத்துக் கொண்டீர்.

ஆதலின் தமது அடியார்களின் பேதைகுணத்தால் எழுவிய களங்கை க்ஷமித்து ஆட்கொள்ளவேண்டும் என்றடி பணிந்தார்கள்.

அவர்கள் பேதை குணங்களை அறிந்த பெம்மான் சங்கத்தவர்களை நோக்கி அன்பர்களே! உங்கள் களங்கம் அகலட்டும். அம்மனுக்குள்ள சுகதுக்கம் இரண்டுமற்ற நிலையை அறிந்து கொண்டீர்களோ என்றார்.

**சீவக சிந்தாமணி**

நிலவிலகி யுயிரோம்பி நிமிந்தொளிர்த்து பசிபகைநோ
யுலகமிருள் கெடவிழிக்கு மொண்மணி யறவாழி
யலகையிலாக் குணக்கடலை யகல் ஞானவரம்பனை
விலையிலா மணிமுடியான் விண்வியப்ப லிறைஞ்சினான்.

சங்கத்தோர்கள் சங்க அறனைநோக்கி ஐயனே! தாம் ஊட்டியுள்ள ஞான அமுதில் நாமரூபம் இரண்டற்றபோது நான் நீ என்னும் பின்னபாவம் இரண்டும் அறுமென்றும், வேண்டுதல் வேண்டாமெ இரண்டும் அறுமென்றும், சுகதுக்கம் இரண்டும் அறுமென்றும் ஊட்டியிருக்கின்றீர்.

தங்களடியார்கள் அவற்றை உட்கொள்ளாது உலக சிற்றின்பமாம் விஷத்தை உண்டுவருகிறபடியால் சுகதுக்கமற்ற இடம் விளங்காமல் போனோம். ஆதலின் இனியேனும் யாங்கள் விஷத்தை உண்டு கண்டங்கறுத்துக் காலனுக்கு ஆளாகாமல் ஞானவாருதியைக் கடைந்து அமுதளிக்கவேண்டுமென்றார்கள்.

அன்பர்களே! உங்கள் உள்ளம் விரிந்தவிடத்து உலகும், உள்ளம் களங்கமற்று அடங்கியவிடத்து நிருவாணமுந் தோற்றுமென்பதை விளக்கியிருக்கின்றோம்.

அத்தகைய விளக்கத்தால் உங்கள் உள்ளமே ஞானவாருதியாகவும், வலயிட சுவாசமே கயிறாகவும், புருவமத்திய சுழினியை மத்தாகவுமூன்றி சதாவிழிப்பாற் கடைய வேண்டியவர்களும் நீங்களே . அக்காலத்தில் எழும் காமவெகுளி மயக்கங்களாம் விஷயங்கள் அணுகாவண்ணம் அகற்றி அன்பு, ஈகை, சாந்தமென்னும் அமுதத்தைத் திரட்டவேண்டியவர்களும் நீங்களே. அவ்வகைத் திரட்டிய அமுதுண்டு திரிகாலமுமுணர்ந்து மரணத்தை ஜெயித்து பிறப்பை அறுத்துக்கொள்ள வேண்டியவர்களும் நீங்களே ஆதலின் உங்கள் உள்ள ஞான வாருதியை நீங்களே கடைந்து அமுதுண்ண வேண்டுமென்று போதித்து அந்தந்த சங்கத்தோர்களை அங்கங்கு தங்கி சாதனங்களைப் பூர்த்திச் செய்யுங்கோள் என்று விடுத்து ஆரணத்திற்சென்று;

**காக்கைபாடியம்**

பாலகக் கடலை பழுகக் கலக்கி / மேலைச்சுழினை கயிறை இழுத்து, சீலவமுதைச் சேர்த்து நிறப்பி / ஆலமர்ந்தோனல் லடி தொழுவீரே.

**நிகழ்காலத்திரங்கல்**

உள்ளக்கடலை கடைந்தே யுற மகற்றி / தெள்ளமுதமீய்ந்த தேற்றல் அதிசயமே.

**அறநெறிச்சாரம்**

தானே தனக்குப் பகைவனு நட்டானும் தானே தனக்கு மறுமெயு மிம்மெயும், தானேதான் செய்த வினைப்பயன் துய்த்தலால் / தானே தனக்குக் கரி.

**மூன்றா முறை விம்பாசாரன் தெரிசனமும் நூதன வியாரம் ஏற்படலும்**

ஓர் மரத்தடியில் வீற்றிருப்பதை வேவுகர்களாலும், மற்றுமுள்ளவர் களாலும், விம்பாசார அரசனறிந்து குலகுரு வந்திருக்கின்றாரென்னும் குதூகலத்தில் எழுந்து தனது பரிவாரங்களுடன் வந்து தற்பரனை வணங்கி ததாகதா புசிப்புக்கெழுந்தருள வேண்டுமென்று கோறினான்.

பிஞ்சகன் விம்பாசாரன் கோறிக்கைக்கிணங்கி எழுந்து வருங்கால் ஐயன் சத்தியதன்மத்தையும் அதன் பலனையும் முன்பே அறிந்துள்ளவனாதலின் பிம்பாசாரன் தன்னைச் சூழ்ந்துள்ள மக்களை நோக்கி;

அன்பர்களே! இதோ வெழுந்தருளிய பகவன்,
"எல்லா முணர்ந்தவர், எண்குண மமைந்தவர்
அருளாழி பயந்தவர். அறவாழி யளித்தவர்
மருளாழி துறந்தவர், மறையாழி புரிந்தவர்
மாதவருள் மாதவர், வானவரில் வானவர்
போதனரிற் போதனர், புண்ணியரில் புண்ணியர்
ஆதியு மிலவே, அமலனு மிவரே.
நீதியு மிவரே. நிறந்தர ரிவரே
சோதியு மிவரே, துல்லிய ரிவரே
இறைவனு மிவரே, துறைவனு மிவரே
கிருவுரு மிவரே. செல்வனு மிவரே
என வேற்றுங்கள் போற்றுங்கள்
என்றென்றும் வாழ்த்துங்கள்.''

என்று சொல்லிக்கொண்டே அரண்மனைக்குச் சென்று ஐயனுக்கு ஆசனமளித்து மனையோரை வணங்கச்செய்து புசிப்பளித்து பகவன் புசித்தபின் அவரருகில் உட்கார்ந்த விம்பாசாரன் போதிநாதனை வணங்கி ஐயனே துறவிகளாகும் சங்கத்தோர்

வசிக்கத்தக்கதும், சுத்தமானதும், பகவன் சிலநாள் தங்கியிருக்கக்கூடியதும், பகலில் ஜனசஞ்சாரம் அதிகமில்லாததும், கூச்சலற்றதும், மிக்க வமைதிபெற்றதும்;

பகவனை தெரிசனஞ்செய்ய வருத்துப்போக்கா இருப்பவர்களுக்கு வழி சுகமானதும், நாட்டிற்கும், நகரத்திற்கும் மத்தியிலுள்ளதுமாகிய வேணுவன மென்னும் மூங்கில் தோப்பை வியாரத்திற்கு அளிக்கின்றேன் தேவர் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று வணங்கினான்.

அரசன் திரிகரண சுத்தியால் அளிக்குந் தானத்தை அருகனேற்று அவ்விடத்தில் வேணுவனவியாரமென்னும் ஓர் மடம் கட்டுவித்து சங்கத்தோருக்கு அளிக்கச்செய்து தானும் அம்மூங்கிற் தோப்பிற் சிலகாலந் தங்கியிருந்தார். அதனை வேணுவன வியாரமென் றழைக்கலானார்கள்.

பரத்துவாசனென்னும் பெரியோன் ஒருவர் மகதபிரான் வேணுவன வியாரத்தில் தங்கியுள்ளாரென்று கேழ்வியுற்று அவ்விடஞ்சென்று அருகனை வணங்கி துலவில் உட்கார்ந்து கொண்டு நமக்குத் தோன்றியுள்ள வியாதியின்னதென்றும், அஃது நீங்கும் வழி ஈதென்றும் ஏதோர் தன்மங் கூறுவரோ கூறாரோவென்று எண்ணிக்கொண்டிருந்தார்.

**12. பரத்துவாசருக்குப் பிணிக்குத்தக்க ஓடதிகள்**

போதித்த காதை பிணியாளன் எண்ணத்தை ஞானக்கண்ணினால் அறிந்த ஆரூடர் பரத்துவாசரை நோக்கி அன்பனே, நீவிர் அதிதுன்ப வியாதியின் அனுபாதையால் அனந்தநாள் அவத்தைப்படுகின்றீர்போலும் என்றார்.

அருகன் அருள்மொழியைக் கேட்ட பரத்துவாசர் திடுக்கிட்டு ஐயிந்திரியங்களை வென்று அந்தரங்கமுணர்ந்த இந்திரரே எனதுள்ளத்தில் எண்ணிய எண்ணங்களை உமது களங்கமற்ற உள்ளக்கண்ணாடியில் கண்டு கொண்ட செவ்வியக் கண்ணனே, சிறந்த செல்வனே எனக்குற்ற வியாதியை எவ்வகையால் தெரிந்து கொண்டீரோ அதன்

நிவர்த்தியும் உமக்குத் தெரிந்தேயிருக்கும். தேவரீர் அதன் உற்பவத்தையும், மடிவையும் விளக்கி ஆட்கொள்ள வேண்டுமென்று வணங்கினான்.

பகவன் பரத்துவாசரை நோக்கி அன்பனே! உமக்குள் எழும் ரசோகுண, தமோகுண, சத்துவகுணமென்னு முக்குணத்திரய காம, வெகுளி, மயக்கங்களைக் காரணமாகக் கொண்டேழூஉம் முக் குற்றங்களே வாத, பித்த, சிலேத்தும் மென்னுங் மூவியாதி பீடமாகி வாதத்தால் ஆயிரத்தியைந்நூறுவகைத் தோற்றங் களும், பித்தத்தால் ஆயிரத்தி ஐந்நூற்றி நார்ப்பது வகைத் தோற்றங்களும், சிலேத்துமத்தால் ஆயிரத்தி நானூற்றி எட்டுவகைத் தோற்றங்களையும் உண்டு செய்து மக்களை மாளாதுக்கத்திற்கு ஆளாக்கி மடித்து வருகின்றது.

இத்தியாதி வியாதிகளின் தோற்றத்திற்கும், உபாதைக்கும் மக்கள் அவாக்களே காரணமாகும். அவற்றுள் காம் அவாபெருக்கம், வெகுளி பெருக்கம், மயக்க பெருக்கத்துள் உமக்குத் தோன்றியுள்ள வியாதியின் பெருக்கமானது வெகுளியின் அதிகரிப்பினாலும், வேண புசிப்பின் தவறு தலினாலும் பித்த வனல் மீறி மார்பின் குழியினுள்ளும், இறைப்பையின் முகப்பிலும், திரண்ட கட்டிபோல் வளர்ந்து புசிப்பின் அன்னத்திற்கே தடை களை ஏற்று எட்டுவகை துன்பத்திற்கு ஆளாக்கி அஷ்டகுன்மக் கட்டிகளாக வளரும்.

அவ்வகை வளர்ந்து அன்னதுவேஷத்தால் ஒடுங்கியும், பித்தகோபமாம் வெகுளி ஒடுங்காது மேலும் மேலும் கோபத்தைப் பெருக்கிக்கொள்ளுவதால் குன்மமென்னுங் கட்டியும் வளர்ந்து துன்பமும் பெருகிக்கொண்டே வரும்.

வெகுளியாங் கோபத்தை அடக்கும் மூலிகை சத்துக்களையும், உபரச சத்துக்களையும், உப்பின், சத்துக்களையும் புசித்து கோப மெழாவண்ணம் நசித்து சாந்தத்தைப் பெருக்குவதால் குன்மங்கள் கரைந்து துன்பமகன்று அன்னமுறைந்து உதிரஞ் சிறந்தோடியுடல் குளிர்ந்து சுகத்தை அளிக்குமென்றார்.

பகவன் பரிகரிப்பாம் பரம் வாக்கை உணர்ந்த பரத்துவாசா அவா அடிபணிந்து ஐயனே! திரிபீடமாம் மூவமுத வாக்களித்து மக்களை தேவர்களாக்கிய தேவாதி தேவா! இத்தேகவாயுளின் தீரத்தை தேறச்செய்யவும், வீரத்தை விலக்கிக் கலைக்கவுமாகுங் கற்பத்தை அருள்புரிய வேண்டுமென்று அடி பணிந்தான்.

பகவன் பரத்துவாசரை நோக்கி அன்பனே! மக்களுக்குள்ள கிரமச்செயல்களே சௌக்கியம் என்னப்படும். அக்கிரமச் செயல்களே வியாதி என்னப்படும்.

இத்தகைய வியாதிகளின் ஏதுக்குத் தக்க நிகழ்ச்சியாய்த் தோன்றும், அத்தோற்றங்களுக்கு பூதபௌதிகங்களும், அவரவர் குணாகுணங்களும் செயல்களுமே காரணமாகும்.

மண், நீர், தீ, காற்று இவற்றின் மாறுதலின் செயல்களே முதல் மூலமாகும். குணத்திரய அவாக்களே இரண்டா மூலமாகும். மனப்போக்கின் மீறியச் செயல்களே மூன்றா மூலமாகும்.

இம்மூவகை ஏதுவால் நிகழ்ச்சியாகும் சத்துவ விருத்தி, தமோ விருத்தி, இரஸோ விருத்தியாகும் வாத, பித்த, சிலேத்தும வியாதிகளாகி நெய்தநில மக்களுக்கு வாதமே பீடமாகக்கொண்டும், குறிஞ்சி நில மக்களுக்கு பித்தமே பீடமாகக் கொண்டும், முல்லைநில மாக்களுக்கு சிலேத்துமமே பீடமாகக் கொண்டும், மருதநில மக்களுக்கு வாதத்திற் பித்தமே மூலமாகக் கொண்டும், பாலைநில மக்களுக்கு பித்தத்திற் சிலேத்துமமே மூலமாகக் கொண்டும் பற்பல வியாதிகள் தோன்றி மும்மெய் வினையின் பயன்களையும், இம்மெய் வினையின் பயன்களையும் அனுபவிக்கச் செய்கின்றது.

மக்கள் ஒவ்வொருவருக்கும் வினையுள்ளளவும் தேகமும், தேகமுள்ளளவும் வியாதியும் ஆதியாய் நின்று அலக்கழித்துவரும்.

ஆதியாய வியாதிகளுக்கு அவுடதமூலம் அறிவின் பெருக்கமேயாகும். அறிவின் விருத்தியால் ஒவ்வொரு மக்களுக்குள்ள உதிர விருத்தியே அயசம்மந்தமாகவும்,

மூளையின் விருத்தியே பொன் சம்மந்தமாகவும், மாமிஷ விருத்தியே வங்க சம்மந்தமாகவும், அஸ்தியின் விருத்தியே வெள்ளி சம்மந்தமாகவும், நரம்பின் விருத்தியே தராவின் சம்மந்தமாகவும், தாம்பிரவிருத்தியே சரும் சம்மந்தமாகவும் உணர்ந்து அந்தந்த யாக்கை உருப்பின் குறைவு நிறைவுகளை அந்தந்த லோகங்களால் நிவர்த்திக்க வேண்டியது.

மூலிகைவர்க்கங்களிலுள்ள அய சம்மந்த தாபரங்களும், பொன் சம்மந்த தாபரங்களும், தாம்பிரசம்மந்ததாபரங்களும் இன்னின்னவைகள் என்று கண்டறிந்து அவ்வவ் உருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த மூலிகைகளைக் கொடுத்து நிவர்த்திக்கவேண்டியது,

உப்பின் வர்க்கங்களிலுமுள்ள அயச்சம்பந்த உப்புகளும், பொன் சம்மந்த உப்புகளும், வங்கசம்மந்த உப்புகளும், தராசம்மந்த உப்புகளும் தாம்பிரசம்மந்த உப்புகளும் ஈதீதென்றறிந்து அந்தந்த உருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த உப்பினங்களை ஈய்ந்து நிவர்த்திக்கவேண்டியது.

**அருங்கலைச்செப்பு - சூசரகப்பத்து**

ஊனு மென்பு முதிரம் நரம்பு தோல், காணுமெய் நோயின் திறை
அயம் வெள்ளி பொன்னு மருந்தாரங்கொண்டு, நியமிநோய்தாம்பிரத்திநேர்
கௌரி வெண் தொட்டி தாளகம் வீரம், பௌரி பாடாணங்கள் பார்
சிவப்பொடு நீலம் வைரமா பச்சை , உவப்புட்பராகமன்னேர்
பாடாணத்துள்ளும் பரூங்கல்லிலுப்பிற், சேடான லோகங்கண்டேர்
அயத்திற்குதிர மருமூளைப் பொன்னாம், புயல் வங்க மப்புலையேயாம்
என்பதனுள் வெள்ளி யுரை நரம்ப தேதரா, தொன்னை தோற்றாம் பிரமதாம்
துன்பத்திரட்சி சினக்கோதுருண்டு. குன்மக் குடத்தியாங் கூர்
சின மாற்றி நாளுஞ் செல்லன்னங் கொண்டு, வனவுப்பின் தூளம் பரி
இதயத்திலுள்ள விடும்பைகள் நீங்கில், புதயற்ற துன்பம்படும்.

இரத்தின வர்க்கங்களிலுமுள்ள அய சம்பந்த இரத்தினங்களும் பொன் சம்பந்த வைரங்களும், வெள்ளி சம்பந்த புஷ்பராகங்களும், வங்க சம்பந்த கோமேதங்களும், தராசம்பந்த நீலங்களும் தாம்பர சம்பந்த பச்சைகளும், இன்னின்னவைகள் என்றறிந்து அந்தந்த உருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த இரத்தினங்களை ஈய்ந்து நிவர்த்திக்க வேண்டியது.

பாஷாணவர்க்கங்களிலுமுள்ள அயசம்மந்த தொட்டி பாஷாணங்களும், பொன் சம்மந்த கௌரி பாஷாணங்களும், வெள்ளி சம்மந்த சங்கு பாஷாணங்களும், வங்க சம்மந்த தாளக பாஷாணங்களும், தரா சம்மந்த வீரபாஷாணங்களும், தாம்பிர சம்பந்த செப்புத்தொட்டி பாஷாணங்களும் ஈதீதென்றறிந்து அந்தந்த உருப்பின் குறைவு நிறைவுகளுக்கு அந்தந்த பாஷாண அளவுளவின் சிகிச்சையால் தீர்த்தல் வேண்டும்.

இத்தகைய தேக குணாகுணங்களையும், மூலிகை குணாகுணங்களையும், உபரச குணாகுணங்களையும், நவரத்தின குணாகுணங்களையும், உலோக குணாகுணங்களையும், பாஷாண குணாகுணங்களையும் நன்காராய்ந்து அதனதன் சத்துருக்களைக் கண்டறிந்து முடிப்பதும் அதனதன் மித்துருக்களைக் கண்டறிந்து சேர்ப்பதுமாகிய அவுடதங்களை முடித்தல் வேண்டும்.

ஒவ்வோர் தேகத்திற்குள்ள திடத்தையும், சத்துவத்தையும் ஊட்டும் வஜீகரண அவுடதங்களையும், ஆயுள் விருத்திக்கு ஆதாரமாகும் இரசாயன அவடதங்களையும், மூலிகைகளே தனது சத்துருக்களின் சேர்க்கையால் பாஷாணமாகுதலும். பாஷாணங்களே தனது சத்துருக்களின் சேர்க்கையால் அமுதமாவதும், குழந்தைகளின் வியாதிகளுக்குச் செய்யுஞ் சிகிட்சைகளை அதி ஜாக்கிரதையாகவும், கணபேத குணபேதங்களை அறிந்தும், மக்களுக்கு உண்டாகும் மனோ பீதியாலும், எண்ண பேதத்தாலும் உண்டாகும் பேயநிலை ரோகங்களையும், சரீரத்தை மாறுபடச்செய்யுங் காமரோகங்களையும், கழுத்திற்கு மேற்பட்ட உர்த்தவாத ரோகங்களையும், காய சிகிட்சை, இரண சிகிட்சையாகும் சல்லியரோகங்களையுந் தெரிந்துக்கொள்ளல் வேண்டும்.

இத்தியாதி தேக குணாகுணங்களையும், வியாதியின் குணாகுணங்களையும், அவுடத குணாகுணங்களையும் அறிந்து செய்வதே சிகிட்சா சூஸ்ரதமாகும்.

அவற்றுள் உமக்குள்ள ரோகங்களைத் தெரிந்துக்கொள்ளவேண்டுமாயின் உமக்குள்ள குணச்செயல்களையும், காயச்செயல்களையுங் கண்டறிந்து அவற்றுள் குணச்செயல்களாகும் ரசோகுணவிருத்திகளையும், தமோகுண விருத்திகளையும் ஒடுக்கி காயச்செயல்களில் குன்மத்தை விருத்தி செய்யும் இனிப்புள்ள பதார்த்தங்களாகும் பித்த சத்துக்களை அகற்றி நீத்தனவாதாரமாம் உப்பினப்பண்டங்களை உண்டு வருவீராயின் உருண்டரோகங் கரைந்து உண்ணும் புசிப்பும் பரந்து உதிரஞ் சிறந்து சுகமுறுவீரென்று முடித்தார்.

**மாதவன் வேணுவியாரத்தோருக்கு மதியூட்டிய விவரம்**

மாதவன் பின்னும் வேணுவியாரசங்கத்தோர்களை நோக்கி சிரமணர்களே! நாம் காலமெல்லாம் மெய்மொழிகள் யாதென்றுகேட்டுத் தெளியாமல் பொய்மொழிகளை நம்பி சமுத்திர அலைபோல் ஓய்வில்லா ஜெநநங்களாகிய பிறவி துக்கத்தில் சுழன்று அனேககாலமாக அல்லல் பட்டிருந்தோம்.

நாம் வாசஞ்செய்யும் இப்பூவுலகமே ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியாய் கருமத்திற்கு ஏதுவாம் உருதிரண்டு உலகமென்று கூறுவதுள் சீவர்கள் செய்யும் செயல்களென்னுங் கருமங்களே ஒரு காலத்தில் மண்ணாகவும், மரங்களாகவும், புழுக்களாகவும், விலங்குகளாகவும், மட்சம், பட்சிகளாகவுந் தோன்றுகின்றன. அந்த கர்ம்மங்களென்னும் செயல்களே அநேக நற்செயல் தோற்றங்களுருண்டு முடிவில் புத்தராகின்றன.

ஆதலின் சீவர்களின் செய்கைகளையே கருமமென்று கூறப்படும். அக்கருமங்களின் பயனே சீவர்களாகின்றார்கள். முன் ஜெநநத்தின் கருமங்களே சீவர்களாக இருப்பதால் நமது கருமத்தின் பயனே இந்த ஜெநநத்தில் சீவர்களாகத் தோன்றியுள்ளோம்.

அநேக ஜெநநங்கள் தோருந் தோன்றிய சீவர்கள் மனித உருவத்தைப் பெற்று பகுத்தறிதலாகிய விவேகத்தை அடைந்து வருகின்றார்கள்.

இத்தகையப் பகுத்தறிவைப்பெற்ற அரிய மானிட ஜெநநத்திற்கு துக்க நிவர்த்தியாகிய ஞானத்தைப் பெற அநேக ஜெநநங்கள் தோரும் நற்கருமங்களை புரிந்திருக்கவேண்டியதாதலின் சத்கருமங்களே துக்கநிவர்த்திக்குக் காரணமாகும்.

இந்த திவ்விய மானிடதேகத்தைப்பெற்ற ததாகதன் துக்க நிவர்த்திக்குக் கொண்டுபோகும் மார்க்கத்தை கண்டு தெளிந்தேன். நீங்களும் நம்மேறை சாந்தமும், சமாதானமும் அடையும்படியாக அந்த திவ்வியமார்க்கத்தைத் தெரிவித்தேன்.

தாகவிடாய் கொண்ட உங்களுக்கு அமுர்தமாகும் சத்தியமார்க்கத்தைக் கொடுத்தேன். அதை அருந்தினவன் கொலை, களவு, காமாதிகளினின்று நீங்கி சுகமடைவான். இராகத்துவேஷ மோகங்களாகிய வெள்ளத்தினின்று மீண்டு நிருவாணக்கரைச் சேர்ந்தவனுடைய துக்கமற்றச் செயலைக்காண்போர் யாவருந் திகைத்து நிற்பார்கள்.

அவ்வகை சத்தியமார்க்க அமுதை அருந்தினவன் உலகில் வாழ்ந்தும் நீரிலிருக்குந் தாமரைபோல் பற்றற்று வாழ்வான்.

சத்தியமார்க்கத்தில் நடப்பவன் உலகத்தோருடன் ஒக்கவாழினும் ஆசாபாசங்களில் பற்றற்றிருப்பான். -

தன்னுயிரைப்பார்க்கினும் தன் யேகபுத்திரன் உயிரைக்காக்குந் தாயைப் போல் மன்னுயிர்களின் பேரில் தன் அளவுபடா அன்பை செலுத்துவான்.

ஆதலின் ஒவ்வொரு மனுமகனும் நிற்கும் போதும், உலாவும் போதும், நித்திறைக்குப் போகும் போதும், விழிக்கும் போதும், மரணகாலத்தும் அன்பின்மயமாய் இருக்கக்கடவன்.

இந்த மெய்மொழிகளை உணராதவன் பகுத்தறிவற்றவனாவான். பகுத்தறிவில்லாதவன் அநேக ஜெநநங்களாய்ப் பிறந்திருந்து மாளா துக்கத்தில்

ஆழ்வான். அறியாமெயாம் அந்தகாரத்தில் மூழ்குவான்.

**பெரும் பொருள் விளக்கம்**

இளையர் முதியரென விருபால் பற்றி
விளையும் அறிவென்ன வேண்டாம் - இளைஞனாய்த்
தன்றாதைகான நுகர்தற்குத் தன்கான
மொன்றாது நீத்தா னுளம்.

ஆனால் நாம் நமது பகுத்தறிவால் மெய்ம்மொழிகளைக் கண்டறிந்தோம். ஜெந்நமரணத்தினின்று நீங்கினோம். நானென்னும் அகங்காரத்தை நசித்தோம். உண்மெய் அறிந்தோம்.

இதுதான் சத்தியதன்ம பலன், இதுதான் சத்தியமுத்தி, இதுதான் சத்தியலோகம், இதுதான் சத்தியவாழ்க்கை என்று முடித்தார்.

**அருங்கலைச்செப்பு - தன்மந்திரியார்பத்து**

பரத்துவாசன்றன் மந்திரியாய் நின்றான், திரத்த சுஞ்ஞானமுதி
உரபிடகமோதி உலகநாதன் பால், சரகமுந்தான் கற்றநேர்
கற்ற மருந்துங் கனவொழுக்கமுற்றுப் பற்றுங் குடிக்களித்தான் பார்
வியாரங்கள் பக்கும் வியாதித்தருக்கும். நியாயங்கள் ஈய்ந்தா நெறி
முன்னறன்பாற் கண்ட மொழியை விளித்தான், பின்னறன் கைகண்ட நேர்
மனச்சுத்தமுற்ற மக்கட் கணுகா, கனப்பித்த நோயின் குணம்
உள்ளக் களங்க முட்டங்கி நிற்றல், விள்ளத் தொடரும் வினை
வினையணுகாதுற்ற விழியுங் கரமுந், தினையணுகா நோயின் திரள்

பாசங்கள் தோய்ந்த பகுதி எதிர் பாச, நேசத் தொடரும் நெறி
விழியால் விலகுங் கையால் கழியுந் தொழிலாம் ஞானத் தொடர்.

அக்காலோர் தன் மந்திரி என்னும் தனவந்தன் பரத்துவாசரை அடுத்து தனக்குள்ள திரவியங்கள் யாவையுஞ் செலவிட்டு தேக குணாகுணங்களையும், வியாதியின் குணாகுணங்களையும், மூலிகைகளின் குணாகுணங்களையும், உபரச குணாகுணங்களையும், பாஷாண குணாகுணங்களையும் நன்காராய்ந்து பகவனது உத்திரவால் இந்திர வியாரங்களுக்கு அருகே வைதியசாலைகளை நிருமித்து ஏழைகளுக்குங் கனவான்களுக்கும் உண்டாய வியாதிகளுக்குத் தக்க அவுடதங்களை ஈய்ந்து சுகமுறச்செய்து வருங்கால் பரத்துவாசரை அடுத்த தன் மந்திரிக்கு ஓர் மனமாறுதல் தோன்றி மாதவனிடஞ் சென்று பிடகபோதனா சரககூஸ்திரா உமது கருணையால் மனோ துக்கங்களை நீக்கும் பிடக்போதகங்களையும், தேகவு பத்திரவங்களை நீக்கும் அவுடதங்களாம் சூசரக போதங்களையும் அருளிச்செய்தீர்.

இத்தகைய போதகங்களால் மக்களுக்குள்ள மனோதுன்பங்களும், தேக துன்பங்களும் அகன்று ஆறுதல் அடைந்து வருகின்றார்கள்.

ஆயினும் உம்மெய் நெறுங்கிய வியாதியஸ்தர்களும், உமது பார்வை பெற்ற ரோகிகளும் சுகமடைகின்றார்களே அத்தகைய போதங்களை இவ்வடியார் களுக்கு அருள் புரியலாகாதோ என்றடிபணிந்தான்,

அவற்றை வினவிய பகவன் பரத்துவாசர் மாணாக்கனை நோக்கி தன் மந்திரி மனோரோகங்களை நீதிநெறி ஒழுக்கங்களாலும், தேக ரோகங்களை அவுடதப் பிரயோகங்களாலும் அவரவர்கள் தங்களுக்குத் தாங்களே உணர்ந்தும்

அவுடதங்களைத் தாங்களே உண்டும் சுகமடைவதே கிரமமாகும்.

அங்ஙனமின்றி ஓர் ஞானியினது விழிபட்டும், கைபட்டும் சுகமடை - வார்களாயின் அதன் கிரகிப்பு சுத்த ஞானிகளை யாதொன்றுந் தீங்கு செய்யாது.

தங்களைப் பெரியோனென்று மதிக்கவும், தங்களை சகலரும் கொண்டாடவும் வேண்டிய சொற்ப பற்றுள்ள ஞானிகளை அவர்களுக்குள்ள தீவினைகள் பற்றிக்கொண்டு ஞானியுந் துன்பமடைவான். ஆதலின் அத்தகைய ஆனந்தத்தை மறந்தும் கருதாதிருப்பீராக என்று மற்றுமுள்ள அவுடதப் பிரயோகங்களையும் விளக்கிவிட்டு மச்சநாடடைந்தார்.

தன்மந்திரியும் மற்றுந் தனக்குள்ள திரவியங்கள் யாவையுஞ் செலவிட்டு அவுடதப்பிரயோக தன்மஞ்செய்வதுடன் அறநெறியாம் நல்லொழுக்க தன்மங்களையும் ஊட்டிக்கொண்டு வந்தார்.

அக்காலத்தில் ஓர் வகைக் கொள்ளை நோய் தோன்றி அத்தேசவாசிகளில் அநேகர் மரணமடைந்தார்கள். அநேகர் திகிலடைந்தார்கள், அநேகர் மரண கிலேசமுற்று வருந்தினார்கள். அநேகர் பொய்ச் சந்தோஷங்கொண்டு எல்லோரையும் அழைத்து இன்றைக்கு யாவற்றையும் அனுபவித்துவிடுவோம் இன்றைக்கிருப்பதும் நாளைக்கு இருப்போம் என்பதும் நிட்சயம் இல்லை என்று சொல்லிக்கொண்டு உள்ளுக்குள் திகிலடைந்தும் வெளிக்கு சந்தோஷமாகப் பேசிக்கொண்டார்கள்.

இவ்விதமான அவ்வூர் ஆண் பெண் யாவரும் மரண பயத்துடன் கிலேசமுற்றிருக்குங்கால் பரத்துவாச தன் மந்திரியார் ஒருவர் மட்டிலும் வழக்கம் போல் மன அமைதியுடனும், சமாதானத்துடனும் வீடுவீடாய் நுழைந்து வியாதியஸ்தர்களுக்கு வேண மருந்தளித்து வருவதுடன் வேண்டிய தேறுதல்களையும் சொல்லிக்கொண்டு வந்தார்.

அக்காலத்து ஒரு மனிதன் தன்னிடம் வந்து தனது குறைகளைக் கூற ஆரம்பித்தான்.

அதாவது என்னுடைய உள்ளம் பதைபதைக்கின்றது, மனந் தடுமாற்றமடைகின்றது. மக்கள் மரணமடைதலைப் பார்க்க சகிக்கக் காதவனாய் இருக்கின்றேன், எனக்கு இறப்பு வருமாயின் யாது செய்வேன், அயலாரைப் பற்றிய அவசியம் ஒன்றுமில்லை, என் மரணத்தைப்பற்றிய கவலை கொண்டேன், எனக்கு உதவி புரியீரா , என் கவலையை

ஒழிக்கமாட்டீரா, என்மரண பயத்தை நீக்கமாட்டரா, மரணத்திற்கு என் செய்வேன் என் செய்வேன் என அலறினான்.

அவற்றை வினவிய தன் மந்திரியார் அவனை அருகில் உட்காரவைத்து அப்பா மரணபயத்தோனே! பிறர்மேற் பரிதாபமுடையோனுக்கு உதவி உண்டு. தன்மேல் அவாவுடையவனுக்கு உதவிகிடையாது. பிறர் துக்கத்தைப்பார்த்து சகியாதவனுக்கு உதவியுண்டு. தன் துக்கத்தைப்பார்த்து சகியாதவனுக்கு உதவி கிடையாது.

கஷ்டகாலமே மக்கள் உள்ளத்தை சோதிக்கும், கஷ்டகாலமே மக்களை தன்மவழியிலும் நீதிமார்க்கத்திலும் செல்லவைக்கும்.

இக்காலத்தில் மக்கள் படும் துக்கக் காட்சியைக் கண்ணில் கண்டும் உமது பேராசை ஒழியவில்லையல்லவா. தானென்னும் அகம்பாவம் நீங்க வில்லையா, உமது தாய் தங்கையர் பந்துமித்திரர்கள் படுந் துக்கக்காட்சிகளைக் கண்டிருந்தும் உனது அற்பசுகம் ஒழியவில்லை அல்லவா. அவர்களுக்கு ஏற்பட்டுள்ள துக்கங்களை நீக்குவதற்கு உதவி புரியாது உம்முடைய துக்கத்தை நீக்கிக்கொள்ள முயல்வதால் யாவர் உம்மை ஆதரிப்பார்கள்.

நீர் மற்றவர்களுக்குச் செய்த உபகாரத்தினாலேயே கார்க்கப்பட வேண்டியவராயிருக்கின்றீர். உமது அபகாரம் உம்மெய்க்கார்க்காது.

உட்கார்ந்திருந்தவனைப் பிணமாக நான்கு பெயர் தூக்கிச்செல்லு வதையும், படுத்திருந்தவனைப் பிணமாக நான்கு பெயர் தூக்கிச்செல்லுவதையும், நடந்திருந்தவனை பிணமாக நான்கு பெயர் தூக்கிச்செல்லுவதையும் கண்டிருந்தும் நீர் கொண்டிருக்கும் அவாக்கள் உம்மெய் விட்டு நீங்கவில்லை அல்லவா.

உன் மனை மாளிகைகளைப் பெருக்கிக்கொண்டது போல் உமது ஆயுளைப் பெருக்கிக்கொண்டீரோ. உமது செல்வங்களைப் பெருக்கிக் கொண்டது போல் நீடிய வாழ்க்கையைப் பெருக்கிக்கொண்டீரா.

உமக்குள்ள அன்பை நீடிக்கச்செய்தும், உமக்குள்ள சாந்தத்தை நீடிக்கச் செய்தும், உமக்குள்ள ஈகையை நீடிக்கச்செய்தும் இருப்பீராயின் உமக்குற்ற தீங்குகள் உம்மெய் அறியாமல் நீங்கும்.

அங்ஙனமின்றி மோகத்தைப் பெருக்கிக்கொண்டும், கோபத்தைப் பெருக்கிக்கொண்டும், உலோபத்தைப் பெருக்கிக்கொண்டும் உள்ள நீவிர் உமக்கு நேரிட்ட தீங்குகளை குறுக்க வேண்டுமென்று அலைவதினால் ஒருக்காலும் அத்தீங்குகள் அகலமாட்டாது.

துஷ்டனோடே துஷ்டனும், சுராபானப் பிரியனோடே சுராபானப் பிரியனும், வேசிக்கள்ளர்களுடன் வேசிக்கள்ளர்களும் சேர்ந்துக்கொண்டு தங்கள் தங்கள் கூட்டுரவைப் பெருக்கிக்கொள்ளுவது போல் இராகத்துவேஷ மோகங்களைப் பெருக்கிக்கொண்டுள்ளவன் மேலும் மேலும் அக்கூட்டுரவைச் சேர்த்துக்கொண்டு தினேதினே துக்கத்தில் ஆழ்ந்திருப்பான்.

அத்துக்கங்களை அகற்றுவதற்கு ஒருவராலும் முடியாது. அந்த துக்கங்களை அகற்றிக்கொள்ள வேண்டியவன் முன்பு தனக்குள்ள கோபமோக லோபங்களை அகற்றிக்கொண்டே வந்திருப்பானாயின் தனக்குத் தெரிந்துந் தெரியாமலும் நேரிட்ட துக்கம் தெரிந்துந் தெரியாமலும் அகன்றுபோம்.

ததாகதர் உமக்கருளிய திவ்ய போதகத்தின்படி ஒவ்வொரு மனிதனின் தோற்றமும், ஒடுக்கமும், ஏதுவும், நிகழ்ச்சியும், சுகமும், துக்கமும், செல்வமும், தாரித்திரமும், நீடியவாயுளும், குறுகிய ஆயுளும், அவனவன் கருமத்திற்கு ஈடாய் தேருருளைபோற் சுழன்றுவரும். அவர்கள் கன்மத்துக்கீடாய் ஓர் குடும்பமும் சுழன்று வருகின்றது. ஓர் கிராமவாசிகளும் சுழன்று வருகின்றார்கள். ஓர் தேசவாசிகளும் சுழன்று வருகின்றார்கள் நான்கு பூதகன்மங்களின் செயலால் தேசங்களும் மாறுதல் அடைகின்றவாதலின் நீர் உமது துக்கத்தை அகற்றவேண்டுமென்று கோறுவது வீண்கோறிக்கையேயாகும்.

எது விஷயத்தில் பயமும், எது விஷயத்தில் துக்கமும் பெருகி உள்ளதென்று விசாரித்து பயத்திற்கான ஏதுவையும், துக்கத்திற்கான ஏதுவையும் உய்த்து நிதானிப்பீராயின் ஒருவர் உதவியுமின்றி தன்னிற்றானே தோன்றியுள்ள பயத்தையும், துக்கத்தையும் போக்கிக்கொள்ளுவீர்.

இவைகள் யாவற்றிற்கும் புத்தரின் அடைக்கலமே பெருநிதியாகும். அவரது தன்மமே அமியா பொக்கிஷமாகும். அவரது சங்கமே சதானந்தக கூட்டமாகுமென்று உலகவாழ்க்கையையும், வீண்டம்பத்தையும் விளக்கி துக்கமுற்றோனுக்கு ஆறுதல் கூறிச் சங்கத்தில் ஒருவனாகச் சேர்த்துவிட்டார்.

மாதவமறையோன் மச்ச நாடடைந்து அவ்விடமுள்ள மக்களுக்கு அரிய தன்மத்தை உபதேசித்து வருங்கால் மச்சனென்னும் ஓர் விவேகியார் வேதமுதல்வனை அடுத்து உலகத்தில் மெஞ்ஞான சுடர்விளக்காக விளங்கும் உத்தமனே, அன்பே ஓருருவாக வந்த அருகனே, சகலருஞ் சாற்றிக் கொண்டாடுதற்குரிய சாத்தனே, சாந்தமே ஓருருவாகத் தோன்றிய சதுர்முகனே, ஈகையே ஓருருவென அமைந்த ஈசனே! தன்னுயிர்க்கிரங்காது பிறவுயிர்க்கிரங்கும் பிரமமே இவ்வடியேனையுந் தங்கள் சங்கத்தில் ஒருவனாகச் சேர்த்து ஈடேற்றவேண்டும் என்றடிபணிந்தான்.

அக்கால் அருகன் மச்சனைநோக்கி அப்பா மச்சனே! நீவிர் இல்லறத்தை விட்டு முனிந்து துறவறமாம் சத்திய சங்கத்தைச் சாரவேண்டுமென்னுங் கோறிக்கை கொண்டபடியால் உமக்குள்ள அசத்தியங்களாகும் அநித்திய தோற்றங்கள் யாவையும் மறந்து சாத்தியமாகும் நித்தியமெஃதென்று தெளிந்து நீடிய ஜாக்கிரதையில் இருத்தல் வேண்டும்.

அங்ஙனமின்றி இல்லற இன்பமும் வேண்டும், துறவற டம்பமும் வேண்டுமென்று முனிவீராயின் உன்மத்தர் போலும், பாலர்போலுந் திகைத்து உப்பு சாரமற்றுவிட்டதுபோல் உலகத்தோருக்கு ஓர் பிரயோசனமுமற்ற வராய் விடுவீர்.

நீவிர் எடுக்கும் முயற்சியும், உமது அதி தீவரபக்குவமும், சதா ஜாக்கிரதையிலும், சதாவிழிப்பிலும் இருந்து இரவு பகலற்ற இடத்தில் நிலைப்பீராயின் உலகில் தோன்றியுள்ள சருவ சீவர்களுக்கும் உதவியோரா யிருந்து உள்ள சீவர்களையும் உத்தமர்களாக்கி வைப்பீர்.

அவர்களடைந்த உத்தம நிலையால் மற்றுமுள்ள மத்திமரதமர்களையுஞ் சீர்திருத்தி செவ்வனே விளங்க வைப்பார்களென்றார்.

மச்சனார் மாதவனை வணங்கி ஐயனே! சருவசீவர்களும் இரவு பகலற்ற நிலைக்குவரக்கூடுமோ என்றார். 'மச்சனே! நீவிரிது மட்டிலும் இல்லற இன்பத்தையே பேரின்பமாகக் கருதி மச்சனென்னுந் தனிப்பெயரினின்றீர். தற்காலமோ இல்லற இன்பத்தை மறந்து துறவற இன்பத்தில் முனிந்தீர். அத்தகைய முனிவைக்கொண்டு அதன் தீவரகாரியத்தால் மச்சனென்னும் பெயருடன் மச்சமுனி என்னுங் காரணப்பெயர் தோன்றும்.

அதுபோல் எக்காலுமுள்ள பூமியினின்று ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியால் முதற்றோற்றமாம் புற்பூண்டுகள் தோன்றி, புற்பூண்டுகளினின்று இரண்டாந் தோற்றமாம் புழுக்கீடாதிகள் தோன்றி, புழுக்கீடாதிகளினின்று மூன்றாந் தோற்றமாம் மட்சம் பட்சிகள் தோன்றி, மட்சம் பட்சிகளினின்று நான்காவது தோற்றமாம் ஊர்வனங்கள் தோன்றி, ஊர்வனங்களினின்று ஐந்தாவது தோற்றமாம் விலங்குகள் தோன்றி, விலங்குகளாம் வானரரினின்று ஆறாவது தோற்றமாம் வாலற்ற நரர்களென்னும் மக்கள் தோன்றி, மக்களினின்று மானிகளாய் ஏழாவது தோற்றமாம் இரவு பகலற்ற இடத்தினின்று தேவர்களாகத் தோன்றி சருவசீவர்களுக்கும் உபகாரிகளாக விளங்குவார்களென்று கூறினார்.

அவற்றை வினவிய மச்சன் சீவராசிகளே அதனதன் நற்கருமத்தால் உயர்ந்து மனுக்களாகத் தோன்றி, மனுக்களின் நற்கரும் விவேகவிருத்தியால் இரவ பகலற்றவிடஞ் சென்று தேவர்களென்னும் பெயர்ப்பெறுவதாக உணர்ந்து உள்ளமுடையானை வணங்கி ஒப்பிலா எமதப்பனே தாம் கூறியுள்ள இரவு

பகலற்றவிடமெங்குளது அதனைச் சேரவேண்டிய வழி எவை அவற்றை விளக்கி ஆட்கொள்ளவேண்டு மென்றடிபணிந்தான்.

**<u>மச்சமுனி எண்ணூறு</u>**

செய்வதற்கு செப்புகிறேன் கருவைக்கேளு
ஜெகந்தழைக்க உண்டான செடி பூண்டெல்லாங் கொய்வதற்கு
வேளை கண்டு பிடுங்கிவந்து. குருவருளால் மந்திரத்தால் கொடுத்துப்பாரு நெய்வதற்கு
ஒடமிட்ட வயணம் போலே
நெறிநின்றால் சகலசித்தும் நிலைக்கும் பாரு
உய்வதற்கு வழி பாரு பொய் பேசாதே
ஒருநாளுங் குருமொழியை மறந்திடாதே
மறந்திடா மறைகுலத்தில் உபயத்தந்திரம்
மச்சனென போதற்கு முன்புயாகும்
பிறந்திருந்த வென்தேசம் மச்சதேசம்
பிரமனுக்கு தொண்டு செய்து பிறகு தானும்
அறந்தழைக்க ஓதிவைத்தார் வித்தை எல்லாம்
அவருடைய புண்ணியத்தால் வரையிலேறி
நிறைந்த சித்தா ஆச்சிரமந் தன்னில் சேர்ந்து
நிட்டையிலேயிருந்துருகு நிலைகண்டேனே.

அவலோகிதர் அவனது விசாரிணைக்கு அன்புகூர்ந்து மச்சனே! நீவிருலகத்தோடு உருண்டு வருகின்றீர். அதாவது உலகம் சனியால் இருளும் போது தாமும் இருண்டு நித்தியால் மூடிக்கொள்ளுகின்றீர். உலகம் பகலவனாம் சூரியனால் பிரகாசிக்கும் போது தாமும் நித்திறையை நீக்கி விழிக்கின்றீர்.

இத்தகைய இறப்பும் பிறப்புமாகும் விழிப்பும் நித்திறையும் பெருகி பெருநித்திறை அடைந்துவிடுவீராயின் மாறா பிறப்பிறப்பிற்கு ஆளாகி மங்கா துக்கத்தை அனுபவிப்பீர்.

ஆதலின் உம்மெய்க்கு அப்புறப்பட்ட வஸ்து ஏதோவொன்றிருக்கின்ற தென்றும், உம்மாற் காணாதவஸ்து ஒன்றிருக்கின்றதென்றும், உள்ளங்கலங்காது உம்மெய்யாம் நிலம், நீர், தீ, காற்றலாய உருவமும் உணர்ச்சி எண்ணமென்னும் நாமமுமாகிய இரண்டுமே உம்மெய்யாட்டுவதும் ஓட்டுவதும், கார்ப்பதும், தூர்ப்பதும், போஷிப்பதுமாய் இருக்கின்றபடியால் எண்ணத்தாலாயப் பேராசையின் கேடுகளையும், உணர்ச்சியினாலய இன்பத்தின் கோடுகளையும் நன்காராய்ந்து பார்ப்பீரானால் இம்மெய் , மறுமெய் என்னுந் தோற்றங்களும், சுகம் துக்கமென்னும் நுகர்வுகளும், வேண்டுதல் வேண்டாமெனும் அவாக்களும், இரவு பகலென்னுங் காலங்களும் எளிதில் விளங்கும்.

அதாவது - இருளவன் மறைக்குங்கால் நித்திறை சுகத்தை நாடுதலும், பகலவனுதிக்குங்கால் புசிப்பின் சுகத்தை நாடுதலுமாகியச் செயலினின்று விடுபட்டு சதாவிழிப்பாம் ஜாக்கிரதையினின்று உலக வாழ்க்கையின் சுகத்தால் உண்டாகுங் கேடுகள் யாவையும் கண்டறிந்து எண்ணும் பீடத்தில் தீங்கான எண்ணங்களைத் தங்கவிடாமல் அகற்றியும், சிற்றின்ப உணர்ச்சியில் சுகிக்காமல் அகன்றும் இரவு தோன்றியதென்னும் எண்ணமும், பகல்தோன்றியதென்னும் உணர்ச்சியும் அற்று நிற்பீராயின் இரவுபகலற்றவிடந்தோன்றும். உமது இதயமாகிய கண்ணாடியில் பதிந்திருந்த காமவெகுளி மயக்கங்களாகும் அழுக்குகள் யாவும் அகன்று இதய கண்ணாடி பளிங்குபோல் பிரகாசிக்கும். அப்பிரகாச நிலையில் பலதேசங்களுக்குள் தோற்றுவதன்றி பற்பல சீவராசிகளின் எண்ணங்களும் உமக்குள் விளங்கும்.

அன்று முதல் நன்றாய்த் தூங்கினேன், நன்றாய் விழித்தேனென்னும் சுகசொற்களுமற்று தூக்கமில்லாது வாதை அடைந்தேன், விழிக்கக்கூடாத மயக்கத்தில் ஆழ்ந்தேனென்னுந் துக்க சொற்களுமற்று இரவுபகலென்னுங் காலனைச் செயித்து கொள்ளுவீர்.

காலனென்னும் மரணகால ஜெயமுண்டானபோது இறப்பு பிறப் பென்னும் இரண்டற்ற நிருவாணம் பெறுவீரென்று போதித்து அந்த மச்சநாட்டுள் வியாரமொன்று கட்டுவித்து மச்சமுநிவரையும் தன்மப் பிரியர்களாம் சமணமுநிவர்களையும் அவற்றுள்

நிலைக்கச்செய்து அவரவர்கள் இதயங்களிலுள்ள சங்கைகள் யாவையும் நிவர்த்திச் செய்துக்கொண்டிருந்தார்.

சங்கறநிறையோனாகும் அவலோகிதர் மச்சவியாரத்தினின்று குணபாடம், இரணபாடங்களாம் சூசரகங்களை விளக்கி தேகவியாதியின் உபத்திரவங்களை நீக்கும் உபாயங்களை அருளியதினால் அவரை உலகவைதியோவென்றும், வைதியநாதனென்றுங் கொண்டாடி வந்தார்கள்.

**அருங்கலைச்செப்பு - மச்சப்பத்து**

மச்சநாடன்றன் மனவிருளகற்றி இச்சையீதென்றானிறை இச்சையாலுண்டாமிடுக்கங்கள் யாவும் , மூச்செய் வினையென்றறி வினையின் செயலே வெளிவுறு தோன்றி, முதியும் மூர்க்கனென்று உணர் சினமும் அமைதியும் செய்தொழில் யாவும் , உனதுணரெண்ண மதாம்.
சுகமதை நாடி சுகிக்க விருத்தல், இகநிலை துக்கத்தொடர்.

12. **விசாகா காதை**

அக்கால் கோசலமென்னும் அயோத்தியாபுரியின் உள்நாடாகும் ஷ்ராவஸ்தியில் மிகாரா என்னும் ஓர் தனவந்தனிருந்தான்.

அவனுக்குப் புண்ணியவர்த்தனனென்னும் ஓர் புத்திரனுண்டு. அவன் பாலதானமாம் பதினாறு வயது கடந்து குமரதானம் உண்டாயதால் வதுவைக்கு ஏது செய்து தாயுந் தந்தையருங் கூடி மைந்தனை அழைத்து மகனே உனது கண்ணுக்கு ரம்மியமான பெண்ணை நியமித்துக்கொள்ளலாமென்றார்கள்.

அவற்றை வினவிய புண்ணியவர்த்தனன் தாய் தந்தையரை விளித்து அவ்வகை எண்ணத்தை யான் கொள்ளவில்லையே என்றான்.

தாய் தந்தையர் மைந்தனை விளித்து அப்பா காலங்கடக்குமாயின் சந்ததி அற்றுப்போம் , உன் வதுவைக்கு இதுவே காலமென்றார்கள்.

அவர்கள் வார்த்தையை வினவிய மைந்தன் வேண்டாமென்று மாறுத்திரங்கூறாது உங்கள் மனோபீஷ்டப்படி யாகட்டும். அப்பெண் பஞ்ச லட்சணம் அமைந்திருப்பாளாயின் அவளை மணஞ்செய்வதே மங்கலமென்றான்.

தந்தை தாயர் மைந்தனை நோக்கி மகனே! பஞ்சலட்சணமென்பதெவை என்றார்கள். மங்கை பருவ மான் துளிர் மேனியழகு, ஒடுங்கிய உடலழகு, மயிரழகு, பல்லழகு, சந்திரவதன ஒளியழகுமே என்றான்.

அவற்றை உணர்ந்த தாய் தந்தையர் நிமித்தகர்களை - பஞ்சலட்சணம் அமைந்த பெண்கள் உலகத்திலுண்டோ என்றார்கள். பஞ்சலட்சணம் அமைந்த பெண்களுண்டு ஆனால் தேடி கண்டுபிடிக்க வேண்டுமென்றார்கள்.

தனபதி தக்க மதியூகிகளாகும் நிமித்தகர்களை வரவழைத்து வேண பரிசளித்து சிறந்த மோகனமாலை ஒன்றை அவர்களிடங்கொடுத்து பஞ்சலட்சணம் அமைந்த மங்கை தோற்றுவாளாயின் அவள் கழுத்தில் இம் மாலையை அணிந்து வாருங்கோள் என்று அனுப்பினான்.

நிமித்தகர்கள் தனபதியின் உத்திரவைப் பெற்று பலதேசங்களுக்குச் சென்றும் பஞ்சலட்சணப் பெண் தோற்றாமல் மிக்க துன்புற்று மெலிந்து வரும் வழியில் சகிதா என்னும் நகரத்தை அடைந்தார்கள்.

அந்நாள் அந்நகரவாசிகளுக்கு சகிதா என்னும் முல்லைபுட்பவிழா கொண்டாடும் மங்கையர் நாளாயிருந்தது.

அதனைக் கொண்டாடுமாறு மங்கைபருவப் பெண்கள் யாவரும் முல்லை பட்டங்களை தட்டுகளில் நிறப்பிவந்து முல்லை செண்டுகள் செய்தாடுவதும், முல்லைபாடல்

பாடுவதுமாக ஆற்றங்கரையை அணுகி ஆனந்த நீராடி ஒருவர்மேல் ஒருவர் புட்பமிரைத்துக் கொண்டிருந்தார்கள்.

முல்லை கொண்டாட்டத்தைக் கண்ட நிமித்தர்கள் யாவரும் அங்குள்ள ஓர் சத்திரத்தில் உட்கார்ந்து முல்லைவிழாப் பெண்களுள் பஞ்ச லட்சணமமைந்தப் பெண் ஏதேனும் உண்டோ என்று கண்ணோக்க முற்றிருந்தார்கள்.

அக்கால் மழைப்பெய்ய ஆரம்பித்தது. பெண்கள் யாவரும் ஓடி வந்து சத்திரத்தில் சேர்ந்துவிட்டார்கள். விசாகா என்னும் மங்கை மட்டிலும் மெதுவில் நடந்து சத்திரம் வந்து சேர்ந்தாள்.

அக்காலத்தில் சத்திரத்தில் வீற்றிருந்த நிமித்தகர்கள் யாவரும் விசாகாவுக்குள்ள நான்கு லட்சணங்கள் சரிவரயிருப்பதைக் கண்டு பல்லின் லட்சணத்தை காணாதவர்களாய் விசாகாவை நோக்கி அம்மே! உம்முட னிருந்தப் பெண்கள் யாவரும் அதிகம் நனையாமல் ஓடிவந்துவிட்டார்களே அதுபோல் நீயும் ஓடிவந்துவிட்டால் உனது வஸ்திரம் அதிகம் நனையாதன்றோ என்றார்கள்.

விசாகா நிமித்தர்களை நோக்கிப் பெரியோர்களே! நான் அவர்களிலும் ஓட சக்த்தியுள்ளவளே ஆயினும் சிலகாரணங்களை உணர்ந்து ஓடாமல் நடந்துவந்தேனென்றாள்.

அன்புமிகுத்த குழந்தாய்! அதன் காரணங்கள் என்னை என்றார்கள்.

பெரியோர்களே! ஒடுவதினால் நான்குவகை கௌரவப்பழுதுண்டு.

அதாவது, இராஜகோலங்கொண்ட அரசன் ஓடுவானாயின் அவனைக் கண்டோர் மதியார்கள். அலங்காரஞ் செய்துள்ள பட்டத்துயானை ஓடுமாயின் அதனைக் கண்டோர் மதியார்கள். பற்றற்ற ஞானி ஓடுவானேயாயின் அவனைக் கண்டோர் மதியார்கள், கற்புடையப் பெண்கள் ஓடுவார்களேயாயின் அவர்களைக் கண்டோர்களும் மதியார்கள்.

மற்றும் ஓடுவதினால் இன்னோர் குறைவுமுண்டு. எங்கள் தாய் தந்தையர்களால் நாங்கள் விலையாகும் பெண்கள் ஒவ்வோர் அவயங்களையும் விலைமதித்து வைத்திருக்கின்றார்கள்.

அதிலொன்று ஓடுவதினாலும், ஆடுவதினாலும் பழுதடையுமாயின் வரும் எங்களை விவாகத்திற்கு விரும்பமாட்டார்கள். இதுதான் நான் ஓடாததற்கு மற்றொரு காரணமென்றாள்.

விசாகா பேசிக்கொண்டிருந்த நேரமெல்லாம் அவள் பற்களின் அழகைப் பார்த்தும் அவளது புத்தியின் விருத்தியை அறிந்தும் இத்தகைய லட்சணமுள்ள மங்கையை இதுவரையிலுங் கண்டதில்லை என்று எண்ணி அவளைப் புகழ்ந்து அவளது கழுத்தில் தங்கள் கரத்திருந்த மோகனமாலையை அணிந்து குழந்தாய்! உம்மால் இம்மாலை அழுகுபெற்றதென்றார்கள்.

விசாகா திடுக்கிட்டு பெரியோர்களே! தாங்கள் எவ்விடமிருந்து வந்தீர்களென்றாள். குழந்தாய்! ஷ்ராவஸ்தியிலிருந்து வந்தோமென்றார்கள் தங்களதிபதியின் பெயரென்னையென்றாள் குழந்தாய்! அவர் பெயர் மிகாரா தனபதியென்றார்கள் பெரியோர்களே! எமதையன்பெய ரென்னையென்றாள் குழந்தாய்! உமதையன் பெயர் புண்ணியவர்த்தன சிறுவனென்றார்கள். மாலை சூடப்பட்ட விசாகா நடந்தவர்த்தமானங்கள் யாவற்றையுந் தனது தாய்தந்தையர்களுக்கு அறிவித்தாள்.

மாலைசூட்டப்பட்ட பெண்கள் யாவரும் மாலைக்குரியவன் மனையைச் சேரவேண்டியது வழக்கமாதலின் அதுபோல் விசாகாவும் ஐஞ்நூறு தேர்களில் தோழிகளுடனும், நிமித்தகர்களுடனும், சிலபெரியோர்களுடனும் பிரயாணத்திற்கு ஆயத்தமானபோது விசாகாவின் தந்தை நிமித்தகர்களை நோக்கி தாங்கள் எவ்விடமிருந்து வந்தீர்களென்றான்.

தனபதி யாங்கள் ஷ்ராவஸ்தி நகரத்திலிருந்து வந்தோமென்றார்கள். அந்நகர தனபதியின் பெயரென்னை யென்றான் மிகாரா தனபதி யென்றார்கள் அவரது

புத்திரன்பெய ரென்னையென்றான் புண்ணியவர்த்தன சிறுவனென்றார் கள் தங்கள் தனபதியின் செல்வமதிப்பென்னையென்றான் தனபதி நாற்பது கோடிக் காகுமென்றார்கள்.

அஃது எமது செல்வத்திற்கோர் திரணமாகாது. ஆயினும் என்குமாரத்தி காலதேச வழக்கத்தையும் விவாகக் குறிப்பையும் ஒட்டி எப்போது மாலைசூட்டப்பட்டாளோ அப்போதே ஒருவனுக்குத் துணைவியாகிவிட்டாள். இனி செல்வத்தைப்பற்றி யோசிப்பதில் யாது பயனுமில்லை என்று சம்மதித்துக்கொண்டான்.

விசாகாளுக்கு மாலையணிந்த நிமித்தகர்கள் யாவரும் முன்பு சென்று வர்த்தமானங்கள் யாவற்றையும் மிகாராதனபதிக்கு விளக்கியபோது மிகாரா தனபதி சாகித நகரவாசியாகும் தனஞ்சய தனபதியிடம் வந்து சேர்ந்து தனது மருமகளை அழைத்துப்போகும்படி ஆரம்பித்தான்.

அக்கால் தனஞ்சய தனபதி தனது மகளை திவ்யாபரணங்களால் அலங்கரித்து தேர், ஒட்டகம், குதிரை, யானை முதலிய ஸ்ரீதனங்களளித்து தனது மகளை அருகிலழைத்து குழந்தாய்! உனது கணவன் வீட்டிற்குச் சென்றவுடன் நீ நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் சிலதுண்டு.

அவை யாதெனில்:- உன் மாமனார் வீட்டிலிருக்கும் வரையில் வீட்டின் நெருப்பு வெளியில் போகலாகாது, வெளி நெருப்பு வீட்டிற்கு வரலாகாது. கொடுப்பவனுக்குக் கொடு, கொடாதவனுக்குக் கொடாதே, கொடுத்தவனுக்குங் கொடாதவனுக்குங் கொடு, சுகத்துடன் உழ்க்காரு, சுகத்துடன் உண்ணு சுகத்துடன் நித்திறை செய், அக்கினியைக் கவனி, வீட்டு தேவதைகளை விசுவாசி என்று பத்து தனமதிகளையும் அளித்தான்.

விசாகா இத்தியாதி சம்பத்துகளையும் பெற்றக் கொண்டு தனது மாமனார் மிகாரா தனபதியும் மற்றுமுள்ளோரும் புடைசூழஷ்ராவஸ்தி நகரத்தை நோக்கிச் சென்றார்கள்.

மிகாரா தனபதி தனது பின்னால் வருங் கூட்டங்களைக்கண்டு இவர்க ளெல்லோரும் யாரென்று வினவினான்.

“உமது மருமகளின் தோழிப்பெண்களும் ஏவலாளருமென்றார்கள்”

அதனை வினவிய மிகாரா தனபதி மறுண்டு இத்தனை ஆட்களை வைத் துக்கொண்டு யாரால் போஷிக்கக்கூடும்? இவர்கள் யாவரையும் அடித்துத் துறத்திவிடுங்கோளென்று ஆக்கியாபித்தான்.

அவர்களுடைய வேவுகர்கள் துறத்துங்கால் விசாகா தடுத்தும் அதனைக் கவனியாது துறத்தியதால் ஓடியவர்கள் போக சிலர் பின்தொடர்ந்து வந்தார்கள்.

விசாகா தனது மாமனார் இல்லஞ் சேர்ந்தவுடன் தனக்களித்திருந்த இஸ்திரீதனங்கள் யாவற்றையும் பங்கிட்டு தனது சுற்றத்தாருக்கு வந்தனத்துடன் அநுப்பிவிட்டாள்.

காரணம் அந்த ஸ்திரீதனங்கள் யாவும் தனதேவலாளர் போஷிப்புக் கென்றே கொண்டுவந்ததாதலின் அவர்கள் யாவருந் துறத்தப்பட்டபோது இனி யாரைப் போஷிப்போமெனக் கருதி தனதில்லத்திற்கே திருப்பிவிட்டு தன்மாமனார் குணாகுணங்களைக் கேட்டப் பணிப்பெண்களுக்கு விஷயங்களை விளங்கப் போதித்தாள்.

அதாவது தோழிகளா! எனது மாமனார் தனத்தை சேகரிக்குந் தொழிலாளரே அன்றி அநுபவிக்குஞ் சுகவாளறன்றென்று விளங்குகின்றது.

எவ்வகையில் என்பீரேல், பூர்வபுண்ணிய பலத்தால் தனவிருத்தியடைவது இயல்பாகும். அத்தகைய தனத்தால் தானும் சுகித்து தன்னை அடுத்தோரையுஞ் சுகிக்கச் செய்தல் தனாதிபதிகளின் இயல்பாம். அங்ஙனமின்றி குப்பையைக் தொல்லையில் சேர்ப்பது போல் செல்வத்தை இல்லத்தில் சேர்த்து வைப்பவர்களை தனபதிகளென்றுங் குணபதிகளென்றுங் கூறலாகாது. ஆதலின் எனது இஸ்திரீதனத்தையும் மாமனாற்

குப்பையில் சேர்க்காது சகலருக்கும் உபகாரியாக விளங்குந் தனபதிகளிடமே அனுப்பிவிட்டேனென்றாள்.

மணமகளில்லஞ் சேர்ந்து நிமித்தகர்களால் வதுவை நிறைவேறியவன்றிரவு தனக்கு இஸ்திரீதனமாக வந்தப் பெண்குதிரை குட்டி ஈன்றதை வேவுகர்களால் அறிந்து அவ்விடஞ் சென்று கொட்டாரத்திலுள்ளக் குதிரையையும் அதன் குட்டியையும் பார்வையிட்டு வேவுகர்களால் வேண உபசரிப்புச் செய்து ஆகாரமளித்து வந்தாள்;

சிலகாலங்களுக்குப்பின் காலை நேரத்தில் சமணமுனிவர் ஒருவர் பிச்சாபாத்திரம் ஏந்தியிருந்த பெரியோரை கவனியாமலும், அன்னமளிக்கும்படி உத்தரவு கொடாமலும் இருந்த தனது மாமனாரின்லோபத்துவமுணர்ந்த விசாகா மனவருத்தமுற்று தென்புலத்தோர்க்கு ஈயாதனமிருந்தென்ன போயென்ன குறைந்தென்ன மிகுந்தென்ன என்று சொல்லிக்கொண்டே மனைக்கள் போய்விட்டாள்.

அதனைக் கேட்டிருந்த மிகாரா தனபதிக்கு கோபமீண்டு வேவுகர்களை அழைத்து இந்தப் பெண் எனது மனைக்குள் வந்து சிறிது நாளைக்கெல்லாம் என் தனம் இருந்தென்ன போயென்ன என்னும் சாபமிடுகின்றாள் உடனே என் இல்லத்தைவிட்டு இவளை அகற்றிவிடவேண்டுமெனக் கூச்சலிட்டான்.

அவ்விடமிருந்த வேவுகர்கள் யாவரும் விசாகாவின் ஆட்களாதலின் அம்மொழியைக் கவனிக்காமல் மௌனமாயிருந்தார்கள்.

அக்கொடுமொழியை வினவிய விசாகா தனது மாமனாரை நோக்கி, ஐயனே! என்னைத் தெருவிலிருந்துக்கொண்டு வந்ததுபோல் வார்த்தையாடி விட்டீர், என்னை வெளியிற்றுரத்தும்படியான அவக்கேடுகள் யான் செய்த தென்னை, அவற்றை விளக்கவேண்டுமென்று கேட்டாள்.

மிகாரா தனபதி நானவற்றை விளக்க வேண்டிய அவசியமில்லை என்றான்.

விசாகா மறுபடியும் மாமனாரை நோக்கி ஐயனே! காகதாளி நியாயம் வேண்டாம். என்னுடன் வந்துள்ள எட்டுக்கிரகஸ்தர்களையும் வைத்து விசாரிப்பதே நலமென்று வேண்டி தன்னுடன் வந்த எட்டுக்கிரகஸ்தர்களையும் வரவழைத்தாள்.

மிகாராவும் தனது கிரகஸ்தர்களை வரவழைத்த போது இருவருங்கலந்து உழ்க்கார்ந்தார்கள். விசாகா இருகட்சி பெரியோர்களை வணங்கி ஐயன்மின்! எனது மாமனார் வாய்ச்சுளுவாக என்னை வீட்டைவிட்டுப் போகும்படி சொல்லுகிறார் அதைத் தாங்கள் தீரவிசாரித்து என்னை அனுப்பிவிட வேண்டுமென்று வணங்கினாள்.

அதனை வினவிய மத்தியர்கள் தனபதியை நோக்கி யாது காரணமென்றார்கள்,

“என் தனத்தை குறைந்தென்ன மிகுந்தென்னவென்று சபித்தாள் அதினால் துறத்தும்படி சொன்னேனென்றான்”

பெரியோர்கள் விசாகாவை நோக்கி அம்மே! காரணம் யாதென்றார்கள்.

"தென்புலத்தோர் பாத்திரமேந்தி வாயல்படியில் வந்து நின்றதும் தன் மாமனார் அவரைப்பார்த்தும் பாராதது போல் புசித்திருந்தது கண்டு அவ்வாக்கியம் புகன்றது மெய்யேயென்று கூறினாள்.

அதனை வினவியப் பெரியோர் தனபதியை நோக்கி ஐயா! இவ்வரு மொழிக்கு எமது குழந்தையை வெளியேகும்படி சொல்லலாமோ என்றார்கள்.

அதனைவினவிய மிகாரா பெரியோர்களை நோக்கி இரவு நடுஜாமத்தில் உங்கள் குழந்தை வெளியில் போகலாமோ என்றான்.

பெரியோர்கள் விசாகாவை நோக்கி அம்மே! ஜாமத்தில் வெளியேறிய காரணமென்ன என்றார்கள்,

தனது பெண்குதிரை குட்டி ஈன்றதும் வேவுகர்களால் சங்கதி தெரிந்து அவ்விடஞ்சென்று குதிரைக்கு சிகிட்சை செய்ததும் விளக்கினாள்.

அதனை வினவிய பெரியோர்கள் தனபதி! யாதுதோஷமுங் காணவில்லையே என்றார்கள்.

மிகாராதனபதி பெரியோர்களை நோக்கி மருமகள் செய்வது ஓர் வகையாயிருப்பினுந் தனது தகப்பனார் தனஞ்சய தனபதி கூறியவாக்குகளில் தன் நெருப்பை வெளியில் விடாதே வெளி நெருப்பை வீட்டுள் கொண்டுவராதே என்று கூறியுள்ளாரே இது நியாயமோ என்றான்.

அதனை வினவியப் பெரியோர்கள் விசாகாவை நோக்கி குழந்தாய்! அவ்வகை நிகழ்ந்ததோ என்றார்கள்.

பெரியோர்களே! என் பிதா இவர் கூறியவண்ணங் கூறவில்லை யான்கூறும் வண்ண ங் கூறினார்.

பெரியோர்களே! என் தகப்பனார் கூறிய கருத்து அதுவன்று. அவரென்னை நோக்கி குழந்தாய்! உன் மாமனாராயினும், உன் மாமியாராயினும், உன் புருஷனாயினும், உன் விஷயத்தில் ஏதேனுங் கொறூரவார்த்தைகளைப் பேசினாலும் வைதாலும் அவற்றை அயல் வீட்டிற்குச் சென்று அந்நெருப்புக் கொப்பாகிய வார்த்தைகளை சொல்லிவிடுவாயாயின் அஃது உன் வீட்டிற்கும் அயல் வீட்டிற்கும் பற்றி எறிந்து பற்பல துக்கங்களை எழுப்பிவிடும். ஆதலின் உன் வீட்டு நெருப்பை வெளிவிடாதே என்று கூறினாரென்றாள்.

அதனை வினைவிய மிகாரா தனபதி அதுசரிதான் வெளிவீட்டின் நெருப்பு உள்ளுக்கு வராவிடின் பதார்த்த வகைகள் எவ்வகை நிகழும் இவ்வார்த்தைக் கூறலாமோ என்றான்.

விசாகா பெரியோர்களை நோக்கி ஐயன்மின்! எனது பிதாவின் கருத்து அஃதன்று. அண்டை வீட்டார் அயல்வீட்டார் உன்னை தருவித்து உன் மாமனாரைப் பற்றியேனும் உன் மாமியாரைப்பற்றியேனும், உன் புருஷனைப் பற்றியேனும் நெருப்புக்கொப்பாகிய தீங்கான வார்த்தைகள் ஏதேனும் புகல்வார்களாயின் அவ்வார்த்தையை வீட்டுள் கொண்டுவந்து நெருப்புக் கொப்பாங் கலகத்தை மூட்டிவிடாதேயென்று கூறினார்.

ஈதன்றி எனது தந்தையார் ஓதியுள்ள மற்றுங் கட்டளையும் விவரிக்கின்றேன்.

கொடுத்தவனுக்குக் கொடு என்பதின் பொருள்.

உன் வீட்டிலிருக்கும் ஓர் வஸ்துவை ஒருவன் இரவல் வாங்கிக்கொண்டு மறுபடியுங் கொண்டுவந்து கொடுப்பானாயின் அவனுக்குக் கொடு.

கொடாதவனுக்குக் கொடாதே என்பதின் பொருள்.

உனது பொருளை இரவலென்று வாங்கிக்கொண்டு போய் மறுபடியுங் கொடாதவனுக்குக் கொடாதே.

கொடாதவனுக்குக் கொடு என்பதின் பொருள்.

கொடாத லோபியாயிருப்பினும் அவன் வருந்தி இரந்தகாலத்தில் கொடு. கொடுத்தவனுக்குக் கொடு ஒருகால் உனக்கு உபகாரஞ் செய்வானாயின் பலகாலும் அவனுக்குக் கொடு.

காலத்தில் உட்காரு என்பதின் பொருள்.

உன் மாமனாரேனும், உன் மாமியாரேனும், மற்றும் பெரியோர்களேனும் எதிரிருக்குங் காலங்களில் உட்காராதே. அவர்களெதிரில் இல்லாத காலங்களில் உட்காரு.

காலத்தில் சாப்பிடு என்பதின் பொருள்.

உன் மாமனார் மாமியார் புருஷன் இவர்கள் புசித்து திருப்த்தி அடைந்தபின் காலத்தில் நீ சாப்பிடு.

காலத்தில் தூங்கு என்பதின் பொருள்.

உன் மாமனார், மாமியார், புருஷன் நித்திறையடைந்த காலத்திற்குப்பின் நீ நித்திறைக்கொள்.

நெருப்பை கவனி யென்பதின் பொருள்.

உன் மாமன், மாமி, நாத்தி, மாதுலி, புருஷன் இவர்களை நெருப்பென்று கவனித்து மிருதுவாக்கில் வாழக்கடவாய்.

வீட்டு தேவதைகளை விசுவாசி என்பதின் கருத்து.

உன் மாமன், மாமி, புருஷன் இவர்களை வீட்டு தேவதைகளெனக் கொண்டாடக்கடவாய் என்று கூறியுள்ளார்.

எனது தந்தை எனக்களித்த இஸ்திரீதனங்களில் அழியாதனங்கள் இவைகளே என்று வாய் பொத்திநின்றாள்.

"விசாகாவின் வாய்மொழிகள் யாவையுங் கேட்டிருந்த மிகாராதனபதி மறுமொழி கூறுவதற்கு ஏதுவில்லாமல் நாணடைந்து தலைகவிழ்ந்து பூமியைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

இதனையுணர்ந்த கிரகஸ்தராகிய பெரியோர்கள் மிகாராதனபதியை நோக்கி மற்றுங் குற்றங்கள் ஏதேனும் உண்டோ என்றார்கள்.

பெரியோர்களே! யாதொரு குற்றமுமில்லை என்றான்.

யாதாமோர் குற்றமுமில்லாதிருக்க குழந்தையை வெளியிற் போகும் படிக் கூறலாமோ என்றார்கள்.

தனபதயும் பெரியோர்களும் இவ்வகையாக வார்த்தையாடிக் கொண்டிருக்குங்கால் விசாகா பெரியோர்களை நோக்கி தாங்களிவற்றை விசாரிப்பதற்கு முன் என் மாமனார் உத்திரவின்படி யான் வீட்டைவிட்டுப் போவது சிறப்பாகாது. தாங்கள் யாவற்றையும் சரிவர விசாரித்து என்மீது யாதொரு குற்றமும் ஏற்படாததினால் என் பிதாவின் சொற்படி நான் புறப்படவேண்டுமென்று கூறி தனது தோழிப் பெண்களையும் ஏவலாளர் களையும் அழைத்து தனக்கு வேண்டிய தேர்பரிவாரங்களை ஆயத்தஞ் செய்யும்படி ஆக்கியாபித்தாள்.

அதனைக் கண்ணுற்ற தனது மாமனார் விசாகாவை நோக்கி அம்மணி! யான் தெரியாமற் சொல்லியக் குற்றங்களைப் பொருத்து என் மனையை சிறப்படையச் செய்ய வேண்டுமென்று இரைஞ்சினான்.

விசாகா தனது மாமனாரை நோக்கி பெரியோரே யான் பொருக்க வேண்டியதெதுவோ அதைப் பொருத்துக்கொண்டேன் ஆனால் புத்தருடைய தன்ம கன்ம குடும்பத்திற் பிறந்தவள் என்மனைக்கு எக்காலுந்தென்புலத்தார்வந்து அன்னம் புசிக்க வேண்டியதே சிறப்பாகும் அத்தகைய ஞானசாதகர் பாத்திரம் அறிந்து பிச்சையிட உத்திரவளிப்பீரேல் இவ்விடம் தங்கி எனது மனைத் தொழில் நடாத்துவேன் அவ்வகை இலதேல் எனக்கு உத்திரவளிக்க வேண்டுமென்று வருந்தினாள்,

அவள் அமுதவாக்கை உணர்ந்த மிகாரா அம்மணி! உமதிஷ்டம் போல் தென் புலத்தார்க்கன்னமளித்து சிறப்படையலாமென்று கூறினான்.

மாமனார் அன்பின் வாக்கை வினவிய விசாகா தனது கிரகஸ்த பெரியோர்களில் சிலரை தருவித்து தாங்கள் இரத மூர்ந்து போய் நமது அறவாழியானாகிய

அவலோகிதரும், அவரது சங்கத்தவர்களாகிய தென்புலத் தோரும் எங்கிருந்த போதுங் கண்டறிந்து அவர்களை நமது இரதங்களில் ஏற்றிக்கொண்டு வந்துவிட வேண்டுமென்று ஆக்கியாபித்தாள்.

பெரியோர்களும் பெருமானிருப்பிடங் கண்டறிந்து அருகில் சென்று சரணாகதி வேண்டியழைத்து மிகாராதனபதி இல்லம் வந்து சேர்ந்தார்கள்.

விசாகாவும் மிக்க பயபக்த்தியுடன் பதார்த்தங்களை வட்டித்து பாத்திரங்களில் அளித்து தனது மாமனாரை அழைத்து பாத்திரங்களிலுள்ள அன்னத்தை பகவனுக்குப் பரிமாறும்படி வேண்டிக்கொண்டாள்.

மிகாராதனபதி முன்பொருகால் சமண முனிவர்களாகுந் தென்புலத்தோரைக் கண்டுங் காணாதவன் போல் புசித்திருந்தவனாதலின் மனங்குன்றி நாணடைந்து விசாகாவை நோக்கி அம்மணி! விநாயகருக்குத் தாமே அன்னமளித்துவிடவேண்டுமென்று கோறினான்.

ஐயனே! அங்ஙனமாகுகவென்று விடைபெற்று தனது கணவன் புண்ணியவர்த்தன சிறுவனை அழைத்து வந்து பதியுஞ் சதியும் பகவன் பாதத்திற் பணிந்து கருணாகாரா, கணநாயகா, கங்கையாதாரா, காசிவிஸ்வேசா, கமலநாயகா, இவ்வடியாரளிக்கும் அன்னத்தை அன்புடன் புசித்து எங்களைப் புனிதர் களாக்கவேண்டுமென இரஞ்சினாள்.

விசாகாவின் வணக்க வாக்குணர்ந்த விநாயக்கடவுள் புண்ணிய வர்த்தனனையும் புண்ணியவர்த்தினியையும் அறிவு பெருக என வாழ்த்தி அன்னமுண்டு முகிந்தபின் அனைவருக்கும் அருள் மொழியை ஊட்டும்படி ஆரம்பித்தார்.

அக்கால் விசாகா மாமனாரை அணுகி ஐயனருள் மொழியைக் கேட்க வாருங்கோளென்று அடிபணிந்தாள். மிகாராதனபதி தனக்குள்ள நாணத்தினாலும் அச்சத்தினாலும் அறவாழியான் முன்பு செல்லாமல் ஓர் அரையின் திறை மறைவில் உட்கார்ந்து கொண்டான்.

உலக மூன்றும் உணர்ந்து உள்ளடைந்த ஒப்பிலா அப்பன் மிகாரா தனபதியின் லோபகுணத்தையும், அதினால் நேர்ந்த நாணத்தையும், திறை மறைவில் வீற்றிருக்கும் அச்சத்தையும், உணர்ந்த உலகநாதன் திறை மறைவினின்ற மிகாராவுக்கும், திறைக்கும், திறையறைக்கும் அப்புறமுள்ளவர் களுக்கும், மலைக்கு உட்புறத்தும் மலைக்கும் அப்புறமுள்ளவர்களுக்கும், சமுத்திரத்துள்ளும் சமுத்திரத்து அப்புறமுள்ளவர்களுக்கும், மெய்யருக்கும் புத்தரிவரே, சத்தியமென்னும் புத்தரிவரே, சகலலோக சாட்சியாகிய புத்தரிவரே என்று சகல சீவர்கள் கண்ணுக்குங் காட்சியாய் நின்று சத்தியதன்மத்தை விளக்கினார்.

தனபதியாகும் அன்பரே! நீர் திறைமறைவிலிருந்தும் உம்மெய் தெரிந்துகொண்டேன் நீரும் எம்மெய் எதிரில் பார்க்கின்றீர்.

நீரானது நுழையா விடமுண்டோ ? காற்றானது கலவாவிடமுண்டோ ? தீயானது தீண்டாவிடமுண்டோ ? அதுபோல் மனமானது மலைவாவிட முண்டோ இல்லை .

மனமானது விரிந்தவிடத்து சகல வரும் பொருளும் மறையும், மனமடங்கியவிடத்து சகல திறைகளும் நீங்கி மூவுலகமுந் தோன்றும்.

அவ்வகைத் தோற்றத்தை அறிந்துக் கொள்ளும்படி செல்லவேண்டிய மார்க்கமே புத்ததன்மமென்னப்படும். புத்ததன்மமாம் மெய்யறத்தில் நடப்பவர் களே உண்மெய் கண்டடைவார்கள். அவ்வுண்மெய்யைக் கண்டவர்களோ புறம்பாய்க் காணும் பொருட்கள் யாவும் பொய்யென்று அறிந்து அவைகள் யாவுங் கடிகைக்குக் கடிகைக் கெட்டுக்கொண்டே வருங் காட்சிகளை விளக்கி உண்மெய்க்கு மேலாம் பொருள் உலகத்தில் ஒன்றுமில்லை என்று துலக்கி சதாதுக்கத்தை விலக்கி சருவசாட்சியாய் சதானந்தத்தில் நிலைப்பார்கள்.

அவர்களுக்கு அருமறைவுமில்லை, உருமறைவுமில்லை, உரைமறைவு மில்லை, திறைமறைவுமில்லை, அணைமறைவுமில்லை, குணமறைவுமில்லை சருவமும் அவர்களுள் தோன்றும் சன்னிதானமாகும் சருவதானங்களும் உதிர்ந்து மகா

நிதானமாம் சன்னிதானத்தில் நிலைத்தவன் தனக்கோர் பற்றின்றி சருவ சீவர்களுக்கும் உபகாரிகளாக விளங்குவான்.

பகிர்முகத் தோற்றத்தில் கடிகைக்குக் கடிகை அதாவது க்ஷணத்திற்கு க்ஷணங் கெட்டுக்கொண்டேவருந் தோற்றப்பொருட்கள் யாவையுந் தாவிதாவி பிடித்து சேர்க்குமளவும் பிறவி சமுத்திரமாம் துக்கக்கடலில் ஆழ்ந்து பாசக்கயிற்றில் கட்டுண்டு துன்ப வலைகளென்னுங் கசைகளால் அடியுண்டு இறப்பும் பிறப்புமாகிய துக்க சக்கர பற்களில் சிக்குண்டு சுழல்வான்.

தேவர், மக்கள், விலங்கு, பட்சி, தாபரம், ஊர்வனம், நீர்வாழ் வனங்களென்னும் எழுவகைத் தோற்றங்களும் அள்ளல், இரவுரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதியாம் எழுநாகமென்னுங் துக்கத்தில் ஆழ்ந்து மாறா பிறவியில் சுழலவைக்கும்.

ஆதலின் ஒவ்வொரு மக்களும் எழுபிறவியில் தோற்றும் எழுநரகவாதனைகளை அநுபவியாது க்ஷணத்திற்கு க்ஷணந் தோற்றிக் கெடுக்கும் அவாக்களை அறுத்து முன் பற்றுக்களை விடுத்து அன்பின் விருத்தியாலும் நீதியின் பற்றிலும் நிலைத்து இறப்பையும் பிறப்பையும் போக்கிக்கொள்ளுங்கோ ளென்று தனது சத்தியதன்மத்தைப் பதியச்செய்தார்.

மிகாரா தனபதிக்கும் உலோபதோஷம் விளங்கி கணநாதனை வணங்கி இந்த லோபியையுந் தங்கள் சங்கத்தில் ஒருவனாக சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று இரைஞ்சினான்.

இன்னும் சிலநாள் நீரில்லற தன்மத்தில் நிலைத்து சீலம் பதிந்து சித்த சுத்தமுண்டாகுங்கால் சங்கத்திற் சேர்ந்துக்கொள்ளலாமென்று சொல்லிப் போய்விட்டார்.

அன்று முதல் விசாகா தனது மாமன் கணவன் முதலியவர்களுக்கு மிக்க அன்படையவளாய் நடந்து வருவதுடன் பகவனும் தென்புலத்தோராம் சமணமுநிவர்களும் வந்து தங்கியிருப்பதற்கு வியாரம் கட்டிவைத்ததுமன்றி. மற்றுமுள்ளவியாரங்களில் தங்கியுள்ள சமணமுநிவர்களுக்கு அன்னக்காவடி அனுப்புவதும், சீவரவுடை ஈவதும், பிட்சாபாத்திரம் அளிப்பதும், ஏழைகளை ஆதரிப்பதும் சங்கத்திற்சேர்ந்து சமணநிலைபெற்று தன்னைப்பார்க்கும் பார்ப்பார்களுக்கும் தன்னைப்பார்க்கும் பார்ப்பிணிகளுக்கும் வேண்டிய தானங்களைச் செய்துக்கொண்டே புத்திர பௌத்திரர்களுடன் ஆனந்த சுகவாழ்க்கையிலிருந்து 120-வது வயதில் மரணமடைந்தாள். அவளது நீதிமார்க்க கடையம் சத்திய தன்மச் செயலும் ஈகையின் பெருக்கமுமே அவளை நோயற்ற வாழ்விலுங் குறைவற்ற செல்வத்திலும் இருத்தி சுருக்கத்தில் நித்திய நிலைபெறும் மறுமெயடைந்தாள்.

**14. குருக்ஷேத்திர காதை**

பகவன் அந்நகரைவிட்டு முன்பு சிலநாள் தங்கியிருந்து குருக்ஷேத்திரமெனப் பெயர்பெற்றவிடஞ் சென்று அங்குள்ள பிக்ஷுகுழாங்களுக்குப் போதிக்க கருணைபுரிந்து சங்கத்தோரை நோக்கி ஓ! சகோதிரர்களே என்றழைத்தனர்.

சிஷ்யர்கள் ஐயனே என விடை பகர்ந்தார்கள்.

பகவன் உபதேசிக்க ஆரம்பித்தார்.

சகோதிரர்களே! பரிசுத்த பேறு அடைவதற்கும், துக்க, அழுகை இவைகளினின்று விடுபடுவதற்கும், நீதியில் நடப்பதற்கும், நிருவாண நிலை அடைவதற்குமான ஓர் வழி மனுக்களுக்குத் திறக்கப்பட்டிருக்கின்றது. அவ்வழியே நான்குவித சமாதிகளென்னப்படும்.

அந்நான்கு சமாதிகள் யாவை? அவை, காயா சமாதி, வேதனா - சமாதி, சித்தா சமாதி தம்மா சமாதி என்பவைகளாம்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதை யுடையவனாயும், அறிவுள்ளவனாயும், ஆராய்ச்சி உள்ளவனாயும், காமம் துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனாயும் இருப்பானாகில் அவனே காயசமாதியிலிருப்பவனாவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் உணர்ச்சி விஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாயும், அறிவுள்ளவனாயும், ஆராய்ச்சி உள்ளவனாயும், காமம் துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனாயும் இருப்பவனாகில் அவனே வேதனாசமாதியிலிருப்பவனாவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் சித்தவிஷயத்தில் மனஜாக்கிரதை உடையவனாயும், அறிவுள்ளவனாயும், ஆராய்ச்சி உள்ளவனாயும், காமம், துக்கம் இவைகளினின்று தன்னை விலக்கிக்கொள்பவனாயும் இருப்பானாகில் அவனே சித்த சமாதியிலிருப்பவனாவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் கந்த விஷயத்தில் ஜாக்கிரதை யுடையவனாகவும், அறிவுள்ளவனாயும், ஆராய்ச்சி உள்ளவனாயும் காமம், துக்கம் இவைகளின்று தன்னை விலக்கிக் கொள்ளுபவனாயும் இருப்பானாகில் அவனே தம்ம சமாதியில் இருப்பவனாவான்.

’ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேக விஷயத்தில் ஜாக்கிரதையுடன் எப்படியிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் துறந்து காட்டிற்கேனும், ஓர் மரத்தினடியிலேனும், ஜனசஞ்சாரமற்ற விடத்திலேனும் சென்று சப்பளம் போட்டு உட்கார்ந்து நிமிர்ந்த தேகத்துடனும், தியான சக்தியுடனும் இருந்து அவன் வெளிக்குவிடும் சுவாசத்தைப்பற்றியும், உள்ளுக்கிழுக்கும் சுவாசத்தைப்பற்றியும் மனத்திடை நிறுத்துவான். வெளிக்கு சுவாசத்தை வெகுநேரம் விட்டு தான் இவ்வளவு அதிகமாக சுவாசத்தை விட்டோமென கிரஹித்தும் உள்ளுக்கிழுக்கும் சுவாசத்தை வெகுநேரம்

இழுத்து தான் அதிகமாக சுவாசத்தை உள்ளுக்கிழுத்தோம் என கிரகித்தும், வெளிக்கு சுவாசத்தை சற்றுநேரம் விட்டுதான் இவ்வளவு சிறுநேரம் சுவாசத்தை விட்டோம் என திரகித்தும் உள்ளுக்கிழுக்கும் சுவாசத்தை சற்றுநேரம் இழுத்து, தான் இவ்வளவு சிறுநேரம் சுவாசத்தை இழுத்தோமென கிரகித்தும் இவ்விதமாக தெளிவுடன் சுவாசத்தை வெளிக்குவிடுவதும், உள்ளுக்கிழுப்பதுமாக அப்பியாசத்திற்குக் கொண்டுவந்து பின் இருமூச்சுகளையும் சலனமாகச் செய்துக்கொள்ளுவான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேகவிஷய ஆராய்ச்சியில் சுவாச சம்பந்தமாக தியானிக்கும்போது பின்வருமாறு விசாரிப்பான். அதாவது வெளிக்குவிட்டு உள்ளுக்கிழுப்பதும், உள்ளுக்குவிட்டு வெளிக்கு இழுப்பது மாகிய இச்சுவாசங்களுக்கு ஆதாரமெது. ரூபமே இவைக்கு ஆதாரம். அந்த ரூபமோ பூதங்களால் அமையப்பட்டது. இரண்டாவது நாமமும் பூதங்களுடன் சேர்ந்து வருகின்றது. நாமம் இஃதென தெரிந்தவுடன் அதைப் பற்றியுள தெதுவென விசாரிக்கையில் அது அறியாமெயாலென்றும் தெரிந்து நாமமும் ரூபமும் ஒன்றை ஒன்று பற்றியிருக்கிறதன்றி வேறு நான் என்பது ரூபமாக வருவது கிடையாது.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடைய வனாய் இருப்பதோடு ஏனையோருடைய தேகவிஷயத்திலும் ஜாக்கிரதையுட னிருப்பான். தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் தோன்றி அல்லல்பட்டு அழியுமெனவும், தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் தளர்வடையு மென்றும், தன் தேகம் போல் ஏனையோர் தேகமும் விழுந்து விடுமெனவும் நிதானித்து தியானிக்கும் போது தேகமட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தி என்றும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான் எனது என்றும், ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றுந் தோன்றாது இவ் விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அறிவை விருத்தி செய்துவர தியானசக்தி அதிகரித்து தனிபுருஷனாகிய உலக பற்றற்று நிற்பன். ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதை யுடையவனாயிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் நடக்கும் போது நாம் நடக்கின்றோ மென அறியும் திறமுடனும், நிற்கும் போது நாம் நிற்கின்றோமென அறியும் திறமுடனும், உட்காரும்போது நாம் உட்காருகிறோமென அறியும் திறமுடனும், படுக்கும் போது நாம் படுக்கின்றோமென அறியும் திறமுடனும், மற்ற எந்த நிலைமையிலிருந்தபோதிலும் அந்த நிலைமைகளில் அறியுந் திறமுடனிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! முன் தேக விஷயத்தில் ஜாக்கிரதையுடனிருந்து அதன்பின் தேகநிலைகளைப்பற்றி தியானிக்கத் திரும்புகின்றான்.

நடப்பது யார்? யார் நடை? நடக்கச்செய்வதெது? என்ற இம்மூன்று கேள்விகளைத் தனக்குள் கேட்டு நான் என்பது நடக்கவில்லை, நான் என்பதின் நடையுமன்று, மனோகர்மத்தால் வாயுதாது ஊடுறுவிச்செல்ல நடக்கச்செய்தது நடக்க வேணுமென்கின்ற எண்ணம் பிறந்தது. அந்த எண்ணம் வாயுதாதைத் தூண்ட வாயுதாதே நடக்கச்செய்தது. மனோகர்மம் தூண்டி வாயுதாது சம்பந்தப்பட்டு ஊடுறுவிச்செல்ல இந்த முழுதேகத்தை முன்னுக்கு நடக்கச் செய்தது.

நிற்க வேணுமென்கின்ற எண்ணம் பிறந்தது. அந்த எண்ணம் வாயுதாதைத் தூண்ட வாயுதாதே நிற்கச்செய்தது.

உட்காரவேணுமென்கின்ற எண்ணம் பிறந்தது. அந்த எண்ணம் வாயுதாதைத் தூண்டி வாயுதாதே உட்காரச்செய்தது.

படுக்க வேணுமென்கின்ற எண்ணம் பிறந்தது. அந்த எண்ணம் வாயுதாதைத் காண்ட வாயுதாதே படுக்கச்செய்தது என இவ்விதமாகத் தெளிந்து பின்வருமாறு தியானிப்பான்.

ஒரு ஸத்து இருந்தே நடக்கச்செய்கிறதென்றும், ஒரு ஸத்து இருந்தே நிற்கச் செய்கிறதென்றும், ஒரு ஸத்து இருந்தே உட்காரச்செய்கிறதென்றும், ஒரு ஸத்து இருந்தே படுக்கச்செய்கிறதென்றும் கூறுவார்கள். அப்படி நடக்கச் செய்வதும், நிற்கச்

செய்வதும், உட்காரச் செய்வதும், படுக்கச் செய்வதுமான ஒரு ஸத்து உண்டா ? கிடையாது. ஏன் சாதாரணமாக ஜனங்கள் வண்டி போகின்றது, வண்டி நடக்கின்றதென கூறுகிறார்களே? மாட்டைக் கொண்டு தைரிகன்டாவிட்டால் வண்டி யாது செய்யும்? வண்டி போகிறது, வண்டி நிற்கிறதென்னும் வார்த்தைக்குப் பொருள் யாது? வண்டி போகிறதென்றும், வண்டி நிற்கிறதென்றும் கூறுவது அர்த்தமற்ற வார்த்தை. அறிவின் குறைவால் தேகம் வண்டியை ஒத்தது; மனமே புருடன், எண்ணங்களின் ஏதுக்களே எருது, எண்ணமே வண்டி ஓட்டுபவன். நடக்கவேணுமென்றேனும், நிற்க வேண்டுமென்றேனும், உட்காரவேண்டுமென்றேனும், படுக்க வேண்டுமென் றேனும் எண்ணம் உதிக்க வாயுதாது தோன்றி நடக்கவும், நிற்கவும், உட்காரவும், படுக்கவும் செய்கிறது. நான் நடக்கின்றேன், நான் நிற்கின்றேன், நான் உட்காருகின்றேன், நான் படுக்கின்றேன் என்பவை உலக வழக்கச்சொல்லேயன்றி வேறன்று.

கப்பல்கள் எப்படி காற்றல் நடத்தப்படுகின்றதோ, அம்பு எப்படி வின்னாண்பலத்தால் எய்யப்படுகின்றதோ அதுபோல் இந்த தேகமும் எண்ணுதலினாலும், வாயுதாதுவாலும் நடத்தப்படுகின்றது.

சூத்திரங்களின் கருவிகள் எப்படி கயிற்றால் அசைக்கப்படுகின்றதோ அதுபோல் இந்த தேகசூத்திரத்தின் கருவிகள் மனக்கயிற்றால் நடக்கவும், நிற்கவும் செய்கிறது. இவ்விடத்தில் ஒருதவியுமின்றி ஒரு ஸத்து நடக்கவும் நிற்கவும் செய்யவிருக்கின்றதோ?

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதை உடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய தேகவிஷயத்திலும், ஜாக்கிரதையுடனிருப்பன். தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் தோன்றி அல்லல்பட்டு அழியுமெனவும், தன்தேகம் போல் ஏனையோர் தேகமும் விழுந்துவிடுமெனவும் நிதானித்து தியானிக்கும் போது தேகமட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தி என்றும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான் எனதென்று ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றுந் தோற்றாது.

இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அறிவை விருத்தி செய்துவர தியானசக்தி அதிகரித்து தனி புருஷனாகி உலகபற்றற்று நிற்பன். ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேக விஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாயிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் சாதாரணமாய்ப் பார்க்கும் போதும், உற்றுநோக்கும் போதும், தான் எதைப் பார்க்கின்றானெனவும், எதை உற்றுநோக்குகின்றானெனவும் ஊன்றி ஆராய்ந்து ஜாக்கிரதையும் அடக்கமு முள்ளவனாயும் இருப்பன். கைகளை நீட்டும் போதும், மடக்கும் போதும் யாதுபற்றி நீட்டுகின்றோம், யாதுபற்றி மடக்குகின்றோமென ஊன்றிய மனத்துடன் ஜாக்கிரதையும், அடக்கமுமுள்ளவனாயுமிருப்பான். சீவரமணிந்து பிட்சாபாத்திரத்தை கையிலேந்தும் போது யாதுபற்றி சீவரமணிந்தோம், யாதுபற்றி பிட்சாபாத்திரத்தை கையிலேந்தினோமென ஆழ்ந்து சிந்தித்து ஜாக்கிரதையும், அடக்கமுமுள்ளவனாயிருப்பான். உண்ணும் போதும், அருந்தும் போதும், மெல்லும் போதும், ருசிக்கும் போதும் யாதுபற்றி உண்கின்றோம், அருந்துகின்றோம், மெல்லுகின்றோம், ருசிக்கின்றோமென தெளிந்து ஜாக்கிரதையும், அடக்கமுமுள்ளவனாயும் இருப்பா

நடக்கும்போதும், நிற்கும்போதும், உட்காரும்போதும், உறங்கும் போதும், விழிக்கும் போதும், பேசும்போதும், அமைதியாயிருக்கும் போதும் யாதுபற்றி நடக்கின்றோம், யாது பற்றி நிற்கின்றோம் , யாது பற்றி உட்காரு கின்றோம், யாதுபற்றி உறங்குகின்றோம், யாதுபற்றி விழிக்கின்றோம், யாதுபற்றி பேசுகின்றோம், யாதுபற்றி அமைதியாயிருக்கின்றோம் என விழித்து ஜாக்கிரதையும் அடக்கமுமுள்ளவனாய் இருப்பான்.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதை யுடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய தேகவிஷயத்திலும் ஜாக்கிரதையுடனிருப்பான். தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் விழுந்து விடுமெனவும் நிதானித்து தியானிக்கும் போது தேகமட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தி என்றும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான் எனதென்றும், ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றுந்

தோன்றாது இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அடக்கத்தை விருத்தி செய்துவர தியானசக்தி அதிகரித்து தனிபுருஷனாகி உலக பற்றற்று நிற்பான்.

'ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாயிருப்பான்.

**காயாசமாதி**

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் இத்தேகம் உச்சிமுதல் உள்ளங்கால் வரையிலும் அருவறுக்கத்தக்க பல அசுத்தங்கள் பொருந்தி தோலால் மூடப்பட்டதெனவும், இத்தேகத்தில் சிரசின்ரோமம், தேகத்தினது ரோமம், நகம், தந்தம், தோல், மாமிசம், நரம்பு, எலும்பு, எலும்பிலுள்ள ஊன், ஈரல், இருதயம், ஈரற்குலை, நுரையீரலைச் சார்ந்திருக்குஞ் சவ்வு, மண்ணீரல், சுவாசாசயம், இரைப்பைக்கும் ஆசனத்திற்கும் இடையிலுள்ள குடல், மணிக்குடல், இரைக்குடல், மலம், பித்தநீர், கபம், சீழ், இரத்தம், வியர்வை , நிணம், கண்ணீர் , நிணநீர், உமிழ்நீர், சளி, வெண்நீர், மூத்திரம் அடங்கியுள்ளனவென்று சிந்திப்பான்.

ஓ! சகோதிரர்களே! சாலி அரிசி, நெல், அவரை, உளுந்து, எள், அரிசி முதலானவைகளை மூடிவைத்திருந்த ஒரு பாண்டத்தை ஒருவன் திறந்து வைத்துவிட்டு இப்பாண்டத்தில் இது சாலி அரிசி, இதுநெல் இது அவரை, இது உளுந்து, இது எள், இது அரிசியென பிரித்துவிடுவது போல் ஒரு சகோதிரன் உச்சிமுதல் உள்ளங்கால் வரையிலும் அருவறுக்கத்தக்க பல அசுத்தங்கள் பொருந்தி தோலால் மூடப்பட்ட இத்தேகத்தில் இது தேகத்தினது ரோமம், இது நகம், இது தந்தம், இது தோல், இது மாமிசம், இது நரம்பு, இது எலும்பு, இது எலும்பிலுள்ள ஊன், இது ஈரல், இது இருதயம், இது ஈரற்குலை, இது நுரை ஈரலைச்சார்ந்திருக்கும் ஜவ்வு, இது இரைக்குடல், இது மலம், இது வெண்நீர், இது மூத்திரம் என பிரித்து பிரித்து அதே தியானத்தினின்று வெறுத்து வருவான்.
பூனாச்சா பரங் பிக்கவே பிக்கூ! ஈமாமேவா காயங் உத்தம் பாதாதவ அதோ கேதா மா தகாதச்சாபிரியந்தங் மூரம் நானாபகராஸா அஸூஸினே பிச்சவக்கட்டி அதி இமம்லே மெய்ங்காயே. கேஸர் லோமா ஹரு தந்தா தஸ்ஸோ மம்ஸங் ந அத்தி அத்தி மிஞ்சங்

வக்கங் ஹதயங் யக்கனங் கிளோமாகங் பிஹாகங் பப்பாஸங் அந்டங் அந்டாகுணந் உதரியங் கரிதங் மதலுகங் பித்தங் ஸேமங் புப்போ லோஹிதங் ஸெடோ மேடோ அஸுவாஸா கேலோங் ஸிங்கனீகங் லக்ஷகங் மோதந்தீ. தியாதாபி பிக்கவே உபடோ மூகா புட்டோலி புரா நானா விஹிதாடா தஞ்ஞதா தேய்தீதங் ஸாலீனங் விஹினங் முகானங் மாதானங் திலானங் தங்தூலானங் தமேனங் சக்குமா புரிஸோ முச்சத்தவா பிச்சவக்கேயா, இமே ஸாவி, இமேவீஹி, இமேமுகா, இமேமாஸ, இமே நீலா, இமே தந்துல. மேவாகோ பிக்கவே பிக்கூ! இமாமேவா காயங் உத்தம் பாதாதலே அதோகேதா மாதகாதஸா பரிபந்தங் பூரங் நானா பகஸாஸ அஸுசினோ பிச் சவக்கதீ.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதை உடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய தேகவிஷயத்திலும் ஜாக்கிரதையுடன் இருப்பான். தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் தோன்றி அல்லல்பட்டு அழியுமெனவும், தன்தேகம்போல் ஏனையோர் தேகமும் தளர்வடையுமென்றும், தன் தேகம்போல் ஏனையோர் தேகமும் விழுந்துவிடும் எனவும், நிதானித்து தியானிக்கும்போது தேகம் மட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தி என்றும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான், எனது என்றும், ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றுந் தோன்றாது இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அறிவை விருத்தி செய்துவர தியானசக்தி அதிகரித்து தனி புருஷனாகி உலகபற்றற்று நிற்பன். ல! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேக விஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாய் இருப்பான்.

ஓ சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேகத்தை நோக்கி இத்தேகத்தில் வாய், அக்னி, பிருதிவி, நீர் என்னும் தாதுக்களிருந்துக் கொண்டு நடத்துகின்றன என்றும் தியானத்திலிருப்பான். ஒரு சகோதிரன் மயானத்திற்குச்சென்று தங்கள்ள ஒருநாளில் இறந்து அழிகிறதேகத்தையும், இறந்த இரண்டாம் நாளில் அழிகிற தேகத்தையும், இறந்த மூன்றாம் நாள் அழிகிற தேகத்தையும், தாகலிட்டிருக்குந் தேகத்தையும், நிலைமுச்சுகெட்டு அழிகின்றதெனக்கருதி தன்தேகமும் இதுபோல் கெடும் அல்லவா என தியானிப்பான்.

மனாச்சா பரங் பிக்கவே பிக்கூ! இமாமேவாயங் யதாதீயங் யதாபனீஹிதங்

தாதுஸோபச்சவேகத்தீ. அதி இமாங் ஸமேங்காயே பதவிதாது, அபோதாது. தேஸோதாது. வாயோதாது, யசாபிபிக்கவே தக்கோ கோகாத கோவாகோகாதங்தீ.

ஓ சகோதிரர்களே! ஒரு சகோதிரன் மயானத்திற்குச்சென்று அங்கு கிடக்கும் பிணங்களை காக்கைகளால் கொத்தித் தின்பதையும், பருந்துகளாலும் கழுகுகளாலும் கொத்தித் தின்பதையும், நாய்களாலும் நரிகளாலும் தின்னப்படுவதையும், பலவித கிருமிகளால் தின்னப்படுவதையும் கண்டு சத்தியமாகவே என் தேகமும் இவ்வகையான ஸ்திதிக்கு வருமென தியானிப்பான். –

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேக விஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய தேக விஷயத்திலும், ஜாக்கிரதையுடன் இருப்பன். தன் தேகம் போல் ஏனையோர் தேகமும் தோன்றி அல்லல்பட்டு அழியுமெனவும், தன்தேகம்போல் ஏனையோர் தேகமும் விழுந்துவிடுமெனவும் நிதானித்து தியானிக்கும் போது தேகம் மட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தி என்றும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான் எனதென்றும் ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றுந் தோன்றாது.

இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அறிவை விருத்தி செய்துவர தியான சக்தி அதிகரித்து தனி புருஷனாகி உலக பற்றற்று நிற்பன். ஓ சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாய் இருப்பான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் மயானத்திற்குச் சென்று அங்கு கிடக்கும் மாம்சத்தோடு கூடிய எலும்புகளையும், மாம்சமும் எலும்பும் சேர்ந்து இரத்தம் வடிந்துக்கொண்டிருக்கும் துணிக்கைகளையுமுடைய தேகங்களைக் கண்டு சத்தியமாகவே என் தேகமும் இப்படி அழியக்கூடியதென தியானித்து வெறுப்பான்

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதை யுடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய தேகவிஷயத்திலும் ஜாக்கிரதையுடன் இருப்பான். தன் தேகம் போல் ஏனையோர் தேகமும் தோன்றி அல்லல்பட்டு அழியுமெனவும், தன் தேகம்

போல் ஏனையோர் தேகமும் விழுந்துவிடுமெனவும், நிதானித்து தியானிக்கும் போது தேகம் மட்டும் இவனுக்குத் தோன்றுமன்றி ஜீவஸத்தி என்னும், பெண் இதென்றும், ஆண் இதென்றும், நான் எனதென்றும், ஆட்டும் பொருளென்றும், மனிதரூபமென்றும் தோன்றாது இவ்விதமாக தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடன் அடக்கத்தை விருத்தி செய்துவர தியானசக்தி அதிகரித்து தானே தத்துவப்புருஷனாகி உலகபற்றற்று நிற்பான்.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக ஒரு சகோதிரன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாயிருப்பான்.

**வேதனா சமாதி**

ஓ சகோதிரர்களே! ஒரு சகோதிரன் உணர்ச்சி விஷயத்தில் எவ்விதமாக ஜாக்கிரதையுடனிருப்பான்.

ஓ சகோதரர்களே! ஒரு சகோதிரனுக்கு இன்பமான உணர்ச்சி அறியுங்கால் இது இன்பமான உணர்ச்சி என்றும், இன்பமற்ற உணர்ச்சியை அறியுங்கால் இது இன்பமற்ற உணர்ச்சி என்றும், சமநிலையான உணர்ச்சியை அறியுங்கால் இது சமநிலையான உணர்ச்சி எனவும், அக்கரை உண்டாக்கும் இன்பமற்ற உணர்ச்சி எழுங்கால் இது அக்கரை உண்டாக்கும் இன்பமற்ற உணர்ச்சி எனவும், அக்கரை உண்டாக்கா இன்பமற்ற உணர்ச்சி எழுங்கால் இது அக்கரை உண்டாக்கா இன்பமற்ற உணர்ச்சி எனவும், தெளிந்து ஜாக்கிரதையுடனிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தன் உணர்ச்சி விஷயத்தில் ஜாக்கிரதையுடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய உணர்ச்சி விஷயத்திலும் ஜாக்கிரதையுடனிருப்பான். தன் உணர்ச்சி போல் ஏனையோர் உணர்ச்சியும் எழும்பி மடிந்து மறையும் எனவும், உணர்ச்சி எழும்போது ஜாக்கிதையுடனும், உணர்ச்சி மடியும் போது ஜாக்கிரதையுடனும், உணர்ச்சி எழும்பி மடியும் போதும் ஜாக்கிரதையுடனிருந்தும் இவ்விதமாக

ஜாக்கிரதையான தியானத்தில் உணர்ச்சியைப் பரிசோதிப்பதுடன் தியானசக்தி உறுதிப்பெற உலகத்திலிருந்தும் உலகப் பற்றற்றவனாயிருப்பான்.

**சித்த சமாதி**

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் சித்த விஷயத்தில் எவ்விதமாக ஜாக்கிரதையுடையவனாக இருப்பான்,

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரனுக்கு வெடுவெடுப்பான சித்தம் உதிக்குங்கால் இது வெடுவெடுப்பான சித்தமெனவும், வெடுவெடுப்பற்ற சித்தமெனவும், விரோதமான சித்தம் உதிக்குங்கால் இது விரோதமான சித்தமெனவும், விரோதமற்ற சித்தமெனவும், மெய் மறக்குஞ் சித்தம் உதிக்குங்கால் இது மெய்மறக்கச்செய்யும் சித்தமெனவும், இது மெய்மறதியற்ற சித்தமெனவும், உத்தேசிக்கும் (அதாவது நிதானம்) சித்தம் உதிக்குங்கால் இது உத்தேசிக்கும் சித்தமெனவும் அலைகிற சித்தம் உதிக்குங்கால் இது அலைகிற சித்தமெனவும், புகழும் சித்தம் உதிக்குங்கால் இது புகழும் சித்தமெனவும், இது புகழத்தகாத சித்தமெனவும் ஏகசிந்தனை சித்தம் உதிக்குங்கால் இது ஏகசிந்தனை சித்தமெனவும், ஏகசிந்தனையற்ற சித்தமெனவும், விமோசனசித்தம் உதிக்குங்கால் இதுவிமோசனமுற்ற சித்தமெனவும், விமோசனமற்ற சித்தமெனவும் தெளிந்து ஜாக்கிரதையுடனிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமாக தன் சித்தவிஷயத்தில் ஜாக்கிரதை யுடையவனாய் இருப்பதோடு ஏனையோருடைய சித்தவிஷயத்திலும் ஜாக்கிரதையுடனிருப்பான். தன் சித்தம் போல் ஏனையோர் சித்தமும் தோன்றி கலைந்து மறையுமெனவும், சித்தம் தோன்றும்போது ஜாக்கிரதையுடனும், சித்தம் மறையும் போது ஜாக்கிரதையுடனும், சித்தம் தோன்றி மறையும் போது ஜாக்கிரதையுடனிருந்தும் இவ்விதமாக ஜாக்கிரதையான தியானத்தால் சித்தத்தைப் பரிசோதிப்பதுடன் தியானசக்தி உறுதிப்பெற உலகத்திலிருந்தும் உலக பற்றற்றவனாயிருப்பான்.

**தம்ம சமாதி**

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தேகவிஷயத்திலும், உணர்ச்சி விஷயத்திலும் சித்த விஷயத்திலும் ஜாக்கிரதையாயிருந்தபின் நான்கு சத்தியத்தில் ஜாக்கிரதையுடையவனாய் இருப்பான். ஒரு சகோதிரனுக்கு துக்கம் ஈதெனவும், துக்கோற்பத்தி ஈதெனவும், துக்க நிவாரணம் ஈதெனவும், துக்க நிவாரணமார்க்கம் ஈதெனவும் தெளிந்துக்கொள்ளுவான்.

ஓ! சகோதிரர்களே! துக்க சத்தியமென்றால் யாது. பிறப்பு, துக்கம், மூப்பு துக்கம், பிணி துக்கம், இறப்பு துக்கம், கவலைப்படுதல், புலம்பல், துற்சம்பவம், சங்கடத்திற்குள்ளாதல்,நிராசையாய்த் துயரப்படல் ஆகிய இவைகள் துக்கம், வேண்டிய பொருள் கிட்டாமெய் துக்கம், சுருக்கமாகச் சொல்லின் ஐம்புலப் பற்றுக்களே துக்கமென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! பிறப்பென்பது யாது? உற்பேதம் பிறப்பு கற்போற்பத்தி பிறப்பு, பஞ்சஸ்கந்த உருவமாதல் பிறப்பு, சுருக்கத்தில் ஐந்து புலன்கள் சேர்ந்து உருவமைந்து தோற்றலே பிறப்பு.

ஓ! சகோதிரர்களே! மூப்பென்பது யாது? முதிர்ந்த வயதுற்ற தள்ளாடல், தந்தமற்றிருத்தல், ரோமம், நரைத்துவிடல், தேகம் சுருங்கி விடல், பலம் குறைந்து விடல், சித்தஸத்தி மடிதல் மூப்பு.

ஓ! சகோதிரர்களே! இறப்பென்பது யாது? பிறிவு இறப்பு, தேகம் நீற்று நீராதல் இறப்பு, இருளால் இறப்பு, பஞ்சஸ்கந்தங்களின் பிரிவே இறப்பாம்.

ஓ! சகோதிரர்களே! கவலைப்படுதல் யாது? பெருத்த நஷ்டம் நேரிட்டாலும், கைவிட்டு விலகியதானும், கவலையும், கவலைப்படுதலும் கவலையுள்ளவனாயிருத்தல் இருதயக்கவலை, இருதயத்தில் கவலையுள்ளவனா யிருத்தலே கவலைப்படுதலாம்.

ஓ! சகோதிரர்களே! புலம்பலென்பது யாது? பெருத்த விரையம் நேர்ந்து பிரிந்தபோது புலம்பல், ஓலமிட்டழல், சத்தமிட்டழல், சத்தமின்றி குமுங்கல் புலம்பலாம்.

'வ சகோதிரர்களே! துன்பமென்பது யாது? தேகத்தை ஒத்த துன்பம், கோ அசௌக்கியம், தேகம் உணர்வால் வருந்தி அதற்கீடுபடுவதால் நேரும் துன்பம் தேகம் அனுபவிக்கும் பீடை யாதும் துன்பமே.

ஓ! சகோதிரர்களே! துயரமென்பது யாது? மனதிற்கடுத்த துன்பம் மன உணர்வால் வருந்தி அதற்கீடுபடுவதால் நேரும் துயரம், மனமனுபவிக்கும் பீடையாதும் துயரமே.

ஓ! சகோதிரர்களே! நிராசையாய்த் துயரப்படல் யாது? பெருத்த நஷ்டம் நேர்ந்தும், துர்சம்பவம் நேர்ந்தும், நம்பிக்கை இன்மெயாகியும், நிராசையாகியும், நிராசை ஸ்திதியிலிருப்பதே நிராசையாய் துயரப்படலாம்.

ஓ! சகோதிரர்களே! ஐந்து பற்றின் கூட்டங்களே துன்பமென்பதெப்படி. ரூபக்கூட்டத்தின் பற்று, உணர்ச்சிக் கூட்டத்தின் பற்று, கரணக் கூட்டத்தின் பற்று, மனச்சாய்வின் கூட்டப்பற்று, சித்த (மன) கூட்டத்தின் பற்று இவைகளே ஐந்து கூட்டத்து பற்றே துன்பம்.

**ரூப ஸ்கந்தம்**

ரூபகூட்டம் இருவகைப்படும். அவை (1) பூத ரூபம். (2) உபாதாரா ரூபம். பூதரூபநாமங்களாவன :- பதவிதாது, அப்போ தாது, தேஜோதாது, வாயோ தாது. அதாவது நான்கு வித பூதங்களாயரூபமாம்.

உபாதாரரூப நாமங்களாவன

*(சக்குபஸாதா , ஸோடாபஸாதா , கானாபஸாதா, ஜீவாபஸாதா, காயபஸாதா, ரூபா சாத்தா, கந்தா, யச , இஸ்திரிபாவா, பும்பாவா, ஜீவிந்திரியாஹதயாவாது. ஆகாசதாது காயவிஞ்ஞா, முஜ்ஜிவிஞ்ஞா , லஹுதா , முதிதா, கம்மிசதா, உபசியா, சந்திடி ஜராதா அனிச்சாதா)* அதாவது, கண், காது, நாசி, நா, தேகம், வர்ணம், சாத்தம், கந்தம், உருசி, ஆண்பெண் குறி, உயிர், இருதய உருப்பு, தேகத்தினது குறிப்பு, வாக்கின் குறிப்பு, தேகவெழுச்சி, தேக இளமெய், தேக மிருதுவான தேக விருத்தி, தேக வளர்ச்சி, தேகம்

கிழத்தனமாகுதல், அநித்ய தேகம், உணவு, பொருள் யாவும் சேர்ந்தே ரூபகந்தம் எனப்படும்.

**வேதனா ஸ்கந்தம்**

வேதனாஸ்கந்தம் அல்லது உணர்ச்சிக் கூட்டமாவது யாதெனில் சுக - வேதனா,துக்கா - வேதனா, அதுக்கசுக - வேதனா அல்லது குஸல அகுஸல, குஸலாகுஸல என்னும் மூன்றுவித உணர்ச்சிகளை உடையது. உணர்ச்சி குஸலசித்தத்துடன் சேர்ந்துவரின் குசலவேதனா என்றும், உணர்ச்சி அகுசல சித்தத்துடன் சேர்ந்துவரின் அகுசல வேதனா என்றும், உணர்ச்சி குசலாகுசல சித்தத்துடன் சேர்ந்துவரின் குசலா குசல வேதனாவென்றுங் கூறப்படும்.

**ஸம்ஞ்ஞாஸ்கந்தம்**

ஸம்ஞ்ஞா ஸ்கந்தம் அல்லது குறிப்புக் கூட்டம் அறுவகைப்படும். அதாவது பச்சை அல்லது சிவப்பான ஒரு வஸ்துவைப் பார்த்து இது சிவப்பு அல்லது இது பச்சை என்றபோது ஒரு வர்ணக்குறிப்பைக் காட்டியது. அதேபிரகாரம் ஏதாவதொரு சத்தத்தைக் கேட்டபோது இது மேளசத்தம் அல்லது சங்குசத்தம் என்று ஒரு சத்தக்குறிப்பைக் காட்டியது. ஏதாவதொரு கந்தத்தை முகர்ந்தபோது இது துற்கந்தம் அல்லது இது நற்கந்தமென்று ஒரு கந்த குறிப்பைக் காட்டியது. ஏதாவது ஒன்றை உருசித்தபோது இது தித்திப்பு, இது புளிப்பு, இது துவர்ப்பு, இது எண்ணெய் என்ற ஒரு உருசிப்பின் குறிப்பைக் காட்டியது. ஏதாவது ஒரு தேகம் மற்றப் பொருளுடன் பட்டபோது இது தொடத்தக்கது அல்லது தொடத்தகாதது என்ற ஒரு தேகத்தின் உணர்ச்சிக் குறிப்பைக் காட்டியது. ஏதாவது ஒன்றை (மனம் ) சித்தமானது நினைக்கும் போது இது விலக்கக்கூடியது அல்லது இது விலக்கக்கூடாதது என்ற குணத்தைக் காட்டியது. சுருக்கத்தில் குறிப்பு குசலசித்தத்துடன் சேர்ந்துவரின் குசலக் குறிப்பென்றும், குறிப்பு அகுசல சித்தத்துடன் சேர்ந்துவரின் அகுசல குறிப்பென்றும், குறிப்பு குசலாகுசல சித்தத்துடன் சேர்ந்துவரின் குசலாகுசல குறிப்பென்றும் கூறப்படும்.

**சங்காரா ஸ்கந்தம்**

சங்காராஸ்கந்தா அல்லது பாவனைக்கூட்டம் 52- வகைப்படும் 1. பஸ்ஸா - ஸ்பரிசம் 2. வேதனா - ஸ்பரிச வறிவு. 3. சஞ்ஞா - புலப்பாடு 4. சேதனா - விருப்பம் 5. ஏககதா - ஏக்த்துவம் 6. ஜீவிதந்திரியா - ஜீவிய இந்திரியம் 7. மனஸீகரா - கவனம் 8. விதகா - முயற்சியின் ஆரம்பம் 9. விசாரா - சகித்தல் 10. அதிமோக்கா - தீர்மானம் 11. வீரியா - வீரியம் 12. பீதி - பிரீதி 13. சட்தா - செய்யவேணும் என்கிற ஆசை 14. மோஹா - மந்தம் 15. தீனா - சோம்பல் 16. அஹிரிகா - வெட்கமற்ற 17. அநொத்தபா - காரணத்தாலாகுங் காரியத்தை அசட்டை செய்தல் 18. உத்தச்ச - மனக்கலக்கம் 19. லோபா - துராசை 20. திட்தி - தப்பிதம் 21. மானா - வீணெண்ணம் 22. தோஸா - பகை 23. மச்சரியா - பற்கடிப்பு 24. குக்குச்சா - ஆவல் 25. இஸ்ஸ - பொறாமெய் 26. மிட்தா - திமிர்ப்பு 27. விஸிகிச்ச - திகைப்பு 28. சட்தா - நம்பிக்கை 29. சட்தி - சிந்திப்பு 30. ஹிரி - யோசனை 31. உத்தப்பா - இஷ்டம் 32. அலோபா - பரோபகாரம் 33. அதோஸா - சமாதானம் 34. தட்தாமஜ்ஜட்த்ததா - மனத் தராசு 35. காயா பஸ்ஸட்தி - மன வலைச்சலின் அமைதி 36. சிட்தப்பஸ்ஸட்தி - மன அடக்கம் 37. லஹீதா - மனசத்தி 38. காயலஹீதா - லேசான காய சக்தி 39. சித்த லஹீதா - லேசான சித்த சக்தி 40. காயமுதிதா - மிருதுவான காய சக்தி 41. சித்தமுதிதா - மிருதுவான சித்த சக்தி 42. காயாகம் மிஞ்ஞதா - காய கன்ம சக்தி 43. சித்தாகம்மிஞ்ஞதா - சித்தகன்ம சக்தி 44. காயபகுஞ்ஞதா - சோர்வடையா காயசக்தி 45. சித்த பகுஞ்ஞதா - சோர்வடையா சித்தசக்தி 46. காயஉஜகதா - ஸ்திரமான காய சக்தி 47. சித்த உஜகதா - ஸ்திரமான சித்தசக்தி 48. ஸம்மாவசா - நல்ல வசனம் 49. ஸம்மா கம்மந்தா - நற்செய்கை 50. ஸம்மா அஜீவா - நல்வாழ்க்கை 37. கருணா - கருணை சக்தி 52. முதிதா - ஆனந்த சக்தி

**விஜ்ஞானா ஸ்கந்தம்**

விஜ்ஞான ஸ்கந்தமாவது ஒரு பட்டணத்துக் காவற்காரன் நான்கு முக்கிய பாதைகள் கூடும்படியான மத்திய இடத்தில் நின்றுக்கொண்டு வடக்கிலிருந்து வருவது யார், தெற்கிலிருந்து வருவது யார், மேற்கிலிருந்து வருவது யார், கிழக்கிலிருந்து வருவது யார் எனத் தெரிந்துக் கொள்ளக்கூடுமோ, அதுபோல் ரூபம் கண்ணால்

பார்க்கப்படுகிறது, சத்தம் காதால் கேட்கப்படுகிறது, கந்தம் நாசியால் முகரப்படுகிறது, உருசி நாவால் உருசிக்கப்படுகிறது, பரிசம் தேகத்தால் தெரியப்படுகிறது, எண்ணங்கள் மனத்தால் கிரகிக்கப்படுகிறது. ஆகிய இவைகள் யாவும் (விஜ்ஞான)த்தால் ஸ்தாபிக்கப்படுகிறது.

விஜ்ஞானக் கூட்டம் 89-வகைப்படும் அல்லது விசாரணா சித்தக் கூட்டம் 89-வகைப்படும். (அ) லோகி சித்தம்.... 81 (ஆ.) லோகுத்ர சித்தம் .... 8

(அ) லோகி சித்தம் 3- வகை : 1. காமவசர சித்தம் 2. ரூபவசர சித்தம் 3. அரூபவசர சித்தம். காமவசரசித்தம் 3-வகை : காமவசர 54 அகுஸலா... 12 அஸிதா.... 18 அஸோபனா ஸோபனா.... 24

2. ரூபவசரசித்தம் 3-வகை : குஸலா... 5 ரூபவசர 15 விபாகா ... 5 கிரியா -... 5

3. அரூபசரசித்தம் 3-வகை : அரூபவசர 12 - குஸலா .... 4 விபாகா ... 4, கிரியா ... 4,

ஆ. லோகுத்தர சித்தம் 2- வகை : லோகுத்தர 8 - மார்க்க .... 4 பலா ....4 1. காமவசர சித்தம் - 54

அஸோபனா - அகுசலா சித்தம்... 12, அஹித சித்தம் ..... 18 ஸோபனா - 24

அகுஸல சித்தம் 12 : ஸுமன்ஸ்ய ... 4 உபேநா.... 4 8 (லோபா) அஸங்காரிகா ... ஸஸங்காரிகா.... 1 (தோஸா)

உத்திச்சா .... 1 விசிகிச்சா ..... 1 (மோஹா )

**1. லோபா ஸீமன்ஸ்யா சித்தம் - 4**

*1. சுமனஸ்யா சஹாகோ தீதடி கத்தா சம்பியோ அஸங்காரிகா சித்தகூ .

*2. சுமன்ஸ்யா சஹாகோ தீதடி கத்தா சம்பியோ ஸஸங்காரிகா சித்தகூ.

*3. சமன்ஸ்யா சஹாகோ தீதடி விப்பியோ அஸங்காரிகா சித்தகூ.

*4. சமன்ஸ்யா சஹாகோ தீதடி விப்பியோ ஸஸங்காரிகா சித்தகூ.

**பேராசை. இன்பம் - 4**

1. இன்பம் பேராசையுடன் சேர்ந்து தூண்டப்படாத சித்தம்
2. இன்பம் பேராசையுடன் சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்
3. இன்பம் பேராசையுடன் சேராது தூண்டப்படாத சித்தம்.
4. இன்பம் பேராசையுடன் சேராது தூண்டப்பட்ட சித்தம்.

**உபேகா சித்தம் - 4**

1. உபேகா சஹாகோ தீத்டி கத்தா சம்பியோ அசங்காரிகா சித்தகூ.
2. உபேக் சஹாகோ தீத்டி கத்தா சம்பியோ ஸசங்காரிகா சித்தகூ.
3. உபேகா சஹாகோ தீத்டி கத்தா விப்பியோ அசங்காரிகா சித்தகூட.
4. உபேகா சஹாகோ தீதடி கத்தா விப்பியோ ஸசங்காரிகா சித்தகூ.

**பேராசை உபேக்ஷை சித்தம் - 4**

1. உபேக்ஷையும், பேராசையும் சேர்ந்து தூண்டப்படாத சித்தம்.
2. உபேஷையும், பேராசையும் சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்.
3. உபேஷை பேராசையுடன் சேராது தூண்டப்படாத சித்தம்.
4. பேகைப் பேராசையுடன் சேராது தூண்டப்பட்ட சித்தம்.

**2. தோஸா அசங்காரிகா 1. ஸசங்காரிகா 1**

1. தோமனஸ்ய சஹாகோ பத்திகா சாம்பியோ அசங்காரிகா சித்தகூ.
2. தோமனஸ்ய சஹாகோ பத்திகா சாம்பியோ ஸஸங்காரிகா சித்தகூ

**கோபம்**

1. துன்பம் கோபத்துடன் சேர்ந்து தூண்டப்படாத சித்தம்.
2. துன்பம் கோபத்துடன் சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்.

**மோஹா**

1. விபாகா சஹாகோ விசிகிச்ச சஹாகோ சித்தகூ.
2. லிபாகா சஹாகோ உத்திச்சா சாம்பியோ சித்தகூ.

**3. மோஹம்**

1. உபேட்சையுடன் சந்தேகம் சேர்ந்த சித்தம்
2. உபேட்சையுடன் இறுமாப்பு சேர்ந்த சித்தம்

**அஹிதசித்தம் - 18**

1. அகுல விபேக் - 7

2. குசல விபேக் - 3

3. எஹ் கிரியா - 3

4. அகுசலா விபேக் - 71. சக்கு 2. சோடா 3. கானா 4. ஜீ 5. காயா 6. தம்ரீசய் 7. தந்தீயனா

5. உபேக்கா சஹாகதஞ் சக்கு விஞ்ஞானா

6. உபேக்கா சஹாகதங் சோட விஞ்ஞானா

7. உபேக்கா சஹாகதங் கானா விஞ்ஞானா

8. உபேக்கா சஹாகதங் ஜீவ விஞ்ஞானா

9. துக்கா சஹாகதங் காயா விஞ்ஞானா

10. உபேக்கா சஹாகதங் தம்ரீஸனா சித்தம்

11. உபேக்கா சஹாகதங் சந்தீயான சித்தம்

(முன்பிறவியில் செய்த பாபகன்மத்தின் பலன்களாலாய)

1. அகுசல உபேகைஷ - 7

1. உபேஷையுடன் சேர்ந்த கண் சித்தம

2. உபேகைஷயுடன் சேர்ந்த செவி சித்தம்

3. உபேகைஷயுடன் சேர்ந்த நாவு சித்தம்

4. உபேகைஷயுடன் சேர்ந்த ஜீவ சித்தம்

5. உபேஷையுடன் சேர்ந்த காய சித்தம்

6. உபேஷையுடன் சேர்ந்த 5 கூட்ட சித்தம்

7. உபேஷையுடன் சேர்ந்த - சித்தம்.

8. குசலா விபேக் - 8 : 1. சக்கு 2. சோடா 3. கானா 4. ஜீவா 5. காயா 6. தம்ரீசை 7. தந்தியனா 8. தந்தீயனா

9. உபேக்கா சதா கதங் சக்கு விஞ்ஞானா

10. உபேக்கா சகா கதங் சோடா விஞ்ஞானா

11. உபேக்கா சகா கதங் கானா விஞ்ஞானா

12. உபேக்கா சகா கதங் ஜீவ விஞ்ஞானா

13. சுக சகா கதங் காய விஞ்ஞனா

14. உபேக்கா சகா கதங் தம்ரிசை சித்தம்

15. ஸோமனாஸா சகா கதங் தந்தியனா சித்தம்

16. உபேக்கா சகா கதங் தந்தீயனா சித்தம்
(முன்பிறவியில் செய்த புண்யகன்மத்தின் பலன்களாலாய )

**2. குஸல உபேஷை - 8**

1. உபேட்சையுடன் சேர்ந்த கண் சித்தம்
2. உபேட்சையுடன் சேர்ந்த செவி சித்தம்
3. உபேட்சையுடன் சேர்ந்த நாவு சித்தம்
4. உபேட்சையுடன் சேர்ந்த ஜீவ சித்தம்
5. இன்பத்தை சேர்ந்த தேக சித்தம்
6. உபேட்சையுடன் சேர்ந்து அறியும் சக்தியுள்ள மனோ சித்தம்
7. ஆனந்தத்துடன் சோதிக்கத்தக்கதும் ஒரே கருத்துள்ளதுமான மனோ சித்தம்

8. உபேட்சையுடன் சோதிக்கத்தக்க சக்தியான மனோ சித்தம்

**எஹ் கிரியா - 3**

1. உபேகா சகாகதங் பஞ்சதுவாரா விய சனாசித்தங்
2. தட்தாமனோ துவாரா வியசன சித்தங்
3. தோம்னாசா சகாகதங் ஹதிடோபாதா சித்த சே திஹிமானி தீனியி அஹேதுகா.

**ஏதுவின்றி நிகழும் கிரியை சித்தம் – 3**

1. உபேட்சையுடன் பஞ்சதுவாரமாம் மெய், வாய், கண், மூக்கு, செவி இவைகளுடன் சேர்ந்த சித்தம்
2. உபேட்சையுடனும், மனத்துவாரத்துடனும் சேர்ந்த சித்தம்
3. உபேட்சையுடனும், ஆனந்தத்துடன் சேர்ந்த சித்தம்

சோபனா : குசலசித்தம் 8, விபாக கிரியா குஸல சித்தம் - 8

1. சுமனஸ்ய சஹாகோ ஞானாசம்பியோ அசஸங்காரிகா சித்தகூ
2. சுமனஸ்ய சஹாகோ ஞானாசம்பியோ சஸங்காரிகா சித்தகூ
3. சுமனஸ்ய சஹாகோ ஞானாவிப்பியோ அசங்காரிகா சித்தகூ
4. சுமன்ஸ்ய சஹாகோ ஞானாவிப்பியோ சஸங்காரிகா சித்தகூ
5. உபேகா சஹாகோ ஞானாசம்பியோ அசங்காரிகா சித்தகூ
6. உபேகா சஹாகோ ஞானாசம்பியோ சஸங்காரிகா சித்தகூ
7. உபேகா சஹாகோ ஞானாவிப்பியோ அசங்காரிகா சித்தகூ
8. உபேகா சஹாகோ ஞானாவிப்பியோ சஸங்காரிகா சித்தகூ

**குஸல சித்தங்கள் - 8**

1. ஆனந்தம் அறிவுடன் சேர்ந்து தூண்டப்படாத சித்தம்

2. ஆனந்தம் அறிவுடன் சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்
3. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்படாத சித்தம்
4. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்பட்ட சித்தம்
5. உபேக்ஷையுடன் அறிவு சேர்ந்து தூண்டப்படாத சித்தம்
6. உபேஷையுடன் அறிவு சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்
7. உபேஷையுடன் அறிவு சேராது தூண்டப்படாத சித்தம்
8. உபேஷையுடன் அறிவு சேராது தூண்டப்பட்ட சித்தம்

**விபாக பயனைத் தரும் சித்தங்கள் 8**

1. ஆனந்தம் அறிவுடன் சேர்ந்து தூண்டப்படாத சித்தம்
2. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்பட்ட சித்தம்
3. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்படாத சித்தம்
4. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்பட்ட சித்தம்
5. உபேட்சையுடன் அறிவு சேர்ந்து தூண்டப்படாத சித்தம்
6. உபேட்சையுடன் அறிவு சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்
7. உபேட்சையுடன் அறிவு சேராது தூண்டப்படாத சித்தம்
8. உபேட்சையுடன் அறிவு சேராது தூண்டப்பட்ட சித்தம்

**கிரியா கிரியையுடைய சித்தங்கள் 8**

1. ஆனந்தம் அறிவுடன் சேர்ந்து தூண்டப்படாத சித்தம்
2. ஆனந்தம் அறிவுடன் சேர்ந்து தூண்டப்பட்ட சித்தம்
3. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்படாத சித்தம்
4. ஆனந்தம் அறிவுடன் சேராது தூண்டப்பட்ட சித்தம்
5. உபேட்சையுடன் அறிவு சேர்ந்து தூண்டப்படாத சித்தம்
6. உபேட்சையுடன் அறிவு சேர்ந்து தூண்டப்பபட்ட சித்தம்
7. உபேட்சையுடன் அறிவு சேராது தூண்டப்படாத சித்தம்
8. உபேட்சையுடன் அறவிசேராது தூண்டப்பட்ட சித்தம்

ரூபவசர சித்தம் ரூபவசரா 15: 1. குசல சித்தம் - 5, விபாக சித்தம் - 5 கிரியா சித்தம் - 5

1. **குஸலா சித்தம் - 5**

2. வித்தேகா விசாரா பீதி சுகே ஏககதா சஹிதங் பத்தமா ஜானா குசலா சித்தங்

3. விசாரா பீதி சுகே ஏக்கதா சஹிதங் துத்திய ஜானா குசலா சித்தங்

4. பீதி சுகே ஏக்கதா சஹிதங் தத்தியா ஜானா குசலா சித்தங்

5. சுகே ஏக்கதா சஹிதங் சதுதா ஜானா குசலா சித்தங்

6. உபேகா ஏக்கதா சஹிதங் பஞ்சமா ஜானா குசலா சித்தம்

**(1) குஸலா (நல்) சித்தம் - 5**

1. விவேகம், ஆலோசனை, ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்
2. ஆலோசனை, ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க் கூடிய குசல சித்தம்
3. ஆனந்தம், சந்தோஷம். தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்
4. சந்தோஷம். தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்
5. உபேட்சை , தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்

**(2) - விபாகா 5 ; பயனைத்தரும் சித்தங்கள் 5**

1. விவேகம், ஆலோசனை, ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்
2. ஆலோசனை. ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்
3. ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்

4. சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்
5. உபேட்சை , தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்

**(3) கிரியா 5; பயனைத் தரும் சித்தங்கள் 5**

1. விவேகம், ஆலோசனை, ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசலசித்தம்
2. ஆலோசனை. ஆனந்தம். சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்.
3. ஆனந்தம், சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசலசித்தம்
4. சந்தோஷம், தியானம் ஒன்றாய்க்கூடிய குசலசித்தம்
5. உபேட்சை , தியானம் ஒன்றாய்க்கூடிய குசல சித்தம்

**ரூபவசர சித்தம் - 12**

குசல 4, விபாகா 4 கிரியா 4

**குஸலா சித்தங் - 4**

1. ஆகாசான்ஞ்சா யத்தனா குசலா சித்தங்
2. விஞ்ஞானஞ்ச யத்தனா குசலா சித்தங்
3. ஆகே சஞ்சா யத்தனா குசலா சித்தங்
4. நேவா சஞ்சா யத்தனா குசலா சித்தங்

**குஸல சித்தங்கள் - 4**

1. வெட்டவெளி மட்டற்ற தென்னும் பரவசராஜ்யத்தோடு கூடிய குசல சித்தம்
2. விஞ்ஞானம் எல்லையற்ற தென்னும் பரவச ராஜ்யத்தோடு கூடிய குசல சித்தம்
3. யாதொரு வெளிப்பொருளுமில்லை என்கிற பரவச ராஜ்யத்தோடு கூடிய குசல சித்தம்

4. அறிவுள்ளதும் அறிவல்லாததும் அல்லாத பரவசராஜ்யத்தோடு கூடிய சித்தம்.

லோகுதித்தர - 8

மார்க்கம் 4 பலம் - 4

**மாக்காசித்தம் - 4**

1. ஸ்ரோதாபதி மார்க்க சித்தங்
2. சகதாகாமி மார்க்க சித்தங்
3. அனாகாமி மார்க்க சித்தங்
4. அறஹத்த மார்க்க சித்தங்

**மார்க்க சித்தங்கள் - 4**

1. காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றும் தம்மிடத்தில் எழாதபடி குறைக்கும் மார்க்கத்துடன் சேர்ந்த சித்தம்
2. ஒரேபிறப்பை மட்டும் அடைதற்குரிய மார்க்கத்துடன் சேர்ந்த சித்தம்
3. மறுபிறப்பில் தோற்றுவதற்கு ஏதுவில்லா மார்க்கத்துடன் சேர்ந்த சித்தம்
4. நிருவாணமடையும் மார்க்கத்துடன் சேர்ந்த சித்தம்

பலா - 4

*1. ஸ்ரோதபதி பலா 2. ஸகதாகாமி பலா 3. அனாகாமி பலா 4. அறஹத பலா

**பலன் - 4**

1. காமம், வெகுளி, மயக்கம். இம்மூன்றும் தம்மிடத்தில் எழாதபடி குறைத்துக் கொண்ட பலன்

2. ஒரே பிறப்பை மட்டும் அடைந்த பலன்
3. மறுபிறப்பு தோற்றுவதற்கு ஏதுலில்லாது நின்ற பலன்
4. நிருவாண பலன்

ஓ! சகோதிரர்களே! துக்கோற்பத்தியாகிய தூய்மெயான சத்தியம் யாது?

ஓ! சகோதிரர்களே! அவைகள் முறையே மறுபிறப்பிற்கு ஆளாக்கும் அவா, இன்பத்தைநாடி ஆவலுண்ட அவா, ஒவ்வொரு பிறப்பிற்கும் சந்தோஷத்தை நாடும் அவா, அவை யேகாமத்தால் உண்டாகும் அவா, உயிர் வாழ்க்கையின் பேரில் உண்டாகும் அவா, அநித்யமாகும் சொற்ப இன்பத்தால் உண்டாகும் அவாவென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! இவ்வேட்கையானது எங்கிருந்து உதித்து விருத்தியாகின்றது? எங்கு நிலைத்து வேரூன்றுகிறது?

ஓ! சகோதிரர்களே! ஜீவர்களுக்கு எதன்பேரில் இன்பம் இஷ்டமு மாயிருக்கின்றதோ அவ்விடத்தில் வேட்கையானது உதித்து விருத்தியாகி நிலைத்து வேரூன்றுகிறது

ஓ! சகோதிரர்களே ! ஜீவர்களுக்கு இன்பமும், ஹிதமானது எது; வேட்கை எங்கிருந்து உதித்து விருத்தியாகின்றது; எங்கு நிலைத்து வேரூன்றுகிறது?

(அறுவித ஞானேந்திரியங்கள்) சகோதிரர்களே! ஜீவர்களுக்கு கண் இன்பத்தையும் ஹிதத்தையும் தரும். அங்கு அவா உதித்து விருத்தியாகி அவ்விடத்திலேயே அது நிலைத்து வேரூன்றுகிறது. செவி -நாசி நா - தேகம் - மனம் இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும், தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவித இந்திரிய கோசரமான வஸ்துக்கள்) ரூபங்கள், சப்தங்கள், கந்தங்கள், பரிசங்கள், எண்ணங்கள் இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும்.

அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவித விக்ஞானங்கள்) சித்தம் கண் - சித்தம், செவி - சித்தம், நாசி - சித்தம், நாவு - சித்தம், தேக - சித்தம் , மனோ - சித்தம் இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும் ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவித பரிசங்கள்) கண்ணின் பரிசம், செவியின் பரிசம், நாசியின் பரிசம், நாவின் பரிசம், தேகத்தின் பரிசம், மனோபரிசம் இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவித உணர்ச்சி) கண் பரிசத்தாலாய உணர்ச்சி, செவி பரிசத்தாலாய உணர்ச்சி, நாவு பரிசத்தாலாய உணர்ச்சி நாசி பரிசத்தாலாய உணர்ச்சி, தேக பரிசத்தாலாய உணர்ச்சி, மனோ பரிசத்தாலாய உணர்ச்சி, இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

அறுவித குறிப்புகள்) ரூபங்களின் குறிப்பு , சப்தங்களின் குறிப்பு , கந்தங்களின் குறிப்பு, ரசங்களின் குறிப்பு , பரிசங்களின் குறிப்பு, எண்ணங்களின் குறிப்பு, இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவித நினைவுகள்) ரூபங்களைப்பற்றி நினைத்தல், சப்தங்களைப் பற்றி நினைத்தல், கந்தங்களைப்பற்றி நினைத்தல், ரசங்களைப்பற்றி நினைத்தல் பரிசங்களைப் பற்றி நினைத்தல், எண்ணங்களைப்பற்றி நினைத்தல் இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ் இடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவித அவாக்கள்) ரூபங்களின் பேரில் அவா, சப்தங்களின் பேரில் அவா . தந்தங்களின் பேரில் அவா, ரசங்களின் பேரில் அவர், பரிசங்களின் பேரில் அவா, எண்ணங்களின் பேரில் அவா இவைகள் ஜூவர்களுக்கு இன்பத்தையும் ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே அவைகள் நிலைத்து வேரூன்றுகின்றன.

(அறுவகை யூகைகள்) ரூபங்களைப்பற்றி யூகித்தல், சப்தங்களைப் பற்றி யூகத்தல், கந்தங்களைப் பற்றி யூகித்தல் , ரசங்களைப் பற்றி யூகித்தல், பரிசங்களைப் பற்றி யூகித்தல், எண்ணங்களைப்பற்றி யூகித்தல் இவைகள் ஜவாகளுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அங்கங்கே அவாக்கள் உதித்து விருத்தியாகி அவ்வவ்விடத்திலேயே நிலைத்து வேரூன்றுகின்றன.

ஓ! சகோதிரர்களே ! துக்கோற்பத்தி என்னும் தாய்மெயான சத்தியம் இஃதே.

ஓ! சகோதிரர்களே ! துக்கநிவாரண தூய்மெயான சத்தியம் யாது?

ஓ! சகோதிரர்களே அவாவை மற்றும் ஒழித்துவிட வேண்டும். ஆனால் ஓ ! சகோதிரர்களே! இந்த அவாவானது எவ்விடத்தில் குறைந்து மறைந்து எவ்விடத்தில் இது கலைந்து மடிகிறது. ஓ! சகோதிரர்களே ! ஜீவர்களுக்கு எங்கு இன்பத்தையும் ஹிதத்தையும் தருமோ அவ்விடத்தில் அவாவானது குறைந்து மறைகிறது. அது அவ்விடத்தில் கலைந்து மடிகிறது. ஜீவாகளுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவதெது. எவ்விடத்தில் அவாவானது குறைந்து மறைகிறது. அது எவ்விடத்தில் கலைந்து மடிகிறது. ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவது கண். அவ்விடத்தில் அவாவானது குறைந்து மறைகிறது. அது அவ்விடத்தில் கலைந்து மடிகிறது. செவி, நாசி, நா, தேகம் மனம் இவைகள் ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றது. அது அவ்விடத்தில் கலைந்து மடிகிறது. ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவதுகண். அவ்விடத்தில் அவாவானது குறைந்து மறைகிறது. அது அவ்விடத்தில் கலைந்து மடிகிறது. செவி, நாசி, நா, தேகம் மனம் இவைகள் ஜீவர்களுக்கு

இன்பத்தையும், ஹிதத்தையும் தரும். அவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவது (அறுவித இந்திய கோசமான வஸ்துக்கள் ) ரூபங்கள், சப்தங்கள், கந்தங்கள், பரிசங்கள், எண்ணங்கள் அவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்தையும் ஹிதத்தையும் தருவது (அறுவித விக்ஞானங்கள்) கண் - சித்தம், செவி-சித்தம், மனோ-சித்தம் அவ்வவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவது (அறுவித பரிசங்கள் ) கண்ணில் பரிசம், செவியின் பரிசம், நாசியின் பரிசம், நாவின் பரிசம், தேகத்தின் பரிசம், மனோ பரிசம், அவ்வவ்விடதில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்தையும் ஹிதத்தையும் தருவது (அறுவித உணர்ச்சிகள்) அவ்வவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவது (அறுவித குறிப்புகள்) அவ்வவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்தையும், ஹிதத்தையும் தருவது (அறுவித நினைவுகள் ) அவ்வவ்வி தில் அவாக்களானது குறைந்து மறைகன்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. ஜீவர்களுக்கு இன்பத்யையும் ஹிதத்தையும் தருவது (அறுவித அவாக்கள்) அவ்வவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மறைகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன. உலர்த்து இன்பத்தையும் விதத்தையும் தருவது (அறுவித யூகைகள் ) அவ்வவ்விடத்தில் அவாக்களானது குறைந்து மடிகின்றன. அவைகள் அவ்வவ்விடத்தில் கலைந்து மடிகின்றன.

ஓ! சகோதிரர்களே! துக்கநிவாரணமார்க்கமென்னும் தூய்மெயான சத்தியம் யாது?

ஒ சகோதிரர்களே! துக்கநிவாரணமார்க்கமாகிய தூய்மெயான சத்தியம் இதுவே. மிக்க பரிசுத்தமுடைய அரிய அஷ்டாங்க மார்க்கம் இதுதான், அதாவது - நற்காட்சி, நற்சிந்தை

நல்வசனம், நற்செய்கை, நல்வாழ்க்கை , நல் ஊக்கம், நற்கடை பிடி, நல் அமைதி என்னும் இவ்வெட்டுமாம்.

ஓ! சகோதிரர்களே! நற்காட்சி என்றால் யாது?

ஓ! சகோதிரர்களே! துக்கம் இதென்றும், துக்கோற்பத்தி இதென்றும், துக்க நிவாரணம் இதென்றும், துக்க நிவாரணமார்க்கம் இதென்றும் தெளிவற அறிவதே நற்காட்சி அல்லது நற்பார்வை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நற்சிந்தையெனில் யாது? ஓ ! சகோதிரர்களே! காம இச்சை அற்றும், கோபம் போராமெய் அற்றும், ஜீவர்களை ஹிம்சிக்காதும் இருப்பதே நற்சிந்தனை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நல்வசனம் எனில் யாது? ஓ! சகோதிரர்களே! பொய்பேசாமெய், புறங்கூறாமெய், கொடுஞ்சொற் கூறாமெய், வீண்வார்த்தை யாடாமெய் ஆகிய இவைகளே நல்வசனம் என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நற்செய்கை எனில் யாது?

ஓ! சகோதிரர்களே! கொலை, களவு, காமம் இவைகள் அற்றிருப்பதே நற்செய்கை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நல்வாழ்க்கை என்பது யாது? ஓ! சகோதிரர்களே! ஒருவன் மதியை மயக்கி கெடுக்கத்தக்க வஸ்துக்களையும், பல உயிர்களைக் கொன்று விற்கத்தக்க மாமிஷங்களும், விஷங்களை ஏற்றிவிற்கத்தக்க ஆயுதங்களும், மனிதர்களை அடிமை பிடித்து விற்குந் தொழில்களும், சூது விளையாடுவோருக்கும், கள்ளர்களுக்கும் இடங்கொடுத்து அதினால் ஜீவிக்கும் தொழில்களும் இவ்வகை பழிபாவத்துக்குரிய தொழில்கள் யாவுமகற்றி வாழ்வதே நல்வாழ்க்கை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நல் ஊக்கம் எனில் யாது?

ஓ! சகோதிரர்களே! அபுண்ய குணங்க ளுண்டாகாமல் அவற்றைத் தடுக்க முயர்ச்சித்தல் உண்டாயிருக்கும் அபுண்ய குணங்களை விலக்குவதற்கு முயற்சித்தல், முன்னில்லாத புண்ய குணங்களை உண்டாக்க முயற்சித்தல், உண்டாயிருக்கும் புண்யகுணங்களை அதிகப்படுத்த முயற்சித்தல் ஆகிய இவைகளே நல்ஊக்கம் அல்லது நல்முயற்சி என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நற்கடைபிடி எனில் யாது?

ஓ! சகோதிரர்களே! சகோதிரன் ஒருவன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையும், ஊக்கமும், அறிவும், ஆராய்ச்சி உடையவனாகவும், காமமும், துயரமும் அற்றவனாயும்; பூதவிஷயங்களில் ஜாக்கிரதையும், ஊக்கமும், அறிவும், ஆராய்ச்சி உடையவனாகியும், காமமும், துயரமும் அற்றவனாகவும் இருந்து சிந்திப்பதே நற்கடைபிடி அல்லது நல் தியானம் என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நல் அமைதி யெனில் யாது?

ஓ! சகோதிரர்களே! சகோதிரன் ஒருவன் காம இன்பத்தினின்று விலகியும், உசிதமற்ற நடைகளினின்று விலகியும், விசாரணையாலும், யூகையாலும், தியானிப்பனேல் அவ்விடத்தில் அவனுக்கு சந்தேகமும், ஆனந்தமுந் தோன்றும்.

விசாரிணையும் யூகையும் அற்று சந்தோஷமும் ஆனந்தத்துடனும் தியான சக்தியால் நல் அமைதியும் ஏகாக்கிர சித்தமுள்ள எண்ணத்துடனிருப்பான்.

அவ்வகை மௌனபாக்கியம் திரண்டவுடன் முன்பு அநித்தியத்தினின்றவன் நித்யனாகின்றான். ஆத்மாவினின்றவன் அனாத்மனாகின்றான். ஜநநங்கடோரும் பொய்யனாக நின்றவன் உண்மெய்யனாகின்றான். அப்பொய் யற்ற மெய்யே நிருவாணமென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! இதுதான் துக்க நிவாரண மார்க்கமென்னப்படும். வசகோதிரர்களே! இவ்விதமாக நான்குவித சமாதிகளைப் பற்றி தெரிந்தோம். நிருவாண பதவிக்கு ஆளாக்குவது இந்நான்குவித சமாதிகளேயாம் என முடித்தவுடன் பிக்ஷுகுழாங்கள் கைகுவித்து வணங்கி ஆனந்தமடைந்தார்கள். பகவன் பின்னர் சாவித்தி நகரத்திலுள்ள விஹாரத்திற்குச் சென்று அங்குள்ள பிக்ஷுகுழாங்களுக்கு துறவற தன்மத்தைப்பற்றி போதித்துவிட்டு ஜீதாவன விகாரத்திற்குச் சென்றார்.

**15. தர்ம சக்ர பிரவர்த்தன காதை**

அவர் வரவை எதிர்நோக்கி நின்றிருந்த இல்லறத்தாருக்கும் துறவறத்தாருக்கும் பின் வருமாறு போதித்தார். ஓ! சகோதிரர்களே! தூய்மெயான (நற்சிந்தனை அல்லது நல் தியானமாம்) சம்யக் ஸமாதி இன்னதென்றும் அதைத் தொடர்ந்துவருபவை இவைகள் என்றும் உங்களுக்கு விளக்குகின்றேன். அவைகளை செவியாரக் கேளுங்கள்.

ஐயனே! கூறியருளும் என்றார்கள்.

பகவன் ஓ! சகோதிரர்களே! நல்தியானமாம் சம்யக் ஸமாதியை பூர்த்தி செய்ய ஏழுவகை கூட்டங்கள் தொடர்ந்துவரும், அவை 1. சம்யக்திருஷ்டி 2. சம்யக் கல்பனா 3. சம்யக் வஸனா 4. சம்யக் கர்மந்தா 5. சம்யக் அஜீவா, 6. சம்யக் வீரியா 7. சம்யக் ஸ்மிருதி) 1. நற்காற்சி 2. நல்லூற்றம் 3. நல்வாய்மெய் 4. நற்செய்கை 5. நல்வாழ்க்கை 6. நன்முயற்சி 7. நற்கடைப்பிடி

ஓ! சகோதிரர்களே! இதில் சம்யக்திருஷ்டியாம் நற்காட்சி முதலில் நிற்கின்றது. ஆனால் சகோதிரர்களே! நற்காட்சி எவ்விதமாய் முதல் நின்றது. ஒருவனுக்கு கெடுதியை கெடுதி என்றும், நல்லவை நல்லவை என்றும் தோன்றுமாயின் அஃதே நற்காட்சி என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! துற்பார்வை என்றால் என்ன? தர்மம் செய்வது பிரயோசன மற்றதென்றும், நற்கருமத்தால் நற்பலனும், துற்கருமத்தால் துற்பலனும் அடைவதென்பது கிடையாது. இப்பிறவி, மறுபிறவி என்பது கிடையாது. அன்னையும்

பிதாவும் தெய்வமெனல் வீண்வார்த்தை என்றும், இவ்வுலகில் பரிசுத்தமும் குற்றமற்ற தபசிகள் கிடையாதென்றும், இப்பிறவியையும் மறுபிறவியையும் தபசிகளால் எடுத்துக்காட்ட முடியாதென்றும் கூறத்துணிவதே துற்பார்வை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நற்பார்வை என்றால் என்ன? ஓ! சகோதிரர்களே! நற்பார்வை என்பது இருவகைப்படும். முதலாவது உலகத்திலிருந்து நற்கிரியைகளைச் செய்தால் நற்பலனை அடைவோமென்பது (லோகீக) இல்லற வாழ்க்கைக்குரிய நற்பார்வை. இரண்டாவது சத்தியமார்க்கத்தில் நின்று (லோகுத்தா) துறவியாவோமென்பது உலகத்திற்கு அப்புறப்பட்ட நற்பலனை நாடி நிற்பதும் நற்பார்வையாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்திலிருந்து நற்கிரியைகளைச் செய்தால் நற்பலனை அடைவோமென்னும் நற்பார்வை என்றால் என்ன?

தர்மம் செய்வது புண்ணியம், பிரயோசனமானது. நற்கருமத்தால் நற்பலனும், துற்கருமத்தால் துற்பலனும் அடைவது உண்மெயே. இப்பிறவி மறுபிறவி என்பது உண்டு. அன்னையும் பிதாவுந் தெய்வங்களே.

இப்பிறவியையும், மறுபிறவியையும் தாங்களும் தெரிந்து விளக்கக்கூடிய பரிசுத்தமும் குற்றமற்ற தபசிகள் இருக்கின்றார்கள். சகோதிரர்களே! இவையே இல்லறத்திலிருந்து நற்கிரியைச்செய்து நற்பலனை அடைவோம் என்னும் நற்பார்வை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! உலகவாழ்க்கைக்கு அப்புறப்பட்ட சத்திய மார்க்கத்தினின்ற (லோகுத்தா) துறவிகள் நற்பலனை நாடி நிற்கும் நற்பார்வை என்றால் என்ன?

ஞானமுடனும், ஞான சக்தியுடனும், ஞான வீரியத்துடனும், சிந்திப்புடனும், மன பரிசுத்தம் உலகநாட்டமற்ற வழியில் நின்று சத்திய மார்க்கத்தை பின்பற்றுதலே நற்பார்வை. இஃதே உலகவாழ்க்கைக்கு அப்புறப்பட்டு சத்தியமார்க்கத்தினின்று துறவிகள் நற்பலனை நாடி நிற்கும் நற்பார்வை என்னப்படும்,

இரண்டாவது இல்லறத்திலிருந்து துறந்து சத்திய மார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் நற்சித்தமும் இருவகைப்படும்.

ஓ! சகோதிரர்களே! துற்பார்வை ஒழித்து நற்பார்வையை உதிக்கச் செய்வதற்கு சம்யக்வீரியா அதாவது நல்முயற்சியைக் கடைபிடிக்கவேண்டும். நற்பார்வையுடனும் உறுதிமனத்துடனும் இருந்து துற்பார்வையை ஒழிக்க சம்யக் ஸ்மிருதி அதாவது நற்கடைபிடித்தல் வேண்டும். ஆக நற்பார்வையும், நன்முயற்சியும், நற்கடைப்பிடியும் தொடர்ந்து வருகின்றது.

ஓ! சகோதிரர்களே! சம்யக் திருஷ்டி அதாவது நற்காட்சி அல்லது நற்பார்வை முதலாக வருகின்றது. எவ்விதத்தில் இது ஆரம்பமாக வருகிறது? துற்சித்தம் துற்சித்தமென்றும், நற்சித்தம் நற்சித்தமென்றும் ஒருவனுக்குத் தோன்றுமாயின் அஃதே நற்பார்வை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! துற்சித்தமென்றால் என்ன? காம எண்ணங்கள், துயர் வருவிக்கத்தக்க எண்ணங்கள், கொடூரமான எண்ணங்கள் இவைகளே துற்சித்தமென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நற்சித்தமென்றால் என்ன?

நற்சித்தம் இருவகைப்படும்.

முதலாவது இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்கக் கூடிய நற்சித்தமாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்கக்கூடிய நற்சித்தமெனில் யாது?

உலகத்தைத் துறக்க வேணுமென்கின்ற எண்ணம், குற்றம் பாராட்டா திருக்கவேணுமென்கின்ற எண்ணம், கொடூரச்செய்கைகளைச் செய்யாதிருக்க வேணுமென்கின்ற எண்ணம் இஃதே இல்லறத்திலேயே நற்சுகத்தையும் நற்பலனையும் கொடுக்கக்கூடிய நற்சித்தமாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் நற்சித்தமெனில் யாது?

யோசிக்கும் போதும், அவதானிக்கும் போதும், முயற்சிக்கும் போதும் சித்தமானது பரிசுத்தத்துடனும் உலகப்பற்றைவிட்டு சத்தியமார்க்கத்தில் நாடி சத்தியமார்க்கப்பிரகாரம் ஒழுகிவரும்படியான இச்சித்தத்தின் செயலே இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினாலுண்டாகும் பரிசுத்த நற்சித்தம் என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! துற்சித்தத்தை யொழித்து நற் சித்தத்தை உதிக்கச் செய்வதற்கு சம்யக் வீரியா அதாவது நன்முயற்சியைக் கடைபிடிக்கவேண்டும். நற்சித்தத்துடனும், சித்த ஜாக்ரதையுடனும் துற்சித்தத்தை ஒழிக்க சம்யக் ஸ்மிருதி அதாவது நற்கடை பிடித்தல் வேண்டும். அக நற்சிக்கக்கை நற்பார்வையும், நன்முயற்சியும், நற்கடைபிடியும் தொடர்ந்து வருகின்றது.

ஓ! சகோதிரர்களே! சம்யக் திருஷ்டி நற்பார்வை ஆரம்பமாக விருக்கின்றது. ஆனால் சகோதிரர்களே! நற்பார்வை எவ்விதத்தில் ஆரம்பமாக வருகிறது. ஒருவனுக்கு மிச்சா வாஸா துன்வசனம் துன் வசனமென்றும் சம்யக்வசனா நல்வசனம் நல்வசனமென்றும் பகுத்தறிந்துக் கொள்வானாகில் அவன் நற்பார்வையில் இருக்கின்றான்.

ஓ! சகோதிரர்களே! மிச்சா வஸனா துன்வசனமெனில் யாது?

பொய் சொல்லல், புறங்கூறல், கடுஞ்சொல் கூறல், பயனற்ற சம்பாஷனை வெகளே துன்வசனம் என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நல்வசனமெனில் யாது? ஓ! சகோதிரர்களே! நல்வசனம் இருவகைப்படும்.

முதலாவது இல்லறத்திலேயே நற் சுகத்தையும், நற்பலனையும் கொடுக்கக்கூடிய நல்வசனமாம்.

இரண்டாவது இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் பரிசுத்தமான நல்வசனமாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையுங் கொடுக்க கூடிய நல்வசனமெனில் யாது?

பொய் கூறாதிருத்தல், புறங்கூறாதிருத்தல், கடுஞ்சொற் கூறாதிருத்தல், பயனற்ற சம்பாஷனை செய்யாதிருத்தல் இஃதே.

இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்ககூடிய நல்வசனமாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் நல்வசனமெனில் யாது?

மேற்கூறிய நான்குவகை துன்வசன பழக்கங்களை வெறுத்து நீக்கி விலகிக்கொண்டு பரிசுத்த மனத்துடனும், உலகப்பற்றைவிட்டு சத்திய மார்க்கத்தில் நாடி சத்தியமார்க்கப் பிரகாரம் ஒழுகிவரும்படியான இவ்வசனமே இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் பரிசுத்த நல்வசனம் என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! துன்வசனத்தை ஒழித்து நல்வசனத்தை விருத்தி செய்வதற்கு சம்யக்வீரியா அதாவது நன்முயற்சியைக் கடைபிடிக்கவேண்டும். நற்சித்தத்துடனும், சித்தஜாக்கிரதையுடனும், துன்வசனத்தை ஒழிக்க சம்யக்ஸ்மிருதி அதாவது

நற்கடைபிடித்தல் வேண்டும். ஆக நல்வசனத்தை தொடர்ந்து வருபவை மூன்றாம். அவை நற்பார்வை, நன்முயற்சி, நற்கடைபிடி என்பவைகளே.

ஓ! சகோதிரர்களே! சம்யக் திருஷ்டி அதாவது நற்பார்வை அல்லது நற்காட்சி முதலாக வருகின்றது. எவ்விதத்தில் இது ஆரம்பமாக வருகின்றது.

துற்செய்கை துற்செய்கை என்றும், சம்யக்கர்மந்தா அதாவது நற்செய்கை நற்செய்கை என்றும் பகுத்தறிந்துக் கொள்ளுவானகில் அவன் நற்பார்வையில் இருக்கின்றான்.

ஓ! சகோதிரர்களே! மிச்சாகர்மந்தா துற்செய்கை எனில் யாது? கொலை செய்தல், கள்ளருந்தல், விபசாரஞ்செய்தல் இவைகளே துற்செய்கை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நற்செய்கை எனில் யாது? ஓ! சகோதிரர்களே! நற்செய்கை இருவகைப்படும். முதலாவது - இல்லறத்திலேயே நற்சுகத்தையும் நற்பலனையும் கொடுக்கக் கூடிய நற்செய்கையாம்.

இரண்டாவது - இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் பரிசுத்தமான நற்செய்கையாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்க கூடிய நற்செய்கையெனில் யாது?

கொலை செய்யாதிருத்தல், கள்ளருந்தாதிருத்தல், விபசாரஞ் செய்யாதிருத்தல் இஃதே.

இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்ககூடிய நற்செய்கையாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் நற்செய்கை எனில் யாது?

மேற்கூறிய மூன்றுவகை துற்செய்கைகளான பழக்கங்களை வெறுத்து நீக்கி விலகிக்கொண்டு பரிசுத்த மனத்துடனும், உலக பற்றை விட்டு சத்தியமார்க்கத்தில் நாடி சத்தியமாக்கப்பிரகாரம் ஒழுகிவரும்படியான இச் செய்கையே இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் பரிசுத்த நற்செய்கை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! துற்செய்கையை ஒழித்து நற்செய்கையை விருத்தி செய்வதற்கு சம்யக்வீரியா அதாவது நன் முயற்சியைக் கடைபிடிக்க வேண்டும். நற்சித்தத்துடனும், சித்த ஜாக்ரதையுடனும், துற்செய்கையை ஒழித்து சம்யக்ஸ்மிருதி அதாவது நற்கடைபிடித்தல் வேண்டும். ஆக நற்செய்கையைத் தொடர்ந்துவருபவை மூன்றாம். அவை நற்பார்வை, நன் முயற்சி, நற்கடைபிடி என்பவைகளே.

. ஓ! சகோதிரர்களே! சம்யக்திருஷ்டி. அதாவது நற்பார்வை அல்லது நற்காட்சி முதலாக வருகின்றது. எவ்விதத்தில் இது ஆரம்பமாக வருகின்றது.

மிச்சா - அஜீவா அதாவது துன்வாழ்க்கை துன்வாழ்க்கையென்றும், சம்யக் அஜீவா நல்வாழ்க்கை நல்வாழ்க்கையென்றும் பகுத்தறிந்துக் கொள்வானாகில் அவன் நற்பார்வையில் இருக்கின்றான்.

ஓ! சகோதிரர்களே ! மிச்சா - அஜீவா துன் வாழ்க்கை எனில் யாது?

சூது, நம்பிக்கைத் துரோகம், குறிச்சொல்லுதல், தந்திரம், அநியாய வட்டி இவைகளில் பழகிவருவதே துன் வாழ்க்கை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! நல்வாழ்க்கை எனில் யாது? ஓ! சகோதிரர்களே! நல்வாழ்க்கை இருவகைப்படும். முதலாவது - இல்லறத்திலேயே நற் சுகத்தையும், நற்பலனையும் கொடுக்க கூடிய நல்வாழ்க்கையாம்.

இரண்டாவது - இல்லறத்தினின்று துறந்து சத்திய மார்க்கத்தில் பழகுதலினால் உண்டாகும் பரிசுத்தமான நல்வாழ்க்கையாம்.

ஓ! சகோதிரர்களே ! இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பயனையும் கொடுக்க கூடிய நல்வாழ்க்கையெனில் யாது?

கெடுதியான மார்க்கங்களில் சம்பாதித்து புசியாது சத்தியத்திற்காக பாடுபட்டு புசித்து வாழ்வதே இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்கக்கூடிய நல்வாழ்க்கையாம்.

ஓ! சகோதிரர்களே! இல்லறத்தினின்று துறந்து சத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் நல்வாழ்க்கை எனில் யாது?

மேற்கூறிய ஐந்துவகை துன்வாழ்க்கைகளான வாழ்க்கைகளை வெறுத்து நீக்கி விலகிக்கொண்டு பரிசுத்த மனத்துடனும் உலகப்பற்றை விட்டு சத்தியமார்க்கத்தில் நாடி சத்தியமார்க்கப்பிரகாரம் ஒழுகிவரும்படியான இல்வாழ்க்கையே இல்லறத்தினின்று துறந்து சாத்தியமார்க்கத்தில் பழகுவதினால் உண்டாகும் பரிசுத்த நல்வாழ்க்கை என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! துன் வாழ்க்கையை மைித்து நல்வாழ்க்கையை விருத்தி செய்வதற்கு சம்யக்-வீரியா அதாவது நன்முயற்சியைக் கடைபிடிக்க வேண்டும். நற்சித்தத்துடனும், சித்த ஜாக்ரதையுடனும், துற்செய்கையை ஒழித்து சம்யக்ஸ்மிருதி அதாவது நற்கடைபிடித்தல் வேண்டும். ஆக நற்செய்கையைத் தொடர்ந்து வருபவை மூன்றாம். அவை நற்பார்வை, நன் முயற்சி, நற்கடைபிடி என்பவைகளே.

ஓ! சகோதிரர்களே! நற்காட்சி அல்லது நற்பார்வை முதலில் நிற்பதற்குக் காரணம் சம்யக் கல்பனா நல்லூற்றம் யாவரிடத்தில் தோன்றியதோ அவனுக்கு சம்யக் வஸனா நல்வசனம் தோன்றும். நல்வசனம் யாவனிடத்தில் தோன்றிய தோ அவனுக்கு சம்யக் கர்மந்தா நற்கருமந் தோன்றும், நற்கருமம் யாவனிடத்தில் தோன்றியதோ அவனுக்கு

சம்யக் அஜீவா நல் வாழ்க்கை தோன்று நல்வாழ்க்கை யாவனிடத்தில் தோன்றியதோ அவனுக்கு சம்யக் விரியா நல் முயற்சி தோன்றும். யாவனுக்கு நல்முயற்சி தோன்றிற்றோ அவனுக்கு ஸம்யக்ஸ்மிருதி நற்கடை பிடித்தல் தோன்றும். யாவனுக்கு நற்கடைபிடித்தல் தோன்றிற்றோ அவனுக்கு சம்யக் சமாதி நற்தியானம் தோன்றும். யாவனுக்கு நற்றியானம் உதித்ததோ அவ்விடத்திலேயே முத்தியாம் நிருவாணமென்னும் பரமசாந்தியடைகின்றான். அவனே சுரோதாபதி, சகிர்தாகாமி, அநாகாமி என்னும் இம்மூன்று நிலைகளினின்று விலகி பற்றற்றதும் பரமசுகமுமான அறஹத்துநிலை அடைகின்றான் என பகவன் தமது தர்மசக்ரப்ரவர்த்தனமாம் அறச்சக்கரத்தை விளக்கிக்காட்டி முடித்தவுடன் பிக்ஷு குழாங்களெழுந்து கைகூப்பி ஆனந்தமடைந்தனர்கள்.

அவ்விடம் விட்டு நீங்கிய அறவாழியான் வைசாலி நகரடைந்தபோது பிக்ஷுமார்கள் பகவனை அஞ்சலிகரணஞ்செய்து சுவசித்தங் பரிதபனம் அதாவது இருதயத்தை சுத்தி செய்யும் மார்க்கத்தை போதித்தருள வேண்டுமென வினவ பகவன் கூறுவார்.

ஓ! சகோதிரர்களே! இதயத்தை சுத்தி செய்யும் மார்க்கம் எழுவகைப்படும். அவை 1. சதிபதானங்கள் - நான்குவகை சிந்தனை, 2. வாயமோ - நான்குவித முயற்சி 3. சம்மபாதா - நான்குவித பாதை 4. சந்திரியா - ஐயிந்திரியங்கள் 5. சபலா - ஐந்துவித நீதிபலம் 6. சத்தபோ ஜங்கா - பற்றறுத்தல் 7. சதிபாத - அறிய அட்டாங்க மார்க்கம்

ஓ! சகோதிரர்களே! முதலாவது - நான்கு விதமான சிந்தனைகளாவன:

அவை.

1. காயானுபஸ்ஸன்னா - அசுத்தத்தாலாய தேகத்தைப்பற்றி சிந்தித்தல்.
2. வேதனானு பஸ்ஸன்னா - சகல உணர்ச்சிகளின்று உண்டாகுங் கேடுகளைப்பற்றி சிந்தித்தல்.
3. சித்தானுபஸ்ஸன்னா - மனத்தினது எண்ணங்களின் ஓட்டங்களையும் மறதிகளையும் உதயங்களையும் சிந்தித்தல்.

4. தம்மானு பஸ்ஸன்னா - உலகத்தில் தோற்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்கு க்ஷணங் கெட்டுக் கொண்டே வருகிறதென்று சிந்தித்தல்,

ஓ! சகோதிரர்களே! இரண்டாவது - நான்கு விதமான முயற்சிகள் யாவை.

அவை.

1. அநூபானானங், அநுபாதாயாவாயமோ - கெட்ட குணங்கள் உதிக்காமல் அவற்றை தடுக்க முயற்சித்தல்.
2. உபானானங் பபாகானங் பஹானாயாவாயமோ - உள்ள கெட்ட குணங்களை விலக்குதற்கு முயற்சித்தல்.
3. அநுபானானங் கூஸலானங் உபாதாயாவாமோ - முன்னில்லாத நன்மெய்களை உண்டாக்க முயற்சித்தல்,
4. உபானானங் குஸலானங் பயோபாவாயா வாயமோ - உண்டாயிருக்கும் நன்மெய்களை அதிகப்படுத்த முயற்சித்தல்.

ஓ! சகோதிரர்களே! மூன்றாவது, நான்குவித பாதைகள் யாவை?
அவை

1. சந்தித்தி - பாதா - சித்த சுத்தியைப் பெறவேண்டிய பாதை
2. விரியத்தி - பாதா - நிருவாண ஸித்திபெறவேண்டிய பாதை.
3. ஸிட்தித்தி - பாதா - சித்தத்தை அடக்கவேண்டிய பாதை.
4. விமம்ஸித்தி - பாதா - விசாரணை பாதை.

ஓ! சகோதிரர்களே! நான்காவது - ஐயிந்திரியங்கள் யாவை?
அவை

1. சத்ட்திந்திரியா - உரமான சிரத்தை
2. வீரியந்திரியா - உரமான சக்தி

3. சடீந்திரியா - உரமான ஞாபகம்
4. சமாதிந்திரியா - வாஸ்தவமான தியானம்
5. பிரஞ்ஞுந்திரியா - சிறந்த ஞானம்

ஓ! சகோதிரர்களே! ஐந்தாவது - ஐந்துவித நீதிபலம் யாவை?
அவை

1. சிட்த்தா - பலா சிரத்தைக் கருவி
2. வீரிய பலா - சக்திக்கருவி
3. சட பலா - ஞாபகக்கருவி
4. சமாதி பலா - தியானக்கருவி
5. பிரஞ்ஞா பலா - ஞானக்கருவி

ஓ! சகோதிரர்களே! ஆறாவது பற்றறுத்தல் அதாவது அறஹத்த நிலையை அடையும் ஏழு துணைகள் யாவை?
அவை

1. சதிசம்போஜங்கா - ஞாபகத்தை நிர்மலமாக்கல்
2. வீரிய சம்போஜங்கா - சித்தி யதிகரிக்கச் செய்தல்
3. தம்ம விஸய சம்போஜங்கா - பகுத்தறியும் ஞானம்
4. பிடி சம்போஜங்கா - ஆனந்தத்தை நிர்மலமாக்கல்
5. பஸ்ஸட்தி சம்போஜங்கா - சித்தமும், அமைதியாயிருத்தல்.
6. சமாதி சம்போஜங்கா - சித்ததியானத்திலிருத்தல்
7. உபேக்கா சம்போஜங்கா - தெளிவு.

ஓ! சகோதிரர்களே! ஏழாவது - நான்கு பாதைகள் யாவை?

அவை

1. (ஷீரோதாபதி) இஃதே நிருவாண பதமடையும் முதல்பாதை, இம்முதல்பாதை சித்தி பெற்றவனுக்கு சத்காய திருஷ்டி, விஸிசிக்சா ஸீல பத பரமாஸ அதாவது நான் என்னும் மயக்கம், சந்தேகம், நீதிமார்க்கமில்லாமலே சுகம் பெறலாமென்ற இம்மூன்றும் அற்றுவிடும்.
2. (ஸகிர்தாவாமி) இஃதே மேற்கூறிய, மூன்றும் அற்ற நிலையிலிருத்தல்.
3. (அனாகாமி) இஃதே நிருவாண பதமடையும் மூன்றாம் பாதை, இப்பாதையில் சித்திபெற்றவனுக்கு காமராக, படிகா அதாவது புலன்கள் பற்றும், கோபமும் இவைகள் அற்றுவிடும்.
4. (அறஹத்) இஃது நிருவாண பதடையும் நான்காவது பாதை. இப்பாதையில் சித்தி பெற்றவனுக்கு ரூபராக, அரூபராகமான (உட்தச்ச, அவிஜ்ஜா) அதாவது ரூப ஆசை, அரூப ஆசை விழிப்புடன் பார்க்கும் ஆசை அகங்காரம், தியான தடுக்கம், அறியாமெ இவைகள் அற்றுவிடும். மேற்கூறிய பத்துவகைப் பற்றுக்கள் அற்ற நிலையினுள் அரிய அஷ்டாங்கமார்க்கம் அடங்கியுள்ளன.

ஓ! சகோதிரர்களே! சுவஸிக்தம் பரிதபனம் அதாவது இதயசுத்தத்திற்கு இஃதே மார்க்கமென பகவன் முடிவு செய்தார்.

பிக்ஷு குழாங்கள் பகவனை வணங்கி கீழ்வரும் புத்த சாக்கைய முனிவரின் குணலட்சணங்களைப் பற்றியும் அவர் சத்தியத்தைப்பற்றியும் மும்மணி களடங்கிய மூன்று கீதையையும் பாடி ஆனந்தித்தார்கள்.

**குணலட்சணம்**

இதியிஸோ பகவா அறஹங்ஸம்மா ஸம்புத்தோ
விஜ்ஜாஸரண ஸம்பன்னோ ஸ்கைதோ லோகவிது
அனுத்தரோ புரிஸ தம்ம ஸாரதி
ஸத்தா தேவ மனுஸ்ஸானஞ் புத்தோ பகவாதீ.

**குணலட்சணங்கள்**

இதிபிஸோபகவா - பகவானே பெரியோன். அறஹம் - அவரே பெருந்துறவு ஸம்மா ஸம்புத்தோ - அவரே ஞானசமுத்திரம், விஜ்ஜா ஸரண ஸம்பன்னோ - அவரே சகல சித்தியும் பெற்றவர் ஸக்தோ – அவரே சுகமடைந்தவர் லோகவிது - அவரே உலகறிந்தோன் அனுத்தரோ - அவரே நிகரற்றவர் புரிஸதர்மஸாரதி - அவரே மனுக்களை தருமவழியிலோட்டியவர் ஸத்தாதேவ மனுஸ்ஸானங் - தெய்வ நிலை உடையோருக்கும், மனுக்களுக்கும் ஆசான் புத்தோ பகவாதி - அவரே பகவன் புத்தர்

**சத்தியம்**

ஸூவாகாதோ பகவதோ தம்மா
ஸந்திட்டிகோ அகாலிகோ ஏஸிபஸ்ஸிகோ உபநெயிகோ பச்சித்தங்வுவேதிதப்போவிஞ்நூஹி.

**சத்தியம்**

சுவாகாதோ பகவதா தம்மோ - சத்தியம் பகவனால் குறைவின்றி போதிக்கப்பட்டது, ஸந்திட்டிகோ - அச்சத்தியம் உடனுக்குடன் பலனைக் காட்டக்கூடியது, அகாலிகோ - யாதொரு தடையின்றி அந்தக்ஷணமே பிரயோசனத்தைக் தரக்கூடியது, எஹிபஸ்ஸிகோ - அச்சத்தியம் பேதமின்றி யாவரையும் கூவியழைக்கக் கூடியது, உபநெயிகோ - அச்சத்தியமே நிருவாணத்திற்கு அழைக்கும் பாதை, பச்சிதங் வுவேதிப்போ விஞ்ஞூஹி - ஞானிகள் தங்களுக்குள்ளே அறிந்துக்கொள்ளக் கூடியதும் இச்சத்தியமேயாம்.

**மூன்று கீதைகள் - புத்தம்**

1. *யோவடதங் பவரோ மனுஜேஸு
   சாக்யமுனி பகவா கதகிச்சோ

பாரக்தோ பலவிரிய ஸமங்கி
தங் சுகதாங்சரணத்த முபேமி.

**புத்தம்**

யோவடதங் பவரோ மனுஜேஸு - மனுக்களில் பெருமெயும் அருமெயான ஆசானும், சாக்யமுனி பகவாகதகிச்சோ - பகவான் சாக்கைய முனிவர் சகலருக்குங் குருவாக விளங்கி, பாரகதோ பலவீரிய ஸமங்கி - உலகில் முடிக்கவேண்டியதை முடித்து கரையேறி நிருவாணமடைந்த, தங்ஸுகதங் ஸரணத்தமுபேமி - மங்கலகரமான புத்தபிரானை யாங்கள் துணைக் கொள்ளுகிறோம்.

**தம்மம்**

2. *ராகவிராகங் அனீஜமஸோகங்
தம்மம் அஸங்கதம் அப்படிகூலம்
மதுரம் இமம் புகுணம் விபத்தம்
தம்மம் இமம் ஸரணத்த முபேமி

**தம்மம்**

ராக விராகம் அனீஜம் ஸோகங் - காமம், அவா, துக்கம் இவைகளினின்று விலகச் செய்யும் தர்மமும் , அசங்கதங் அழியா தர்மமும், அப்பட்டி குலம் மதுரம் இமம் புகுணம் ஸுவிபத்தங் - குற்றமற்றதும், மதுரமானதும், தெளிவானதும், தருக்கநீதியானதுமான தம்மம் இமம் ஸரணத்த முபேமி - தர்மத்தை யாங்கள் துணைக்கொள்ளுகிறோம்.

**சங்கம்**

3. *யத்தச்ச தின்ன மஹாப்பலம் ஆஹு
சதுஸுஸுஸுஸு புரிஸயு கேஸு

அத்தச்ச புக்கல் தம்ம தஸாதி
சங்கம் இமம் ஸரணத்த முபேமி.

**சங்கம்**

யத்த ச்ச தின்ன மஹாப்பலம் ஆஸு - எட்டு மார்க்கங்களை உடையவர்களும், சது ஸுசு வீசு புரிஸயு கேசு - நான்கு வித வாய் மெய் உடையோர்களும், அத்தச்ச புக்கல தம்ம தஸாதி - தர்க்கத்தில் தேர்ந்து அவன் பலனைக் கண்டடைந்த, சங்கம் இமம் சரணத்த முபேமி - சங்கத்தை யாங்கள் துணைக் கொள்ளுகிறோம்.

புத்தாங்க சரணம் , தர்ம்மாங்க சரணம், சங்காங்க சரணமெனத திரிரத்தினங்களை போற்றிச் சென்றார்கள்.

**16. கோசல நாட்டரசன் காதை**

பகவனும் வைஸாலிவிட்டு நீங்கி கோசலைநாடென்னும் அயோத்தியா புரியை அடைந்து அங்குள்ள ஒருவனத்தில் தங்கினார்.

ததாகதராம் தேவாதி தேவன் வந்து தனது தேசத்திலுள்ள ஒரு வனத்தில் தங்கியிருப்பதை வேவுகர்களால் அறிந்த பிரசானஜித்தென்னும் அரசன் தனதரச கோலத்துடன் சென்று அஞ்சலியஸ்தனாக வணங்கி தேவாதி தேவா, திரிவேத போதனா, தினகரப் பிரகாசா, திங்கள் முகவதனா, ஜெகத்திரட்சகா என்று துதித்து ததாகதருடையப் பாதப்படி எமது தேசத்திற்படிய என்ன பாக்கியம் பெற்றேன், உமது திருமுகத்தைக் கண்ணாரக்கண்டேன் தீவினையை விண்டேன், ஆனந்தங்கொண்டேன். ஐயன் அடிமையின் புசிப்பேற்று அருள்மொழியாம் சத்தியதன்மத்தை ஊட்டி, காமாக்கினி, கோபாக்கினி, லோபாக்கினியால் எறிந்து கொண்டிருக்கும் உள்ளத்தைக் குளிரச் செய்ய வேண்டும்.

உலகத்தை ஆளும் முடிசார்ந்த மன்னர்களும், படிதாழ்ந்த ஏழைகளும் பிடிமண்ணாய்ப் போவதைக் காண்கின்றேன். ஆதலின் அடியான் மீது கண்ணோக்கம் வைக்க வேண்டுமென்றான்.

இன்ப அவாவாலும் பேராசையாலும் சுமக்கப்பட்டிருக்கும் அரசனுடைய உள்ளத்தை அறிந்த நமதையன் பின்வருமாறு போதிக்கலாயினர்.

துற்கருமத்தால் தாழ்ந்த அந்தஸ்துள்ளவர்களும் ஓர் புண்ணிய புருஷரைக் கண்டவளவில் அவரை அன்புடன் வணங்குகிறார்கள். சற்கருமத்தினால் இப்பயனைப் பெற்ற அரசன் புத்தரை சந்தித்தபோது அவர்பால் வைத்த அன்பின் மிகுதியால் ஐயன் அருளறம் போதிக்கலாயினர்.

அதாவது சத்தியதன்மத்தைக் கேட்க விரும்புவோர் அதே நோக்கமாகவும் ஆழ்ந்து உள்ளத்தில் ஆராயக் கூடியவர்களாவும் இருத்தல் வேண்டும்.

ஏனென்பீரேல் நம்முடைய நற்காரியங்கள் யாவும் நற்சாயலாய்த் தோன்றி நல்லுள்ளத்தில் பதிந்து நற்பலன் ஈய்ந்து சருவசீவர்களுக்குஞ் சுகத்தை அளிக்கும்.

நம்முடைய துற்காரியங்கள் துற்சாயலாய்த் தோன்றி துன்னுள்ளத்தில் பதிந்து துற்பலனை ஈய்ந்து சருவசீவர்களுக்குந் துக்கத்தை அளிக்கும்.

நற்கருமம் வாய்ந்த அன்பார்ந்த உள்ளமே யாவற்றிலும் சிறந்தது அவையே யாவரும் விரும்பத்தக்கது.

ஆதலின் எம்மால் உமக்குப் போதிக்கப்போவது சத்தியதன்மம். உம்மால் நடக்கவேண்டியது சத்தியமார்க்கமாகும்.

உம்முடையப் புத்திர பௌத்திரர்களைப் பாதுகாத்து ரட்சிப்பது போல் உமதுதேசக் குடிகளையும் பாதுகாத்து ரட்சித்தல் வேண்டும்.

குடிகளை மீளா துக்கத்தில் ஆழ்த்தலாகாது. அவர்கள் அறியாமெயால் துற்கருமங்களை விளைத்தபோதினும் அறக்கருணையால் அவர்களை தண்டித்து அன்பு பாராட்டி அறிவு விருத்தி செய்தல் வேண்டும்.

உமது குடிகளை அழிவின் கூட்டத்தில் சேரவிடாமலும், அநீதி மார்க்கத்தில் நடக்கவிடாமலும் தடுத்து சாதுசங்கங்களுடன் சேரவும், சத்திய தன்மத்தில் நடக்கவுஞ் செய்தல் வேண்டும்.

ஆதுலர்களுக்குப் புசிப்பும், பிணியாளருக்கு கவுடதமும், அநாதைகளுக்கு ஆதரவும் தந்தருளல் வேண்டும்.

அரசாங்கத்து அதிபதியாய் இருக்கின்றோமென்று அகங்கரிக்கலாகாது, அதிகாரத்தில் தன்னை ஒடுக்கிக்கொண்டவனே சகலரையும் அடக்கியாளும் அதிகாரியாவன். - தன்னைத்தானே அடக்கியாளும் அதிகாரி தன்குடும்பத்தையுந் தன் கிறாமவாசிகளையும் தனது தேசக் குடிகளையும் எளிதில் அடக்கி ஆளுவான்.

நான்கு பக்கமும் அடர்ந்திருக்கும் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் அவத்தையாற் சூழப்பட்டிருக்கின்றோம். அவ்வவத்தையின் சதுர்பந்தக் கட்டுகளறவேண்டுமாயின் சத்தியதன்மத்தின் வாளைக் கொண்டே அவற்றை அறுத்து மீளவேண்டும்.

அறிவை விருத்தி செய்துக்கொள்ளுகிறவர்கள் தேகபோகம் சகலத்தையும் வெறுப்பார்கள். அறிவின் வாழ்க்கையில் விழிப்புள்ளவர்கள் சகல மோகங் களையும் தவிர்ப்பார்கள்.

மரமானது பற்றி எரியுங்கால் ஓர் பட்சியும் அதனருகில் அணுகாமல் திகைப்பது போல் கோபாக்கினி, காமாக்கினி, லோபாக்கினியால் பற்றி எரியும் உள்ளத்தின்கண் உண்மெய் சேராது திகைத்து பேதமெயால் பிறப்புண்டாகி பிணி, மூப்பு, சாக்காட்டிற்கிழுத்து பின்னும் பின்னுந் துக்கத்திற்கு ஆளாக்கும்.

இதன் சுருக்கத்தை அறிந்தவனே உண்மெய்ப்பொருளை அடைவான். உண்மெய்ப்பொருளை அறிந்தவனே நித்திய வாழ்வைப் பெறுவான். உண்மெய்ப் பொருளை உணராதவன் மாளாப்பிறவியில் சுழன்று மீளாதுக்கத்தில் ஆழ்ந்து காற்றிற் பரக்கும் பதறுபோல் அல்லலடைவான்.

இத்தகைய உண்மெய் ஞானம் ஒருவனுக்கு இல்லாமல் போமாயின் அவன் பகுத்தறிவில்லாதவனேயாவன். பகுத்தறிவில்லாதவன் தோற்றத்தில் மனிதனேயாயினும் மனிதருள் மரமும், மனிதருள் மாடென்றும் எண்ணப்படுவான்.

உண்மெய் ஞான விசாரிணை துறவறத்தைச் சார்ந்த சங்கத் தோருக்குமாகும். இல்லறத்தைச் சார்ந்த குடும்பிகளுக்குமாகும்.

உண்மெய் விசாரிணைக்காய துறவற தன்மசங்கத்தைச் சேருவோரும், பற்றறுக்காது பிறவிக்காளாவார்கள்.

இல்லற தன்மத்தினின்றும் பற்றினை அறுப்போர் உண்மெய்ப்பொருளை அடைந்து நிருவாணம் பெறுவார்கள்.

காம, வெகுளி, மயக்கமாம் பெருவெள்ளமே யாவருக்கும் அபாயமானது. அவ்வெள்ளத்தால் சகலமும் நாசமாகிப்போம். அவ்வெள்ளத்தின் சுழலில் அகப்பட்டவன் ஒருக்காலும் மீளான். பற்றற்ற ஞானமாந்தோணியில் ஏறிக் கொண்டவன் அவ்வெள்ளத்திற்குஞ் சுழலுக்கும் அஞ்சான். ஆதலின் உன் விழிப்பிலும் நித்திறையிலும் சத்கருமத்தை நாடு, சத்கருமத்தின் பேரொலியானது உன்னைக் கூச்சலிட்டழைக்கின்றது. அதனிற் செவிசாய்ப்பாயாக.

நமது கன்மத்தை விட்டு தப்பிப்போம் வழி யாதொன்றும் இல்லை. தற்கன்மவழி துன்பவரையில் கொண்டு போய்விடும். இத்தகைய வழிகளைக் கண்டறிந்து நடப்பவர்களும் நாமே. அதன் நிலையை அடைபவர்களும் நாமேயாதலின் உமக்குள்ள பேரின்பவமுதம் பேரொலியிட்டழைக்கின்றது அதனை உணர்வாயாக.

நாம் செய்துவரும் கன்மத்தின் பலனை நாமே அனுபவித்துத்தீரல் வேண்டும். விதைத்த விதையே முளைக்கும். ஆதலின் துற்கருமங்களை அணுகவிடாது சத்தருமத்தையே செய்தல் வேண்டும். சத்கன்ம பலன் துக்கத்தை அகற்றும்.

வெளிச்சத்தினின்று இருளிற்குப் போகும் வழியுண்டு. இருளினின்று வெளிச்சத்திற்குப் போகும் வழியுண்டு. மாலையினின்று பேரிருளுக்குப் போகும் வழியுண்டு. வைகரையினின்று பெருவெளிச்சத்திற்குப்போகும் வழியுண்டு ஆதலின் அறிவை நிதானித்தவன் இருளினின்று வெளிச்சத்திற்கேகுவான் சிற்றறிவினின்று பேரறிவாளனாவான்.

தேறவிசாரிக்கும் பகுத்தறிவாலும், நற்செயலாலும் உன்னுடைய தண்மெயாம் சாந்தநிலையினின்று உலகவஸ்துக்களின் மீதுள்ள அவாவை ஆழ்ந்து கவனி நிலையில்லா வாழ்வை நிதானித்துப்பார்.

உன்னுடைய அறிவை விருத்தி செய்து அதிவூக்கத்துடன் சன்மார்க்கத்தை நாடும் அரசனுக்குரிய செயல்களில் அதி ஜாக்கிரதையிலிருந்து வெள் தோற்றங்களில் உன்னுடைய சுகத்தை நாடாதே. மிக்க வல்லமெய்ப்பெற்றவ னென்றும் அதி தீரனென்றும் உன்னைக் காட்டிக்கொள்ளாதே. நன்மெய்க்கடை பிடித்து உனக்குள்ள சுகத்தை நாடு. வேற்றரசர்மேல் வெகுளி கொள்ளாதே உனக்குள்ள சாந்தத்தை உன் உப்பரிகைமீது நாட்டும். வெண்கொடியாம் மௌனப்பிரகாசத்தால் காட்டு. உனது குடிகள் யாவருக்கும் செவ்வியக் கோலை நீட்டி நீதிமார்க்கத்தையூட்டு. அவர்கள் நிறைந்த நீதிமார்க்கத்தில் நிற்பார்களாயின் அவர்கள் ஒழுக்கமே உமது சுகத்துக்கோர் வழியை ஈந்து சகல பற்றுக்களுமற்று மாளாப்பிறவியில் உண்டாகும் துக்கங்களும் ஒழிந்து நிருவாணநிலை அடைவாயென்று கூறினார்.

ஐயன் அமுதவாக்கை உணர்ந்த அரசன் அருகன தடிபணிந்து தேவாதிதேவா! உமது அளவுபடா சத்தியதன்மத்தின் நிலையைக் கிஞ்சித்தறிந்து கொண்டபோதிலும் பிறவி என்னும் வார்த்தையின் பொருளும், அதன் செயலும் விளங்காதவனாயிருக்கின்றேன்

அவற்றை விளங்கக்கூறி அப்பிறவியினின்று விடுவிக்கவேண்டுமென்று வணங்கினான்

அவலோகிதர் அரசனை நோக்கி பிறவியின் தோற்றத்திற்கும் காரணம் நீயே, அதன் மடிவுக்கும் காரணம் நீயே, தோற்றம் மடிவு இரண்டுமற்று நிற்பதற்கும் காரணம் நீயேயன்றி வேறொருவரும் உன்னைப் பிறவியினின்று விடுவிக்க மாட்டார்களென்று கூறினார்.

அவற்றை வினவிய அரசன் அண்ணலைநோக்கி ஐயே! பிறவி என்னும் விவரமே அடிமைக்கு விளங்காததால் அவற்றைத் தெள்ளற விளக்கி என் தீவினையை ஒழிக்கவேண்டுமென்றான்

அரசனது வேண்டுகோளை வினவிய விநாயகன் பிறவியின் தோற்றங்களையும் அதன் மறைவுகளையும் விளக்க ஆரம்பித்தார்.

அரசே! உன் உள்ளத்தினின்று ஓர் விஷயத்தை எண்ணும் எண்ணமானது தோற்றி எண்ணிய எண்ணம் மறந்துவிடுவதை உணர்கின்றாய். அவ்வகை எண்ணும் எண்ணங்களின் தோற்றமே ஓர் பிறப்பாகவும், எண்ணங்களின் மறதியே அதன் இறப்பாகவும் உணரல் வேண்டும்.

நித்திறையினின்று விழித்தலே ஓர்பிறப்பாகவும், விழிப்பினின்று நித்திறை அடைதலே ஓர் இறப்பாகவும் உணரல் வேண்டும்.

மாதுரு கருப்பையினின்று வெளிக்குத் தோற்றுதலே ஓர் பிறப்பென்றும், அத்தோற்றம் மறைதலேயோரிறப்பென்றும் உணரல் வேண்டும்.

இம்மூவகை இறப்பு பிறப்பினுள் உலகத்தில் தோற்றும் பொருட்களை நாடி உன் உள்ளத்தில் எழும் அவாவின் பற்றானது மண், பெண் பொன்னென்னும் முப்பொருளையேனும், முப்பொருட்களில் ஒன்றையேனும் பற்றி அதனலுப்பால்

அயர்ந்த நித்திறை உண்டாய் அந்நித்திறா பழக்கத்தால் பெருநித்திறையாம் மரணமுண்டாகி முன் பேதமெயால் திரண்ட வினையாம் அவாவின் பற்று வியர்வையாகவாயினும், விதையாகவாயினும், முட்டையாக வாயினும், கருவாகவாயினும் உருண்டு உருவாகத் தோன்றி பிறப்பென்னும் பெயரேற்று துக்கத்திற் சுழன்று திரிகின்றது.

எவ்வகையிலென்னில் காற்றானது உருவமற்றிருத்தலால் அதன் சுயநிலை ஒருவருக்குந் தோன்றாது. அவ்வருவுருவமற்றக்காற்று யாவருக்கும் உணர்ச்சியாகி அக்கினியுடன் சம்மந்தித்துவருங்கால் நெருப்புக்காற்றென்றும், நீருடன் சம்மந்தித்து வருங்கால் குளுங்காற்றென்றும் வழங்குவது போல் காம அவாவால் காமத்துடன் சம்மந்தித்து தோற்றிய பிறப்பும், வெகுளி அவாவால் வெகுளியுடன் சம்மந்தித்து தோற்றிய பிறப்பும், மயக்க அவாவால் மயக்கத்துடன் சம்மந்தித்து தோற்றிய பிறப்பும், இன்ப அவாவாம் வினைபோகமாதலின் அவாவால் உண்டாகும் பற்றுக்களே பிறப்பிற்கு மூலமாகும்.

அவாவானது அருவுருவற்றிருப்பினும் காம அவாபற்றி பஞ்சஸ்கந்தங் களுடன் திரண்டு பிறப்புத் தோன்றில் காமரூபி என்றும், வெகுளி அவாபற்றி பஞ்சஸ் கந்தங்களுடன் திரண்டு பிறப்புத் தோன்றில் வெகுளி ரூபி என்றும், மயக்க அவாபற்றி பஞ்சஸ்கந்தங்களுடன் திரண்டு பிறப்புத் தோன்றில் மயக்க ரூபி என்றும் பெயர் பெருவான்

இத்தகைய பிறப்பின் தோற்றங்களுக்கும் தோற்றங்கள் அனுபவிக்கும் துக்கங்களுக்கும் மூலகாரணம் பேதம் பற்றுக்களாதலின் பற்றற்ற கண்களே பிறப்பறுக்கும், கேட்டலற்ற செவிகளே பிறப்பறுக்கும், கந்தமற்ற நாசிகளே பிறப்பறுக்கும், சுவையற்ற நாவுகளே பிறப்பறுக்கும். பரிசமற்ற தேகங்களே பிறப்பறுக்கும். இவ்வைந்தின் செயல்களை அறிந்துகொள்ளுகிறவனே அதி தீவிரத்தில் பிறவியை அறுத்து மரணத்தை ஜெயிப்பான்.

அவாவுடன் கலந்த தீயச்செயல்களின் பற்றானது தீய உருவத்தை தோற்றுவித்து தீச்செயல்களைப் பெருக்கி மேலும் மேலும் துக்கத்திற்கு ஆளாக்கும்.

அவாவுடன் கலந்த நியாயச்செயல்களின் பற்றானது நியாய உருவத்தைத் தோற்றுவித்து நியாயச்செயல்களைப் பெருக்கி நித்திய வாழ்வாம் நிருவாணத் திற்குக் கொண்டு போகும்.

கண்ணினால் பார்க்கும் வஸ்துக்களை பேரவாவால் பற்றி மேலும் மேலும் தாவி நிற்றல் தீயப்பிறவிக்குக் கொண்டுபோகும். கண்ணினால் பார்க்கும் வஸ்துக்களைப் பார்த்தும் பாராதது போல் நின்று அவ்வஸ்துக்களின் அதிரூபமும், அழகும் நாளுக்குநாள் மாறுதலடைந்து நசிந்து போம். அவ்வகை நசிந்து போகும் வஸ்துவை நாட்டமுறுவதும் அவை மீதவாபற்றுவதும் வீணென்றறிந்து நாட்டத்தாலெழும் அவாவையும், அவாவால் எழும் பற்றுக்களையும் அறுத்து வருதல் நியாயப்பிறவிக்குக் கொண்டுபோகும்.

சந்தனக்குழம்பில் ஓர் பாதமும், அக்கினிக்குண்டத்தில் ஓர் பாதமும் வைத்துக்கொண்டிருப்பது போல் இன்னின்னது தீயச்செயல்களென்றும், இன்னின்னது நியாயச்செயல்களென்றும் பகுத்துணர்ந்து தீயச்செயலால் உண்டாகும் தீவினைப்பயனாகும் பிறப்பையும் இறப்பையும் அறுத்து நற்செயலால் எழுவும் நல்வினைப்பயனாகும் பரிநிருவாண நித்திய வாழ்வைப் பெறுவாய்.

இத்தகைய நித்திய வாழ்வின் மார்க்கத்திற்கும், உமது குடிகளின் நீதிவாழ்வாம் வாழ்க்கைக்கும், போதகர்கள் மந்திரவாதிகளேயாவர். அவ்வகை மந்திரிகள் புத்தசங்கத்தோர்களாயிருப்பார்களாயின் உம்மிடத்தில் யாதோர் பிரிதிபலனையுங் கருதாது சத்தியதன் மங்களை நாட்டி சமயோசித யுக்த்திகளை ஊட்டிவருவார்கள்.

அதினால் உம்முடையக் குடிகள் யாவரும் சுகவாழ்க்கை அடைவதுடன் தாமும் நித்தியவாழ்வைப் பெறுவீர். இப்போதனா வாழ்க்கைப் பொருந்துவீ ராயின் காலாகாலத்திற்கு அன்பும், அருளும், பேரும், புகழுமடைவாய் இதுவே ததாகதருடைய அன்பென்றோதி அரசனுக்காசி கூறி அரணுக்கனுப்பி விட்டு யாதும் விளைவற்ற ஓர்

வனத்தின் வழியே வாமன் சென்றுக என்னுமிடத்தில் ஒற்றுமெயற்றிருக்கும் சங்கத்தோர்களை நோக்கி;

**17. கலஹ விவாத காதை**

ஒ சகோதிரர்களே ! விவாதமும், குதர்க்கமும், அழுகையும், துக்கமும், பொறாமெயுடன் எங்கிருந்து உதிக்கின்றன. அகந்தையும், வீணெண்ணமும் புறங்கூறலுடன் எங்கிருந்து எழுகின்றன.

ஓ! சகோதிரர்களே! பிரீதி கொண்ட பொருட்களினால் விவாதமும், குதர்க்கமும், அழுகையும், துக்கமும் பொறாமெயுடன் சேர்ந்தும்; அகந்தையும், விணெண்ணமும் புறங்கூறலுடன் சேர்ந்து, விவாதமும் குதர்க்கமும் பொறாமெயுடன் கலக்க குதர்க்கத்தினின்று புறங்கூறல் உதிக்கின்றது.

ஓ! சகோதிரர்களே! இவ்வுலகில் பிரீதி கொள்ளும் பொருட்களும், இவ்வுலகில் நிகழும் பொருளாசையும், அவாவும், திருப்தியும் இவ்வுலகில் இனி ஜீவர்கள் அடையும் நிலையும் எங்கிருந்து உதிக்கின்றன.

ஓ! சகோதிரர்களே! இவ்வுலகில் பிரீதி கொள்ளும் பொருட்கள் பற்றிலிருந்து உதிக்கின்றன. இவ்வுலகில் நிகழும் பொருளாசை, அவா, திருப்தி இவைகள் பற்றிலிருந்து உதிக்கின்றன. இவ்வுலகில் இனி ஜீவர்கள் அடையும் நிலையும் பற்றின் பலனுக்குத்தக்கவாறு நிகழ்கின்றன.

ஓ! சகோதிரர்களே! இவ்வுலகில் நிகழும் பற்று எதினின்று எழுகின்றது. அதன் பகுப்பு யாது? இவ்வுலகில் வழங்கும் இன்பம் துன்பம் என்பவைகளினின்று பற்று உதிக்கின்றது. தோற்றத்தையும் மடிவையும் கண்ட ஒருவன் பகுத்தறிந்துக் கொள்வான். இன்பமும் துன்பமும் நிகழ்வதற்கு மூலகாரணம் யாது? எதுகாரணத்தால் இவைகள் நிகழ்வதில்லை? மடிவும் தோற்றமும் எப்படி நிகழ்கின்றன.

ஓ! சகோதிரர்களே! இன்பமும் துன்பமும் பரிசத்தால் நிகழ்கின்றன. பரிசம் எழாதபோது இன்பமும் துன்பமும் நிகழ்வதில்லை. மடியவைப்பதும் தோற்றவைப்பதும் பரிசமே.

ஓ! சகோதிரர்களே! இவ்வுலகில் பரிசம் உதிப்பதற்கு மூலகாரணம் யாது? எது கிரகிப்பதற்கு மூலம். எது இருப்பின் நான் என்னும் மமதை நீங்கும். எதை தவிர்ப்பதினால் பரிசம் விலகும்.

ஓ! சகோதிரர்களே! நாமரூபமே பரிசத்துக்கு மூலகாரணம். பரிசத்தை கிரகிப்பது பற்றே. பற்றை நிவாரணஞ்செய்வதால் நான் என்னும் மமதை நீங்கும். ரூபத்தை நிவாரணஞ்செய்ய பரிசம் விலகும்.

ஓ! சகோதிரர்களே! இவ்வுலகில் சகோதிரர்களில் ஒருவன் சுபாவ அறிவுடனில்லாமலும், உன்மத்த அறிவுடனில்லாமலும், அறிவற்றில்லாமலும் இருப்பானாகில் ரூபம் ஒரு நிகரல்ல. ஏனெனில் மயக்கமே அறிவில் மூலமாக நின்று காரியாதிகளை பலவிதமாக நடப்பிக்கின்றது.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் சகலபாபங்களையும் விட்டொழித்து புனிதனாகவும், சாந்தமுள்ளவனாகவும், மனநிறைவுள்ளவனாகவும், பரிசுத்தனாகவும், சமுசார சாகரத்தினின்று விலகினவனாகவும் சுயம்பாயிருப்பானாகில் அவனையே பிராமணனென அழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் ஆறுதலும், துற்கன்மங்களினின்று விலகினவனும், களங்கமற்றவனும், ஜனனத்தையும் மரணத்தையும் வெல்லும் சக்தியுடையவனாகியும் இருப்பானாகில் அவனையே சமணனென அழைக்கலாம்.

உலகில் சகோதிரர்கள் ஒருவன் அசுகத்தைச்சுடும் காமத்தினின்று விலகியும், சகல பற்றுக்களை ஒழித்தும் எப்பொருட்கள் பேரிலும் அவாவைக்காமலும் இருப்பானாகில் அவனையே நாதனென்று அழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் காமத்தையும் அவாவையும் விட்டொழித்தவனும், மறுபடியும் தாயின் வயிற்றில் பெறப்படாதவனும், தியான நிலையில் பூர்த்தி பெற்றவனாகியும் இருப்பானாகில் அவனையே அறஹத்தென அழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் துக்கத்தை விருத்தி செய்யும் கன்மங்களினின்று விலகியும், நற்பார்வையுடன் வனங்களில் சென்றும், கபடம் ஆணவம், பொருளாசை, கோபம், நாமரூபம் இவைகளை அணுகவிடாது பரிபூரண நிலையை அடையசிரத்தை கொண்டிருப்பானாகில் அவனையே பரிபாஜா என அழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் உலக ஆசையைவிட்டு துக்கத்தினின்று விடுபட்டு துக்க பயமின்றி தைரியத்துடன் இருப்பானாகில் அவனையே தீரனென்றழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் பிராமணன் அடைந்தநிலை இது வெனவும், சமணன் அடைந்த நிலை இதுவெனவும் கண்டு அந்தந்த படித்தரத்துக்குத் தக்கபடி நடந்து பற்றுக்களினின்று சிறுக சிறுக விலகிவருவானாகில் அவனையே குஸலனென்றழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் நீதியான தன்மம் இன்னதெனவும், அநீதியான தன்மம் இன்னதெனவும் பகுத்தறிபவனாகியும், மனத்தை ஐம்பொறிகளில் செல்லவொட்டாது தடுத்து துறவற ஒழுக்கத்திற் செல்பவனாகியும், பற்றென்னும் வலையினின்று விடுபட்டவனுமா யிருப்பானாகில் அவனையே முனி என்றழைக்கலாம்.

உலகில் சகோதிரர்களில் ஒருவன் மத்தியபாதையில் நின்றும், சுகத்தைப் பெற்றும், சந்தேகத்தை நிவர்த்தி செய்தும், மறுபிறப்பை

ஒழித்தவனாகியும் இருப்பானாகில் அவனையே மஹா பிக்க்ஷு என்றழைக்கலாம்.

ஓ! சகோதிரர்களே! இவ்வுலகில் இவைகள் யாவற்றையும் தெரிந்த சகோதிரர்கள் வாதிடுவதற்கு வெளிவரமாட்டார்கள்.

1. ஸந்த வாதோ பயங் ஜாதங் / நிக்கேதா ஜாயதோ ஜோ
அனிகே மஸஸ்தங்வ ஏதங் வே முனி தஸ்ஸனங்

ஓ! சகோதிரர்களே! வழக்க பழக்கத்தால் பயங்கரம் உதிக்கின்றது. இல்லற துன்வாழ்க்கையால் துற்சுபாவம் எழுகின்றது. வழக்க பழக்கங்களற்று துறவற வாழ்க்கையைப் பெறுவதே முனியினது தர்சனமாயிருக்கவேண்டும்.

2. யோ ஜாத முத்திஜ்ஜ நரோபயய்ய / தாயந்த மஷ்ஸ நானுப்ப வஜ்ஜ
தமாஹு ஏகங் முனிநந் தாந்தங் அடத்தகிஸோ சந்திப்தங் மஹேஸி

சகோதிரர்களில் ஒருவன் எழும்பிய பாவங்களை நீக்கி அப்பாவங்களை வேரூன்றாது தடுத்து தன்னில் எழும் போது அதற்கு இடந்தராது நிற்கும் மௌனியை முனி என்றழைக்கலாம்.

3. ஸங்காய கட். நூனி பஹா பீஜங் / ஸிநேஹ மஸ்ஸ நனு பவச்ச
ஸ்வேமுனி ஜாதிகயந்த தஸ்ஸி தக்கங் பஹாய நாஉபெதி சங்கங்

பாவம் எழும் காரணங்களைக்கண்டு அதன் வித்தை மாயவைத்த பின் அதன்பேரிலுள்ள அவாவின்படி இடந்தராதுயிருக்கும் முனியாரோ அவர் பிறப்பின் அந்தத்தையும், அதன் மடிவையும் கண்டபின் மறுபிறப்புக்கு ஆளாகமாட்டார்.

4. அஞ்ஞாய ஸப்பானி நிவேதனானி / அனிகாமயங் அஞ்ஞகாம் தேளங்
ஸ்வேமுனி வீதகேதோ அகித்தோ / நாயூ ஹெத்தி பாரகதோ
ஹேஹோதி

மனமானது எந்தெந்த இடங்களில் தங்குகிறதென உற்றறிந்து அது பற்றின பற்றிற்கு சற்றேனும் இடந்தராது மௌனியாயிருக்கும் முனியாரோ அவர் பொருளாசையும் பேராசையும் அற்று மனம்பற்றின பற்றிற்கு இடந்தராது அக்கரைச் சேர்ந்தவராவர்.

5. ஸப்பாபிபங் ஸப்பவிதுங் ஸுமேதங் ஸப்போள தம்மேள அநுபலித்தங்
ஸப்பங் ஜஹங் தன் ஹக்கயே விமுத்தங் தஞ்சாயி திஹிராமுனிங்வேத யந்தி.

சகோதிரர்களில் ஒருவர் சகல பாபகன்மங்களை வென்றும், சகலமுமுணர்ந்தும், நற்பார்வையினின்றும், குற்றமற்றும், அவாவை ஒழித்தும் இருப்பாராகில் அவரையே முனி என்றழைக்கலாம்.

6. ஆஞ்ஞாபலங் நீலவிதுப்பண்ணங் / ஸமா ஹிதங் ஜானரதங் ஸதீமங்
ஸங்காப முத்தங் ஸ்கிலங் அனாஸவங் / தஞ்சாபி திஹிரா முனிங் வேத மந்தி
சகோதிரர்களில் ஒருவருக்கு பகுத்தறியும் சக்தியும் அறிவு மிகுதியும் இருக்குமாயின் அறமும், பரிசுத்த நடையும், தியானத்தில் ஆனந்தித்தும், ஜாக்கிரதையுடனும் பாஸ்பந்தங்களற்றும், கடுமெயற்றும் காமமற்றும் இருப்பர். அவரையே முனி என்று அழைக்கலாம்.

7. ஏகங் சாந்தங் முனிங் அப்பமத்தங் / நிந்தா பஸ்ஸாஸு அவதே மானங்
ஸீஹங் வஸ்தேஸ் அந்தந்தங் வாங்ள ஜாலம்ஹி அஸஜ்ஜமானங்
பதுமங் தோயேன அளிப்பமானங் / நேதார மணஞேன மனஞ்ஞைஞ்வ
தஞ்சா பிஹிரா முனிங்வேதயந்தி.

ஏகாந்தமாயும், வைராக்கியமாயும், புகழ்ச்சிக்கும், இகழ்ச்சிக்கும் இடந்தராமலும், சத்தத்திற்கு பயப்படாத சிம்மம் போலும், வலையிலகப்படா காற்றுபோலும், ஜலத்தில் படாத தாமரைபோலும் ஏனைய சகோதிரர்கள் இவருக்குப் போதிக்காது இவர் ஏனைய சகோதிரர்களுக்கு ஆசானுமா யிருப்பாராயின் அவரையே முனி என்றழைக்கலாம்.

8. யோகா ஹணே தம்போரிளாபிஜாயதி யஸ்மிங் பரவேடா பரியந்தங் வதந்தி
தங்வதராக ஸுஸமாஹி இந்திரியங் தஞ்சாபி திஹிரா முனிங்வேத் யந்தி.

சகோதிரர்களில் யாவரேனும் அசையா கம்பம் போல் உறுதியான சித்தமும் நேர்மையான வாக்கையுடையவும், காமமற்றும், புலன்கள் ஒடுக்கமுள்ளவராய் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

9. யோவே டிதத்தோ ஸரஸ்வ உத்ஜி கங் ஜிகுச்சத்தி கம்மேஹி பாய கேஹி
வபஸ் ஸமானோ விஸமஸ்ஸ மஞ்ச /தஞ்சாபி திஹிரா முனிங்வேத யந்தி.

சகோதிரர்களில் யாவரேனும் நேரான நூலேணிபோலொத்த சித்தமும், பாபகன்மத்தினின்று விலகியும், எது நீதி எது அநீதியென தன்னிற்றானே பகுத்தறியவுங் கூடியவராய் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

10. யோஸஞ்ஞு தத்தோ நகரோதி பாபங் / தாரோ சமஜ்ஜோச முனிய தத்தோ
அரோஸ்நெய்யுங்ஸோனரோ ஸேதிகந்தி / தஞ்சாபி திஹிரா முனிங்வேதயந்தி

சகோதிரர்களில் யாவரேனும் தன்னடக்கமும், குமரபருவமுள்ளவராகி தன்னிச்சையை வென்றவராகவும், ஏனையோர்களால் கோபமூட்டப்படாதும் தான் ஏனையோரை கோபமூட்டாமலும் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

11. யதக்கதோ மஜ்ஜதோ ஸேஸ தோவா / பிண்டங் விபேத பரதத்துப ஜீவி
நாளஸ் துதிங் ரோபி நிபச்சவாதி / தஞ்சாபி திஹிரா முனிங்வேதயந்தி

சகோதிரர்களில் யாவரேனும் ஏனையோரால் அளித்ததை புசித்து பிச்சாபாத்திரத்தில் அன்னம் நிறைந்திருந்தாலும் குறைந்திருந்தாலும் அதனைக் கவனியாதும், அன்னமிட்டவர்களை புகழாதும் இகழாதும் கொடுத்ததை உண்டு ஆனந்தத்திலிருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

12. முனிங்காந்தங் விரதங் மேதுஸைமாயோ ஜோயப்பனே உப வஜ்ஜதே
கௌசி மதப்ப மாதாவிரதங் விப்பமுத்தங் தஞ்சாபி திஹிரா முனிங்வேதயந்தி

சகோதிரர்களில் ஒருவர் விபசாரஞ் செய்யாதும், குமரப்பருவத்தில் பாசபந்த வலையில் சிக்காதும், டம்பத்தினின்று விலகியும், துறந்தவராகியும் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

13. அஞ்ஞாய லோகங் பரமத்த தஸ்ஸிங் /ஓகஸ்ஸ் முத்தங் அதிகரி யதாதிங் தஞ்சின்ன கந்தங் அளிதங் அனாஸவங் /தஞ்சாபி. திஹிரா முனிங்வேதயந்தி

சகோதிரர்கள் ஒருவர் வாழ்க்கை என்னும் சமுத்திரத்தையும், நதியையும் கடந்து மேலான சத்தியதரிசனம் பெற்று உலகத்தை துறந்தும், சகலபற்றுக்களை அற்றும், ஏகாந்தமாயும் சுகவாரிபோல் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

கோபமற்றும், பயமற்றும், டம்பமற்றும் துன்னடையற்றும் சதா (ஞானத்தையே பேசவும், சித்தியால் சிந்தை பூரிக்காமலும் ஒருவர் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

பற்றற்றும், வஞ்சகமற்றும், பொறாமெயற்றும், விவேகியாயும், நிந்திக்காதும், பின் புறணி கூறாமலும் ஒருவர் இருப்பரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

லாபத்தை அடைய வேண்டி இச்சைகொண்டு கற்காமலும், பிறர்புகழ்ச்சிக்காக துறவியாகாமலும், கோபாவேசங்கொண்டு அதனால் துறவி ஆகாமலும், இச்சித்த மண்ணோ பெண்ணோ பொன்னோ கிடைக்காவிடில் துறவியாக போகாமலும், தான் எடுத்த தேகம் பிறருக்கே நன்மெய்செய்ய வேண்டுமென்றும், பிறர் துக்கத்தையும் தன் துக்கத்தையும் நிவர்த்திப்பான் வேண்டி ஒருவர் துறவியாவரேல் அவரையே முனி என்றழைக்கலாம்.

சதா விழிப்புள்ளவரும், ஏனையோர்களைவிட தாம் மெத்த பூர்த்தியான ஞானி என்று புகழ்ந்துக்கொள்ளாதவரும், உலகில் இவர் பெரியார் இவர் சிறியார் என தாரதம்மியம் பாராது தன் உள்ளத்திலும் புறம்பிலும் எழும் அவாக்களை தினேதினே நசித்துவருபவருமாய் இருப்பவர் எவரோ அவரையே முனி என்றழைக்கலாம்.

பரிசுத்த சத்தியங்களாம் துக்க சத்யம், சமூதய சத்யம், நிரோதய சத்யம், மார்க்க சத்யம் (துக்கம், துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்கநிவாரண மார்க்கம்) இவைகளில் இடைவிடா சாதமுடையவராகியும்; நித்திறை, சோம்பல், மந்தம் இவைகளை

ஜெயித்தவராகியும், அசதியுடன் வாழாமலும், மமதையில் சுகித்திராமலும் இருப்பவரெவரோ அவரையே முனி என்றழைக்கலாம். - பொய்ப்பாதையில் செல்லாமலும், ரூபங்களின் மேல் அவாக் கொள்ளாமலும், மேலான பதவியை நாடியும், கொடுமெயற்றும், தான் பழகிய பொருட்களின் பேரில் ஆசைவையாதும், புதிய பொருட்களின் பேரில் மனம் நாடாமலும், பெரியோர்களால் விலக்கப்பட்டதும், அறிவற்றவர்களால் புகழத்தக்கதுமான பொருட்களின் மேல் அவாக்கொண்டு அலையாமலும் அவாக்களுக்கு சற்றேனும் இடந்தராது இருப்பவரெவரோ அவரையே முனி என்றழைக்கலாம்.

அந்த அவா யாதெனில்:- அதே ஓர் பெருக்க வெள்ளம். அதே ஒரு பெருத்த தூண்டுகோல், பேரவா, கிலேசம், மோகமென்னும் சதுப்புநிலம், நாமரூபத்தின் மேல் அவாவற்றவரும் சகலவிதமான கெட்ட திருஷ்டியினின்று விலகியவரும், எந்தெந்த காலங்களில் எவ்வெவ்விதமான கெட்ட எண்ணங்கள் தோன்றுகின்றதோ அவ்வவ்விதமான கெட்ட எண்ணங்களை போக்குவதற்கான நல் எண்ணங்களை விருத்தி செய்தும், எந்தெந்த காலங்களில் எவ்வெவ்விதமான அவாக்கள் எழுகின்றதோ அந்தந்த காலங்களில் எந்தெந்த அவாக்களை எவ்வெவ்விதமாக எந்தெந்த தியானங்களால் அறுக்கமுடியுமோ அந்த தியானத்தில் நின்று தியானித்தும், எந்தெந்த புண்ணிய ஞானங்கள் எந்தெந்த காலங்களில் தோன்றுகின்றதோ அந்தந்த காலங்களில் அந்தந்த ஞானங்களை விருத்தி செய்தும், எந்தெந்த காலங்களில் எவ்வெவ்விதமான ஜீவர்களுக்கு எவ்வெவ்விதமான போதனைகளை எவ்வெவ்விதமாக போதிக்கவேணுமோ அவ்வவ்விதமாக போதித்தும், சகல ஜீவர்களினின்று உதிக்கும் பலவிதமான அவாக்களென்னும் அம்பை பலவிதபுண்ணிய வழிகளாலும், நீதிமார்க்கத்தாலும் தினேதினே போதித்து தான் எவ்விதமாய் அவாக்களென்னும் அம்பைப் பிடுங்கிவிட்டபின் ஆனந்தமடைந்தனரோ அதே ஆனந்தத்தை ஜீவர்கள் அடையும் வரையில் ஜீவர்களுக்கு இடைவிடாது போதித்துவருபவர் எவரோ அவரையே முனி என்றழைக்கலாம்.

ஓ! சகோதிரர்களே! தகாதகாலங்களில் வெளியே செல்லாமலும் குறித்த நேரத்தில் பிச்சாபாத்திரத்தைக் கரத்திலேந்தி கிராமங்களுக்குச் சென்றும். பிச்சை வாங்குங்கால் இவர்கள் ஏழை இவர்கள் தனவான் என நினையாது சமமனதுடனும்,

பிச்சாபாத்திரத்தைக் கரத்தில் ஏந்தி செல்லுங்கால் இந்த இல்லத்தில் நமக்கு நல்வுணவு கிடைக்கும் இந்த இல்லத்தில் நல்வுணவு கிடைக்காதென்னும் அபிப்பிராயத்துடன் செல்லாமலும், சாவகர்களாம் குடும்பிகள் அன்புடன் அளித்த உணவை பிச்சாபாத்திரத்தில் வாங்கியபின் திரும்புங்கால் இன்னின்ன இல்லத்தில் இவ்விவ்வகைத்தான பதார்த்தங்கள் இவ்விவ்வதமான குடும்பிகளால் அளிக்கப்பட்டனவென நினையாது நடக்கும் போதே மூன்று அடி தூரத்தில் தலைகுனிந்து ஒரேபார்வையுடனும் ஒரேமனதுடனுஞ் சென்று சேர்ந்தபின் இவ்வுணவோ இரும்புத்தூளை ஒத்தது இத்தகைய உணவோ பசி என்னும் நோய்க்கு மருந்து என சிந்தித்துக்கொண்டும் புசித்தபின் ஒரு தனிமெயான இடத்தில் சென்று தான் வருங்கால் மனம் எந்தெந்த இடத்தில் தவறிசென்றதோ அவைகளை தியானத்தில் சிந்தித்து மறுபடியும் அவ்வகைத்தான பார்வையில் மனதை செலுத்தாதிருக்கும்படி திரருத்தியபின் தன்னிற்றானே விழிப்புடன் தியானசமாதியிலிருப்பவரெவரோ அவரையே முனி என்றழைக்கலாம்.

(சாவகர்களாம்) குடும்பிகளாவது (உபாஸகர்களாம்) புத்தன்ம சங்கத்தை பாதுகாப்பவர்களாவது (தாயகர்களாம்) இல்லறத்தினின்று துறவறத்தை நாடி வருவோரை அன்புடன் ஆதரித்து பிச்சாபாத்திரமும் சீவரமுமளிப்பவர் களாவது அனகாரிகாகளாம்) விவாகம் செய்யாது இல்லறத்திலிருந்தே தன்மத்தைப் போதிப்பவர்களாவது வியாபாரிகளாவது மற்றும் யாவரேனும் அருகில் அணுகுவரேல் அவர்களுக்கு பரிசுத்ததன்மத்தைப் போதித்தும் அவர்களில் எழும் அபரிசுத்தமான பாபகன்மங்களை விலக்கும் வழிகளை போதித்தும் யாவர்பேரிலும் தீங்கு நினையாது மழையானது ஏழை என்றும், தனவான் என்றும், சுகதேகி என்றும், பிணியாளனென்றும், ஆணென்றும், பெண்ணென்றும் வித்தியாசம் பாராது பெய்வதுபோல் சகலருக்கும் ஒரே விதமாய் தன்மத்தைப் போதித்து அன்பை வளர்த்து வருபவர் எவரோ அவரையே முனி என்றழைக்கலாம்.

ததாகதர் போதித்துள்ள சதுர் சத்தியத்தை இடைவிடாது சிந்தித்தும், பழக்கத்திற்குக் கொண்டுவந்தும், அதன் உள்ளடங்கிய அரிய அஷ்டாங்க மார்க்கம், பஞ்சஸ்கந்தம், 40 வித சமதாபாவனா, 12 நிதானங்கள் இவைகளின் விசாரணையிலும் பழக்கத்திலும்

தினேதினே விருத்தியான பின் ராஹு, துவேஷ, மோஹம் இவைகளினின்று விடுபட்டும் புசிக்க அன்னமும், படுக்க மஹாசயனமும், உட்கார உயரமான இடமும், தங்க மடமும், சீவரத்தைத் துவைக்கத் தண்ணீரும் ஆகிய இவைகளைத் தேடாது தாமரை இலையின் மேல் தண்ணீர் நிற்பது போல் தேகசுத்தம், மனோ சுத்தம், வாக்கு சுத்தம் என்னும் இவைகளில் உட்கார்ந்தும், படுத்தும், உண்டும், சதானந்தத்தில் யாதொரு பற்றுமின்றி இருப்பவரெவரோ அவரையே முனி என்றழைக்கலாம் என பகவன் கூறி முடித்தவுடன் பெருமான் பிரசங்கத்தைப் பொறுமெயுடனும், அன்புடனும் செவிகுளிரக் கேட்டிருந்த பிரஜைகளும் சங்கத்தோர்களும் பகவனை மும்முறை சுற்றி வந்து பாதம் பணிந்து காம்பீரமான பார்வையையுடைய ததாகதரே மாரனை வென்ற வீரரே சரணம் மஹாமுனியே சரணம் சாக்கைய சிம்ஹமே சரணம். 32 இலட்சணமுடைய சுகதோ சரணம் என பன்முறை ஆனந்தத்துடன் இறைஞ்சி பகவனே! இருளிலிருந்தோருக்கு வெளிச்சத்தைக் காட்டினீர். பாப கன்மத்தில் புரண்டுருண்டு சென்ற எங்களுக்கு புண்ய கன்மத்தை விருத்தி செய்ய போதித்தீரென ஆனந்தக்கண்ணீர் விட்டு பகவனிடம் விடைபெற்றுச் சென்றார்கள்.

18. தந்தையின் இரண்டாமுறை தரிசனகாதை

அக்கால் மகதநாட்டில் சுத்தோதயச்சக்கிரவர்த்தி என்றும், மண்முகவாகு என்றும் பெயர் பெற்றதலைத்தார் வேந்தர் தேகமெலிவை உணர்ந்த அமைச்சர்கள் தன்தேகபுத்திரராகும் சித்தார்த்தருக்கறிவிப்பான் வேண்டி வேவுகர்களை அழைத்து சுத்தோதயர் சுக ஈனத்தை விளக்கி நமது கருணைக்கடலாங் கங்கையாதாரரை அழைத்து வரவேண்டுமென்று ஆக்கியாபித்திருந்தார்கள்.

அவ்வேவுகர்களும் கம்மதம்மாவில் தங்கியிருந்த கமலநாதனைக் கண்டு வணங்கி தேவரீர் தமது தந்தை அதிக சுகயீனத்திலிருக்கின்றார் தாமவ்விடம் வந்து உமது தரிசனந் தரல் வேண்டுமென்று இரைஞ்சினார்கள்.

அவ்வார்த்தையை வினவிய அந்தணர் தாதை அவ்விடம் விட்டெழுந்து அரண்மனையை நோக்கிவருங்கால் வேவுகர்கள் விசுவநாதனைநோக்கி ஐயனே! தாங்கள் கால்நடையில்

நடக்கவும் அவற்றை யாங்கள் காணவுங் கூடுமோ கிருபாநிதியே! நம்முடன் வரும் யானையின் மீதேனும், ஒட்டகத்தின் மீதேனும் ஒன்றில் ஏறிக்கொள்ள வேண்டுமென்று வேண்டினார்கள்.

அதனைவினவிய அவலோகிதர் வேவுகர்களை நோக்கி அன்பர்களே! நம்முடன் வரும் யானையின் மீதும் ஒட்டகத்தின் மீதும் உங்களுக்கு வேண்டிய ஆகாரங்களின் பாரமே நிறம்பவிருக்கின்றது. அதனுடன் எம்மெயும் நிறப்புவீர்களாயின் அதிகபாரமாகுமன்றோ. அப்பாரந்தாங்கி நடப்பதற்கு யானையும் ஒட்டகமும் சோர்வடையுமன்றோ. அத்தகைய சோர்வுக்கும் துன்பத்திற்கும் காரணம் யாமன்றோ. அத்தகைய சோர்வையும், துன்பத்தையும் சீவர்களுக்கு அளிக்காது நாமே அநுபவிப்பது நன்றன்றோ என்றார்.

அதனை வினவிய வேவகர்கள் மெய்சிலிர்த்து தேவாதி தேவா ! தலைத்தார்ந் வேந்தனென்னும் சக்கிரவர்த்திப்பீடத்தைத் துறந்தீர் அதுவும் பெரிதல்ல. இரத கஜ துரக பதாதிகளென்னும் நான்குவகை சேனைகளையுந் துறந்தீர் அதுவும் பெரிதல்ல. அரிய மனைவியாம் அசோதரையைத் துறந்தீர் அதுவும் பெரிதல்ல, ஏகபுத்திரனாம் இளமகவைத் துறந்தீர் அதுவும் பெரிதல்ல. எக்காலும் இரதமூர்ந்து செல்லும் தாமரை பாதமானது முள்ளுங் கல்லும் ஊன்றும் பாதையில் நடப்பதைப் பார்க்கப் பொறுக்கவில்லையே யாது செய்வோமென்று கலங்கினார்கள்.

அன்பர்களே! மனிதன் தனக்கு மெத்த சுகத்தை விரும்பியவிடத்து சொற்ப துக்கமும் பெருந்துக்கமாகவே தோன்றும். சுகத்தை அதிகம் விரும்பாதவிடத்து பெருந்துக்கமும் சொற்பதுக்கமாகவே தோன்றும். சுகத்திற்குந் துக்கத்திற்குங் காரணம் நாமும் நம்முடையச் செயலுமாகவே இருக்கின்றோம்.

சுகதேகிகளாக உலாவச் செய்துக்கொள்ளுகிறவர்களும் நாமே, பிணியின் உபத்திரவங்களால் துக்க தேகிகளாக உலாவுகிறவர்களும் நாமே.

உலகத்தில் பகையைப் பெருக்கிக்கொள்ளுகிறவர்களும் நாமே, சாந்தத்தை நிறப்பிக்கொள்ளுகிறவர்களும் நாமே.

அதிகலாபத்தைப் பெருக்கிக்கொள்ளுகிறவர்களும் நாமே, அதிக நஷ்டத்தை அடைபவர்களும் நாமே.

மறுமெய் தோற்றுவதற்கும் ஆதாரம் நாமே, மறுமெய்த் தோற்றாமல் செய்துக்கொள்ளுவதற்கும் ஆதாரம் நாமே என்று சத்திய தன்மத்தை விளக்கிக்கொண்டே மகத நாட்டை நெருங்கிய காலத்தில் சக்கிரவர்த்தித்திருமகன் வருகையை உணர்ந்த நாட்டுக்குடிகளும், நகரக்குடிகளும், குதூகலித்து வீதிகடோரும் பழய மணல்களைப் போர்த்தும், புது மணல்களைப் பரப்பியும், வாழைக் கமுகு முதலியவைகளை நாட்டியும், அரசிலைத் தோரணங்களைக் கூட்டியும், அறிவையர்கள் ஆலவட்டம், வெண்சாமரை வீசவும், கற்புடை மாதர் கர்ப்பூரவாலாத்தி ஏந்தியும், கமலபாதன் வருகையை எதிர்பார்த்திருக்குங் கால் எண்குணத்தோனும் வந்து தோன்றினார்.

நமதையன் ஞானகருணாகரமுகங் கண்டவுடன் பொல்லுறவோர், தொல்லுறவோர் யாவரும் நல்லுறவோரெனத் தோன்றி நாதனை யாசி கூறி சாமரை வீசி ஆலார்த்தி யார்த்தி பல்லாண்டு பாடி சாரணர் கதிவேண்டி சிரமீது இருகைகூப்பி ஜெகத்திரட்சகா! ஜெகந்நாதா! ஜெகத்குருவே! எங்களை

ஆண்டு ரட்சிக்க வேண்டுமென்று இரைஞ்சி நின்றார்கள்.

மகத நாட்டை அடைந்த மாதவன் சகலருக்கும் அறிவு பெருகுக என்னும் ஆசிகூறி அரண்மனை சேர்ந்தவுடன் அமைச்சர்கள் யாவருமெதிர் நோக்கிவந்து அவலோகிதரை வணங்கி அழைத்துச்சென்று சுத்தோதயச் சக்கிரவர்த்தி படுக்கையறையில் விடுத்தார்கள்.

சக்கிரவர்த்தியாரும் தனக்குள்ளிருந்த வியாதியின் உபத்திரவம் நீங்கி திருமகனை விழித்துப் பார்த்து அருமெய் மைந்தனே என்று அழைக்கலாமோ என்று சிந்தித்தான். மறுபடியும் தன்னைத் தேற்றிக்கொண்டு நாமவருக்கு பிதாவாயினும் நமக்கவர் ஞானப்பிதாவாம் தாதாவாச்சுதே அவரை மைந்தனென்று அழைக்கலாமோ என்று மருண்டான். அவரது முகதேஜஸைக் கண்டு ஆனந்தக்கண்ணீரை சொரிந்தான்.

சுத்தோதயச் சக்கிரவர்த்தியின் இத்தியாதி எண்ணங்களின் உதயங் களையும், நடுக்கங்களையும் உள்ளுணர்ந்த ஒப்பிலா அப்பன் சுத்தோதயன் அருகில் சென்று ஐயனே! யாது குறை என்று வினவினார்.

சுத்தோதயனும் சித்தார்த்தரை நோக்கி ஐயனே! அரசுக்கு யாதோர் அதிகாரியும் இல்லையே யாது செய்யலாம் என்றான். *பருஷோத்தமன் புன்னகை கொண்டு ஐயனே! உமக்கு முன் இத்தேசக்கை வல்லமையுடன் ஆண்டு வந்த இட்சுவாகு வீரவாகு, குலவாகு. கலிவாகென்னுஞ் சக்கிரவர்த்திகள் யாவரேனும் இத்தேசத்தைப் பார்ப்பதற்காய் வருத்துப்போக்கில் இருக்கின்றார்களோ என்றார்.

அவ்வகையால் அவர்களின் வருத்துப்போக்கை யான்கண்டதுமில்லை கேட்டதுமில்லை என்றான்.

அத்தகைய சுத்தவீரர்களுக்கே இத்தேசத்தின்மீது கவலையில்லா திருக்கவும் உமக்கு மட்டிலும் அக்கவலையுண்டாய காரணமென்னை என்றார்.

ஐயனே! அவர்கள் வம்மிஷ வரிசையில் வாழையடிவாழை தோற்றுவது போல் அரசசந்ததியார் தோற்றிக்கொண்டே வந்தார்க்ள. என்னுடைய வம்மிஷ வரிசையிலோ தாமும் உலகத்தை வெறுத்து அவலோகிதரானீர். உமது மைந்தன் சிறுவனையும் அவலோகிதனாக்கிவிட்டீர். ஆதலின் இவ்வரசை யாரிடம் கொடுத்துவிடலாமென்று கோறினான்.

அவற்றை வினவிய அருகர் சக்கிரவர்த்தியை நோக்கி ஐயனே! வாழையடிவாழை என்னும் ஓர் தாட்டாந்தங் கூறினீரே அவ்வாழையினது தோட்டமே அழிந்துபோமாயின் மறு வாழைத்தோன்றுமோ என்றார்.

அம்மொழியைக் கேட்ட அரசன் திடுக்கிட்டு தோட்டமே அழிந்து போகுங்கால் வாழையின் தோட்டமும் அழிந்துபோவது இயல்பே என்றான்.

அதுபோலவே இந்த சக்கிரவர்த்திகளின் தோட்டமும் அழிந்து போயதென்று தாங்கள் எண்ணிக்கொள்ளலாகாதோ என்றார்.

ஐயனே! தாமுந்தமது மைந்தனும் இருக்குமளவுஞ் சக்கிரவர்த்திகளின் தோட்டம் அழிந்துபோய்தாக யான் எண்ணுவதற்கு ஆதாரமில்லையே என்றான்.

ஐயனே! தோற்றும் பொருட்கள் யாவும் கெடுமென்பதை தெள்ளறத் தெளிந்துகொண்டீரா இல்லையா என்றார்.

தாதா தெரிந்துகொண்டேன் தெரிந்துகொண்டேன் என்று கூறினான்.

நீவிர் தெரிந்துகொண்டது திண்ணமாயின் உமது. கோறிக்கையை மறந்துவிடுவதே மகிழ்ச்சியாகும் என்று கூறியவுடன் சுத்தோதயச் சக்கிரவர்த்தியின் பேச்சுமூச்சும் ஒடுங்கி பிரேதமானார்.

குடும்பத்தரசர்கள் யாவரும் வந்து கூச்சலிட்டழுது கண்கலங்கி பிரேதத்தை சுடலைக்கு எடுத்துச்சென்று தகனத்திற்கு ஆரம்பிக்கும்போது அசோதரையும், இராகுலரும் அம்மடத்தைச் சேர்ந்த சங்கத்தவர்களும், பந்துமித்திரர்களும் சூழ்ந்து நின்றார்கள்.

தகனக்காட்சியைக் கண்டு நின்ற ததாகதர் சுத்தோதய மறுமெய் பிறப்பறுமோ அறாவோவென்று உள்ளத்துணர்ந்து அறுமென்னுந் தோற்ற உணர்ச்சியால் ஆனந்தமுற்று மலைமகள் அசோதரையும் மற்றுமுள்ளோருங் காண தகனகுண்டத்தை

சுற்றிச்சுற்றி தனது ஏக சடையுடை துலங்க இவ்வுரு ஆணோ பெண்ணோ என்று கலங்க சுடலையில் நடனமாடினார்.

நம்பெருமான் நடனங்கண்டயாவருந் தங்கள் தங்கள் துக்கங்கள் யாவையும் போக்கி ஆனந்த சுகிகளாய் அவரவர்கள் இல்லஞ்சேர்ந்தார்கள்.

கருணாகரக்கடவுள் கமலபாதமானது சுடலைப் புழுதியில் நடமாடவும், நடனமிடவுங்கண்ட நல்லுறவோரும், மற்ற அரசர்களும் அரசனது ஆனந்த நடனத்திற் சுகமகிழ்ந்து சிலர் நடராசா நடராசாவென்றும், சுத்தோதய அரசபுத்திரர் சுடலையாடி என்றும் கொண்டாடி அவரவர்கள் இல்லஞ் சேர்ந்தவர்கள் நீங்கலாக மற்றுமுள்ள சத்திய சங்கத்தோர் சங்க நிறையோனை இராஜகிரக வேணு வியாரத்திற்கு அழைத்துச் சென்று சகலரும் பூசித்து குருமணி பீடத்தில் வீற்றிருக்கச் செய்து வேண சங்கைகளை விசாரிக்க ஆரம்பித்தார்கள்.

**வீரசோழியம்**

பூண்ட பறையறைய பூதமருள. நீண்டசடையானாடுமே, நீண்டசடையானாடுமென்ப, மாண்டசாயன் மலைமகட் காணவே காணவே. பாடகஞ்சேர் காலொருபாற் பைம்பொற் கழலொகுபாற் தேன்றுளி,
நீடு குழலொருபால் நீண்டசடை ஒருபால் நீடியபாந்தளொருபான் - மேகலைசேர்ந்
தாடுதுகிலொருபா லவ்வுருவாண்பெண்ணென்றறிவார்யாரே.

**சுடலைப்பத்து**

விண்ணவர் கோன்காண வேந்தன் விழிதிரந்தான்,
பண்ணவனும் பக்கல் அடைந்தான்.
மன்னுகோலாளு மக்களிலை என்றான்
துன்னுகோல் தோன்றுங் குறை.
ஆயபொருட்கள் கணத்தில் வழிவதைநின்
சேயுட் பொருதிலையோ சொல்.

சுருதியின் சொல்லுந் தூயோன் துறவுங்
கருதியோன் கண்ணடைந்தான் காண்
கண்ணடைந்தான் கண்டார் கவலையுற்றார் சுற்றத்தார்.
கொண்டெடுத்தார் சுட்டெறிக்கக்கோன்
சுட்டெறிக்குங்காலை சுத்தோதய நிலையை,
உற்றுணர்ந்தார் உள்ளத்தவர்.
மண்முகவாகின்று வாழ்நாட் சுகமறுத்தார்.
விண்ணவர்க்குள் ஒன்றாகுமேல்.
அறுப்பான் பிறவி அடுத்தவுடல் களிப்பால் தொடுத்தார்
திடுத்தாண்டவம் ஈமச்சுடலையாடும் இமையவர்கோன்
நேமச் செயலறிந்த நேர். கோனாகிவந்து குருவா யறமளிக்குந்
தானான தாண்டவனற்றாள்.

**நிகழ்காலத்திரங்கல்**

கடலைதனிலாடுஞ் சுகநடனங் காணுங்கண், உடலத்னை யாண்பெண்ணறியாத அதிசயமே.

**19. சிகாளா விசாரிணைக் காதை**

அவற்றுள் சிகாளனென்னுங் குடும்பியொருவன் சுடலையாடியைச் சேவித்து சுத்தோதய புத்திரா! சுப்ரதீபா! சுகுணவிலாசா! சின்மயமுத்ரா! தமதமுதவாக்கினால் அறவுரை கேட்டு அனந்தங்காலமாகிவிட்டபடியால் குடும்பிகளாகிய எங்களுக்கு பாபகர்மங்களைப் போதித்து காத்தல் வேண்டுமென்றிறைஞ்சினான்

நடராசன் சிகாளனை நோக்கி அன்பனே!

1. உம்மெயடுத்திருக்கும் சீவர்களின் மீது அன்பு பாராட்டாது கொலை புரிவது பாவம்.
2. ஒருவன் மனமுவந்துனக்கீயாத பொருளை அபகரிப்பது பாபம்.
3. தன்தாரமிருக்கப் பிறர்தாரமிச்சிப்பது பாவம்.

4. தாம் சொல்லுஞ்சங்கதிகள் யாவும் பொய்யென்றறிந்தும் அவற்றைப் பேசுதல் பாவம்.

இவற்றை ஒவ்வோர் குடும்பிகளும் கண்டறிந்துக்கொள்ளுவதுடன்,

1. பேராசையால் உதிக்கும் பாபங்களைச் செய்யாதிருத்தல்
2. கோபத்தாலுதிக்கும் பாபங்களைச் செய்யாதிருத்தல்
3. பயத்தாலுதிக்கும் பாபங்களைச் செய்யாதிருத்தல்
4. பேதைகுணத்தால் எழூஉம் பாபங்களைச் செய்யாதிருத்தல்

இத்தகைய அவாவாலேனும், கோபத்தாலேனும், பயத்தாலேனும் பேதை குணத்தாலேனும் தூண்டப்பட்டு சீலத்தை மீறி பாபகர்ம்மத்தைச் செய்வரேல் அவரது கீர்த்தி தேயுபிறைகாலத்து ஒளி குறையுமாபோல் க்ஷணமடையும்.

தங்கள் மூதாதைகள் சேகரித்துள்ள திரவியங்களின் நஷ்டத்திற்கும், தாங்கள் சேகரித்துள்ள திரவிய நஷ்டத்திற்கும் ஏதுக்களெவை என் பீரேல் ;-

1. தாங்களறிவை மயக்கி அன்னத்தை அகற்றும் கள் முதலிய லாகிரி வஸ்துக்களை அருந்துதல் திரவிய நஷ்டத்திற்கு ஓர் மூலயே துவாம்.
2. யாதோர் தொழில் முயற்சியுமின்றி சோம்பல்கொண்டு வீதியுலாவுதல் திரவிய நஷ்டத்திற்கோர் மூலயே துவாம்.
3. நடனசங்கீதங் கச்சேரி அகஷிய நடிப்பு முதலிய இட ஏறாது செல்லுதல் திரவிய நஷ்டத்திற்கு ஓர் மூலயே துவாம்.
4. வித்தியா முயற்சிகளை அசட்டைச்செய்து சூதாட்டத்தில் முயற்சித்திருப்பது திரவிய நஷ்டத்திற்கு ஓர் மூலயே துவாம்.
5. வஞ்சகம், குடிகெடுப்பு மிகுத்து சோம்பித்திரியும் வேலை கெட்டோரிடம் நேசம்பாராட்டல் திரவிய நஷ்டத்திற்கோர் மூலயே துவாம்.

   6.பெருந்திண்டித் தின்று சதா நித்திறைக் கொண்டு யாதோர் முயற்சியுமின்றி சோம்பலே ஒருருகொண்டு கிரிதல் இரவிய நஷ்டத்திற்கோர் மூல ஏதுவம்

இவ்வறுவகை பாபமூலங்களுக்குள் ஒன்றாவது) புத்தியை மயக்குங் கள்ளை அருந்தும் பாவக்கிளைகள் யாதெனில்..

1. அதி மயக்கத்தால் திரவியத்தை வீணே சிலவு செய்தல்
2. விரோதசிந்தையைப் பெருக்கி கலகத்தை உண்டு செய்தல்
3. பலவகை வியாதிகளைத் தேடிக்கொள்ளுதல்
4. கீர்த்தியை நாசமாக்கிக்கொள்ளல்
5. மானயீனங் கெட்டு சூன்யமாதல்
6. விவேக விருத்தி கெட்டு மிருகத்திற்கு ஒப்பாதல்

இவைகளே கள்ளை அருந்துவோர்க்கு உண்டாகும் பாபக்கிளைகள் என்னப்படும்.

(இரண்டாவது) யாதோர் தொழிலுமற்று சோம்பேறியாய் அகால காலங்களில் வீதியுலாவுவதினால் உண்டாகும் பாபக்கிளைகள் யாதெனில்

1. ஆபத்தினின்று தேகத்தை விடுதலைச்செய்ய முடியாமலும் ஆதரவற்றவனாகுதல்.
2. அவனது மனைவி மக்களும் ஆபத்திலிருப்போனை விடுதலைசெய்ய முடியாமல் அவர்களும் ஆபத்துக்குள்ளாகுதல்
3. அவனது திரவியங்கள் யாவும் பாதுகாப்பின்றி ஆதரவற்றழிதல் ’
4. அவனது குணத்திற்கு சகலரும் அஞ்சுதல்
5. அவன் யாதுமறியா பேதையாயிருப்பினும் அவனது பெயரை இழிவுள்ளோர் கூட்டத்தின் பெயருடன் சேர்த்தல்
6. அளவுபடா துக்கத்தையும் உபத்திரவங்களையும் அடைதல் இவைகளே சோம்பலால் வீதி உலாவுவோர்க்கு உண்டாகும் பாவக்கிளைகள் என்னப்படும்.

(மூன்றாவது) நடனம், பாட்டுக்கச்சேரி முதலியவைகளால் உண்டாகும் பாவக்கிளைகள் யாதெனில் :

1. எத்தொழிலிருப்பினும் அவற்றை விடுத்து நடனம் எங்கு நடக்கின்றதோ அங்கு செல்லுதல்.
2. பாட்டுகள் எங்கு பாடுகின்றாரோ அங்கு செல்லுதல்
3. களியாட்டு கச்சேரி எங்கு நடக்கின்றதோ அங்கு செல்லுதல்
4. பொய்யும் போரும் நிறைந்த கட்டுக்கதைகள் எங்கு நடக்கின்றதோ அங்கு செல்லுதல்.
5. எங்கு கைத்தாளங் கொட்டுவார்களோ, பறையடிப்பார்களோ அங்கு செல்லுதல்
6. மிருகவேட்டை, பட்சிவேட்டை, மட்சவேட்டை, மல்யுத்தம் எங்கு நடக்கின்றதோ அங்கு செல்லுதல்.

இவைகளே நடன விருப்பத்தாலுண்டாகும் பாபக்கிளைகள் எனப்படும்.

(நான்காவது) குடும்பிகளுக்கு சூதாட்டத்தால் விளையும் பாபக்கிளைகள் யாதென்பீரேல் :

1. ஒருவன் வெற்றியடைந்து மற்றொருவன் தோல்வியடைவானாயின் வெற்றியடைந்தவன் பேரிற் பெரும்பகை காட்டி வெறுப்பான்.
2. இன்ன மனிதன் நமது திரவியத்தை கெலித்துக் கொண்டானல்லவா என்று தோல்வியடைந்தவன் வியாகூலப்படுவான்.
3. அதிக கஷ்டத்துடன் சேகரித்த திரவியம் நஷ்டமாகிவிட்டதே என வியாகூலமடைவான்.
4. நியாய ஸ்தளங்களுக்குச் சென்று நீதியதிபர்முன் சாட்சி கூறுவானாயின் இவன் சூதாட்டமிகுந்தவனென்றறிந்த அதிபதியும் இவன் வாக்கை மெய்யென்று ஏற்க மாட்டார்.
5. சினேகரும் பந்து மித்திரரும் அவனை வெறுப்பார்கள். சூதாட்டமே மிக்க விருப்புள்ளவனாதலின் விவேகமிகுத்தோர் கூட்டங்களிலும் இவனை சேர்க்க மாட்டார்கள்.
6. சூதாட்டத்தில் மிக்க விருப்புள்ளவனுக்கு இல்லற வாழ்க்கைக்கு ஏதுவாம் ஓர் பெண்ணையுங் கொடுக்க அஞ்சுவார்கள்.

இவைகளே சூதாட்டமிக்கோனுக்கு உண்டாகும் பாவக்கிளைகள் எனப்படும்.

(ஐந்தாவது) சோம்பேறிகளுடன் சேர்ந்து பழகுவதாலுண்டாகும் பாவக்கிளைகள் யாதென்பீரேல் -

1. சூதாட்ட மிகுத்தோர் எங்குளரோ அவர்களிடஞ் சார்தல்.
2. காமிய தூர்த்தர்களுடன் கலந்து திரிதல்.
3. பொய் விருத்தாந்தங்களைப் புலம்பித் திரியுங் கூட்டத்தோருடன் சேர்தல்
4. மதுபானப்பிரியர்களின் கூட்டத்தையே பின்தொடர்ந்து திரிதல்.
5. வஞ்சகமுள்ளோர் கூட்டத்தில் சேர்தல்.
6. துஷ்டதனம் வீண்வழக்கிழைப்பவர் பாற் சேரல்.

இவைகளே யாது தொழிலுமற்ற சோம்பேறிகளுடன் சேர்வதால் உண்டாகும் பாவக்கிளைகள் என்னப்படும்.

ஓர் குடும்பியானவன் குடும்ப விருத்திக்குத் தக்க முயற்சியற்று அஜாக்கிரதைக்கு இடங்கொடுப்பதால் உண்டாகும் பாவக் கிளைகள் யாதென்பீரேல் -

1. ஒருவன் காலையில் எழுந்து கழிக்கவேண்டிய கடன்களை யொழித்து தான் செய்யுந் தொழிலை நோக்காது இன்று அதிகக் குளிராயிருக்கின்றது, வெப்பமாயிருக்கின்றது என்னுமோர் போக்குக்காட்டி செய்தொழிலை விடுப்பானாயின் அன்று கிடைக்கக் கூடிய கூலியுமற்று சேர்த்துள்ள திரவியத்தை சிலவிட்டு திகைப்பான்.

2. இவ்வகை அஜாக்கிரதையால் ஒருநாள், இரண்டு நாள், மூன்று நாள் தங்கி முற்றுங் குடும்பச் செலவைக் கருதானாயின் சேர்த்துள்ள திரவியங்கள் யாவும் செலவழிந்து யாரிடங் கடன் கேட்கலாம் என்று நாணுவான்.

3. தொழிலை நோக்கிச் செல்லாது கடன் கொடுப்போன் எவனோ அவனை நோக்கிச் சென்று அவன் யாதாமோர் ஈடுகொடுத்தாலன்றி கடன் கொடேனென்பானாயின் அவனை முறுமுறுத்து வீடு சேர்வான்.

4. திரவிய கஷ்டத்தை உணர்ந்தும் தொழிலை நோக்காது பசியாயிருக்கின்றது தொழிலுக்குச் செல்லேனென்று மனைவியை நோக்கி ஆசைக்குச் செய்த நகை ஆபத்துக்கு உதவவேண்டுமல்லவா உன் ஆபரணங்களில் ஒன்றைக் கொடுமென்பானாயின் மனைவிக்கும் மனத்தாங்கலுண்டாய் தொழிலுக்குச் செல்லாது துட்டு விரயஞ்செய்தது நீக்கி நகைகளையும் விரையஞ்செய்ய ஆரம்பித்தீர் என்பாளாயின் மனையாட்டியை முறுமுறுத்தும் வெளியேறுவான்.

5. நகைகளை விற்றேனும், வீடுவைத்தேனும் பணங்கொண்டு அன்னம் வட்டித்துப் புசித்தபின் திருப்தியாகப் புசித்து விட்டேன், தொழிலுக்குச் செல்லலாகாதென்று நின்று விடுவானாயின் உள்ள நகைகளும் மற்றும் பொருட்களும் விரயமாகின்றதேயென்று மனைவி முணுமுணுக்க எக்காலுங் கேட்கா முணுப்பால் ஏக்கங்கொண்டு விழிப்பான்.

6. தொழிலின் முயற்சியையும் அதன் விருத்தியையுங் கருதாது பொருட்களை விற்பதும் புசிப்பதுமே முயற்சியாயிருந்து பெண்டு பிள்ளைகளும் வெறுக்க பெற்றோர் உற்றாரும் நிந்திக்க குடும்பத்திற்கே துவேஷியாய் குற்றங்காலிடுவான்.

இவைகளே தனது அஜாக்கிரதையால் செய்தொழிலைவிட்ட பாவக்கிளைகள் என்னப்படும்.

சுடலை நடராஜன் பின்னும் சிகாளனைநோக்கி குடும்பத்தில் துத்து மற்றவாழ்க்கை மிக்க அரிதாகும்.

அதாவது குடும்பிகளுக்குள் மூன்றுவகை நேயர்கள் தோன்றுவார்கள்

1. ஒருவன் மதிமயங்கக் கள்ளருந்தியிருக்குங்கால் சினேகம் பாராட்டுவான்

மற்றொருவன் என் அறிய நேயனே நற்குணநேயனே என எதிரில் நேசித்து மறைந்தவுடன் நிந்தைகூறி தூஷிப்பான்.

இன்னொருவன் திரவியம் இருக்குமளவும் நேயம் பாராட்டுவான். திரவியமற்றபோது அவனும் விட்டொழிவான்.

2. சூரியன் உதயமாகுமளவும் நித்திறை செய்தல், காமிகளுடன் பழகல், துற்குண மிகுத்தோருடன் சாவகாசஞ்செய்தல், பாம்பைக் கோபத்துடன் கோலாலடிக்க முயலுவோருக்கு ஒப்பானவனிடம் நேசித்தல், மிக்க கோபிகளுடன் சாவகாசஞ் செய்தல், அபகீர்த்தி உள்ளோருடன் பழகுதல் ஆகிய அறுவகை நேயம் பாராட்டுவதால் குடும்பி அதிதுக்கத்திற்கு ஆளாவான்.

3. கட்டுக்கடங்கா சிற்றின்ப நேயர்களுடன் பழகுதல், மதுபானப் பிரியர்களுடன் செல்லுதல், பாட்டுக்கச்சேரிக்காரரை பின்பற்றுதல், பகல்கால நித்திறையை அதி விரும்பல், அகால நேரங்களில் வீணே தெருத்திரிதல், உலோபமே உருவாக நிற்றல் ஆகிய அறுவகைப் பற்றுக்களே குடும்பியை அல்லற்படுத்தி அதிதுக்கத்திற்காளாக்கும்.

4. அவமானத்தை உண்டு செய்யுங் கூட்டத்திற் சேருவோனும், பிறர் விருத்தியைக் கண்டு மனஞ்சகியாதவனும், பாவங்களை விருத்தி செய்வோர் கூட்டத்திற் சேருபவனும், இம்மெயில நுபவிக்குந் துக்கத்தினும் மறுமெயில் அதி துக்கத்தை அனுபவிப்பான்.

5. சூதாட்டத்தை சிந்திக்காதவனும், சூதாடுவோர் சேர்க்கையில் அணுகாதவனும் மதுபானத்தைக் கையிற்றொடாதவனும் , மதுவையருந்து வோர் பால் நெருங்காதவனும், விபசார எண்ணங் கொள்ளதவனும், விபச்சாரம் புரிவோரை அணுகாதவனும், வஞ்சினம்; பொறாமெய், குடிகெடுப்பு முதலிய கீழ்மக்கட்செயலை

விரும்பாதவனும், அத்தகைய குணமிகுத்த கீழ்மக்களை அணுகாதவனும், அன்னியர் பொருளை அபகரிக்க எண்ணங்கொள்ளாதவனும், அத்தகையக் களவு மிகுத்தோர்பால் சேராதவனும், சீவர்களை இம்சிக்கா எண்ணமுள்ளவனும், அத்தகைய சீவயிம்சையோரை அணுகாதவனும், இம்மெயில் அதி சுகம் பெறுவதுடன் மறுமெயில் அதிதீவர நிருவாண நிலையை அடைவான்.

6. குடும்பத்தில் குடிகள் மீது சினங்கொள்ளாமலும், சினங்கொள்ளு வோருக்கு இதமொழி கூறலும், பெண்பிள்ளைகளின் போஷணையை விரும்புதலும், பெரியோரை வணங்கி அனுபவங்கேட்டலும், சிறியோர் கலையில் கலைநூல் பயிற்றலும், செய்தொழில் விருத்தியை சிறியோர்க் கூட்டலும், வித்தியாவிருத்தியை உலகில் பரப்பலும், தான் சுகம் பெறுவது போல் ஏனையோர் சுகம் பெறவேண்டுமெனக் கருதுதலும், ஏனைய சீவர்களுக்கு வந்த துன்பம் தனக்கு வந்த துன்பம் போல் கருதி அவற்றை நீக்க முயலுதலும் ஆகிய செயற்கள் யாவும் குடும்பியின் சுக வாதாரங்கள் என்னப்படும்.

7. கள்ளருந்தும் அவாவையும், காமியயிச்சையையும் ஒழித்தவன் எவனோ அவன் குடும்ப துக்கத்தில் அரைபாகம் ஒழிந்தவனாவான்

8. மேற்கூறியவைகளுடன் அதியவாக்கொண்டு அன்னியர் பொருளை அபகரிக்காதவனும், மாமிஷப்புசிப்பின் இச்சையால் சீவயிம்சை செய்யாதவனும் குடும்பத் துக்கத்தில் முக்கால் பாகம் ஒழிந்தவனாவான்.

9. இவைகளுள் தன்னாவிற் பொய்யெழாமற் காக்கவேண்டியவன் சகல தற்செயல்களையும் மறுக்கும் சத்தியவாளேந்தியுள்ளவனாதலின் குடும்ப துக்கமற்று ஒழிந்தவனாவான். - 10. குடும்பி என்னும் இல்லறத்தோன் தொல்லறம் யாவையுமொழித்து நல்லற நிலை நிற்பானாயின் அவனையே இல்வாழீசனென்றெல்லோரும் புகழ்வார்கள்.

குடும்பியே! கள்ள சிநேகருள் மற்றும் நன்குவகையோருண்டு.

1. அவர்கள் யாரென்பீரேல், ஒரு சிநேகிதன் மிக்க நேயமுடன் கூட்டுறவாடி எவ்விதத்திலும் உமது பொருளை அபகரித்துச் செல்லவேண்டிய விழிப்பிலிருந்து வவ்விச்செல்லுவான்.
2. மற்றொரு சினேகிதன் வார்த்தையில் மட்டிலும் நேயனைப் போல் காட்டி உமக்கு உதவியாயிருப்பேன், உதவியும் புரிவேனெனக்கூறி ஒன்றுக்கும் உதவா சூனியத்திலிருப்பான்.
3. வேறுமோர் சினேகிதன் மிக்க வன்புடையவன் போல் இனிய மொழிகளைக் கூறி கெடுவெண்ணத்தை உள்ளத்திருத்தி அக்கேட்டைச் செய்தற்கு சமயம் பார்த்திருப்பான்.
4. இன்னொருவன் பலவந்தமாகவே நெருங்கி நேயனென்றும், உறவினநென்றுங் கூறி உடனுக்குடன் கொடுக்க ஆரம்பிப்பான்.

இவர்கள் நால்வருள் முதலானவனாகும் பொருளை அபகரிக்குஞ் செயலில் நான்கு வகையாவர்.

1. ஒரு சினேகிதன் உமது பொருளை வாங்கிப்போகவேண்டும் என்று வருவான்.
2. ஒரு சினேகிதன் சிறிய பொருளைக் காட்டி பெரிய பொருளைக் கொண்டு போக வருவான்.
3. ஒரு சினேகிதன் தனக்கு ஆபத்து நேரிடுங்கால் நெருங்கி சினேகித்து வேண்டிய பொருளை கிரகிக்க ஆரம்பிப்பான்.
4. ஒரு சினேகிதன் தன் சுகத்திற்கு வேண்டிய பொருள் கிடைக்கும் வரையில் நேசித்துத்திரிவான்.

இந்நால்வரும் வெருங்கையுடன் உமது பொருளை அபகரித்துச் செல்லும் பொருட்கள்ள நேயராவர்.

வார்த்தையால் வசப்படுத்தி வஞ்சிக்கும் நேயர்கள் நான்கு வகையாயிருப்பார்கள்.

1. சென்ற கால விஷயங்களைப் பேசி அவ்வார்த்தை நயத்தால் வசப்படுத்தி தங்கள் சுயப்பிரயோசனத்தைத் தேடிக்கொள்ளுவார்கள்.
2. வருங்கால விஷயங்களைப் பற்றிப் பேசி அவ்வார்த்தை நயத்தால் தங்கள் சுயப் பிரயோசனத்தைத் தேடிக்கொள்ளுவார்கள்.
3. யாதோர் பிரயோசனமற்ற வார்த்தைகளைப் பேசி அவ்வார்த்தை நயத்தால் தங்கள் சுயப்பிரயோசனத்தைத் தேடிக்கொள்ளுவார்கள்.
4. விவேகிகள் யாதேனுஞ் சத்விஷயங்களைப் புகட்டுவார்களாயின் அவ்வார்த்தைகளைக் கெடுக்கத்தக்க நயவார்த்தைகளைப் புகட்டி தங்கள் சுயப்பிரயோசனத்தைத் தேடிக்கொள்ளுவார்கள்.

உறவாடிக்கெடுக்கும் நேயர் நான்கு வகையாகத் தோன்றுவார்கள்.

1. ஏதேனுமோர் பாவச்செயலை நாடிக்கேட்டால் அதை செய்யத்தக்க உற்சாகங்களை ஊட்டிக் கெடுதியை உண்டு செய்துவிடுவார்கள்.
2. நீதிமார்க்க விசாரிணைச் செய்வதற்காக ஓரிடஞ் செல்லுங்கால் அவ்விடம் ஏகவிடாத உபாயங்களையும், அவர்களை விரோதிக்கும் வார்த்தைகளையும் புகட்டிக் கெடுத்துவிடுவார்கள்.
3. எதிரிற் காணுங்கால் மிக்க புகழ்ச்சியாகவே பேசிக்கொண்டு உள்ளுக்குக் கெடுக்கத்தக்க உபாயங்களைத் தேடுவார்கள்.
4. காணாவிடங்களில் அவதூறு பேசிக்கொண்டு உன் கீர்த்திக்கும் பெயருக்கும் இழிவை உண்டு செய்யத்தக்க எத்தனங்களைத் தேடுவார்கள்

உனது திரவியத்தை நஷ்டப்படுத்தி சீரழியச்செய்யும் சிநேகிதர்கள் நான்குவகையாகத் தோன்றுவார்கள்.

1. உன்னையடுத்து மதுபானக் கடைக்கழைத்துச் செல்லும் உபாயத்தைத் தேடுவார்கள்.
2. நேரமில்லா நேரங்களாகும் அகாலகாலங்களில் வீதிகளில் அழைத்துச் சென்று வீண்கலகத்திற்கும், விரயத்திற்கும் வழிதேடுவார்கள்

3. கூத்தாட்டம், பாட்டுக்கச்சேரி, அகஷியம், ஜாலம் இத்தகைய வங்களுக்கு அழைத்துச் சென்று விரயத்திற்கு உள்ளாக்குவார்கள்.
4. சூதாட்டங்களுக்கும், களியாட்டுகளுக்கும் அழைத்துச்சென்று அதினாலும் விரயத்தை உண்டு செய்வார்கள்.

குடும்பிகளுக்குள்ளாகவே வெருங்கையுடன் வந்து மற்றவர்கள் பொருளை அபகரிப்போரும், வீண்வார்த்தைகளைப் பேசிக் குடும்பத்தைக் கலைத்து வைப்பவர்களும், நல்ல வார்த்தைகளைப் பேசிக்கொண்டே குடிகெடுக்க ஆரம்பிப்போர்களும், தங்களைப் போல் கூழுக்கும் , கஞ்சிக்கும் அலையாமல் சுகபுசிப்பில் இருக்கின்றார்களே இவர்களைக் கெடுக்கவேண்டு மென்று வழிதேடுகிறவர்களும் உண்டு.

இத்தியாதி குடிகேடர்களையும், வஞ்சகர்களையும் உய்த்தறிந்து அவர்களுடன் சேராமலும், அவர்கள் தங்குமிடங்கள்

டன் சேராமலும், அவர்கள் தங்குமிடங்களிற் செல்லாமலும் அவர்கள் உட்காருமிடங்களில் உட்காராமலும், அவர்கள் நேசத்தைக் கனவிலும், விரும்பாமல் இருக்கவேண்டுமென்று கூறி குடும்பியானவன் அடுத்துப் பழகவேண்டியவர்களையும், நேசிக்க வேண்டியவர்களையும் புகலவாரம்பித்தார்.

குடும்பியே! சிநேகிக்கக் கூடியவர்களுள் நல்லுள்ளத்தோர் நான்கு வகைப்படுவர்.

1. நல்லுள்ள நேயன் பிறர் நயமும், பிறருதவியுங் கருதாது தன்னாலியன்ற உதவி புரிவான்.
2. நல்லுள்ளநேயன் உனக்கு மிக்க திரவியமுள்ள காலத்தில் உன்னுடன் சுகித்தது போல் உன்னுடைய திரவியங்கள் யாவும், அற்ற துக்கத்தை அனுபவிக்குங் காலத்தும் உடந்தையாகவே துக்கத்தை அனுபவிப்பான்.
3. நல்லுள்ள நேயன் உன்னை நேசிக்குங்கால் உனது திரவியம் விருத்தி அடையவேண்டிய முயற்சியிற் கூடவே இருந்து விருத்தி செய்து சுகம் பெறுவான்

4. நல்லுள்ள நேயன் உன்மீது மிக்க அன்பு பாராட்டி உன் நிழல் போல் நிற்பான்.

குடும்பியே! நல்லுள்ளத்தோன் ஒருவன் உனக்கு நான்குவகை உதவியைப் புரிவான்.

1. ஓர்வகை வியாதியினாலோ, புசித்துள்ள பதார்த்தங்களின் மயக்கத்தினாலோ நீ மயங்கி கிடப்பாயாகில் உன்னைக் காப்பாற்றி வீடு சேர்த்தும் உபசரிப்பான்.
2. உனது சொத்துக்களை கள்ளர்களேனும், மற்றவர்களேனும் வந்தபகரிக்காவண்ணம் பாதுகாப்பான்.
3. உனக்கேதோவோர் ஆபத்து நேரிட்டகாலத்தில் கூடவே இருந்து வேண்டிய தைரியத்தைக் கொடுப்பதுடன் அவ்வாபத்தினின்று மீட்கத்தக்க யேதுக்களையுந் தேடுவான்.
4. உனக்கேதேனும் உதவி வேண்டி கேட்பாயாயின் தன்னிடமில்லாவிடினும் பிறரிடத்தேனுங் கொணர்ந்தளித்து காப்பான்.

இத்தகைய நான்குவிதமாகிய உதவி புரிவோர்களாகும் நேயர்களே நல்லுள்ளத்தோர்களாகும்.

குடும்பியே சுகத்திற்குந் துக்கத்திற்கும் உதவியாயிருந்து ஆதரிக்கும் நேயர்கள் நான்குவகையாவர்.

1. உனது அந்தரங்கப் பொருளையேனும், இரகசிய வார்த்தையையேனும் வெளியிட வேண்டாமென்று கூறுவாயாயின் அவற்றை மற்றோரறியாவண்ணம் மிக்க ஜாக்கிரதையிலிருப்பான்.
2. உனக்குள்ள இரகசியச் செயல்களை யாவரிடமுங்கூறாது தன்னிடம் பதித்துக்காப்பான்.
3. தனக்கு யாது துன்பம் நேரிட்டாலும் தனது நேயனைக் கைவிடமாட்டான்.
4. நேயனுக்கோர் துன்பம் நேரிடுமாயின் தனது பிராணனைக் கொடுப்பான். இத்தகைய நான்குவகை நேயர்களையே துக்கத்திற்குஞ் சுகத்திற்கும் பொருந்தி ஆதரிக்கக்கூடிய சிநேகிதர்கள் என்பார்கள்.

குடும்பியே உனக்குள்ள செல்வத்தை விருத்தி செய்யும் நல்லெண்ண முள்ள நேயர்கள் நான்குவகையுண்டு.

1. உன்னைப் பாபச்செயல்களில் விழாவண்ணங் பாதுகாப்பான்.
2. தானும் நற்செயல்களையே செய்து கொண்டு உன்னையும் நற்செயலில் உலாவச் செய்வான்.
3. நற்போதனைகளைப் போதிக்குங் கூட்டத்திற்குத் தானுஞ் செல்லுவதுடன் உன்னையும் பலவந்தமாக அழைத்துச் செல்லுவான்.
4. நற்கதி அடைய வேண்டிய வழிக்குத் தானு முயற்சிப்பதன்றி உன்னையும் அதில் முயற்சி செய்யத் தூண்டுவான்

இத்தகைய நான்குவகை நேயர்களே உள்ள நிதியை விருத்தி செய்வோர்களாவார்.

குடும்பியே நல்லுள்ளத்தோர் நன்குவகையான அன்பினைப் பாராட்டுவார்கள்.

1. நீ பாக்கியவந்தனாயிருக்குங்கால் உன்னுள் அன்புகூர்ந்து ஆனந்தம் அடைவார்கள்.
2. உனது தனவிருத்தியையும் தானியவிருத்தியையுங் கண்டு ஆனந்தம் அடைவார்கள்.
3. வஞ்ச நெஞ்சினர்களை உன்னிடம் சேராவண்ணம் பாதுகாப்பார்கள். 4. நல்லெண்ணமும், அன்புமிகுத்தோர்களை உன்னிடம் வரவழைத்து உனக்குள்ள அன்புடன் மிக்க அன்புடையவனாகச் செய்வார்கள்.

இத்தகைய அன்பினைப் பாராட்டுவோர் நான்குவகையோர் என்பது இவர்களேயாகும்.

குடும்பிகளுக்குள் மிக்க அன்புமிகுந்த சிகாளா மற்றுங் கேட்டறிவாயாக. குடும்பிகளுக்குள் தாய்தந்தையர் தங்கள் மக்களை நடத்த வேண்டிய ஒழுக்கங்களே மிக்க மேலானதாகும். குடும்பத்தின் செயலே குலத்தின் குணமெனத் தோன்றுதலால் பெற்றோர் பிள்ளைகளை நடத்துஞ் செயல்களே பேரறிவுக்கு ஆதாரமாகும்.

1. ஆதலின் பெற்றோர்கள் தங்கள் மக்களுக்குப் பெருந்திண்டியூட்டி பேராபரணம் பூட்டி அழகு பாராது மிக்க ஒழுக்க நடையிலும், ஒழுக்க மொழியிலும், ஒழுக்கச் செயலிலும் அழகுபார்த்தல் வேண்டும்.
2. துஷ்டச்செயலும், தூறு வார்த்தையும், நஷ்ட களியாட்டு மிகுத்த பிள்ளைகளுடன் சாவகாசஞ் செய்யவிடாமல் ஒழுக்க மிகுத்தப் பிள்ளைகளிடம் உலாவச் செய்யல்வேண்டும்.
3. பிள்ளைகளின் பார்வையையும், மனதையும் கல்வியின் பேரிலும் கைத்தொழில்களின் பேரிலும் நாட்டமுறச் செய்யல் வேண்டும்.
4. மக்களுக்குப் பருவமறிந்து நோய்பழியற்ற கால்வழியிற் பெண்களைச் சேர்த்துக் குடும்பவிருத்தி செய்து சிறந்த குடும்பத்தானென்ன சீர்படுத்தல் வேண்டும். 1
5. தான் சம்பாதிக்கும் சொத்துக்களின் மிகுதியை ஆண்மகவிற்கும் பெண்மகவிற்கும் சரிபாகம் அளித்தல் வேண்டும்.

இத்தகைய ஒழுக்கங்களைந்தும் தாய்தந்தையர் மக்களை சீர்பெறச் செய்யுந் திருத்தங்களாகும்.

குடும்பியே இவற்றுள் ஈன்ற மக்கள் தாய்தந்தையரை என்றும் ஆதரிக்கும்படியான ஒழுக்கங்கள் யாதெனில் -

1. மக்கள் தங்கள் தாய்தந்தைகளை வணங்குதலும், வேண்டிய உபசரிப்புச் செய்தாலும், அவர்களை மிக்க சுகத்தில் வைக்க வேண்டியவைகளையுந் தேடல் வேண்டும்.
2. தாய் தந்தையர்களுக்குச் செய்ய வேண்டிய அன்னாபிஷேக நெய் தயிர் போஷணைக் குறைவரவுங் குணக்கோணலின்றியுஞ் செய்துவரல் வேண்டும்.
3. தாய் தந்தையர் பெயர்கள் என்றுங் கெடாது மக்கட்செயல்களைக் கொண்டே மாதா பிதாக்கள் சிறப்படைதல் வேண்டும்.
4. மாதா பிதாக்களின் சொத்துக்குரிய மக்களென்று சகலருங்கூற சத்கருமத்தில் நடத்தல்வேண்டும்.

5. தாய்தந்தையர் உலகத்தில் மறைந்ததினின்று அவர்கள் மீதிருந்த அன்பம் அவர்கள் பெயரும் மாறாமல் அத்திதி கண்டு ஏழைகளுக்கு அன்னதானம் வஸ்திரதானஞ் செய்துவரல் வேண்டும்.

இத்தகைய ஐந்து நற்செய்கைகளும் மைந்தர்கள் தந்தைதாயாருக்குச் செய்யும் ஒழுக்கங்களாகும்.

குடும்பத்தோருக்கு ஆசிரியனாயுள்ளவன் ஐந்து வகை சிறப்பில் மிகுத்தோனாய் இருத்தல்வேண்டும்.

1. பொய் பேசாதவனும் பேராசை இல்லாதவனுமாய் இருத்தல் வேண்டும்.
2. கலை நூற்களையும், கணித நூற்களையும் மிக்க ஆராய்ந்தவனாய் இருப்பதுமன்றி நல்லொழுக்கங்களையே போர்வைபூண்டவனாய் இருத்தல் வேண்டும்.
3. குடும்பிகளுக்குத் தோன்றும் துற்கால நற்காலச் செயல்களை ஆராய்ந்து துற்கரும் செயல்களை அகற்றவும் நற்கருமச் செயல்களைப் பெருக்கவுஞ செய்யல்வேண்டும்.
4. மக்கள் பருவமாய்ந்து வித்தியா புத்திகளை ஊட்டி வதுவை பருவமாய்ந்து பாலதான பொருத்தத்திற்குத் தக்க மங்கையைப் பொருத்தி தன்மகன்மத்தை நடத்தல் வேண்டும்.
5. இத்தகைய கன்மகுருக்கள் எக்காலுங்குடிகள் மீது கண்ணோக்கம் வைத்து ஞானத்தின் ஒழுக்கமும் சீலத்தின் பெருக்கமுமுற்று வாழ்வு பெறச்செய்யல் வேண்டும்.

இவ் ஐந்துங் குடும்பிகளுக்காய் கன்மகுருக்கள் செய்யவேண்டிய நல்லொழுக்கங்களாகும்.

குடும்பியே இல்லற மாணாக்கர்கள் ஒழுக வேண்டிய ஒழுக்கங்கள் ஐந்து வகைப்படும்.

1. ஆசிரியரை மாணாக்கன் எழுந்து பணிந்து அவருக்கு வேணவுபசரணைச் செய்து அவருக்கு ஆசனம் ஈய்ந்து உட்காரவைத்து பயபக்தியுடன் அவரெதிரில் உட்காரவேண்டும்.
2. அவர் கொடுக்கும் பாடங்களை உறுதியுடன் மனதிற் பதியச் செய்து ஆசிரியர் கேட்கும் போதெல்லாம் விளக்க வேண்டியது.
3. தானே காலந்தவிராது ஆசிரியனை அடுத்து பாடங்கேட்டு அதனளவில் நிற்றல் வேண்டும்.
4. ஆசிரியருக்கு வேண்டியவைகளை உதவிபுரிந்து அவரை ஆதரித்துவரல் வேண்டும்.
5. கற்றவைகளை மேலும் மேலும் விருத்தி செய்து ஆசிரியர் பெயரை எங்கும் புகழ்பெறச் செய்யல் வேண்டும்.

இவ்வைந்துங் குடும்பிமக்கள் ஆசிரியருக்குச் செய்யும் ஒழுக்கங்களும் செயல்களுமாகும்.

குடிம்பியே மனையாளன் தனது மனைவியை நடத்திவரவேண்டிய ஒழுக்கங்கள் ஐந்து வகைப்படும். அவையாவன -

1. மனையாளன் தன் மனைவியை உள்ளன்பினாலும், அரைவணைப் பினாலும் ஆதரிப்பதுடன் பெண்ணெனன்னும் உருவே பேதமெயென்றுணர்ந்து கற்பினிலையில் நிற்கக்கூடிய வழியில் நடாத்திவரல் வேண்டும்.

2. கற்பினிலையின் வழிகளைக்காட்டாது அவள் மனம் போனடம்பச் செயலில் விட்டு வீணே பழிகூறி அருவெறுக்கலாகாது.

3. இஸ்திரிகளுக்குத் தங்கட் கணவர்களே காவலாளிகளாதலின் மிருதுவான மொழியாலும், மேலான குணத்தாலும் பாதுகாத்தல் வேண்டும்.

4. குடும்பி சேகரிக்கும் பொருட்கள் யாவற்றிற்கும் குடித்தனக்காரியே பாதுகாப்புடையவளாதலின் சேகரிக்கும் பொருட்கள் யாவையும் அவளிட மளித்து அவற்றை சிதரவிடாமற் சேர்க்கவும், விருத்திச் செய்யவும் வேண்டிய விதிகளைக் கற்பித்துவரல்வேண்டும்.

5. குடும்பியானவன் தன் சம்பாத்தியத்திற்குத்தக்க ஆடையாபரணங்களை அளித்து வரவுக்குத் தக்க சிலவிலும் கிடைத்தவரையில் போதும் என்னும் திருப்தியிலும் இருக்க வேண்டிய இல்லற தன்மங்களை ஊட்டி பாதுகாக்க வேண்டும்.

இவைகளே கணவனால் மனைவியை நடத்தவேண்டிய ஐந்து வகை ஒழுக்கங்கள் என்னப்படும்.

குடும்பியே, மனைவி தன்மணாளனுடன் நடந்துக் கொள்ளவேண்டிய ஒழுக்கங்கள் ஐந்துவகைப்படும்.

1. மனைவியானவள் தன்கணவன் மனோபீஷ்டப்படி அன்னமுதலியவை வட்டித்து திருப்த்தியுடன் புசிக்கச்செய்து போஷிக்கவேண்டும்.

2. கணவனுக்குரிய பந்துமித்திரர்கள் வருவார்களாயின் அவர்களையே தனது பந்துமித்திரர்களெனக் கருதி உபசரிப்புச் செய்து ஆதரித்தல் வேண்டும்.

3. தன் கணவனையே தனக்கு தாதாவாகவும், தன்கணவனையே தனக்குக் காவலாளியாகவும், தன்கணவனே தன்னைக் காக்குங்கர்த்தனாகவும் எண்ணி மறவாவன்பில் நிலைத்தல் வேண்டும்.

4. கணவன் சேகரிக்கும் பொருளை வீண்விரயஞ்செய்யாது பாதுகாத்து விருத்தி செய்து தன் கணவன் பொருள் சேகரிக்குங் காலந்தவரிய போது முன் சேகரித்துள்ளப் பொருளைக் கொண்டு கணவனை கவலையின்றி போஷித்துவரல் வேண்டும்.

5. மனைவியானவள் தன் தேகத்தை சோம்பலுக்கும், அதி நித்திறைக்கும் இடங்கொடாது குடும்பத்தின் தொழிலின் பேரிலும், பொருட்களை சுத்தி செய்து வீட்டை அலங்கரிப்பதின் பேரிலும், கணவனுடைய இதயத்திற்கு ஆனந்தத்தை உண்டு செய்து அன்பை பெருக்குதலின் பேரிலும் சுருசுருப்பா யிருத்தல் வேண்டும்.

இவ்வைந்துவகை ஒழுக்கங்களே மனைவி தன் கணவனைப் போஷிக்க வேண்டியவைகள் என்னப்படும்.

உத்தம் குடும்பத்தோன் தனது குடும்பத்தோரை உபசரிக்கும் ஒழுக்கங்கள் ஐந்து வகைப்படும்.

1. குடும்பத்தோர் சுகதுக்கங்களுக்கு வேண வுதவிபுரிந்து ஆதரித்தல் வேண்டும்.

2. குடும்பத்தோர் வருத்துப்போக்கில் அவர்களுக்கு யாதோர் மனவருத்தமுமின்றி அன்புபாராட்டிவரல்வேண்டும்.

3. தன்னைப்போல் தனது குடும்பத்தோரும் சுகசீவிகளாக வாழ்கவேண்டிய பொருளதவிச் செய்து போஷித்தல் வேண்டும்.

4. தனது குடும்பத்தின் ஆண்மக்கள் போஷிப்பற்றிருப்பார்களாயின் அவர்களுக்கு வேண்டிய வித்தியா புத்தியை விருத்தி செய்து சிறப்படையச் செய்யல் வேண்டும்.

இவ்வைந்து ஒழுக்கங்களே உத்தம குடும்பத்தோன் செய்ய வேண்டியவைகளாம்.

உத்தம குடும்பத்தோனுக்கு உத்தமக் குடும்பிகள் செய்யவேண்டிய ஒழுக்கங்கள் ஐந்து வகைப்படும்.

1. உதவி செய்துவந்த குடும்பத்தோனுக்கு ஏதேனுமோர் குறைவு நேரிடுமாயின் அக்குறைவு தங்களுக்கு நேரிட்டனபோற் கருதி நிறைவு செய்யல்வேண்டும்.

2. உதவி செய்துவந்த குடும்பத்தோன் சொத்துக்கள் விரயமாகுங்கால் அவைகளை விரயமாகவிடாது பாதுகாத்தல்வேண்டும்.

உதவி செய்துவருங் குடும்பத்தோன் சொத்துக்கள் மென்மேலும் விருத்தியடையவேண்டிய முயற்சியின்று பாதுகாத்தல் வேண்டும்.

4. உதவிசெய்துவந்த குடும்பத்தோன் சொத்துக்கள் யாவுமழிந்து அதுலநிலை அடைவானாயின் குடும்பத்தோர் அவனுக்கு வேண்டிய பொருளுதவிச்செய்து முன்போற் சுகசீவ வாழ்க்கை பெறச் செய்யல்வேண்டும்.

5 உதவி செய்துவந்த குடும்பத்தோன் மரணமடைந்துவிட்டாலும் தேசாந்திரியாயினும் குடும்பத்தோர் ஒன்றுகூடி அவன் பெண்சாதி பிள்ளைகளுக்கு யாதொரு குறைவும் நேரிடாமற் பாதுகாத்து சீர்பெறச் செய்யல்வேண்டும்.

குடும்பியே குடும்பத்தின் வாழ்க்கையுஞ் சுகமும் குணவீகையிலிருக் கின்றது.

நீரொருவருக்கு உபகாரஞ்செய்வீராயின் மற்றவர்கள் உமக்கு உபகாரஞ் செய்வார்கள்.

நீரொருவனுக்கு உபகாரஞ்செய்யாமல் மற்றவர்கள் உபகாரத்தையே கருதுவீராயின் அவன் யீவுள்ளோனோயினும் உமக்கு லோபியாகவே விளங்குவான்.

மயக்கத்துக்கேதுவையும், மனத்திற்றுருவையும் உண்டு செய்யும் வஸ்துவை மற்றவனுக்கருளுவீராயின் மற்றவனுமுமக்கு அம்மயக்கவஸ்துவை அளித்து மதிமோசம் பெறச் செய்வானன்றி உன் மக்களை ஆதரிக்க மாட்டான்.

நீவிர் சருவசீவர்களின் மீதும் அன்பு பாராட்டுவீராயின் சருவசீவன்களும் உமது மீது அன்பு பாராட்டும்.

சருவசீவர்களின் மீது சினந்தேனும் புசிக்கவேண்டிய அவாவின் மிகுதியிலேனுந் துன்பம் செய்துவருவீராயின் சருவசீவர்களே துன்ப உருகொண்டெதிர் தோன்றும்.

அன்னிய மக்களுக்கு வேண்டிய பொருளளித்து ஆதரிப்பீராயின் அன்னிய மக்கள் வேண பொருளளித்து உம்மை ஆதரிப்பார்கள்.

அன்னியர் பொருளை நீவிர் அபகரிக்கும் அவாவிலிருப்பீராயின் உனது பொருளை மற்றவர்கள் அபகரிக்கும் வழியைத் தேடுவார்கள்.

நீவிர் மற்றவர்களை வஞ்சிக்கத்தக்கப் பொய்யைச் சொல்லி பொருள் பரிப்பீராயின் மற்றவர்களும் உமக்குப் பொய்யைச் சொல்லி வஞ்சித்து விடுவார்கள்

நீவிர் அன்னியர் தாரங்களை தாய் தங்கையற்போற் கருதி ஆதரித்து வருவீராயின் உமது தாரத்தை மற்றவர்களுந் தாய்தங்கையற்போற் கருதி ஆதரிப்பார்கள்.

அன்னியர் தாரங்களை இச்சித்து அவர்கள் குடிக்குத் தீங்கு விளைப்பீராயின் உம்முடைய தாரத்தை மற்றவர்கள் இச்சித்து உன் குடிக்கு தீங்கு விளைவிப்பார்கள்.

குடும்பியானவன் குடும்பவாழ்க்கையில் மிக்க ஜாக்கிரதையிலும், சீலத்திலும், ஒழுகுவானாயின் சகல சுகமும் பெற்று வாழ்க்கையில் சுகமடைவான்.

அஜாக்கிரதையிலும், அசீலத்திலும் ஒழுகுவானாயின் இல்லற சுகமுமற்று துறவற பாக்கியமுமற்று இரண்டுங்கெட்ட நிலையினின்று உன்மத்தனைப் போலேங்கி உண்ண புசிப்புக்கும், உடுக்கக் கந்தைக்குமின்றி பலராலும் இகழப்படுவான்.

குடும்பியே எஜமானன் தன் வேலைக்காரர்களை நடத்த வேண்டிய ஒழுக்கங்கள் ஐந்துவகைப்படும்.

1. எஜமானன் வேலைக்காரர்களுக்குரிய திடத்தையும் வல்லபத்தையுங் கண்டு அவனவனுக்குத் தக்க ஊழியங் கொடுத்து வேலை வாங்க வேண்டும்.

2. ஏவலாளன் வயதுக்குத் தக்கவாறு வேலை வாங்குவதுடன் பசியறிந்து உணவளிக்க வேண்டியவர்களுக்கு உணவும், வேலைக்குத் தக்கக் கூலியளிக்க

வேண்டியவர்களுக்குக் கூலியுமளித்து ஆதரித்தல் வேண்டும்.

3. ஏவலாளருக்கு ஏதேனும் வியாதி தோன்றுமாயின் அவ்வியாதியை நீக்கத்தக்க அவுடதப்பிரயோகங்களைச் செய்வதுடன் பத்தியப் பரிகாரங் களையும் அதற்குத்தக்க உணவுகளையும் அளித்துப் பாதுகாத்தல் வேண்டும்.

4. ஏவலாளருக்குத் தங்கள் தொழில்களிலேனும், வெளியிலேனும் யாதாமோர் ஆபத்து நேரிடுமாயின் ஏஜமானனே முன்னின்று அவ்வாபத்தை நீக்கல் வேண்டும்.

5. ஏவலாளனை வேலைவாங்குங்காலங்கள் நீங்கலாக அவர்கள் ஓய்ந்திருக்கவேண்டிய காலங்களையும் நியமித்தல் வேண்டும்.

ஆக இவ்வைந்தும் எஜமானிகள் ஏவலாளன் ஏவலாளியை வேலை வாங்க வேண்டிய ஒழுங்குகளாகும்.

குடும்பியே! ஏவலாளர்கள் எஜமானனுக்கு நடந்து கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் ஐந்து வகைப்படும்.

1. எஜமானன் படுக்கையறைக்குச் சென்றப்பின் அவனுக்கு வேணபொருட் களை சேகரித்து வைத்துக்கொண்டு எஜமானன் எழுந்திருக்கும் முன் எழுந்து வேண பொருட்களை முடித்துவைத்தல் வேண்டும்.

2. எஜமானன் படுக்கையறைக்கு சென்றப்பின் ஏவலாளர் படுக்கைச் செல்லுவதுடன் எஜமானன் பொருட்கள் யாவும் கள்ளர் கைபடாவண்ணம் காப்பாற்றல் வேண்டும்.

3. எஜமானன் கொடுத்துள்ள வேலைகளை ஏவலாளர் அதி ஊக்கமாகவும், அதி ஜாக்கிரதையாகவுஞ்செய்து எஜமானன் மனதை திருப்த்தி செய்தல் வேண்டும்.

4. எஜமானனால் எந்தெந்த வேலைகள் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அந்தந்த வேலைகளை சரிவர முடிக்காமல் வேறுவேலைகளைத் தங்கள் மனம் போனவாறு தொடுத்து கொடுக்கலாகாது.

5. எஜமானன் சங்கதிகளையேனும், எஜமானன் வீட்டு சங்கதிகளையேனும் வெளியாருக்குத் தெரிவித்து வீண் கலகங்களுக்கேது செய்யாமல் எஜமானனை சிறப்பித்துவரல் வேண்டும்.

இவ்வைந்துவகை ஒழுக்கங்களே ஏவலாளர் எஜமானனுக்கு நடந்துக் கொள்ள வேண்டிய ஒழுக்கங்களாகும்.

குடும்பியே! குடும்பத்தோருள் சிரமணர்களாம் சமணமுனிவர்களையும் அவர்கள் தங்கியுள்ள வியாரங்களையும் பாதுகாத்து வருபவர்களை உபாசகர்களென்று கூறப்படும். அத்தகைய உபாசகர்கள் பிக்ஷுக்களென்னும் சமணமுனிவர்களிடம் நடந்துக்கொள்ளவேண்டிய ஒழுக்கங்கள் ஐந்து வகைப்படும்.

1. உபாசகர்கள் என்னும் அடியார்கள் சமணமுனிவர்களாம் ஞானகுருக்கள்பால் தங்கள் அன்பை காயமாகிய தேகத்தால் செலுத்தல் வேண்டும்.

2. உபாசகர்களாகிய வடியார்கள் தங்கள் ஞானகுருக்களாகிய சமண முனிவர்கள் பால் தங்கள் அன்பை ஈகை என்னுங் செயலால் செலுத்துதல் வேண்டும்.

3. உபாசகர்களாம் அடியார்கள் சமணமுனிவர்களாம் ஞானகுருக்கள் பால் தங்கள் அன்பை எண்ணமென்னுமனத்தால் செலுத்தல் வேண்டும்.

4. உபாசகர்களாகிய வடியார்கள் தங்கள் ஞானகுருக்களாம் சமண முனிவர்கள் மீது முழு அன்பு பாராட்டி அவர்கள் ஞானசாதனங்களுக்கு யாதாமோரிடையூறுமின்றி பாதுகாப்பதுடன் வேணபுசிப்புமளித்து ஆதரித்து வரல்வேண்டும்.

5. உபாசகர்களாம் அடியார்கள் சமணமுனிவர்களாம் ஞானகுருக்களுக்கு ஞானத்தை விருத்தி செய்யும் உபகாரிகளாகும் ஞானத்தந்தையர்களாதலின் அவர்களுக்கு யாதொரு கவலையும் அணுகவொண்ணாமல் கார்த்து ஞானசாதனத்தை முதிரும்படி செய்யல்வேண்டும்.

இத்தகைய ஐந்து ஒழுக்கங்களே ஞானகுருக்களுக்கு அடியார்கள் நடந்துக்கொள்ளவேண்டியவைகளாகும்.

குடும்பியே! பிக்ஷுக்களாம் சமண முனிவர்கள் உபாசகர்களாம் அடியார்களுக்குப் போதித்துவரும் ஒழுக்கங்கள் ஐந்துவகைப்படும்.

1. பிக்ஷுக்களாம் சமணமுனிவர்கள் உபாசகர்களாம் அடியார்களுக்கு பாபகன்மமீதென்றும், புண்ணியகன்மமீதென்றும், பாபகன்ம துற்பலன் ஈதென்றும், புண்ணியகன்ம நற்பலன் ஈதென்றும் விளக்கிபோதித்துவரல் வேண்டும்

2. உபாசகர்களாம் அடியார்களை பாபிகள் கூட்டத்திற் சேரவிடாமலும், பொய்யர்கள் கூட்டத்தில் அணுகவிடாமலும் போதித்து நீதிநெறியமைந்த அன்பர்கள் பால் நெருங்கி இன்னும் அன்பைப் பெருக்கி வாழ்வடையும்படி போதித்தல் வேண்டும்.

3. உபாசகர்களாம் அடியார்கள் மறந்தும் துற்கருமத்தை நாடாது நற்கருமத்திலேயே நிலைக்கச்செய்யல் வேண்டும்.

4. உபாசகர்களாம் அடியார்கள் முன்பு கேட்டிராத தன்மங்கள் யாவையும் ஊட்டி இதயத்திற் சேர்ந்துள்ள களங்கங்களென்னும் அழுக்குகளாம்

காமவெகுளி மயக்கங்களை அகற்றும் போதகஞ்செய்யல் வேண்டும்.

5. உபாசகர்களாம் அடியார்கள் எவ்விதத்தும் இல்லறத் தொல்லைகளற்று துறவற விருப்பமுற்று சகலபற்றுக்களையும் அற்று சுகவாரிபெறும் சுருக்கத்தைப் போதித்துவரல் வேண்டும்.

ஆக இவ்வைந்தும் உபாசகர்களாம் அடியார்களுக்கு பிக்ஷுக்களாம் சமணமுனிவர்கள் போதிக்கும் தன்மபோதங்களாகும்.

சருவசீவதயாபரன் இவ்வரிய உபதேசத்தை முடித்தவுடன் குடும்பியாகிய சிகாளன் பின்வருமாறு கூறலாயினன்.

நடவரசே! தங்களது போதனை மிக்க கெம்பீரமானது. மறைந்திருந்த பொருளை விளக்கிய மாமறையோனே! திகைதப்பி மெலிந்து நிற்போர்க்கு வழிகாட்டிய தேசிகனே! இருட்டறையில் தீபமேற்றி உள்ள பொருளைத் தெள்ளறக் காட்டுவதுபோல் அஞ்ஞானவிருளை அகற்றி மெய்ஞ்ஞானமாம் மெய்ப்பொருளை விளக்கும் மாதவனே! உமதடைக்கலம், உமது தன்மத்தில் அடைக்கலம், உமது சங்கத்தில் அடைக்கலம் என்று கூறி மும்முறை சிரம்வணங்கி எழுந்து சங்கறநிறையோய், இவ்வடியோனையும் உமது சங்கத்திற் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று இறைஞ்சினான்.

அவற்றை வினவிய அவலோகிதர் குடும்பியாகிய சிகாளனை நோக்கி அன்பனே! இன்னுஞ் சிலநாள் நீர் குடும்பத்தினின்று பாசபந்தப்பற்றுக்களின் வாசனைகளையுமகற்றி சங்கத்திற் சேர்ந்துக்கொள்ளுவீராயின் அலையற்ற கடல் போல் சுகவாரி என்னும் நிருவாணத்தைப் பெறுவீரென்று சொல்லிப் போய்விட்டார்.

20. **மத்திம பதிபதா காதை**

பகவான் சாவித்தி நகரம் ஜீதாவனத்தில் தங்கியுள்ளபோது பிக்ஷு குழாங்களுக்கு போதித்த ஸாஸனமாவது :

ஓ! சகோதிரர்களே! பேதை மெயிலிருந்து கன்மங்கள் அல்லது செய்கைகள் உண்டாகின்றன. செய்கைகளிலிருந்து உணர்வு உண்டாகின்றது. உணர்ச்சியி லிருந்து அருவுறு உண்டாகின்றது. அருவுருவிலிருந்து வாயில்கள் உண்டாகின்றது. வாயில்களிலிருந்து ஊறு உண்டாகின்றது. ஊறிலிருந்து நுகர்வு உண்டாகின்றது. நுகர்விலிருந்து வேட்கை உண்டாகின்றது. வேட்கையிலிருந்து பற்று உண்டாகின்றது. பற்றிலிருந்து கருமத்தொகுதி உண்டாகின்றது. கருமத்தொகுதியிலிருந்து பிறப்பு உண்டாகின்றது. பிறப்பிலிருந்து மூப்பும், மரணமும், வலியும், அழுகையும், துன்பமும், கவலையும், ஏக்கமுமாகிய இவைகள் உண்டாகின்றன. துக்கமென்கின்ற சகல ராச்சியத்திற்கும் இதுதான் உற்பத்தி.

***அவிஜ்ஜி பஸ்ச்சா* *ஸங்கார**

*ஸங்கார* " *விஜ்ஞானா

*விஜ்ஞானா* " *நாமரூபா

*நாமரூபா* " *ஸலாயதன

*ஸலாயதனா* " *பஸ்ஸோ

***அவிஜ்ஜி*** ***பஸ்ச்சா*** ***ஸங்கார**

*பஸ்ஸோ* " *வேதனா

*வேதனா* " *தன்ஹா

*தன்ஹா* " *உபாதானா

*உபாதானா* " *பவோ

*பவோ* " *ஜாட்தி

*ஜாட்தி* " *ஜெயா மரணா;

ஸோகா, பரிதேவா; துக்கா, தோம்னாஸா; உபாயஸா, சாம்பாந்தே.

ஓ! சகோதிரர்களே! அவித்தை பேதைமெயை முற்றுந்துறப்பதால் செய்கைகள் போக்கப்படுகின்றது. செய்கைகளைப் போக்குவதனால் உணர்ச்சி போக்கப்படுகின்றன. உணர்ச்சியைப் போக்குவதனால் அருவுரு போக்கப்படுகின்றன. அருவுருவைப் போக்குவதனால் வாயில் போக்கப் படுகின்றன. வாயில் போக்கப்படுவதனால் ஸ்பரிஸம் போக்கப்படுகின்றது. ஸ்பரிஸத்தைப் போக்குவதனால்

நுகர்ச்சி போக்கப்படுகின்றது. நுகர்ச்சியைப் போக்குவதனால் வேட்கை போக்கப்படுகின்றது. வேட்கையைப் போக்குவதனால் பற்று போக்கப்படுகின்றது. பற்றைப் போக்குவதனால் கருமத்தொகுதி போக்கப்படுகின்றது. கருமத் தொகுதியை போக்குவதனால் தோற்றம் போக்கப்படுகின்றது. தோற்றத்தை போக்குவதனால் பிறப்பு போக்கப்படுகின்றது. பிறப்பைப் போக்குவதனால் மூப்பும், மரணமும், வலியும் அழுகையும், துன்பமும், கவலையும், ஏக்கமும் போக்கப்படுகின்றன. துக்கமென்கிற இராச்சியத்திற் கெல்லாம் இதுதான் நிவர்த்தி.

***அவிஜ்ஜ* *நிரோதா* *ஸங்கார**

*ஸங்கார* " *விஜ்ஞானா

*விஜ்ஞானா* " *நாமரூபா

*நாமரூபா* " *ஸலாயதனா

*ஸலாயதனா* " *பஸ்ஸோ

*பஸ்ஸோ* " *வேதனா

*வேதனா* " *தன்ஹா

***அவிஜ்ஜ நிரோதா* *ஸங்கார**

*தன்ஹா* " *உபாதானா

*உபாதானா* " *பவோ

*பவோ* " *ஜாட்தி

*ஜாட்தி* " *ஜெயா மரணா;

*ஸோகா, பரிதேவா;* *துக்கா, தோம்னாஸா ; உபாயஸா , சாம்பாந்தே.

ஓ! சகோதிரர்களே! பேதைமெய், செய்கை, உணர்ச்சி, அருவுரு, வாயில், ஊறு, நுகர்ச்சி,வேட்கை, பற்று, கருமத்தொகுதி, தோற்றம், பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு முதலிய வினைப்பயன் என்று சொல்லப்படுகிற இப்பன்னிரண்டு நிதானங்களுக்குள் ஒரு நிதானத்திற்கும், மற்றொரு நிதானத்திற்கும் உள்ள காரண காரிய பாகுபாடுகளை அறிந்துக்கொண்டால் இரண்டாம் மூன்றாம் தூய்மெயான சாத்தியங்களாகிய துக்கோற்பத்தி, துக்க நிவாரணங்களைப்பற்றி யாவும் தெரியவரும்.

ஓ! சகோதிரர்களே! ஜீவர்கள் யாவரும் பஞ்சஸ்கந்தங்களின் சேர்க்கையால் உண்டாகி வருகின்றனர். இந்தஸ்கந்தங்களாகிய ரூபம், வேதனை, ஸஞ்ஞா, ஸங்காரா, விஜ்ஞானம், (உருவு, நுகர்ச்சி, குறி, பாவனை, அறிவு) யாவும் நிலையில்லாதவை.

ரூபமானது நுரையைப் போல் தோன்றி மறையும். வேதனை நீர்க்குமிழியைப் போன்றது. ஸஞ்ஞா கானலை ஒத்தது. ஸங்காரா வாழைப்போல் வெட்ட வெட்ட தோன்றியும் நிலையில்லாதது. விஞ்ஞானமோ ஜாலத் தோற்றம் போன்றது.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் மரணமடையும் போது அவனைச் சேர்ந்த பஞ்சஸ்கந்தங்களும் அவைகளது பழைய சேர்க்கையினின்று பிரிக்கப்படுகின்றன.

ஸ்கந்தங்கள் இவ்விதமாக பிரிக்கப்பட்டிருக்கும் ஸ்திதியிலே அவன் வாழ்ந்திருந்தகாலத்தில் செய்துவந்த (குஸலா அகுஸலா) நற்கருமம் துற்கருமங்களாகிய கருமங்கள் யாவும் விஜ்ஞானஸ்கந்தத்தில் விதைபோல் கட்டுப்பட்டிருந்து அந்த விஜ்ஞானஸ்கந்தத்தை தமக்குத் தகுந்த பிறப்பில் ஏனைய நான்குவித ஸ்கந்தங்களோடு சேர்ந்து மறுபிறப்பை உண்டு செய்கின்றன. இவ்வகைத்தான கரு சேர்க்கையே மறுபிறப்பின் மூலம் ஒரு தீபத்திலிருந்து பல தீபங்கள் எவ்விதமாய் ஏற்றப்படுமோ அவ்வாறே ஒரு பிறப்பிலிருந்து பல பிறப்புக்கள் ஏற்படும். ஆகையால் சகோதிரர்களே! இப்பிறப்பினின்று தப்பி நிப்பாணம் அடைவதற்கு வழி மத்திய பாதையாம். அஃதே அரிய அஷ்டாங்கமார்க்கம். அதாவது சம்யக்திருஷ்டி, சம்யக் ஸங்கல்ப, சம்யக் வசன, சம்யக்கர்மந்தா, சம்யக் அஜீவா, சம்யக் வாயமோ சம்யக் ஸ்மிருதி, சம்யக் சமாதி (இதுதான் நற்காட்சி, நல் அமைதி ) என்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! இவ்வரிய அஷ்டாங்க மார்க்கத்தின்படி ஒழுகிவரும் சகோதிரர்கள் செய்யவேண்டிய யோகங்கள் 40 வகைப்படும்.

அதாவது :- 40 - வித சமதாபாவனா :

கசீனா 10, அசுப 10, அநூஸதி 10,பிம்மாவிஹாரா 4, அறப 4, ஆஹேயேபடீகுலாசஞ்ஞா 1, ஸநூதாது வாவே டானங் 1, மொத்தம் = 40

கசீனா - 10 : பதவீ கசீனா, அப்போ கசீனா, தேஜோ கசீனா, வாயோ கசீனா, நீலா கசீனா, பீதா கசீனா, லோஹிதா கசீனா, ஓடத் கசீனா, ஆலோகா கசீனா, ஆகாசா கசீனா.

அசுபா - 10 : உதுமாதகங், விய்நிலாகங் உப்யோகங், விசித்தகங், வியகாய்தகங், வெக்கிடகங், ஹடாவிஹிதகங், மோஹிதகங், புழுவகங், அட்திகங்.

அனுூஸடி : புத்தா நூஸடி, தம்மா நூஸடி, ஸங்கா நூஸடி, சீலா நூஸ்டி சாகங் நூடி , தேவதா நூஸடி, உபாஸமா நூடி , மரணா அநூஸ்டி காய்காத நூஸடி, அனபானா நூஸ்டி.

பிம்மவிஹாரா - 4. : மித்தா, கருணா, முதிதா, உபேக்கா.

அறபா - 4. : அகாஸசஞ்சாயதனா , விஞ்ஞானாஸன்யாயதனங், ஆகேஸஞ்ஞாயதனங், நீவசஞ்ஞாயதனங்.

ஆஹேயேட்டீலோசஞ்ஞா - 1. ஸதூதாதுவாவேடானங் - 1.

கசினா - 10 : பதவி கசீனா. அப்பு கசீனா, தேய்வு கசீனா, வாயு கசீனா, கருநீல நிற கசீனா, மஞ்சள் நிற கசீனா, செந்நிற கசீனா, வெண்ணிற கசீனா, வெளி கசீனா, ஆகாச கசீனா.

அசுபா - 10 : ஊதலிட்ட பிணம், நீலவர்ணமான பிணம், அழுகின பிணம், சின்னாபின்னப்பட்ட பிணம், கொந்தினதும் கடிக்கப்பட்டதுமான பிணம், சிதறி கிடக்கும் பிணம், அடிக்கப்பட்டு சிதறிகிடக்கும் பிணம், இரத்தம் சிந்திக்கொண்டிருக்கும் பிணம், புழுக்கள் நிறைந்திருக்கும் பிணம், எலும்புக்கூடு பிணம் ஆகிய இவைகள் 10-வித அசுபங்கள்.

அநூஸ்டி - 10 : பகவனைப்பற்றி, தன்மத்தைப்பற்றி, சங்கத்தைப்பற்றி, சீலங்களைப்பற்றி, நிஷ்பக்ஷபாதத்தைப்பற்றி, தெய்வ நிலையைப்பற்றி, மரணத்தைப்பற்றி, தேகத்தைப்பற்றி, மூச்சை உள்ளுக்கிழுப்பதும் வெளிக்கு விடுவதைப் பற்றி, சாந்தத்தைப்பற்றி தியானித்தலே 10 - வகை அநூஸடிகள்.

பிம்மாவிஹாரா - 4 : அன்பு, சிநேகம், ஆனந்தம், விருப்பு வெறுப்பின் மெ, இவைகள் நான்கும் பிம்மாவிகாரமென்னப்படும்.

அறப- 4 : அளவற்ற ஆகாஸ ராஜ்யம், அளவற்ற சித்த ராஜ்யம், நேசமற்ற ராஜ்யம், திருஷ்டியும் திருஷ்டியற்ற ராஜ்யம்.

ஆகாரம் நல்லவை கெட்டவையென நினையாத தியானம் - 1.

பூதங்களைப்பற்றிய தியானம் - 1.

ஓ! சகோதிரர்களே! பதவி கசீனா அல்லது பிருதிவியின் தொடர்பைப்பற்றி தியானித்தல் எப்படி என்பீரேல் :- சகோதிரன் ஒருவன் உலகப் பொருட்களின் பேரில் அவாக்கொண்டு அந்த அவாவை விலக்கச இருப்பானாகில் இந்த பதவி கசீனங்களைப்பற்றி தியானித்தல் வேண்டும். எப்படியெனில் - ஒரு சகோதிரன் ஒருவசதியானவிடத்திற்குச் சென்று அங்கு தங்கி களி மண் சிறிது கொணர்ந்து அதிலுள்ள கற்களையும் புற்களையும் எடுத்துவிட்டு அக்களிமண்ணால் ஒரு வட்ட வடிவமான பீடம் செய்து அதன்பின்னர் தனது தேகத்தை சுத்தஞ்செய்தவனாய் அப்பீடத்தினெதிரில் மனவொடுக்கத்துடன் உட்கார்ந்து அப்பீடத்தை உற்றுநோக்கி இது பிருதிவி கசீனா, இது (பதவி கசீனா, இது பதவி கசீனா) என ஆழ்ந்து தியானித்து சற்று பின் கண்ணை மூடிக்கொண்டு (இது பதவி கசீனா) என தியானித்து அதன்பின் ஏனையப் பொருட்களையும் பார்த்து (இது பெருத்த பிருதிவி, இது பெருத்த பிருதிவி) என ஒருமனப்பட்டுவிடுகின்றான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தியான நடையில் வர ஆரம்பிக்கும் போதே ஒரு பாதரட்சையும், ஒரு ஊன்றுகோலை உடைய வனாயிருக்க வேண்டும்.

ஏனெனில் தியானத்திலிருந்து ஏதோ புறப்பொருள் காட்சியில் சற்று நீங்குவானாயின் திரும்ப கால் சுத்தஞ்செய்துக்கொண்டு மறுபடியும் தியானஞ்செய்ய வருவானாகில் மத்தியில் காலங்கழிந்துவிடும். சகோதிரன் ஒருவன் பாதரட்சை ஏறி சற்று

சோர்வடைவானாகில் ஊன்றிக்கொண்டு முன்செய்த தியானத்தை செய்ய ஆரம்பிப்பான். சகோதிரன் ஒருவன் வசதியானவிடத்தில் மனம் கட்டுப்பட்ட போதிலும் தன் இல்லத்திற்கு வந்து அதே தியானத்தை செய்யவேண்டும். அவ்வகை வராவிடின் மற்றொருதரம் அதே வசதியான இடத்திற்குச் சென்று அக்களிமண் வட்டத்தைப்பார்த்து பதவி கசீனாவென் உறுதியாக்கியபின் தன் இல்லத்திற்கு வரல் வேண்டும். இவ்விதமாக விடாமுயற்சியாய் யோகஞ்செய்பவனுக்கு உலகப்பொருட்களின் பேரில் அவா உதிக்கா. அவா எங்கு உதிக்கவில்லையோ அப்போதே அவன் முதல் தியானமாம் பதவிஞானமடைந்து அங்கு அவனுக்கு ஆனந்தமும், சந்தோஷமும் தோன்றும்.

ஓ! சகோதிரர்களே! மேற்கூறியபடி எந்தெந்த பொருட்களின் பேரில் அவா உதிக்கின்றதோ அந்தந்த பாகத்திற்குத் தகுந்த தியானம் செய்து அந்தந்த அவாக்களை அறுத்தல் வேண்டும். பிருதிவியின் பேரில் எப்படி தியானித்தோமோ அதேபோல் ஜலம், வாயு, அக்கினி, வர்ணங்கள் இவைகளின் பேரிலும் அந்தந்த சந்தர்ப்பங்களில் தியானித்து அந்தந்த பற்றுக்களை அறச்செய்யவேண்டும்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் சக்கு விஞ்ஞானா அல்லது கண் சித்தத்தால் ரூபங்களைப் பார்க்கின்றான். ரூபத்தைப்பார்க்க செய்கிற கருவிக்கு கண் என்று பெயர். விஷயமானது ஞானேந்திரியத்துடன் சேர்ந்து கண் சித்தத்தால் மனத்துடன் பார்க்கின்றான். சகோதிரன் ஒருவன் ஒரு தேகத்தைக் கண்டு அவா எழும்புங்கால் அவ்வவாவை எழவிடாது செய்ய வேண்டிய யோகங்கள் 10 வகைப்படும். அவையே 10 அசுப பாவனாக்கள்

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் காமத்தை அதிகரிக்கச் செய்யும் தேகத்தில் குறிகளையேனும் , காமத்தை எழுப்பும் அழகையேனும் ஒரு தேகத்தின் கைகளின் அழகையேனும், காலின் அழகையேனும் கண்டும் மற்றும் நடித்தல், நகைத்தல், சம்பாஷித்தல் இவைகளாலும் உதிக்கும் அவாவினின்று விலகி ஓ இந்த தேகமானது விழுந்தவுடன் பிணமாக அப்பிணத்தை எப்படி அறுவறுக்கின்றோமோ அதுபோல் தேகம் உயிருடனிருக்கும் போதும் அறுவறுக்கத்தக்க தேகத்தை உடைகளால் அலங்கரித்து வாசனைகளை சேர்த்து வருவதால் அறுவறுப்புத்தோன்றவில்லை. உண்மெயில்

இத்தேகமானது முந்நூறுக்கு மேற்பட்ட எலும்புக்குவியலை உடைத்தாயதும், நூற்றெண்பது கீல்களால் சேர்க்கப்பட்ட கட்டிடமாகவும், நரம்புகளால் கட்டுண்டு தசைகளால் உள் மூடப்பட்டும், பல துவாரங்களையுடைய ஈரத்தோலால் மேல் மூடப்பட்டும், அத்துவாரங்களினின்று இடைவிடாது ஊற்றுபோல் கசிந்து ஒழுகிக்கொண்டிருக்கின்றன. இத்தேகமோ பூச்சுகளுக்கு ஆகாரமும், பிணிக்குப் பீடமும், சகல வித துக்கங்களுக்கு காரணமுமாயிருக்கின்றது. இத்தேகமானது நவத்துவாரங்களை உடைத்தாய் பழுத்த கட்டியினின்று அழுக்குகளை தள்ளப்படுவதுபோல் அழுக்குகளை துவாரங்கள் மூலமாய் வெளிக்குத் தள்ளிக்கொண்டே இருக்கின்றது. இத்தேகத்தின் தசையின் துவாரங்களிலிருந்து வியர்வை பெருக ஈக்களையும், கிருமிகளையும் அண்டச்செய்கின்றது. இத்தேகத்தை தினகாலம் சுத்தஞ்செய்யாமலும், பற்களை சுத்தஞ்செய்யாமலும் இருப்பானாயின் தேகத்தின் கதி என்ன. இத்தேகத்தையும், பற்களையும் சுத்திசெய்து உடுப்புகளாலும், வாசனைகளாலும், பூக்களாலும், அலங்கரிக்கப்பட்டபோது “நான்” "என்னுடைய’ என பெருமெய் பாராட்டுகிறோம். மெய்யாகவே ஜீவர்கள் இவ்வறுவறுக்கத்தக்க தேகத்தினது உள் அந்தரங்க அசுத்தங்களைக் காணாமலே பெறுமெய்கொண்டாடி பருஷர்கள் ஸ்திரீகளையும், ஸ்திரீகள் புருஷர்களையும் இச்சிப்பவர்களாக இருக்கின்றனர். உண்மெயில் அவ்வகையால் அவாக்கொள்ள சற்றேனும் எது கிடையா இதற்கு உதாரணமாக தேகத்தினின்று உரோமங்களையேனும், நதங்களையேனும் வெட்டி எடுத்துவிட்டபின் அந்தரோமங்களின் பேரிலேனும் நதங்களின் பேரிலேனும் இச்சைவைக்க முடியுமா? தேகத்தில் சம்பந்தப்பட்டிருந்தபோது அவைகளை பாதுகாத்தலும், நீங்கியபோது அறுவறுப்பதும், தேகத்தினின்று வெளியான நிணம், சளி, சீழ், இரத்தம், மலம், மூத்திரம் இவைகளைப் பார்க்க சகிக்கமுடியுமோ? முடியாது. என தேகவிஷயத்தில் ஜாக்கிரதையுடனிருந்து தியானித்துவருவான். இதேபிரகாரம் மயானத்திற்குச் சென்று அங்கு கிடைக்கும் 10 - வித அசுபங்களைக்கண்டு தேகத்தை வெறுத்து வருவான். இவ்வகையாக வெறுத்து வெறுத்து தேகத்தின்பேரில் உண்டான அவாக்களை அறுத்தறுத்து எறிந்து வருவான். இவைகள் யாவும் ஒரு சகோதிரன் 10-வித அசுய யோகத்தால் பலனடைந்தபின் அநூஸடி யோகங்களில் பழகிவருவான்.

தம்மா நூஸடி : துக்கம், துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்கநிவாரணமார்க்கமாம் நான்குவித வாய்மெகளையும்; நற்காட்சி, நல்லூக்கம், நல் வாய்மெய் நற்செய்கை, நல்வாழ்க்கை, நன் முயற்சி, நற்கடை பிடி நல் அமைதியாம் அரிய அஷ்டாங்கமார்க்கத்தைப்பற்றியும், ஆழ்ந்து தியானிப்பதே தம்மா நூஸடியோகமென்னப்படும்.

சீலா நூஸடி : அதாவது : சீலங்களைப்பற்றி பஞ்சசீலம். கொலை, களவு, பொய், கள், காமம், அஷ்டசீலம். கொலை, களவு, பொய், கள், காமம், அகால போஜனம் இனியவாசனை, கூத்து, மலர், அலங்காரம், மேளம், பாட்டு, வேடிக்கை, வாசனைத் தைலம் இவைகளை தவிர்த்தல்

தசசீலம் : கொலை, களவு, பொய், கள், காமம், அகாலபோஜனம், இனியவாசனை, கூத்து, மலர், அலங்காரம், மேளம், பாட்டு, வேடிக்கை வாசனைத் தைலம் இவைகளைத் தவிர்த்தல், உயரமானதும், சுகத்தைத்தரும் மெத்தையும் மிக்க எளிய நிலைமையிலிருத்தல் இவைகளைப்பற்றி தியானித்தலே சீலா நூஸடி யோகமென்னப்படும்.

சங்காநூஸடி : அதாவது அறவணவடிகளையும், அவர்கள் சமணர்களாய் உள்ளபோது அநுஷ்டித்துவந்த 96 சீலங்களையும், பிக்ஷுநிலை வாய்த்த போது அநுஷ்டித்துவந்த 277-சீலங்களையும் அவர்கள் போதிஸத்வர்களாய் உள்ளபோது அநுஷ்டித்துவந்த தஸபாரம் இவைகளைப்பற்றி தியானித்தலே சங்கா நூடி யோகமென்னப்படும்.
சாக அநூஸடி - அதாவது தானத்தைப் பற்றி தியானித்தல்
தேவா நூஸடி - தெய்வ நிலையைப்பற்றி தியானித்தல்
மரணாநூஸடி - மரணத்தைப்பற்றி தியானித்தல்
காயகதா நூஸடி - தேகத்தைப்பற்றி தியானித்தல்

அதாவது:- நகம், ரோமம், தந்தம், இவைகளைப்பற்றி நிதானித்தலே தேகதா நூஸடி யோகமென்னப்படும்.

அன்பனா நூஸடி - மூச்சுகளைப்பற்றி தியானித்தல்.
உபாஸமா நூஸடி - சாந்தத்தைப் பற்றி தியானித்தல்

பிம்மாவிஹார :

(மித்தா) அல்லது மைத்திரீபாவனை. ஒரு சகோதிரன் இத்தியானத்தில் பரிசுத்தமானபிறப்பினை உடைய ஜீவர்கள் யாவும் ஆனந்தத்துடன் வாழ்வனவாகுக. அவை யாவும் துக்கம், வியாதி, துராசை என்னும் இவை களினின்று விடுபட்டனவாகுக என்று தியானித்தல்.

(கருணா) அல்லது கருணை பாவனை. எளியவர்கள் ஆதுல நிலை நீங்கி செல்வமுடையவர்களாய் ஆகுகவென்று தியானித்தல்.

(முதிதா பாவனை) ஜீவர்களுடைய நல்ல அதிர்ஷ்டமானது எப்போதும் நீங்காதிருத்தல் வேண்டும் என்றும், ஒவ்வொருவரும் தாங்கள் அடைந்துள்ள நல்வினைப்பயனை அடைகவென்று தியானித்தல்,

(உபேகைஷ பாவனை) சகல உயிர்களையும் சமமாக பாவித்து விருப்பு வெறுப்பின்றி இருந்து தியானித்தல் இன்னான்கு பாவனைகளும் சித்தியான ஒரு துறவியை மஹாபிரம்மா என்றழைப்பர்.

(ஆகாரம் நல்லவை கெட்டவை என நினையாத தியானம்) பூதங்களைப் பற்றிய தியானம் இவைகள் சித்தியானபின் அளவற்ற ஆகாஸராஜ்யம், அளவற்ற சித்த ராஜ்யம், நேசமற்ற ராஜ்யம், திருஷ்டியும் திருஷ்டியுமற்ற ராஜ்யம் அதாவது ஒரு சகோதிரன் லோப, தோஸ, மோஹங்களிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டு மனத்தோடும், ஆராய்ச்சியோடுங் கூடியிருக்கும் போது சந்தோஷமயமும், ஆனந்தமயமுமானஸ்திதி.

(துதியா தியானம்) மனனமும், ஆராய்ச்சியுமில்லாமல் அவைகள் தடுக்கப்பட்டிருக்கும் போது சாந்தியிலிருந்து உற்பத்தியாகும் ஸந்தோஷமும்,

ஆனந்த மயமுமான ஸ்திதி.

(ததியாதியானம்) காம வெகுளியற்று சந்தோஷத்தை அடைந்து ஆனந்தமுடையவனாகியும், ஞானமுடையவனாகி அறஹத்துக்கள் அடைவதும், பொறுமெய், அறிவு சந்தோஷங்களோடு கூடியதுமான சுகத்தை தன்னுள் அடைதல்,

(சுருடாதியானம்) முன்பிருந்த சுகதுக்கங்களை அடியோடு விட்டொழித்து சுகதுக்க நாசங்களைப்பெற்று சுகமுமில்லாமலும், துக்கமுமில்லாமலும் இருக்கிற ஸமதிருஷ்டியையும், அறிவையுமுடைய பரிபூரணமான ஸ்திதி.

இப்படி படிப்படியாக தியானிக்கும் ஒரு சகோதிரன் ஸமாதியாகிய யோக சித்தியைப் பெறுவானென பகவன் கூறவும் பிகுழாங்கள் ஆனந்தப் பரவசமாய் சற்று போதிருந்து பகவனைப் பன்முறைப் பணிந்து தந்தையே, கருணைக்கடலே, காம்பீரம்பெற்ற ததாகதரே என கூறி ஆனந்தங்கொண்டு இறையும்போது இராஜகிரகத்திலுள்ள சகோதிரர்களுக்குள் பரமார்த்தங்களைப் பற்றி சந்தேகம் தோன்றி உளதென அறிந்த பகவன் பிக்ஷுகுழாங்களுடன் புறப்பட்டு இராஜகிரகம் வந்து சேர்ந்தார். சேர்ந்த அந்தக்ஷணமே பிக்ஷக்கள் சந்தேகங்களை வினவ பின்வறுமாறு போதிக்கத்தொடங்கினார்.

**21 .சதுர் பரமார்த்த காதை**

நான்கு வித பரமார்த்தம்

1. சித்தம் - மனம் 2. சேதசிகம் - மனத்தின் சக்தி 3. ரூபம் - உருவம் 4. நிப்பானம் - நிருவாணம்

ஓ! சகோதிரர்களே! 1. சித்தம் 89 வகைப்படும். 2. சேதசிகம் 52 வகைப்படும் 3. ரூபம் 4 வகைப்படும் 4. நிப்பானம் வகைப்படும்.

**சேதசிகம் - 52**

1. அன்னஸமானா 13
2. அகுஸலா 14
3. ஸோபனா 25
4. அன்ன ஸமானா - 13:

பஸ்ஸா, விதகா, வேதனா, விசாரா, ஸஞ்ஞா, அதிமோக்கா, சேதனா, வீரியா, ஏககதா , பீதி, ஜீவதா, சந்தா, மனஸிகரா,

(2.) அகுஸலா - 14 :

மோஹா, தோஸா, அஹிரிகா, இஸ, அநொத்தப்பா, மாச்சரியா, உத்தச்ச, குக்குச்சா, லோபா, தீனா, தித்தி, மித்தா, மானா, விஸிகிச்சா,

(3.) ஸோபனா - 25:

1. ஸோபன சதந்ண சேதசிகம் 19 2. விரதி சேதசிகம் 3
2. அபமான சேதசிகம் 2 4. பிரஞ்ஞா சேதசிகம் 1

மனத்தின் சக்தி 52 வகைப்படும். (1.) நன்மெ அல்லது தீமெயான மனத்தின் சக்தி 13 வகை (2.) தின்மெயான மனத்தின் சக்தி 14 வகை (3) நன்மெயான மனத்தின் சக்தி 25 வகை

சேதசிகம் - மனத்தின் சக்தி 52.

(1.) அன்னா - சமானா 13 : பஸ்ஸா - ஸ்பரிஸம் நற்பரிசம், துற்பரிசம் வேதனா - ஸ்பரிஸம் நல்உணர்ச்சி, துன்னுணர்ச்சி ஸஞ்ஞ - எண்ணம் நல் எண்ணம், துன் எண்ணம் சேதனா - தூண்டல்,

ஏககதா - அசையா மனம், ஜீவதா - விருத்தியாகும் மனம்,

மனசீகரா - சிந்தனை, விதகா - ஆரமணம்

விஸாரா - மெதுவான, அதிமோக்கா - உறுதி

வீரியா - பலம், பீதி - பிரீதி, சந்தா - ஆசை

ஆக இவ்வொவ்வொன்றும் குஸலம் அதாவது நன்மெயுடன் சேர்ந்தால் நல் பரிசம் என்றும், தின்மெயுடன் சேர்ந்தால் கெட்ட பரிஸம் என்றும் கூறப்படும். தனியாக கஸ்ஸா பரிஸம் பொதுவானதே. ஆனால் நன்மெய் சேர்ந்தவிடத்து நல்லவையாகவும், தின்மெய் சேர்ந்தவிடத்து கெட்டதுமாக மாறுகிறது.

2. அகுஸலா 14. தின்மெயான மனத்தின் சக்தி

மோஹா - மோஹம், தோஸா - கோபம்;

அஹிரிகா - அசுத்தத்தை இச்சித்தல்; இஸா - பொறாமெய்,

அநொத்தப்பா - வெட்கமின்மெய், மாச்சரியா - பற்கடிப்பு;

உத்தச்ச - கலைந்த மனம் ; குச்குச்சா - ஆவல்;

லோபா - துராசை; தீனா - சோம்பல்;

தித்தி - மந்த புத்தி; மித்தா - அன்பின் மெய்)

மானா - கர்வம்; விசிகிச்சா - சந்தேகம்;

இவைகள் யாவும் தின்மெயான மனத்தின் சக்தி என்னப்படும்

3. ஸோபனா 25 நன்மெயான மனத்தின் சக்தி

1.ஸோபனா சாதாரண சேதசிகம் 19

ஸட்தா - சுத்தமான சக்தி;

சட்தி - மோஹத்தின் விரோதமான சக்தி;

ஹிரி - துற்கிருத்தியத்தைச் செய்ய வெட்கப்படும் சக்தி;

உத்தபா - துற்கிருத்தியத்தைச் செய்யப்படாது தடுக்கும் சக்தி,

அலோபா - துராசையற்ற சக்தி;

அதோஸா - கோபமற்ற சக்தி;

உபேக்கா - உபேட்சை சக்தி;

கயாபஸாதி - சுத்தமான காய சக்தி;

சித்தாபஸாதி - சுத்தமான சித்த சக்தி

காயாமுதிதா - மிருதுவான காய சக்தி;

சித்தாமுதிதா - மிருதுவான சித்த சக்தி)

காயகம்மிஞ்ஞுதா - காய கன்ம சக்தி,

சித்தா கம்மிஞ்ஞுதா - சித்த கன்ம சக்தி;

காயாபகுஞ்ஞுதா - சோர்வடையா காய சக்தி;

சித்த பகுஞ்ஞுதா - சோர்வடையா சித்த சக்தி;

காயாஸோட்கதா - ஸ்திரமான காய சக்தி,

சித்தஸோட்கதா - ஸ்திரமான சித்த சக்தி;

2. வீரதி சேதசிகம்

சம்மாவாஸா - நல்வசனம், சம்மாகம்மந்தா - நற்செய்கை, சம்மா அஜீவா நல்வாழ்க்கை

3. அபமான சேதசிகம் 2,

கருணா - கருணை சக்தி,

முதிதா - ஆனந்த சக்தி

4. பிரஞ்ஞா சேதசிகம் 1.

விவேக சக்தி.

இவைகள் யாவும் அரூப லோகத்தைச் சார்ந்தவை. இனி ரூபலோகத்தைப் பற்றி விளக்குவாம்.

2. **ரூபம் 2- வகை**

பூதரூபம் - 4 உபதய ரூபம் - 24

பூதரூபம் - 4 :

1. படவிதாது - பிருதுவியின் லட்சணம், 2. தேஜோ தாது - தேயுவின் லட்சணம் 3. அபோதாது - அப்புவின் லட்சணம் 4. வாயோ தாது - வாயுவின் லட்சணம்

உபதய ரூபம் - சுபஸம்பவமானவை

5 - வித ஸபதி.

5-9 சக்கு - கண், ஜீவா - நாவு,

சோடா - செவி, காயா - தேகம்,

கானா - மூக்கு..

4 - வித கோஸாம்.

10-13 ரூபா - ரூபம், கந்தா - வாசனை,

சட்தா - சத்தம்; ரஸா - ரஸம்

உணர்ச்சியை இங்கு சேர்க்கப்படவில்லை. அது பதவி, தேய்வு, வாய்வுடன் சேர்ந்தது.

2 - வித குறி

14 - 15 இந்தி - பெண், புரிஸா - ஆண்

16,17,18 ஹிதயவாது இருதயம், ஜீவிதா - ஜீவன், ஆஹாரா - உணவு.

மேற்கூறிய 18-ம் சேர்ந்தவைக்கு (நிப்பன்ன ரூப) மென்னப்படும். இவை ஒருவன் கன்மத்தால் உண்டாக்கிக் கொண்டவை.

19 ஆகாசர் - ஆகாசம்

20 காயா விஞ்ஞாதி - சைகை

21 வசி விஞ்ஞாதி - பேச்சு

22 ரூபஸ்ஸ -லஹுதா - மிதக்குஞ் செயல்

23 ரூபஸ்ஸ முதிதா - நெகிழ்ச்சி

24 ரூபஸ்ஸ - கம்மன்யதா - வளையத்தக்க செயல்

25 உபாஸயா - நிப்பன்ன ரூபத்தை அதிகரிக்கச்செய்யும் சக்தி அல்லது கர்ப்ப உற்பத்திக்குக்கூடப் போகிற சத்து.

26 சந்ததி - பிறக்கும் போது உதிக்கும் சத்து

27 ஜரதா - மூப்புக்குக் கொண்டுவந்து தளரச்செய்யும் சத்து

28 அநிஸ்ஸதா - இறப்பைத்தரும் சத்து

இவை பத்தும் அனிப்பன்னா வென்னப்படும்.

**4. நிப்பானம் 5**

1. அபநீதா நிப்பானம், 2. அநுமெத்தா நிப்பானம், 3. சுஞ்ஞுதா நிப்பானம் 4. சவுபாதிசேசா நிப்பானம் 5. அநுபாதிசேசா நிப்பானம்

2. யாவும் துக்கம், துக்கம் என சாதித்து அதனால் அடைவதே அபநீதா நிப்பானம்.

3. யாவும் அநித்யம், அநித்யம் என சாதித்து அதனால் அடைவதே அநுமெத்தா நிப்பானம்.

4. யாவும் அநாத்மா, அநாத்மாவென சாதித்து அதனால் அடைவதே சுஞ்ஞுதா நிப்பானம்.

5. சகல பற்றுக்களையும் அறுத்துவிட்டு பஞ்சஸ்கந்தங்களராதிருப்பதே சவுபாதி சேச நிப்பானம்

5.பஞ்சஸ்கந்தங்களும் அற்று அதாவது இனி ஸ்கந்தங்களுடன் சேர்ந்து பிறவாதிருப்பதே அநுபாதி சேசா நிப்பானமென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! கந்தங்கள் இருவகைப்படும்.

1. ரூபகந்தா 2. நாமகந்தா

2. ரூபம் உருவத்தைச் சேர்ந்தவை யாவிற்கும் ரூபகந்தமென்றும்,

3. வேதனா கந்தா, சங்காரா கந்தா,

சஞ்ஞா கந்தா, விஞ்ஞான கந்தா

இவை நான்கும் சேர்ந்து நாமகந்த மென்னப்படும்.

இப்பஞ்சஸ்கந்தங்களின் சேர்க்கையே ஜீவன் மரணமடையுங்கால் இவ்வைந்தும் அழிந்து ஒருவனது கன்மமானது புதிய கந்தங்களுடன் சேர்ந்து பிறக்கின்றான். ஆகையால் கன்மத்தை ஒழித்தாலன்றி மறுபிறப்பை ஒழிக்கமுடியாது என்னும் உண்மெய்ப்பொருளை அவர்களுக்கு நன்கு தெளிவுர போதித்தார். அவைகளை செவிகுளிரக்கேட்ட அவர்கள் மனக்களிம்பு நீக்கிய பின்னரும் அவர்களுக்கு கன்மத்தைப்பற்றி சில சந்தேகங்களிருக்கத் தெரிந்து பகவன் கன்மத்தைப்பற்றி போதிக்க ஆரம்பித்தார்.

22. **கன்ம காதை**

ஓ சகோதிரர்களே! கன்மங்கள் மூன்று விதமாக செய்யப்படுகின்றன.

1.லோயம் அல்லது பேராசையால் செய்யப்படும் கன்மங்கள் 2. பகையால் செய்யப்படும் கன்மங்கள் 3. செறுக்கால் செய்யப்படும் கன்மங்கள்

ஓ! சகோதிரர்களே! ஒருவன் பேராசையால் செய்யப்படுகின்ற கன்மங்களானது பேராசையிலிருந்து திக்கின்றன. அவைகள் பேராசையால் சம்பவிக்கின்றன. பேராசையால் உண்டு செய்துக் கொள்கின்றன. எங்கெங்கு இவனிருக்கின்றானோ அங்கங்கு அவனது கன்மங்கள் பக்குவப்படுகின்றன. எங்கு பக்குவப்படுகின்றனவோ அங்கு அவைகளின் பலன்களை அனுபவிக்கின்றான்

ஒருவன் பகையால் செய்யப்படுகின்ற கன்மங்களானது பகையிலிருந்து ஐதிக்கின்றன. அவைகள் பகையால் சம்பவிக்கின்றன, பகையால் உண்டு செய்துக்கொள்கின்றன, எங்கெங்கு இவனிருக்கின்றானோ அங்கங்கு அவனது கன்மங்கள் பக்குவப்படுகின்றன. எங்கு பக்குவப்படுகின்றனவோ அங்கு அவைகளின் பலன்களை அநுபவிக்கின்றான்.

ஒருவன் செறுக்கால் செய்யப்படுகின்ற கன்மங்களானது செறுக்கிலிருந்து உதிக்கின்றன, அவைகள் செறுக்கால் சம்பவிக்கின்றன. செறுக்கால் உண்டு செய்துக்கொள்கின்றன, எங்கெங்கு இவனிருக்கின்றானோ அங்கங்கு அவனது கன்மங்கள் பக்குவப்படுகின்றன. எங்கு பக்குவப்படுகின்றனவோ அங்கு அவைகளின் பலன்களை அனுபவிக்கின்றான்.

ஓ! சகோதிரர்களே! ஒரு விதையை காற்று உஷ்ணம் இவைகளால் சேதப்படுத்தாதபடிக்கும், அழிக்காதபடிக்கும் இருக்கும்படியான ஒரு செழிப்பான தோட்டத்தில் விதைத்த பின்னர் சரியான காலத்தில் மழை பெய்தால் எவ்விதமாக வளர்ந்து பலனைத்தருமோ அதுபோல பேராசையால் செய்யப்படுகின்ற கன்மங்களானது பேராசையிலிருந்து உதிக்கின்றன. அவைகள் பேராசையால் சம்பவிக்கின்றன, பேராசையால் உண்டு செய்துக்கொள்கின்றன. எங்கெங்கு இவனிருக்கின்றானோ அங்கங்கு அவன் கன்மங்கள் பக்குவப்பட்டு அங்கங்கு அவைகளின் பலன்களை அனுபவிக்கின்றான்.

பகையால் செய்யப்படுகின்ற கன்மங்களானது பகையால் கன்மங்கள் பக்குவப்பட்டு அங்கு அவைகளின் பலன்களை அனுபவிக்கின்றான். செறுக்கால் செய்யப்படுகின்ற கன்மங்களானது செறுக்கால் கன்மங்கள் பக்குவப்பட்டு அங்கு அவைகளின் பலன்களை அனுபவிக்கின்றான். சகோதிரர்களே! இவ்வகையாக மூன்றுவித கன்மங்கள் செய்யப்படுகின்றன.

இவைகளன்றி வேறு மூன்றுவித கன்மங்கள் செய்யப்படுகின்றன.

1.ஆலோபா அல்லது பேராசையற்று செய்யப்படும் கன்மங்கள் 2. ஆதோசா அல்லது பகையற்று செய்யப்படும் கன்மங்கள். 3. ஆமோஹா அல்லது செறுக்கற்று செய்யப்படும் கன்மங்கள்.

ஓ! சகோதிரர்களே! ஒருவன் பேராசையற்று செய்யப்படுகின்ற கன்மங்களானது பேராசையினின்று உதிக்காதும், பேராசையால் சம்பவிக்காதும், பேராசையே உதிக்கச்

செய்யாது. அதாவது பேராசையே அற்றுவிடுகின்றது. பேராசையற்றபோது கன்மங்கள் அற்றுவிடுகின்றன. அக்கன்மங்கள் பனைமரத்தை வேறோடே பெயர்த்துவிட்டால் எப்படி திரும்ப முளையாதோ அதுபோல் பேராசை முற்றும் அற்றவிடத்து கன்மங்களுடன் தோன்ற ஏது கிடையா.

ஒருவன் பகையற்று செய்யப்படுகின்ற கன்மங்களானது பகையினின்று உதிக்காதும், பகையால் சம்பவிக்காதும், பகையே உதிக்கச் செய்யாது. அதாவது பகையே அற்றுவிடுகின்றது. பகையற்றபோது கன்மங்கள் அற்றுவிடுகின்றன. அக்கன்மங்கள் பனை மரத்தை வேறோடே பெயர்த்துவிட்டால் எப்படி திரும்ப முளையாதோ அதுபோல் பகை முற்றும் அற்றவிடத்து கன்மங்களுடன் தோன்ற ஏதுகிடையா.

ஒருவன் செறுக்கற்று செய்யப்படுகின்ற கன்மங்களானது செறுக்கினின்று உதிக்காதும், செறுக்கால் சம்பவிக்காதும், செறுக்கையே உதிக்கச் செய்யாது. அதாவது செறுக்கே அற்றுவிடுகின்றது. செறுக்கற்றபோது கன்மங்கள் அற்றுவிடுகின்றன. அக்கன்மங்கள் பனைமரத்தை வேறோடே பெயர்த்து விட்டால் எப்படி திரும்ப முளையாதோ அதுபோல் செறுக்கு முற்றும் அற்றவிடத்து கன்மங்களுடன் தோன்ற ஏது கிடையா.

ஓ! சகோதிரர்களே! ஒரு விதையை காற்று, உஷ்ணம் இவைகளால் சேதப்படுத்தாதபடிக்கும், அழிக்காதபடிக்குமிருக்கும்படியான ஒரு செழிமையான தோட்டத்தில் விதைத்தபின்னர் அதை ஒருவன் தீயால் சுட்டு சாம்பலாக்கி அதை காற்றிலும், நதியிலும் எறிந்துவிட்டால் விதை முளைத்து பலனைத் தராதோ அதுபோல் பேராசை, பகை, செறுக்கு இம்மூன்றும் அற்றபோது கன்மங்கள் ஒழிந்து எழுதற்கு இடமில்லாதுபோம்.

ஓ! சகோதிரர்களே! இவ்விதமான மூன்றுவிதகன்மங்களை எழவிடாது ஜாக்கிரதையுடன் ஒரு சகோதிரன் இருப்பானாகில் அவன் மறுபடியும் பிறக்க ஏதுவில்லாமற்போம்.

மனிதன் எதை விதைக்கின்றானோ அதை அறுப்பான். அதாவது எவ்வித கன்மங்கள் செய்கின்றானோ அதன்படி அனுபவிப்பான் என ஒரு சகோதிரன் கூறுவானாயின் அது தன்மத்திற்கு ஒவ்வாததும் துக்கத்தை போக்குவதற்கு ஏதுவில்லாமற்போம். ஆனால் யாவனேனும் எதைவிதைக் கின்றோமோ அதன் பலனை அறுப்போம். அதாவது எவ்வித கன்மங்கள் செய்தோமோ அதன் பலனை அனுபவிப்போம் என்பானாயின் அது தன்மத்திற்கேற்றதும் துக்கத்தை போக்குவதற்கு ஏதுவாயிருக்கின்றது.

ஒரு சகோதிரன் செய்யும் கன்மமானது அற்பமாயிருப்பினும் அது அபாயமாகவும், மற்றொரு சகோதிரன் செய்யும் கன்மம் அற்பமாயிருப்பினும் அது அற்பமாகவே முடிவதற்குக் காரணம் யாது?

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதையற்றவனாகவும், சீலவிஷயத்திலும் தியானவிஷயத்திலும் ஞான விசாரிணையிலும் ஜாக்கிரதை அற்றவனாயும், ஒரு காரியத்தை முழுதும் நிறைவேற்றாது அரையுங் குறையுமாக முடிப்பவனாகவும், எதெது தீமெயை விளைக்கக்கூடியதோ அவைகளில் மிக்க ஊக்கத்துடன் மனதை செலுத்துகின்றவனெவனோ அவன் செய்யும் கன்மமானது அற்பமாக இருக்கினும் அபாயத்திற்கே ஏதுவாக இருக்கும்.

ஓ! சகோதிரர்களே! ஒரு சகோதிரன் தன் தேகவிஷயத்தில் ஜாக்கிரதை யுள்ளவனாகவும், சீலவிஷயத்திலும் தியான விஷயத்திலும் ஞான விஷயத்திலும்

பவனாகவம், ஒரு காரியத்தை முழுதும் நிறைவேற்று பவனாகவும், எதெது நன்மெயை விளைக்கக்கூடியதோ அவைகளில் மிக்க ஊக்கத்துடன் மனதை செலுத்து கின்றவன் எவனோ அவன் செய்யும் கன்மமானது அற்பமாக இருக்கினும் சுகத்திற்கே ஏதுவாக இருக்கும்.

ஓ! சகோதிரர்களே! ஜலம் நிறைந்த ஒரு சிறு பாத்திரத்தில் ஒரு பிடி உப்பைக் கலந்துவிடின் அச்சலத்தை அறுந்தமுடியுமா முடியா. ஒருபிடி உப்பை கங்காந்தியில் கொட்டி கலக்கிவிடினும் ஜலம் அறுந்தமுடியுமா முடியும்.

ஓ! சகோதிரர்களே! உலகில் ஜீவர்கள் யாவரும் கன்மாம்ஸமாக அவதரித்திருக்கின்றனர். அவர்கள் கன்மத்திற்கு சுதந்தரக்காரராயிருக்கின்றனர், கன்மத்தால் பிறந்திருக்கின்றனர், கன்மத்திற்கு பாத்தியதை உடையவர்களாயிருக் கின்றனர், கன்மத்தால் காப்பாற்றப்படுகின்றனர், ஜீவர்களை உயர்ந்த ஸ்திதிக்கும் தாழ்ந்த ஸ்திதிக்கும் வரச்செய்வதும் கன்மமே.

இவ்வுலகில் ஒருவன் கொலை, வதை, குரூரச் செய்கைகள், அடித்துக் கொல்வது, ஜீவர்கள் மேல் அன்பே வையாது இத்தியாதி கிருத்தியங்களை ஒரு பிறப்பில் செய்து வருவனேல் அவன் மறுபிறப்பில் நீடிய காலம் ஜீவிக்காது சிறிதுகாலம் இருந்து மாள்வான். இவ்வுலகில் ஒருவன் கொலை, வதை, குரூர செய்கைகள், அடித்துக்கொல்லல் இவைகள் யாவுமின்றி கொலை செய்யாதும், வதை செய்யாதும், ஜீவர்கள் மேல் அன்பையே ஒரு பிறப்பில் பெறுக்குவனேல் அவன் மறுபிறப்பில் மன ஆனந்தத்துடன் நீடித்து வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் கற்களினாலும், கொம்புகளாலும் அடித்தும் தண்டாயுதங்களையும், வாட்களையும் ஜீவர்கள் மேல் பிரயோகித்து ஒருபிறப்பில் வதைபுரிவனேல் அவன் மறுபிறப்பில் துக்ககரமான ஜனனமெடுத்து சதா பிணியாளியாய் காலத்தைக்கழித்து மாள்வான். இவ்வுலகில் ஒருவன் கற்களினாலும், கொம்புகளாலும் ஜீவர்களை அடிக்காதும், தண்டாயுதங்களையும், வாட்களையும் ஜீவர்கள் மேல் ஒரு பிறப்பில் பிரயோகிக்காதிருப்பனேல் அவன் மறுபிறப்பில் சுககரமான ஜனனமெடுத்து வாதையைத் தரும்படியான பிணிகளற்று வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் காமமும், கோபமுமுள்ளவனாகவும், அற்ப வார்த்தைக்கும் ஆறாக் கோபமுள்ளவனாகவும், கடுங்கோபமுள்ளவனாகவும் கன்னெஞ்ச முள்ளவனாகவும், கோபமும் பொறாமெயுமுள்ளவனாகவும், தூர்த்த குணமுள்ளவனாகவும் ஒருபிறப்பில் இருப்பனேல் அவன் மறுபிறப்பில் அவலட்சணமும், அந்தக் கேடுள்ளவனாகவும் பிறந்து வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் காமம், கோபமற்றவனாகவும், அற்ப வார்த்தைக்கும் கோபங்கொள்ளாதவனாகவும் கோபமற்றவனாகவும், கடுங்கோபமற்றவனாகவும், தூர்த்தகுணமற்றவனாகவும் ஒரு பிறப்பில் இருப்பனேல் அவன் மறுபிறப்பில் லட்சணமுடையவனாகப் பிறந்து வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் தனக்குக் கிடைக்கிற சுகம் பிறருக்குப் போகுமென்னும் பயமும், பொறாமெயுள்ளவனாகவும், ஏனைய சகோதிரர்கள் அடையும் பலனையும் கீர்த்தியையும் பற்றி அழுக்காருடையவனாகவும், ஏனைய சகோதிரர்கள் பெறும்பட்டம் பூசனை வழிபாடுகளைப்பற்றி பொறாமெய் அடைந்தவனாகவும், பெருமெய் அடைந்தவர்களை தூஷித்து பயமுறுத்து பவனாகவும், ஒரு பிறப்பில் இருப்பனேல் அவன் மறுபிறப்பில் யாவராலும் மதிக்கப்படாது ஈனஸ்திதியுடையவனாயும் வாழ்க்கையில் நற்கீர்த்தி பெற ஏதுவின்றி மாள்வன். இவ்வுலகில் ஒருவன் தனக்குக் கிடைக்கிற சுகம் பிறருக்குப் போகுமாறும், அன்புடையவனாகவும், பொறாமெயற்றவனாகவும் ஏனைய சகோதிரர்கள் அடையும் பலனையும், கீர்த்தியையும் பற்றி தானும் அவர் களுடன் கூடி ஆனந்திப்பவனாகவும், ஏனைய சகோதிரர்கள் பெறும்பட்டம், பூசனை வழிபாடுகளைப்பற்றி தானும் அவர்களுடன் கலந்து சந்தோஷப்படுபவனாகவும், பெருமெயடைந்தவர்களை புகழ்ந்து ஆசி கூறுபவனாகவும், ஒரு பிறப்பில் இருப்பனேல் அவன் மறுபிறப்பில் பேர்பெற்றவனாகவும், அதிகாரஸ்தனாகவும் பிறந்து வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் பூஜிக்கத்தகுந்தவர்களை பூஜியாமலும், உயர்ந்தஸ்தானம் அடையும் பாத்தியதை உடையார்க்கு ஸ்தானமளிக்காமலும், கீர்த்தி பெற சக்த்தியுள்ளவர்களுக்கு கீர்த்தி அளிக்காமலும், போற்றி கௌரவப் படுத்தத் தக்கவர்களுக்கு கௌரவம் செய்யாதும், பெறுமெயடைபவரை பெருமெய் பாராட்டாதும் , வணங்கத்தக்கவர்களை வணங்காமலும், மதிக்கத் தகுந்தவர்களை மதிக்காமலும், ஒரு பிறப்பில் இருப்பனேல் அவன் மறுபிறப்பில் தாழ்ந்த ஸ்திதியில் பிறந்து கீழ்மகனென்றும் அறிவிலியாக வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் பூஜிக்கத்தகுந்தவர்களை பூஜித்தும், உயர்ந்த ஸ்தானம் அடையும் பாத்தியதை உடையார்க்கு ஸ்தானமளித்தும், கீர்த்திப்பெற சக்தியள்ளோர்க்கு கீர்த்தி அளித்தும், போற்றி கௌரவப்படுத்தப்பட்டவர்க்கு கௌரவம் செய்தும், பெறுமெய் உடையோரை பெறுமெய்ப்படுத்தியும், வணங்கத் தக்கவர்களை வணங்கியும், மதிக்கத்தகுந்தவர்களை மதித்தும் இவ்விதமாக ஒரு பிறப்பில் நடந்துவருவனேல் அவன் மறுபிறப்பில் சிரேஷ்டஸ்திதியில் பிறந்து மேன்மகனென்னும் அறிவுள்ளவனாக வாழ்வான்.

இவ்வுலகில் ஒருவன் துறவிகளைக்காணில் அவர்களை அவமதித்தும் எழியோர்களைப்பற்றி மனதிலும் சிந்திக்காதும், திக்கற்றவர்களைப்பற்றி நோக்காமலும், ஜீவர்கள் மேல் அன்பற்றவனுமாகி ஒரு பிறப்பில் இருப்பனேல் அவன் மறுபிறப்பில் நற்குடும்பத்திற் பிறவாது யாவராலும் இகழப்பட்டு அஞ்ஞான மார்க்கத்தை அவன் மனம் நாடி நிற்கும்.

இவ்வுலகில் ஒருவன் துறவிகளைக்காணில் அவர்களுக்கு அன்னமளித்தும் எழியோர்களுக்கிரங்கி தானம் செய்தும் திக்கற்றவர்களை ஆதரித்தும் ஜீவர்கள் மேல் அன்புவைத்தும் ஒரு பிறப்பில் வருவனேல் அவன் மறுபிறப்பில் சிறந்தகுடும்பத்தில் பிறந்து யாவராலும் போற்றி வாழ்த்துதல் பெறுவதுடன் ஞானமார்க்கத்தை அவன் மனம் நாடி நிற்கும்.

இவ்வுலகில் ஒருவன் பலபிறப்புகளில் தசபாரமிதைகளாம் தானம், சீலம், நிக்கஹமர், பிரஞ்ஞா, வீரியா, ஷாந்தி, சத்யா, அதிஷ்டானா, மைத்ரீ, உபேக்ஷா இவைகளை அநுஷ்டானத்திற்குக் கொண்டுவருவானாகில் ஒரு பிறப்பில் பெருங் குடும்பத்திற் பிறந்து அறஹத்து நிலையை அடைவான்.

1. தானாபாரமிதா 2. சீலாபாரமிதா 3. நிக்கஹமாபாரமிதா 4. பிரஞ்ஞாபாரமிதா 5. வீரியாபாரமிதா 6.ஷாந்திபாரமிதா 7. சத்யாபாரமிதா 8. அதிஷ்டானாபாரமிதா 9. மைத்ரீபாரமிதா 10. உபேக்ஷாபாரமிதா

தானமாவது : அளவுகடந்தது. அதாவது, தன் உயிரைக் கேட்பினும் கொடுத்துவிடக்கூடிய தானம் செய்தல்.

சீலமாவது : மனோவாக்கு காயத்தை சுத்திகரிக்கும் சீலம். அதாவது, நீதியில் நிற்றல்

நிக்கஹமா: லோப, தோஸா, மோஹம் இவைகளற்றும் பரிசுத்த நிலை அடையும் வரையில் பிறர் சுகத்தையே கருதியிருத்தல்,

பிரஞ்ஞா : பரிசுத்த ஞானத்தை விருத்தி செய்தல்

வீரியா: பரிசுத்த நிலையை அடைய விடாமுயற்சியுடனும், தைரியத்துடனும் சிந்தித்துத் தெளிதல்

ஷாந்தி : தன் புத்திரனைப்போல் சகல உயிர்கள் பேரிலும் அன்பு பாராட்டலும், ஜீவர்கள் செய்யும் குற்றங்களைப் பொருத்து அவர்கள் பேரில் கோபங் கொள்ளாதிருத்தல்.

சத்யா: சத்தியத்தை பேசி சத்தியமாகவே நடந்து சத்தியத்தையே கைப்பற்றல்

அதிஷ்டானா: நன்மார்க்கத்தினின்று சற்றும் மலை போல் பிறழாதும் முன் தணிந்த அவாக்களை எழவிடாமலுமிருத்தல்.

மைத்ரீ: தாயானவன் தன் ஏகபுத்திரனைக் காப்பாற்றுதல் போல் சகல உயிர்கள் பேரிலும் ஜீவகாருண்யத்தைக் காட்டல்.

உபேக்ஷா: இப்பூமியைக் கொத்தி எவ்வளவு துன்பம் செய்தபோதினும் அது நற்பலனையே தரும் அதுபோல் மித்திரன் அல்லது விராதி இவர்கள் செய்யும் துன்பங்களைக் கவனியாது நன்மெய்களை செய்துவரல் அதாவது, மித்திரனையும் விரோதியையும் சமமாக பாவித்தல் என்று உபதேசித்தார்.

அதுகேட்ட யாவரும் ஆனந்தமுற்றார்கள்

## 23. **புக்கஸாதி துறவு பூண்ட காதை**

ஒரு குமரபருவமுள்ள புக்கஸாதி என்னும் பெயருடையவன் பகவனைக் காணவேணுமென்றும், பலருடைய நன்மெயின் பொருட்டே துறவடைந்து பலருக்கும் போதித்துவரும் தன்மத்தைக் கேட்கவேண்டுமென்றும், கேட்டபின் உலகைத் துறந்து காம்பீரமான பிக்ஷுசங்கத்தில் சேர்ந்து மேலான பதவியை அடைய வேண்டுமென்னும் அவாக் கொண்டு பலவிடங்களில் பகவனைத் தேடி அலைந்து கடைசியாக இராஜமா கிரஹத்துக்கு வந்து சேர்ந்து (பக்கவா) என்னும் குடும்பியின் வீட்டினருகில் சென்று அன்றிரவு தங்க இடந்தர வேண்டுமென இரங்கி கேட்க அக்குடும்பியும் அவனை அழைத்து உணவளித்து தன்வீட்டில் அன்றிரவு தங்கவும் இடம் அளித்தான். அன்று இரவு நடுஜாமத்தில் பகவன் ஓர் அடர்ந்த காட்டில் தங்கி (கருணாபாவனா) கருணை சமாதியிலிருக்குங்கால் ஓர் குமரன் இராஜகிரஹத்தில் வந்து ஒரு குடும்பியின் இல்லத்தில் தங்கி துறவியாக வேணுமென்கிற ஒரேவைராக்கியம் பூண்டிருக்கின்றானெனத் தெரிந்து உடனே சமாதியினின்று எழுந்து புக்கசாதி தங்கியிருக்கும் இல்லத்திற்கு வந்து சேர்ந்தனர். சற்று தாமதித்து புக்கசாதியை அழைக்க புக்கசாதி பகவனைக்கண்டு வணங்கி ஆச்சரியமுடையவனாகி ஆனந்தத்துடன் அவரருகில் சென்று உட்கார்ந்தான். பகவன் அவனைப்பார்த்து சிறிது நேரம் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில் புக்கசாதி ஆவலுடையவனாகி தன்னை சங்கத்தில் சேர்த்துக்கொள்ளும்படி வேண்டினான். பகவன் போதிக்கத் தொடங்கினார்.

ஓ ! சகோதிரர்களே! எதினாலே உலகம் மூடப்பட்டிருக்கிறது? எதினாலே உலகம் பிரகாசிக்கவில்லை ? எதினால் உலகம் கறைப்பட்டிருக்கிறது? உலகத்தின் அபாயம் எது?

உலகம் அறியாமெயால் மூடப்பட்டிருக்கின்றது. லோபத்தால் உலகம் பிரகாசிக்கவில்லை. அவாவால் உலகம் கறைப்பட்டிருக்கிறது. துன்பமே உலகத்தின் அபாயம். அவாவென்னும் வெள்ளங்கள் பல திக்குகளில் புரண்டோடு கின்றன. அவ்வெள்ளங்களை எதினால் தடுக்கலாம்? தடையாவதெது? வெள்ளங்களை எதனால்

முற்றும் நிறுத்திவிடலாம் ? யோசனையால் வெள்ளங்களைத் தடுக்கலாம். யோசனையே தடை நிதானத்தால் வெள்ளங்கள் நிறுத்தப்படுகின்றன.

உலகில் ஜீவர்கள் ஏன் துன்பமடைகின்றனர். துன்பத்திற்குக் காரணம் யாது?

அவாவால் ஜீவர்கள் துன்பமடைகின்றனர். அவாவே துன்பத்திற்குக் காரணம்.

அறியாமெயால் ஒருவன் அவாவை உதிக்கச்செய்துக்கொள்ளுகிறான். அப்படி செய்வதால் துன்பம் நேர்கின்றது. ஆகையால் அறிவுடையோர் பிறப்பையும், துன்பத்தின் உற்பத்தியையுங் கண்டு அவாவை விருத்தி செய்யாதிருக்கட்டும்.

ஓ! சகோதிரர்களே! கண்ணானது ஒரு ரூபத்தைப்பார்த்து அதில் பிரீதி கொள்ள மனம் அதிகமாக விரும்பத்தொடங்குகிறது. கண்ணானது ஒரு ரூபத்தைப்பார்த்து அதில் பிரீதி கொள்ளாவிடில் மனம் அதிகமாய் வெறுக்கத் தொடங்குகிறது.

கண்ணானது ஒரு ரூபத்தைப்பார்த்து அதில் பிரீதிவையாமலும், வெறுக்காமலிருக்க மனமானது உபேட்சையுடன் இருக்கத்தொடங்குகிறது.

கண் எப்படி மூன்றுவிதமாய் பார்க்கின்றதோ அதுபோலவே காது, மூக்கு, நாவு, தேகத்தின் பலபாகமும் மனம் இவைகளை விரும்புவதும், விரும்பாமலிருப்பதும், விரும்பாமலும், வெறுக்காமலும் இருக்கத் தொடங்குகின்றன.

1. சக்குஞ்சபடீஸா ரூபேஸா உபேஸ்டி சக்குவிஞ்ஞானங் தேனாங்
ஸங்கதிபஸ்ஸோ .
பஸ்ஸோ பஸ்சா வேதனா
வேதனா பஸ்சா தன்ஹா
தன்ஹா பஸ்சா உபாதானா
உபாதானா பஸ்சா பவோ
பவோ பஸ்சா ஜாட்தி

ஜாட்தி பஸ்சா ஜெய

ஜெய , மரணா. பிரிதேவா, துக்கா தோமனாஸே ஸம்போந்தே.

கண்ணானது ரூபத்தை பார்க்க கண்ணின் விஞ்ஞானத்தால் லோபம், மோஹம் சேர்ந்து ஊறு உண்டாகின்றது.

”ஊறு சார்ந்து நுகர்ச்சியாகும்

நுகர்ச்சி சார்ந்து வேட்கையாகும்

வேட்கை சார்ந்து பற்றாகும்மே

பற்றிற் றோன்றுங் கருமத்தொகுதி

கருமத்தொகுதி காரணமாக

வருமே யேனை வழிமுறை தோற்றம்

தோற்றஞ் சார்பின் மூப்புப் பிணி சாக்கா

டவல மாற்றுக்கவலை கையாறெனத் தவலிறுன் பந்தலைவருமென்ப"

2. தோடென்ஸா பட்டீஸா ரூபேஸ உபேஸிடி தோட விஞ்ஞானங்

தேனாங் ஸங்கதிபஸ்ஸோ .

பஸ்ஸோ பஸ்சா வேதனா

ஜெய, மரணா, பிரிதேவா. துக்கா , தோம்னாஸே ஸம்போந்தே

செவியானது சப்தத்தைக் கேட்க காதின் விஞ்ஞானமானது லோப, மோஹங்களுடன் சேர்ந்து ஊறு உண்டாகிறது.

ஊறு சார்ந்து நுகர்ச்சியாகும்

நுகர்ச்சி..... றுன்பந்தலைவருமென்ப

3. காணேன் ஸபட்ஸா கந்தேஸ் உபேஸடி காணா விஞ்ஞானங்

தேனாங் ஸங்கதியஸ்ஸோ .

பஸ்ஸோ பஸ்சா வேதனா

ஜெய, மரணா ...... ஸம்போந்தே

நாவானது உருசிகாண நாவின் விஞ்ஞானமானது லோப் மோஹங்களுடன் சேர்ந்து ஊறு உண்டாகிறது.

ஊறு சார்ந்து நுகர்ச்சியாகும்

நுகர்ச்சி .... றுன்பந்தலைவருமென்ப

4. *ஜீவேன்ஸா பாஸா ரஸேன்ஸ உபேஸடி ஜீவாவிஞ்ஞானங்தேனாங்
   சங்கதி பஸ்ஸோ .
   பஸ்ஸோ பஸ்சா வேதனா
   ஜெய, மரணா - ஸம் போந்தே

நாவானது உருசி காண நாவின் விஞ்ஞானமானது லோப மோஹங்களுடன் சேர்ந்து ஊறு உண்டாகிறது.

ஊறு சேர்ந்து நுகர்ச்சியாகும்.

நுகர்ச்சி ...... றுன் பந்தலை வருமென்ப

5. காயேன் ஸபமஸா புட்தபேஸா தேகவிஞ்ஞானமானது

லோபமோஹங்களுடன் சேர்ந்து ஊறு உண்டாகிறது.

காயவிஞ்ஞானங் தேனாங் ஸங்கதி பஸ்ஸோ

பஸ்ஸோ பஸ்சா வேதனா

ஜெய , மரணா ..... ஸம்போந்தே

தேகத்தின் பல பாகங்கள் பரிசிக்க தேகவிஞ்ஞானமானது லோப மோகங்களுடன் சேர்ந்து ஊறு உண்டாகிறது.

ஊறு சார்ந்து நுகர்ச்சியாகும்

நுகர்ச்சி ...... றுன்பந்தலைவருமென்ப

6. மனோஞ்சபடீஸா தம்மேஸா உபேஸ்டி மனோவிஞ்ஞானங் தேனாங்க

ஸங்கதி பஸ்ஸோ .

பஸ்ஸோ பஸ்சா வேதனா

ஜெய . மரணா ...... ஸம்போந்தே

மனமானது நினைக்க மனோவிஞ்ஞானமானது லோப மோஹத்துடன் சேர்ந்து ஊறு உண்டாகிறது.

ஊறு சார்ந்து நுகர்ச்சியாகும்
நுகர்ச்சி றுன் பந்தலைவருமென்ப

ஓ! சகோதிரர்களே! அறுவகையான ஆரமணங்களால் மூப்பு மரணம் நேர்கின்றது. மூப்பு மரணம் நேர்வதற்குக் காரணம் பேதைமெயே. பேதைமெ யல்லது பொய் காட்சியிலிருந்து செய்கைகள் உண்டாகின்றது.

செய்கையிலிருந்து உணர்வு உண்டாகின்றது, உணர்விலிருந்து அருவுரு உண்டாகிறது. அருவுருவிலிருந்து வாயில்கள் உண்டாகின்றன. வாயில் களிலிருந்து ஊறுகள் உண்டாகின்றது. ஊறுகளினின்று நுகர்வு உண்டாகின்றது. நுகர்விலிருந்து வேட்கை உண்டாகிறது. வேட்கையிலிருந்து பற்று உண்டாகிறது. பற்றிலிருந்து பிறப்புக்கு மூலமாம் கருமக்கூட்டம் உண்டாகின்றன. கருமக்கூட்டத்தினின்று மறுபிறப்புண்டாகின்றது. அதினின்று இழப்பு மரணம், வலியும் அழுகையும் ஆகிய துக்கோற்பவங்கள் உண்டாகின்றன.

ஓ! சகோதிரனே! இந்தச் சக்கரத்தினின்று விடுபடுவது மிக்க அரிது.

ஓ! சகோதிரனே! ஞானமார்க்கத்தின் உதவியால் இச்சக்கரத்தினின்று விடுபடலாம்.

ஞானமார்க்கம் யாதெனில்:- அநித்யம், துக்கம், அநாத்மா என்பவைகளே.

இம்மார்க்கத்தின் உதவியால் அவிஜ்ஜாவாம் பேதமெய் என்னும் வண்டி சக்கரத்தின் குடத்தை எடுத்துவிட்டால் மற்றை இலைகள் உதிர்ந்து விடுமாபோல் சகலமும் அநித்யம். சகலமும் துக்கம், சகலமும் அநான்மா என விசாரித்து பேதமெய் முதற்கொண்டு மரணம் வரையில் விடுபட மூப்பையும் மரணத்தையும் ஜெயித்துக்கொள்ளலாம்.

“பேதமெய் மீளச் செய்கை மீளும் / செய்கை மீள வுணர்ச்சி மீளு
முணர்ச்சி மீள வருவுரு மீளு / மருவுரு மீள வாயின் மீளும்
வர்யின் மீள ஊறு மீளு / மூறு மீள நுகர்ச்சி மீளும்
நுகர்ச்சி மீள வேட்கை மீளும் / வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத்தொகுதி மீளுந் / கருமத் தொகுதி மீளத் தோற்ற மீளுந்
தோற்ற மீளப் பிறப்பு மீளும் / பிறப்புப் பிணி மூப்புச் சாக்கா
டவல மாற்று கவலை / கையா றென்றிக் கடையி றுன்ப
மெல்லா மீளுமிவ் வகையான் மீட்சி”

பகவனது திவ்ய போதனையை ஆழ்ந்து கேட்டுவந்த புக்கஸாதி ஆனந்தக்கண்ணீர் சொரிந்து பகவனை மும்முறை சுற்றிவந்து பாதம்பணிந்து (நமோதஸ்ஸ பகவதோ அறஹதோ ஸம்மாஸம்புத்தஸ்ஸ) குன்றாத மனபாக்கியமும் மேலான மகத்துவமும் வந்தனையுடையவும் ஞானிகள் யாவருக்கும் மஹாஞானியுமாகிய புத்தபகவனை நமஸ்கரிக்கிறேனென மும்முறை வணங்கி, (ஓ! காஸகருணங்கத்வா திஸரனேன சட்திம் அட்டாங்க சீலம் தேதாமே பாந்தே அஹம்பாந்தே ஸரணசீலங்யாஸாமி) பெருமெயும் காம்பீரமுமான பெருமானே! தயைகூர்ந்து இவனை மும்மணிகளாம் புத்த தம்ம, சங்கத்தில் சேர்த்து எட்டு சீலங்களையும் அளிக்கும்படியும் நீதியில் நடந்துவரவும் அருள்புரியவேண்டுமென இரஞ்சி கேட்க, பகவன் எட்டு சீலங்களை ஒவ்வொன்றாக கூற ஆரம்பித்தார்.

1. பானாதிபாதா வேறமணி சிஹாபதங் ஸமாதியாமி
2. அதின்னா தானாவேறமணி சிக்ஹாபதங் ஸமாதியாதியாமி
3. அஹபிரஹ்ம சரியாவேற மணி சிக்ஹாபதங் ஸமாதியாமி.
4. மூஸாவாதா வேறமணி சிஹாபதங் ஸமாதியாமி.
5. ஸுராமேறய மஜ்ஜபமாதம்தானாவேறமணி சிக்ஹா பதங் ஸமாதியாமி. 6. விகாள போஜனாவேறமணி சிஹாபதங் ஸமாதியாமி.
7. நச்ச கீதவாதிக விளக்கதஸ்ஸனமாலகந்த விவப்பன தாரண மண்டன விபூஷணடதானா வேறமணி சிக்ஹாபதங் ஸமாதியாமி.
8. உட்சாஸ்பன மஹாஸயன வேறமணி சிக்ஹாபதங்ஸமாதியாமி.
1. களவு செய்யாமெய் 9. கள்ளருந்தாமெய் 3. பொய் சொல்லாமெய்

4. பிறன்மனை நயவாமெய் 5. கொலை செய்யாமெய் 6. அகாலபோசன மருந்தாமெய் 7. கீதம், வாசனை, கூத்து இவைகளுக்கிடங்கொடுக்காமெய்
8. பஞ்சணை மெத்தை உயர்வான படுக்கையின் மேல் துயிலாமெய்.

ஆகிய சுத்ததேகிகளாக வாழ்தலே சுகதேக வாழ்க்கைக்கு அறிகுறியாகும். சுகதேகவாழ்க்கையின் அறிகுறியே நித்திய வாழ்வுக்கு அறிகுறியாகும். அந்த நித்திய வாழ்க்கையையே நிருவாணமென்னப்படும். அந்நிருவாண சுயம்பிரகாசப் பிரிவே பரிநிருவாணமென்னப்படும்.

ஓ! சகோதிரனே! இப்பரிநிருவாண சுகமே என்றுமழியா நித்திய சுகம், உலகத்தில் அநித்தியத்தை ஆய்ந்தே நித்தியத்தைக்கண்டேன். துக்கத்தை ஆய்ந்தே சுகத்தைக் கண்டேன். போட்டயிடத்திற் பொருளைக் கண்டடைவது போல் அநித்திய நிலையில் சுழலும் பஞ்சஸ்கந்தத்தினிடத்திலேயே நித்திய நிலையும் துக்கந்தோன்றியவிடத்திலேயே சுகநிலையுங் கண்டேன்.

இத்தகைய சுகவாரியாம் பரிநிருவாண நிலையை விரும்புவோன் தனது தேகக்களங்கையும், வாக்குக் களங்கையும், மனோகளங்கையும் தன்னிற்றானே உணர்ந்து தன்னைத்தானே சுத்திகரித்துக்கொள்ளுவோன் சுகம் பெறுவான்.

அந்நியரால் சுகம் பெற வேண்டுமென்போன் அல்லலுற்றலைவான். அதாவது அன்னை குழவிக்கு அன்னமூட்டுவாள். விழுங்குகைக்கு அவள் உத்திரவாதியன்று. ஆசிரியன் திரிகரண சுத்தத்தைப் போதிப்பான். சுத்தீகரிப்புக்கு அவன் உத்திரவாதியன்று. ஆதலின் உண்மெய்ப்பொருளை உணரவேண்டிய சகோதிரனே! நீவிர்தன் மெய்யுணர்ந்து தண்மெய் நிலைத்து சுகம் பெருகுகவென்று வாழ்த்தி சாத்தியசங்கத்திற் சேர்த்தருளினார். .

பகவன் கூறிய சீலங்களை புக்கஸாதி அன்புடன் ஏற்று காவி போர்த்து பிச்சாபாத்திரத்தைக் கையிலேந்தி சங்கத்தில் சேர்ந்து சதுர் சத்தியமாம் துக்கம்,

துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரணமார்க்கத்தில் விசாரிணை புரிந்துவந்தான்.

24. **பிருமன் தரிசன காதை**

பிருமனென்பவன் அசோதரையம்மனின் சோதிரன் அஜாதசத்துரு வென்பவன் விம்பாசார அரசனுடைய புத்திரன் இவ்விருவரும் பகவன் கோசலை நாட்டிலிருக்கின்றாரென்று எண்ணி அவ்விடம் போய் விசாரித்து இல்லை என்றுணர்ந்து குருநாதன் வந்தவழியைத் தொடர்ந்து ஐயனைப் பாலைவனத்தில் சந்தித்தார்கள்.

இவ்விருவர் வருகையையுங் கண்ட இறைவன் ஓர் மரத்தடியில் தங்கி வந்த காரணம் யாதென்றார்.

**அசோதரை நெஞ்சுவிடு தூது - மகா ராஜா துறவு**

பிரும் நகந்தை பிறங்காதடங்கப், பரம னொளியாய் படர்ந்து
உருவனத்தும் வகிலுங் கழைமணியு மந்திரயாழுந்தி,
சிகிநிறச் செம்பாலை குணந்தீர்ந்து - பகரறிய.

**நிகழ்காலத்திரங்கல்**

*பிருமனுஞ் சத்துருவும் பேணா மகந்தை கெட, உருமறைந்த சோதி உயர்ந்த அதிசயமே.* பிருமனென்னும் தனது மைத்துனன் தனக்குள்ள மமதையால் மாதவனை நோக்கி நீவிருமது சங்கத்தோருக்கு கொடுத்திருக்குங் சட்டங்கள் யாவும் கடினமின்றி எளிய நடையிலிருக்கின்றபடியால் அவர்களொவ் வொருவரும் வீண்காலம் போக்குகின்றார்கள் கடின சட்டத்தில் நிறுத்த வேண்டுமென்றான்.

அவற்றை வினவிய பகவன் பிருமனை நோக்கி தாங்களும் அவர்களுடன் கலந்துள்ளவராதலின் கடின சட்டத்தில் பொருந்துவீரோவென்றார்.

நாம் பொருந்துவோம் பொருந்தமாட்டோமெனும் கேள்வியைத் தாம் கேட்கவேண்டியதில்லை உம்முடைய சங்கத்தோரை உறுதிச் செய்துக் கொள்ளும் என்றான்.

பகவன் அவனுக்குள்ள வஞ்சினத்தையும், பொறாமெயையுமுணர்ந்து மௌனமுற்றார்.

மறுமொழி கூறாதிருந்த மாதவனை மற்றும் பிருமன் நோக்கி உமது சங்கத்தோரை உறுதி செய்துக் கொள்ளுமென்றான்.

அவ்வார்த்தைக்கும் அருகன் யாதோருத்திரமுங்கூறாதிருப்பதைக் கண்ட பிருமன் சினமீறி அஜாதசத்துருவை அழைத்து தூரஞ்சென்று இவரை நாம் எவ்விதத்திலும் கொன்றுவிடவேண்டும், அவ்விதம் செய்யாமற் போய்விடு வோமாயின் உமது தந்தைக்கும் எனது தந்தைக்கும் சங்கதிகள் எட்டி வீணில் அல்லலடையவேண்டி வரும். ஆதலின் யாருமற்ற பாலைவனமே இச்செயலுக்குத் தகுதி என்று அருகில் நெருங்கினார்கள்.

இவர்கள் கொடுஞ்செயலை உணர்ந்த கோமான் அவர்கள் நெருங்கிய நேரத்தில் அந்தர சுவர்க்க மத்தியம் என்னும் நிலையற்று சுடுகையற்று சுயம்பிரகாச சோதியாய் நின்றுவிட்டார்.

சுயம்பிரகாசத்தைக் கண்ட இருவர்களுந் திகைத்து நான்கு திக்குகளிலோடித் திரிந்தும் அவரது மகத்துவம் விளங்காது மதிகெட்டு திட்டமிட்டார்கள்.

**அருங்கலைச்செப்பு - பாலைநிலப்பத்து**

பாலை நிலத்தின் பகுத்தனைத்தும் பார்த்துரைத்தான்
சீலமிகுத்த சிவன். மண்ணினுறுக்கு மணியொளியா
முன் தொகுப்பு மெண்ணியுரைத்தானிறை

அக்கால் குன்றை நாட்டுச் செல்வன் சோதியை ஒடுக்கி பாலைவன வாசிகளிடஞ்சென்று இராகத் துவேஷ மோகமாம் மூன்றினால் உண்டாகுங் கேடுகளையும் அன்பு, ஈகை, சாந்தமென்னும் இம்முன்றினால் உண்டாகுஞ் அத்தளையம் விளக்கி அவர்கள் விருத்தி அடைய வேண்டி பாலைவனத்தில் உற்பத்தியாகும் உவர்மண், கீரைமண மண், வளையல் மண், கண்ணாடி மண், படிகக்கல், அப்பிரகக்கல் முதலியவைகளின் விளைவுகளையும் அவைகளைக் காய்த்துப் பொருட்செயும் வகைகளையும் கற்களுக்கு தீத்தீட்டி கண்ணாடி செய்யுந் தொழில்களையும் விளக்கிவிட்டு மற்றோர் குறிஞ்சிநிலமாம் மலையடி சேர்ந்தார்.

அம்மலைநாட்டரசன் மாலியன் என்பவன் மலையடிவாரத்தில் பகவன் வந்திருப்பதைக் கேள்வியுற்று பந்துமித்திரர்களுடன் வந்து வாலறிஞனை வணங்கி எண்ணிறந்த குணத்தோய் நீ, யாவர்க்கு மரியோய் நீ, உண்ணிறைந்த வருளோய் நீ, உயர்பாரந் தவிர்த்தோய் நீ, மெய்ப்பொருளை அறிந்தோய் நீ, மெய்யறமிங் களித்தோய் நீ, செப்பரிய தவத்தோய் நீ, சேர்வார்க்குச் சார்வு நீ, யாதலின் உமது சிறந்த கமலபாதத்தைத் தாவினோம். இவ்வடியார்களையுந் தங்கட் சங்கத்தவர்களில் ஒருவராகச் சேர்த்து சகல விவேகிகளால் கொண்டாடும் சத்தியதன் மத்தைப் போதிக்க இரைஞ்சி தனதில்லத்திற் கழைத்துக் கொண்டுபோய்ப் புசிப்பளித்து தனதாளுகைக்கு உட்பட்ட குடிகள் யாவரையும் வரும்படிச் செய்து தன்மத்தைக் கேட்கும் சித்தாயத்தத்தில் வைத்திருந்தான்.

மலையன் வேண்டுதலை வினவிய வீணைகோபாலன் அகமகிழ்ந்து அரசே, சத்தியதன் மத்தை தாங்கள் தெரிந்துகொள்ளவேண்டியவராயிருப்பதுடன் உமது ஆளுகைக்குட்பட்ட மக்களும் உணரவேண்டுமென்னும் அவாக்கொண்டுள்ளீர்.

ஆயினும் உம்மெய்போன்ற மனுக்கள் மீது வைத்த கருணைப் போல் மற்ற சீவராசிகளின் மீதும் வைக்காதகாரணம் என்ன என்றார்.

**அசோதரை நெஞ்சுவிடு தூது - மகாராஜா துறவு**

குறிஞ்சியினின்று குறவர் குடில் சாடி மறிந்தவரன் மாலியனையேற்று - சிறந்த

**அருங்கலைச்செப்பு - குறிஞ்சிப்பத்து**

குறிஞ்சி நிலத்தின் குணமறிந்தான் வெற்பன் / துறந்த முநியின் திரம். சிவப்பின் மணியும் செழுவாணி முத்தும் உவப்பிலுரமா முடல்.
உடலுள்வுள்ள உதிரக் கறையகற்றி திடநல்வளமுருக்குங்கள்.

அதனை வினவியக் குறிஞ்சிநாட்டரயன் தங்கள் கூட்டத்தாராகியக் குறவர்கள் பல சீவசெந்துக்களை கொல்லுவதும், விற்பதும், தின்பதுமாகிய செயலை யுடையவர்கள் ஆதலின் சற்று நிதானித்து அகிலத்தில் (அகிம்சா ) தருமத்தை நிலைநாட்டிய அப்பனே, எங்கள் கூட்டத்தாருள் பெரும்பாலும் ஜெந்துக்களைக் கொன்று புசிப்பதும், விற்பதும், அதேசீவனவிர்த்தியாய் நிற்பதும் அனுபவமாதலின் சீவர்களை கொலை புரிந்து உண்பது குலத்தொழிலாய் விட்டது. அவற்றை விடுவதானால் வேறு சீவனவிருத்திக்கு யாதுமில்லாமல் திகைப்பார்களே என்றான்.

அரசனே! ஒவ்வோர் மனிதனும் புசித்து தன் தேகத்தை வளர்ப்பதற்கு கனிகாய், கிழங்கு முதலிய வஸ்துக்கள் இருப்பதுடன் சென்னெல், கேழ்வரகு பயிரிடுந் தொழிலாளிகளிடஞ் சென்று தானியங்களைப்பெற்று மாற்றிக் கொள்ளுவதற்கு மிளகு, கோஷ்டம், அகில், சந்தனக்கட்டை , தக்கோலம், குங்குமப்பூ முதலியவைகளை இம்மலையில் விருத்தி செய்து சீவிப்பதுடன் அம்மலையில் விளையும் சில உலோகங்களையும், இரத்தினங்களையுங் காண்பித்து சிவப்புநிறக் கற்களை ஓர் மனிதன் அணைந்துக்கொள்ளுவானாயின் உதிர வண்டல் கட்கழிந்து தெளிவுண்டாகி சுத்தயிரத்தம் உடலிற் பாவி வஜிகரமும் தேஜசும் பெறுவான்.

அவ்விடம் உதிர்ந்துள்ள யானைத்தந்தங்களை எடுத்துவரும்படிச் செய்து அதிலுள்ள முத்துக்களைக் காண்பித்து இவ்வாணி முத்துக்களை ஓர் மனிதனணைந்துக்கொள்ளுவானாயின் மனோதிடனும் தேகசக்தியும் பெற்று உச்சாகத்திலிருப்பான். என்று லோகவுருக்குகளையும், இரத்தினக்கீட்டுகளையும், முத்தின் பலன்களையும் விளக்கி இவைகளைக் கொண்டுபோய் ஒன்றைக் கொடுத்து மற்றொன்றை மாற்றிக்கொண்டுவந்து சீவிக்கலாமேயன்றி சீவர்களுக்குத் துன்பம் விளைத்து அதினால் சீவிப்பது அதர்ம்மமாகும்.

அதாவது, உங்களில் ஒவ்வொருவரும் சத்தியதன்மத்தை உணர்ந்து தன்னை உயர்த்தி சீர்பெறும் எண்ணத்தில் நிற்பதுபோல் அச்சீவராசிகள் ஒவ்வொன்றுந் தங்களை உயர்த்திக்கொண்டே வருகின்றது.

அவைகளின் உயர்வுகளை நீங்கள் மத்தியில் கெடுத்து கொலைபுரிவதால் அதன் நோக்கங்களும், நிலைகளுங் கலைந்து தாழ்ந்த நிலை அடைவதுடன் உங்கள் உணர்வுங்கெட்டு தாழ்ந்தநிலை அடைவீர்களென்று போதித்து அவர்கள் குடிசைகள் யாவையுந் தவிற்று கட்டிடங்கள் கட்டும் வகைகளையும் ஊட்டிவருங்கால், பகவன் மலைய நூரான் வாசஞ்செய்யுங் குறிஞ்சி நாட்டில் சத்தியதன்மத்தைப் போதித்துவருகின்றாரென்று கேழ்விப்பட்ட பிருமனும் அஜாதசத்துருவும் அம்பும் வில்லுங் கையிலேந்தி துஷ்ட யானைகளையம் அழைத்துக்கொண்டு அவ்விடம் வந்து அவலோகிதர்மீது அம்பு கும்பலைப் பிரயோகித்தார்கள்.

அவற்றைக்கண்ட அமலன் அருகிலுள்ளவர்களை தூர விலகிவிடச் செய்து தனியே உழ்க்கார்ந்தார்.

அவ்விருவரும் எய்த அம்புகும்புகள் அவலோகிதர் உடலில் மோதி புட்பங்கள் உதிருவது போல விழுந்து கொண்டே வந்தது. அவர்கள் அம்பு கூடுகளுங் காலியாயின. இன்னும் அவர்களுக்குக் கோபம் அதிகரித்து தங்களிடமுள்ள யானையை விடுத்துக் கொல்லும்படிச் செய்தார்கள்.

அவ்வியானையோ வீரிட்டுக்கொண்டு ஐயனருகில் வந்து அவரது ஞானகருணாகர முகங் கண்டவுடன் தனது மதவீரியத்தை ஒடுக்கி முழங்காலிட்டு மத்தகஜம் பூமியிற்படவணங்கி பின்னுக்கே சென்றுவிட்டது.

அதன் செயலைக் கண்ட இருவருக்கும் மேலும் மேலுங் கோபமதிகரித்து யானைக்கு மயக்கவஸ்துவை ஊட்டி மறுபடியும் மாதவன் பேரில் ஏவினார்கள்.

அவ்வியானையோ தனது மதிமயக்கத்தால் மாதவனை அணுகி துதிக்கையினால் பிடிக்கவும் இழுக்கவுமாகியச் செயலிலிருந்தது. அதன் மதிமயக்கத்தை உணர்ந்த மாதவன் புந்நகைக்கொண்டு ஓர்கரத்தால் துதிக்கையைப்பற்றி ஓர் துரும்பை எறிவதுபோல் தூர எறிந்துவிட்டார்.

யானைக்கோ தனக்குள்ள மயக்கங்கள் யாவுமகன்று பகவனுரத்திற்கு பயந்து வீரிட்டோட்டமிட்டது.

யானை உரத்தோன் வல்லபத்தைக்கண்ட யாவருந் திடுக்கிட்டு நின்று விட்டார்கள்

அவருரத்தைக் கண்ணாரக்கண்ட பிருமனும் அஜாதசத்துருவும் ஐயன் எதிரில் போவதற்கு பயந்து மலையைச் சுற்றிக்கொண்டு உச்சிக்கேறி அவ்விடமிருந்த ஓர் பெரும்பாறையை யானை உரத்தோனுக்கு நேரே உருட்டிவிட்டார்கள்.

அப்பாறையானது அதிவேகமாக உருண்டு வந்து ஐயன் தலை மீதெழும்பி உருண்டுபோய் இருவர்களும் மலையடிவாரத்தில் விட்டிருந்த ரதத்தின் பேரில் விழுந்து அவற்றை பொடியாக்கிவிட்டது.

அதனைக்கண்ட இருவரும் நமதில்லம் போய்ச் சேருவதற்கு ரதமில்லையே யாது செய்யலாமென்று மயங்கி தாங்கள் தவமுதல்வருக்கு செய்து வந்த தீங்குகளை சிந்தித்தார்கள்.

இருவருஞ் செய்த தீவினைகளை சிந்தித்ததினால் இறைவன் மீதிருந்த வஞ்சினங்களும் பொறாமெயுமகன்று யானையுரத்தைப் பெற்ற தேகபலமிருந்தும் நம்மீதவ்வுரத்தைக் காட்டாதிருப்பது என்னவன்போ யாது சாந்தமோ என்று ஒருவருக்கொருவர் நிதானித்து சதா சாந்தரூபியை இன்று சேவித்து அடைக்கலம் புகுவதே நமதரணாகும். அங்ஙனம் அவர் அடைக்கலங் கொள்ளாவிடில் இருவர் பிராணனையும் அவர் பாதத்தில் விடுவதே பதமென்றெண்ணி யானை யுரத்தோனருகில் சென்று இருவரும் அவர் கமலபாதத்தைப்பற்றி செந்தாமரை பாதா,

சின்மய போதா, ஜெகத்குருநாதா, சுருதி நல்வேதா, சருவசீவ தாதாவென்றிறைஞ்சி எங்கள் குற்றத்தைப் பொருக்கவேண்டுமென்றார்கள்.

இவற்றிற்கு முன்பு இராககிருகத்தை ஆண்டு வந்த விம்பாசாரனுக்கு தனது புத்திரன் அஜாத சத்துருவும், அசோதரையின் தமயன் பிருமனும் துஷ்ட செயல்களிற் திரிகின்றார்களென்றறிந்து அவர்கள் இருவரையும் அழைத்து கண்டித்தான். அவனுடைய நற்போதனையை சகிக்காத பிருமன் அஜாதசத்துருவிற்கு கோபத்தை மூட்டி விம்பாசாரனை கொலை செய்யும்படி ஏகினான்.

அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்ட அஜாதசத்துரு நள்ளிரவிற் சென்று தனது தந்தையைக் கொல்லும்படி ஓர் ஆளை ஏவிவிட்டு பிருமனிடஞ் சென்றான்.

பிருமனும் அஜாதசத்துருவைக்கண்டு முடிந்ததா என்றான். அதற்காகவே ஆளை நியமித்து வந்திருக்கின்றேன் கூடிய சீக்கிரம் சங்கதிவருமென்று கூறினான்.

அதனை வினவிய பிருமன் அஜாதசத்துருவைக் கோபித்து அரண்மனை யருகில் ஆட்கள் போகமாட்டார்கள் வேவுகர்களும் விடமாட்டார்கள் நீரே அவ்விடஞ் சென்று விம்பாசாரனைக் கொலை புரிய வேண்டுமென்று விரட்டினான்

பிருமன் மொழிக்கு மறுமொழி கூறாது அஜாதசத்துருவானவன் அரண்மனைச்சேர்ந்து இரவில் தந்தை யுலாவுமிடத்தை நோக்கினான். அங்கு தான் முன்பு அனுப்பிய ஆளானவன் அரசவுடையணிந்து வேவுகரறியாது அரண் சேர்ந்து விம்பாசாரன் வெளிவரின் கொலை புரிய உலாவிக் கொண்டிருந்தான்.

அவனது உடையின் மாறுதலை அறியா வஜாதசத்துரு தந்தையே உலாவிக்கொண்டிருக்கின்றாரென்று பதுங்கி வாளைவீசி அவனை இரண்டு துண்டமாக்கிவிட்டு ஓடி பிருமனை அணுகி முடித்துவிட்டேனென்றான்.

அதனை வினவிய பிருமன் ஆனந்தங்கொண்டு இனி நாமிங்கு இருக்கப் படாது புத்தரிருக்குமிடத்தைக் கண்டு அவரையும் முடித்துவிடவேண்டுமென்று அம்பும், வில்லும், யானையும், ரதமுங்கொண்டு வெளியேறி வந்து பகவனை பல இம்சைகள் புரிந்தும் பலியாது அவர் பாதத்தைப் பற்றிக்கொண்டு கெஞ்சுங்கால் யானையுரத்தோன் இருவரையும் நோக்கி சிறுவர்களே! விம்பாசாரனை முடித்துவிட்டீர்களோ என்றார்.

இருவர் செவியிலும் அம்மொழி கேட்டவுடன் இடியுண்ட சர்ப்பம் போல் திகைத்து பயமும் அழுகையுந் தோன்றி ஐயனே! விம்பாசாரனை மடித்து விட்டோமென்றார்கள்.

சிறுவர்களே! கொதித்த உள்ளஞ் சுட்டழியுமேயன்றி குளிர்ந்த உள்ளம் ஒருக்காலும் அழியாது. நீங்கள் கொதிப்பேற்றி அனுப்பிய ஆளை நீங்களே கொலை புரிந்து இன்னுங் கொதிப்பேறி இவ்விடம் வந்துவிட்டீர்கள். ஆயினும் உங்களுள்ளக் கொதிப்புகள் யாவும் பனிபருவதத்தில் மோதி பாழடைந்து விட்டதினால் அதனுணர்வைக்கொண்டேனுந் தீவினைகளை அகற்றி நல்வினையைப் பெருக்குங்கோளென்றார்.

அவ்வருள்மொழியை வினவிய இருவரும் ஐயனை வணங்கி எங்கள் குற்றங்களை மன்னிக்கவேண்டுமென்றார்கள்.

பகவன் இருவரையும் நோக்கி சிறுவர்களே! நீங்கள் இருவரும் விம்பசாரனிடஞ் சென்று நீங்கள் செய்துவந்த தீவினைகள் யாவையும் விளக்கி இனி யாங்கள் செய்ய வேண்டிய நல்வினைகள் யாதென்று உசாவுவீர்களாயின் அவரவற்றை விளக்குவார். நீங்கள் அவரையே குருவாக வழிபட்டொழுகுவீர் களாயின் துக்கத்தைப் போக்கிக்கொள்ளுவீர்களென்றோதி இராஜகிருகம் அனுப்பிவிட்டு குன்றைவிட்டிழிந்து காடாகும் முல்லை நிலத்தில் சேர்ந்தார்.

முல்லைநி க்கள் யாவரும் மாதவனைக்கண்டு வணங்கி பாலைக் கொண்டு வந்து கொடுத்து அருந்தும்படி வேண்டிக்கொண்டார்கள்.

அப்பாலில் நெய்யுந் தயிறுங் கலந்திருப்பதைக்கண்டு அதைப் பிரிக்கும் வகைத் தெரியாதவர்களாயிருக்கின்றார்கள் என்று அறிந்து அவர்களிடமுள்ளப் பால்கள் யாவையுங் கொண்டுவரச்செய்து ஒரேசாடியிலிட்டு மத்தினால் கடையும்படிச்செய்து அதன்மேல் மிதந்த வெண்ணெய்யை எடுத்து ஓர் பாத்திரத்தில் வைத்தபோது அஃதின்னவஸ்துவென்றும், இவ்வகை உபயோகத்திற்கு உதவுமென்றும் அறியாமல் திகைத்து நின்றார்கள்.

**அசோதரை நெஞ்சுவிடு தூது - மகா ராஜாதுறவு**

முல்லை புகுந்து முதலெழுமு மாய்ச்சியர்தம்
பல்லை ஒத்த முல்லை பகுத்தறிந்தங் - கொல்லை
தயிர்சாடி மத்துடனே தாங்கி மருதத்
தியற்பள்ளாரர்ப்ப வெழுந்து.

**அருங்கலைச்செப்பு - முல்லைப்பத்து**

முல்லை புகுந்தான் முனையாச்சிய ருரிபால், வெல்லை விளித்தானிறை. பாலினுரைப்பும் பருதயிறும் வெண்ணெய்க் , கோலமுரைத்தான் குரு. கன்றுக்களித்து களிப்பூட்டி மிக்கு பால், என்று முமக்கென்றறி.
புள்ளாங்குழலாற் புள்ளினான் வாய்மெய்த் . தெள்ள விளித்தார் திரு.

அதனை உணர்ந்த பகவன் வெண்ணெய்யை வாயிலிட்டுப் புசித்துக் காட்டியதுமன்றி பாலைக்காய்த்து தயிராக்கி வெண்ணெயெடுத்து நெய்யுறுக்கும் வகைகளையும் விளக்கி பசுவின் மடியில் கன்றானது பாலூட்டி திருப்தியடைந்தபின் மிகும் பாலைக் கரந்துக்கொள்ளவேண்டுமென்றும் அங்ஙனம் கன்றுக்கு பாலைத் திருப்த்தி செய்யாமல் கரப்பீர்களானால் உங்கள் புத்திரி புத்திரர்கள் யாவரும் புசிப்பற்று புலம்பித்திரிய நேரிடுமென்று கன்மபலனை விளக்கி அவ்விடம் மாடு ஆடுகளைக் கார்க்கும் காவலர்களை அழைத்து அவர்களுதும் புள்ளாங்குழலை வாங்கி அதிலுள்ள நான்கு துவாரத்திலும் நான்கு விரல்களை ஊன்றி முதல் துவாரந் துக்கம், இரண்டாந்துவாரம் துக்கோற்பவம், மூன்றாந்துவாரம் துக்க நிவாரணம், நான்காம் துவாரம் துக்க

நிவாரணமார்க்கம் என்றுங் குழலூதுங்கள் குழலூதுங்கோளென்றோதி துக்கம், துக்கோற்பவம், துக்க நிவாரணம், துக்க நிவாரணமார்க்கமாகிய இந்நான்குமே நாவினின்று வெளிப்படும் நான்கு வாய்மெய்கள் என்னப்படும். நான்கு வாய்மெய்களென்று சத்தியமாக நாவினின்று எழும் மெய்வாக்கியங்களும் இதுவேயாம்.

இவற்றை உணரும் ஒவ்வொருவனும் பொல்லாங்கென்னும் பாவங்கள் யாவையும் அகற்றி நன்மெய் கடைபிடித்து உள்ளக்களங்கங்களைப் போக்கி தெள்ளிய சுகம் பெறுவான். அங்ஙனமின்றி நாவினால் பொய்யைச் சொல்லித்திரியும் பொய்வாயாம் வாய்ப் பொய் உள்ளோர்க்கு முற்கூறியுள்ள நான்கு வாய்மெயும் விளங்காது. ஆதலின் உங்கள் ஊதுகுழலிலுள்ள நான்கு துவாரமே நான்கு வாய்மெய்யாகக்கொண்டு குழலூதி சருவ மக்கள் இதயங் களையுஞ் கத்தி செய்வதுடன் வீரசெந்துக்களைக் கொலை புரிந்து கோரோசினம் விற்று சீவிப்பதினும் பால், தயிர், நெய், தேன், அறக்கு, மெழுகு, மயிற்பீலி இவைகளைக் கொண்டு போய் மாறி சென்னெல் சிறுபயிறு இவற்றைக் கொண்டுவந்து சுகசீவனஞ் செய்யுங்கோளென்று விடுத்து நஞ்சை நிலங்களுள்ள மருதநிலத்திற் சேர்ந்தார்.

அவ்விடஞ்சென்று அங்குள்ளக் குடிகளை அழைத்து பூமியைப் புழுகவழுகக் கலக்கி புன்செய் போக்கி நஞ்சையாக்கி சென்னெல் விளைக்குஞ் சாதனங்களையும், கோதமுது நெல்விளைக்கும் போதங்களையுமூட்டி, தென்னை, கரும்பு, வாழை, பலா முதலிய விருட்சக்காப்புகளையும் காட்டி, ஓர் புறம் நீர் கட்டி, ஏறிபாய்க்கும் வகைகளையும், பூமியை உழுது கலைக்குங் கலைப்புகளையும் உணர்த்தி குளங் கிணறுகளின் நீரேற்றுஞ் சால்களையும் பூட்டி வேளாண்மெய்ப் பயிரிடுந்தொழில் விருத்தியை நாட்டி, அதினால் அடையும் பலனை இந்திரவியார அறஹத்துக்களுக்கும், நகரை ஆண்டுகாக்கும் அரசர்களுக்கும் அளித்து சென்னெல் இவைகளைக் கொடுத்து தயிறு, பால், நெய் இவற்றைப் பெற்றுக்கொள்ளுதலும், தெங்கு, வாழை, மா இவற்றைக் கொடுத்து உலோகம் இரத்தினம் முதலியவைகளைப் பெற்றுக் கொள்ளுதலுமாகிய மாற்றலுடன் அங்கப்பழுதுற்றோர்களையும், ஆதுலர் களையும் ஆதரித்து

ஈகையினிலையிலும் இதய ஒழுக்கத்திலும் இருந்து மேழியை நடாத்துவீர்களாயின் மாதம் மும்மாரி பெய்து மேழிச்செல்வம் பெருகி சுகம் பெற்று வாழ்வீர்கள்.

உங்களுக்குள்ள ஈகையையும், அன்பையும் அகற்றிவிட்டு மேழியைத் தொடுவீர்களாயின் பூமியழுந்தி, அன்புகாணாது ஈகைசிறந்து வானம் பெய்யாது இவ்வகை பூமி அழுந்தாமலும் வானம் பெய்யாமலும் போமாயின் சகல தானியமும் விளைவுகுன்றி சஞ்சலத்திற்கு ஆளாகுவீர்கள்.

வானமானது யாதொரு பிரிதிபலனையுங்கருதாது பூமியில் பெய்து சகல சீவராசிகளையுந் தோற்றவைக்கின்றது.

பூமியும் யாதொரு பிரிதிபலனையுங் கருதாது சகல சீவராசிகளுக்கும் உணவீய்ந்து உயிர்ப்பிச்சை அளிக்கின்றது.

இவ்விரண்டின் செயலையுங் கண்ணுற்றுவரும் நீங்கள் உங்கள் இதயங் களிலும் மற்றவர்களின் பிரிதிபலனைக் கருதாது அன்பைப் பெருக்கி ஈகையையே இயல்பாகக் கொள்ளல் வேண்டும்.

அவ்வகை அன்பை ஆதாரமாகவும், ஈகையை இயல்பாகவுங் கொண்டு மேழிச்செய்வீரேல் உங்கள் பூமியும் பண்ணையூன்றி வானமுங்கோறிய காலத்திற் பெய்து பயிறுகளும் பெருகி தானிய விருத்தியும் உண்டாகும். குடிகளும் சுகமுற்று அரசாங்கமுஞ் சிறப்புற்று அகமகிழ்வதால் அறிவின் விருத்தியை நாடும் மகாஞானிகளும் விருத்தி பெற்று தன்னையுணர்ந்து தற்பரமாகி நற்சீர்திருத்த விருத்தியால் சருவசீவர்களையுந் தன்னிற்றானே விருத்தியடையுஞ் செயல்களில் நிறுத்தி சுகம் பெறச் செய்வார்கள்.

அத்தகைய அன்பின் ஆதாரமும் ஈகையின் இயல்புமற்று மேழியைப் பற்றுவீர்களாயின் பூமியுமழுந்தா, வானமுஞ் சுறுங்கும், பயிறுங் கருகும், தானியமுங் குறையும், குடிகளும் ஷீணமடைவார்கள், கோனுங் குதூகலங்

குறையும், ஞானிகளுந்தியங்குவர்.

இத்தகைய ஞானிகளின் திகைப்பினால் சருவ சீர்த்திருத்தங்களுங் குறைந்து தேசத்தின் சிறப்புங்கெட்டு பற்பல விஷபீடிதங்களால் பதிகுலைந்து போவீர்கள்.

இவ்வகையாய்ப் பதிவிட்டு மற்றோர் பதியடைந்து மதிகலங்குவது சுகந்தருமோ அன்றேல் இருந்தபதியிலிருந்து மதிகலங்காதவை சுகந்தருமோ என்றார்.

அதனை வினவிய பள்ளராம் வேளாளத் தொழிலாளர்கள் அறவாழி யானை வணங்கி ஐயனே இருந்தபதியிலிருந்து இதயசுகம் பெறுவதே இனிய தென்றார்கள்.

அன்பர்களே! நீங்கள் வாசஞ்செய்யும் வயலோ கிராமமென்னப்படும். கிராம்மென்பதின் நிலையோ சகல தானியங்களையும் நிறப்பியுள்ளக் களஞ்சியம் என்னப்படும். அக்களஞ்சியமோ சருவசீவர்களுக்கும் உயிரளிக்கும் உயிர்ப் பென்னப்படும்.

அத்தகைய உயிர்ப்பிற்கு ஆதாரமாகும் உங்களுள்ளங்களில் அன்பையும், ஈகையையும் சதாநிறுத்தி பயிறிடும் வேளாளத் தொழிலை நடாத்துவீர்களாயின் சகல சீவராசிகளின் சுகங்களுக்கு ஆதாரமாவதுடன் நீங்களும் சுகித்து வாழ்வீர்களென்றோதி அவர்களை விட்டு விலகி நெய்த நிலஞ்சார்ந்தார்.

**அசோதரை நெஞ்சுவிடு தூது - மகா ராஜா துறவு**

தியர்பள்ளரார்ப்ப வெழுந்து - வயற்புடைசூ ழேறிகுணங்களெலாமுரைத்து நெய்தனிலஞ்.

சாரவெழுந்து தகும்பரவர் - நேரும்.

**அருங்கலைச்செப்பு - மருதப்பத்து**

நஞ்சையுற நீர் நறுநெல்விளை கரும்பு, புஞ்செய் பலனாம்பனி

ஏறிநீரோட்டு மெழிலும் பலனுங், கூறிநின் றீயந்தான் குரு

ஆடும்பரப்பு மதன் பலனைக்காட்டும், வீடுஞ் சுகமதுவேயாம்
தென்னை கமுகு தெளிபலாபுன்னை, முன்னீர் விளைவாமுணர் வேளாண்மெய்கொண்டு வினை ஈகையாதல், மாளாமெய் ஆண்ட மனம்.

**பின்கலை நிகண்டு**

புரந்தரித்திடுதலாலே புரந்தரனென்னு நாமம்
வரந்தரும் பிண்டி வேந்தன் வாக்கிலிந்திரனே பெற்றா
னிருந்தவனாதிகால மியற்றிய திப்பாற் கேண்மின்
சரந்தநீர் வயல்களாலே சூழ்ந்தவூர் கிராமமாமே.

கடற்கரையோரமாய் நெய்த நிலத்தை அடுத்த போது அங்குள்ள கரையோர் களாகும் பரவர்கள் யாவரும் பகவனை வந்து வணங்கி, ஐயனே நீவிர யாவீர், வந்த காரணம் யாதென்று வினவினார்கள்.

அக்கால் அருகன் பரவர்களை நோக்கி உங்கள் தொழில் யாது போஷிப்பு எவ்வகை என்றார்.

ஐயனே! எங்கள் போஷிப்பு சமுத்திர மச்சங்களைப் பிடிப்பதும் விற்பதும், புசிப்பதுமே போஷிப்பு என்றார்கள்.

அத்தகைய நீர்வாழ் ஜெந்துக்களைக் கொன்று சீவிக்காது வேறுவகையில் சீவிக்கலாகாதோ என்றார்.

ஐயனே! எங்கள் பீடிபீடியாங் குலத்தொழில் வலைத் தொழிலேயன்றி வேறு தொழிலறியோம், யீதன்றி நீரில் வாழுங் செந்துக்களை நிலத்திற் கொண்டு வந்தவுடன் மடிந்து விடுவதனால் அவற்றைக் கொன்றாலென்ன, தின்றாலென்ன, விற்றா லென்னவாம் என்றார்கள்.

பரவர்கள் மொழியைக் கேட்ட பங்கய மூர்த்தி புன்னகைக் கொண்டு அன்பர்களே! உங்களை நீரில் போட்டு வைத்தால் சீவித்திருப்பீர்களோ என்றார்.

ஐயனே! மூச்சு திணரி மடிந்து போவோம் என்றார்கள். நிலத்தில் வாழும் உங்களை நீரில் போட்டு கொன்றாலென்ன, நீரில் வாழும் மட்சங்கள் உங்களைத் தின்றால் என்னவென்று நீங்களும் இருக்கலாகாதோ என்றார்.

ஐயனே! நிலத்தில் வாழும் யாங்கள் வலைகளைக் கொண்டுபோய் நீர்வாழும் ஜெந்துக்களைக் கொண்டு வருகிறோம். அது போல் நீரில் வாழும் செந்துக்கள் எந்த வலைகளைக் கொண்டு வந்து எங்களை நீரிற் கொண்டு போய் கொல்லும் என்றார்கள்

அவற்றை வினவிய அவலோகிதர் அன்பர்களே! நீரிலுள்ள மட்சங்களைப் பிடிக்கும் வலைகளும் உங்களிடமிருக்கின்றது. பாசபந்தமென்னும் வலைகளும் உங்களிடமிருக்கின்றது. ஆனால் நீங்கள் அதை அறியமாட்டீர்கள். அவ்வலையோ பேராசை என்னும் நூலைத்திரித்து பெருந்திண்டி என்னும் கயிராக்கி பொறாமெய், வஞ்சினம் , சூது, களவு, கொலை, கள்ளருந்தல் காமியமென்னும் முடிகளிட்டு கோபமென்னுங் கரையோரங் குஞ்சங்கட்டி முறுக்கேறிக் கொண்டு வருகின்றது.

அவ்வகை முறுக்கேறும் வலையால் என்று சூழப்படுகின்றீர்களோ அன்றே அதில் சிக்குண்டு துக்கம் பெருகி மாளாப்பிணியாலும் முப்பாலுந் துன்பமடைந்து பிறவி என்னும் அலையால் பீடிக்கப்படுவீர்கள்

இத்தகைய சொற்பசீவனத்திற்காக வலையேந்தி மச்சங்களைமடிப்பதினும் முத்து, பவழம், சங்கு, உப்பு இவைகளை சேகரித்து விற்பீர்களானால் அதிக சீருஞ் சிறப்பும் பெற்று பிறவியின் வலையையும் அறுத்து நிருவாணசுகமும் அடைவீர்களென்றார்.

**உதயணன்காதை - மகத காண்டம்**

பாடலோவாப் பழனப் படைப்பைக் கூடுகுலைக்கமுகின் கொழுநில லசைந்த மன்றுனற்பார்க்கு (மருதந்தமயி) குன்றயற்பரந்த குளிர்கொ ளருவி
மருவினமாண மூதூர் /வெறிது சேரல் விழுப்பமன்றெனக்
கானவாழைத் தேனுறு கனியு / வெள்ளிலைப் பல்லின் முள்ளுடை யமுர்தமுந் திடரலண்மரத்துத் தேம்பலாக் கனியும் வரைதாழ் தேனொடுகா அயவிரை சூழ்ந்து
மணியு முத்து மணிபெற வயங்கி பணிவில் பாக்கம் பயங் கொண்டு கவரா நிறைந்திழைத்தகு நீங்காச்செல்வமொடு / சிறந்த சீர்த்திக் குறஞ்சி ) கோலிக்
கல்லென சும்மையொடு கார்தலை மணந்து / (முல்லை) முதுதிணைச் செல்வ மெய்தி (பாலையு நெய்தலும்) வேலியாகக் கோல மெய்திக் குறையவ ணகற்றி
(துறவிற் சிறந்த சொல்லறன் விளித்தது) / பிறப்பற முயலும் பெரியோன் பிறந்தது சிறப்பிடை யறாத தேசிக முடையது / மறப்பெருந் தகையது மாற்றோரில்லது
விறற்புக முடையது வீரியமைந்த /துலகிற் கெல்லாந் திலகம் போல்வ
தலகு வேந்த னாணை கேட்ப தாம்பு மல்லும் பரந்துமிகை யில்லது
செல்லப் பெருங்குடி சிறந்தரை பெற்றது / நல்குர வாளரை நாடி நிற்பது
நன்பெரும் புலவர் பண்புளி பண்ணிய புகழ்ச்சி முற்றா மகிழ்ச்சியின் மலிந்த
வின்னவை பிறவு மெண்ணுவாம் பிகந்த / மன்பெருஞ் சிறப்பின் (மகதனன்னாடு)
சென்று சார்ந்தனராற் செம்மலோ டொருங்கே.

அவ்வருமொழிகளை வினவிய பரவர்கள் ஆனந்தங்கொண்டு ஐயனே! உயிர்வதையின்றி சுகசீவனம் ஏதேனும் உண்டாயின் அவற்றை விளக்க வேண்டும் என்றடி பணிந்தார்கள்.

அவ்வருந்துதலைக் கேட்ட அண்ணல் அவ்விடமுள்ள ஓர் ஓடத்தில் சிலரை ஏற்றிக்கொண்டு ஆழியிற்சென்று நீரில் மூழ்கவைத்து முத்துள்ள மடிந்த இப்பிகளையும், பவழக்கொடி பாறைகளையும், சிறு சங்கினங்களையும், விளக்கி சுகசீவித வழிகளைக்காட்டி, நல்லறத்தை நாட்டி நிருவாண பாதையில் விடுத்து மகதநாட்டை அகன்று மாளவதேசஞ் சேர்ந்தார். பரவர்களில் மச்சம் பிடித்து சீவிக்கும் இச்சையுள்ளோர் நீங்கலாக மற்றுமுள்ள விவேகிகளில் சிலர் முத்து, சிப்பி , சங்கு, பலகரை, உப்பு இவற்றால் சீவித்து சீருஞ் சிறப்புமடைந்தார்கள்.

**அசோதரை நெஞ்சவிடு தூது**

மகாராஜாதுறவு வலைகுறையலாந்தணித்து வன்படவுதள்ளி
குலவுகடலோடுரவு கொண்டு - நிலவலய
மாழமொடுநீள மளத்தற்கரிதாகி
யேழ்கடல் வெள்ளமெனச் சிறந்து.

**அருங்கலைச்செப்பு - நெய்தற் பத்து**

வலைத்தொழிலையேந்தி வருமீனைப்பற்றுங் குலத்தொழிலாம் என்றார் குடி முப்போதுயுரை முதலழித்து போடித்தல், ஒப்பாதுலகமுமென்றான் கொலையொழித்து போடிக்குங் கொள்ளுமுதலாம், பலப்பயிறும் பற்றும் நிதி சூழோடங்கொண்டு சுழிநீரழுத்தி, ஆழாழி யாய்ந்தானறன் முத்தும் பவழமுரைச்சங்குமிப்பி , நித்தங் கொலையகற்று நேர்.

25. **மஹாமங்கள் காதை**

அருகன் அவ்விடம் விட்டு அங்கங்கு காணும் மக்களுக்கு அருள் மொழியூட்டி சத்தியதன்மத்தைப் பரவச்செய்துக்கொண்டே சாவித்திரி நகரஞ் சேர்ந்து ஜீத்தாவனத்திலுள்ள அநாதபிந்தகனது ஆச்சிரமத்திற்றங்கினார்.

அவ்வாச்சிராமவாசிகள் யாவரும் அத்தேச வாசிகளால் தேவர் சபையெனக் கொண்டாடும் நீதிநெறிவாய்மெயில் நிலைத்திருந்தார்கள்.

அவர்கள் யாவரும் அருகக்கடவுளைக் கண்டவுடன் எழுந்து தேவாதி தேவ செங்கனெடுமாலே திரிபுறமிதித்தோய், தேவரீர் தெரிசனஞ்சென்றுந் திரும்பக் கிடைத்த வெங்கள் பாக்கியமே பாக்கியம் பஞ்சசீல சிலாக்கியமே சிலாக்கியமென்று வணங்கி சாரணர்கதி வேண்டுமாறு சங்கறநிறையோனை நோக்கி சாது உலகத்தில் மங்களமென்னும் வார்த்தையாதை குறிக்கும் அதன் பலனென்னை அவற்றை விளக்கவேண்டுமென்றார்கள்.

அநாதபிந்தக வாச்சிரம சங்கத்தோர் யாவரும் ஒன்றைக்காணினும் கோட்டம் அதன் குணாகுணங்களையும் பலன்களையும் தேறவிசாரித்து தங்களுக்கேனும் தங்கள் தேசவாசிகளுக்கேனுந் துக்க நிவர்த்துக்கேதுவாய் கசவிருத்தி தருமாயின் அவற்றை ஏற்பதும் யாதாமொரு சுகவிருத்தியுங் காணா வின் அம்மொழிகளை ஏற்காமலும் விவேகமிக்க நடப்பவர்களாதலின் அவர்கள் வினாவுக்கிதங்கிய மாதவநாதன் மகாமங்களத்தை விளக்கவாரம்பித்தார்.

சமணீர்காள் உலகமாக்கள் தங்கள் தங்கள் இல்லங்களில் வாழைக்கமுகு பலா முதலியவைகளை நாட்டி சகலவாத்தியங்களும் முழங்க சிலர் துக்கத்திலும், சிலர் ஆனந்தத்திலும், சிலர் சுகதுக்கக்கலப்பிலும் இருந்து வரும் செயலை மங்களகாலமென்றும் மங்களகரமென்றும் கூறுவார்கள்.

அஃது அகுஸல கர்மங்களாகும் அதாவது பாம்பின் வாய்ப்பட்டத்தேரை எறும்பை பிடித்துண்பதற்கு ஒக்கும்.

குஸலகன்மங்களாவது யாதெனில் ஒரு குடும்பத்தில் சதியும் பதியுமாகிய இருவர் மனம் ஒன்றாகவும் களங்கமற்ற நெஞ்சினராகவுமிருந்து இல்லற தருமத்தை நல்லறமாக நடாத்தி சருவ சீவர்களுக்கும் உபகாரிகளாக விளங்கி சத்தியதன்மத்தில் நடப்பார்களாயின் அச்செயலையே மகாமங்களமென்று கூறப்படும்.

மற்றுமோர் குடும்பத்தில் சதியும் பதியும் மனமொற்று வாழ்வதுடன் தங்கள் மாமன் மாமி மாதுலன் மாதுலி தனையன் தனைவி முதலிய பந்துமித்திரர் கூடிவாழும் வாழ்க்கையில் யாதாமோர் வன்னெஞ்சமுமின்றி நன்னெஞ்ச முடையவர்களாய் தங்களுக்குக் கிடைக்கும் பொருளை தங்களை அடுத்த பந்துமித்திரர்களுக்கும் அளித்து தாங்களும் அனுபவித்து களங்கமற்ற வானந்தத்தில் வாழ்தல் மகாமங்களமென்று கூறப்படும்.

ஓர் கிராமவாசிகளும் அவ்வகையாகவே ஒருவருக்கொருவர் பேதமின்றி ஒருவருக்கொருவர் உபகாரிகளாயிருந்து உற்றதுணைவர்களாய் சேர்ந்து வாழ்தல் மகாமங்கள் மென்னப்படும்.

இவ்வாறாகவே ஓர் தேசவாசிகளும் அத்தேசவரசனும் சகல தேசவரசர்களின் சமாதானத்தைக் கருதி உப்பரிகையில் வெண்கொடி நாட்டி குடிகள் யாவருக்கும் சத்தியதன்மத்தையூட்டி ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டி வாழும் வாழ்க்கை சுகந்தரும் நாட்டில் வாழ்தல் மகாமங்கள மென்னப்படும்.

முன்ஜெனனமாம் முன் மெய்யில் செய்த நல்வினைகளாம் புண்ணியபலனால், இம்மெய் புண்ணிய புருஷனென விளங்கும், பூர்வ பயனால் தன்னையும் தனக்காதாரச் செயல்களாம் நற்பயனையே பெருக்கி வருதல் மகாமங்களமென்னப்படும்.

சிறந்தகலை நூற்களின் ஆராய்ச்சியிலும் சகலருக்கும் உபகாரியாக விளங்கக்கூடிய பெருமுயற்சியிலும் தன் தேகத்தினால் மற்றோர் தேகத்திற்குத் தீங்குவிளைத்து நோகசெய்யாமலும், தன்னாவினால் மற்றவர்களைக்கொடூரமாக வைது அவர்களைப் புண்படுத்தாமலும், தன்மனதுள் வஞ்சினத்தை நிறப்பி மற்றவர்களுக்குக் கேடுண்டாக்காமலும் இருக்கும் மனோவாக்கு காயதிரிகரண சுத்த வாழ்க்கையே மகாமங்களமென்னப்படும்.

மாதா பிதாக்களை ஈன்றவர்கள், வளர்த்தவர்கள், கார்த்தவர்களென்று எண்ணி அவர்கள் விருத்தாப்பியகாலத்தில் ஆனந்தமாக அமுதூட்டி அவர்களுக்கு யாதொரு கவலையுந் தோன்றவிடாமல் ஆதரித்தல் மகாமங்கள் மென்னப்படும்.

மனைவி மக்களை விரும்புவோர் நற்கருமவிருத்தியால் சம்பாதிக்கக்கூடிய பொருளை சேகரித்து அதினால் தனது மனைவி மக்களுக்கு யாதொரு குறைவுமின்றி அமுதூட்டி கலை நூல் விருத்தியில் வளர்த்தல் மகாமங்கள மென்னப்படும்.

கல்வியில் விருத்தியடையுஞ் சிறுவர்கள் தங்கள் தாய் தந்தையரை கனஞ் செய்வதுபோல் மற்றுமுள்ள பெரியோர்களையுங் கனஞ் செய்து அவர்களுக்கு வணக்கமுற்று வளர்த்தல் மகாமங்களமென்னப்படும்.

புண்ணியதானஞ்செய்தல், சத்தியதன் மத்தில் நடத்தல், குடும்பத்தை யாதரித்தல், சகலருக்கும் உபகாரியாயிருத்தல், புண்ணியகன்மங்களை விருத்தி செய்யக்கூடிய தொழில்களின் முயற்சியிலிருத்தல், தான் நடத்துந் தொழிலால் தனக்கு உபகாரமாவதுமன்றி ஏனையோர்க்கும் உபகாரமுண்டாகக் கருதிச் செய்தல் மகாமங்கள் மென்னப்படும்.

எக்காலுந் தனக்குள்ளெழுங் காம, வெகுளி, மயக்கச்செயல்களின் பேரில் நாட்டமாயிருந்து அவைகளை விருத்தியடையவிடாமல் நசித்துவருதல் தனதறிவையும், தனது வித்தையையும், குடும்பத்தையுங் கெடுக்கக்கூடிய மயக்கபானங்களை அருந்தாதிருத்தல் மகாமங்களமென்னப்படும்.

நீதிநெறிகளின் வாக்கியங்களையும், அதின் நடைகளாம் ஒழுக்கங் களையும், அதன் பலன்களையும் நோக்கி நிற்றல், வணக்கத்தையும் ஒடுக்கத்தையுமே கருதுதல் தன்மபோதங்களாகும் ஞான சொற்களை செவிகளில் கேட்க விரும்புதல் மகாமங்களமென்னப்படும்.

சாந்தமும் மிருதுவுமான வார்த்தைகளைப் பேசுதல், சமணகுருக்களின் தெரிசனத்தையும் அவர்கள் நீதிபோதங்களையும் விரும்பியிருத்தல் துக்கந் தோன்றுங்காலங்களிலெல்லாம் தன்மவிசாரிணைப்புரிதல் மகாமங்கள் மென்னப்படும்.

உலகப் பொருட்களின் பேரில் அதியவாக்கொண்டு பற்றும் பற்றுக்களை அறுத்து துக்கமற்று, பயமற்று, பிணியற்றும் இருத்தல் மகாமங்கள மென்னப்படும்.

மனத்தையும், வாக்கையும், தேகத்தையுங் காக்கக்கூடிய விரதங்களையும், கொன்றுதின்னாதிருக்கும் நோன்புகளையும் அனுஷ்டித்து அஷ்டாங்க மார்க்கத்தில் நிலைத்து சுகவாரியாம் அலையற்ற கடல்போற்றெளிந்து நிருவாணநிலை பெறுதல் மகாவுத்தம் மங்களமென்னப்படும்.

இத்தகைய உத்தமமங்களங்களில் நிலைத்த புருஷனை காமனுங் காலனும் அணுகான் உலகமக்களாலும் அவனை வெல்லமுடியாது சகலகீர்த்திப்பெற்ற பெரியோனாகியும், ஜாக்கிரதையில் நடப்பவனாகியும் இருப்பான். அவனே உலகத்தில் ஜெயசுபமங்களனாவான். என மங்களகரத்தை விளக்கியவுடன் அநாதபிந்தக வாச்சிரமவாசிகள் யாவருமெழுந்து மங்களநாதனைநோக்கி அவலோகிதா! உலகத்திற் தோன்றும் சிற்றின்பச்செயல்கள் யாவும் அவமங்களமென்றும், பேரின்பச்செயல்கள் யாவும் மங்களமென்றுந் தெரிந்துக் கொண்டோம், அனந்தநிலையை விண்டோம், சதா சுகங்கண்டோம். இத்தகைய சத்தியதன்மத்தை உணராது அசத்தியதன்மத்தில் நடப்பது அழிவுக் கேதுவென்று தெள்ளற தெளிந்தோம். இவற்றிற்கு யாது கைம்மாறு செய்வோமென வணங்கி நின்றார்கள்.

அவர்களன்பின் வாக்கையும் ஆனந்த நோக்கையுங்கண்ட அருகன் சமணீர்காள்! தங்களுக்குள் மங்களத்தை விரும்பும் அன்பர்கள் தங்களுள்ளத்துள் வஞ்சினம், சூது, குடிகெடுப்பு இவற்றை நிறப்பி வைத்துக்கொண்டு மங்களத்தை நோக்குதல் அவமங்களமேயாம். காமியம், பொறாமெய், கள்ளருந்தலாகியச் செயலினின்று மங்களத்தை நோக்குதல் அவமங்களமேயாம். விரோதசிந்தை, வீண்டம்பம், வெகுளியினின்று மங்களத்தை நோக்குதல் அவமங்களமேயாம். தற்புகழ்ச்சி, தானென்னும் அகம்பாவம், தன்னையறியாது நின்று மங்களத்தை நோக்குதல் அவமங்கள மேயாம். தானே சுகிக்க வேண்டும் ஏனையோர் சுகிக்கலாகாதென்னும் ண்ணத்தையும், தானே பிரபுவாக வாழ்தல் வேண்டும் ஏனையோர் பிரபுவாக வாழலாகாதென்னும் எண்ணத்தையும், தானே தக்கவாடையாபரணங்களை அணைதல் வேண்டும் ஏனையோர் அணையலாகா தென்னும் எண்ணத்தையும், தானே சகலகலை பண்டிதனாக விளங்க வேண்டும் ஏனையோர் பாண்டித்தியம் அடையலாகாதென்னும் எண்ணத்தையும், இதயத்தில் நிறப்பிக்கொண்டு மங்களத்தை நோக்குதல் அவமங்கள் மேயாம்.

களவுச் செயல் மிகுத்தவனைக்கள்ளனென்றும், லோபச்செயல் மிகுத்தவனை லோபி என்றும் அழைப்பது போல் மங்களச் செயல் மிக்கோனை ஜெய மங்களனென்றும் அழைப்பார்கள்.

இத்தகைய மங்களமானது சுகச்செயலாலும், அன்பின் மிகுதியாலும் விளங்குமேயன்றி வாழைக்கமுகை நாட்டுவதாலும், வாத்தியகோஷங்களாலும் விளங்கமாட்டாது.

ஒருநாள் ஒருவன் வாயலில் மணப்பறை அடிக்கின்றான். அதே வாயலில் மறுநாள் பிணப்பறை அடிக்கின்றான். இவ்விரு சுபாசுபச்செயல்களில் எவற்றை மங்களமென்னலாம் எவற்றை அமங்களமென்னலாம். சுபம் அசுபமென்பதும், இறப்பு பிறப்பென்பதும், நித்திறை விழிப்பென்பதும், வேண்டுதல் வேண்டாம் என்பதுமாகிய துவித பாபங்களற்ற நிலையே நித்திய வாழ்க்கையாகும் ஜெயசுபமங்களமென்னப்படும்.

இத்தகைய மங்களத்தையே மணமெனக்கருதி மனக்களிம்பற்று மகாநிருவாணம் பெருகுகவென ஆசிகூறிப் போய்விட்டார்.

26. **உபதேச காதை**

புத்த பகவான் இராஜமாகிரஹத்திலுள்ள கழுகுமலை உச்சியில் தங்கியுள்ள போது ஆனந்தனை நோக்கி யாவரும் ஒன்றுகூடுங்கள் என ஆக்கியாபித்தார்.

ஆனந்தன் பகவனது வாக்கை ஏற்று யாவரையும் வரவழைத்தபின் பிக்ஷு குழாங்களை நோக்கி போதிக்கத் தொடங்கினார்.

ஓ! சகோதிரர்களே! சகோதிரர்கள் ஒருபெருத்த கூட்டங்களில் சந்திக்கும் போது ஒன்றாக யாவரும் கூடி சந்தியுங்கள். உட்காரும்போது யாவரும் ஒன்றாக உட்காருங்கள். எழுந்திருக்கும்போது யாவரும் ஒன்றாக எழுந்திருங்கள். சங்க நிபந்தனைகளை நிறைவேற்றும்போது யாவரும் ஒன்றாக நிறைவேற்றுங்கள். தம்மசாஸனத்தில் கூறியுள்ள சத்தியங்களில் ஒன்றை வீரியத்துடன் நிறைவேற்றி அதன்படி நில்லுங்கள். கண்டசத்திய நிலையை மட்டும் ஒருவருக்கொருவர் ஒன்றாக சம்பாஷித்துக் கொள்ளுங்கள். அதன்பின் இரண்டாவது சத்தியத்தை இடைவிடாது விசாரியுங்கள். சகோதிரர்களில் ஒருவர் நான்குவித சத்தியங்களைப் பூர்த்தி செய்துவருபவராவது

இருப்பார்களாகில் அவரை அணுகி ஒன்றாக சம்பாஷித்து அவரைப்போல் ஒவ்வொருவரும் கடைத்தேறுவதற்காக ஒன்றாக சென்று விசாரிணைப் புரியுங்கள். ஒவ்வொருவர்களிடமும் எழும் ரூப ஆசைகளை யாவரும் ஒன்றாக நின்றுவிலக்குங்கள். எழும்பிய ரூப ஆசைகளை விசாரணையால் தடுத்துவிடுங்கள். இனி எழா வண்ணம் ஜாக்கிரதையாயிருங்கள். ஒவ்வொரு வரிலும் பரிசுத்த ஞானம் விளங்குமெனயாவரும் ஒன்றாக நினைந்து அவர்களில் பெரியோன் எப்போது தோன்றுவாரென சதா ஒவ்வொருவரும் ஒன்றாக சிந்தித்துக்கொண்டிருங்கள். அப்படி தோன்றுவாராயின் அவரையே ஒரு உதாரணமாக வைத்துக்கொண்டு ஒவ்வொருவரும் ஒன்றாகவே சதா விசாரணையுள்ளவர்களாயிருங்கள்.

முத்திபேறு பெருமளவும் சற்றும் சலியாது விடாமுயற்சியாயிருந்து . முடிக்கவேண்டிய பிரயாணத்தை முடித்துவிட்டு சேரவேண்டிய இடமாம் நிப்பாணத்தில் யாவரும் ஒன்றாக சேர பிரயத்தனப்படுங்கள்.

ஓ! சகோதிரர்களே! சத்தியதன்மத்தையே உடையாகக்கொண்ட சகோதிரர்கள் வேறு தொழில் புரியாதிருங்கள். பல விஷயங்களில் தலையிடாதிருங்கள். பொருள் சேகரிக்கவேண்டியயாதேனும் தொழில்களைப் புரியாதிருங்கள். பிரயோசனமற்ற சம்பாஷணைகளைச் செய்யாதிருங்கள்.

சோம்பலுக்கு இடந்தராது சதா முயற்சியுடையவர்களாயிருங்கள். பாப அவாக்கள் அடிக்கடி உங்களை ஏமாற்றவரும் அக்கால் ததாகதர் எந்தெந்த அவாக்களை எந்தெந்த தியானத்தால் சுத்தீகரித்தனரென போதித்துள்ள தியானங்களை யூகித்து தியானியுங்கள்.

சகோதிரர்களில் ஒருவர் நிப்பாணமார்க்கத்திற்கு முதற்படியாம் ஸ்ரோதாபதி மார்க்கத்தில் சித்தி பெறுவாறாகில் அவ்வளவுடன் திருப்தியடையாது அதற்கு மேற்பட்ட ஸ்கிர்தாகாமி மார்க்கத்தையும் பெற முயற்சியாம் தியானத்திலிருக்கட்டும் இரண்டாம் மார்க்கமாம் ஸகிர்தாகாமி மார்க்கத்தில் சித்திபெற்றவுடன் மூன்றாம் மார்க்கமாம் அநாகாமி மார்க்கத்தை நாடி தியானிக்கட்டும். அநாகாமி மார்க்கத்தில்

சித்திபெற்றவுடன் நான்காம் மார்க்கமாம் அறஹத்து மார்க்கத்தை நாடி தியானித்து நிப்பாணமாம் பரிசுத்த நிலையை அடையும்வரையும் விடாமுயற்சியுடன் முடிக்கும்படி தாண்டுங்கள், இதயத்தை சுத்தி செய்வதே உங்களது தொழிலென நினையுங்கள், பாபகன்மங்களுக்கு அஞ்சுங்கள், மனசுருசுருப்புள்ளவர்களாயிருங்கள் வீரியமுள்ளவர்களாயிருங்கள், சத்தியத்தையே துணையாகத் துணைத் கொள்ளுங்கள், சீலம், ஸமாதி, பிரக்ஞாவென்னும் மார்க்க சத்தியத்திலடங்கிய அஷ்டாங்கமார்க்கத்தின் உண்மெய்களைக்கண்டறிந்து தியானசித்தி பெற்று நிப்பாணசுகத்தை அடையுங்கள்.

ஓ! சகோதிரர்களே ! சகோதிரர்கள் ஒருவருக்கொருவர் அன்பானவர் களாகவும், மனோசுத்தம், வாக்கு சுத்தம், காயசுத்தமுள்ளவர்களாயும் அந்தரங்கத்திலேனும், பஹிரங்கத்திலேனும் யாதொரு குற்றமும் செய்யாதிகப் பவர்களாகவும், உட்காரும் போதும், எழுந்திருக்கும்போதும் நடக்கும் போதும் அன்புமயமாக உட்காருங்கள், அன்புமயமாக எழுந்திருங்கள் அன்புமயமாகவே நடவுங்கள். உட்காரும் போதும், எழுந்திருக்கும் போதும், நடக்கும் போதும் பற்றுக்களை அறுக்கும் விஷயத்திலேயே சிந்தனை உடையவர்களாய் உட்காருங்கள். பற்றுக்களை அறுக்கும் விஷயத்திலேயே சிந்தனை உடையவர்களாய் எழுந்திருங்கள். பற்றுக்களை அறுக்கும் விஷயத்திலேயே சிந்தனை உடையவர்களாய் நடவுங்கள். சகோதரர்கள் இவ்விதகாத அந்தரங்கத்திலும், பஹிரங்கத்திலும் தினேதினே இடைவிடாது சாதனத்தாலும் புத்த தர்ஸனம் காணும் வரையில் புத்த ஒளியை உங்களில் பெறும் வரையில்

இடைவிடாது சாதியுங்கள். இவ்விதமான பரிசுத்த ஞானவிசாரிணையால் நீங்கள் பிறவி என்னும் சக்கரத்தில் சிக்காது தப்பித்துக்கொள்ளுவதுமன்றி துக்கத்தினின்று விடுபெற்று நீங்கள் கண்டகாட்சியை ஏனைய சகோதிரர்களுக்கும் வழிகாட்டிகளாகிய ஒளிப்போன்றிருப்பீர்கள். துக்கமற்று சுகம் பெறுவீர்கள். நிப்பாணமென்னும் கரைசேருங்களென பகவன் போதனையை நிறுத்தினார். பிக்ஷு குழாங்கள் பகவனை முறைப்படி வந்தனை வழிபாடு செய்தனர்.

27. **சுகவர்க்க காதை**

பகவன் உலகெங்கும் சுற்றி சத்தியதன்மத்தைப் போதித்து மக்கள் சுகவழிகளையூட்டி மற்ற சத்தியதன்மத்தைப் போதித்து மக்களுக்கு சுகவழிகளையூட்டி அஹிம்சா தன்மத்தை நாட்டி வருங்கால் இராஜகிருகத் துக்கடுத்த ஓர் குக்கிராமத்திற்குச் சென்று அங்குள்ள ஓர் மரத்தடியில் உட்கார்ந்து உள்விழி பார்வையாம் மௌனத்தில் லயித்து ஏழுநாள் வரையில் கண்திரவாமலும், மூச்சோடாமலும் இருக்கக்கண்ட அக்கிராமவாசிகள் திடுக்கிட்டு ஓ! ஓ! இச்சிறமணர் இறந்துவிட்டாரென்று கருதி இவரது தகப்பன் மண்முகவாகுவை இவரெப்படி கட்டைகளை அடுக்கி தகனஞ் செய்துவிட்டாரோ அதுபோல் இவரையும் நாம் தகனஞ் செய்துவிடலாம் என்று எண்ணிக் கட்டைகளை அடுக்கி இவரை வளர்த்தி தீயினை மூட்டி விட்டார்கள். கட்டைகள் எறிந்து தணிந்தும் இவரது தேகத்திற்கு யாதொரு தீங்குமின்றி மறுபடியும் அம்மரத்தடியில் போய் உக்கார்ந்துகொண்டார். அதனைக் கண்ட அக்கிராம வாசிகள் யாவரும் பயந்து மும்முறை வணங்கி ஐயனே! தங்களை ஏதோ மகத்துவம் பெற்றப் பெரியோரென்று அறியாது தணலை மூட்டி விட்டோம். யாங்களறியாமல் செய்தச் செயல்களை மன்னித்து ரட்சிக்க வேண்டுமென் றிரைஞ்சினார்கள்.

அவற்றை வினவிய மாதவன் கிராமவாசிகளை நோக்கி திருவாய் மலர்ந்து அன்பர்களே! நிருவாணம் பெற்ற ததாகதர் கோபமுள்ளோர் மத்தியில் கோப மில்லாமலும், காமமுள்ளோர் மத்தியில் காமமில்லாமலும், துக்கமுள்ளோர் மத்தியில் துக்கமில்லாமலும், பற்றுள்ளோர் மத்தியில் பற்றில்லாமலும், மரணமுற்றோர் மத்தியில் மரணமில்லாமலும், நித்திய நிலையில் இருப்பவராதலின் நெருப்பின் சுடுகையும், நீரின் குளிர்ச்சியும், வாயுவின் மோதலுமோர் தீங்குஞ் செய்யாதென்று கூறிய அமுதவாக்கைக் கேட்டுணர்ந்த கிராமவாசிகளில் சில விவேகிகள் முயன்று சத்திய சங்கத்தை நாட்டி ததாகதரின் தன்மோபதேசம் பெற்று சமணநிலையுற்று சத்துவசாதனத்தில் நிலைத்து விட்டார்கள்.

**மணிமேகலை**

எண்ணருஞ் சக்கரவாள மெங்கணும் அண்ண லறக்கதிர் விரிக்குங்காலை

**சூளாமணி**

சாதுயர் நீக்கிய தலைவன் றவமுனி /சங்க தருமன் றாமெக் கருளிய

**திரி மந்திரம்**

அற்றார் பிறவி யவரிரு கண்களை / வைத்தார் புருவத்திடையே பார்க்க

வொத்தே யிருக்க வுலகெலாந்தோன்றும் / எத்தாலுஞ் சாவில்லை யிறைவனாமே.

**இடைக்காட்டு சித்தர்**

சாவாதிருந்திடப் பால்கற தன்னிலிருந்திடும் பால்கற

**ஔவை குறள்**

சாகாதிருந்த தலமே மவுனமது / ஏகாந்தமாக விரு

மறவா நினைவா மவுனத்திருக்கில் பிறவா ரிறவார் பினை

இதுமுத்தி சாதன மென்றேட்டில் வரைந்து / பதித்து வைத்தனன் குருபார்

**தாயுமானவர்**

சந்ததமும் வேதமொழியா தொன்றைப் பற்றினது தான் வந்து முற்று மெனலால்

சுக மீதிருந்தாலு மரணமுண்டென்பது சதா / நிஷ்டர் நினைவதில்லை.

**மச்சமுனியார்**

இறந்து போனவர்க் கென்ன மெஞ்ஞானங் காண்

யேச்சி யேச்சி யிகத்துள்ளோர் தூஷிப்பார்.

28. **பரிநிருவாண காதை.**

பகவன் பின்னர் ஆனந்தரைப்பார்த்து ஆனந்தா! புறப்படுவோம் வாவென அழைக்க, ஆனந்தன் பகவன் பின் தொடர்ந்தான். பகவன் பெருத்த பிக்ஷு குழாங்களுடன் புறப்பட்டுச்சென்று அங்குள்ள பாவதரிக்காமாமரத்தோப்பில் தங்கினார்.

**சீவக சிந்தாமணி**

எரிமிடைத்தனைய மாலை இனமணி திருவில் வீசுந்
திருமுடியாரமார்பிற்சேணிபனென்ப நாம
மருமுடி மன்னர்சூழ வலரனியிண்டி வேந்தர்
திருவடி விருந்து செய்வான் றிரண்முர சறைவித்தானே.

**அருங்கலைச் செப்பு - குணசேணிபன் விருந்து**

தானந்த ராஜகிரி தன் பதிக்கோரைங்காத
மானந்த புரியடைந்தான் ஆன். கணநாதன் வந்தமைந்த காட்சிதனைக்கண்டான்
குணசேணிபனென்னுங்கோன்
அருந்தவத்தோன்றன்னை அணுகி அடிபணிந்து
விருந்தோம்ப நின்றான் செவ்வேள்
அவ்விருந்தோமிக்க வரியவிருந்தானும்
பவ்விருந்தஃதானே பழி
பழியேற்றான் மன்னன் பாரோர்கள் தூற்றுகரி,
இழிவேற்றான் பன்றியெனுமேர்
கூர்கழங்கின் கூட்டுங் குமுதமுதச் சோறும்
சேர்த்தளித்த சேணியனார் தூர்
அறியாதார் பன்றி என்றாரங்குணர்ந்தோர் கூரென்றார்
நெறியாயார் நின்றழிந்தார் நேர்.
நெறி நின்றார் மாயணத்தார் நெறியற்றா ரீனணத்தார்
பொறியற்றார் போதத்தவர்

இராஜகிருகத்திற்கு ஐங்காத வழியிலுள்ள ஆனந்த புரியென்னும் குஷீ நகரமாந்தோப்பில் பகவன் வந்திருக்கின்றாரென்றறிந்த குணசேணிபன் என்னும் அரசன் புத்தபிரானிடம் சென்று சாஷ்டாங்க தெண்ட மும்முறையிட்டெழுந்து தேவாதி தேவா திவாகரபாவா, மூவா முதல்வா, முத்திக்கிறைவா, காட்சிக்கதிபா, கருணையோருருவா, சூட்ச சுகுணா, சுந்தரவதனா, ஆதிமூலா, அன்பின் முந்நூலா, வேத முதல்வா, வித்தைக்கதிபா, அருங்கலைநாதா, ஆனந்த பூதாவென்று துதித்து ஐயன்மீர் எமதில்லத்து விருந்திற்கெழ வேண்டுமென்று வருந்தினான்.

அவனது வருந்துதலுக்கு தங்கிய பகவன் விருந்தோம்பி யெழுந்து மறுபடியும் கங்கைக் கரையணுகி தனதாதியடியார் ஆனந்தனையும் பிருங்கியையும் அருகில் அழைத்து பரிநிருவாணத்தை விளக்குகைக்கு சகலதேச சத்திய சங்கத்தோர்களையுந் தருவிக்குமாறு உத்திரவளித்தார்.

**ஆனந்தன் பிருங்கி யென்னும் ஆதிசீடர்கள் வரலாறு**

சக்கிரவர்த்தித் திருமகன் சித்தார்த்தர் பிறந்த காலத்தில் ஆகாயத்திலும் பூமியிலும் அனந்த அற்புத காட்சிகள் தோன்றியதுடன் கன்று ஈணாத ஓர் காராம் பசுவானது வந்து குழவிக்கு பால் சுறந்தூட்டியதும்., அன்றுமுதல் பசுக்களை யாதொரு துன்பமுஞ் செய்யாது ஆதரிக்கவேண்டுமென்று தார்வேந்தன், ஆக்கியாபித்ததுமாகியப் பேரானந்த செய்திகளைக் கேட்டிருந்த ஆனந்தனும், பிருங்கியும் நடக்க சக்த்தி யற்ற சப்பாணிகளாயிருந்தும் காராம்பசுவின் பாலருந்திய கௌதமரை தரிசிக்கவேண்டுமென்னும் அன்பின் மிகுதியால் தவிழ்ந்துகொண்டே சென்று தெரிசித்து தள்ளாடி நடக்கப்பெற்றவர்கள் அரசமரத்தடியில் ஐயன் நிருவாணம் பெற்றது முதல் பரிநிருவாணம் வரை அவரை அடுத்து அருகினின்றே ஊழியஞ் செய்து வந்தவர்களாகும்.

அவ்விருவரும் அவலோகிதர் மொழியைக் கேட்டவுடன் சத்திய சங்கத்தோர் யாவருக்கும் ஐயன் பரிநிருவாணகாலத்தைத் தெரிவிக்க சகலசங்க சமணர்களும்

அறஹத்துக்களும் வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் யாவரையுங்கண்ட அறவாழியான் ஆனந்தமுமகமலர்ச்சி யுடனின்று சகோதிரர்களே! ததாகதர் பரிநிருவாணம் அடையுங்காலம் நெருங்கிவிட்டபடியால் நீங்கள் ஒவ்வொருவரும் அதன் அந்தரங்க ஒளியின் பிரிவையும் அதன் சுகத்தையுங் கண்டுகளித்து பிறவியையறுத்து நித்திய வாழ்வில் நிலைப்பீர்களாக.

இந்த சத்தியதன்மமானது நாளுக்குநாள் அசத்தியர்களாலும், அசப்பியர் களாலும், சோம்பேரிகளாலும் மாறுதலடைந்தபோதி னும் சத்திய தன்ம போதகர்களால் நாளுக்குநாள் நித்தியர்கள் தோன்றி பிறவி சமுத்திரத்தைக் கடந்து கரைசேருவார்கள்.

**சீவக சிந்தாமணி**

பிண்டியின் கொழுநிழற் பிறவி நோய் கெட
விண்டிலர் கனை கதிர் வீரன் தோன்றினா
னுண்டி வணறவமிர் துண்மினோவென்
கொண்டன கோடனை கொற்றமுற்றமே.

ததாகதர் பிறவியால் உண்டாம் பிணியைக் கண்டார் துக்கித்தார், பிணியின் நிறைவால் நரைதிறை என்னும் மூப்பை கண்டார் துக்கித்தார், மூப்பின் மிகுதியால் மரணத்தைக் கண்டார் துக்கித்தார், பிறவியால் உண்டாம் பிணி, மூப்பு, சாக்காடென்னும் அநித்தியத்தைக்கண்டு அதற்கெதிரடையாய நித்திய மிருக்கவேண்டுமென்று நிதானித்தார், இராகத்துவேஷமோகங்களை ஜெயித்தார் , பற்றற்றார், நிருவாணம் பெற்றார், அந்நிருவாண பலனே, உபத்திரவமாம் பிணியை ஜெயித்தார், நரைதிறை காணும் மூப்பை ஜெயித்தார், பஞ்ச அவத்தையால் மாளும் மரணத்தை ஜெயித்தார், பிறவியற்றார், அவ்வழியே நீங்களுஞ்சென்று பிணி, மூப்பு, சாக்காடென்னுந் துன்பங்களை செயித்து சுகம் பெறுவீர்களாக.

**சீவக சிந்தாமணி**

வேட்டெனபெறாமெ துன்பம் லிழைநரைப் பிரிதருன்பம்
மோட்டெழி விளமெய் நீங்கி மூப்புவந்தடைத் ருன்பம்
வேட்டெழுத் தறிதலின்றி யெள்ளறப்பாடுள்ளிட்டெல்லாஞ்
சூட்டணிந் திலங்கும் வேலோய் துன்பமே மாந்தர்க்கென்றான்.

முன்வினைக்கீடாய் பிறக்கும் போதே கா கூ என்னும் அழுகையுந் துக்கமுந் தோன்றி வளர்ந்து காலபேதங்களாலும் புசிப்பின் பேதங்களாலும் வினைக்கீடாய் பிணிகள் தோன்றி துக்கத்தை அனுபவிப்பதும் பிணி தோன்றியுள்ளோன் மாதுருவும் பிதுருவும் உடன் பிறந்தாரும் அத்துக்கத்தை அநுபவிக்கவுமாகத் தோன்றுவதும் வினையின் பயனேயாகும். அப்பிணிகளின் மாறா பெருக்கத்தால் தேகந் தளர்ந்து நரைதிறையாம் மூப்பு வந்தடைவதாகும். மூப்பு முதிர்ந்து தளர்ந்தவுடன் தான் துக்கித்து தள்ளாடுவதுடன் தனது பந்துக்களுந் துக்கிப்பர். மூப்பால் முதிர்ந்து தளர்ந்து மரணவத்தை வருங்கால் பாசபந்த பற்றுக்கள் ஓர்புறமிழுக்க பஞ்ச அவஸ்த்தையின் துன்பம் மேலும் மேலும் பெருக்க இருளடைந்து இறக்கின்றான். இத்தகையாய் மாறிமாறி பிறக்கும் பிறப்பேதுன்பத்திற்கு ஆளாக்கும். பிறவாமலிருப்பதே பேரின்பத்திற்கு உள்ளாக்கும்.

**சீவகசிந்தாமணி**

பிரிதலும் பிணியும் மூப்புஞ் சாதலும் பிறப்புமில்லா
வரிவையைப் புல்லியம் பொன்னிகிளர் மாடத்தின்றேன்
சொரிமது மாலை சாந்தங்குங்குமஞ் சுண்ணந் தேம்பாய்
விரியுகை விளக்கு விண்ணோ ரேந்த மற்றுரையுமன்றே

**மணிமேகலை - வினைக் கேடு**

தீவினை என்பது யாதென வினவினாய்
தொடி நல்லா யாங்காது கேளாய்
கொலையே களவே காமத் தீவினை
அலையா துடம்பிற் றோன்றுவ மூன்றும்

பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லே சொல்லிற் தோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி
என்றுளந்தனி உருப்பன மூன்றதும்
பத்தும் வகையாற் பயன்றெரி புலவ
ரித்திரம்படார் படர்குவராயின்
விலங்கும் பேயும் நரகருமாகி
கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர்.

**நல்வினைப்பயன்**

நல்வினை என்பதியாதென வினவிற் சொல்லிய பத்தின் தொகுதியு நீத்துச்
சீலந்தாங்கி தானந்தலை நின்று மேலெனவகுத்த வொரு மூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமருமாகி மேவிய மகிழ்ச்சி வினைப்பயனுகர்வர்.

பிறப்பதே துன்பத்திற்கு ஆதாரமாகவும் பிறப்பற்றிருப்பதே இன்பத்திற்கு ஆதாரமாகவும் இருப்பதால் ஆசை என்னும் பற்றுதலே பிறப்பிற்கு மூலகாரணமாக விருந்து துன்பத்திற்கு உள்ளாக்குகின்றது. ஆசையாம் பற்றுக் களற்றவிடமே பிறப்பறுதலுக்கு மூலகாரணமாக இருந்து பேரின்பத்திற்கு உள்ளாக்குகின்றது. அப்பேரின்ப நிலையே சுகவாரி என்னப்படும். அச்சுகவாரி யில்லயிப்பவனே பிறவிக்கடலை நீந்தியவனாவன். அவனே சதா விழிப்புள்ள வனும் நித்தியசீவியுமாகி சம ஆதியாம் ததாகதரை என்றுந் தரிசிப்பான்.

**பட்டினத்தார்**

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீ மனமே,
மாற்றிப் பிறக்க வகையறிந்தா இல்லை மாமறை நூல்,
ஏற்றிக் கிடக்குது ஏழுகோடி மந்திரமென்னகண்டாய்,
ஆற்றிற் கிடந்துந் துறை தெரியாமல் அலைகின்றையே.

**அருங்கலைச்செப்பு - பரிமுத்திப்பத்து**

புளிகாயின் பற்று போல் பற்றாத்து பழம்போல, வெளி காண்டல் பரிமுத்தியாம்.
புழுபோல் உலாவி புலனடக்கி விட்டில்போல், வழிபோதல் பரிமுத்தியாம்.
இன்பமும் துன்பமும் இரண்டற்றுருவெளியாய், அன்புறுதல் பரிமுத்தியாம்.
வேண்டுதல் வேண்டாம் இரண்டற்றுருவெளியாய், காண்டற் பரிமுத்தியாம்.
அகண்டத்துருவொளியா அவனியில் காலூன்றா , துகன்றப் பரிமுத்தியாம்.
புட்பம் வேறாக மணம் பிரிக்கும் வாறுபோல், உடபறலே பரிமுத்தியாம்
என்றுங் கெடாத இதயப் பிரகாசமணி, அன்றே பரிமுத்தியாம்.
கருணாகர மிகத்தோர்க்காணும் ஒளிகாட்சி, பொருளாம் பரிமுத்தியாம்.
அறம் பொருளாமின்பா விருபிறப்பானாதல், மறமவித்த பரிமுத்தியாம்.
மாற்றிப் பிறக்க வகை அறிந்தோன் மானிலத்தோர்ப் போற்றும் பரிமுத்தியாம்.

இத்தகைய நித்தியதரிசனத்தை விரும்புவோர் சத்தியதன்மமாம் நல்வாழ்க்கை, நல்லூக்கம், நற்கடைபிடி, நல்லுணர்ச்சி, நல்வாய்மெய், நற்காட்சி யினின்று கருணையை பெருக்கிக்கொள்ளுவோரே தண்மெயாம் உள்ளொளி திரண்டு மாற்றிப்பிறக்கும் வகை தேடுவர். இவர்களுக்கே தேவரென்றும் பிரமரென்றும் சிறப்புப் பெயர் தோன்றுவதன்றி நிருவாணம் பெற்றோரென்றும் இரவு பகலற்றோரென்றும் அவர்களது அநுபவக்காட்சியால் கூறப்படும். தாய்வயிற்றினின்று பிறக்கும் பிறப்பொன்றும், அநித்திய வனாத்தும் நிருவாண முற்று தன்தேகத்தினின்று சுயஞ்சோதி ஒளிதோன்றும் பிறப்பொன்றும் அகிய விருபிறப்படைவதே பரிநிருவாணமென்றுங் கூறப்படும்.

சங்கரர் தனது அந்தியகாலப் பரிநிருவாணப் பரிபக்குவத்தைச் சொல்லி வருங்கால் அவ்விடம் வந்து சேர்ந்துள்ள அறஹத்துக்களும் சமணமுனிவர் களும் இருகரங்கூப்பி எழுந்து அறஹத்தோ அறஹத்தோ என்று வணங்கி தேவாதி தேவா! உமது அமுதவாக்கால் சாரணர்கதியாம் சரணாகதி அறிந்தோம். துக்கநிலை ஒழிந்தோமென்று ஆனந்தகோஷஞ்செய்யுங்கால் ஆனந்தனெழுந்து அருகன் திருவடியில் மும்முறை வீழ்ந்து ஒப்பிலா அப்பனே! உலகத்தில் தோன்றியுள்ளப் புருஷர்களில் உம்மெய்விட

புருஷ உத்தமன் ஒருவருமில்லை என்றும் உலகெங்கும் கொண்டாடத்தக்க அருகனும் அன்பே ஒருருவாகத் தோன்றியவண்ணலும் கருணையே ஓர் குருமுகூர்த்தமாக அமைந்தகாட்சியும் அமுதவாக்கியமே நீதியின் பாதையுமாய் அமைந்த அண்ணல் பரிநிருவாண மடையங்காலம் ஈதென்பதால் உடல் நடுக்கமுறுகின்றது, உள்ளம் பதருகின்றது, காரணமோ என்னில் கருணாகரனின் காட்சி மறைந்து போமாயின் யாரை தெரிசிப்போம் யார் பால் அறவுரைக் கேட்போமென்று அவலோகி தரடிபணிந்து கவிழ்ந்துக் கொண்டான். ஆனந்தனின் கருத்தறிந்து கொண்ட அறவாழியான் புன்னகைக்கொண்டு ஆனந்தா! நீரிதுகாரும் கேட்டு வந்த அறவுரையின் பலன் இதுதானோ. தோற்றும் பொருட்கள் யாவும் கெடுமென்பதை கேட்டிலையோ, கண்ணாறக் கண்டறிந்திலையோ பயிரங்கமாக தோற்றவுருவம் பாசபந்த பற்றுக்குள்ளாகி வாணமென்னும் அசைக்கயிற்றால் கட்டுண்டிருக்கும் அளவும் பிறவி என்னும் சமுத்திரத்தைக் கடவாது இராகத்துவேஷமோக வலைகளால் பிடிபட்டு பிணி மூப்புச் சாக்காடென்னும் அவத்தையுண்டு இறப்பதும் பிறப்பதுமாகிய துக்கத்தையே அனுபவித்துவருவான்.

தோற்றாதுலவும் அந்தரங்கமாம் உள்ளமானது பாசபந்தக் களிம்புகளற்று ஆசைக்கயிறுகளை அறுத்து நிருவாணம் பெற்றபோது காமவெகுளி மயக்கங்க ளடங்கி அலையற்ற கடலாம் சுகவாரியில் நிலைப்பன். அந்நிலையை வாய்த்தவன் பிறவிப் பிணி மூப்பு சாக்காடென்னும் அவத்தையை ஜெயித்துக் கொண்டவனாதலின் இறப்புப் பிறப்பற்ற சுகநிலையும் இரவுபகலற்ற வொளி நிலையில் நின்று சகலவுலகங்களையும், சகல சீவர்களின் எண்ணங் களையுந் தனது களங்கமற்ற உள்ளக்கண்ணாடியால் உணர்ந்து உலக மக்களுக்கு நீதியின் சுகங்களையும் அநீதியின் கேடுகளையும் விளக்கி தான் பெற்ற சுகநிலையைத் தனது அன்பின் பெருக்கத்தால் ஏனைய மக்களும் பெறும்படிச் செய்வான். இதுவே நிருவாணம் பெற்றோன் அடையாளமென்று கூறிவருங்கால் மறுபடியும் ஆனந்தன் மாதவனின் பாதத்தைப் பற்றிக்கொண்டு ஐயனே! நீவிர் பரிநிருவாணமுற்ற பின்பும் தமது தரிசனம் கிட்டுமோ கிட்டாதோ அதனை விளக்கி ஆட்கொள்ள வேண்டுமென்று இரைஞ்சினான்.

ஆனந்தா, நரர்களின் கூட்டுரவும், செயலும், தோற்றமும் நரர்களுக்கே விளங்காது மக்களுக்கு விளங்கும். மக்களின் கூட்டுரவும் செயலும் தோற்றமும் மக்களுக்கே விளங்காது தேவர்களுக்கு விளங்கும்.

அதாவது விவேகமற்றோர் செயலை அற்ப விவேகிகள் அறிவர். அற்ப விவேகிகளின் செயலை மிகுவிவேகிகளறிவர். ஆதலின் விவேக மிகுத்தோர் செயலையும் தோற்றத்தையும் விவேகமிகுத்தோர்களே அறிவர். அவ்விவேக மிகுத்தோர் தங்கள் விவேகமிகுதியால் வாணமென்னும் பாசபந்தக் கயிறுகளற்று நிருவாணமாம் பற்றற்றபோது களங்கமற்ற இதயமுடையவர்களாய் சுயம்பிரகாச உருவாய் கருணை ஒளி என்றும், சாந்த ஒளி என்றும், அந்தர் அங்கமென்றும், உண்மெய் என்றும் அழியா உரு என்றும், தன்மகாயமென்றும், சத்திய உருவமென்றும், நித்திய ரூபமென்றும், கொண்டாடப் பெற்றோர் தேவரென்றும், பிரமரென்றும் கொண்டாடும் ஏழாவது தோற்றமாவர்.

எக்காலுமுள்ள பூமியினின்று தோற்றும் புற்பூண்டுகள் முதற்றோற்ற மாகும். புற்பூண்டுகளினின்று தோற்றும் புழுக்கீடாதிகள் இரண்டாவது தோற்றமாகும். புழுக்கீடாதிகளினின்று தோற்றும் மட்சம் பட்சிகள் மூன்றாவது தோற்றமாகும். மட்சம் பட்சிகளினின்று தோற்றும் ஊர்வன தவழ்வனங்கள் நான்காவது தோற்றமாகும். ஊர்வன தவழ்வனங்களினின்று தோற்றும் மிருகர் நரர்கள் ஐந்தாவது தோற்றமாகும். மிருகர் நரர்களின்று தோற்றும் மக்கள் மனுக்கள் ஆறாவது தோற்றமாகும். மக்கள் மனுக்களினின்று தோற்றும் தேவர், பிரமர் ஏழாவது தோற்றமாகும்.

இவ்வெழுவகைத் தோற்றமாம் எழுபிறப்புந் தீதெனக் கண்டோர் தாய் வயிற்றினின்று பிறந்த பிறப்பொன்றும், தேகத்தினின்று சுயபிரகாச ரூபமாய்ப் பிறக்கும் பிறப்பொன்றும், ஆகிய இருபிறப்பால் மாற்றிப்பிறப்பதே பரிநிருவாண மென்னப்படும். ததாகதர் தான் கண்ட காட்சியை உலகத்தில் தோன்றியுள்ள சகல மக்களுக்கும் விளக்கிப் பூர்த்தி செய்து சத்திய சங்கங்களை நிலைக்க நாட்டிவிட்டபடியால் பூர்த்தியுற்று மாற்றிப் பிறக்கும் பரிநிருவாண காலத்தை சகலருக்குந் தெரிவித்து தெய்வநிலை பெற்றோர் தெரிசித்து ஆனந்த பர்த்தியினிலைக்கவும், மக்கள் நிலை

வாய்த்தோர் முன்னோக்கி ஈடேறும் வழி தேடவும் உள்ள சுகவழிகளை விளக்கப் போகின்றார். அவ்வழி நடந்து பிறவியின் சமுத்திரத்தைக் கடக்க முயலாது இராகத்துவேஷ மோகமென்னும் அலைகளால் மொத்துண்டு இறப்புப் பிறப்பென்னும் துக்கத்தில் வதைந்து இருளடைந்திருப்போருக்கு ததாகதர் தெரிசனங் கிடைப்பது அரிதாகும். ஆதலின் ஆனந்த பூர்த்தி அடையவேண்டுமாயின் உம்மெய் நீர் தெரிசித்து உள்ளக்களங்கைப் போக்கிக்கொள்ளுவீராக.

உமதுள்ளக் களங்கமாம் மனமாசு கழுவியவிடத்து களங்கமற்றக் கண்ணாடியாம் சுத்த இதயத்துள் மக்களுக்குத் தோற்றும் பொருட்களும் தோற்றா பொருட்களும், ரூபகாயங்களும், தன்மகாயங்களும், புறமெய்களும், உண்மெய்களும், பயிர் அங்கங்களும், அந்தர் அங்கங்களும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

ஆனந்தா, ஒவ்வொரு சீவராசிகளும் அதனதன் நல்வினைச்செயலால் நாளுக்குநாள் உயர்ந்துகொண்டேவந்து மக்களாம் மனுக்களென்னும் பேர்பெறுவது மிக்க மேலாயதாகும். அம்மனுக்களில் ஒருவராய நீவிர் தேவரென்னும் உயர்நிலைப் பெறுவழியை நாடாது ததாகத்ரை நாடுவதால் யாது பயன். ததாகதரோ வழிகாட்டியாவர். அவ்வழி நடந்தோர் முத்திரைக் கரையாம் நிருவாணம் பெற்றோராவர். அவர்களே மனுக்களில் உணர்ந்து தெய்வநிலைப் பெற்றவர்களாகும் இவர்களையே ஏழாவது தோற்றமென்றுங் கூறப்படும்.

ஒவ்வோர் சீவராசிகளின் தோற்றங்களை அழிக்காமலும், அதன் உயர்வு நிலைகளைக் கெடுக்காமலும், அதன் சாந்தநிலைகளைக் கொறூரப் படுத்தாமலும் முன்னேறச்செய்வதே முநிவோர்களின் கடனாகும். முன்னேற முநியு மக்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளுவதினும் தங்களை அடுத்த சீவர்களின் உயர்வைக் கெடாது கார்த்தலே காருண்யமாகும்.

அக்காருண்ய திரட்சியோரே உள்ளொளி உருவாய் மாற்றிப் பிறந்து நட்சேத்திரம் பெற்று அகண்டத்துலாவி என்றுமழியா நித்தியநிலையில் நிற்பர்.

அந்த நித்திநிலையோரை அநித்திய நிலை அரிதேயாம். நித்திய வழியில் சென்று நித்திய நிலையில் நிற்போர்களே நித்தியர் களை நித்தந் தெரிசிப்போர்களாவர்.

காருண்யத்தால் மக்கள் ஈடேற்றத்தைக் கருதி ஒளிவருவாய்க் தோற்றிவைக் தோற்றுவர். அத்தோற்றங்கண்டுந் தங்களுள்ளொளியைத் துலக்காமலும் காணாமலும் கலங்கிநிற்போர் மாறா பிறவியில் பிறந்து பிணிமூப்பால் வாதைப்பட்டு தீராத் துன்பத்திற் சுழன்று திரிவர்.

பிணி மூப்பாம் தீராத் துன்பமடைந்து மாறாப்பிறவியில் உழலாமல் இருக்கவேண்டுமென்னும் சுப இச்சையை உள்ளவர்கள் பாபச்செயலை அகற்றி இதயத்தை சுத்தி செய்து மனமடங்கி மாற்றிப் பிறக்கும் வழியறிதல் வேண்டும். அவ்வழியாம் பரிநிருவாணத்தையே தற்போது ததாகதர் விளக்குவார் விழித்திருங்கள்.

ஆனந்தா! உலகப்பொருட்களொன்றுங் கெடாது மாறுதலடைந்துக் கொண்டிருப்பது உள்ளசுவாபமாகும். அவற்றுள் புற்பூண்டுகளிலிருந்து மாறுதலடைந்து புழுக்கீடாதிகளாகத் தோற்றியவைகளில் மக்களென்னும் வாலநிலை வாய்த்தோர் முன்னேறி மிருக சேர்க்கைக் கடந்து மானமின்னது நிருமான மின்னதென்று உணர்ந்து மானிடர் மநுக்களென்னும் பெயர் வாய்த்தார்கள்.

மக்களெனத் தோன்றி மானமுண்டாய் மானிடரென மாறுதலுற்றோர் என்றென்றும் மானமாம் மானிடநிலை நில்லாது மானமற்றுக் கள்ளை அறுந்துவாராயின் மேனோக்கும் வழியற்று மக்கள் நிலைக்கே தாழ்வர்.

மற்றுஞ்சிலர் மானமற்று விபச்சாரநிலையில் உழல்வராயின் மேனோக்கும் வழியற்று மக்கள் நிலக்கே தாழ்வர்.

மற்றுஞ் சிலர் மானமற்று அன்னியர் பொருளை அபகரித்துழல்வராயின் மேனோக்கும் வழியற்று மக்கள் நிலைக்கே தாழ்வர்.

மற்றுஞ் சிலர் சீவகாருண்யமற்று கொலை புரிந்துழல்வராயின் மேனோக்கும். வழியற்று மக்கள் நிலைக்கே தாழ்வர்.

மற்றுஞ் சிலர் மெய்யற்று பொய்யைச்சொல்லி வஞ்சித்துழல்வராயின் மேனோக்கும் வழியற்று மக்கள் நிலைக்கே தாழ்வர்.

மநுக்களென உயர்ந்தவர்கள் மானமற்று பஞ்சபாதகத்திற்குள்ளாகி தாழ்ந்த நிலைக்கு மாறாதிருத்தல் வேண்டும். மானமற்று மானிடரென்னும் பெயரற்று மாறாப்பிறவியில் சுழன்று தீராக்கவலையில் உழலாத சுகவழியைத் ததாகதர் கண்டறிந்தார். அவ்வழியை நீங்களும் பின்பற்றி மாறாப்பிறவியையுந் தீராக்கவலையையும் ஒழித்து அழியா சுகநிலைபெற்று மானிடர் என்னும் பெயரினின்று உயர்ந்து தேவர் பிரமரென்னும் பெயர் பெற்று பிறவியற்று பரிநிருவாணமுற்று நட்சேத்திரமாம் அந்தரத்துலாவுவீர்கள்.

மநுக்களெனத் தோன்றியும் மானமற்று பஞ்சபாதகத்துக்கு உள்ளாவது மாறாப் பிறவிக்கும் தீராத்துன்பத்திற்குமே வழியாம்.

அத்தீய வழியிலேகி தாழ்ந்த பிறவிக்கேகாது சுகவழியிலேகி பிறப்பற் றிருப்பதே பேரானந்தமாகும்.

எக்காலுமுள்ள பூமியிற்றோன்றும் சீவ அசீவர்களாம் புற்பூண்டு களிலிருந்து புழுக்கீடாதிகளும், புழுக்கீடாதிகளிலிருந்து மட்சம் பட்சிகளும் ஒன்றிலிருந்தொன்று உயர்ந்து கொண்டே போவதை உணர்ந்தும் தாங்களுயரும் வழியை நோக்காது தாங்களுங்கெட்டு உயர்ந்தேகும் சீவர்களையுங் கெடுத்து வருவது மானிகளாய மானிடர்களுக்கு அழகன்றேயாம். மானிகளாய் மானிடர்கள் தேவர்களாவதே திருவுருவாகும். அத்திருவுருவே பிறவா பிணி, மூப்பு, சாக்காட்டை செயித்த உருக்கூடாகும். அவ்வுருக்கூட்டினின்று ஒளியுருவாக வெளி தோன்றலே பரிநிருவாணமாகும்.

ஆனந்தா! அப்பரிநிருவாணத்துக்குரிய இப்பரிசுத்ததேகத்தை ததாகத் ஒளி அகலும் வரையில் மண்ணறிக்குமோ, காற்றுபரிசிக்குமோ, நீர் நனைக்குமோ, அக்கினி தகிக்குமோ, வெளி மறைக்குமோ ஆகாவாம். இராகத்துவேஷ மோகஞ்சூழ்ந்து இருளடைந்திருக்கும் அசுத்ததேகத்தை மண்ணறிக்கும், காற்றுமோதும், நீர் நனைக்கும், தீதகிக்கும், வெளி மறைக்கும். அதாவது தனக்குள் கோபமிருக்கும் வரையில் எதிரியின் கோபம் தன்னைச் சூழ்ந்து வாதிக்கும். தனக்குள்ள காமமிருக்கும் வரையில் எதிரியின் காமம் தன்னைப்பற்றி ஈடழித்துவாதிக்கும். தனக்குள்ள மயக்கமிருக்கும் வரையில் எதிரியின் மயக்கால் அவாபெருகி அல்லலுற வாதிக்கும். தனக்குள்ள இராகத்துவேஷ மோகங்களாம் இருளகன்று சாந்தம், ஈகை அன்பென்னும் ஒளிதிரண்டு பற்றற்ற பரிசுத்த தேகமே பரிநிருவாணத்திற்கு உரியதாகும்.

என்று சொல்லிவருங்கால் இராஜகிரகத்திற்கு 300 - காத எலுள்ள ஓர் மலைவாசிகள் பகவனது குணாதிசயங்களையும், அவரது தேக்காந்தியையும், அமுர்தவாக்கையும் கேள்வியுற்றுப் பெருங்கூட்டமாகத் திரண்டு வந்து பெருமானை வணங்கி சுற்றிலும் நின்றுகொண்டு இவர் நம்மெய்ப்போன்ற மனிதர்தானே, ஆனால் தேககாந்தியும், கருணையும் நிறைந்தவராகக் காண்கின்றார். இதனால் இவரை எங்கும் புகழ்ந்து கொண்டாடுவதற்குக் காரண மென்னை. இவரைப் பெருங்கூட்டங்கள் பின்பற்றி நிற்பதில் சுகமென்னை . உலக மனுக்களினும் இவரிடமுள்ள சிறப்பென்னை . இவரைக் காஷாயந் தரித்துள்ள பெருங்கூட்டத்தோர் கூடி வணங்கிநிற்பதால் பலனென்னை என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு அவரது அன்பின் முகதேஜசால் தியங்கி எவ்விதத்தேனும் நமதில்லத்தில் ஒரு வேளை அன்னம் புசிப்பிக்கச் செய்ய வேண்டுமென்னும் அவாவின் மிகுதியால் அவலோகீசரை மறுபடியும் வணங்கி தங்கள் இல்லத்திற்கெழுந்தருள வேண்டும் என்று இரைஞ்சி நின்றார்கள். அவர்களது உள்ளச்செயலை முற்றும் உணர்ந்த ஐயன் தமதிடம் வந்துள்ள சமணர்களாம் சாதுசங்கத்தோர்களையும் ஆனந்தன் முதலோர்களை அவ்விடமே நிறுத்திவிட்டு மலைவாசிகள் இல்லஞ்சேர்ந்து அவர்கள் அன்புடன் அளித்த அன்னத்தைப் புசித்துக் குறிஞ்சி தோப்பின் ஓர் மரத்தடியில் அமர்ந்தார். அவ்விடமுள்ள யாவரும் வந்து அருகனை வணங்கி நின்றார்கள். வணங்கிநின்ற மலைவாசிகளின் உள்ளங்களை மாதவன் உணர்ந்து சகோதிரர்களே உலகத்தில் எப்போது மானிடரெனத்

தோன்றினீர்களோ அப்போதே மகிமெய் நிறைந்த மானிகளாய் சருவசீவர்களுக்கும் உபகாரமென்னும் நன்மெய் புரியுங்கள். உபகாரஞ் செய்யப் பொருளில்லையேல் சகலர்களுக்கும் நல்லவர்களென விளங்குங் கோளென்று சொல்லிக்கொண்டே உள்ளத் தொடுங்கிவிட்டார்.

உள்ளொடுக்கத்தால் ஏழுநாள் கண்திரவாமலும், நாவு பேசாமலும், மூச்சோடாமலும், தேகமசையாமலும் உழ்க்கார்ந்த நிலையிலமர்ந்த அந்தர் அங்கநிலையை உணரா மலைவாசிகள் அறவாழியான் இறந்துவிட்டாரென்று ஏங்கி உடலையோர் பாடையில் வளர்த்தி சுடலைக் கெடுத்துச்சென்று கட்டைகளை அடுக்கிக் கொளுத்திவிட்டார்கள்.

சுடலைதகனத்தில் அமர்ந்த சித்தார்த்தர் மறுபடியும் அம்மரத்தடியில் வந்து உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கண்ட மலைவாசிகள் திடுக்கிட்டு உள்ளங் கலங்கி நடுக்குற்றவர்களாய் ஐயனே! உமது மெய்கண்ட மேன்மெயை உணராபாவிகள் இறந்துவிட்டீரென்று ஏங்கி தகனஞ்செய்துவிட்டோம். யாங்கள் அறியாமல் செய்த தோஷத்தைப் பொருத்து ஆதரிக்க வேண்டும் என்றடிபணிந்தார்கள்.

ஓ! சகோதிரர்களே! ததாகதர் பசியுள்ளார் மத்தியில் பசியற்றவராகவும், தாகமுள்ளோர் மத்தியில் தாகமற்றோராகவும், கோபமுள்ளோர் மத்தியில் கோப மற்றவராகவும், காமமுள்ளோர் மத்தியில் காமமற்றவராகவும், நோயாளிகள் மத்தியில் நோயற்றவராகவும், துக்கமுள்ளோர்கள் மத்தியில் துக்கமற்றவராகவும், உபாதைப் படுவோர்கள் மத்தியில் உபாதையற்றவராகவும், நித்திறை உள்ளார்கள் மத்தியில் நித்திறை அற்றவராகவும், மரணத்தை உள்ளார்கள் மத்தியில் மரணத்தை ஜெயித்தவராகவும் விளங்குகிறபடியால் நிருவாணம் பெற்ற அந்தர் அங்கமும், பயிர் அங்கமும் பொருந்தியுள்ளவரையில் உண்மெய்க்கண்ட உடலை தீதகிக்குமோ, மண்ணறிக்குமோ, காற்றுமோதுமோ, நீர் நனைக்குமோ, ஒளிமறைக்குமோ ஒருக்காலும் முடியாவாமென்று நிருவாணமாம் அந்தர் அங்கத்தை விளக்கிவருங்கால் மலைவாசிகள் பேரானந்தமும் குதூகலமுங் கொண்டு இவரே உலகநாதன், இவரே உலகரட்சகன், இவரே உலக மக்களை ஈடேற்றவந்த தாதா, இவரே மானிடரிற் சிறந்த சீமான், இவரே ஜகத்தின் குருவென்று மகிழ்ந்தும் புகழ்ந்தும் அவரறவுரையை சிந்தித்து நிற்குங்கால்

அருமறை பயந்தோன் ஆனந்த நகரென்னுங் குஷிநகராம் கங்கைக் கரைச் சேர்ந்து மரத்தடியில் உட்கார்ந்து

ஆனந்தனை அழைத்து ஏதேனும் விசாரிணை உண்டோ என்றார்.

**அருங்கலைச்செப்பு - தென்மலைப் பத்து**

தென்மலையோர்கூடி தேவனடி அடைந்தார். நன்மனத்தைக் காணும் நலம்
இம்மெய் மறுமெய் இரண்டிற்குங் காரணமாம், நன்மெய்க்குகந்தவர் என்றார்
கூட்டங்கள் கூடி கும்பிட்டடி பணியும், நாட்டமேதென்றார் நவில்
திங்களமுதத்திருமுகத்தைக் கண்டார். தங்கள் மனைத்தெரிந்தார் தேர்
புசிப்புண்டகன்று புரைமரந்தாய்ந்து. நிசிப்பிரு மூணாளமர்ந்தார் நேர்
ஏழுநாள் கண்டோரிறைமடிந்தாரென்றெண்ணி, சூழு கனல் சுட்டெறித்தார் சீர்
எறியுறாமன்னனெழுந்து முன் மரமமர்ந்தார் பிறிவுறா வங்கத்தவர்
அங்கமழியாது அறிந்தாரருள் நிறைந்தார். சங்கத்தமர்ந்தார் சரண்
பிறப்புப் பிணிமூப்புச் சாக்காட்டை வென்ற. சிறப்பின் சுகமறிந்தார் சீர்
அறவுரையைக் கேட்டோரதனொழுக்கம் நின்றார். பிறப்பறுக்கும் பாதை அறிந்தார்.

அதாவது பகவன் தென்மலைக்குச் சென்றதும் மலைவாசிகளால் தகனஞ்செய்ததும், ரூபகாயம் அழியாததும், சங்கத்தோர் மத்தியில் எக்காலும் நித்திறைக்கொள்ளாததும், புசிப்பை நாடாததும், தாகத்தை விரும்பாததும் ஆகியச் செயல் கண்ட சமணர்களும் ஆனந்தனுந் திடுக்கிட்டு அறவாழியானை நாம் புசிக்கும்படி வேண்டினால் புசிக்கின்றார். வேண்டாவிடில் தாமும் வேண்டாமலிருக்கின்றார். தாகத்திற்கருந்தும்படி வேண்டினால் அருந்துகின்றார், வேண்டாவிடில் அருந்தாமல் அறவுரையை அடியார்களுக்கு போதித்தலையே பசிதாகத்திற்கு நிவர்த்தி என்றிருக்கின்றார். அரசன் மரத்தடியில் வீற்றிருந்தது முதல் இரவும் பகலும் அயர்ந்தநித்திறை கொண்டதைக் கண்டறியோம். சதாவிழிப்பும், சதா அறவுரைப் போதனைகளுமே அவருக்கு ஆனந்த நித்திறைபோற் காண்கின்றது.

அவரை யடுத்தது முதல் அவரது முகத்தில் சினக்குறிப்பேனும், விழிப்பில் சினப்பார்வையேனும் கண்டறியோம். சதா சாந்தமும் சதா அன்பும் சதா கருணையுங் கண்டு வருகின்றோம்.

ஈதன்றி உலகத்தில் தோன்றியுள்ள நமக்கு நாளுக்குநாள் தேகந்தளர்ந்து நரைதிறை மூப்புவந்தமைந்து விழிபஞ்சடைந்து கூன்வளைந்து தளர்ந்து தடியூன்ற வேண்டியதைக் காண்கின்றோம். பகவனோவென்னில் நாளுக்குநாள் மங்காமலும், முகதேஜசு மாறாமலும் பொன்மேனி குன்றாமலும், அமுதவாக்கழியாமலும் இருப்பது கொண்டு இவரே பிறப்பை வென்ற பெரியோன், இவரே பிணியை வென்ற பெருமாள், இவரே மூப்பை வென்ற முநிவன், இவரே மரணத்தை வென்ற மாதவனெனக் கொண்டாடி அவரது திருவடிகளை இருகப்பற்றி தேவரீர் திருத்தொண்டு சதா நிலைத்து உலக சவாகள் உயர்ந்துய்யுமாறு பிறப்பிலுண்டாகுந் துக்கங்களையும் பிறவாமலிருக்கும் சுகங்களையும் பிணிகளால் உண்டாகுந் துக்கங்களையும் பிணிகளணுகாதிருக்கும் வழிகளையும் மூப்பால் உண்டாகுந் துக்கங்களையும் மூப்பணுகாதிருக்கும் சாதனங்களையும் மரணவஸ்தையின் துக்கங்களையும் மரணத்தை ஜெயிக்கும் பாதைகளையும் இவ்வடியார்களுக்கு மேலும் மேலும் விளக்கி அஞ்ஞான இளந்தையை நீக்கி மெஞ்ஞான முத்தர்களாகச் செய்யவேண்டுமென்று இரைஞ்சிநின்றார்கள்.

ஓ! சகோதிரர்களே! அஞ்ஞானமாம் இளந்தைப்பருவங் கடந்து மெஞ்ஞாயமாம் முத்தனாவதே முத்திப்பேறாகும்.

அம்முத்தி நிலையையே சகல துக்கங்களும் அற்றவிடமென்றும், சுகவாரியென்னும் தேஜோவுண்மயமென்றுங் கூறத்தகும்.

பிறவியால் உண்டாகுந் துன்பங்களைக்கண்டவன் பிறவிக்கஞ்சுவான். பிணிகளால் உண்டாகுந் துன்பங்களைக் கண்டவன் பிணிகளுக்கு அஞ்சுவான். மூப்பினால் உண்டாகுந் துன்பங்களைக் கண்டவன் மூப்பிற்கு பயப்படுவான். மரணத்தால் உண்டாகுந் துன்பங்களைக் கண்டவன் மரணத்திற்கு பயப்படுவான்.

இவைகள் யாவும் மானிகளாம் விவேக மிகுத்தவர்களுக்கே விளங்கும். ஆதலின் ஆனந்தா உலகத்தில் தோற்றுவனயாவும் பிறப்பென்றும், மறைவன யாவும் இறப்பென்றுங் கூறப்படும்.

இவற்றுள் தோற்றும் பொருட்கள் யாவும் கெடுமென்று உணர்ந்து அதாவது கடிகைக்குக்கடிகை அழிந்துபோமென்றறிந்து மண்ணின் மீதுள்ளப் பற்று பொன்னின் மீதுள்ளப்பற்று பெண்ணின் மீதுள்ளப்பற்றாகிய அவாவை ஒழிப்பதே பிறவியை அறுக்கும் வழியாகும். அவாவை ஒழித்து பாசபந்த பற்றுக்களாம் மனக்களங்கமற்றவிடமே பிறவியற்ற நிலையாகும். அப்பிறவியற்ற நிலையே பிணியை ஜெயித்த சுகமாகும். பிணியை ஜெயித்த சுகமே மூப்பை ஜெயித்த முதலாகும். மூப்பை ஜெயித்த முதலே மரணத்தை ஜெயித்து என்றும் அழியா நித்திய நிலையாம் நிருவாணத்தைப் பெறுவன்.

அந்நிருவாண சுகமாம் பேரானந்தத்தை நோக்காதவன் அவாமிகுதியாம் பற்றினால் மாறாபிறவி துன்பமும், தீரா பிணிவாதையும், தள்ளாடி விழும் மூப்பின் கேடும் பஞ்சாவஸ்தையாம் பிராணவாதை கொண்டிறந்து பற்றிய பற்றால் உருவம் தோன்றி தோன்றி வினைபோக உருவாய் துக்கத்தில் மாறி மாறி சுழன்றுதாவான்.

துக்கத்திற்குப் பீடமாம் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வாய்மெயே தோற்றிய தேகத்தாற் காணும் அநுபவக் காட்சியாகும். இவ் வநுபவக் காட்சியால் துக்கம், துக்கோற்பவம், துக்கோற்பவக் காரணம், துக்க நிவாரணமாம் அஷ்டாங்க மார்க்கத்திற்சென்று உண்மெயில் அன்பை வளர்த்துங்கள். அவ்வுள்ளன்பின் மிகுதியால் இராகத்துவேஷ மோகங்கள் மூன்றுந் தன்னிற்றானே நசிந்து தன்மகாயமாம் சாந்த தண்மெயுண்டாய் ததாகதம் பெறுவீர்கள். அத்ததாகத் நிலையில் என்றுமழியா ததாகதரைக் காண்பீர்கள் என்றுமழியா சாந்தவுருவாம் தன்மகாயத்தை தன்மகாயத்தோரே காண்பர். பாச பந்தத்தால் பாது பக்கக்கால் அழிந்து கொண்டே வரும் ரூபகாயத்தால் ததாகதரைக் காண்பது அரிது அரிதேயாம்.

**மணிமேகலை**

மெய்யுணர்வின்றி மெய்ப்பொருணர்வரிய / வையமல்ல தறுதிச் சொற்பெறா கருமத்தொகுதி மீளத்தோற்ற மீளுந் / தோற்ற மீளப் பிறப்பு மீளும்
பிறப்புப் பிணி, மூப்புச்சாக்கா டவல / மாற்றுக்கவலை கையாரென்றென்று
கடையிற்றுன்ப மெல்லா மீளு / மிவ்வகையான மீட்சி யற்று
கண்ட மாகுமென்ப / பேதமெசெய்கை யென்றிவை யிரண்டுங்
காரணம் ஐய மாதவானே / யிரண்டாங் கண்ட மாகுமென்ப
வுணர்ச்சி யருவுருவாயிலூறே / நுகர்ச்சி யென்று நோக்கப்படுவன
முன்னவற் றியல்பால் உன்னிய வாதலின் / மூன்றாங்கண்டம் வேட்கைப் பற்றுக
கரும வீட்டமென கட்டுரைப்பவை / மற்றும் பற்று நிகழ்ச்சி யொழுக்கிலும்
குற்றமாம வினையே விளைவாக லானே / ான்காங் கண்டம்
பிறப்பே பிணியே மூப்பே சாவென் / முதிர்ந்திடுந் துன்பமென் விவை
பிறப்பினுட்கும் பயனாதலினாற் / பிறப்பின் முதலுணர் வாதியாகி
வினையுனுடை முதற்சந்தி / நுகர்ச்சி யொழுக்கொடு விழைவின் கூட்டறும்
புகர்ச்சியி னறிவ திரண்டாஞ் சந்தி / கன்மக்கூட்டத் தொடுவருபிறப்பிடை
முன்னிச் செல்வது மூன்றாஞ் சந்தி / மூன்றுவகை பிறப்பு மொழியுங்காலை
யான்றற மார்க்கத் தாயவுணர்வொடு / தோன்றல் வீடெனத் துணிந்து தோன்றியு முணர்வுள்ளடங்க வுருவாய் தோன்றியு / முணர்வுள்ளுருவு முடங்கி தோன்றும்.

ஆனந்தா, ஊனக்கண்ணால் க்ஷணத்திற்குச்சணம் அழிந்து கொண்டே போகும் பொய்ப்பொருளைக் காணக்கூடும். அம்மெய்ப்பொருளே தானே தானாய் தலைவனாகுந் ததாகதரைக்காணும் ததாகதரோ தன்னை ஆய்ந்தறியுந் தருமத்தை ஊட்டுவார். ஊட்டப்பெற்றோர் தங்களை ஆய்ந்து தங்கடங்கள் மனதை அறிவுக்குள் ஒடுக்கி அலைவற்ற மெய்ப்பொருளாய் நிலைக்க வேண்டியவை அவரவர்கட் செயலாகும். அவரவர்களின் ஊனக்கண் பார்வையை ஒழித்து ஞானக்கண் பார்வையினிலைப்பதே முக்காலச் செயலையும், முக்காலத் தோற்றத்தையும், மூவுலகத்தையுந் தோற்றுவிக்குங் களங்கமற்றக் கண்ணாடியாகும். களங்கமற்ற கண்ணாடியே மாசற்ற மனமாகும். மாசற்ற மனமே அறிவிலடங்கிய மெய்ப்பொருளாகும். மெய்ப்பொருளுணர்வே பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடெனுந்துன்பங்களை ஒழித்த பற்றற்ற நிலையே நிருவாணமென்னப்படும்.

அந்நிருவாண நிலையோ உலகப் பற்றற்றதுடன் உடல் பற்று மற்று புழுக்கூட்டில் ஒடுங்கியுள்ள விட்டில் போலும், ஓட்டிலடங்கியுள்ள பழம் போலும் பற்றியும் பற்றற்றிருக்கும். அப்பற்றற்ற பழம்பொருள் பரிபூரணமாய் வெளிதோன்றலே பரிநிருவாணமென்னப்படும். அப்பரிநிருவாணமே ததாகத ருருங்காலம் ஈதாதலின் ஒவ்வொரு வரும் இதனை நன்குணருங்கோளென்று கூறி வருங்கால் ஆனந்தனெழுந்து அருகனின் அடிபணிந்து ஐயனே, எங்கள் பற்றுக்களை அறுப்பதில் இராகத்துவேஷ மோகமென்னும் பற்றுக்களை மட்டும் அறுப்பதா அன்றேல் சாந்தத்தைப் பெருக்கல் வேண்டும் அன்பை வளர்த்தல் வேண்டும், ஈகையில் நிலைத்தல் வேண்டுமென்னும் பற்றையும் அறுப்பதா இவ்விரண்டின் விவரங்களையும் விளக்கி ஆதரிக்க வேண்டும் என்றிரைஞ்சினான்.

**மணிமேகலை**

மெய்க்குணத்தடைதல் அல்லதூஉ நிலனாய் மையாயுழல்வதும் நீராயிழைவதும் தீயாய் சுடுவதுங் காற்றாய் வீசுவதும் / மாயதொழிலை யடைந்திடமாட்டா
நேரினுந் தெய்வக்கண்ணா ருணர்குனர் / நோலாபூதத் திரட்சியுள்ளானோர் மாலைப்பொழுதி லொருமயிரறியார் / சாலத்திரள்மயிர் தோற்றுதல்சாலுங் கருமப்பிறப்புங் கருநிலப்பிறப்புஞ் சேமம் பிறப்பும் எண்ணைய் பிறப்புமென் மிவ்வாறு பிறப்பினும் பண்புறு வரிசையின் / பாற்பட்டிறந்து கழிந்த வறிவே
பிறப்பிற் கலந்து.

**சீவகசிந்தாமணி**
காதலுங் களிப்புமிக்குங் கங்குலும் பகலும் இல்லார்
சாதலும் பிறப்பு மில்லா தண்மெய் பெற்றவர்க ளொத்தார்.

அறவாழியான் ஆனந்தனை நோக்கி குழந்தாய், சாந்தம், அன்பு, ஈகை இம் மூன்றும் உனது சுயரூபம். மத்தியில் பாற்பட்டு கலந்த காம, வெகுளி, மயக்கம் இம்மூன்றும் துப்புற நீங்கியவிடத்து சாந்தம், அன்பு, ஈகை இம் மூன்றுந்தானே தானாய் விளங்கும். நான்கு வாய்மெயின் பலனை உணர்ந்து சுகவாரியினிலைக்கும்.

அச்சுகவாரிக்கு செல்லுஞ் சுகத்தை , நீரே நினது சிற்சுகத்தில் உணர்ந்துக் கொள்ளலாம். அதாவது ஆனந்தா, தாமும், தமது தோழர் பிருங்கியும், நடக்கவியலா சப்பாணிகளாகி தவழ்ந்து திரிந்தவர்கள் தற்காலம் எழுந்து நிற்கவும் நடக்கவும் உண்டாகிய ஏது எதுவென்று வினவினார். ஆனந்தன் அவலோகிதரடி பணிந்து தேவாதி தேவா, தமது சத்தியதன்ம போதனையும் கிருபா நோக்கமுமே ஏதுவென்றான். பகவன் ஆனந்தனை நோக்கிக் குழந்தாய் எனது கிருபா நோக்கம் உமது நற்செயலை நோக்கியிருக்குமேயன்றி வேறிராது. சத்திய தன்மத்தைப் பின்பற்றி ஒழுகிய ஒழுக்க ஏதுவே இம்மட்டும் உமது பயிரங்கத்தையும் அந்தரங்கத்தையும் சுகச்சீர்பெறச் செய்துவருகின்றது. நீங்கள் முற்றிலும் சத்தியதன்மத்தில் நிலைத்து பாபப் பற்றுக்களற்று இதயகத்த முண்டாகி நன்மெய்க் கடைபிடித்து அதன் பயனால் புறமெய் ஈதென்றும், அதுவடைந்த சுகம் ஈதென்றும், உண்மெய் ஈதென்றும், அதன் சுகம் ஈதென்றும் தெள்ளற உணர்ந்துக் கொள்ளுவீர்களாயின் தற்காலந் ததாகதர் பெறும் பரிநிருவாண சுகமும் பெறுவீர்களென்று முகித்தார்.

அறவாழியந்தணன் கூறிவந்த சத்தியதன்மங்கள் யாவையுங் கேட்டிருந்த கௌண்டினனென்னும் சிரமணனெழுந்து சீமானை வணங்கி, தேவாதி தேவா! தமது சத்திய சங்கத்தைச் சார்ந்தது முதல் அடியேனுக்கோர் சங்கை உண்டு. அவையாதென்பீரேல், நாங்களில்லறம் விட்டுத் துறவறம் பற்றியவுடன், சிரமயிர் கழிக்கவும், பிட்சாபாத்திரங் கைகளிலேந்தவும் பொன்னிறம் போன்ற மஞ்சளாடைகள் அணைவதுமாகியக் காரணங்கள் விளங்கவில்லை. அவற்றை விளக்கி ஆட்கொள்ள வேண்டும் என்றடி பணிந்தான்.

அவனது சங்கையை உணர்ந்த அருகன் கௌவுண்டன்யனை நோக்கி குழந்தாய் காட்டிற்கும் நாட்டிற்கும் மத்தியில் கட்டிடங்களை நிருமித்து சங்கத்தோர்களை அங்கு நிலைக்கச் செய்தது காரணம் யாதெனில், பாபத்தை ஒழித்து நன்மெய் கடைபிடித்து இதயத்தை சுத்தி செய்யவேண்டியவர்கள் இல்லறத் தொல்லையாம் பல பற்றுக்களும் இருந்து செய்வது கஷ்டமாதலின் சங்கத்தோரை வேறுபடுத்துங் காரணமுண்டாயிற்று. சங்கத்தில் சேருங்கால் சிரமயிர் கழிக்க வேண்டிய காரணமோவென்னில் இல்லறத்திலிருந்து சிரமயிரை சிக்கங்கோலிட்டு சீவுவதும், சீர்திருத்துவதுமே

பெருவேலையாகும். அத்தகைய சீர்தி ருத்தத்தை மனோ சீர்திருத்தக்காரரேற்றுக்கொள்ளுவதனால் தங்கள் விசாரிணைக்கு சுகக்கேடுண்டாவதுடன் தேகசுகத்திற்கும் இடையூறுண்டா மாதலின் இல்லறக்குடும்ப சுகத்தை விரும்புவோருக்குக் குடுமியும் துறவறத்தூய தண்மெயை விரும்புவோருக்கு சிரமயிர் கழித்தலும் பற்றினைக்கழிக்கும் முதற்சீராகும்.

இவற்றுள் சிரமண நிலையாம் முதற் சாதனர்களுக்கே இவைகள் வேண்டியவன்றி தவநிலை முதிர்ந்த சிரமணர்களாம் அறஹத்துநிலை அடையவர்களுக்கு மயிரைக்கழித்தலும், மயிரை வளர்த்தலுமாகியச் செயலும் எண்ணமுமில்லையாகும்.

பிட்சாபாத்திரங் கைகளில் ஒடுக்க வேண்டிய காரணமோவென்னில் டம்பத்திற்கும், அகங்கரிப்புக்கும் மூலமாகும் இராகத்துவேஷ மோகங்களைக் கழிக்கும் இரண்டாஞ் சீராகும்.

**வாசிட்டம்**

பொன்போலயிலங்கு மனம், சஞ்சலத்தாற் குரங்காம்.

**ஞானக்குறள்**

வெள்ளி பொன்மேனி யாதொக்கும் வினையுடைய,
உள்ளுடம்பினாய ஒளி

**பட்டினத்தார்**

விமலர்தந்த வோடு நமக்குண்டு

பொன்னிறம் போன்ற மஞ்சளாடை அணைய வேண்டிய காரணமோ வென்னில் பொன்னிறம் போன்ற மனதை ஆசாபாச பல பற்றுக்களடர்ந்து அல்லலுறும் பிறவிக்கு ஆளாக்குகின்றபடியால் ஆசாபாசக் களங்கங்களைக் கழற்றி மனதின் உள்ள பொன் சுயரூபத்தைக் கண்டடைவதற்கு மாறாகியாபக மூன்றாஞ் சீராகும்.

**மச்சமுனி ஞானம்**

கேட்டறிந்துக்கொள்வீடென்ன காடென்ன கெட்டிப்பட்ட மௌனத்திலே நின்று, மாட்டறிந்துக்கொள்வஸ்துலையுண்டு நீ மனதைத்தாண்டி அறிவுக்குள்ளே செல்ல, பூட்டறிந்துக்கொள் (பொன் போல் தேகமாம்) மாட்டறிந்துக்கொள் கற்பூரதேகமாமகண்டசோதியும் சித்தியுமாச்சுதே.

**ஞானமதியுள்ளான்**

ஆதி குருவோனை அடண்ணே ஆனந்த வாழ்வோடு
வேதியர் தந்த வோடு அடண்ணே வல்லதிருவோடி தே.
சாதிதவிர்ந்தவோடு அடண்ணே தான்பலிகொண்டவோடு
ஜோதிமணியோடு அடண்ணே சொல்லுந்திருவோடிதே
ஆதிசிவனோடு அடண்ணே அன்னைதான் தந்தவோடு
ஓதி உணர்ந்தவோடு அடண்ணே உற்றகை சிற்றோடி தே வேதனளித்தவோடு அடண்ணே வெவ்வினையோட்டும் வோடு
மாதவபோதனனார் முன்பளித்த முத்தித் திருவோடி தே.

உலக விவகாரப் பற்றுக்களை ஒழிப்பதற்காக பிரத்தியேக மடங்களையும், ரோமத்தை வளர்க்கவும், வாரவும், சிக்கங்கோலிடவும், சீர்திருத்தவும் வேண்டிய தொல்லைகளை அறுக்க சிரமயிர் கழிப்பதையும், நானென்னு மமகாரமற பிட்சாபாத்திர மேந்துவதையும் உண்மெயாம் பொன்னுருகாண மஞ்சள் நிறப் பொன்னாடை அளித்ததையும் விளக்கிக் கொண்டு வருங்கால் சேணிப்னென்னும் அரசன் வந்து செல்வனை வணங்கி தேவரீர் தாம் போதித்துவரும் தன்மங்கள் யாவும் துறவறம் பூண்ட சங்கத்தோருக்கே உபயோகமாகின்றதன்றி இல்லறம் பூண்ட குடும்பிகளுக்கு யாதொரு தன்மமுங் காணாதபடியால் இவ்வடி யேனுக்குக் குடும்ப தன்மத்தை விளக்கியாட்கொள்ள வேண்டுமென்று அடிபணிந்தான்.

பகவன் சேணிபனை நோக்கிக் குழந்தாய், ததாகதர் மனையறமுந் துறவறமும் இரண்டையுமே போதித்துள்ளாரன்றிவேறில்லை. அதாவது மனையற

வொழுக்கத்தினின்றோனே துறவறத்திற்கு அருகனாதலின் மனையற சுகவாழ்க்கையே துறவற முத்திப்பேற்றுக்கு வழியாகும்.

ஆதலின் குடும்ப சோதிரர்களே, முதலாவது சுகவழி தேடல் வேண்டும். அதாவது ஓர் குடும்பத்தில் தனதான்யப் பெருக்கமிருந்து ஒருவருக்கொருவர் அன்பும் ஒருவருக்கொருவர் சமாதானமும் இல்லாமற்போமாயின் அக் குடும்பத்தில் தனதானியமிருந்தும் ஒன்றுமில்லை என்பதேயாம்.

மற்றொரு குடும்பத்தில் தனதானியமில்லாமல் எழியநிலையிலிருப்பினும் அக்குடும்பத்தோர் ஒருவருக்கொருவர் அன்பும், சமாதானமும், அமைதியும், ஆற்றலுமுற்றிருப்பார்களாயின் அவர்களையே தனதானிய சம்பத்துடையவர் களென்று கூறலாகும்.

மனவாறுதலும் அமைதியும் களங்கமற்ற சமாதானமும் உடையவர்களாக வாழும் குடும்பத்தையே சகலசம்பத்தும் அமைந்த குடும்பமென்று கூறத்தகும். அத்தகையக் குடும்பத்தோர் எடுத்த முயற்சிகள் யாவும் நிறைவேறும். அக்குடும்பத்துள் விவேகமிகுத்தோர்களே கூடிய சீக்கிரஞ் சாது சங்கஞ் சேர்ந்து நிருவாணசுகம் பெறுவார்கள்.

ஓர் குடும்பத் தலைமகன் தனது தாய்தந்தையர்களையே காப்பாற்றினவர் களெனக் கண்டு தன்னைக் குழந்தை பருவத்தில் ஈ எறும்பும் அணுகாமல் கார்த்தது போல் அவர்களுக்கோர் துன்பமும் அணுகாமல் கார்த்து வேண்டிய புசிப்பும் ஆடையுமளித்து அன்புடன் பயபற்றுடனும் ஆதரித்துவரல் வேண்டும் அவ்வகை ஆதரித்துவருதலே குடும்பத்தலைவனின் மக்கள் தனது தந்தையின் பேரானந்தச் செயல்கண்டு பழகி வருவார்களாயின் இவர்கள் குடும்பத்தலைவர் களாயபோது தங்கள் தாய்தந்தையர்களைக் கனஞ்செய்து களிப்பின் செயலில் நிலைப்பார்கள். அத்தகைய நிலையிலுங் குடும்பத்தோர்கள் ஒருவருக்கொருவர் விலகிய வாழ்க்கைப் பெறாது சேர்ந்து வாழ்கவேண்டியதே ஒருவருவக்கொருவர் ஆதரவையுங் கொடுக்கக் கூடியதாகும்.

ஓர் குடும்ப வாழ்க்கையில் மெய்யைப் பேசுவதும், பொய்யை அகற்றுவதும், சகல உயிர்களின் பேரிலும் அன்பை வளர்த்தாலும், கொல்லா விரதங்கொள்ளலும், அன்னியர் பொருளை களவாடாதகற்றலும், பேரவாவை ஒழித்தலும், அன்னியர் மனைவிகளை தங்கள் சகோதரிகளைப்போல் பாவித்தலும், காமயிச்சையைப் பெருக்காமலகற்றலும், புத்தியை மயக்கக் கூடிய பானங்களை அருந்தாதகற்றலும், எக்காலும் நிதானவிழிப்பில் இருத்தலுமாகிய நற்செயலிலும், நன்முயற்சியிலும், நல்லூக்கத்திலும், நற்கடைபிடியிலுமிருந் தொழுகுவார்களாயின் அக்குடும்பச் சிறுவர்களும் குலப்பழக்கத்தினின்று சுகச்சீர் பெற்று சகல சம்பத்தமைந்த யோகத்தில் நிலைத்து சத்திய சங்கத்திற் சேர்ந்து நற்பழக்க விருத்தியால் கூடிய சீக்கிரம் நிருவாணசுகம் பெறுவார்கள்.

குடும்பப்பெண்கள் தங்கள் தாய்தந்தையரை விட்டு நீங்கி கணவரை அடுத்த பின் தங்கடங்கள் கணவர்களையே கண்ணவர்களாகவும், காக்குங் காவலராகவும், அவர்கள் விவேகமொழிகளையே மந்திரபோதமாகவும் அவர்களைப் பசிதீரச் செய்வதே தங்கள் பசியாற்றலாகவும், அவர்கள் சுகத்தைக் கண்ணாரக்கண்டு களிப்பதே தங்கள் சுகமாகவும், அவர்கள் விவேகமொழிக்கு எதிர்மொழி கூறாது அடங்கிநிற்றலே மடமாகவும், தன்னுருவத்தையும் முகதேஜஸையும் அன்னிய புருஷன் கண்ணிற் பாராது மறைதலே நாணமாகவும், கணவர்பால் அடங்கி வார்த்தையாடலே அச்சமாவும், அன்னியர் விருந்தோம்பி அவர் பசியாற்றலே பயிர்ப்பாகவுமிருந்து விவேக முதிர்ந்து காமியம் அவிந்துவருமாயின் கூடிய சீக்கிரம் சத்திய சங்கஞ் சேர்ந்து நிருவாணசுகம் பெறுவார்கள்.

குடும்பத்துப் பிள்ளைகளுக்குப் பெற்றோர்கள் விவேக விருத்திப் பெறக்கூடிய போதனைகளையும் வித்தியாபிவிருத்தி அடையக்கூடிய சாதனங்களையும், ஈகை விருத்தி அடையக்கூடிய காருண்யத்தையும், அறிவுக்குள் மனமடங்கக்கூடிய சன்மார்க்கங்களையும் விருத்தி செய்துக்கொண்டே வருவார்களாயின் சிறுவர்கள் தாய்தந்தையரைக் கனஞ் செய்து ஆனந்தத்திலிருப் பதுடன் அன்னிய சீவராசிகளுக்கும் உபகாரிகளாய் விளங்கி நாளுக்குநாள் சுகம் பெருகி துக்கங்கெடும் வழியே சென்று சாதுசங்கஞ் சேர்ந்து பூரண சுகமாம் நிருவாணம் பெறுவார்கள்.

குடும்பிகள் ஒருவருக்கொருவர் சேர்ந்து வாழும் சேர்க்கையே சகல சுகத்திற்கும் ஆதாரமாகும். மனையற வாழ்க்கையில், அன்பும் ஆறுதலும் பெற்று வாழ்பவர்களே கூடிய சீக்கிறந் துறவறவாழ்க்கையைப் பெறுவார்கள். மனையறத்தில் அன்பும் ஆறுதலுமற்ற துன்பும் தொல்லையும் பெற்றவர்கள் துறவறத்திற்கு அருக ராகமாட்டார்கள்.

துறவறப் பாதையே மனையறமாதலின் மனையறத்தின் ஒழுக்கம் வழாது வாழ்பவர்களே மானிகளாகும் மனுக்களின் வாழ்க்கை பெறுவர். மிருகங்களல்ல மக்களென்றும், மக்களல்ல மனுக்களென்றும் பெயர்பெற வேண்டியவர்கள் மனையறத்தையே மகத்துவப்படுத்தி மன அமைதிக்குக் கொண்டுவரல் வேண்டும். என்ற மனையறத்தையும் துறவறத்தையும் போதித்து முடித்த பகவனது நிருவாணமுடிவிற்கு சேணிபவரசன் விருந்தே கடைசி விருந்தாக முடிந்தது.

**யாப்பருங்கலைக்காரிகை**

வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணாகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலால் வரன் முறையான் வந்தேத்த
சோலைதாழ்ப் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன் முறையான்
மனையறமுங் துறவறமு மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடு தட்டி வையுரைத்த தொன்மெய்சால்கழி குணத்தெந்
துறவாசை தொழுதேத்த நன்மெசால் வீடெய்து மாறு.

**வீரசோழியம்**

கொடுத்தலும் அளித்தலுங் கோடலு மின்மெயு
ஒழுக்கொடு புணர்தலும் புணர்ந்தோர் பேணலும்
வழுக்கில் பிறவு மனையறவகையே

துறவு மடக்கமுந் தூய்மெயுந் தவமு
மறவினை யோம்பலு மறத்தினை மறுத்தலும்
மனையினீங்கிய முனைவர்தமறமே.

**காஷாயந் தரிக்கவேண்டியவன்**

லௌகீக உடைதரித்து குருபீடத்திற்குரிய காஷாய உடுப்புகளைக் கையிலேந்திக் கொண்டு தன் ஆசிரியனோடு மண்டபத்திற்குள் பிரவேசித்து பௌத்த பிக்ஷுவாம் திரிபிடகாச்சாரி பிரதான நாயகருக்கு முன்னால் நமஸ்கரித்து எழுந்து நின்று பின்வருமாறு சொல்லுவான்.

சிஷ்யன் : அடியேன் பெரியோர் முன்னிலையில் விண்ணப்பம் செய்ய அநுக்கிரஹம்புரியுங்கள். பெரியோரே, அடியேனைக் குருபீடத்தில் சேர்த்துக்கொள்ளப் பிரார்த்திக்கின்றேன். மறுபடியும் பெரியோரே, அடியேனைக் குருபீடத்தில் சேர்த்துக்கொள்ளப் பிரார்த்திக்கின்றேன். மற்றும் மூன்றாவது தடவை பெரியோரே, அடியேனைக் குருபீடத்தில் சேர்த்துக் கொள்ளப் பிரார்த்திக்கின்றேன்

பெரியோரே அடியேன் பேரில் கிருபைவைத்து, அடியேன் சகல துக்கங்களினின்றும் விடுபட்டு, நிருவாணமாகிய பேரானந்த கதியை அடையும் பொருட்டு இக்காஷாயத்தை எடுத்துக்கொண்டு, அடியேனுக்கு உபதேசம் புரிந்தருளுங்கள். மூன்று தரம் சொல்லப்பட வேண்டும்.

குருநாயகன் : காஷாய உடுப்பைக் கையில் வாங்கிக்கொள்ளுகிறார்.

சிஷியன் : அடியேன்பேரில் கிருபைவைத்து அடியேன் சகல துக்கங்களினின்றும் விடுபட்டு நிருவாணமாகிய முத்திப் பதவியை அடையும் பொருட்டு அக்காஷாயத்தைக் கொடுத்தருளி அடியேனுக்கு உபதேசம் புரிந்தருளுங்கள். (மூன்றுதரம் சொல்லப்படவேண்டும்.)

குருநாயகன் : (காஷாயத்தைக் கொடுத்து) தேகத்தினது ரோமம், நகம், தந்தம், தோல், மாமிசம், நரம்பு, எலும்பு, எலும்பிலுள்ள ஊன், ஈரல், இருதயம் ஈரற்குலை, நுரைஈரலைச்சார்ந்திருக்குஞ் சவ்வு, மண்ணீரல், சுவாசாசயம், இரைப்பைக்கும் ஆசனத்திற்கும் இடையிலுள்ள குடல், மணிக்குடல், இரைக்குடல், மலம், பித்தநீர், கபம், சீழ், இரத்தம், வியர்வை , நிணம், கண்ணீர், நிணநீர், உமிழ்நீர், சளி, வெண்நீர், மூத்திரம் என்கிற யாக்கை நிலையாமெயைக் குறிக்கின்ற தஸபஞ்சகத்தை உச்சரித்துக்கொண்டு மேற் சொல்லிய உடையிலுள்ள மஞ்சள் நூலை கழுத்தில் கட்டுவார். பிறகு சிஷ்யன் எழுந்து உடுத்திக்கொண்டிருந்த லௌகிக உடையைக்களைந்துவிட்டு காஷாயத்தை உடுத்திக்கொள்ள வெளிச்செல்லுவான்.

உடையை மாற்றிக்கொள்ளும்போது பின்வருமாறு சொல்லிக் கொள்வான். ஞானத்துடன் இவ்வுடையை அணிகிறேன். குளிர், வெப்பம், காற்று முதலியவற்றால் பீடிக்கப்படாமலும், கொசு, சர்ப்பம் முதலிய விஷ ஜந்துக்களால் ஹிம்சிக்கப் படாமலும், கேவலம் அம்மணமாயிராமலும் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுமே அணிந்துக்கொள்ளுகிறேன். அதாவது அடியேன் உடைதரித்துக் கொள்வது ஆவசியமாயிருத்தல் பற்றியே அல்லது அழகுக்காகவன்று.

உடுத்திக்கொண்ட பிறகு தன்குருநாயகன் பக்கத்தில் வந்துநின்று பின்வருமாறு கூறுவான்.

அடியேன் பேச அருள்புரியுங்கள், அடியேனது துஷ்கிருத்தியங்களை எல்லாம் க்ஷமித்தருளுங்கள். அடியேனுக்கு உண்டான யோக்கியதையும் கௌரவமும் எல்லாம் குருவினது அநுக்கிரஹமேயன்றோ. அண்ணலே, அடியேன் ஈடேறுவதற்கு மும்மணிகளாம் மூன்று அடைக்கலங்களையும், பத்து சீலங்களையும் உபதேசித்தருளுங்கள்.

சிஷ்யன் முழந்தாளிட்டு மறுபடியும் கேட்பான்.

**மும்மணிகள்**

பத்தங் சரணங் கச்சாமி, தம்மங் சரணங் கச்சாமி சங்கங் சரணங் கச்சாமி.

துத்யம்பி.- புத்தங் சரணங் கச்சாமி, தம்மங் சரணங் கச்சாமி சங்கங் சரணங் கச்சாமி.

தத்யம்பி - புத்தங் சரணங் கச்சாமி, தம்மங் சரணங் கச்சாமி சங்கங் சரணங் கச்சாமி

**மூன்று இரத்திநங்கள் மும்முறை)**

புத்த பகவானை வழிகாட்டியாகத் துணைக்கொள்ளுகிறேன்

அவரது தர்மத்தை வழியாகத் துணைக்கொள்ளுகிறேன்

அவரது சங்கத்தை வழிக்குத் துணையாகத் துணைக்கொள்ளுகிறேன்.

**பத்துக் கோட்பாடுகள் அல்லது குருபீடத்தின் சட்டங்கள்**

1. பானாதி பாதா வேறமணி சிகலா பதங் ஸமாதியாமி
2. அதின்னாதானா வேறமணி சிக்ஹாபதங் ஸமாதியாமி
3. அஹபரயம் சரியா வேறமணி சிஹாபதங் ஸமாதியாமி.
4. மூஸாவாதா வேறமணி சிக்ஹாபதங் ஸமாதியாமி
5. ஸராமேறய மஜ்ஜய மாதட்டாணா வேறமணி சிக்ஹாபதங் ஸமாதியாமி
6. விகாள போஜனா வேறமணி சிக்ஹாபதங் ஸமாதியாமி

7-8-9 நச்சகீத வாதித விலரக்க தஸ்ஸனமாலசுந்த, விவப்பண தாரண மண்ன விபூஷண்டதானா வேறமணி சிஹாபதங் ஸமாதியாமி.

10. உட்சாஸ்யன் மஹாஸயன வேறமணி சிஹாபதங் ஸமாதியாமி.

1. ஜீவஹிம்சை செய்யாதிருத்தல் 2. களவாடா திருத்தல் 3. பிறன்மனை நயவாதிருத்தல் 4. பொய் மொழியாதிருத்தல் 5. கள் முதலிய லாகிரி வஸ்துக்களை அருந்தாதிருத்தல் 6. அகாலங்களில் போஜனம் அருந்தாமலிருத்தல் 7 ஆட்டம் பாட்டம் இல்லாம லிருத்தல் 8. புட்பம், வாசனை திரவியங்களால் தேகத்தை அலங்கரிக்காதிருத்தல் 9. வெள்ளி, பொன் முதலியவைகளைத் தொடாதிருத்தல் 10. உயர்ந்த அல்லது பெரிய பீடத்தில் உட்காராதிருத்தல்

இவைகளே சன்மார்க்கத்திற்கு ஏதுவானது. சிஷ்யன் பின்வருமாறு கூறுவான். இப்பத்துக் கோட்பாடுகளையும் தங்களிடம் கற்றறிந்தேன். ஆசீர்வதியுங்கள். எழுந்து குருநாயகனுக்கு வழிபடுகிறான் தடுத்தாண்டக்கோனே, நமஸ்கரிக்கின்றேன். சிஷ்யன் முழந்தாளிட்டுக் கொண்டு ஆசிரியர் மூன்று அடைக்கலங்களையும் பத்துக் கோட்பாடுகளையும் சொல்லிக் கொண்டுவர பின்னோடே தானுஞ் சொல்லுவான்.

பிரதம குருவாய்ச் சேர்க்கப்படுவதற்குரியவன் குருவாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் முன்கூறிய படி சடங்கு நிறைவேற்றப்படுகின்றது. பிரதம குருவாவதற்கு பக்குவியாயிருக்கும் பக்ஷத்தில் குருபீடத்தினின்ற உடனே பிரதமகுரு பீடத்திற் சேர்த்துக் கொள்ளப்படுகிறான். இல்லாவிடில் குருவாயிருந்து சிலநாள் உபதேசம் பெறவேண்டும். ஆனால் குருவாயிருந்தவன் பிரதம குருவாவதற்கு மறுபடியும் ஆசிரியர்களுக்குப் பழையப்படி விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டும்.

குருவாய்ச் சேர்க்கப்படவேண்டுபவன், தனது குருநாயகனோடு திரும்பிவந்து பிரதமாசரியருக்கு வந்தனம் புரிந்து பின் வருமாறு கூறுவான்.

நான் விஞ்ஞாபனம் செய்துகொள்ள அனுமதி கொடுங்கள். பிரபோ அடியேனைக் கடைக்கணித்து அநுக்கிரஹம் புரியுங்கள். (முழங்கால் படியிடுகிறான். மூன்று முறை சொல்லுகிறான்)

குருநாயகன் - சரி, அப்படியே யாகக்கடவது.

பக்குவி - அடியேன் திருப்தியடைகிறேன். (மூன்றுமுறை) இந்த நாளிலுமிருந்து அடியேனையாட்கொள்ளுங்கள் அடியேன் தங்களுக்கு அடிமைப்பட்டவனாய் இருக்கிறேன். (மூன்று முறை)

பிறகு அவன் எழுந்து நமஸ்கரித்து சபையின் கோடியில் தனியாய்ச் செல்கிறான். அவ்விடத்தில் அவனுக்குப் பிக்ஷாடன பாத்திரத்தை முதுகில் கட்டப்படுகிறது. அவனுடைய ஆசிரியன் அங்கு சென்று அவன் வலக்கையைப் பிடித்து

அழைத்துக்கொண்டு பிரதமாசாரியின் சமீபத்தில் விடுகிறான். சபையினின்று ஒருகுரு எழுந்து பக்குவியின் பக்கத்தில் நிற்கிறார். இரண்டு ஆசிரியர்களுக்கு இடையே பக்குவிநின்று கொண்டு இருக்கையில் குருவானவர் சபையோரை அனுமதி கேட்டுவிட்டுப் பக்குவியை நோக்கிப் பின்வருமாறு கேள்விகள் கேட்பார்.

குரு: - உன் பெயர் ஞானவன்ஸாவா

பக்குவி:- ஆம், பிரபுவே

குரு : உனது ஆசாரியன் பருசுத்தமான தர்ம்மகீர்த்தியா

பக்குவி:- ஆம், பிரபுவே

இரண்டு குருமார்களும் பின்வருமாறு கூறுவார்கள். பரிசுத்தமானவரும், ஆசிரியிக்கப்பெற்றவரும், உண்மெயை அறிந்தவருமான புத்த பகவானுக்கு ஸ்தோத்திரம்.

பிறகு புத்தரது கட்டளைகளை அக்குருமார் சொல்லுவார்கள்.

முதலில் ஆசாரியனை நியமிப்பது யுக்தமாகும். ஆசாரியனை நியமித்த பிறகு பிக்ஷாடன பாத்திரத்தையும் காஷாய வஸ்திரத்தையும் பக்குவி யடைந்திருக்கிறானா என்று கேட்பது யுக்தம்.

குரு . இதுதானா உன் பிக்ஷாடனபாத்திரம்

பக்குவி: ஆம், பிரபுவே

குரு : இதுதானா உன் உடை

பக்குவி: ஆம், பிரபுவே

குரு : இதுதானா உன் உத்தநீயம்

பக்குவி: ஆம், பிரபுவே

குரு : இதுதான் உன் வேஷ்டி

பக்குவி: ஆம், பிரபுவே

குரு : நீ போய் அவ்விடத்தில் நில்

பக்குவி வணக்கமாய் அவ்விடத்தைவிட்டு சபையின் ஓரத்திற்கு சென்று நிற்பான். குருமார்கள் பிரதமாசாரியருக்கு முன்பாக நின்று கொண்டு சபையை நோக்கிக் கூறுவார். ஆசாரியர்களே செவிகொடுங்கள் இந்த மனுஷ்யன் பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின் கீழ் குருவாயிருக்கப் பிரார்த்திக்கிறான் ஆசாரியர் சபை கூடுதற்குச்சமையம் இதுதான். நான் பக்குவிக்கு உபதேசம் செய்கிறேன். குருமார் பிரதமாசாரியருக்கு நமஸ்காரம் செய்து சபையின் கோடிக்குச் சென்று பக்குவிக்குப் பின்வருமாறு உபதேசம் செய்வார்கள் ஞானவன்ஸா, கேட்பாயாக இப்போது நீ நடந்தவற்றை உண்மெயாய்ச் சொல்லவேண்டியது. சபையில் உன்னைக் கேட்கும் போது உண்மெயாயிருந்தால் ஆமென்றும் உண்மெயா யில்லாவிட்டால் இல்லை என்றும் சொல்லவேண்டியது. ஆலஸ்யம் செய்யக்கூடாது. ஒன்றையும் மறைக்கப்படாது. பின்வரும் கேள்விகளைக் கேட்பார்கள். உனக்கு குஷ்டம் பிளவு, சொரி, சிறங்கு, குளிர் ஜூரம் முதலியவியாதிகள் ஏதேனும் உண்டா

பக்குவி. இல்லை , பிரபுவே

குரு. நீ மனுஷ்ய ஜாதியைச் சேர்ந்தவனா

பக்குவி. ஆம், பிரபுவே

குரு. ஆம், ஆண்மெயனா

பக்குவி. ஆம் பிரபுவே

குரு. நீயோர்க்களத்தில் யுத்தம் செய்பவனல்லவே

பக்குவி. அல்ல, பிரபுவே

குரு. உன்னைப் பெற்றோர் சம்மதத்தைப் பெற்று வந்திருக்கிறாயா

பக்குவி. ஆம், பிரபுவே

குரு. உனக்குப் பிக்ஷாடனபாத்திரமும், காஷாய வஷ்திரமும் இருக்கிறதா

பக்குவி. ஆம், பிரபுவே

குரு. உன் பெயரென்ன

பக்குவி. என் பெயர் ஞானவன்ஸா

குரு. உனக்கு ஆசாரியன் யார்

பக்குவி. எனக்கு ஆசாரியன் பரிசுத்தமானதர்ம்மகீர்த்தி, பிரபோ

இரண்டு குருமார்களும் சபையின் முன்னேபோய் சபாநாயகருக்கு நமஸ்காரம் செய்து பின்வருமாறு கூறுவார்.

ஆசரியர்காள், செவிசாய்த்துக் கேட்டருளுங்கள். பக்குவி பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின் கீழ் ஆசார்யனாய்ச் சேர்க்கப்பட விரும்புகிறான். குருமார் சபை கூடுதற்குச் சமையம் இதுதான். பக்குவி இவ்விடம் இருந்தால் அருகில் வந்து நிற்கக்கடவன், ஒருகுருபக்குவியருகில் வரவழைக்கிறான் பக்குவி வந்து இரு குருமார்களுக்கும் மத்தியில் வந்து நின்று முழங்கால் பணியிடுகிறான் ஆசரியர்காள்! யான் சொல்லுவதைக் கேட்டருளுங்கள். பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியினடிக்கீழ் ஆசிரியனாய்ச் சேர்க்கப்பட விரும்புகிறான். ஆசரியர் சபைகூடச் சமையம் இதுதான். ஆசரியனாயிருக்கத் தக்கவனாயிருக்கின்றானா வென்று பக்குவியைப் பரீக்ஷிக்கிறேன்.

கேள்விகள் முடிவு பெறுகின்றன. பிறகு ஒரு ஆசிரியன் இவ்வாறு கூறுகின்றான்.

பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின்கீழ் ஆசார்யனாயிருக்க இந்தபக்குவி வேண்டுகிறான். அவன் அந்த பதவிக்குரிமெயுள்ளவன். அவனுக்குப் பிக்ஷாடன பாத்திரமும் காஷாய வஸ்திரமும் உண்டு. இந்த பரிசுத்தமான சபையில் யாருக்காவது அங்கீகரமாயிருந்தால் பேசாமலிருக்கட்டும் யாருக்காவது ஆக்ஷேபமிருந்தால் அவன் எழுந்து சொல்லலாம். சபையார் அவனைக் குருவாய்ச் சேர்த்துக்கொள்ள அங்கீகரிக்கிறார்கள். மூன்று முறை இரண்டு குருமார்களும் சபாநாயகருக்கு நமஸ்காரம் செய்து பின்வருமாறு கூறிமுடிப்பார்கள். பக்குவி பரிசுத்தமான தர்ம்மகீர்த்தியின் கீழ் குருபதவிக்குச் சேர்க்கப்பட்டான். சபையார் இதை அங்கீகரிக்கிறார்கள். ஆகையால் வாய்திறவாமல் இருக்கிறார்கள். ஆதலால் இதுதான் உங்கள் விருப்பமென்று தெரிந்துக்கொள்ளுகிறேன். சங்கபோதமுடிந்தவுடன் அறவாழி அந்தணன் ஆனந்தனை நோக்கி சகல சங்கத்தலைவர்களையும் அருகில் அழைக்கும்படி ஆக்கியாபித்தார். சகல சங்கத்தவர்களும் அருகில் வந்து அறனை வணங்கி வாய்ப் பொத்தி நின்றார்கள். அவர்களது அன்பின் பெருக்கையுணர்ந்த அருகன் ஆனந்தமுற்று சங்கத்தலைவர்களே ததாகதர் கண்டக் காட்சியை உலகில் தோன்றியுள்ள மக்கள் யாவருக்கும் விளக்கி என்றும் அழியா மெஞ்ஞான விளக்கை ஏற்றிவிட்டார். சங்கத்தலைவர்களாகிய நீங்கள் மேலும் மேலும் அவைப் பிரகாசிக்கத் தூண்டி ஞானவொளியில் நிலைத்து நிருவாணம் பெற்று அறஹத்துக்களும் பிராமணர்களுமாகி சருவ சீவர்கள் மீதும் அன்பு பாராட்டி

சத்தியதன்மத்தை மாறாமலூட்டி தற்காலம் ததாகதரடையும் பரிபூரண சுகமாம். பரிநிருவாணமடைந்து பிறவி துக்கத்தை ஒழித்துக்கொள்ளுங்கோள் என்றடங்கிவிட்டார்.

**வீரசோழியம்**

கூரார் வளையுகிர்வாளெயிற்றுச் செங்கட்
கொலையுழுவை காய் பசியாற்கூர்ந்த வெண்ணோய் நீங்க
வோராயிரங்கதிர் போல்வாள் விரிந்த மேனி
யுளம் விரும்பிச்சென்றாங்கியைந்தனை நீ
என்றான். காரார் திரைமுளைத்த செம்பவளமேவுங்
கடி முகிழ் தண்சினையகா மறுபூம்போதி
யேரார் முனிவரர் வானவர்தங் கோவே
எந்தாயரோ நின்னை ஏற்றாதார்யாரோ
திருமேவு பது மஞ் சேர் திசைமுகனா முதலாகு
வுருமேவி அவதரித்து உயிரனைத்து முயக்கொள்ளுவான்
இவ்வுலகுங் கீழுலகு மிசையுலகுமிருள் நீங்க
எவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்த செழுஞ் சுடரென்ன
விலங்கு கதிரோரிரண்டு விலங்கிவவங்கொண்டுவ
வலங்குசினைப் போதி நிழ வறமமர்ந்த பெரியோய் நீ.

**அருங்கலைச் செப்பு - பரிநிருவாணப்பத்து**

பரமுத்தியாய பாக்கியத்தைப் பெற்றான் , திரசித்தி காண்டச்சிவன்.
வாள் போன்ற நல்லொளிவளர்த்தானுடலெங்கும் . நீள்விசும் புலாவும் நிலை.
உச்சி வழியால் அலைந்துகிளையுள்ளொளியின். சொச்சவுளங் கண்டகன்ற சீர். அம்பரமாமுள்ளொளியே நல்வொளியாய் தோன்றி, உம்பர்க்குயர்வழியானான்.
பிறவியறுத்தப் போரொளியைக் கண்டோர், துறவினானந்தமிதென்றார்.
சுகவாருதி நிலையே சூழொளியதாகி, பகவனெனப்பரந்த பேர்.
சுகங்கண்டடைந்த சுழிமுனையாந் தோற்றம், அகண்டத்துலாவுவதேயாம். புலியத்திற

காலூன்றா பொன்னொளிதேகத்தின், அவியாமுதற் பரமானார்.
ஒளி கனலற்ற உண்மெயாந் தண்ணொளியாய்க் களிப்பவர்க் காட்சியதுவாம். கருணை வடிவுங் காட்சி நல்ஞானத்தோர், குருவடி வாயத் தோற்றுமொளி
உத்திராயண நிலயமுள்ளத்தொளியாய், சித்திரபானுக் கணிதஞ்சேர்.
அல்லும் பகலுமது வகன்ற உள்ளொளியாய், பல்லவத்திலே அமர்ந்தான் பார். அங்கத்தொளிருமந்த ரங்கவுள்ளொளியாய்க, கங்கைக் கரையமர்ந்த சீர்.
சீர் சிறந்த செவ்வேள் சிரவொளிமெய்க் காண்டல், மார்கழியின் மாமதியமாம். துங்கநிலயத்துளி ரொளியங்காண்டல், மங்களவாரத்தின் மகிழ் குருவாகவந்தான் குளிர்ந்தவொளி திரண்டான், திருவாதிரை நாளிற் சீர்.
காரணமாய் நின்றான் கமலவொளி சிறந்தான், பூரணை நாட் கொண்டான் புகம். படியதிர்ந்ததெங்கும் பணையுள்ளொளியாய், விடியர்காலத்தின் வெளிர். ஊழியது கடந்தான் உள்ளொளியாய் நின்றான், நாழிகையைம்பத்தாறதாம்.
சீலம் நிறைந்த செவ்வொளியைக் கண்டார், கோலதுவே லக்கினமதாம்.

அவர் உழ்க்கார்ந்திருந்தபோது தேகமுழுவதும் வாள்போன்ற சோதிவீசி பரந்தது. சிரசின் உச்சியில் ஐந்துபிளப்பமைந்த ஒளிஓங்கி வளர்ந்தது. அருகினின்ற ஆனந்தனும் பிருங்கியும் அறஹத்துக்களும் ஆனந்தக்கண்ணீர் ததும்பக் கலங்கினார்கள்.

அதுசமயத்தில் விதற்பநாட்டரயனும் அவன் மந்திரியும் தங்களுக்கு நேரிட்டுள்ள சங்கைகளைத் தெளிந்துக்கொள்ள வேண்டுமென்று அருகிலோடி வந்தார்கள். அவைகளை உணர்ந்த அருகன் அறப்பள்ளியில் தனதுவலக்கையால் சிரந்தாங்கி கால்நீட்டிப் படுத்துவந்தவர்களை அருகில் வரச்செய்து சங்கையை விளக்குங்கோளென்று கூறினார்.

விதர்ப்பநாட்டரசனும் மந்திரியும் விவேகமிகுத்தோன் உடலிற்றோன்றும் ஒளியையும் அதன் குளிந்தப் பிரகாசத்தையும் கண்டு திகைத்தும் பயந்தும் வாய் பொத்தியும் நின்று ஒப்பிலா அப்பனே, எங்களுக்குள்ள சங்கையாதெனில், எங்களைக் காப்பாற்றும் பொருள் யாதேனும் உண்டாயில்லையா என்பதேயா மென்றார்கள். அம்மொழிகளைக் கேட்ட அருகன் இருவரையும் நோக்கி உண்டென்பதை உங்களுள்ளத்திலும் இல்லை

என்பதை தோற்றும் பொருள் க்ஷணத்திற்கு க்ஷணம் அழிதலிலும் அறிந்துக்கொள்ளலாம். அன்னையானவள் குழந்தைக்கு அன்னத்தை ஊட்டுவாள். அதனை விழுங்கித் தன்னைப் போஷித்துக்கொள்ளவேண்டியது குழவியின் செயலாகும். அதுபோல ததாகதர் தான் கண்டடைந்த சுகவழியைப் போதிப்பார். நீங்களோ அவ்வழியில் சென்று சுகமுற்று உண்டா இல்லையா என்பதை உங்களுக்குள் நீங்களே உணர்ந்து தெளிந்துக்கொள்ளல் வேண்டும். உண்டென்னிலோ விசாரிணையற்ற சோம்பலால் எங்குண்டென்னும் எதிர்வினாத் தோன்றும். இல்லையெனிலோ மதோன்மத்தச் சோம்பலால் யாதுக்கில்லை என்னும் பதில் மொழித் தோன்றும். அதலின் உண்டென்பதை அவனவனுள்ளத்திலும் இல்லை என்பதை அவனவன் விசாரிணையிலுமே தெரிந்துக்கொள்ளவேண்டியது இயல்பாமென்று தனதிருக் கண்களையும் மூடி மார்கழிமீ பௌர்ணமி திதி திருவாதிரை நட்சத்திரத்தில் பரிநிருவாணம் அடைந்துவிட்டார்.

ஆனந்த நகரமென்னும் பல்லவநாட்டில் பேறியாற்றங்கரை என்றும் கங்கைக்கரை என்றும் வழங்குமிடத்தில் சித்திரபானு வருஷம் மார்கழி மாதம் 28-வது நாள் மங்களவாரம் பௌர்ணமி திதி விடியர்காலம் 56 நாழிகை துலாலக்கினத்தில் பரிநிருவாணமுற்றபோது தேகமெங்கும் குளிர்ந்த ஒளி வீசவும் உச்சியினொளி ஓங்கிவளரவும், பூமியதிரவும், மேகங்கள் பரவி நிற்கவும் தாமரை மலரவும், கண்ட சங்கத்தோர்கள் யாவரும் கலக்கமுற்று தேவாதிதேவனை என்று காண்போம், திருமூர்த்தியை என்று காண்போம், மூவா முதல்வனை என்று காண்போம், முத்திக்கு முதல்வனை என்று காண்போம், சித்தார்த்தி திருவுருவை என்று காண்போம், திங்கள் முகவதனத்தை என்று காண்போம். தேஜோன்மயவுருவை என்று காண்போம். அழியாத அறவுரையை என்று கேட்போம், அமுதமொழி அறநெறியை யார் பால் கேட்போமென்று கதறியழுது தாயிழந்த குழவிபோல் பதரிநின்றார்கள்.

**விம்பாசாரம் - விழாவரைக்காதை**

இறைமகற்காத னெண்பானைந்திற் / குறைமிகுகாலக் கூற்றங் கடிந்து, தக்கக் கடைநாடனுவாதிரையில் / பக்கமங்கலம் பருமதிகோலாய்,

போதி நீழற் பொருந்திய புத்தேள் / சோதிபஞ்கச் சூழொளியாகி, ஆனவைகரை யார்ப்ப வானவன் / போனக விழாக்கோள்.

**வீரசோழியம்**

மணியிலகு செறிதளிரோ டலரொளிய / நிழலமர மருவியறவோர்,
பிணிவிரவு துயரமொடு பிறவிகெட் / உரையருளும் பெரியவருளோன்,
றுணியிலகு சுடருடைய உடல்மொடு / பிரமனெனுந் தவைமெயவர் மா,
வணியிலகு கமலமல ரனையவெழி / லறிவனிணை யடிகடொழுவாம்.
போதிமேவினை பொய்மெயகற்றினை / சோதிவானவர்தொழவெழுந்தருளினை
ஆதிநாதநீனடியினை பரவுதும்.

சங்கத்தோர்களில் விவேகமிகுத்தவர்கட் சிலர் தங்கள் குருபரன் தனது தேகத்தில் பிணியொன்று அணுகாமலும், நரைதிறைவாய்த்து மூப்படையாமலும் குமரபருவ சுக தேஜசிலிருந்து பஞ்சாவஸ்தையாம் மரணவாதையின்றி ஆனந்தச் சோதிமயமாய் சகலருங்காண பரிநிருவாணமுற்றபடியால் ஆனந்தக் கூத்தாடி அருள் நிறைந்தோம் அருள் நிறைந்தோமென்றுபாடி பெருநிட்டையில் நிலைத்தார்கள்.

மற்றய சங்கத் தோர்கள் சித்தார்த்தர் பரிநிருவாணமடைந்த செய்தியை அவரது வம்மிஷவரிசை பேரர்களாகும் சாக்கையர்களுக்கும் தேகபாது காப்பாளராகும் மல்லர்களுக்கும் தருமப்பிரியவரசர்களுக்குத் தெரிவித்தார்கள்.

முக்கியமான ஏழு அரசர்கள் தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் வந்து சேர்ந்து பரிநிருவாணசயனத்திலிருக்கும் நிமலனைக்கண்டு பிணி மூப்பணுகா பெரியோன் தேஜசும், நரைதிரை காணா நாதன் வடிவமே பிறவி சமுத்திரத்தைக் கடந்த பேரின்பசாட்சி என்று உணர்ந்து அருகபூதே அருளாழி வேந்தே நீவிராசை துறந்த பெருமெய் குமரப்பருவம் நீங்கா குறிப்பால் விளங்குகின்றது. யாங்களோ வீண்டம்ப அனுபோகத்தினின்று மாறாப் பிணியாலும் மூப்பாலுந் துக்கத்தைப் பெருக்கிக் கொண்டே வருகின்றோம். அரசர்களென்னும் பெயர்பெற்றும் அல்லலும் அவதியும்

எங்களை விட்டகன்ற தில்லை. ஆறுதலுள்ள மனோதுக்க தேகதுக்க செயலால் சுகநித்திறையற்று திகைத்து நிற்கின்றோம். தாங்களோ ஆனந்த நித்திறையில் லயித்து சதா விழிப்பினின்று சருவசீவர்களுக்கும் சத்தியதன்மத்தை ஊட்டிய நாவானதயரவும் கருணா நோக்க விழியானது மூடவும் இன்றுதான் கண்டோம். இனியார் பால் அறவுரைக் கேட்போம். இனியாவரது கிருபாநோக்கம் பெறுவோமென்று அலறிவிழுந்து அறஹத்துக்களால் ஆறுதல் அடைந்து அறவாழி அந்தணன் தேக தகனத்திற்காய் ஏறாளமான சந்தனக்கட்டைகளையும் கற்பூரத்தையும் அகில் தைலங்களையுந் தருவித்தார்கள். சாக்கைய வம்மிஷவரிசையோரும் மல்லர்களும் மற்றுஞ் சங்கத்தோர்களும் வந்து சேர்ந்து பொன்மதில் வெள்ளிமதிலமைந்த சித்திரமாளிகையில் சயனித்த தேகம் மரத்தடி புழுதியில் இருகால்களை நீட்டி வலதுகையை சிரசிற்றாங்கி ஓலையின் பன்னகசயன அறப்பள்ளியுற்றிருப்பதைக் கண்டு தலைத்தார் வேந்தர் பதியைத் துறந்த சுகம் இதுதானோ , உலகச் சக்கிராதிபதியாகும் ஓர் மகவைத் துறந்த உல்லாசமிதுதானோ என்றவரடியில் வீழ்ந்து கதரி அவர் பரிநிருவாண ஆனந்தமறியாத அஞ்ஞான முற்றோர் சிலர் யாதா மொரு பிணியுமின்றி சுகதேகத்துடனிருந்தவர் எவ்வகையால் இறந்தார். யாது புசிப்பெடுத்தார், இவரது மரணத்திற்குக் காரணம் யாதென்று கண்கலங்கி நின்றார்கள்.

**சாக்கையர் பிரிவாற்றா மூவடி வெளி விருத்தம்**

உலக மிருண்டனவா லுள்ளொளி பிரிந்தனவா லென்செய்கோம்யாம்
இலகு மொளிகுளிர்ந்துயெங்கும் பரந்தனவா லென்செய்கோம்யாம்
சலமலிந்த கடலலைகள் சாலவமர்ந்தனவா லென்செய்கோம்யாம்.
கொண்டல் முழங்கினவாற் கோடற்பரந்தனவா லென்செய்கோம்யாம்
வண்டு வரிபாட வார்தவளம் பூத்தனவா லென்செய்கோம்யாம்
எண்டிசையுந் தோகை யிசைந்தகவியேங்கினவா லென்செய்கோம்யாம்.
குலமரபோர் கூடுமொரு கூக்கல் முழங்கினவா லென்செய்கோம்யாம்
கலகலெனுங்கிண்கிணியார காதல் நிறைந்தனவா வென்செய்கோம்யாம்
பலகலையு மீயந்த தொனியாகல் மறைந்தனவா வென் செய்கோம்யாம்.
அமுதவாக்கின் மொழியாம் அறமுமறைந்தனவா லென்செய்கோம்யாம்

குமுதமலர் வீற்றிருந்த கோமான் மறைந்தனரே யென்செய்கோம்யாம்
சுமுசுசுகவாருதியின் சூ ழலமர்ந்தனவா லென்செய்கோம்யாம்.
கங்குல்பரந்தனவா காந்தள் நிறைந்தனவா லென்செய்கோம்பாம்
சங்கங் குமிங்கினவா சாக்கை யொடுங்கினதா லென்செய்கோம்பாம்
எங்குமமர்ந்தகுரு வங்க மறைந்தனகா லென் செய்கோம்யாம்
எல்லா முணர்ந்த மொழியார்பாலுணர்ந்தறிவோ மென்செய்கோம்யாம்
கல்லா லமர்ந்தசுக காட்சி யெங்கு கண்டறிவோ மென்செய்கோம்யாம்
சொல்லா லுணர்த்து சுக சூட்சமொழி கண்டறியோமென்செய்கோயாம்.
சீலசுகமளித்த செல்வநிலை யெங்குணர்வோ மென்செய்கோம்யாம்
கால நிலையை வென்றகாட்சிதனை யென்றுணர்வொமென்செய்கோம்யாம்
வாலவறிவமர்ந்தோன் வாய்மொழியைக் கேட்டி லோமேயென்செய்கோம்யாம்.
மறுளறுத்தப்பெரும் போதி மாதவனைக்கண்டிலமா லென்செய்கோம்யாம்
அருளமர்ந்ததிருமொழியாலறவழக்கங்கேட்டிலோமாலென் செய்கோம்பாம்
பொருளறியு மருந்தவத்துப் புரவலரைக்கண்டிலமா லென்செய்கோம்யாம்.
துக்க நிலை நாலுணர்ந்தத்தூயவனைக்கண்டிலமாலென்செய்கோம்யாம்
பக்குவமெய்ப்பாங்குரைக்கும் பரதன் மொழிக்கேட்டிலமா லென்செய்கோம்
திக்கெட்டுணர்ந்தானின் தேய்வு நிலைக்கண்டறியோ மென்செய்கோம்யாம்.

பேரியாற்றங்கரையில் வந்திருந்தப் பெருங்கூட்டத்தோருள் விவேகமிகுத்த அறஹத்துக்களும் மற்றும் பெரியோர்களும் மாதவன் தனது பெருமுயற்சியால் கண்டுபிடித்த துக்க நிவர்த்தியின் மார்க்கங்களையும் அம்மார்க்கத்தில் நடந்து மாறிமாறி பிறக்குந் துன்பங்களையும் பிணியின் துன்பங்களையும், மூப்பின் துன்பங்களையும், மரணத்தின் துன்பங்களையும் ஜெயித்து ஜெயசீலனாக விளங்கி பரிநிருவாணமுற்ற பக்குவத்தையும் கண்டுணர்ந்து உலகத்தில் இதுவரையுங் காணா பேரின்ப சுகமும் பெரும் பேரும் இதுவே என்று ஆனந்தக் கூத்தாடி அவரது ஏகசடையைக் கத்திரித்துவைத்துக்கொண்டு தாங்களும் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வாய்மெயில் நிலைத்து பிறப்பை ஜெயிக்கவும், பிணியை ஜெயிக்கவும், மூப்பை ஜெயிக்கவும், மரணத்தை ஜெயிக்கவுமாயசுக சாதனங்களில் நிலைத்து சதாவிழிப்பிலும் ஜாக்கிரதையிலும் நிலைத்துக்கொண்டார்கள்.

அத்தகைய விவேகம் இல்லாதவர்களும் அறிவின் விருத்தியற்றவர்களும் ஆசாபாசப் பற்றுக்களையே மேலாக விரும்பினவர்களுமாகியக் கூட்டத் தோர்கள் யாவரும் தங்களைப்போல் பிணிவாதையிலும், மரணாவத்தையிலும் சித்தார்த்தர் வருந்தி சீவனை விடாது சுகதேகமும் சுப்ரதேஜசும் பெற்றிருந்து இறந்துவிட்டாரென்றுக் கேட்டவுடன் எவ்வகையால் இறந்தாரென்னும் விசாரிணையே பெரிதாகக் கொண்டு உசாவிவருங்கால் சேணிபனென்னும் அரசனளித்தப் புசிப்பில் கூர்முகக்கரி சமைத்தளித்து என்றுந் தின்றறியாதவர் அதனை புசித்து இறந்தாரென்று தங்களுக்குள் ஒருவருக்கொருவர் பேசி உறுதிபடக் கூறவாரம்பித்துக்கொண்டார்கள்.

விவேகமிகுத்தோர் அவர்களின் அவிவேகக்கருத்தை தடுத்து பரிபூரண பரிநிருவாணப் பேரின்பத்தை விளக்கியும், அவர்கள் எங்குங் கண்டுங் கேட்டுமறியா பரிநிருவாண சுகநிலையறியாது தங்கள் தங்கள் அஞ்ஞானப் பெருக்கின் பிடிவாதத்திலே நின்றுவிட்டார்கள்

அரசர்களும், சங்கத்தோர்களும் அறவாழியான் தேகத்தைப் பல்லக்கில் வளர்த்தி அரசர்களும், அறஹத்துக்களும் அதனை ஏந்திக்கொண்டு அரசசின்னங்களாம் பலவகை வாத்தியகோஷங்கள் முயங்க வெண்குடை வெண்கொடி, வெண்சாமரைகள் வீச சுத்தோதயனென்னும் மண்முகவாகு சக்கிரவர்த்தித் திருமகன் சித்தார்த்தி சக்கிரவர்த்தி பிறப்பை ஜெயித்தார், பிணியை ஜெயித்தார், மூப்பை ஜெயித்தார், மரணத்தை ஜெயித்தாரென்னும் ஆனந்தக்கூத்தாடிக்கொண்டே வம்மிஷவரிசையோராம் சாக்கையர்களும், பாதுகாப்பாளராகும் மல்லர்களும் புடைச் சூழ்ந்து நெருங்கக் காசிகங்கைக்கரைப் பல்லவ நாட்டைச்சார்ந்த ஆனந்தநகருக்கெடுத்துச்சென்று அவ்விடமுள்ள ஓர் விசால பூமியில் அரசர்களால் கொண்டுவந்திருந்த சந்தனக்கட்டை, கற்பூரம், அகிற்றைல முதலியவகைளை விட்டுப் பரப்பி பல்லக்குடன் தேகத்தை அவற்றுள் வைத்து மேலும் மேலும் சந்தனக்கட்டைகளால் மூடி நெருப்பிடுவதற்கு ஒருவருக்கொருவர் மனம் வராது தூரவே விலகிநின்று சாந்தரூபத்தில் எவ்வகையால் அக்கினியை வளர்ப்போம், அன்பே ஓருருவாய ரூபத்தில் எவ்வகையால் அக்கினியை வளர்ப்போம், தருமமே ஓர் வடிவாய தேகத்தில் எவ்வகையால் அக்கினியை வளர்ப்போம், ஈகையே பேருருவாய ரூபத்தில்

எவ்வகையால் அக்கினியை வளர்ப்போம் என்றும் பெருங்கூச்சலிட்டு அவற்றைக் கொளுத்துங் கொள்ளிக்குக் காரணர் அவரது ஏகபுத்திரர் இராகுலரே என்று சகல கூட்டத்தோருஞ் சம்மதித்து அவரது புத்திரரைக் கொண்டே தீ மூட்டிவிட்டார்கள்.

**காசிக்கலம்பகம்**

கேயூர மூரக்கிளர்தோளகிலேசர்
மாயூர மூருமொரு மைந்தற்குத்-தீயூரு
மவ்வேலையீந்தா ரடி தொழும்பு செய்தொழுகு
மிவ்வேலை யீயந்தா ரெமக்கு

சித்தார்த்தரது தகனத்தின் மறுநாள் ஏழரசர்களும், சங்கத்தோர்களும் வந்துசேர்ந்தார்கள். சாக்கையர்களும், மல்லர்களும் அவ்விடமே கார்த்திருந்தும் சந்தனக்கட்டைகளை அதிகமாக அடுக்கி தகனித்தபடியால் அக்கினி தணியாமலிருந்தது. அரசர்களோ அவரது அஸ்தியையும் சாம்பலையும் கொண்டு போய் பக்தி மாறாதிருப்பதற்காய கட்டிடங்களைக் கட்டி அவற்றுள் வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆரம்பித்ததின் பேரில் அத்தணலை தண்ணீர்விட்டு அவிக்கப்படாது பால்விட்டவிக்கவேண்டுமென்னும் அன்பின் மிகுதியால் குடங்குடமாகப் பால் கொண்டுவந்தவித்து அஸ்திகளை எடுக்குங்கால் அரசர்களுக்குள் எமக்கு மக்கென்னும் வாதுகள் பெருகி கலகத்திற்காயத்தமான போது சங்கத்து அறஹத்துக்களாம் அந்தணர்கள் தருமச்சக்கிரப் போதனை யூட்டி சாந்தத்தை நிறப்பி அரசர்களின் வாதுகளை அகற்றி அவர்கட் பிரியம் போல் அஸ்திகளையும், சாம்பலையும் எடுத்துப்போம்படி செய்துவிட்டார்கள்.

அரசர்கள் கொண்டுபோன அஸ்திகளை ஏழு இந்திரவியாரங்கள் கட்டி அதனதன் மத்தியில் புதைத்து அஸ்தியாம் அங்கலய அயிக்கிய பீடம் தெரிந்துக் கொள்ளுவதற்காய் உயர்ந்த பச்சைக் கற்களாம் மரகதங்களாலும், வைரங்களாலும் குழவி போல் செய்து அவ்விடம் புதைத்து அஸ்திவைத்துள்ள இடங்கண்டு அறவாழியானை பக்தி செய்யும் வழி தேடிக்கொண்டார்கள்.

அரசபுத்திரர்களாகிய கோபாலர்களோ சிறு சிறிய பேழைகளை செய்துவந்து குருவை தகனஞ் செய்த சாம்பலாம் மாபூதியை அவைகளிலடக்கஞ் செய்து வைத்துக் கொண்டு காலைக்கடனை முடித்து தேகசுத்தம் முடிந்தவுடன் சிறு பெட்டியிலுள்ள மாபூதியாம் சாம்பலை சற்குருவின் சிந்தனையும் தருமமும் மாறாதிருக்க புத்த, தன்ம, சங்கமென்னும் மூன்றையும் சிந்தித்து மூன்று கோடுகளாக நெற்றியில் பூசி அவ்விடம் மிகுந்து கிடந்த சந்தனக்கட்டைகளையும் எடுத்து அறஹத்துக்களாம் தென்புலத்தோர் உத்தரவின்படி உரைத்து புருவமத்தியில் பொட்டிட்டு புருஷோத்தமனை சிந்திக்கும்படி ஆரம்பித்துக் கொண்டார்கள். சாக்கையக் குடும்பத்தோர்களும் சித்தார்த்தரது ஏகசடையைக் கத்திரித்து இஸ்திரீகள் கூந்தலுடன் முடிந்து கொண்டதுடன் புருஷர்கள் வெள்ளியினாலும், பொன்னினாலுங் கூடுகள் செய்து அதனுள்ளடக்கி குருவின் சிந்தனை மாறாதிருக்க கழுத்தில் அணிந்துக் கொண்டார்கள்.

அஸ்தியைப் புதைத்த அங்கலய பீடமாம் லய அங்க பீடத்தையும் ஏகசடையாம் அங்க பாகத்தையும் இலிங்கமென வழங்கி குரு சிந்தனை மாறாது தன்மசிந்தனையில் லயித்திருந்தார்கள்.

சாக்கைய வம்மிஷவரிசையோர் சற்குருவை தகனஞ்செய்தவிடத்துள்ள மகாபூதியாம் சாம்பலின் மீது ஓர் இந்திரவியாரங்கட்டி மகாபூதியென்னுமோர் பெயரளித்தார்கள். மற்றும் நாதனை தகனஞ் செய்தவிடத்திற்கு ஜகந்நாத மென்னும் ஓர் பெயரையும் அளித்தார்கள். நாதனது அஸ்தியை அடக்கஞ்செய்த ஓர் தேசத்திற்கே அஸ்திநாதபுரமென்னும் ஓர் பெயரையும் அளித்தார்கள்.

அதே காசியம்பதியில் பகவன் ஆதியில் தன்மசங்கத்தை நாட்டி ஆதிவேதம் போதித்தவிடத்தில் பெரும் வியாரங்கட்டி பகவன் சின்முத்திரா ரூபத்தையும், பரிநிருவாணகால ரூபத்தையும், ஸ்தாபித்து காசிநாதவியாரமென்றும், காசிவிஸ்வேச வியாரமென்றும் வழங்கிவந்தார்கள்.

சங்கை ஆதாரனாம் புத்தபிரானால் தோன்றிய கங்கைக்கரையின் அருகிலேயே அறவாழியான் பள்ளிகொண்ட பரிநிருவாண ஆனந்தத்தால் கங்காந்தி

ஸ்நானத்தையும், சங்கரர் அந்தியமான பீடத்தையும், புத்தகயா வென்னும் பதியையும், உலகிலுள்ள சகல பௌத்தர்களும் சென்று தெரிசித்து கங்கையில் மூழ்கி காசிநாதா, காசி விசுவேசா, கங்கை ஆதரா, கமலநாயகா, கருணாலயனே எனக் கொண்டாடி வந்தார்கள்.

**மணிமேகலை**

புத்ததன்ம சங்கமென்னும் / முத்திரமணியை மும்மெயில் வணங்கி
காமங் கரையெனும் பேரியாற் றடக்கரை / மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
காசிமா நகர் கடல்வயிரு புகாமல் வாசவன் விழாக்கோல் மறவேனென்று

**காசிக்கலம்பகம்**

குடமுடைந்ததென வானினங்
கண்மடி மடைதிறந்து பொழிபாலொடு
கொழுமடர் பொதிய வீழ்ந்து கைதை தொழு
சோறுமிட்டணி திருக்கையாற்
கடல் வயிற்றி நிரப்புகின்ற
சுரகங்கை குண்டகழியா நெடுங்
ககன நீள்குடுமி மதில்களேழுடைய
காசிமேவு மகிலேசரே
முத்திக்கு வேட்டவர் மோட்டுடற் பாரமுடைத்தலையோடு
அத்திக்கும் சாம்பற்கு மோம்பினரா லிவையன்றி யப்பாற்
சிந்திப்பது மற்றிலை போலுந் காசிச்சிவபெருமான்
பத்திக்குக் கேவலமே பலமாக பலித்ததுவே.
பொன்னாருக்கென்ன பூந்துணர் கொன்றையும்
வெள்ளிமுளை யன்ன விரிநிலாக் கொழுந்துங்
காந்தண் மலர்ந்தன்ன பாந்தளி னிறையுந்
திரை சுழித்தெரியும் பொருபுனற் கங்கையில்

வெள்ளிதழ்க்கமலம் வள்ளவாய் விரித்தென
முழுநகை முகிழ்க்குங் கழுமுடை வெண்டலை
தோலடிச்செங்காற் பால் புரை வரிச்சிறைக்
கிஞ்சுக மலர்ந்த செஞ்சூட்டெகினத்
துருவெடுத்த கல்வான் றுருவியுங் காணாத்
தொன் மறைக்கிழவ சென்னி மற்றியானே
கண்டு கொண்டனனிக்கடவுண்மா முடியெனப்
பெருமகிழ் சிறப்பக் குரவையிட்டார்த்த
வெள்ளெயி ரிலங்க விரைவிற் சிறைத் தென்
பெருவியப் பிழைக்கு மெரிபுரை சடையை
யாள் வழக் கறுக்கும் வாளமர் தடங்கண்
மின்னிழை மருங்கிற் சின்மொழி மகளீ
ரொழுகொளி மிடற்றி னழகுகவர்ந்துண்டெனக்
கயிறுகொண்டார்க்குங் காட்சித்தென்ன
மரகதங் காய்த்துப் பவளம் பழுக்குங்
கமஞ்சூர் கமுகின் கழுத்திறயாத்து
வீசொளிப் பசும்பொ னூசலாட் டயர்வரர்
பருமணிக் கமுகின் பசுங்கழுத் தடைந்து
துரைபடற்குறுதித் திறடெரித் தென்ன
முழுக்குலை முரிந்து பழுக்காய் சிதறு
மங்குல் கண்படுக்கும் மதுமலர் பொதும்பர்
கங்கைசூழ் கிடந்த காசிவாணா.
புகுமே மதிக்கொழுந்தும் பொன்மாலைப்போது
நகுமே கிளையு நகைத்தா னமக்கென்னே
யுகுமே லுயிர்காசி யுத்தமனைக் காண
தகுமே யப்போதிதழைத்தாரும் பெறலாமே.

மற்றும் சமணரிற் சித்திப்பெறவேண்டியவர்கள் அச்சாம்பலைவாரிக் கொண்டுபோய் மடத்தில் வைத்துக்கொண்டு அதன்மீது ரெட்டுவஸ்திரம் விரித்து தாங்கள் உழ்க்கார்ந்து

ஞானசாதனமுஞ் செய்துவந்தார்கள்.

ஈதன்றி மகதநாட்டைச்சார்ந்த கபிலைநகரில் சாக்கையச் சக்கிரவர்த்தி திருமகன் பிறந்தபோது காராம்பசுவென்னும் கன்று ஈணாத பசுவொன்று வந்து குழவிக்கு அமுதூட்டிய ஆட்சரியங் கண்டு கௌதமரென்னும் ! காரணப்பெயரும், கலிவாகுச் சக்கிரவர்த்தியால் கணிக்கப்பெற்ற சித்தார்த்தி வருஷம் வைகாசிமீ பௌர்ணமியில் பிறந்து சித்தார்த்தி என்றும் பெயர்பெற்ற பெரியோன் பிறந்த காலவாட்சரியக் குறிப்புகளைக் கண்டும் அவரை தரிசிக்கவேண்டி தூரதேசத்தினின்று தவழ்ந்துவந்த இருசப்பாணிகளாகிய ஆனந்தன், பிருங்கி என்னும் இருவர்கள் எழுந்து நின்று நடக்க ஆரம்பித்த ஆட்சரியத்தைக் கண்டும், அவரது வாலவயதில் போதித்த நீதிமொழிகளின் ஆட்சரியங்களைக் கண்டும் தனது அரிய மனைவி அசோதரையையும் அரிய புத்திரன் இராகுலனையும் விட்டு மாசிமாதம் பௌர்ணமியில் துறவுபூண்ட ஆட்சரியத்தைக் கண்டும், அத்தகையத்துறவினிலையால் சகல பற்றுக்களுமற்று கல்லாலடியில் வீற்று பங்குனி மாதப் பௌர்ணமியில் நிருவாண சுகநிலைபெற்று காமமென்னும் மன்மதனையும், மரணமென்னும் காலனையுஞ் செயித்து சகலமுமுணர்ந்து தான் மறுபிறவிக்கேகாது பிறவி நிலையை ஜெயித்த வழிகளையும், தேக சுகஈனமடையாது பிணியை ஜெயித்த வழிகளையும், தேகந் தளராது மூப்பை ஜெயித்த வழிகளையும், பஞ்ச அவத்தைக்குள்ளாகாது மரணத்தை ஜெயித்த வழிகளையும் உலக மக்களுக்கு அநுபவக் காட்சியாகப் போதித்து வந்த ஆட்சரியங்களைக் கண்டும், உலகெங்கும் சத்தியதன்ம சங்கங்களை நாட்டி மெய்யறத்தையூட்டி, உண்மெயறியும் வழிகளைக் காட்டி நட்சேத்திரமாம் தனது புத்தேளுலகநிலை பெறுகுவதற்காக மார்கழிமாதப் பௌர்ணமியில் சுயம்பிரகாசமாகப் பரிநிருவாணமடைந்த ஆட்சரியங்களைக் கண்டும் வந்தவர்களாகும் உலக மக்களுக்கு என்றுங்காணா ஈதோர் புதுமெயும் முத்திய நிலயுமாகக் காணப்பட்டபடியால் இவரே முத்திக்கு முதல்வனென்றும், ஞானத்தின் வழிகாட்டி என்றும் உலகெங்கும் சங்கங்களை நாட்டி அறத்தைப் போதித்துள்ளபடியால் இவரே ஜகத் குருவென்றும் சக்கரவாளமெங்கணும் அறக்கதிர் விதைத்துள்ளபடியால் உலகுக்கு நீதி போதமளித்த உலகநாத னென்றும் உலகிலுள்ள சருவசீவர்களையும் தனது தருமச் சக்கரநெறியில் நிறுத்தியவராதலின் திருமாலென்றும் அவர் பரிநிருவானம் அடையும் வரையில் நரைதிறை காணாது கருணாகரமுகமும் தேஜசும்

நிறைந்த வடிவாய் நின்றபடியால் திருமூர்த்தியென்றுங் கொண்டாடி அவர் பரிநிருவாணமுற்ற அயனமாம் ஆறாவது மாதத்தில் பௌத்த அரசர்களும், குடிகளும், சங்கத்தோர்களும் ஒன்றுகூடி அவர் பரிநிருவாண முற்றப் பேரானந்த ரகசியத்தை விளங்க போதித்து பகவன் பன்றியின் இறச்சியைத் தின்றதுங்கிடையாது, அவர் பஞ்ச அவஸ்தையால் மற்றய மனுக்களைப்போல் மரணமடைந்ததுங் கிடையாதென்று அநுபவங்களை ஊட்டி அறவாழியான் மறைவிற்குத் துக்கமடையாதீர்கள் ஆனந்தத்தில் வீற்றிருங்கோள் ததாகதர் தன் வினையை ஜெயித்து ஏனையோர் வினைகளையும் ஜெயிக்கத்தக்க வழிகாட்டியிருக்கின்றார். நீங்கள் யாவரும் அவர் போதித்த வழியில் நடந்து அவரடைந்த பரிநிருவாண மடையுங்கோள் என்று தென்புலத்தோராம் விவேக மிகுத்தோர்கள் கூறினார்கள்.

அவற்றைக் கேட்டிருந்த விவேகமற்றப் பெருங்குடிகளும் சில அரசர்களும் விவேகிகளின் கூற்றை மறுத்து மாமிஷ பட்சணம் என்றும் செய்யாதவரும், தி காத்திரமும், சுகதேகியுமாயிருந்தவருக்கு பன்றியின் இறைச்சியைப் புசிக்க வைத்துக் கொன்றுவிட்டார்கள். அவரது மரணத்திற்குப் பன்றியினிறைச்சியே காரணமாதலின் வருடந்தோரும் அவர் மரணமடைந்தநாளிற் பன்றி எய்து பெரியாண்டவனை பூசிக்கவேண்டுமென்று ஓர் வகுப்பார் பிரிந்து கொண்டார்கள். இவர்களே ஈனாயன பௌத்தர்களென்று அழைக்கப் பெற்றவர்களாகும்.

மற்றுமுள்ள சங்கத்தோர்களும் விவேக மிகுத்தோர்களும் அகிம்சா தன்மத்தை அதியில் ஊட்டிய அப்பனுக்கு இம்சாதுக்கி ஏற்காக. அது சாக சங்கத்தோரைக் கார்க்காது, அவரை சிந்தித்து நீதிமார்க்கத்தைக் கொண்டாட வேண்டியவர்கள் அஹிம்சா தருமத்தில் நிலைத்து வைகாசிமாத பருவத்தில் அவர் பிறந்தநாள் கொண்டாட்டத்தையும், மாசி மாத பருவத்தில் அவர் துறவடைந்தநாள் கொண்டாட்டத்தையும், பங்குனி மாத பருவத்தில் அவர் நிருவாணமாம் காமனை ஜெயித்தக் கொண்டாட்டத்தையும், மார்கழிமாத பருவத்தில் அவர் சுயஞ்சோதியாய் பரிநிருவாணமுற்ற வானந்தத்தையும் கொண்டாடி நீதிநெறியில் நிலைக்க வேண்டுமென்று ஓர் கூட்டத்தார் பிரிந்தார்கள். இவர்களே மகாயன பௌத்தக் கூட்டத்தோர்களானார்கள்.

பகவன் பரிநிருவாணமுற்ற அயனமாம் ஆறாவது மாதத்திலிக் கூட்டங்கள் கூடி மேற்கூறி முடிவுகளை செய்தபடியால் வருடந்தோரும் பன்றியை எய்ய வேண்டுமென்னும் கூட்டத்தோர் ஈனாயன பௌத்தர்களென்றும், அவ்வகைப் பன்றி எய்யப்படாதென்னும் கூட்டத்தோர் மகாயன் பௌத்தர்களென்றும் அழைக்கப்பெற்றார்கள்.

தேவர் கோன் வாழ்க தென்புலத்தோர் வாழ்க
மூவா முதல்வன் மும்மணியும் வாழ்க
காவாது காக்கங் கருணா வபாஸ்க
ராவலோர் வாழ்க வவர்சுக மோங்கவே.

**சூளாமணி**

மூவடிவினாலிரண்டு சூழ் சுடருநாண முழுதுலகமுடியெழின் முளைவயிரநாற்றித்
தூவடிவினாலிலங்கு வெண்குடையினீழற்சுடரோயுன்னடி
போற்றிச் சொல்லுவதொன்றுண்டாற்
சேவடிகடாமரையின் சேயிதழ்கடீண்டச்சி வந்தனவோ சேலடியின் செங்கதிர்கள் பாயய்
பூவடி வுகொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புலங்கொளாவாலெமக்கெம்*புண்ணியர்தங்கோவே
கருமாலை வெவ்வினைகள் காறளர நூறிக்கடையிலாவொண்
ஞானக்கதிரவிரித்தாயென்று
மருமாலை நன்னெறியை முன்பயந்தா என்று மடியே முன்னடி பரவுமாற்றிவதல்லாற்
றிருமாலே தேனாருமரவிந்த மேந்துந் திருவணங்குசேவடியாய் தேவாதிதேவ
பெருமானே நின் பெருமெ நன் குணர மாட்டார் பிணங்குவார்தம்மை வினைப்
பிணக்கொழிக்கலாமே
ஒளியாகி தலகாசி
நீவிரிந்தாயென்கோவுலகெலாநின்னொளியினுள்ளடங்கிறறென்கோ வளியாரவல
நீயால்கின்றாயென்கோ வம ருலகுதானின்ன
தடியடைந்ததென்கோ
விளியாதமெய்ப்பொருளை நீவிரித்தாயென்கோ நீவிரித்தவாறே மெய்ப்பொருள்

விரிந்ததென்கோ
தெளியாமலில்லை நின்றிருவடிகண்மெய்மெதெளிந்தாலுஞ் செவ்வனே தெரிந்துரைக்கலாமே
களியானை நாற்கோட்டத் தொன்றுடைய செல்வன் கண்ணொராயிரமுடையான் கண் விளக்கமெய்து
மொளியானை நாழி முதலானானை ஒங்கியுல களவுமாகி உயிர் தமக்குறுகண் செய்யா வளியானைவாரமுலஞ்சோதிவாய் சூழ்ந்தவருளாழியானையிணையடி பரவுவார்கட் கெளியானை எந்தைபெருமானை ஏயல்லா விறையாக
வீங்கொருவரெண்ணு மாறென்னே
தெருளாமேயால் வினவற்பாலதொன்றுண்டு திருவடிகள் செம்பொனாரரவிந்தமேந்த. விருளாழியேழுலகுஞ் ருமொளியின் மூழ்க விமையாத செங்கண்ணினிமையோர் வந்தேத்த உருளாழியானுமொளிமணி முடி மேற்கைவைத்தொருபாலில் வரவுலகநின்னுழையதாக
வருளாழி முன்செல்லப் பின்செல்வதென்னா வடிப்படாதாய் நின்றவகன் ஞாலமுண்டோ
வானோர் தமுலருடைய மானீலவண்ணன் மகிழ்ந்திறைஞ்சு
மாலையணிமணிமுடி மேல்வைகா
ஊனாருமறவாழியோடைமால் யானையுடையான்ற ஒளிமுடியின் மேலுரையோநிற்கத் தேனாருமரவிந்தஞ் சென்றேந்தும் போழ்து திருவடிகள்
செந்தோடு தீண்டாவேயாகி
வானாவிம்மூவுலகுமாளுடைய பெம்மானடி யுருவாரின் மெதா மறிவுண்டதன்றே
தேனருளி மந்தாரச் செந்தா மந்தாழ்ந்து திரளரைய செம்பவளம் வம்பாக வூன்றி
வானருளி மாணிக்கச் செங்கதிர்கள் வீசி மதிமருட்டும் வெண்குடை யோர்
மூன்றுடையவாமன்
யானருள வேண்டி யடியினை பணியும் போழ்துமையவர் கோனாயிரச்
செங்கணான் வந்து
தானருளுமாறென்று தாழ்பணியும் போழ்துந் தகை யொன்ற தேலிறைமைதக்க
தேயேன்றே
விண்டாங்கவெவ்வினைவெரூ உதிரநூறிவிரிகின்ற மெய்ஞ்ஞானச்
சுடர்விளக்குமாட்டிக்

கண்டார்கணின்னிலைமைகண்டொழுகயானின் கதிர் மயங்கு சோதியாற்கண்விளக்கப்பட்டுத் தண்டா அமரைமலரின்மே னடந்தாயென்றுந்தமனியப் பொன்னணையின் மேலமர்ந்தாயென்றும்
வண்டார சோகினிழல் வாயமர்ந்தாயென்றும் வாழ்த்தினால் வாராயோ
வானவர்தங்கோவே.
கருவார்ந்த பொருணிகழ்வுங் காலங்கண்மூன்றுங் கடையிலா நன்ஞானக்கதிரகத்தலாகி யொருவாதிங்கவ்வொளியினின்னுள்ளமாகிலுவகெல்லா நின்றுள்ளத்தே
ஒளிக்கவேண்டா
திருவார்ந்ததண்மார்ப தேவாதி தேவ திரளரைய செந்தனிரசோகமர்ந்த செல்வ
வருவாரும் வையகமுநீயும் வேறாகி மணிமேனிமாலே மயக்குவதிங்கென்னோ செங்கணெடுமாலே செறிந்திலங்கு சோதித்திருமுயங்கு மூர்த்தியாய் செய்யதாமரையி னங்கண்டி வைத்தருளுமாதியாயாழியறவரசே என்று நின்னடி பணிவதல்லா
லெங்கணிடரகலு மாறிந்நிலைமெயெய்தி யிருளுலக நீக்கு மருடருகநீயென்று வெங்கணிருவினையையறவென்றாய் முன்னின்று விண்ணப்பஞ்செய்யும்
விழுத்தகை மெயுண்டோ .

**சிலப்பதிகாரம்**

அறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
றரும முதல்வன் றலைவன் றருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி வொளியோன்
றத்துவன் சாதுவன் (சாரணன்) காரணன்
சித்தன் பெரியவன் செம்ம றிகழொளி
யிறைவன் குரவ னியல்குண னெங்கோன்
குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்

சங்கற னீசன் சயம்பு சதுமுக
னங்கம் பயந்தோ னருக னருண்முனி
பண்ணவ னெண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி
யோதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரெனச்
சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்
காவுந் தியுந்தன் கைத்தலை மேற்கொண்
டொருமூன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா
காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா
வைவரை வென்றோ னடியினை யல்லது
கைவரைக் காணினுங் காணா வென்கண்
ணருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தா
தருக ரறவ னறிவோற் கல்லதென்
னிருகையுங் கூடி யொருவழிக் குவியா
மலர்மிசை நடந்த மலரடிக் கல்வதென்
றலைமிசை யுச்சி தானணி பொறா அ
திறுதியி லின்பத் திறைமொழி யல்லது
மறுதர வோதியென் மனம்புடை பெயரா
தென்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தர மாறாப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேரியாற்று.

எனும் பஞ்சகாவியங்களின் ஆதாரங்கொண்டும், பாலிபாஷையிலுள் ளப் பிடகங்களின் ஆதாரங்கொண்டும், திராவிட பௌத்தருள் பிரபலமாக வழங்கிவந்த சுருதியின் அனுபவங் கொண்டும் வரைந்துள்ள முதநூலாம்.

**புத்தரது ஆதிவேதம் முற்றிற்று**

29. **புத்தரது ஆதிவேத விளக்கம்**

சவ்வப்பாபஸ்ஸ அகரணம் பாபஞ் செய்யாதிருங்கோள்

குஸலஸ வுபசம்பதா இதயத்தை சுத்தி செய்யுங்கோள் சசித்தபரியோதபனம் நன்மெய்க் கடைபிடியுங்கோள்

யேதங் புத்தானுசாசனம்

இவ்வாக்கியங்கள் மூன்றும் மூன்று பேதமாயுள்ளபடியால் திரிபேதவாக்கியங்கள் என்றும், திரிவேதவாக்கியங்கள் என்றும், இதுவே சீர்திருத்த ஆதிபீட வாக்கியங்களானபடியால், திரிபிடகவாக்கியங்கள் என்றும், வரிவடிவ அட்சரமில்லாது ஒலிவடிவாய் ஒருவர் சொல்லவும் மற்றொருவர் கேட்கவுமாயிருந்தபடியால் வரையாக் கேள்வி திரிசுருதி வாக்கியங்கள் என்றும், விசேஷித்த ஞானம் அமைந்துள்ளபடியால் திரிரத்தினங்கள் என்றும், ஆதிமக்கள் சீர்திருத்த முப்பிரிவாக்கியங்களாயிருந்த படியால் முதநூலென்றும், ஆதிவேதமென்றும், உடனுக்குடன் விளங்காத அபரியப் பொருட்களாயிருந்த படியால் அருமறைகள் என்றும் வழங்கி வந்தார்கள். இம்முத நூலாம் ஆதிவேதத்தை போதித்தவர் புத்தரே என்பதற்கு ஆதாரம்

**நன்னூல்**

வினையினீங்கி விளங்கிய வறிவின் / முனைவன் கண்டது முதநூலாகும்

**அருங்கலைச்செப்பு**

என்று முண்டாகி யிறையால் வெளிப்பட்டு / நின்றது நூலென்றுணர்

**சீவக சிந்தாமணி**

ஆதிவேதம் பயங்தோய்நீ யலர்பெய்மாரி யமர்தோய் நீ
நீதிநெறியை யுணர்ந்தோய் நீ நிகரில் காட்சிக் கிறையோய் நீ
நாதனென்னப் படுவோய் நீ நவை செய் பிறவிக் கடலகத்துன்
பாதகமலந் தொழவெங்கள் பசையாப்பவிழப் பணியாயே.

**சூளாமணி**

ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை / போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய / சேதியஞ் செல்வனின் றிருவடி வணங்கினம்.

திரிபேதவாக்கியங்களாம் திரிபிடகவாக்கியங்கள் வரிவடிவ அட்சரங் களில்லாது வரையாக்கேள்வியாம் திரிசுருதிவாக்கியங்களாய் இருந்தபடியால் மக்கள் மனதிற் சரிவறப்பதியாமல் மலைவுற்றிருப்பதையுணர்ந்த பகவன் விம்பாசார அரசனை அணுகி மகடபாஷை வடமொழி வரிவடிவட்சரங் களையும், திராவிடபாஷையாம் தென்மொழி வரிவடிவட்சரங்களையும் உண்டு செய்து உடலினதுச் செயலையும் உயிரினதுச்செயலையும் உணர்ந்து உண்மெயாம் மெய்ப்பொருள் உணர்வான் வேண்டி உயிரெழுத்து மெய்யெழுத்தென்னு மட்சரங்களையும் வல்லினம், மெல்லினம், இடையினமென்னு மதனதன் சத்துவங்களையும், ஒருமெய், பன்மெயென்னும் பாகுபாடுகளையும், அதனதன் வேற்றுமெகளாம் விகற்பங்களைத் தெள்ளறவிளக்கி மொழிதலாக்கி விம்பாசாரவரசனது தேசத்திலுள்ள ஓர் கன்மலையை சீர்திருத்தி திரிவேதமொழிகளைத் தழுவிய தசசீலங்களாம் பாரதப்பத்தை வரைந்து சகடபாஷை, திராவிடபாஷை கற்றுத்தேறும் ஒவ்வொருவர் மனதிலும் பதியச்செய்து விட்டார்.

சகடபாஷை : வடமொழி புத்தபிரானால் இஃது பாணினியாருக்கு போதிக்கப்பட்டது.

திராவிட பாஷை : தென்மொழி புத்தபிரானால் இஃது அகஸ்தியருக்குப் போதிக்கப்பட்டது.

இவ்விருமொழியும் புத்தபிரானால் போதித்துள்ளதென்பதற்காதாரம்.

பூர்வம் இத்தேசக்குடிகள் யாவரும் புத்தபிரானை இந்திரரென்றே கொண்டாடிவந்தார்கள். அதற்குக் காரணம் மெய், வாய், கண், மூச்சுச், செவியென்னும் ஐயிந்தியங்களை வென்ற வல்லபங் கொண்டேயாம். இந்திர விழாவென்றும் இந்திரவிழாக்கோலென்றும், இந்திரதிருவென்றும் அவரைக் கொண்டாடிவந்த உச்சாகத்தால், அவ்வகைக் கொண்டாடி வந்த மக்களை இந்தியர்களென்றும், கொண்டாடிய தேசத்தை இந்தியமென்றும் நாளது வரையிலும் வழங்கி வருகின்றார்கள்.

இத்தகைய இந்திரரென்னும் பெயர்பெற்ற பகவனால் வரைந்துள்ள வரிவடிவ முதலெழுத்ததிகாரத்திற்கு ஐந்திரவியாக்ரணமென்று பெயர். அதனாதாரங்கொண்டே தொல்காப்பியம் தோன்றியுள்ளதென்பதை அதற்குப் பாயிரங்கூறியுள்ள பனம்பாரனாரே போதுஞ்சான்றாம்.

**தொல்காப்பிய எழுத்ததிகார சிறப்புப்பாயிரம்**

வடவேங்கட தென்குமரி யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிருமுதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளுநாடிச்
செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்து நூல்கண்டு முறைப்படவெண்ணி
புலந்தொடுத்தோனே போக்கறு பனுவ
னிலந்தரு திருவிற் பாண்டியன வையத்
தறங்கரை நாவினான் மறை முற்றிய

விதங்கோட்டாசாற் கரிது பத்தெரிந்து
மயங்கரமாபினெழுத்து முறைகாட்டி
மல்குநீர்வரைப்பினிந்திரரரைந்த
தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்ற
பல்புகழ் நிறுத்தப் படி மெயோனே.

**வீரசோழியம்**

ஆவியனைத்துங் கசத்தபமவ் வரியும் வவ்வி,
லேவியவெட்டும் யவ்வாறுஞன் நான்கு மெல்லாவுலகு , மேவியவெண்குடைச் செம்பியன்வீர ராசேந்திரன்றன்.
நாவியல் செந்தமிட் சொல்லின் மொழிமுதனன்னுதலே.

**முன்கலைதிவாகரம்**

வடநூற்கரசன் என்ற தமிழ்க் கவிஞன்
கவியரங்கேற்று முபயக் கவிப்புலவன்,
செறிகுணத்தம்பற் கிழவோன் சேந்த.
னறிவு கரியாகத் தெறிசொற்றிவாகரத்து.
முதலாவது தெய்வப்பெயர் தொகுதி.

**சிவஞான யோகீஸ்வரர் வடகலை தென்கலை பாணிநீயம்**

திடமுடைய மும்மொழியாந் திரிபிடக நிறைவிற்காய்
படி மொழியை பாணினிக்கு வகுத்தருளி அதற்கு இணையா
தொடர்புடைய தென்மொழியை உலகம் எலாந்தொழுதேத்தக்
குடமுதிக்கு வற்புறுத்தார் கொல்லாற்றுபாகர்.

**வீரசோழியப் பாயிரம்**

ஆயுங் குணத்தவ லோகிதன் பக்கலகத்தியன் கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமி ழீங்குரைக்க
நீயு முளையோவெனிற் கருடன் சென்ற நீள்விசும்பி
லீயும் பறக்குமிதற்கென்கொலோ சொல்லுமேந்திழையே.

**வீரசோழியக் கிரியாபதப்படலம்**

மதத்திற் பொலிவும் வடசொற்கிடப்புந் தமிழ்மரபு,
முதத்திற் பொலியேழை சொற்களின் குற்றமு மோங்குவினைப்,
பதத்திற் சிதைவு மறிந்தே முடிக்க பன்னூறாயிரம்.
விதத்திற் பொலியும் புகழவலோகிதன் மெய்த்தமிழே (அவலோகிதர் - புத்தர்.)

**சீவஞானயோகீஸ்வரர் கலைஞானம்**

திருமொழிக்குங் கண்ணுதலால் முதற்குலவரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிபடுத்தார் முநிவேந்தரிசைபரப்பும் இருமொழியுமான்றவரே தழ் இனா ரென்றாலிவ்
இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

(முதற்குரவர் - ஆதி முநிவர், முநிவேந்தராம் முதற்றுறவியால் வடமொழியும், தென்மொழியுமாக்கியதென்பது கருத்து).

அவலோகிதரால் அக்கை, தங்கையர்போலாக்கிய வடமொழி, தென்மொழி இரண்டினாதரவால், திரிபேத வாக்கியங்களாகு முதநூலை ஆதி நூல், எழுதாக்கேள்வி, ஆரணம், ஒத்து, சாகை, சுருதி, இருக்கென்னும் ஏழுபேதமாக வழங்கிவந்தார்கள்.

**முன்கலை திவாகரம்**

ஆதிநூலென்பது வேதநூற்பெயரே

**பின் கலை நிகண்டு**

ஆதிநூலெழுதாக் கேள்வி யாரண மொத்து சாகை
யேதமில் சுருதிதன்னோடிருக்கிவை யேழும்வேதம்
வேதநூற் நாமம் விதித்திடு ஞானபாகை
யாதியாங் கருமபாகை யருத்த பாகையுமா மென்ப.

பாபஞ் செய்யாதிருங்கோள் கரும்பாகை; நன்மெக் கடைபிடியுங்கோள் அர்த்தபாகை இதயத்தை சுத்திசெய்யுங்கோள் ஞானபாகை.

அறத்தால் கன்மபாகை நற்செயல் விளக்கத்தையும், பொருளால் அர்த்தபாகை மெய்ப்பொருள் விளக்கத்தையும், இன்பத்தால் ஞானபாகை பேரின்ப விளக்கத்தையும் விவரித்து ஞானசாதனத்தால் பற்றற்று தானே தானே தத்துவமாம் நித்தியானந்த நிருவாண வீடுபேறு பெற்றுபோது பாபஞ்செய்யா திருங்கோள், நன்மெக் கடைபிடியுங்கோள், இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்னும் மூன்று பேதவாக்கியங்களின் பயனாம் வீடு பேற்றையும் ஒரு பேதவாக்கியமாக்கி ஆக நான்கு பேதவாக்கியங்கள் என வழங்கியதுமன்றி அதனதன் செயலுக்குத் தக்கவாறு இருக்கு, யசுர், தைத்திரீயம், அதர்வணமென்னும் நான்கு பெயர்களையும் அளித்து அவைகளுக்கு சிறப்புநிலையாம் ஆகமம், ஆரிடம், பிடகம், தந்திரம், பநுவல், சமயம், சூத்திரமென்றும் வழங்கி வந்தார்கள்.

**பின்கலை நிகண்டு**

மெய்தெரியாரணந்தான் வேதத்தி ஞானபாகை
மையலுட் பொருளினாம மற்றுப நிடதமென்ப
வைதிகம் வேதமற்ற மார்க்கமே பார்க்குங்காலை
பையமிலிருக்கினோடு பிடகமேயாதிவேதம்
ஏமமா மிரண்டாம் வேத மிசை தைத்திரியத்தோடு
தோமிலா யசுவமென்றுஞ் சொல்லுவர் நல்ல நூலோ

சாமமா மூன்றாம் வேதந் தகமெபேரின்பஞ் சாரும்
வாமமாம் நான்காம் வேதம் அதர்வணம் வீடுபேறாம்
தந்துரை புனைந்துரைத்தல் சார்ந்த பாயிரத்தினோடு
முந்திய பதிகமேநூன் முகமுக உரையுமப்பே
ரந்தமா மாகமத்தோராரிடம் பிடகமற்றுந்
தந்திரம் பநுவலோடு சமயஞ்சூத்திரமுநூற்பேர்.

நான்குபேதவாக்கியங்கள் : பாபஞ் செய்யாதிருத்தல், நன்மெய்க் கடைபிடித்தல், இதயத்தை சுத்திசெய்தல், அதன் பயன் வீடுபேறு.

நான்குபேதவாக்கியங்கள் : கன்மபாகை, அர்த்தபாகை, ஞானபாகை, வீடுபேறாம் நிருவாணபாகை.

நான்குபேதத்தின் பெயர்கள் : இருக்கு, யசுர், தைத்திரியம், அதர்வணம்.

ஆதிபேதவாக்கியம் கன்மபாகை. இதன் காரணம் பாபஞ்செய்யாதிருத்தல், காரியம் மெய்ப்பொருளறிதல். இதன் பெயர் பொருட்பால், பிடகம், இருக்கென்றுங் கூறப்படும்.

இரண்டாம் பேதவாக்கியம் அர்த்தபாகை. இதன் காரணம் நன்மெய்க் கடைபிடித்தல், காரியம் மெய்யறவுணர்ச்சி. இதன் பெயர் அறத்துப்பால் தைத்திரய மென்னப்படும்.

மூன்றாம் பேதவாக்கியம் ஞானபாகை. இதன்காரணம் இதய சுத்திசெய்தல், காரியம் மெய்யின்பமாம் பேரின்ப உணர்ச்சி. இதன் பெயர் காமப்பால் சாமமென்னப்படும்.

மூன்று பேதவாக்கியங்களுக்கு மேல் நான்காவது பேதவாக்கிய மில்லாவிடினும் மூன்று பேதவாக்கியங்களின் சாதனங்கொண்டு விவேக முக்கினவனாதலால் அவற்றை நிருவாணபாகையாகவும், சுயம்பிரகாச வீடுபேற்றை அதர்வண பேதவாக்கியமெனக் கூறி நான்கு பேதவாக்கியங்களென வகுத்துள்ளார்கள்.

இன்னான்கு பேதவாக்கியங்களின் அந்தரார்த்தம் சகலருக்கும் விளங்காமல் மறைபொருளாயிருந்தபடியால் ஒவ்வோர் பேதவாக்கியங்களுக்கும் எவ்வெட்ட தரார்த்தங்கள் கூறி, நாலெட்டு முப்பத்திரண்டு உபநிட்சையார்த்தங்களை வகுத்து உபநிடதங்களென்னும் பெயரை அளித்துள்ளார்கள்.

**முன்கலைதிவாகரம்**

உபநிடத்தின் பெயர் - உபநிடதம் வேதத்தினுட்பொருள் நுட்பம்

பேதவாக்கியங்களின் உட்பொருள் சகலருக்கும் விளங்காதது கண்பே.. திருவள்ளுவ நாயனார் முப்பாலென்னுந் திரிக்குறளாலும் விளக்கியிருக்கின்றார்,

**நரிவெருத்தலையார்**

இன்பம் பொருளறம் யீடென்னு மின்னான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழி நூன் - மன்பதைகட்
குள்ளவரிதென்ற வைவள்ளுவ ருலகங்
கொள்ள மொழிந்தார் - குறள்.

**மாங்குடி மருதனார்**

ஓதற்கெளிதா யுணர்தற்கரிதாகி
வேதப்பொருளாய் மிகவிளங்கி - தீதற்றே
ருள்ளுதொ ருள்ளுதொ ருள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

வேதவாக்கியத்தினுட் பொருளை விளக்கு மொழிக்கு மக பாஷையில் உபநிடதமென்றும், சகடபாஷையில் உபநிட்சையார்த்தம் என்றும், திராவிடபாஷையில் வேதத்தினுட்பொருள் என்றும் வழங்கிவந்தார்கள்

நான்கு பேதவாக்கியங்களின் 32 உட்பொருணுட்பம்.

**1. கன்மபாகையுட்பொருளஷ்டகம் பாபமென்பதென்னை**

1. அன்னியப்பிராணிகளின் மீது கோபங்கொண்டு துன்பஞ் செய்தல் பாபம்.
2. அன்னியர்ப்பொருள் எவர் அனுமதியின்றி அபகரித்தல் பாபம்.
3. அன்னியரைக் கெடுக்கவேண்டும் என்று தீங்கு நினைத்தல் பாபம்.
4. அன்னியருடைய ஸ்திரீகளை அபகரித்தல் பாபம்.
5. அன்னிய சீவப்பிராணிகளைக் கொலைச் செய்தல் பாபம்
6. அன்னியர் மனம் புண்பட வார்த்தையாடுதல் பாபம்.
7. அன்னியர்களை வஞ்சித்து வருந்தச் செய்தல் பாபம்.
8. அன்னியரறிவை மதுவூட்டி மயங்கச் செய்தல் பாபம்.

**2. அர்த்த பாகை உட்பொருளஷ்டகம் நன்மெய்க்கடைபிடித்தல் என்பது**

**என்னை**

1. அன்னியப்பிராணிகளுக்கு உண்டாகுந் துன்பங்களை நீக்கி ஆதரித்தல் நன்மெய்.
2. அன்னியருக்கில்லாப் பொருளீய்ந்து தன்னைப்போல் சீர்பெறச் செய்தல் நன்மெய்
3. அன்னியர்களைத் தன்னவர்போல் நேசித்து ஆதரிப்பது நன்மெய்
4. அன்னியர் மனைவிகளை தாய்தங்கையர்போல் பாதுகாத்தல் நன்மெய்.
5. அன்னிய சீவப்பிராணிகளை கொலை செய்யாமலும் கொலைக் கேவாமலுமிருத்தல் நன்மெய்.
6. அன்னியர் மனமும் உடலும் பூரிக்கும் மிருதுவான வார்த்தையாடுதல்
7. அன்னியர்களுக்குபயோக முண்டாகும் வார்த்தைகளைப்போ விருத்திபெறச்செய்தல் நன்மெய்.
8. அன்னியர்களின் அறிவைப் பெருகச் செய்து அமுதுண்ணச் செய்தல் நன்மெய்

**3. ஞானபாகையுட்பொருளஷ்டகம். இதயசுத்தமென்பது என்னை**

1. தன்னிடத்துண்டாங் கோபத்தை அகற்றி சாந்தத்தை நிறப்பு இதய சுத்தம்.

நன்மெய்.

2. தன்னிடத்து உண்டாகும் காமத்தைத் தங்கவிடாமல் அகற்றி அன்பை பெருக்குதல் இதயசுத்தம்.
3. தன்னிடத்துண்டாம் மயக்கங்களை அகற்றி அறிவை வளரச்செய்தல் இதய சுத்தம்
4. தன்னிடத்து உண்டாம் வஞ்சினம் பொறாமைகளை அகற்றி சகலர் சுகவாழ்க்கையை விரும்புதல் இதயசுத்தம்.
5. தன்னிடத்து உண்டாம், பொய்பொருளுசாவுதல் இதயசுத்தம்.
6. தன்னிடத்து உண்டாகும் சிற்றின்பச் செயல்களை அகற்றி பேரின்பத்தை நாடல் இதயசுத்தம்.
7. தன்னிடத்து உண்டாகும் ஆடம்பச் செயல்களை அகற்றி அடக்கத்தில் நிற்றல் இதயசுத்தம்.
8. தன்னை வஞ்சித்துத் துன்பப்படுத்தியவனை அன்புடன் ஆதரித்தல் இதயசுத்தம்.

**4. நிருவாணபாகையுட்பொருளஷ்டகம் வீடுபேறாம் நிருவாணம் என்பது**

**என்னை**

1. தன்னிடத்து உண்டாம் பற்றுக்களை அகற்றி சதானந்தத்தில் இருப்பது நிருவாணம்.
2. தன்னை மறைக்கும் நித்திறையை ஜெயித்து சதா விழிப்பிலிருப்பது நிருவாணம்.
3. தன்னை மாறிமாறி பிறக்கச்செய்யும் மரணத்தை ஜெயித்த நிலை நிருவாணம்.
4. தன்னை சதாதுக்கத்தில் ஆழ்த்தும் காம வெகுளி மயக்கங்களை புறுத்த நிலை நிருவாணம்.
5. தானே தோன்றுகிறதும் கெடுகிறதுமாகிய மனதை தோன்றாமலுங் கெடாமலும் நிறுத்தல் நிருவாணம்.
6. தனக்கு உண்டாகும் ஜெநநபயம், மரணபயமற்று யாதுக்குங் கலங்காமல் நிற்றல் நிருவாணம்.

7. தன்னுள் தானாய் விளங்கும் உண்மெய்யாம் பேரின்பமே நிருவாணம். 8. தானேதானே சுயம்பிரகாச சதாநித்திய சித்தாம் ஆனந்த நிலை நிருவாணம்.

இத்தகைய பேதவாக்கியம் ஒன்றுக்கும் எட்டு உட்பொருள் நுட்பங்களை விளக்கி நான்கு பேதவாக்கியங்களுக்கும் முப்பத்திரண்டு உபநிட தங்களாக்கி நாளதுவரையில் திராவிட பௌத்தாள் சுருதி யுக்தி அனுபவமாகவும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் மார்க்கமாகவும் வழங்கி வருகின்றார்கள். ஒருமொழியின்றி ஆதியில் மூன்று மொழிகளாகத் தோன்றி அம்மூன்று மொழிகளும் மூன்று பேதமாயிருந்தது கண்டு திரிபேதவாக்கியங்கள் என வழங்கி வீடுபேற்றையும், ஒருபேதவாக்கியமாகக் கொண்டபோது நான்கு பேதவாக்கியங்களென வழங்கலாயினர்.

**இதுவே புத்தரது ஆதி வேத விளக்கமென்னப்படும்**

*(ஆதிவேதம், முதலாண்டு முதல் இலக்கத்திலிருந்து தொடர் கட்டுரையாக

*நாலாமாண்டு பதினொன்றாம் இலக்கம் வரை வெளிவந்தது)

# 84. புத்ததன்மம் மகடபாஷை சத்தியதருமம் சகடபாஷை மெய்யறம் திராவிடபாஷை

இம்முப்பாஷை மொழியும் ஒரு பொருளையே தரும். அதனால் புத்தம் என்பதும். சத்தியம் என்பதும், மெய்யென்பதும், ஒரு பொருள் கொண்டு, சக்கிரவர்த்தித் திருமகன் சித்தார்த்தரது மலைவுபடா வாக்கை அநுபவத்திற் கண்டோர் அவரை புத்தரென்றும், சத்தியரென்றும், மெய்யரென்றும் அழைக்கலானார்கள்.

இவற்றுள் தன்மம் என்பதும், தருமம் என்பதும், அறம் என்பதும் ஒரு பொருட் கொண்டு ஆராயுமிடத்து மலைவுபடாமெய்யறம் என்பது யாதெனில் கோபக்காற் குடிகெடுமென்று கூறிய போது அதன் அனுபவங் கண்டோன் கோபத்தாற் குடிகெடாதென மறுக்கான், காமியபெருக்கத்தால் காயமழியும் என்று கூறியபோது அதன் அனுபவங்கண்டோன் காமியத்தாற் காயமழியாதென மறுக்கான், அவைபோல் மனோவிருத்தியாம் அவாவின் பெருக்கத்தால் துக்கவிருத்தியுண்டாம் மனோவொடுக்கத்தால் அவாவையறுத்தலால் சுகவிருத்தியுண்டாம். இதனை அநுபவத்திற் கண்டவர்களே மெய்கண்ட வர்களாவர். இவற்றை யநுபவத்திற் காணாதோர் பொய்யர்களே யாவர். ஆதலின் ஒவ்வோர் மக்களும் தங்களுக்கு உண்டாகுந் துக்கங்களைப்போக்கி சுகவிருத்தியை நாடுவதே முத்தியாம்.

அத்தகைய முத்திய சுகத்தை நாடுவோர் எதிரிகளின் சுகத்தைக் கருதல் வேண்டும். தான் கல்வி விருத்தியைப் பெற வேண்டுமாயின் எதிரிகளின் கல்வி விருத்தியைக் கருதல்வேண்டும். தான் சுகசீவனம் பெறவேண்டுமாயின், எதிரிகளின் சுகசீவனத்தைக் கண்டு ஆனந்தித்தல் வேண்டும். தனது பொருளை மற்றொருவர் களவாடாதிருக்க

எண்ணுவானாயின் அன்னியர் பொருளை தான் களவாடாதிருத்தல் வேண்டும். தன்னை யொருவன் பொய்சொல்லி வஞ்சியாதிருக்க எண்ணுகிறவன் அன்னியனை பொய்சொல்லி வஞ்சியா திருத்தல் வேண்டும். தன் தாரத்தை மற்றொருவன் இச்சியாதிருக்க எண்ணுகிறவன் அன்னியர் தாரத்தை இச்சியாது இருத்தல் வேண்டும். தான்மதிமயங்கிக் கெடாதிருக்க எண்ணுகிறவன் எதிரிக்குமதுவூட்டி கெடுக்காமலிருக்க எண்ணவேண்டும். தனது சீவனுக்கோர் துன்பம் அணுகாதிருக்க எண்ணுகிறவன் மற்ற சீவராசிகளைத் துன்பம் செய்யாதிருத்தல் வேண்டும். தன்னை சிறப்பித்துக் கொள்ள வேண்டியவன் எதிரிகளின் சிறப்பைக் கருதல் வேண்டும். இத்தியாதி செயல்களைத் தானே நடத்துவதுடன் தன்னை அடுத்தோருக்கும் போதித்துத் துக்க நிவாரணஞ் செய்வதும் செய்விப்பதுமாகிய செயலுக்கே புத்ததன்மம் என்றும், சத்தியதருமம் என்றும், மெய்யறமென்றுங் கூறப்படும். இதுவே புத்தரது ஆதிவேத மொழிகளின் அந்தரார்த்தமும் திரிபீட விரிவுமாகும்.

6:9; ஆகஸ்டு 7, 1912. –

# 85. பௌத்தம் அழிந்த கதை

வினா: தற்காலம் இவ்விடந் தோன்றியுள்ள பிரசங்கிகள் புத்தமார்க்கம் என்பது அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், சங்கரர் இவர்களால் அழிந்து போய் விட்டதென்று கூறிவருகின்றார்களே அது மெய்க்கதையாய் இருக்குமா அல்லது பொய்க்கதையாய் இருக்குமா அவற்றை சற்று தெள்ளற விளக்கிக்காட்ட வேண்டும்;

மா. பாலசுந்திரம், கோடூர்.

விடை : ஐயா பாலசுந்திரமென்னும் அன்பரே! தாம் வினாவியுள்ள சங்கை அன்னோர் நடவடிக்கை சரித்திரங்களைக் கொண்டே பொய்க் கதைகள் என்று நுட்பமாகத் தெரிந்துகொள்ளலாம்.

அதாவது புத்தமார்க்கத்தை அழிப்பதற்கு தேவர்களே மக்களாக வந்து பிறந்தார்கள் என்பதும் அத்தகைய மக்களில் பிராமணர்களே சிறந்தவர்கள் என்றும் அவர்கள் குடும்பத்திலேயே தேவர்கள் வந்து தோன்றினார்கள் என்றும் வரைந்து வைத்திருக்கின்றார்கள். இத்தகையக்கதை மெய்யானதும் பூர்வம் வழங்கியதுமா இருக்குமாயின் நூறு வருடத்திற்கு முன்பு கல்வியில் மிகுத்தசில கம்மாளர்கள் எழும்பி இப்பிராமணர்கள் என்போர் குருபட்டத்துக்கு உரியவர்களல்ல, ஜோதிசங்கமர்களைப் போல் பிச்சையேற்று உண்பவர்கள் என்று கூறிய வழக்கு "அதாலத் கோர்ட்டுக்குக் கொண்டுபோயிருந்தபோது தேவர்களே பிராமணர்களாகப் பிறந்து புத்தர்களை அழித்துவிட்டார்கள் என்னும் மெய்யானதும் இப்புராணக்கதைகள் இவர்கள் கையிருப்பில் இருந்துள்ளதுமாயின் அக்கோர்ட்டார் முன்னிலையில் இக்கதைகளைக் கொண்டுவந்து தங்கள் குலசிறப்பை ரூபித்து ஜெயம் பெற்றிருப்பார்கள் அன்றோ.

அத்தகைய நீதி ஸ்தளத்தில் கொண்டுவந்து ரூபிக்காது இப்போது தோன்றிய கதை மெய்க்கதையா அன்று பொய்க்கதையா என்பதைத் தாங்களே தெரிந்துக் கொள்ளலாம். இக்கதை நூறுவருடங்களுக்கு முன்படதோன்றியிருக்குமாயின்”அதாலத்துக் கோர்ட்டிற்" கொண்டுவந்து தாங்களே உயர்ந்தோரென ரூபித்திருப்பார்கள். நூறு வருடத்திற்குப் பிற்பட்டே ஏற்படுத்திக்கொண்ட பொய்க்கதைகளாதலின் அக்காலத்தில் கொண்டுவரவில்லை. அதனினும் பௌத்தர்களை வெல்வதற்கு அப்பிராமணர்களால் இயலாது அவர்கள் தேவர்களே வந்து தோன்றினார்கள் என்றபோது பௌத்தர்கள் யாவரும் எத்தகைய நிபுணர்களாய் இருந்திருப்பார்கள் என்பது அவர்களது பொய்க்கதைகளாலும் விளங்குகிறதன்றோ. இஃதன்றி பௌத்தர்கள் சைவர்களுக்கும், வைணவர்களுக்கும் அவர்கள் வேதாந்திகளுக்கும் இடுக்கஞ் செய்கின்றார்களென்று பரிந்து தேவர்களும், தேவர்கருணைகொண்டும் அப்பர், சுந்திரர், மாணிக்கவாசகர், சங்கரர், முதலானோர் தோன்றி பௌத்தர்களை அழித்துவிட்டார்களென்னுங் கதைகள் மெய்யாயிருக்குமாயின் மகமதிய அரசர்கள் வந்து தோன்றி சைவர்கள், வைணவர்கள் கோவில்களை தகர்த்தும், சிலைகளை உடைத்தும் தங்களுக்கு அடங்காதவர்களை தோலுரித்தும், நெருப்பிலிட்டும் வதைத்தும் வந்தபோது இவர்களுக்குப் பரிந்து பாடுபடுதற் கில்லாது அப்பர், சுந்திரர், மாணிக்கவாசகர், சங்கரர், எங்குபோய் ஒளிந்துக் கொண்டார்கள். அப்போது மகமதியர் தோலையுரித்தும் நெருப்பில் இட்டும் சுட்டுவிடுவார்கள் என்றஞ்சி மறைந்திருந்தேனும் இருக்கட்டும்; தற்காலம் கிறிஸ்துமதத்தோர்வந்து சைவர்கள் சாமிகளின் கதைகளையும், வைணவர்களின் சாமிகளின் கதைகளையும் வீதிவீதியாக விளக்கிக்காட்டி சைவத்திற்கும் வைணவத்திற்கும் இடுக்கங்களை உண்டாக்கி வருவதை அப்பர், சுந்திரர், மாணிக்கவாசகர், சங்கரர் வந்து கண்டித்து தங்கள் சைவத்தையும் வைணவத்தையும் நிலைநிறுத்தலாகாதோ இல்லை. பௌத்தர்களை ஜெயித்தது மெய்க்கதை களாயிருக்குமாயின் மகமதியர்களையும் கிறிஸ்தவர்களையும் வந்து ஜெயித்து தங்கடங்கள் சைவத்தையும் வைணவத்தையும் நிலைப்படுத்திக் கொண்டிருப்பார்கள். அங்ஙனம் பௌத்தர்களுக்காகத் தோன்றி அவர்களை ஜெயித்தார்களென்றுள்ளது பொய்க்கதைகளென்றேதெள்ளறத் தெளிந்து கொள்ளலாம் ஈதன்றிபௌத்தர்கள் அழிந்துவிட்டார்கள். ஊரைவிட்டோடிவிட்டார்களென்று எண்ணற்க. யாவர்வீட்டில் இலக்கிய நூற்கள், இலக்கண நூற்கள், வைத்திய நூற்கள், சோதிடநூற்கள், கணித

நூற்கள் இருக்கின்றதோ அங்கங்கு பௌத்தர்களே தங்கி இருக்கின்றார்கள் என்றெண்ணவும். பௌத்தர்கள் யாப்பிலக்கணங்கொண்டு வெண்பா விருத்தம், அகவற்பா மற்றும் பாடல்கள் பாடும் வித்துவான்கள் நாவிற்கும் பௌத்தர்களே அமுதூட்டிவருகின்றார்கள். ஆதலின் பௌத்தர்களை அழித்துவிட்டார்களென்பதும் அழிந்தார்க ளென்பதும் பொய், பொய் முக்காலும் பொய்யென்று அறிந்துக் கொள்ளுவீராக.

6:16; செப்டம்பர் 25, 1912 -

# 86. புத்தாவதாரம் இராமவதாரத்திற்குப் பின்னரே! என்பது பிசகு

தற்காலம் இச்சென்னையில் வெளியுலாவிவரும் "லோகோபகாரி" (16-9-12) என்னும் பத்திரிகையின் இரண்டாம் பக்கம் மூன்றாவது கலத்தில் ம-அ-அ ஸ்ரீ வெங்கிட்டராமனென்பவர் தங்களது யுகக்கணக்கை மேற்கொண்டு இராமருக்குப் பின்னரே புத்தர் தோன்றியுள்ளாரென வரைந்துள்ளக் கடிதத்தைக் கண்டு மிக்க வியப்புற்றாம்.

அதாவதுயுகமென்னும் வடமொழி குணசந்திப்பெற்று யூகமென மறுவியதா அன்றேல யூகமென்னும் வடமொழி குறுக்கல் விகாரம் பெற்று யுகமென மறுவியதா என்பதை அறியார் போலும். அறிந்திருப்பரேல் யுகமெனு மொழியை மறந்து வரைந்திருக்கமாட்டார். யூகம் என்னும் மொழியே குறுக்கல் விகாரப்பட்டு கிரேதா, திரேதா, துவாபர, கலியென்னுமொழி பொருள் கெட்டு வழங்கிவருவதாகும். எங்ஙனமென்பீரேல் அம்மொழிகள் யாவும் பௌத்த அரசர் காலயுத்தத்தின் அணி வகுப்பென்னப்படும். அஃது வருமாறு.

கிருதயூகம் - முதலாம் அணிவகுப்பு. துவாபர யூகம் - இரண்டாம் அணிவகுப்பு. திரிதா யூகம் - மூன்றாம் அணிவகுப்பு. சதுர் யூகம் - நான்காம் அணிவகுப்பு.

இவ்வடபாஷை இலக்கமொழிகளைக் கொண்டே சோதிட நூற்களில் பிரதமை, துவிதியை, திரிதியை, சதுர்த்தி என்றும்; ஏகாதேசி, துவாதேசி, திரியோதேசி, சதுர்த்தேசி என்றும் வரைந்து வருகின்றார்கள். இவ்வடமொழி இலக்க அந்தரார்த்தம்

அறியாதோர் ஒன்று, மூன்று, இரண்டு, கலி என்பனபோல் கிருதம், திரேதம், துவாபரம், கலியெனக் கைகொண்டவறெழுதி ஒவ்வொன்றுக்கும் இலட்சக் கணக்குகளைப் பெருக்கித் தங்கள் நூதன மதங்கள் யாவும் புராதன மதங்களென மறுட்டுவான்வேண்டி பொருளறியாது எழுதியப் பொய்யுகங்களேயாம்.

இத்தகையப் பொய்யுகக் கணக்குகளை மெய்யெனக்கூறி வெளி வருவாராயின் சீனதேசத்தில் ஆயிரத்தி ஐன்னூறு வருடமாக ஓர் பத்திரிகை உலாவிவந்திருப்பதில் புத்ததன்மங்கள் வரையறுத்து வந்துள்ள கணக்கை நாளதுவரையில் காணலாம். லண்டன் மிஷநெரி கிறீஸ்தவர்கள் தோன்றியது முதல் நாளதுவரையில் அவர்களது கணக்கை வரையறுத்துக் காணலாம். அதுபோல் கனம் வெங்கிட்டராமன் அவர்களின் விஷ்ணுமத நூறுவருட கணக்கை வரையறுத்துக் கூற இயலுமோ. அன்றேல் சிவமதத்தின் நூறுவருடக் கணக்கையேனும் வரையறுத்துக் கூற இயலுமோ, இயலாதே. தங்கள் மதக்கணக்குகளையே வரையறுத்துக் கூற வகையற்றவர் யுகக் கணக்கை கூறவந்ததை வியப்பெனக் கூறியுள்ளாம்.

ஈதன்றி யுகக் கணக்குகளை மட்டிலும் மெய்யென நம்பி வெளித்தோன்றியவர் வால்மீகர் இராமாயணத்தையும், வசிஷ்டர் கூறியுள்ள ஸ்மிருதியையும் பொய்யெனக் கூறுவரோ, முக்காலுங் கூறாரென்று நம்புகிறோம். அதுகொண்டு வால்மீக ராமாயணத்தில் அநுமார் இலங்கைக்குச் சென்று சீதையைத் தேடுங்கால் ஓர் கோபுரத்தின் உச்சியில் உட்கார்ந்து இஃது பௌத்தர்களது வியாரமோவென வரைந்துள்ளவற்றை நாளதுவரையிற் காணலாம்.

அத்தகைய இராமர் யுத்தகாலத்திலேயே பௌத்தர்கள் வியாரம் இருந்திருக்க, புத்தருக்குப் பின்பே இராமர் தோன்றி உள்ளாரா, முன்பு தோன்றியுள்ளாரா என்பதை இவரது இராமாயணக் கதையைக் கொண்டே தெரிந்துக்கொள்ளலாம் அன்றோ. வசிஷ்டர் இராமருக்கு ஞான சாதனம் போதிக்கும் இடத்தில், அப்பா இராமா உன்னுடைய பாட்டன் உத்தாலகன் என் போன் புத்தரைப்போல் உத்திரமுகம் நோக்கி தாமரைப் புட்பமாம் பதுமாதனத்தில் உட்கார்ந்து ஞானசாதனஞ் செய்துள்ளான். அதுபோல் நீயுஞ் செய்யக்கடவாய் என்று கூறியுள்ள மொழியாலேனும் இராமருக்குப் புத்தர் முந்தியவர்

என்றே விளங்கவில்லையோ. இவரது இராமாயணத்தையும் வாசித்துணராது யுகக் கணக்குகளை மட்டிலும் ஏற்பதென்னோ. யுகக் கணக்கைத் தன்னிற்றானே நம்பிக் கொண்டபோதினும் கனந்தங்கிய ரோமிஷ்சந்திரட்டு என்பவர் எழுதியுள்ள இந்தியதேயசரித்திரத்தை நம்பி புத்தரது காலவரையைக் குறித்துள்ளவர் அவரால் பாரதத்திற்குப் பிந்தியே இராமாயணந் தோன்றியள்ளது என்று குறித்துள்ளவற்றையும் சரிவர வாசித்துத் தனது மதவைராக்கிய அபிப்பிராயத்தைப் போக்கி இராமருக்கு முந்தியே புத்தர் தோன்றியுள்ளார் என்று அறிந்தடங்குவாராக. அங்ஙனம் அடங்காது இன்னும் யுகக் கணக்கையே நம்பி வெளிவருவரேல் கலியுலகக் கணக்கின் ஆதாரங்கொண்டு இவரது பொய்யுலகக் கணக்குகளை போர்ந்த ஆதாரத்துடன் ரூபிப்பதோடு இரவு முழுவதும் இராமாயணங் கேட்டு விடிந்தபின் இராமருக்குச் சீதை என்ன முறையாக வேண்டுமெனக் கேட்டுள்ள விவேகிகள் கதையையும் விளக்கக் கார்த்துள்ளோம்.

6:16; செப்டம்பர் 25, 1912 -

# 87. சைவம்

வினா : “சைவம்” எனு மொழி தென்மொழியா, வடமொழியா, அதன் பொருளென்னை. தாயுமான் என்னும் பெரியோன் எம்மதத்தோர் என்பதேயாம்.

மா. பாலசுந்திரம், கோடூர்.

விடை தாயுமான் என்னும் பெரியோன் குருவையே தெய்வமென சிந்திக்கும் சமணமுனிவர்களில் ஒருவரும், புத்ததர்மப்பிரியருமாதலின் கல்லாலடியிற் கமலாசனத்துள் வீற்று நால்வருக்கு உபதேசித்தவற்றை அவர்பாடலின் பல இடங்களிற் கூறியுள்ளதுமன்றி புத்தரது பரிநிருவாண சோதியையே இடைவிடாது சிந்தித்தும் சமணமுநிவருள் சித்தி பெற்ற சித்தர்களையே ஆனந்தமாகத் தொழுதும் வந்திருக்கின்றார்.

இத்தகைய சமணமுநிவரின் தியானப்பாக்களுடன் சில நூதன மதத்தோர் தங்கள் மதக்கருத்துக்கு இயைந்தப் பாடல்களை இயற்றி பொன்னுடன் தராகலந்தனபோல் சேர்த்துக்கொண்டு தங்கள் மதநூலென மாறுகொளக் கூறிவருகின்றார்கள். அக்கூற்று கற்றவர்முன் எவ்வகையாலும் பொருந்தாவரம்.

தாயுமானவர் முதற் செய்யுளுள் " அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமாய்” என்னும் மெய்ப் பொருளை எப்பொருளுக்கு ஒப்பிட்டு ரூபிப்பார்கள்.

“செங்கமலபீடமேல் கல்லாலடிக்குவளர் சித்தாந்தமுத்திமுதலே” என்பவற்றால் எம்முத்தனை ஒத்திப்பார்கள்.

“பந்தமெல்லாந்தீர பரஞ்சோதி நீகுருவாய் வந்தவடிவை மறவேன் பராபரமே” என்பதில் எக்குருவை சுட்டுவார்கள் யாவுந் தனக்குள்வளர் உண்மெய்ப்பொருளையே அவர் வந்தித்தும் சற்குருவாம் புத்தரையே சிந்தித்து முள்ளதை அவரது சுயச்செய்யுள் சகலவற்றினும் பகலக் காணலாம்.

ஈதன்றி உலகமக்களை தொல்லைவிட்டகன்று தெய்வசபையாம் புத்தசங்கத்தைச் சேருங்கோள் என்று கூறியுள்ளச் செய்யுளையுங் காணலாம்.

"சைவஸமயமே ஸமயம் ஸமயாவதீதப் பழம்பொருள், கைவந்திடவும் அன்றுள்ளொளிக்காட்டுங் கருத்தைவிட்டு பொய் வந்துழலும் ஸமய நெறி புகுதவெண்டா மடநெஞ்சே, தெய்வச்சபையை சேர்வதற்கு சேரவாருஞ் ஜெகத்திரே

சைவமென்பது பாலிமொழி, அதன் பொருள் தன்னையறிதல், ஸமயமென்பது பாலிமொழி, அதன் பொருள் காலக்குறிப்பு.

**அகப்பேய் சித்தர்**

சைவ மாருக்கடி - யகப்பே, தன்னையறிந்தவர்க்கே: சைவமானவிட -
மகப்பே. தானாக நின்றதடி.

சைவஸமயமேஸமயம் என்பது தன்னைத்தானறியுங்காலமே சரியான காலம் என்னப்படும். அதாவது ஒரு மனிதன் ஏதுமறியா பாலபருவத்தில் செய்யுஞ்செயல்கள் ஓர் காலம், குமரப்பருவத்திற் காமியங்கொண்டலைவது ஓர் காலம், அரசபருவத்தில் புத்திரபாக்கியப் பேற்றை பெறுவது ஓர்காலம். இத்தியாதி காலச்செயலால் யாதுபயனுங் கிட்டாவாம். இவற்றுள் தன்னைத்தான் அறிந்தடங்குங்காலமே ஆனந்த நித்திய சுககாலமாதலின் வடமொழியில் சைவஸமயமே ஸமயமென்றும், தென்மொழியில் தன்னைத்தானறியும் நேரமே நேரமென்றும் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

அவ்வகைத் தன்னைத்தான் அறிந்தொடுங்குவதால் காலங்களுக்கு அதீதப்பட்டப் பூரணப் பொருளுள்ளொளியாய்த் தோன்றுங்கருத்தையும் செயலையும் விட்டு காலத்திற்குக்காலம் நூதனமாகத் தோன்றி கெடுக்கும் பொய்ப் புராணக் கட்டுக்கதைகளை நம்பி மோசம் போகவேண்டாம் மனமே எனத் தனக்குத்தானே கூறிக் கொண்டதுமன்றி கருணைமிகுதியால் உலக மக்களையும் தனது சத்தியசங்கத்தில் வந்து சேரும்படியும் அழைத்திருக்கின்றார். அதற்குப் பகரமாகத் தன்னைத்தான் அறிந்தடங்குதற்கு மனமே காரணமாதலின் அதனது இரண்டாம் பாடலில் "காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோட வதன்பிரகே யோடுந்தொழிலாற் பயனுளவோ என்று இதயசுத்தமாம் புத்தரது மூன்றாம் பேதவாக்கியப் பொருளையுஞ் சுட்டிக்காட்டி இருக்கின்றார். சைவஸமயமென்னுந் தன்னைத்தானறியுங்காலம் ஐரோப்பியனுக்கு வரினும், அமேரிக்கனுக்கு வரினும், சீனனுக்கு வரினும், பர்மியனுக்கு வரினும், அவனே சைவனாவன். மற்றுமோர் கூட்டத்தோரை சைவக்கூட்டத் தோரென்பது பொருளறியாப் பொய்க் கூட்டத்தோர் என்னப்படும்.

6:17; அக்டோபர் 2, 1912 –

# 88. மா-ா-ஸ்ரீ சுந்தரராமனென்பவர் கூறியக்கூற்று தர்மமா அன்றேல் அதர்மமா?

ஆராய்வோமாக. “லோகாபகாரி” என்னும் பத்திரிகையில் “தர்மம்” என்னும் மகுடமிட்டு கி.சுந்தரராமனென வெளிதோன்றியவர் தர்மமென்னு மொழி புத்ததர்மதத்தினின்று தோன்றியதா ஆரிய தர்மத்தினின்று தோன்றியதா என்பதை அறிந்திலர் போலும்.

அறிந்திருப்பரேல் புத்ததர்மத்தை நாஸ்திகமென மறந்துங் கூறார். அறியாதவரென்பது அவர்கூறி வெளிதோன்றிய ஆரியதர்மமே போதுஞ் சான்றாம்.

அதாவது புத்தரென்பவர் ஒருவர் இருந்தார் அவர் போதித்த நீதி நெறிகளுக்கு புத்ததர்மம் என்றும், கிறிஸ்து என்பவர் ஒருவர் இருந்தார் அவர் போதித்த நீதிநெறிகளுக்கு கிறிஸ்து தர்மம் என்றும், மகமது என்பவர் ஒருவரிருந்தார். அவர் போதித்த நீதி நெறிகளுக்கு மகமது தர்மம் என்றும் வழங்கி வருகின்றார்கள். ஆனால் நமது சுந்தரராமனவர்கள் வெளிதோன்றி கூறிய ஆரியர் என்பவர் யார், அவர் எத்தேசத்தார், எங்கு உதித்தவர், அவர் போதித்த தர்ம நூலின் பெயரென்ன. அதன் அனுபவகாட்சிகள் எவை சரித்திர ஆதாரத்துடன் கூறத்துணிவரோ ஒருக்காலுந் துணியார். யாதுக்கென்பரேல் முந்த முந்த இந்து தர்மமெனத் தோன்றினார்கள். இந்து என்பவர் யாவரென்றபோது அம்மொழியை வழுவவிட்டு பிரமதர்மமெனத் தோன்றினார்கள். பிரமர் என்பவர் யாவரென்றபோது அதனையும் நழுவவிட்டு ஆரியதர்மமென வெளிதோன்றியுள்ளார்கள். அவற்றிற்கும் ஆளில்லை என்றறியா சொன்னதைச் சொல்லுங் கிள்ளைபோன்ற சுந்தரராமன் எள்ளி, எள்ளி அறியா தர்மத்தை ஆரியதர்மமெனக் கூறவந்தது அதர்மம், அதர்மம், அதர்மமேயாம்.

ஓரிடத்து ஆரியதர்மம் என்றும் மற்றோரிடத்து ஆர்யதர்மம் என்றுங் கூறியுள்ளவை கால நேர்ந்த சமய புறட்டாம் தர்மபுறட்டாகுமன்றோ . மொழிக்குமொழி பேதிக்கும் தர்மமும் ஓர் தர்மமாமோ. இவர் கூறிவரையும் ஆரியக்கூட்டத்தோருள் முதற்காலத்தேனுந் தற்காலத்தேனும் ஒற்றுமெ யுண்டென்பதைக் கண்டேனுங், கருத்திலுணர்ந்தேனுங் கூறவல்லரோ, துணிந்துங் கூறவல்லார். ஆரியரென்போரால் ஒற்றுமெயும் ஒழுக்கமுங்கெட்டு தேசஞ் சீர்கேடடைவது அநுபவக்காட்சியாயிருக்க ஆரியரால் ஒற்றுமெயும் ஒழுக்கமும் பாதுகார்த்து வருகின்றது என்பதும் அதர்மமேயாம்.

ஆளுள்ள சத்தியதர்மமாம் புத்ததர்மம் முந்தியதா, ஆளில்லா அசத்தியதர்மமாம் ஆரியதர்மம் முந்தியதா என்னும் சரித்திர ஆராய்ச்சியின்றி உலக சீர்திருத்தத்திற்கே ஆதியாகத் தோன்றியுள்ள புத்ததர்மத்தின் பேரில் அபுத்ததர்ம அஸ்திபாரமிட்டு மதக்கடை பரப்பி அதனாற் சீவித்துவரும் ஆரியர்கள் கதையை பௌத்தர்களுக்கு முந்தியதென வியாபித்து கூறியது அதனினும் அதர்மமேயாம்.

க்ஷணத்திற்கு க்ஷணந் தோற்றி தோற்றி மாறுதலடையும் பொருட்கள் யாவும் அநித்தியமென்றும் பொய்யென்றும் அங்ஙனந்தோன்றாததுங் கெடாத்துமாகியப் பொருளே மெய்ப்பொருளென்றும், அம்மெய்ப்பொருளைக் கண்டு ஓதியவர்களையே மகடபாஷையில் புத்தரென்றும், சகடபாஷையில் சத்தியரென்றும், திராவிடபாஷையில் மெய்யரென்றுங் கூறியுள்ளதைக் கற்றுணராதும் அவரது யதார்த்த சத்தியதன்மத்தைக் கேட்டுணராதும் புத்ததர்மத்தை நாஸ்திகமென்பதும் அதர்மமேயாம்.

புத்தரைக் கர்மயோகியென்பது தனது நற்கர்மத்தால் நிருவாணவதிஷ்டம் பெற்றவர் என்பது கருத்து. அவற்றிற்கு மாறாக துற்கர்மமுடையோர் தங்கள் துற்கர்மங்களை நீக்கிக் காப்பதற்கு ஓர் ஈசுரன் உண்டெனத் தங்கள் தங்கள் மனோசிருட்டீ செய்துக்கொண்டு மாளா துற்கர்மஞ்செய்து மயானம் போமளவும் துக்கவிருத்தியி லிருப்போருக்குக் கர்மயோக லட்சணம் விளங்குமோ, ஒரு ஈசுரன் உண்டென உருவேற்றுக் கொண்டு படைத்தலுக் கொருவன், காப்பதற்கொருவன், அழித்தலுக்கொருவன் என மூவரை சிருட்டி செய்துக்கொண்டு நாம் செய்ய வேண்டிய முயற்சி யாதுமில்லையெனச் சோம்பித்திரிவோருக்கு துற்கர்மம் ஈதீதென்றும்,

அதனாலுண்டாங் கேடுகள் இன்னவை என்றும், நற்கர்மங்கள் ஈதீதென்றும், அதிலுண்டாம் சுகங்கள் இன்னவை என்றும் விளங்குமோ. படைப்பவன் பாம்பையுந் தேளையும் சிருட்டித்து மக்களையும் சிருட்டித்து அவனைக் கொட்டவும் கடிக்கவும் விடுவது படைப்போன் திருவிளையாட்டோ. அவ்வகை படைப்போன் உஷ்ண தேசத்தில் பாம்பையும் தேளையும் படைத்து குளிருள்ளதேசத்தில் படைக்காது விடுவது பட்சபாதமோ. அழித்தலுக்கென்றே ஒருவன் உண்டெனில் காணும் பொருட்களில் அழியாதது ஏதேனும் உண்டோ காப்பவன் ஒருவன் உண்டெனில் ஊருக்குளுள்ள மக்களை உவாந்திபேதி கண்டு மடிக்கும் போதும், பிளேக் நோய் கண்டு மடிக்கும் போதும், அக்கினி மலை எரிந்து மடிக்கும் போதும், வெள்ளம் பெருகி மடிக்கும்போதுங் காக்காதவர் மற்றும் எக்காலத்தில் காப்பார் இவ்வகை வற்புறுத்தி வினாவில் அவரவர்கள் கர்மத்துக்கு ஈடா அநுபவிப்பரெனத் தோன்றுவர். கர்மத்துக்கு ஈடாய அனுபவமும் காட்சியுமிருக்க ஈசுரன் ஒருவன் உண்டென்றும், அவனன்றி படைப்பவன் காப்பவன் அழிப்பவன் வேறு மூவருண்டென்றும் மக்களே சிருட்டித்துக்கொண்டு மற்றோரை மயக்கி மாள்விப்பதும் போதாது நற்கருமங்களை செய்யுங்கோள் நல்லசுகமடைவீர்கள் என்று கூறிய கர்மயோகியாம் கமலாசனனை நாஸ்திகரென நாத்தழும்பக் கூறுவது மன்றி இவர்கள் சிருட்டித்துக் கொண்ட ஈசுரன் ஒருவனை இவர்களே சிருட்டித்துக்கொள்ளவில்லை என்பதும் அதர்மமேயாம்.

தோல்ஷாப்பின் வேலைக்காரனுக்கு அத்துர் நாற்றந் தோன்றாதது போலும், சாக்கடை வாருவோனுக்கு அக்கெட்டநாற்றம் புலப்படாதது போலும் தங்கள் மதங்களிலுள்ள ஊழல்களையுங் கேடுபாடுகளையுந் தாங்களே உணராது கல்வியையுங் கைத்தொழில்களையும் விருத்தி செய்து மக்களை சீர்திருத்தம் செய்துவரும் மிஷநெரி கிறிஸ்தவர்களை போலிக் கிறிஸ்தவர்களெனக் கூறவந்ததும் அதர்மமேயாம்.

இராமாவதாரம், கிருஷ்ணனவதாரம், சங்கரனவதாரமென்னும் வழிகாட்டிகள் தாங்களாயிருந்தும் அவ்வழியைப் பின்பற்றி தோன்றிய ஆனிபீசென்டம்மனைப் பழிப்பது தங்களுக்கு இழிவாக முடிந்ததாதலின் அதுவும் அதர்மமேயாம்.

ஓர் பழமொழியைப் பகுத்தறிந்து எழுத வகையற்றவர் முதுமொழியாளனாம் மூவுலகுணர்ந்த முநிவனையும் அவரது தர்மத்தையுங் குறைகூற வந்தது விந்தையே

அதாவது முழுப்பூசினிக்காயை சோற்றில் மறைப்பதென்பது பழமொழி பிசகு. முழுபூசிணிக்காயை இரண்டு பானை சோற்றில் மறைத்து விடலாம். ஆனால் முழு பூசணிக்காயை பிடி சோற்றில் மறைக்கலாகாது. ஆதலின் முழு பூசணிக்காயைப் பிடி சோற்றுள் மறைப்பதுபோல் என்பது பழமொழி.

இதனைத் தெரிந்தேனும் வரைய முயல்வாராக. அன்னோர் எழுத அரம்பிக்கும் அனாரியர் இத்தேசத்தில் எத்தனை பேரிருக்கின்றார்கள் ஆரியர்கள் இத்தேசத்தில் எத்தனைபேர் இருக்கின்றனரென்று ஆராயாது இத்தேசத்தை ஆர்யர் தேசமெனக் கூறி அதன்பின்னரே தமது தர்மத்தை வரைந்திருக்கின்றார். இவர் குடகம் வேங்கடமென்னுந் தமிழ்நாட்டெல்லைக்கு உட்பட்டவராயின் இத்தேசத்தை ஆரியர்தேசமென மறந்தும் வரைந்திருக்க மாட்டார். ஓரிடத்தில் ஆர்யரென்றும், மற்றோரிடத்தில் ஆரியரென்றும் வரைந்திருக்கின்றார். அவை ஏதுக்கென்னில் ஆரியரென்பதற்குப் பொருள் மிலேச்சரென்று திவாகரத்திலும் நிகண்டிலும் கூறியுள்ளபடியால் நாம் ஆரியரென்று கூறவில்லை, ஆர்யரெனக் கூறியுள்ளோமென வந்தாடித்துக் கொள்ளுவதற்கேயாம்.

ஆர்யர், ஆரியரென அவ்வகைப் புறட்டினும் மிலேச்சர், மிலேச்சரென்னும் பொருளையே தரும். ஆதலின் மிலேச்ச போதகர்களுடைய உபதேசங்களென்பது தங்களையே சுட்டிக்காட்டிக்கொண்டது அதுவுமோர் கற்றறியா அதர்மமேயாம்.

சாம்பர்லேனென்னும் மேதாவியர் இந்தியாவின் அரிய தர்மத்தை எடுத்தோதியுள்ளது சகலமும் புத்ததர்ம சிறப்பேயன்றி ஆரியர்களென்ற மிலேச்சர் சிறப்பன்றாம். அரியபகவன், அரியமுனி, அரியநாதன், அரியறன், அரியபோத னென்னும் பெயர்கள் யாவும் புத்தருக்குரியவைகளே என்றும் அரியதர்மமென்பதும் அவரது சத்தியவாக்குகளே என்றும் (பாலி) நிகண்டில் கூறியுள்ளவற்றைப் பரக்க காணலாம். புத்தரது அரிய தர்மத்தை இந்திய தேசத்தோர் மறந்துள்ளபடியால் மக்கள் சீர்கேடு அடைந்து வருகின்றார்க ளென்று அவ்வமேரிக்க சாஸ்திரி வரைந்துள்ளவற்றை நன்கு

கற்றுணராது தங்கள் ஆர்ய, ஆரியமென்னும் மிலேச்ச தர்மத்தை சிறப்பித்துள்ளார் என்னு மொழி யாவற்றினும் அதர்மமென்னப்படும். ஆதலின் நமது கி.சுந்தர ராமனென்பவர் இனியேனுந் தமது சரித்திரத்தை நன்காராய்ந்து அடங்கு வாரென்று நம்புகிறோம்.

6 : 17, அக்டோபர் 2. 1912 -

# 89. வேதங்களும் நீதி சாஸ்திரங்களும் எற்றிற்கு

மக்கள் சீர்திருந்தி செவ்வைப்படுவதற்கேயாம். அத்தகைய வேதமென்பது சகல மக்களுக்கும் பொதுவாயிருத்தல் நலமா; சில மக்கள் அவற்றைப் பார்க்கவும்படாது கேட்கவும் படாதென்பது நலமா, அவ்வேதங்களை அளித்தக் கடவுளுக்கு தனது சிருஷ்டிகளாம் மக்கள் மீதும் பேதமுண்டோ , பேதமாகவே சிருட்டித்தாரென்னின் மக்கள் உருவினில் மாறுகொள் சிருஷ்டிக்கலாகாதோ, மக்களுருவில் மாறின்றி சிருஷ்டித்துங்கொடுத்துள்ள வேதத்தைக் கூறுபோடலா மோ, அவ்வகைப் பிரித்திருப்பாராயின் அவரை ஓர் கருணை மிகுத்தக் கடவுளென்னலாமோ, அத்தகையக் கருணையற்றக் கடவுளை ஓர் சிருஷ்டிகர் என்றும் கருணையற்ற வேதத்தை சீர்திருத்த முதநூலென்றும் பாவிக்கப்போமோ. கருணையற்றக் கடவுளைப் பின்பற்ற கருணையற்ற வேதத்தைப் போதிப்போர்களுக்கும் அதனைக் கேட்போர் களுக்கும் கருணையென்பது ஏதேனுமிருக்குமோ கனவிலும் இருக்காதென்பது அனுபவமுங் காட்சியுமாகும். கருணையற்றச் செயலைப் பெருக்கக் கூறும் ஓர் முத நூலென்றும், அதனை நம்பி நடப்போரே மேலோரென்றுங் கூறத் துணிபுண்டோ . மேலோரென்பதில் சகல மக்களையுந் தம்மெ ஒத்த மக்களாக பாவித்து சருவசீவர்களையுந் தன்னுயிர்போல் காப்பவனன்றோ மேலோராவர். கனவிலுங் கருணையென்பது அற்று தங்கள் ஒரு குடி பிழைக்க நூறு குடிகளைக் கெடுத்துப் பாழ்படுத்துவோரும் மேலோராவரோ, சாதியில் மேலோரென வகுத்துக்கொண்டு தம்மெயொத்த மக்களைத் தாழ்த்தி இழிவடையச் செய்து சீர்கெட வைப்போர்களையும் ஓர் மேல்சாதியோரென்றுங் கூறப்போமோ.

அங்ஙனம் சாதியென்னும் மொழியின்படி மேற் சாதனங்களாம் நல்வாய் மெய், நற்கடையிடி, நல்லூக்கம், நல்முயற்சி, இவைகளை சாதிப்பவரை யன்றோ மேற்சாதி என்பதற்குப் பொருந்தும் கருணையற்றச் செயலும், அன்பற்ற பார்வையும், ஈகையற்றக் கரமுடையோரை மேலான சாதியோர் என்பதும் கருணையற்ற சிருட்டிகரைக் கடவுளென்பதும், ஒற்றுமெயைக் கெடுத்து உள்ளக் களிம்பு ஏற்றும் நூலை வேதமாம் முதநூலென்பதும் பொருந்துமோ, முக்காலும் பொருந்தா. இத்தகையக் கடவுளையும், இத்தகைய வேதத்தையும், இத்தகைய சாதிக் குருக்களையும் பின்பற்றுவோர் சுகம் பெறுவார்களோ, பெறார்களென்பது திண்ணம் திண்ணமேயாம்.

மற்றுமுள்ள நீதிசாஸ்திரங்களேனும் நீதியையேனும் ஓர் உருவாகப் பெற்றுளரோ, அதுவுங் கிடையாவாம். அச்சாஸ்திரத்திற்குரிய சாதியோன் திருடிவிடுவானாயின் அந்தப் பொருளுடன் அவனை ஊரைவிட்டகற்றி விடவேண்டது. அவன் யாகத்திற்கென்று திருட அதிகாரமுண்டு, ஏனைய சாதியான் அவனது பசியின் வாதையால் ஒன்றைத் திருடிவிடுவானாயின் அவனைக் கண்டிதமாக தண்டித்தே விடவேண்டியது. அச்சாஸ்திரத்திற் குரிய சாதியோன் ஒருவனைக் கொன்று விடுவானாயின் அவனுக்குரிய சொத்துக் களையும் அவனுக்களித்து ஊரைவிட்டகற்றி விட வேண்டியது. ஏனைய ஒருவன் கொன்றுவிடுவானாயின் அவனைக் கொலைச்செய்தே தீரல் வேண்டும், இத்தகையச் செயல்களை ஏந்தியுள்ள நூலையும் நீதிசாஸ்திரமென்னலாமோ. இத்தகைய சாஸ்திரங்களைப் பின்பற்றி ஒழுகும் மக்களும் சீர்பெறுவார்களோ ஒருக்காலும் சீர்பெறமாட்டார்களென்பது திண்ணம்.

ஆதலின் தேசமக்கள் பிரிட்டிஷ் துரைத்தனத்தோரால் அன்பும் ஆறுதலுமடைந்து விவேக விருத்தி பெற்ற ஒவ்வோர் புருஷர்களும் கருணையற்றக் கடவுளைக் கனவிலுங் கருதாமலும், கருணையற்ற வேதத்தைக் கடைக்கண்ணினாலும் பாராமலும், கருணையற்ற குருக்களைக் கண்டும் பேசாமல் ஓதிங்கியும், அவர்கள் நீதியாம் நூற்களை அருகில் வைத்திராமலும் அகற்றி கருணைமிகுத்த பிரிட்டிஷ் ஆளுகையோரையே கடவுளரென சிந்தித்தும், அவர்களால் ஓதிவரும் கலைநூற்களையே சீர்திருத்த வேதமென வந்தித்தும் அவர்களது ஆளுகையாம் நடுநிலைச் செயல்களையே நீதிசாஸ்திரங்களௌனப்பந்தித்தும் அவர்களால்

போதித்துவரும் வித்தியா விருத்தி போதம், விவசாய போதங்களையே குருபோதங்களாக தொந்தித்தும் வருவதே மக்கள் சீர்திருத்தத்திற்கும் சுகவாழ்க்கைக்கும் ஆதாரமாயுள்ளபடியால் அவர்களது ராஜவிசுவாசத்திலயித்து அன்பை வளர்த்து கருணையைப் பெருக்க வேண்டியதே அழகாம்.

6:19; அக்டோபர் 16, 1912 -

# 90. கருணை கருணை கருணை

கருணை என்பது கரடிக்கும், புலிக்கும், பாம்புக்கும், தேளுக்கும் இருக்குமோ என்பாருமுண்டு. அவைகளின் குட்டிகளிடத்தில் அவைகளுக்குங் கருணையுண்டு என்பது அனுபவமாகும். கருணை என்பதில்லாவிடில் அதனதன் குட்டிகள் சீவிக்க முடியாவாம்.

ஆதலின் சருவசீவப்பிராணிகளிடத்துங் கருணையுண்டு என்பது நிட்சயம். அச்சீவராசிகள் யாவற்றினும் மக்களென்னும் மனிதவகுப்போர்க்கே அக்கருணை கிஞ்சித்துப் பெருகியிருக்கின்றது என்பது அவர்கள் பிள்ளை பெண்டுகளிலுள்ள கருணையும் தங்கள் பந்துக்கள் மீதுள்ளக் கருணையும் தங்கள் நேயர்கள் மீதுள்ளக் கருணையும் தாங்கள் வளர்க்கும் சீவப்பிராணிகளின் மீதுள்ளக் கருணையுங் கண்டு, கலைநூலார் சகல சீவராசிகளுக்கும் உயர்ந்தவன் மனிதனே என்று குறிப்பிட்டிருக்கின்றார்கள். இத்தகைய மனுமக்களுள் நாங்களே உயர்ந்த சாதியினர், நாங்களே உலகத்திற் சிறந்தவர்கள், நாங்கள் மிக்க வாசித்தவர்கள், நாங்களே மிக்க அறிவாளிகள் எனக் கூறிக்கொண்டிருப்பவர் களுக்கு எத்தகையானக் கருணை நிறைந்திருத்தல் வேண்டும். தன்னைப்போல் பிறரை நேசித்தலும் சகல சீவராசிகளையுந் தன்னுயிர்போல் காத்தலுமாகியப் பெருஞ்செய்கைகளேயாம். இக்கருணை நிறைந்த பெருஞ்செயலோர்களே அக்கருணாகரக்கடவுளையுஞ் சார்வர்.

அங்ஙனம் மனுக்களே கருணை உடையவர்களென்று வகுத்திருக்க ’ அம்மனுக்களுள் உயர்ந்த சாதியோரென வகுத்துக்கொண்டும் உலகத்தில் அயர்ந்தோரென சொல்லிகொண்டும், யாங்களே மிக்கக் கற்றவர்களெனப் பலுக்கிக்கொண்டும், யாங்களே மிக்க அறிவாளிகளென நடித்துக்கொண்டும் இருப்போர் தங்களையொத்த

மனுக்களை பக்களென நேசியாமலும், தங்களையொத்த சீவராசிகளைக் காக்காமலும், அவர்கள் தாழ்ந்தசாதியார்கள் அவர்களைத் தலையெடுக்கவிடாமல் நசிக்கவேண்டுமென்றும், பசுக்களை நெருப்பிலிட்டு சுட்டுத்தின்ன வேண்டுமென்றும், சதாகியாபகத்திலிருப்பவர் களுக்கு கருணை என்பது இருக்குமோ, சிலகால் புலிக்கும், பாம்புக்கும், தேளுக்கு இருப்பதுபோல் தங்கள் பெண்டு பிள்ளைகள் மீதில்மட்டும் இருக்கலாம். இத்தகையக் கருணை அற்றோரை மக்கள் சிறப்புச்செய்வரோ, கற்றோர்களென மதிப்புறுவரோ, விவேக மிகுத்தவர்கள் எனக் கொண்டாடு வரோ, அக்கருணாகரக்கடவுளேனும் அருகில் சேர்ப்பரோ, ஒருகாலுஞ் சேர்க்கார், மூன்று முறை குளிக்கினுஞ் சேர்க்கார், நான்கு முறை ஜெபிக்கினுஞ் சேர்க்கார், ஏழுமுறைத் தொழுகினுஞ் சேர்க்கார். கருணையற்றோர் ஏதோ தங்கள் முயற்சியினால் கிஞ்சித்து சுகமுற்றுவாழினும் அவ்வஞ்சக் கூற்றே வாழைப்பழத்தில் ஊசி நுழைவது போலத் தங்களையும் தங்கள் உற்றாரையும் சீர்குலைக்கும் என்பது திண்ணம். ஆதலின் முயற்சியாற் சிறப்புறினும் தன்னை ஒத்த சிறப்பை ஏனையோரும் பெறவேண்டுமென்னும் நன்னோக்கங்கொண்டு தன்னைப்போலவே பிறரையும் நேசித்துக் கருணையைப் பெருக்குவார்களென்று நம்புகிறோம்.

6:20; அக்டோபர் 23, 1912 –

# 91. பௌத்தர்களின் அறிகுறி

பௌத்தர்கள் என்னும் புத்தசங்கமாம் தெய்வ சபையைச் சேர்ந்தவர்களை ஏனையோர்கள் அறிந்துகொள்ளும் அறிகுறிகள் யாதெனில்:

ஒவ்வோர் பௌத்தர்களுந் தங்கள் படுக்கையைவிட்டு உதயத்தில் எழுந்திருக்குங்கால் ஆனந்த எண்ணமுடன் "நமோ புத்தா" ஒருவர் எழுந்து அவர் ஓதியுள்ள நீதியையும் நெறியையும் சிந்தித்து வெளிவருவதே முதற் பூசையாகும்.

ஏன் அவரை சிந்தித்து எழுந்திருத்தல் வேண்டுமென்னில் அவர் நம்மெப்போல் ஒத்த மனிதனாகத் தோன்றி சருவசீவர்களின் ஈடேற்றத்தையும் சீர்திருத்தத்தையுங் கருதி தனது சக்கிரவர்த்தி பீட சுகத்தையுந் துறந்து மனைவி மகவின் பாசபந்தங்களையும் மறந்து தானடைந்த நித்தியகாட்சியை உலக மக்கள் யாவருங்கண்டு கடைத்தேறுமாறு வோடு எடுத்திரந்து தன் சுகம் பாராது ஏனைய மக்கள் சுகத்தை நாடி நீதிநெறிகளைப்பு கட்டி ஞானவழியில் நடத்தி அழியா சுகவாழ்க்கை அருளி சருவசீவர்களுக்குங் கருணாகரன் என்னும் நன்மெ சொரூபியாக விளங்கிய ஆதியங்கடவுளாதலின் துயிலெழுங் காலவரை முதலாவது சிந்தித்து எழ வேண்டுமென்பது அறிகுறியாம்.

இரண்டாவது, நம்மெ ஆண்டுவரும் பிரிட்டிஷ்ராஜாங்கத்தோரை சிந்தித்துப் போற்றுவது இரண்டாவது பூசையாகும்.

அவர்களை ஏன் போற்றி பூசிக்க வேண்டியதென்னில், அவர்களது நீதியும், நெறியும், கருணையு மிகுத்த வரசாட்சியில் சுகச்சீர் பெற்று வாழ்வதுடன் கள்ளர் பயம், காமியர் பயம், துஷ்டர் பயம், மிருக பயம், விஷவியாதி பயங்கள் யாவையும் அகற்றிக் காத்து

ரட்சித்துவருவதினால் அவர்களைப்போற்றி விசுவாசிக்க வேண்டுமென்பது அறிகுறியாம்.

மூன்றாவது, தாய்தந்தையரைப்போற்றி வணங்கி ஆனந்திக்கச் செய்வதுமே மூன்றாம் பூசையாகும்

அவர்களை ஏன் போற்றிவணங்க வேண்டுடென்னில் அவர்களே கருப்பிணியடைந் தீன்று அமுதூட்டி சீராட்டி தாராட்டி ஈ எறும்பு அணுகாது பாதுகாத்துப் போஷித்து கல்வி விருத்தி கைத்தொழில் விருத்திக்கு ஆளாக்கி உலகில் ஓர் மனிதன் மனுஷியென உலாவ வைத்துள்ளவர்களவர்களேயாதலின் தாய் தந்தையரை அன்புடன் போற்றி வணங்கி மனங்குளிரச்செய்து ஆனந்திக்க வேண்டுமென்பது அறிகுறியாம்.

இவ்வகையாக உலகரட்சகனை சிந்தித்தும், ஆளும் அரசரை விசுவாசித்தும், தாய் தந்தையரை நேசித்தும் வரும்படியான முக்கியச் செயலும் அடையாளமுமே பௌத்தர்களின் அறிகுறிகளாகும்.

துயிலெழும்போதே இம் மந்திரத்தை சிந்தித்து எத்தொழிலுக்குச் செல்லினும் அத்தொழில் சுகமாக நிறைவேறுவதுடன் மனவாறுதலுடனும் ஆனந்தத்துடனும் வீடுவந்து சேரலாம். இதையே சத்திய மந்திரமாகவும் இதையே நித்திய மந்திரமாகவுங்கொண்டு நேசிப்போருக்கும், பூசிப்போருக்கும் யாது துன்பமும் அணுகாதென்பது சத்தியம். அங்ஙனம் அணுகினும் சூரியனைக்கண்ட பனிபோல் விலகுமென்பது நிட்சயம், ஆதலின் பௌத்தர் களுக்குக் கழுத்திற் கட்டும் அடையாளமும், நெற்றியிற் பூசும் அடையாளங் களாம் அறிகுறிகள் ஏதுமின்றி குருவிசுவாசம், இராஜவிசுவாசம், பெற்றோர் விசுவாசமாய நல்லொழுக்க பீடமே அறிகுறிகள் என்னப்படும். இதுவே சகல சுகங்களுக்குங் கொண்டுபோகும் சத்தியமார்க்கமுமென்னப்படும்.

6:21; அக்டோபர் 30, 1912 –

# 92. சீலம் சீலம் சீலம் பஞ்சசீலம்

சீலம் என்பது தேகசுத்தஞ் செய்து தலைமயிராற்றி வெண்ணுடை உடுத்தி சாராயக்கடை, கள்ளுக்கடைக்குள் நுழைவது சீலமாகுமா இல்லை, முழுகக் குளித்து கஸ்தூரி புனுகுபூசி தாசிவீட்டுக்குள் நுழைவது சீலமாகுமா இல்லை, தேக சுத்தஞ்செய்து குறுக்கு பூச்சு நெடுக்குபூச்சு பூசி ஊரான் சொத்துக்கு உலைவைக்கலாமா, ஊர் குடிகளைக் கொடுத்துப் பணம் சம்பாதிக்கலாமாவென் றெண்ணி, மந்திரமோதி மணிகுலுக்குவது சீலமாகுமா இல்லை. முழுகக்குளித்து சோமவார விரதம் சுக்கிரவாரவிரதமெனக் கூறி, சோம்பித்திரிந்து அன்னியன் பொருளை அபகரிக்க வழிதேடுதல் சீலமாகுமா இல்லை. தேகசுத்தம் உடைசத்தத்துடன் திண்டுபோட்டு உட்க்கார்ந்துகொண்டு ரூபாயிற்கு ஓரணா இரண்டணா வட்டி வாங்கி ஊரார் சொத்தை அபகரிப்பது சீலமாகுமா இல்லை, தேய்த்துக்குளித்து தூளிதம்பூசி அரிசிகளிற் கலப்பும் நெய்களிற் கலப்பும், தானியங்களிற் கலப்புங்கலந்து ஏழைமக்களை வஞ்சித்துப் பொருளை சேர்ப்பது சீலமாகுமா இல்லை. காவிவஸ்திரந் தரித்து காதுகுண்டலமிட்டு கண்கள் சிவக்க கஞ்சாகுடித்து கைம்பெண் சொத்துக்களைக் கண்டுங் காணாது அபகரிப்பது சீலமாகுமா, இல்லை .

ஐயா! சுத்தமுடன் குறுக்குபூச்சு நெடுக்குப்பூச்சுபூசி பாட்டுபாடும் போதும் அழுவார், கூத்தாடும் போது அழுவார், பஜிக்கும் போதும் அழுது தனக்குந் தெரியாப் பொய்ப் புராணங்களைப் போதித்துப் பொருள் பரித்து சீவிப்பது சீலமாகுமா, இல்லை. இவைகள் யாவும் பஞ்சபாதகம் மிகுத்தச் செயல்களேயாம். குளிப்பதே சீலம், வீடுவாசல் மெழுகுவதே சீலம், சுத்தவுடை தரிப்பதே சீலம், உயர்ந்த ஆபரணமணிவதே சீலம், நார்மடி கட்டுவதே சீலம், ஒருபொழுதென்று கூறி மூன்று பொழுதுண்பதே சீலமென்று திரிவது யாவும் அசீலங்களேயாம்.

சீலங்கள் என்பது யாதெனில் அன்னியப் பிராணிகளைத் துன்பஞ் செய்யாதிருத்தல் சீலம், அன்னியர் பொருளை அபகரிக்காதிருத்தல் சீலம், அன்னியரைப் பொய் சொல்லி வஞ்சியாதிருத்தல் சீலம், அன்னியர் மனையாளை இச்சித்து அவர்கள் குடியைக் கெடுக்காதிருப்பது சீலம், அன்னியருக்கு மதுவூட்டி அவர்கள் குடிகளைக் கெடுக்காமலுந் தானுங் குடித்துக் கெடாமலிருப்பது சீலம்.

இக்ககைய சீலம் பெற்று பௌத்தர்களான சத்தியதன்மப்பிரியர்கள் யாவரும் பகவனருளிய நீதிநெறி ஒழுக்கத்தில் நடந்து பௌத்தர்களென்னும் அறிகுறியைக் காட்டுவார்களென்று நம்புகிறோம்.

6:27; டிசம்பர் 11, 1912 –

# 93. ஆன்மா என்னும் மொழி

வினா. அன்மாவென்றும், ஆத்துமாவென்றும் வழங்குகின்ற மொழியை அமுதக்கோர் சீவான்மனென்றும் பரமான்மனென்றும் வழங்குகின்றார்கள். அவர்களை யணுகி ஆன்மமென்பது வடமொழியா தென்மொழியா அதன் பொருளென்னவென்று கேட்டால் அதன் விவரத்தை நூலாதாரங்கொண்டு விளக்குவதைக் காணேன். இதன் விவரத்தை எமக்கும் ஏனையோருக்குங் களங்கமற விளக்குமாறு மிகு வணங்கிக் கேட்டுக்கொள்ளுந் தங்கள் அடிமை.

வீ. அந்தோணி. கொளம்பு

விடை: ஆன்மமென்னும் மொழி மகடபாஷையின் உற்பவமேயாம். ஆன்மமென்பதின் பொருள் புருஷனென்னப்படும். பாலி நிகண்டிலும் பாணினியார் சகடபாஷை இலக்கணத்திலுங் காணலாம். பஞ்சஸ்கந்தங்கள் சரிவர அமைந்து மானிடனெனப் பாடியாடி உலாவும் புருஷவடிவிற்கே ஆன்மனென்றும் ஆத்துமன் என்றும் வழங்கலாயினர். புருஷனென்னும் தோற்றம் இல்லாவிடத்து ஆன்மனென்னும் பெயரும் இல்லையாகும். புருஷதோற்றம் உண்டாயவிடத்து ஆன்மனென்னும் மொழியுந் தோன்றும். உடலுயிரெனும் வேற்றுமெ மொழியை ஒன்றித்து ஆன்மனென ஆயிற்று.

உடலுயிர் ஒற்றுமெய நயத்தால் ஒன்றென்றும் வேற்றுமெ நயத்தால் மலைவுற்றும் பிரிதலால் அவ்வகை மலைவுறாது வழங்கற்கு மகடபாஷையில் ஆன்மனென்றும், சகடபாஷையில் புருஷனென்றும், திராவிடபாஷையில் மனிதன் என்றும் வழங்கலாயினர்.

உலகில் மக்களெனத் தோன்றி மாறா பிறவியிற் சுழன்று தீராக்கவலையில் உழலும் வரையில் ஆன்மமென்னும் பெயரும் வழங்கிக்கொண்டே வரும். மனிதனுக்குள்ள சகல பற்றுக்களுமற்று இதயசுத்தமுண்டாகி தோற்றும் பொருட்கள் யாவும் அனித்தியம் புருஷவுருவமும் அனித்தியமென்னும் அநித்ய, அனான்மனான போது நிருவாணமடைகின்றான். அன்றுமுதல் அவனுக்கு ஆன்மனென்னும் பெயரற்று அமலன், அசரீரியென்னும் பிறவியற்ற நிலையை அடைகின்றான். பிறவி அறாது துக்கத்திற் சுழலும் வரையில் ஆன்மனென்னுந் தோற்றப்பெயருண்டு. பிறவியற்றபோது தோற்றுஞ் செயலுமற்று ஆன்ம பெயரும் இல்லாமறபோம். இதுவே ஆன்மமென்னும் மொழியி னுற்பவமும் அதன் தோற்றச்செயல்களுமென்னப்படும். இதையே தோற்ற முண்டாயவிடத்து ஆன்மனென்றும் தோற்றமுண்டாகாவிடத்து அனான்மனென்றும் வழங்கலாயினர்.

6:28; டிசம்பர் 18, 1912 -

# 94. அல்லாசாமி பத்துநாளைய துக்க சிந்தனாகாலத்தை

# பயித்தியக்காரக் கோலஞ் செய்வதென்னை

மகமதியரென்னும் மகாமதியர்களாம் விவேக புருஷர்களின் சீர்திருத்தக் கறைவேயாகும். அதாவது விசேஷமாக அவர்களது குருபரம்பரையில் மரித்த சிலமகான்களின் சரித்திரமாக விளங்குகின்றது. அவர்களில் ஒருவரை சத்துருக்கள் நெருப்பிலிட்டு வதைத்தபோதினும் யாதாமோர் உபத்திரவமன்றி ஆனந்தமாய் நெருப்பினின்று வெளிவந்ததாகவும் தெரியவருகின்றது. அவர்களது ஞானநெறி அறியாத சத்துருக்கள் மேலும் மேலும் உபத்திரவஞ்செய்தபோது ஓர் கிணற்று நீரிலேயே சமாதியடைந்து தேகம் ஒருவருக்கும் அகப்படாமல் போனதாகவும் விளங்குகின்றது. அத்தகைய மக்கள் நீரில் மூழ்கும் போது தனதுகையால் என்னை துன்பஞ்செய்ய ஆரம்பித்த நீவிர் யாவரும் சுகமாயிருங்கோளென்று ஆசிகூறி கையை உள்ளடக்கிக் கொண்டாரென்றும் அச்சரித்திரக்காரரால் கூற நன்கு விளங்குகின்றது.

இத்தகைய பேரறிவாளராம் மகான்களது காலத்தை மகமதியர் மிக்க அமைதியுடன் அன்புடனுமிருந்து அவர்களது துன்பத்தை நினைத்து துக்கித்து பத்து நாளும் ஆனந்த தியானத்திலிருந்து அவர்கள் பெயரால் ஏழைகளுக்கு அன்னதானம் வஸ்திரதானஞ்செய்து அத்திருநாளைப் பெருநாளாகக் கொண்டாடி வருவார்களாயின் அவர்கள் நித்தியானந்த சுகவழியைக் கண்டடைவதுடன் தங்களது சந்ததியோர்களும் சுகவாழ்க்கையில் நல்லறிவும் விளங்கி மகான்களது ஆசியும் பெறுவார்கள்.

அங்ஙனமின்றி பக்தியில் நிறைந்து மறைந்தோர் காலத்தை பத்துநாளைய பயித்தியக்காரக் கோலமாக்கி வீணான கூச்சலுக்கும் சண்டைகளுக்கும் ஏதுவை உண்டுசெய்து அரசவதிகாரிகள் காவலிடவும் அதி மூர்க்கரை அடக்கவும் பலர் தெண்டனையடையவும் பலசாதியோரும் பயித்தியவேஷமிட்டு தங்கடங்கள்

மனம்போனவாறு ஆடியும் பாடியுந் திரிந்து சாராயக்கடைக் கள்ளுக்கடைகளே சதானந்தமாகவும் அதனிற் குடித்து வெறித்தோரெல்லாம் அல்லாசாமி பெயரை வழங்கவும் கோலத்தை மகமதியரென்னும் மகாமதியர்கள் யாவரும் பெருங்கூட்டமிட்டு இப்பத்து நாளைய பக்திக்குரிய காலத்தை மிக்க அமைதியாகவும் அன்பாகவுமிருந்து அம்மாகான்களின் சரித்திரத்தை எல்லவருக்கும் விளக்கி மகமதிய பாலியர்களுக்குள்ள அறிவைப் பெருகச் செய்விப்பதுடன் ஏனைய சாதியோர்களுக்குங் கூறி அமைதிபெறச் செய்வார்களென்று நம்புகிறோம்.

6:29; டிசம்பர் 25, 1912 -

## 95. சரியை கிரியை யோகம் ஞானம்

வினா: தற்காலந் தோன்றியுள்ள நூதன மதஸ்தர்கள் சரியை, கிரியை, யோகம், ஞானமென்று கூறி அவற்றுள் சரியை என்றால் கோவிலைமொழுகி சுத்தஞ்செய்வதும், சிலா தெய்வங்களைக் கழுவி புட்பமெரிதலும், மணிகுலுக்கி மந்திரஞ்செபித்தலும், கோவிலைச்சுற்றி வலம் வருதலென்றும்; கிரியை என்றால் மணியேந்தி மந்திரங்களை உச்சரித்தலென்றும்; யோகமென்றால் மூச்சை உள்ளுக்கிழுத்து அடக்குவதென்றும், ஞானமென்றால் முத்தியடைவதென்றுங் கூறி இவற்றுள் சரியையை ஒரு மனிதன் கிரமமாக செய்து மரணமடைவானாயின் மறு பிறவியிற் கிரியை அநுசரிப்பானென்றும், கிரியையை ஒருமனிதன் கிரமமாகச் செய்துவருவானாயின் மறுபிறவியில் யோகத்தை அனுசரிப்பா னென்றும், யோகத்தை ஒரு மனிதன் சிரமமாகச் செய்வானாயின் மறு பிறவியில் ஞானத்தை அனுசரித்துக் கொள்ளுவானென்றுங் கூறுகின்றார்கள். இஃது யதார்த்த மொழிகளா அல்லது வேறேதேனும் பொருளுண்டா

கோ. பாலசுந்திரம். சோளிங்கபுரம்

விடை : தற்காலம் தோன்றியுள்ள நூதன மதஸ்தர்களுக்கு சாதியையே சாமியாகக் கொண்டு அதற்கான பொய் நூற்களை ஏற்படுத்திக்கொண்டு உள்ளவர்களாதலால் பௌத்தர்களால் வழங்கிவந்த மெய்நூற்களும் நீதிபோதங்களும் ஒழுக்க மொழிகளும் செவ்வனே விளங்காது தங்கடங்கள் மனம் போனவாறு ஒழுக்க மொழிகளை மாறுப்படுத்திவிட்டார்கள். காரணமோ

சூத்திரனாகப் பிறந்தவன் பிராம்மணனையே தெய்வமாகக்கருதி அவனுக்குத் தொண்டு செய்து வருவானாயின் மறுபிறவியில் வைசியனாகப் பிறப்பானென்றும்,

வைசியனாகப் பிறந்தோன் பிராம்மணனுக்கே தொண்டு செய்து அவனுக்கு வேண்டிய பொருளளித்துவருவானாயின் மறுபிறவியில் க்ஷத்திரியனாகப் பிறப்பானென்றும், க்ஷத்தரியனாகப் பிறந்தோன் பிராம்மணனை சேவித்து அவன் சொற்படி அரசாண்டு வேண திரவியங்களைக் கொண்டு போஷித்துவருவானாயின் மறுபிறவியில் அவன் பிராம்மணனாகப் பிறப்பானென்றும் எழுதிவைத்துள்ளார்கள். அத்தகையக் காரியக் கட்டுக்கதையைக் காண்போரும் கேட்போரும் தற்காலம் பிராம்மணரென்று சொல்லிக்கொள்ளுவோரும் பலபேர் சூத்திரரை வணங்கி சூத்திரர்களுக்கு வேலை செய்து வருகிறார்களே அவர்கள் என்ன பிறவியில் பிறப்பார்களென்று தட்டிக்கேழ்ப்போர்கள் இல்லாததினாலேயாம்.

கல்வியற்றப் பெருங்குடிகளும், காமியமுற்ற சிற்றரசர்களும் அவர்களது பொய்க்கதைகளையே மெய்க்கதைகளென்றும் அவர்களது பொருளறியார் இமாமிகளையே சரிபொருளென்றுங் கொண்டாடிவருகின்ற படியால் பௌத்தர்களால் வழங்கிவந்த சரியை, கிரியை, யோக, ஞானமென்னும் ஒழுக்க மொழிகள் விளங்காது. அவர்கள் மனம் போனவாறு வழங்கிக்கொண்டார்கள்.

அதாவது உலகத்தில் தோன்றியுள்ள மனுக்களில் ஒருவன் தனது ஒழுக்கத்தில் நல்காரியத்தில் முயலுங்கால் அதனை சரிவர நிதானித்தலை சரியை என்றும், ’அல்வகை நிதானித்துச் செய்யுஞ் செயலை கிரியை என்றும், அக்கிரியை தனேறுவந்த அதிஷ்ட பாக்கியமே யோகம் என்றும் அவ்வதிஷ்ட பாக்கியம் பொருள் அதிகரித்தபோது அறிவு பெருத்தலே ஞானம் என்றும் வகுத்து வழங்கிவந்தார்கள். ஓர் கிரியையை சரிவர நடத்துவதால் யோகமாம் அதிர்ஷ்டமுண்டாகி அறிவு பெருகியகியானத்தினால் உலக சீர்திருத்தங்களுக்கு முதல்வனாகத் தோன்றுவதுடன் தனக்குள்ள துற்செயல் நற்செயல்களை ஆராய்ந்து துற்செயல்கள் யாவையுந் தனது கியானமாம் ஞானத்தால் அகற்றி நற்செயலாம் நன்மெயை கடைபிடித்து நிருவாண சுகம் பெறுவான் என்னும் கருத்தால் கிரியா சரியை யோக ஞானத்தை வழங்கி வந்தார்களன்றி இவர்களது சிருஷ்டியால் சாமிகளையுண்டு செய்து சிலாலயங் கட்டி மதக்கடைபரப்பி அதனால் சீவிக்கும் அஞ்ஞான சோம்பேறிகளுக்கும் பௌத்தன்ம ஒழுக்க மொழிகளுக்கும் பொருள் பொருந்தவே பொருந்தாவாம். சரியை என்பது சிலாலயத்தைத்

தொழுதலென்னும் பொருளைத்தருமா, கிரியை என்பது மந்திரஞ் செய்தலென்னும் பொருளைத் தருமா யோகம் என்பது என்னும் பொருளைத்தருமா, ஞானமென்பது வீடுபே றென்னும் பொருளைத் தருமாவெனத் தட்டிக் கேட்பாரில்லாமல் தங்கடங்கள் மதக்கடைகளைப் பரப்பித் தங்கள் தங்களுக்கான சீவன வழிகளைத் தேடிக்கொண்டார்கள். மற்றும் வேறில்லை யென்றறிவீராக.

6:30; சனவரி 1, 1913 -

# 96. நிதானம்! நிதானம்!! நிதானம் !!!

உலகத்தில் மநுமக்கள் செய்துவரும் தானங்களில் அன்னதானம், வஸ்திரதானம், கோதானம், பூதானம், சுவர்ணதானம் முதலிய முப்பத்திரண்டு தானங்களிலும் விசேஷித்தது நிதானமே பெரிதென்னப்படும். அதாவது, மனிதன் உண்பதிலும் நிதானம், உடுப்பதிலும் நிதானம், குளிப்பதிலும் நிதானம், சயனிப்பதிலும் நிதானம், பேசுவதிலும் நிதானம், நடப்பதிலும் நிதானம், ஈவதிலும் நிதானம், இரப்பதிலும் நிதானம், வித்தையிலும் நிதானம், விவசாயத்திலும் நிதானம், வியாபாரத்திலும் நிதானம், பணம் சம்பாதிப்பதிலும் நிதானம், பணத்தை செலவு செய்வதிலும் நிதானம், பெண்ணைக் கொள்ளுவதிலும் நிதானம், பெண்ணைக் கொடுப்பதிலும் நிதானம், பிள்ளைகளைப் புசிப்பூட்டுவதிலும் நிதானம், பிள்ளைகளை வளர்ப்பதிலும் நிதானம், பிள்ளைகளுக்கு வித்தியா விருத்தி செய்வதிலும் நிதானம், குடும்பவாழ்க்கைப்புரிவதினும் நிதானம், குடும்பத்தோருடன் கூடிவாழ்தலிலும் நிதானம் , பெண்களுடன் வார்த்தையாடலிலும் நிதானம், பெரியோர்களிடம் சங்கைத் தெளிவதிலும் நிதானம், சரித்திரங்களையும் சாஸ்திரங்களையும் விசாரிப்பதிலும் நிதானம், சண்டை சச்சரவுகளைக்கண்டு ஒதுங்குவதிலும் நிதானம், ஞானாசிரியனை இன்னானென்று அறிந்து கொள்ளுவதிலும் நிதானம், ஞானசாதனம் புரிவதிலும் நிதானம், பஞ்சபாதகங்களை அகற்றுவதிலும் நிதானம், பற்றறுக்கும் வழிகளை அறிந்து நடப்பதிலும் நிதானம், மனமாசு களைக் கழுவுதலிலும் நிதானம், மனோலயம் அறிந்தடங்குதலிலும் நிதான் முற்று ஒழுக்கத்திலும் சீலத்திலும் உயர்ந்தோர்மாட்டே உலகமென்பதாதலின் மக்களென்னுந் தோற்றத்தில் இத்தகைய நீதிமார்க்கத்தில் ஒழுகி மானியாகி மானிடனென்னும் பெயரைப் பெருகின்றான். அவ்வகை மானியாகிய மனிதன் தனது நிதானமற்று உலகவாழ்க்கைப் புரிவானாயின் மனிதனென்னும் பெயரற்று ஐந்தாவது தோற்றமாம் மிருகங்களுக் கொப்பாவாரென்றே கூறுவர்.

இத்தகைய மானியாகும் நிதானமறியாதோரும் மக்களினது தோற்றம் அறியாதோரும் மக்களென்னும் உருதோன்றியும் மிருகங்களுக்கு ஒப்பாய சீவகாருண்யம் இல்லாதோரும் ஞானக்கண் இல்லாதாயினும் ஊனக்கண்ணிருந்தும் ம்மெய்யொத்த மக்களை மக்களாகப் பாவிக்காதோரும், தங்களை உயர்ந்த சாதியோர் என்று உயர்த்திக்கொண்டு ஏனையோரைத் தாழ்ந்த சாதியென வகுத்துத் தலையெடுக்கவிடாமற் தாழ்த்தி வருகின்றார்கள். அத்தகையாகத் தாழ்த்தப்பட்டோர் உயருங்காலம் நெருங்கிவிட்டது. அக்கால் உயர்ந்தோர் கதி தானே தாழ்ந்து தலையெடுக்கவிடாதென்பது சத்தியம் சாத்தியமேயாம்.

6:33; சனவரி 22, 1913 -

# 97. பௌத்த சோதிரர்களுக்கு அறிவிப்பு

**சீவகசிந்தாமணி**

மாசித்திங்கள் மாசின முன்னமடி வெய்த / வூசித்துன்ன மூசியவாடையுடையாகப் பேசிப்பாவாய் பின்னுமிருக்கையைகலேந்தக் கூசிகூசி நிற்பர் கொடுத்துண்டறியாதார்.

எமதரிய பௌத்தசோதிரர்களே! ஜகத்குருவும் உலகரட்சகருமாகிய நமது ஒப்பிலாது அப்பன் சித்தார்த்தியாம் சக்கிரவர்த்தித் திருமகன் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடு என்னும் நான்கு வகை துக்கங்கள் மக்களுக்குள்ளதையும் அதற்கு எதிரிடையாய சுகவழி ஏதேனும் உண்டோ என்று அக்காலத்திருந்த அறு சங்கத்தோர்களை தருவித்து விசாரிணைப்புரிந்தும் விளங்காததினால் தனது சக்கிரவர்த்திபீடத்தையும் அரிய மனைவியையும் ஏகபுத்திரனையும் விடுத்து சிரமயிரை அறுத்தெரிந்து திருக்கரத்தில் ஓடெடுத்து பிச்சாண்டியாக வெளிதோன்றிய மாசிமாதப் பௌர்ணமி நாள் 1913ஸ்ரீ பிப்ரவரிமீ 21உக்குச் சரியாய மாசிமீ 10உ சுக்கிரவாரம் வருகிறபடியால் ஒவ்வோர் பௌத்தர்களும் பெண்டு பிள்ளைகளுடன் நீராடி சுத்தவாடையணிந்து சுத்த புசிப்பை புசித்து தங்களால் இயன்ற மட்டும் ஓர் ஏழைக்கு அன்னமிட்டு அம்மகாராஜன் துறவையும் அவர் அதிதீவிரத்தையுங் கொண்டாடும்படி வேண்டுகிறோம்.

அன்பே ஒருருவாகத் தோன்றி சிவன் என்னும் பெயர் பெற்றுள்ளோன் அப்பௌர்ணமி இரவு முழுவதும் விழித்திருந்து துறவடைந்தபடியால் பௌத்த சங்கத்தோர்கள் யாவரும் அன்றிரவு முழுவதும் விழித்திருந்து துறவினது சுக சாதனங்களைத் தேறவிசாரிப்பதுடன் "சத்தாரி ஆகமபதனி" யென்னும் ச, ரி, க, ம, ப, த,னி, என ஏழு வாழிசையுடன் பாடி ஆனந்தங்கொண்டாடும் நாளை சிவராத்திரி என்றுங் கொண்டாடி வந்தார்கள். சகஸ்திரநாமங்களில் சிவனென்னும் பெயரும் புத்தருக்குரியதே என்பதை

வடமொழியில் வரைந்துள்ள “இரத்தின காண்டகம்” என்னும் நூலிற் பரக்கக்காணலாம். சூளாமணி, அறநெறிச்சாரம் மற்றுமுள்ள தென்மொழி நூற்களிலும் விளங்கக்காணலாம்.

தற்காலம் அச்சிவனென்னும் பெயரையே ஆதாரமாகக் கொண்டும் புத்தரது செயல்களையே மூலமாகக் கொண்டும் நூதன மதங்களை ஏற்படுத்திக் கொண்டு மதக்கடைகள் பரப்பி அதனாற் சீவிக்க ஆரம்பித்துக்கொண்டார்கள். அத்தகையோர் பொய்ப்புராணப் போதங்களையும் பொருளறியாது செய்துவருஞ் செயல்களையும் நோக்காது சத்திய சரித்திரத்தைப் பின்பற்றி ஜகத்து இரட்சகனைக் கொண்டாடும்படி வேண்டுகிறோம்.

6:37; பிப்ரவரி 19, 1913 -

# 98. புராண சங்கை

வினா: ஐயா! இத்தேசத்துள் பெரியசாதிகளென ஏற்படுத்திக் கொண்டுள்ளோர் தாங்கள் வளர்க்கும் நாயினுக்கும் இழிவாகத் தீண்டக்கூடா தென அகற்றிவைத்துள்ள சில வித்துவான்கள் தோன்றி பெரியசாதியோடு பெரிய புராணத்தை எடுத்துக்கொண்டு அதனைத் தங்கள் புராணமென நடித்துத் தாளமத்தளமடித்து பிரசங்கிக்க ஆரம்பிக்கின்றவர்களை அப்புராணங்கள் மட்டும் இவர்களைத் தீண்டிக்கொள்ளுமா, அருகில் சேர்க்குமா, பாாணமென்பதற்குப் பொருளென்னை. பெரியபுராணம் எக்காலத்தில் தோன்றியிருக்கலாம். அது நடந்த சரித்திரமா நடவா பொய்கதையா அதனை அடியேனுக்கு விளக்கித் தெளிவிக்கும்படி வேண்டுந் தங்களடிமை.

வீ. முத்துகிருஷ்ணன், மதுரை

விடை : அதாவது ஓர் மனிதன் பௌத்த குருவை அடுத்து பஞ்ச சீலோபதேசம் பெற்றுக் கொள்ளுவானாயின் அன்று முதல் அவன் பௌத்தனென்று அழைக்கப்படுவான். மற்றொருவன் கிறிஸ்தவ குருவை அடுத்து ஞானஸ்னான நமன்னும் ஓர் தீட்சையைப் பெற்றுக்கொள்ளுவானாயின் அவன் அன்று முதல் கிறிஸ்தவனென்று அழைக்கப்படுவான். இன்னொருவன் மகம்மது குருவை அடுத்து அவர்களுக்குரிய தீட்சையைப் பெற்றுக் கொள்ளுவானாயின் அவன் அன்று முதல் மகம்மதியனென்று அழைக்கப்படுவான். ஆனால் சைவன், வைணவன், வேதாந்தியென்று சொல்லிக்கொள்ளும் மதத்தினர்களுக்கு அதிற் சேர்ந்த ஓர்காலமுங் கிடையாது சேர்த்துக்கொள்ளுங் குருவுங்கிடையாது. பெரியசாதி என்று சொல்லிக்கொள்ளுவோர்களுக்கே அதன் உறுதி நிலையற்றிருக்க அவர்களால் தீண்டப்படாதென்று இழிவுகூறி புறம்பே அகற்றிவைத்துள்ள சைவன்,

வைணவனென்னும் பேதைகளாயப் பிரசங்கிகளுக்கும் அவர்களது நாவைப்பார்த்து நங்கவிளிக்குங் குழாங்களுக்கும் நிலையுண்டோ , இல்லை. எவ்விதமென்னில் மகம்மதியர் அல்லாசாமி பண்டிகையில் மனம்போனவாறு வேஷமிட்டு ஆலி ஜூலா கூச்சலிடும் ஐயமாரையடுத்தாப்போன்றவர்களென்பதாம், பெரியபுராணமாயினும் இவர் களுக்குச் சொந்தமாமோ என்பதில் பணங்கொடுத்துப் பெரியபுராணத்தை விலைக்கு வாங்கியுள்ளது கொண்டு அவர்களுக்கு சொந்தமேயாயினும் அதனுள்ளடங்கிய மக்களும் அச்சங்கதிகளும் அவர்களைத் தீண்டப்படாத தாதலின் சொந்தமாகாவாம். நாயையேனும் என்வீட்டுக்குள் சேர்த்துக் கொள்ளுவேன் உம்மெயென் வாயற்படியிலுங் காலை வைக்கவிடமாட்டே னென்று உறும்பும் சத்துருவின் மதத்தைத் தம்மதமென்று அவர்கள் பாராட்டி சீராட்டித் திரிவது அன்னியனுக்குப் பெற்ற பிள்ளையைத் தன்பிள்ளையென்று தாராட்டிப் பலருக்கும் பகட்டுவதுபோலாம்.

பௌத்தர்களுடைய காலத்தில் பழய நடந்த சங்கதிகளைக் கண்டெழுதியுள்ள நூற்களுக்குப் பூராணங்களெனப்பெயரளித்திருந்தார்கள். அதிற் பெரும்பாலும் பதிநெட்டு புராணங்கள் புத்தபிரானையே முதற் கடவுளாகசிந்தித்து பழய சரித்திரங்களை வரைந்திருப்பதாக வடதேசவாசியாகிய துருகப்பிரசாதென்பவர் தனது புராணங்களைக் கண்டித்தெழுதியுள்ளவற்றுள் இப்பெரிய புராணத்தை யெழுதாமலே விட்டிருக்கின்றார். இதுவுமன்றி விஸ்வபிரம்ம வம்மிஷத்தோரென்னுங் கம்மாளர்களுக்கும் தங்களுக்குத் தாங்களே பிராம்மணர்களென்று சொல்லிக் கொள்ளுவோர்களுக்கும் வாதுகளுண்டான போது விவகாரங்கள் யாவும் ஈஸ்ட்டின்டியன் கம்பனியார்காலத்திய சித்தூர்ஜில்லா அதாலத் கோர்ட்டில் நிறைவேறியிருக்கின்றது. அக்காலத்தில் இந்த பிராமணர்கள் வீட்டில் சாமிகளே வந்து அவதரித்துக் கதைகளடங்கிய பெரியபுராணம் இருந்திருக்குமாயின் அதைக் கொண்டுவந்து அக்கோர்ட்டில் ரூபித்துத் தங்கள் சாதியே சிறந்ததென்று ஜெயம்பெற்றிருப்பார்கள். அஃதில்லாதபடியால் அபஜெயமடைந்தார்கள்.

இவைகளன்றி வீரமாமுனியென்பவர் சமணர்கள் நூற்களாகும் முன்கலைதிவாகரம், பின்கலைநிகண்டு முதலியவைகளை ஆதாரமாகக் கொண்டு ஓர் சதுரகராதி

எழுதியிருக்கின்றார். அதனுள் பௌத்தர்கள் காலத்திய பதிநெண் புராணங்களை மட்டிலுங் கண்டெழுதியுள்ளாரன்றி பெரியபுராணப் பெயர், புராணவகுப்பிற்கிடையாது அதே அகராதியை 1860-ம் வருடத்தில் விசாகப்பெருமாளையரும் பொன்னம்பல முதலியாருங்கூடி பரிசோதித்துக் கூட்டவேண்டியவற்றைக் கூட்டியும் குறைக்க வேண்டியவற்றைக் குறைத்தும் அச்சிட்டிருக்கின்றார்கள். அவர்களும் இப்பெரிய புராணத்தைக் குறிப்பிட்டெழு தியுள்ளதுங் கிடையாது.

பெரிய புராணம் அக்காலிருந்தால் சேர்த்தேயிருப்பார்கள். இல்லாது 60 வருடத்திற்குள் தோன்றிய கற்பனா கதையேயாதலின் அவ்விருவரும் அவற்றைக் குறிப்பிடாது புராணத்தொகையை வெளியிட்டுள்ளார்கள்.

இத்தகைய சரித்திர நூலாதாரங்களைக்கொண்டே பெரிய புராணம் நூதனமாயக் கட்டுக்கதையென்றும் சிவமதக்கடை பரப்பி அதனால் வயிறு பிழைப்போருக்கு சரக்கு புத்தகமென்று கூறலாமேயன்றி நடந்த சரித்திரபுத்தகம் ஆகாவாம். அதனை ஓர் மெய்யாய் நடந்த சரித்திரமென்று பிரசங்கித்து நடிக்குந் தீண்டாத்திருமேனிகளுக்கு இலக்கணங்கள் யாவரால் ஏற்பட்டுள்ள தென்னும் சரித்திரமுந் தெரியாது. இலக்கண பாகுபாடுகளும் இலக்கியத் தொகுப்புகளுந் தெரியாதாதலின் வீணே ஆடு கசாயிக்காரனை நம்புவதுபோல் அன்னியர் சாதியையும் அன்னியர் மதத்தையும் மெய்யென நம்பிக்கொண்டு சுஜாதி அபிமானமற்று சுஜாதி விரோதமுற்று அல்லலடைந்து வருகின்றார்கள். இன்னுஞ் சில காலத்துள் தங்களுடைய நல்விசாரிணையாலும் உண்டாம் உணர்ச்சியாலும் சத்திய தன்மந்தோன்றி சுஜாதி சீர்திருத்தத்திற்கீடுபடுவார்கள். அதுகாலம் வரையில் அவர்களது அறியாச் செயல்களுக்கும் பிரசங்கங்களுக்கும் மனத்தாங்கல் அடையாது தங்களது தன்மக்கடைபிடியில் நிற்க வேண்டுகிறோம்.

6:41; மார்ச் 19, 1913 -

# 99. தெய்வத்தை வேண்டிக்கொள்ளுதல்

வினா: பலதேவதைகளையுண்டு செய்து கொண்டிருக்கும் பற்பல மதஸ்தர் பலவகையானத் தீயச்செயல்களைச் செய்து வந்தபோதினும் ஆபத்துகாலத்தில் தங்கள் தேவனை தேவியை வேண்டிக்கொண்டு பிரார்த்தனை செலுத்தினால் அவ்வாபத்து நீங்கிப்போய்விடுகிறதென்றும், வியாதிகள் நீங்காவிடில் தங்கள் தேவனை தேவியை வேண்டிக்கொண்டு பிரார்த்தனை செலுத்தினால் அந்நோய்கள் நீங்கிவிடுகிறதென்றுங் கூறித்திரிகின்றார்கள். அவர்கள் கூறுங் கூற்று அனுபவத்திற்குங் காட்சிக்கும் பொருந்துமோ.

வே. பார்த்தசாரதி, சென்னை

விடை : இவையே காகதாளி நியாயமென்று கூறப்படும். அதாவது காக்கையானது பனை மரத்தில் உழ்க்காரவும் பனம்பழம் வீழவும் ஆயதுபோல நீங்கும் ஆபத்து நேர்ந்தகாலத்து தேவனை தேவியை வேண்டிக்கொள்ள அவரவர்களால் ஆபத்து நீங்கிவிட்டதென்றும், தீரும் வியாதி தீர்ந்தகாலத்து தேவனை தேவியை வேண்டிக்கொள்ள வியாதி நீங்கிவிட்டதென்றும் நம்பி மோசத்துக்குள்ளாகி கண்ணைப்போற் பொன்னினாற் கண்ணும், காலைப் போல் வெள்ளியினாற் காலுங்கொண்டு போய் செலுத்துவதுடன் வேணரொக்கங்களுங் கொண்டுபோய் தேவதைகளுக்கு லஞ்சஞ்கொடுத்து வருகின்றார்கள். ஆபத்தை நீக்கவும் வியாதியைப் போக்கவுங்கூடிய தேவதைகளுக்குப் பிரிதிதானமும் வேண்டுமோ அதேயாபத்தும் அதே வியாதியும் மற்றும் பலருக்குண்டாகி அதே தேவதைகளை வேண்ட அவை நீங்காமலிருப்பது பிரத்தியட்சமாகும். உம்மெய்ப்போல் ஆபத்திற்கும் வியாதிக்கும் வேண்டிக் கொண்ட ஏனைய மக்களுக்கு ஏன் நீங்கவில்லையென்னில்அ த்தேவதையின்

பேரில் உமக்கு உறுதியில்லையென்பார்கள். அதனால் அத்தேவதைகளால் ஒரு காரியமும் ஆகிறதில்லை இவனாலேயே ஆகிறதாக விளங்குகிறது. ஆதலின் அவர்களது மறுமொழியைக் கொண்டே அவனவனன்றி யோரணுவு மசையாதென்னு மொழியை நிலைபெறச் செய்யல் வேண்டும். கண்ணைப்போல் கண்தராவினாலும், காலைப் போல்கால் இரும்பினாலும் ரொக்கத்திற்கு பதில் தாம்பூலத்தையுங் கொடுப்பார்களாயின் அக்கோவில் குருக்கள் கையேந்திப் பெற்றுக்கொள்ளுவார்களா ஒருக்காலும் பெறமாட்டார்கள். அதாவது பேதை மக்களை வஞ்சித்தும் பொய் சொல்லியும் பொருள் பறிப்பதற்கு மதக்கடைகளைப் பரப்பி அதனாற் சீவிக்கும் சோம்பேறிகள் அதிகரித்துவிட்ட படியால் தேவதைகளுக்குலஞ்சங் கொடுத்து ஆபத்தை நீக்கிக்கொள்ளும் நம்பிக்கைகளும் வியாதியை நீக்கிக்கொள்ளும் நம்பிக்கைகளும் விவேகமற்ற மக்களுக்குப் பரவி வேண்டிக்கொள்ளும் வித்தைகளேயதிகரித்துவிட்டது. இவைகள் யாவும் தங்களால் தேவதைகளை சிருஷ்டித்துக் கொண்டு பொய்ச் சொல்லிப் பொருள் பரிப்பதற்கு ஆதாரமான மதக்கடைகளென்னப்படும். வியாபாரிகள் தங்கள் கடை சரக்கே நல்ல சரக்கு ஏனைய கடை சரக்கு நல்ல சரக்கல்லவென்றுகூறி பொருள் சம்பாதிப்பதுபோல் எங்கள் மததேவதைகளே மேலான தேவதைகளென்றும் வியாதிகளையும் ஆபத்துகளையும் நீக்குமென்றும் மோட்சத்தை நேரிற் கொடுக்குமென்றும் பொய்யைச்சொல்லுவதோடு தங்கள் முகக்கடை வியாபாரக் குறைவால் ஒர் மதத்தோருடன் மற்றொரு மதத்தோர் சண்டை தொடுத்தும் கோர்ட்டு வழக்கெடுத்தும் வாதிட்டு வருகின்றார்கள். ஆடானது கசாயிக்காரனை நம்பியிருப்பது போல் பேதை மக்கள் பொயக குருக்கள் வாய்மொழிகளை நம்பி பொருள் விரயஞ் செய்து வருகின்றார்கள். இவற்றைத் தாங்களும் நம்பி மோசம் போகவேண்டாம்.

6:49; மே 14, 1913 -

# 100. நூதன பௌத்தம் ! நூதன பௌத்தம் !! நூதன பௌத்தம் !!

இச்சென்னையில் தற்காலம் சாக்கைய புத்தசங்கத்தோர் எனத் தோன்றியுள்ளவர்கள் சிலோனிலுள்ள எட்டு பிரதம பௌத்த குருக்களின் அதிகாரம் பெற்று 1898ம் வருடம் சென்னை இராயப்பேட்டையில் சாக்கைய புத்தசங்கம் என்னும் அரியபெயரளித்து இந்திய தேசத்திற் திராவிட பூர்வபௌத்தர்கள் எழுதிவைத்துள்ள நூற்களை அனுசரித்தும் சிலோன், பர்மா, தீபேத், சைனா, ஜப்பான், சையாம் முதலிய தேசத்து பௌத்தர்களின் நடவடிக்கைகளைப் பின்பற்றியும் புத்தரது போதனா சிலாரூபமும், சாதன சிலாரூபமும், பரிநிருவாண சிலாரூபமும் சங்கத்தில் ஸ்தாபித்து, சிலாரூபங்களை சுட்டிக்காட்டி, அவரது நன்மார்க்கங்களை விளக்கி, அவரைப்போல் நன்மார்க்கங்களில் நடந்து நித்தியானந்தமடைய வேண்டும் என்றும், அதற்கு முதற்படியாம் கொலை செய்யாமெய், பொய்சொல்லாமெய், களவு செய்யாமெய், விபச்சாரஞ் செய்யாமெய், கள்ளருந்தாமெய் என்னும் சுத்ததேகிகளாக இல்லறம் நடாத்தற்கு பௌத்த குருக்களிடம் பஞ்சசீலம் பெற்று துற்கன்மங்கள் யாவையும் அகற்றி நற்கன்மங்களையே செய்து இந்நல்லவழிகாட்டிய பகவனாம் புத்தபிரான் மீது அன்பும் விசுவாசமும் வைப்பதுடன் நம்மெய் ஆண்டு ரட்சித்துவரும் பிரிட்டிஷ் அரசாட்சியார்மீதும் அன்பையும் விசுவாசத்தையும் நிலைபெறச்செய்து சுகவாழ்க்கையையடைய புத்ததன்ம நடைகளையும் உள் சீர்திருத்தங்களையுஞ் செய்துவர முயன்றதில் சென்னையில் சாதிபேதமென்னுங் கொடுஞ்செயல் இல்லாமல் வாழும் விவேகிகளிற் சிலர் பஞ்சசீலம் பெற்று பௌத்தர்களாயுள்ளதுடன் கோலார், பெங்களூர், திருப்பத்தூர், நாகப்பூர், செக்கன்றாபாத், இரங்கூன், நெட்டால் முதலிய தேசங்களிலும் சாக்கைய புத்த சங்கங்களை ஸ்தாபித்து நல்லொழுக்க சீர்திருத்தங்களில் நடைபெறச் செய்து

வருவதுடன் இந்துக்களென்போர் சாதிபேதமென்னுங் கொடுஞ் செயலையே பீடமாகக் கொண்டொழுகுகிறவர்கள், பௌத்தர்களோ சாதிபேதமென்னுங் கொடுஞ் செயல் அற்று அன்பையே பீடமாகக்கொண்டு வாழ்கின்றவர்கள் அதுகொண்டு சென்னை சாக்கைய புத்த சங்கத்தார் கருணை தங்கிய பிரிட்டிஷ் ராஜாங்கத்தாருக்கு விண்ணப்பம் அனுப்பி இந்துக்கள் செயல்களுக்கும் பௌத்தர்கள் செயல்களுக்கும் சம்மந்தமில்லாததால் இராஜாங்கத்தோர் வகுத்தெழுதும் குடிமதிப்புப் புத்தகத்தில் பௌத்தர்களை இந்துக்களுடன் சேர்க்காது பௌத்தர்களுக்கென்று வேறுகல மேற்படுத்தி பிரித்துவிட வேண்டுமென்று கேட்டுக் கொண்டபடி வேறாகப்பிரித்தே காரியாதி களை நடத்தி வருகின்றார்கள். அதன்பின்னர் சுடலையிலும் பௌத்தர்களுக்கு என்று பிரத்தியேக பூமி பிரித்துக்கொடுத்துவிட வேண்டும் என லோக்கல் போர்டாருக்கு விண்ணப்பித்த வண்ணம் பௌத்தர்களுக்கென்று சுடலை பூமியும் வேறாகப் பிரித்துக் கொடுத்துவிட்டார்கள்.

இவ்வகையாக இந்துக்களுக்கும் பௌத்தர்களுக்கும் யாதாமொரு சம்மந்தமுமில்லாமல் பிரித்துக்கொண்டதுடன் உள்சீர்திருத்தங்களாம் விவாகக் கிரியைகளையும் மரணக்கிரியைகளையும் வேறாகப்பிரித்துக் கொடுத்து விட்டார்கள்.

சாக்கைய புத்தசங்கத்தோருள் பௌத்ததன்ம முக்கியபோதம் யாதெனில் பௌத்தர்களுக்குக் கன்மம் உண்டென்றும் பிறவியுண்டென்றும் நற்கன்மங் களைச் செய்துவரில் பிறவிகள் தோறும் நற்பலனை அனுபவித்துவருவதுடன் நன்மெயே ஓர் உருவாகத் திரண்டகாலத்து நிருவாண சுகமடையலாம் என்றும் துற்கன்மங்களைச் செய்துவருவோமாயின் இப்பிறவியில் மாளாதுக்கத்தை அநுபவிப்பதுடன் கன்மத்திற்கு ஈடாய இனிபிறக்கும் பிறவியிலுந் தீரா துன்புற்று அல்லலடைய வேண்டி வருமாதலின் பௌத்தகுழாங்கள் ஒவ்வொருவருக்கும் நல்வாழ்க்கை பெற்று நன்முயற்சியினின்று நற்கடைபிடியில் ஒழுகவேண்டும் என்று போதித்துவருவதினால் பௌத்தக்கூட்டத்தார் யாவரும் நாளுக்குநாள் பெருகிவருவதுடன் நன்மார்க்கத்திலும் ஒழுகி வருகின்றார்கள்.

இந்துக்களுக்கு மாறாயுள்ள பௌத்தர்களது கூட்டம் நாளுக்குநாள் பெருகி விவேகவிருத்தியுண்டாகி சீல சேர்க்கையும் சுகசாதனங்களும் அமைந்து

முன்னேறுவதைக்கண்ட இவர்களது சத்துருக்களாய இந்துக்களென்போர் மனஞ்சகியாது மற்றுஞ் சாதிபேதமில்லாக் குடிகளை முன்னேறவிடாது கெடுக்க வேண்டும் என்னும் வன்னெஞ்சங்கொண்டு ஆடுகள் நனைந்துவிடுகிறதென்று புலிகள் கட்டி அழுவதுபோல டிப்பிரஸ் கிளாசை சீர்திருத்தப்போகின்றோம் என்னும் ஓர் கூட்டத்தோர் கூடி பணஞ்சேர்க்கப் பரிந்து திரிந்து நிற்கின்றார்கள்.

இந்துக்களென்போரில் மற்றொரு கூட்டத்தோர்வெளிதோன்றி சாதிபேதமில்லாக் கூட்டத்தோரிற் சிலர் இந்துக்களைப்போல் சைவர்களெனக் குறுக்குப் பூச்சு பூசிக்கொண்டும், வைணவர்களென நெடுக்குப்பூச்சு பூசிக் கொண்டு அவர்கள் கோவில் வாசலின் தூரநின்று சுரணைகெட்ட சாமி கும்பிட்டு தட்சிணை தாம்பூலம் பெறும் வரவு கெட்டுப்போவதுடன் வைணவர் சைவர்களென்னும் தொகையுங் குறைந்துபோய் விடுகிறதென்னும் வன்னெஞ் சத்தால் சாதிபேதம் இல்லாதோர் வாழும் சேரிகளுக்கே சென்று நீங்கள் சைவமதத்தைவிடாதீர்கள், கூடிய சீக்கிரம் உங்களைக் கோவிலுக்குள் சேர்த்துக் கொள்ளுகிறோம் கல்லையுங் கட்டையுந் தொழுதுக்கொண்டு கடைசாதியாகவே வாழ்வீர்களெனப் படாடம்பங்காட்டி அவர்கள் முன்னேறும் வழிகளைக் கெடுத்து வருகின்றார்கள். இவர்கள் தந்திரங்களை அறிந்த சிலவிவேகிகள் அவர்களிடஞ் சென்று, ஐயா இந்துசாதி பிரசங்கியாரே, இதுகாரும் சேரிக்குள் வராமலும் இவர்களைக் கண்ணெடுத்துப் பாராமலுமிருந்தவர்கள் இப்போது இவர்கள் மீது பரிதாபங்கொண்டு பிரசங்கிக்க வந்தீர்களா அல்லது எல்லவரும் பௌத்தர்களாகிவிடுவார்களாயின் தங்களது பொய் வேதங்களும் பொய் புராணங்களும் பரந்துபோமென பயந்து வந்தீர்களா என வினவில் மாறுத்திர மின்றி மறைந்து திரிகின்றார்கள்.

இவர்களது மித்திரபேத தந்திரம் ஒருவாறிக்க இந்துக்களது செய்கையை விடாதவர்களும் சாதிபேதத்தை உடையவர்களுமாகிய இருவர்கள் வெளி தோன்றி யாங்கள் பௌத்தர்களாகிவிட்டோம் மற்றவர்களையும் பௌத்தர் களாக்க வந்துள்ளோமென இரண்டு பௌத்த சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டு அக்கூட்டங்களில் தங்கள் சாதிசம்பந்தப்பட்ட ஒருவரேனுமின்றி சாதிபேத மில்லாமற்

சேரிகளில் வாழ்ந்திருந்தவர்களையே அதில் அங்கங்களாகச் சேர்த்துக் கொண்டு நூதன பௌத்தம் பிரசங்கித்து வருகின்றார்கள்.

அவ்விருவரும் யதார்த்தத்தில் பௌத்ததன்மத்தைப் பரவச்செய்பவர் களாயின் முதலாவது தங்கள் பெண்டு பிள்ளைகளை பௌத்தர்களாக்கி யிருப்பார்கள், அதுவுங்கிடையாது. தங்கள் இனத்தோர்களையேனும் பௌத்தர்களாக்கி சீர்திருத்தியிருப்பார்கள், அதுவுங்கிடையாது. தங்கள் அண்டைவீட்டுக்காரன் அயல் வீட்டுக்காரனையேனும் பௌத்தர்களாக்கி யிருப்பார்கள், அதுவுங்கிடையாது. மற்றும் சாதியாசாரமுள்ள இந்துக்கள் என்போரையேனும் பௌத்தர்களாக்கி இருப்பார்கள், அதிலொருவனுங் கிடையாது. அவர்கள் யாவரையும் நீக்கிவிட்டு இவர்களிருவரும் எவர்களைச் சேர்த்துக்கொண்டு பௌத்தம் போதிக்கின்றார்களென்னில் சாதிபேதமில்லாமல் சேரிகளில் வாழுவோர்களையே சேர்த்துக் கொண்டு பௌத்த கூட்டம் நடாத்தி வருவது அவர்களது சட்ட புத்தகங்களே போதுஞ் சான்றாம்.

அவ்வகை சாதிபேதமில்லா சேரிகளில் வாழ்ந்திருந்தோரை பௌத்தர்களாக்கி முன்னேறச் செய்யவேண்டும் என்னும் நல்லெண்ணமும் நன்முயற்சியும் இவர்களுக்கிருக்குமாயின் சீன பௌத்தர்கள், சிங்கள பௌத்தர்கள், ஜப்பான் பௌத்தர்கள், சையாம் பௌத்தர்கள், தீபேத் பௌத்தர்கள், பர்மா பௌத்தர்கள், பூர்வ திராவிட பௌத்தர்கள் புத்ததன்மத்தை எவ்வகையாகப் போதித்து எவ்வழியாக நல்மார்க்கத்தில் நிலைபெறச் செய்தார்களோ அதுபோல் இவ்விருவர்களும் போதித்து நன்மார்க்கத்தில் நிலைபெறச் செய்வார்கள். அங்ஙனமிராது பௌத்தர்கள் யாவருக்கும் நூதனமாய பௌத்த கூட்டங்களென்று ஏற்படுத்திக் கொண்டு அவ்விருவர்களின் போதனையில் புத்தரது சிலாரூபங்களை சங்கங்களில் வைக்கப்படாதென்றும் பௌத்தகுருக்களே சங்கத்திலிருக்கப்படாதென்றுங் கூறுவதுடன் மறுபிறவி என்பதுங் கிடையாது, கன்மமுங்கிடையாது, மனிதன் எப்போது மரித்துவிடுகின்றானோ அதுதான் அவனுக்கு முடிவு. மற்றோர் சுகம் யாதுங்கிடையாதென புத்ததன்மத்திற்கு எதிரடையாய அபுத்ததன்மமாம் நூதன பௌத்தம் போதிக்கின்றார்கள். அதனால் புத்ததன்மமே மாறுபடுவதுடன் அதனைக் கேட்போர்கள் மனிதன் மரிப்பதே முடிவாதலின் மனம் போனவாறு கொலைச்செய்தால் பாபமென்னை, குடித்து சுகித்தால் பாபமென்னை,

அன்னியன் தாரத்தை யிச்சித்தால் பாபமென்னை, அன்னியன் பொருளை அபகரித்தால் பாபமென்னை, பொய்யைச் சொன்னால் பாபமென்னை என்னும் உச்சாகமுண்டாகி தானுங் கெடுவதுடன் தன்னை அடுத்தோரையுங் கெடுத்து தேசத்தையுஞ் சீரழித்து இராஜவிசுவாசத்தையுங் கெடுப்பதற்குத் தடையிராது.

வீதிகளில் மலமூத்திராதிகளை விசிரம்பிப்பில் அதிகாரி பிடித்து தெண்டிப்பான் என்னும் பயமிருக்கில் வீதிகள் சீரும் சிறப்புமடைந்திருக்கும். அவ்வகை அதிகாரிகளுமில்லை தெண்டனையுமில்லையென்னில் வீதிகளில் மலமுத்திராதிகள் நிறைந்து சீரும் சிறப்புங் கெடுவதுபோல தீவினைக்குத் தக்க தெண்டனையுமில்லை நல்வினைக்குத்தக்க சுகமுமில்லாது மனிதன் மரணமடைவதே முடிவேயன்றி வேறொரு கரும்முந் தொடராது என்று கூறுவதாயின் நல்வினைச் செய்தாலென்ன தீவினைச் செய்தாலென்னவென்னும் உச்சாகம் உண்டாகுமாயின் மனுக்கள் சீர்கெடுவதற்கே ஏதுவுண்டாகிப்போம்.

அதனினும் சாதிபேதமுள்ள இந்துக்கள் புத்ததன்மம் போதிப்போர் என வெளிதோன்றி சாதிபேதமுள்ள இந்துக்கள் மத்தியினின்று இத்தகைய போதனைகளை போதியாது சாதிபேதமில்லாமல் சேரிகளில் வாழ்வோர் களையும் பேட்டைகளில் வாழ்வோர்களையுஞ் சேர்த்துக்கொண்டு இத்தகைய நூதன பௌத்தம் போதிப்பதை ஆலோசிக்கில் இவர்களை சீர்கெடுப்போர் களாக விளங்குகிறதேயன்றி சீர்படுத்துவார்கள் என்பதை கனவினும் நம்புதற்கு ஏதுவில்லை. சாதிபேதமில்லாக் குடிகள் சாதிபேதம் உள்ளவர்களால் பலவகையாலும் நசுங்குண்டு அறிவின் விருத்தி கெட்டிருப்பதினால் அவர்கள் மத்தியில் கேட்டை விளைவிக்கும் நூதன பௌத்தத்தைப் போதிப்பதாயின் உள்ள அறிவுங்கெட்டுப் பாழடைவார்கள் என்பதற்குத் தடையில்லை. ஆதலின் நமது கருணைதங்கிய ராஜாங்கத்தார் இத்தகைய சீர்கேட்டைப் போதித்துவரும் பிரசங்கியார்களையும் அக்கூட்டங்களை நடாத்த முயலுங் கூட்டத்தோர் களையும் சற்று நோக்கி மநுக்களுக்குக் கேட்டை உண்டு செய்யும் வழிகளை

அடைப்பார்களென்று நம்புகிறோம்.

# 101. ஜெயினரும் பௌத்தரும்

வினா : ஜெயினர்கட்கும் புத்தர்கட்கும் யதார்த்தத்திலுள்ள பேதாபேதங்கள் இன்னின்னவையென நன்குவிளங்குவது அரிதாகலான் விரித்து விளம்புதல் வேண்டுமென விநயபூர்வகம் வேண்டுகிறேன்.

ஆதிசக்கிரவர்த்தி உபாத்தியாயர், திருமலை

விடை : கமலசூத்திரத்துள் சகஸ்திரநாம பகவனென்றும் மணிமேகலை யில் ஆயிரநாமத்தாழியன் திருவடியென்றும் புத்தருக்குரிய வாயிரநாமங்களில் ஜைநரென்பதும், சைநரென்பதும், ஜிநரென்பதும், சினரென்பதும், புத்தருக்குரிய பெயரெயாகும். அப்பெயர் வாய்த்தவிதி பாலி நிகண்டு பஞ்சமாரஜிநோதிதீ ஜிநா. அதுகொண்டு தமிழ் நிகண்டில் தருமராஜன் முந்நிந்திரன் சினன் பஞ்சதாரை விட்டோன், அருள்சுரந்தவுணக் கூட்டுந் ததாகதன் ஆதிதேவன், விரவுசாக்கையனே சைனன் விநாயகன் சினந்தவிர்ந்தோன், அரசு நிழலிலிருந்தோன், அறியறன், பகவன், செல்வன் என்றும், மற்றுமோரிடத்தில் புத்தன்மால் அருகன் சாத்தனென்றும், தருமராஜன் தான் புத்தன் சங்கனோடரு நன்றாம்' என்னும் கூறுபாடுகளே போதுஞ் சான்றாம். புத்தரென்னும் பெயரை வடநாட்டில் விசேஷமாகக் கொண்டாடிவந்த போதினும் தென்னாட்டில் இந்திரரென்றும், அருகரென்றும் கடவுளென்றும், தருமராஜன் என்றும், மன்னன் என்றுங் கொண்டாடிவந்தவைகளை பெரும்பஞ்சகாவியங்களிலும், சிறுபஞ்சகாவியங்களிலும் பரக்கக் காணலாம்.

நமது பத்திரிகை தோன்றியது முதல் குரு விசுவாசத்தையும் இராஜ விசுவாசத்தையும் பீடமாகக் கொண்டு அகிம்சாதன்மத்தையே மிக்க வரைந்து வருகின்றோமன்றி இம்சா

அதன்மம் வரைவதே கிடையாவாம்.

ஆதியென்னு மொழி தோன்றிய பின்னரே அநாதியென்னு மொழித் தோன்றுமேயன்றி தோன்றாவிடத்து அநாதி தோன்றாவென்பது விதி, மலந் தோன்றி மறைந்து தோன்றாவிடத்து அமலமென்றும், ஆன்மனென்னும் புருஷன் தோன்றி மறைந்து மற்றுந் தோன்றாவிடத்து அனான்மனென்றும் அவிரோதமென்றும் வழங்குதல் போல் சருவநீதிக்கும் ஆதியாக வோர் உரு தோன்றி மறைந்து தோன்றாவிடத்து ஆநாதியென்னும் மொழி வழங்கி வருகின்றது. யாதுமில்லாத திலிருந்து ஒன்று தோன்றாதென்பது அனுபவமுங் காட்சியுமாதலின் அநாதியினின்று ஆதி தோற்றாவாம். ஆதலின் உலக சீர்திருத்தக்காரருள் ஆதியாகத் தோன்றிய புத்தபிரான் பிறந்த வருடத்தை முதற்குறித்தும், கிறீஸ்துவை இரண்டாவது குறித்தும், மகம்மதுவை மூன்றாவது குறித்தும் வரைந்தும் வருகின்றோம். புத்ததன்மத்தினின்றே நெருங்கத் தோன்றியுள்ளது ஜைனமும், தூரத் தோன்றியுள்ளது மற்ற மதங்களேயாம் என்பதை ஆராய்ந்து அறிந்துக்கொள்ளுவீராக.

திரிக்குறளைப்பற்றி அஃது ஜைநருடைய நூலல்லவென்று கூறியது அவர்கள் விசாரிணைக்குறைவேயாம். காரணம் பௌத்தத்தன்மத்தையும் ஜைந்தன்மத்தையும் வேறாக எண்ணியுள்ளார்களாதலின், பௌத்ததன்ம திரிபீடமாம் முதநூல் தன்மபிடகம், சூத்திரபிடகம், வினய பிடகமென்னுந் திரிபிடகத்தைக்கொண்டு வழிநூல், அறத்துப்பால், பொருட்பால், காம்பாலென்னுந்திரிக்குறள் தோன்றியுள்ளது உணர்ந்து, திரிக்குறள் பௌத்தர் களுக்குரியதன்றி ஜைநருகுரிய தன்றென்றெண்ணி அவ்வாறு வரைந்துள்ளார் களென்று நம்புகிறோம். பௌத்தமும் ஜைநமும் ஒன்றென்று உணர்ந்திருப்பார் களாயின் அவ்வகை வரையார்கள். ஓர் மகதநாட்டுச் சக்கிரவர்த்தியே புத்தரென்றும், ஜைநரென்றும் அழைக்கப்பெற்றபடியால் தற்கால ஜைநரென் போருள் சக்கிரவர்த்தியென்னும் பெயரை வழங்கி வருகின்றார்கள். கொடுந்தமிழ் வாசிகளாம் மலையாளிகள் புத்தரை நாயன், நாயனாரென்று வழங்கிவந்தது கொண்டு திருவனந்தபுறத்தைச் சார்ந்த வள்ளுவர் நாடென்னும் பதியில் வாழும் வள்ளுவர்கள் குப்புலிங்க நாயனாரென்றும், மார்க்கலிங்க நாயனாரென்றும் வழங்கிவருவதுபோல

ஜைநருக்குள்ளும் பாகுவலி நாயனார், தீர்த்தங்கர நாயனார், ஜெயசீல நாயனாரென வழங்கி வருகின்றார்கள் இஃதை அறிந்துக்

கொள்ளுவீராக.

7:8; சூன் 30, 1913 –

# 102. சாக்கைய பௌத்த சங்கத்தின் சபா நாயகர்கள்

பௌக்க சோதிரர்களே சற்று கவனியுங்கள். சங்கத்தோர் கூட்டுங் கூட்டம் பெருங்கூட்டமாயிருப்பினுஞ் சிறுங் கூட்டமாயிருப்பினும் அவற்றிற்கு நியமிக்கும் சபா நாயகர்கள் சங்கத்திற்கு சபா நாயகரென நியமித்துள்ளவரே யிருந்து காரியாதிகளை நடாத்தும்படி செய்விக்கல் வேண்டும். அக்கால் சங்க சபாநாயகரில்லாமற் போய்விடு வாரானால் புத்ததன்மத்தில் அன்பும் அதியாவலும் ஏழை மக்களை யீடேற்ற வேண்டுமென்னும் அசைய முள்ளக் கிறீஸ்தவரில் ஒருவரையேனும் மகமதியரில் ஒருவரையேனுங் கண்டு நியமித்துக்கொள்ளலாம் மற்றப்படி பௌத்த தன்மத்தில் அன்பில்லாமலும் அதன் விசாரணையில்லாமலும் சாதி பேதமில்லா ஏழை மக்கள் படுங்கஷ்டங்களைக் கண்டு கருணை வையாமலும் தங்கள் ஓர் பெருத்த உத்தியோகஸ்தர்களென்றெண்ணி, செருக்குற்று இருமாப்படைந்து நானும் ஓர் இந்துவென நடித்துத் திரியும் போலிகளை சபா நாயகராக நியமித்து விடுவீர்களாயின் அவர்களது பூர்வமிலேச்சச் செயலும் பொறாமெ குணமும் வஞ்சின நிலையும் அகலாது சங்கத்தோர் எடுத்த கருத்தை உபபலமான விவேகங்கூறி தொடுத்து முடிக்காது சீர்திருத்தக் கருத்தைக் கெடுக்கத்தக்க வழிவகைகளேதேதோ அவற்றையே பேசி முடிப்பார்கள்.

அதாவது ஓர் கோழிக்கு விரல்களெல்லாம் பொன்வளயமிட்டு இறக் கைகளுக்கெல்லாம் முத்து, இரத்தினக்குஞ்சங்கள் கட்டி கழுத்தில் வைரசரமிட்டு முகத்திற் பொன்கண்ணாடி பூட்டி சருவாலங்கிருத நிறைந்தவரண் மனைக்குக் கொண்டு போய் அவ்விடமுள்ள நவரத்தின ஆசனத்தில் விட்ட போதிலும் அக்கோழியானது பூர்வக்குப்பைத்தீத்துங்

குணமாறாது, நவரத்தினங்களிழைத்த ஆசனத்தையுந் தன்கால் விரல்களால் தீத்தே தீரும். ஆதலின் ஜெனன முதல்வஞ்சினம் சூது குடிகெடுப்பு நிறைந்தவர்களும் தன்மமென்பதே தலை முறைதலை முறையாய் அறியாதவர்களுமானோர் சபைக்கு ஆள்டம்பமாகக் காட்டிய போதினும் அவர்களது அதர்மகுணம் அவர்களை விட்டு மாறவே மாறாது. விவேகசிந்தாமணியார் “ஈயாரையீய வொட்டானிவனு மிய்யான் எழுபிறப்பினுந் கடையா மிவன் பிறப்பே” யென்றோதிய நீதி போதம் மலைவுபடாவாம்.

ஆதலின் சாக்கையபுத்த சங்கசிகாமணிகள் யாவரும் சங்க சபாநாயகர் களைக்கொண்டே காரியாதிகளை நடத்தி வரும்படி வேண்டுகிறோம்.

7:10; ஆகஸ்டு 13. 1913 –

# 103. மனுதருமசாஸ்திரம் என்பதென்னை

மனுடரென்றும் மனிதரென்றும் வழங்கும் படியான மக்கள் நீதிநெறி வழுவா ஒழுக்கத்தினின்று மனுட சீவர்களை மனுட சீவர்களாக பாவித்து சருவ சீவர்கள் மீதுங் கருணை வைத்து வாழ்க்கைத் துணை நலமுற்று பஞ்சசீலத்தில் நடக்கச் செய்வதே மநுதரும் சாஸ்திரமாகும்.

அம்மனுதரும சாஸ்திரமென வழங்கற்குக் காரணம் யாதெனில் மனித சீவர்களானோர் தங்கடங்கள் குடும்பங்களில் விரோதமின்றியும் பொறாமெயின்றியும் பேராசையின்றியும் ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டி வாழ்க்கையை சீர்திருத்திக் கொள்ளுவார்களாயின் அக்குடும்பமானது ஆறுதலுற்று ஆனந்த வாழ்க்கையைப் பெறும். அதுபோல் ஒர்கிராமத்தோரும் இருப்பார்களாயின் அக்கிராமமும் ஆறுதலுறும். தேசமும் அதுபோலிருக்கு மாயின் சகல சுகமும் பெற்று மக்கள் ஆறுதலுற்று வாழ்வார்கள். இத்தகைய சுகநலங்கோறியே விவேக மிகுத்த சாஸ்திரிகள் மனுக்கள் சீர்பெற்று வாழ்கவேண்டுமென்னும் அன்பின் மிகுதியால் மனுதன்ம சாஸ்திரங்களை ஏற்படுத்தினார்கள்.

அதையே புத்ததன்மமென்றும், சத்திய தன்மமென்றும், மெய்யறமென்றுங் கூறப்படும். இத்தகையாய் மனுக்களுக்கு வேண்டிய தருமசாஸ்திரம் இந்திய தேச முழுவதும் பரவியிருந்த காலத்தில் வித்தை, புத்தி, யீகை, சன்மார்க்கம் பெருகி வித்தியாவிருத்தியும், விவசாயவிருத்தியும், வியாபார விருத்தியுமோங்கி சகல சீவர்களும் ஒற்றுமெயுற்று சுகவாழ்க்கையில் ஆறுதலுற்றிருந்தார்கள்.

அதன் விருத்திக்கேட்டிற்கு மூலமாக அன்னிய தேசத்திலிருந்து இந்திய தேசத்திற்குக் குடியேறி பிச்சையிரந்து கொண்டு சீவித்துவந்த ஓர் வகை மனுக்கூட்டத்தோர் தங்கள் மித்திர பேதத்தாலும் வஞ்சினத்தாலும் கருணையென்பதே கனவிலுமற்றக்கரவிடத்தாலும் நூதன சாதிவேஷங்களையும் நூதன மதவேஷங்களையும் உண்டு செய்து தேசத்தையும் தேச மக்களையும் பாழ்படுத்தி தங்கள் சுய சீவனங்களை விருத்தி செய்துக்கொண்டதுமன்றி இன்னுமதை விருத்தி செய்வதற்கான மனு அதரும சாஸ்திரங்களை ஏற்படுத்திக்கொண்டு அதற்கு மனுதரும சாஸ்திரமென்னும் பெய ரக் கொடுத்து வழங்கி வருகின்றார்கள் அஃது சுயநலங்கருதி எழுதிய நூலே யன் பொதுநலம் கருதி எழுதியதன்றாம். ஆதலின் பௌத்த சோதிரர்கள் பொதுநலங் கருதும் நூற்களை வாசிப்பீர்களேயன்றி சுயநலங் கருதும் நூற்களை கரங்களிலும் ஏந்தாதிருக்க வேண்டுகின்றோம்.

7:12; ஆகஸ்டு 27, 1913 –

# 104. மயானச் சடங்குகள்

வினா : ஓர் குடும்பத்தில் யாராமொருவர் இறந்துவிட்டால் இறந்தவரின் புத்திரனோ, பேரனோ, மைத்துனனோ ஒருவருக்கு தலையை நாவிதனிடம் மொட்டையடித்து மீசையை சிரைத்து, பூனுல் தரித்து, திருநீரை பட்டை பட்டையாய் பூசி, வேஷதாரி பிராமணனைப்போல் காட்டியும் இறந்தவரை மயானத்திற்கு கொண்டுபோகும் போது மொட்டையடித்தவன் இடதுபக்கம் முரத்தில் வெற்றிலையும் பொரியும் வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக போட்டு கொண்டு போகிரதும், மாயானத்தின் அருகே போனதும் காளியம்மா கதவைதிர அரிச்சந்திரா வழியை விடுயென்று சொல்லியும் அரிச்சந்திரன் கோவிலை மூன்று மூறை சுத்தி வந்து எதிரில் பிரேதத்தை வைத்து எதிரில் வெட்டியான் நின்றுகொண்டு சிலவு சொல்லுகிறதும் வெட்டியானுக்கு கால்பணம் முழந்துண்டு வாய்க்கரிசி இவைகளை கொடுக்கிறதும், இவை முடிந்தவுடன் குழியண்டை வந்து மூன்றுதரம் சுற்றி குழியில் வைத்து வந்திருக்கும் யாவரும் பிடிமண் போடுகிறதும் அதன் பிற்பாடு முற்றிலும் மூடிவிட்டு மொட்டையடித்தவன் குடத்தில் தண்ணீர் நிறப்பி தோள் மேல் வைத்துக்கொண்டு மூன்றுமுறை சுற்றிவருகிறதும், ஒவ்வொரு தரமும் வண்ணான் துவாரம் செய்கிறதும் மூன்றாம் நாள் பால் சடங்கு செய்கிறதும், 16-ம் நாள் கருமாதி செய்கிறதும் இறந்தவரின் பாத்தியஸ்தர்கள் மொட்டை அடித்தவனுக்கு தங்கட்கைகளால் அங்கவஸ்திரம் தலையில் கட்டுகிறதும், இவ்வித சடங்குகளெல்லாம் நமது ஆதி சற்குருநாதன் இயற்றிய சட்டமா அல்லது மேல்ஜாதி மேல் ஜாதியென்று மேலுக்கு எடுத்து திரியும் வேஷதாரிகள் ஏற்படுத்திய கற்பனையா.

ஆ.அ.முருகேசர்

7:13; செப்டம்பர் 3, 1913 –

விடை: பூர்வ பௌத்தரது காலத்தில் இல்லறத்தோர் செய்யுங் கிரியைகள் வேறாகவும் துறவறத்தோராகிய கியான சங்கத்தோர் செய்யுங் கிரியைகள் வேறாகவும் நடாத்திவந்ததாக சரித்திரங்களாலும் சுருதிகளாலும் அனுபவங்களாலும் விளங்குகின்றது அவைகள் யாதென்னிலோ இல்லறத்தோர் பிணம் சத்து போனது கண்டு செத்தானென்றும், இருளடைந்தது கண்டு இறந்தானென்றும் தன்னை மறந்தது கண்டு மரணமடைந்தானென்றும் வழக்கமொழி பெற்று பிணத்தை ஓரிடம் வளர்த்தி சிரசினின்று ஒளிரும் சோதி மறைந்துவிட்டபடியால் தலைபுறமாக ஓர் தீபத்தை ஏற்றி வைத்துவிட்டு பாசபந்தக் கட்டுடையோனாக மரித்தது கொண்டு பாதப்பெருவிரல் இரண்டையுஞ் சேர்த்து பாசபந்தக்கட்டிட்டு பெண்கள் கற்பிற்கும் அச்சத்தை ஊட்டுமாறு நெற்பொரி பொரித்து அக்கால் சுடலைபூமி இதுயெனக் குறிப்பற்று கிடைத்தக்காடுகளில் கொண்டு போய் தகனஞ் செய்வதே வழக்கமாயிருந்த படியால், அப்பிணஞ் சுடுமிடங் கண்டு பின்வரு மக்கள் தேடி வருவதற்கு ஓர் முரத்தில் பொரித்தப் பொரியையும் வெற்றிலையையுங் கலந்து பிணமெடுத்துச் செல்லும் வழியிலிரைத்துக்கொண்டே போவது வழக்கமாகும். காலதாமதமாக வருவோர் அப்பொரியுடனுள்ள வெற்றிலைக் குறிப்பைப்பார்த்துக் கொண்டே போய் தகனவிடஞ் சேர்ந்துக்கொள்ளுவார்கள்,

அக்காலத்தில் மாச்சிசென்னுந் தீக்குச்சி இல்லாதபடியால் நெருப்புச் சட்டியைக் கையிலெடுத்துக்கொண்டு போய் கட்டைகளை அடுக்கிப் பிணத்தைச் சுட்டுவிட்டு வீடுவந்து சேர்ந்து மறுநாள் சுடலைக்குப் பாலெடுத்துச்சென்று உள்ள அனலை பால்கொண்டு அவித்து அஸ்திகளைப் பொறுக்கி ஆற்றிலேனும் சமுத்திரத்திலேனுங் கொட்டிவிடுவது வழக்கமாகும். மற்றக்கிரியைகள் யாவும் தற்கால மாறுதல்களேயாம். இதுவே இல்லறத்தோர் ஈமக்கிரியையாகும். புத்தசங்கஞ் சேர்ந்த துறவிகளின் கிரியைகளோவென்னில் மரணத்தை ஜெயிப்பதே புகழ்ச்சியும் மரணத்திற்குள்ளாவதே இகழ்ச்சியுமாய சாதனத் திலிருப்பவர்களாதலின் ஓரரசன் பதினாறு வயதுக்குமேல் விவாகஞ் செய்து இருபத்தொன்பது வயதளவும் சகல சுகபோகங்களையும் அனுபவித்து புத்திர வாதாரமுற்று முப்பதாவது வயதில் துறவுற்று சங்கஞ் சேர்ந்து பிறப்புப், பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வகைத் துக்கங்களையுஞ் ஜெயிக்கும் ஞானசாதன முற்று ஆதிக்குச் சமமாம் சமாதியடைய முயலுங்கால், வீட்டிற்குங் காட்டிற்கும்

மத்தியிலுள்ள சமபூமியில் ஓர் கல்லறைக்கட்டி அதனுள் கற்பூரத்தை நிறப்பி சமாதியடையுமரசன் அதனுள் உழ்க்கார்ந்து கொண்டவுடன் சதுரக் கல்லினால் அக்குழியை மூடி மண்பரப்பிவிட்டு சகலரும் அரண்மனை சேர்ந்து பதினைந்தானாள் சங்கத்தோரும் அரச குடும்பத்தோரும் ஏதொரு வாகனமும் இரதமுமின்றி கால்நடையாக நடந்து போய் அக்கல்லரையருகே சுற்றிலும் நின்று அறஹத்தோ அறஹத்தோ என்னுஞ் சப்தமிட்டு மூடியுள்ளக்கல்லை எடுப்பார்கள். எடுத்துப்பார்க்குங்கால் சமாதியடைந்தோர் உச்சிவழிதிரந்து உடலசையாமல் நிற்குமாயின் எல்லோரும் ஆனந்தக்கூத்தாடி அறையைக்கல்லால் மூடி அவ்விடத்திலே ஓர் மடங்கட்டி அந்நாளையே தன்மகன்ம ஆதினாளாகக் கொண்டு ஏழைகளுக்கு அன்னதானம் வஸ்திரதானஞ் செய்து அம்மடத்திலேயே சாது சங்கஞ் சேர்த்து சமண முநிவர்களால் வருடந்தோருங் குருபூஜையை நடத்தி அன்னதானம் வஸ்திரதானஞ் செய்து வருவார்கள்.

இவ்வகையாக செய்துவந்த கட்டிடங்களே மதுரையில் மட்டிலும் புத்த சங்க மடங்கள் பன்னீராயிரக் கட்டிடங்களிருந்தவிடங்களை ஆர்ச்கிலாஜிகல் சர்வேயர்களால் கண்டுபிடித்து புத்தகங்களில் வெளியிட்டிருக்கின்றார்.

அம்மேறை சமாதியடைந்தோரை அரச குடும்பத்தோரும் சங்கத்தோரும் பதினைந்தானாள் கால்நடையிற் சென்று கல்லறை அணுகி மூடியக் கல்லைத் திறந்து பார்க்குங்கால் சமாதியடைந்தோர் உச்சவழி திறவாது சிரஞ்சாய்ந்து கிடக்குமாயின் அவ்விடம் வந்துள்ள சகலருந் துக்கித்துக் கல்லை முடிமண்பரப்பிவிட்டு வீடுசேர்ந்தவுடன் அவ்வரசனுடையப் புத்திரர் தங்கள் தந்தை மரணத்தை செயித்து ஆண்பிள்ளையென்னுங் கீர்த்தி பெறாது வீண் பிள்ளையாயினரே என்னுந் துக்கத்தால் தங்கள் மீசையை சிரைத்தும் இழிவில் அழுந்து துக்கத்திலாழ்ந்தி விடுவார்கள். மற்றவர்கள் யாவரும் அரசன் சமாதியுள்ளாரென்னும் புகழ்ச்சிக்குப் போகாமல் இறந்தாரென்னும் இகழ்ச்சி யாம் இழிவுக்குப் போனோமென ஒவ்வொருவரும் நீராடி இல்லஞ் சேருவார்கள்.

அக்கால் அரசருக்குள்ள மற்றுங் குடும்பத்தோர் சேர்ந்து முடியைக் கழற்றி எறிந்துவிட்டு மீசையைச் சிரைத்துள்ள வரசபுத்திரர்களை அணுகி உங்கள் தகப்பன்

வீண்பிள்ளையாகப் போயினும் போகட்டும் ஆயாசப்படாது முப்பதாவது வயதில் நீங்கள் துறவேறி மரண ஜெயமடையுங்கோளென்று ஆசி கூறி முடிகளையெடுத்து அவரவர்கள் சிரசிலிட்டு இராட்சிய பாரந்தாங்கும்படி உத்திரவளித்து விடுவார்கள். இவைகளே பூர்வ தன்மகன்மச் செயலுள், வாகனமின்றி நடந்து செல்லுவதை நடப்பென்றும், சமாதி அறையின் கல்லெடுத்துப் பார்ப்பதை கல்லெடுப்பென்றும் அரச புத்திரர் எறிந்துள்ள முடியை எடுத்துத் தரிப்பதை முடிசூட்டலென்றும் வழங்கிவந்தார்கள்.

அத்தகைய இல்லறத்தோர் துறவறத்தோரது கிரியைகள் யாவும் தற்கால நூதன மதஸ்தர்களாலும் நூதன சாதிகளாலும் பலவகையாக மாறுதலுற்று இல்லறத்தோர் கிரியைகளீதென்றுந் துறவறத்தோர்க்கிரியைகளீதென்றும் அறியாது தங்கடங்கள் மனம்போனவாறு செய்து வருங்கிரியைகளுடன் பூர்வ பௌத்தத்தன்மக் கிரியைகளையும் அநுசரித்தே நடாத்திவருகின்றார்கள். ஆதலின் பௌத்தர்கள் யாவரும் வீணாய வீரியக் கிரியைகளை ஒழித்து வேணுமாயக் காரியக் கிரியைகளை மட்டிலும் நடத்திவர வேண்டியது அழகாம்.

7:15, செப்டம்பர் 17, 1913 -

# 105. ஓம் நமசிவய

வினா: சமணமுநிவர்களாம் சித்தர்களால் வரைந்து வைத்துள்ள வைத்திய நூற்களில் ஓம் நமசிவய, வென்றும், ஓம் ஐயுங்கிலியும் சவ்வென்றும் மந்திரங் களை வரைந்து வைத்திருக்கின்றார்களே அதன் பொருள் என்ன அதன் பயன் என்ன.

நா. பஞ்சனாதன். வேலூர்,

விடை: முதலாவது மந்திரம் என்னும் வார்த்தையின் பொருளை அறிதல் வேண்டும். அதாவது மந்திரமென்பதின் பொருள் ஆலோசித்தலென்னப்படும், மந்திரி என்பதற்குப் பொருள் ஆலோசிப்பவனென்னப்படும் அவ்வகை சத்தியதன்ம ஆலோசனையில் ம, ந, சி, வ, ய, மனதை வயப்படுத்தும் ஆலோசனையே மேலாயதாம் அவற்றுள் ஓம் நமசிவய, என்பதினிலக்கணம் அறிவோம். மநசிவய, ப்படுதலை யென்பதேயாம். இவற்றையே நமசிவய, வென்றும், சிவயநம வென்றும் மாறி மாறி சொல்லிக்கொண்டிருக்கின்றார் களன்றி மநசிவய,ப்படும் வழிவகைகளை அறிந்தாரில்லை.

ஓம் ஐயுங் கிலியும், சவ்வு மென்பதில் ஐயுறுபுமனோ சுத்தத்தையும், கிலியுறுபு வாக்கு சுத்தத்தையும், சவ்வுறுபு, உடல் சுத்தத்தையும், ஓம், அறிவோமென்பதேயாம் இவற்றையே வடநூலார் திரிகாயமந்திரமென்றும், காயத்திரி மந்திரமென்றும் வகுத்துள்ளார்கள். தென்மொழியார் திரிகரண சுத்தமென்பர். இத்தகையாய பரிபாஷை மொழிகளை சித்தர்களால் அனந்தம் வரையப்பட்டிருக்கின்றது. அதனந்தரார்த்தங்களை உசாவியுந் தெளிவோர்களே அதனதன் பலனை அனுபவிப்பார்கள். அங்ஙனம் ஆலோசியாமலும் உசாவாமலும், வரைந்துள்ள மொழிகளை சொல்லிக்கொண்டே திரிவது உமிகுத்தி கைசலிப்பது போலாம்.

# 106. குடிகளுக்கு மழையும் மழைக்கு தவத்தோரும் தவத்தோருக்கு அரசனும் அரசனுக்கு குடிகளும் ஆதாரமென்னப்படும் சத்தியதன்மம்

மழையின்றி மானிலத்தார்க்கில்லை / மழையும் தவமிலாரில் வழியில்லை
தவமும் அரசிலாரில் வழியில்லை / அரசனும் இல்வாழ்வாரில் வழியில்

பூமியில் வாழும் மக்களுக்கு ஏதேனும் தனசம்பத்து, மனைசம்பத்து, மக்கட் சம்பத்து, உத்தியோக சம்பத்திருப்பினும் மழை ஒன்றில்லாமற் போமாயின் சகல சம்பத்தும் அழிந்து மக்களும் நசிந்து போவார்களென்பதே திண்ணம். அத்தகைய மழைகாலந் தவராது பெய்வதற்கு ஆதாரம் எவரென்னிலோ பாச்சலத்தில் நிலைத்து சருவ சீவர்களையுந் தன்னுயிர்போல் காத்து, அஷ்டசீல சாதனம் புரிந்து, தபோபலம் பெற்ற மகா ஞானிகளின் தோற்றத்திற்கு அதாராமோவென்னில் சாம, தான, பேத, தண்டமென்னும் சதுர்வித உபாயமும் சகல மக்களையும் ஒரு குடை நிழலில் காக்கும் வல்லபமும், பொய்யர்களை அடக்கி மெய்யர்களை சீர்தூக்கலும் பொல்லார்களை தண்டித்து நல்லோர்களாக்குதலும், அஞ்ஞான மகற்றி மெஞ்ஞானம் பெருகும் வழிவகை களைத் தேடலும் நீதிநெறி ஒழுக்கங்களை நிலைநிருத்தச் செய்தல் கூடிய அரசரே என்னப்படும். அரசருக்காதாரமோவென்னில் வித்தையில் விருத்தியுள்ளக் குடிகளும் புத்தியில் விருத்தியுள்ளக் குடிகளும் சன்மார்க்க முள்ளக் குடிகளும் இராஜ விசுவாசமும் உள்ளக் குடிகளே என்னப்படும்.

இத்தகைய சத்தியதன்மமானது இந்திய தேசமெங்கும் நிறைந்திருந்த காலத்தில் மாதம் மும்மாரி பெய்யவும் பயிறுகள் ஓங்கவும் குடிகள் சிறக்கவும் கோனுயரவுமாயிருந்தவற்றிற்கு பூர்வ பௌத்த சரித்திரங்களும் பௌத்த மடங்களுமே போதுஞ் சான்றாகும். தற்காலம் தோன்றியுள்ள பிரிட்டிஷ் ராஜாங்கமானது பௌத்தன்ம அரசாட்சிக்கு மேலாகவே நின்று குடிகளை சீர்திருத்தும் வித்தை புத்திகளை யூட்டி தங்களைப்போல் சகல குடிகளும் சுகம்பெற்று வாழ்கவேண்டுமென்னுங் கருணையால் காத்து இரட்சித்தும் வருகின்றார்கள் இத்தகையாய நீதியும் நெறியுமமைந்த செங்கோலின் கீழ் வாழ்குங் குடிகளோ வஞ்சினமும் பொறாமெயும் பொய்யும் பொருளாசையிலும் நிறைந்து குரு விசுவாசமும் இராஜ விசுவாசமுங் குறைந்து ஒருவருக்கொருவர் சாதி வித்தியாசத்தால் சீறிச்சினந்து மதவித்தியாசங்களால் தங்களை மறந்து மடிந்து வருகின்றபடியால் நாளுக்குநாள் மழைகுன்றியும் ஏககாலத்திற் பெருகியும் மக்களை மடிப்பதுபோதாது பஞ்சமும் பெருவாரி நோய்களுந் தோன்றி கருணை தங்கிய ராஜாங்கத்தார் ஏதேது வழிவகைகளைத் தேடி காத்து வரினுங் குடிகள் சுகமின்றியே அல்லலடைந்து வருகின்றார்கள், இவற்றிற்குக் காரணமோ வென்னில் குடிகளுக்குக் கருணை என்பதும் அன்பு என்பதுமாயக் குணமே அற்றுள்ளபடியால் தவமிகுத்த ஞானிகளின் தோற்றமேயில்லாமற் போய் விட்டது. தபோபலமிகுத்த அறஹத்துக்களாம் அந்தணர்களில்லாமற் போய்விட்டபடியால் மழை குன்றிமாநிலந் தீய்ந்து வருகின்றதென்பது சத்தியம் சத்தியமேயாம்.

இத்தேசத்தில் அந்தணர்களென்னும் பிராமணர்களும் வேதாந்திகளும் வேதாந்திகளின் மடங்களும் அனந்தமாக இருக்கின்றபடியால் தவமிகுத்தோரு மிருப்பார்களென்று சிலர் படாடம்பங் கூறினுங் கூறுவர். அவர் கூற்று அவலமேயாம். தங்களுக்குத் தாங்களே அந்தணர்கள் பிராமணர்களென்று அப்பெயரைச் சொல்லிக்கொள்ளுங் கூட்டத்தோர் பெருந்தொகையினராயினும் வேஷ அந்தணர்கள் வேஷப்பிராமணர்களாவாரின்றி யாதார்த்த அந்தணராகார்கள். யதார்த்த பிராமணரொருவரிருப்பரேல் மழை குன்றாவாம். அது கொண்டே நமதறச் செல்வி அவ்வை “நல்லாரொருவருளரேல் அவர் பொருட்டெல்லார்க்கும் பெய்யுமழை” என்றுங் கூறியுள்ளாள். வேதாந்திகளும் வேதாந்திகளின் மடங்ளோவென்னில் தவபலமிகுத்தோர் பெயர்களாய அந்தணர் பிராமணர்கள் என்னும் பெயரை அதற்கு ஒவ்வாதவர்கள் யாவரும் பூண்டுள்ளதுபோல்

தீவினை ஒழிக்கத் திடமில்லாதார் யாவரும் வேதாந்தி களென்னும் வெறு வேஷமிட்டு விதரணையற்றக் குடிகளை வஞ்சித்து வயிற்றை வளர்த்துவருகின்றார்களன்றி அவர்களும் யாதார்த்த வேதாந்திகளாகார்கள். அவர்கள் வசிக்குமிடங்களுக்கும் வேதாந்திகள் மடமென்னும் பெயர் பொருந்தாது. பொருந்தும் பெயர் யாதென்னிலோ கஞ்சாமடம், அவனென்ன சாதி இவனென்ன சாதியென வினவும் அஞ்ஞானிகள் வாசஞ்செய்யும் மடங்களே யாகும். யதார்த்த வேதாந்திகளுளரேல் கால மழை தவிராவாம் காலமழை வேண்டுவோர் யதார்த்த தபோபலத்தோரை நிலை நிருத்துவார் களென்று நம்புகிறோம்.

7:25; நவம்பர் 26, 1913 –

# 107. சுழிமுனை

வினா. இந்துக்களின் நவீன நூற்களுக்கு (காப்பு) உ என்னும் சுழி எழுத்தை தலப்பில் வரைந்துள்ளது. அதனந்தரார்த்தம் யாது, இலக்கணம் என்னை, எக்காலத்தில் எவரால் எழுதப்பட்டது?

ஆதிகாலமாம் ஆதிவேதமிருந்தக்காலத்து ஓலைச்சுவடிகளிலன்றோ சகலகலை நூற்களும் வரைந்துள்ளது. இவைகளை நவீனமாய் காகிதத்திலச்சடித்து ஒரு கட்டாய் கட்டி "காகிதம்" என்று பெயரிடாமல் புத்த அகமென்று பெயரிட்ட காரணம் யாது, இப்புத்தகமுண்டாவதற்குமுன் இப்பெயருண்டா? இல்லையா ஆதலால் யாரால் இப்பெயர் தரப்பட்டது?

கே. மீறையய்யா, கெமன்டயின் பர்மா

விடை: கே. மீறையய்யா வென்னு மன்பரே, தாம் சுட்டி வரைந்துள்ள (உ) இச்சுழியை பண்டை கால தெய்வப்புலவர்களால் ஓலைச்சுவடிகளின் முகப்பில் வரைந்துவருவதேயாகும். இதனந்தரார்த்தம் பொய்ப்புலவர் போலிப்புலவர், புராணப்புலவர்களுக்கு விளங்காவிடினும் வழக்கமாகக் கீறிவருகின்றார்கள். அஃது பௌத்த தன்மக் கீரலேயாம். அதாவது மனிதன் தன்னைக்கொண்டு தானே சீர்திருத்தி தானே தானாகி பரிநிருவாணமடைய வேண்டியவனாதலின் தனது புருவமத்திய சுழிமுனை லயிக்கவேண்டியது கொண்டு, புருடனுக்கு சுழிமுனை நாடியே பீடமாகக்குறிப்பிடுமாறு சமண முநிவர்கள் வரைந்துவரும் நூற்களின் முகப்பில் (உ) இச்சுழியை நாட்டி வந்தார்கள். இவற்றிற்கு சுழிமுனை யென்றும், மோனநிலையென்றும், பேசாவெழுத்தென்றும் பெயர். பைரவி, சாம்பவி, கேசரி,

என்னும் ஞான முத்திறைகளில் (உ) இச்சுழியையே சாம்பவியென்றுங் கூறுவர். இஃது ஞானிகளுக்கு ஒளியாகவும் அஞ்ஞானிகளுக்கு இருளாகவுமே விளங்கும்.

புத்தகம் என்னும் மொழியோ பூர்வ பௌத்தர்கள் காலத்தில் வழங்கி வந்ததன்றி தற்கால மொழியன்றாம் அதாவது புத்ததன்மங்களை வரைந்துக் கட்டிவைத்துள்ள சுவடிகள் யாவையும் புத்தகமென்றே வழங்கி வந்தார்கள். அதனந்தரார்த்தம் அறியாது தற்கால காகிதக் கட்டுகளுக்கே பொதுவாகப் புத்தகமென வரைந்து வருகின்றார்கள்.

பூர்வ புத்ததன்மச் செய்யுளைக் காண்க:

**<u>நாலடி நானூறு</u>**

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா
ருய்த்தகமெல்லா நிறைப்பினு மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து
தேற்றும் புலவரும் வேறு.

7:37, பிப்ரவரி 18, 1914 –

# 108. மனுதன்ம நூல்

பூர்வ இந்தியதேச பௌத்தர்கள் மனுமக்கள் சீர்பெறுமாறு வரைந்து வைத்துள்ள நூலுக்கு மனுதன்ம நூலென்று கூறப்படும். அவற்றுள் வாக்கால் போதிக்குந் தன்மமும் கரங்களால் ஈயுந் தன்மமும் ஆகிய இருவகையுண்டு. முதலாவது மனுமக்களுள் வஞ்சினம், பொறாமெய், பொருளாசை, கொலை, களவு, பொய், மதுவருந்தல், விபச்சாரம் முதலிய துற்கிருத்தியங்களே நிறைந்துள்ளக் கூட்டத்தோருக்கு நன்மார்க்கங்களைப் போதித்து நல்வழியில் நடத்தி நல்ல சுகவாழ்க்கையாம் நித்திய சுகம் பெறச் செய்யுந் தன்மத்திற்கு போதனா கன்மமென்றும், இரண்டாவது கூன், குருடு, சப்பாணி, பிணியாளர், திக்கற்றோர், உழைத்து சீவிக்க சத்தியற்றோர், பசியாளர், இல்லந்துறந்த பெரியோர் முதலியோருக்குப் பொருளுதவி செய்து அன்னமிட்டு ஆதரிப்பது ஈயந் தன்மமென்றும் கூறப்படும்.

இத்தகைய தன்மத்தையே மகட பாஷையில் புத்ததம்மாவென்றும் சகட பாஷையில் சத்தியதருமமென்றும் திராவிட பாஷையில் மெய்யறமென்றும் வழங்கிவந்தார்கள். இத்தன்மத்தை மனுமக்களுக்கே போதித்து அவரவர்கள் இதயத்தில் நன்கு பதியுமாறு ஓலைகளிலும் செப்பேடுகளிலும் பொன்னேடு களிலும் சிலைகளிலும் வரைந்துள்ளவற்றிற்கு மனுதன்ம நூலென்றும் மனுதரும் சாஸ்திரமென்றும் மனுநீதியென்றும் வழங்கலாயிற்று.

அதாவது ஓர் மனிதன் எக்காலும் பொய்யை சொல்லிக்கொண்டே பொருள் பறித்து சீவிக்க முயலுவானாயின் அவனைக்காணும் விவேகிகள் யாவரும் அவன் வார்த்தையை நம்பாது அகற்றிக் கொண்டே வருவார்கள். அதனால் அவன் பொய்யனென்னும் பெயரைப் பெறுவதுடன் உண்ண உணவிற்கும் உடுக்க

உடைக்குமின்றி ஆதுலனாய் அலைவதற்கு ஏதுண்டாகி விடுகின்றான். அக்ககையோனுக்குப் பொய்பினால் உண்டாங் கேடுபாடுகள் யாவற்றையுந் கெள்ளற விளக்கி நன்மதியூட்டி பொய்யினை அகற்றுந் தன்மத்தைப் போதிப்பதாயின் அவன் மெய்யனாகி சுகச்சீர் பெறுவதுடன் சகலராலும் நன்கு மதிக்கப்படுவான். அதுபோல் கொலையினாலேயே சீவிப்போனைக்காணும் சீவகாருண்ய மிகுத்தோர் அவனுக்கு பயந்து தூர விலகுவதுடன் சருவ சீவர்களும் அஞ்சுவதியல்பாம். கொல்லுவா னென்னுங் கருணையற்ற செயலே அதற்குக் காரணமென்னப்படும். அக்கொலை பாதகனை அணுகி உம்முடைய காலில் ஓர் முள்ளு தைக்குமாயினும் தேகத்தில் சொற்ப காயப்படுமாயினும் உணர்ச்சியால் எவ்வளவு துன்பப்படுகின்றீர், அவைபோல் மற்ற சீவராசிகளுக்கும் அத்தகைய துன்பமுண்டாம் என்றுணரலாகாதா, ஓர் சீவனைக் கொல்லுங்கால் அவை துடிப்பதும் பதருவதும் கதருவதுமாயச் செயல்களைக் கண்டேனும் உமக்கு இதக்கம் உண்டாகவில்லையா, ஒவ்வோர் சீவராசிகளும் நாளுக்குநாள் வளர்ந்து மேனோக்குவதே இயல்பாதலின் அவற்றை மத்தியிற் கொன்று பாழ்ப்படுத்துவது பாபமல்லவா என்று பலநாளும் தன்மத்தைக்கூறி அவனிதயத்தில் அன்பை வளரச்செய்து சீவகாருண்யம் அடைவானாயின் அன்றே கொலைத் தொழிலை விட்டகன்று சகலருக்கும் அருகனாவான். சகலருக்கும் நல்லவனாக விளங்குவதுடன் நல்வாழ்க்கையாம் அழியா பேரின்ப சுகத்தையும் பெறுவான். ஓர் கள்ளனை அணுகி உம்முடையப் பொருளை ஒருவன் அபகரித்துக் கொள்வானாயின் நீரெவ்வளவாய ஆயாசத்தையும் துக்கத்தையும் அடைகின்றீர், அவைப் போல் அன்னியர்ப் பொருளை அபகரிப்பதாயின் அவர்கள் இதயத்தில் எத்தகையாய ஆயாசத்தையுந் துன்பத்தையும் அடைவார்களென்று உணரலாகாதாவென்று மெய்யறத்தை நாளுக்குநாள் போதித்து அவன் களவு தொழிலை அகற்றி கஷ்டப்பட்டு சீவிக்கும் கைத் தொழிலில் முயல்வானாயின் அவனைக் காண்போர் யாவரும் அன்புடன் நேசிப்பதுடன் அவன் எக்காலும் பயந்து பயந்து சீவித்துவந்த களவின் சீவனம் ஒழிந்து பயமற சீவிக்கும் கைத்தொழிலில் முயன்று சுகசீ பெறுவான். ஒருவன் காமிய இச்சையில் ஏதொரு கைத்தொழில் வித்தையுமற்று அன்னிய தாரங்களை இச்சித்துக் திரிவானாயின் அவனைக் காணும் விவேகிகள் ஆ ஆ இவன் துற்காமியென்றுன்னி வீடுகளுள் சேரவிடாமலும் ஏதொரு தொழிலிலும் அணுகவிடாமலும் அகற்றி புறக்கணிப்பதால் பல தொழிலும் அற்று பல பிணியுமுற்று பாழடைந்து போகின்றான். அத்தகைய

துற்காமியை அணுகி உம்முடைய காமத்தீயை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொள்ளுதலால் தேகமெங்கும் வியாதியால் புண்புரைகள் தோன்றி உபத்திரமடைவது திண்ணமாவதுடன் உம்முடைய தாரத்தை ஒருவன் இச்சிப்பானாயில் நீரெவ்வளவு கோபமும் ஆயாசமுங் கொள்ளுவீர், அவை போல் அன்னியன் தாரத்தை நீர் இச்சிப்பதாயின் அவன் எத்தகைய துக்கத்தில் ஆழ்வான், அதனால் அவன் குடும்ப விருத்தியே பாழடைந்து குலகோத்திரமும் அழிகின்ற தல்லவாவென்று சத்தியதன்மத்தை ஊட்டி காமிய சேட்டையை ஓட்டி நல்வழிக்குக் கொண்டு வருவதாயின், அவன் குடும்ப விருத்தியடைவதுடன் ஏனைய குடும்பங்களும் சுகவிருத்திப்பெற்று நல்வாழ்க்கையை அடைவார்கள். ஓர் சுராபானமாம் கஞ்சா, அபினிகலந்த நீர்களையேனும், கள்ளு சாராய முதலியப் பானங்களையேனும் அருந்தும் பழக்கத்தால் ஏதொரு தொழிலுமற்று பெண் சாதி பிள்ளைகளை காப்பாற்ற விதியின்று நிலை தவறி தாயும் தந்தையும் வெறுக்க, விவேகிகள் சேர்க்காது ஒதுக்க, மனிதனென்னும் பெயரற்று மிருகத்திற்கு ஒப்பாயிருப்போனை அடுத்து, உமது மதுபான பழக்கத்தால் அறிவு மயங்கி நீர் செய்துவருஞ் செயல்களை உன் தாய் தந்தையரே வெறுப்பாராயின் மற்றய மனுக்கள் உன்னை யென்ன மதிப்பார்கள், உன் சுகங்கள் யாவையுங் கெடுக்கும் இம்மது பானத்தால் யாது சுகமடைகின் தன் சுத்த நிலையிலிருக்கும் மனிதனே தவருதலடைகின்றான், நீரருந்தும் மதுவின் மயக்கத்தால் என்னென்ன தவருதலடைந்து துக்கத்தை அனுபவிக்கின்றீர் இம்மதுபானமே சகல கேட்டிற்குங் கொண்டுபோகும் வழியாச்சுதே, மனிதனாகப் பிறந்துங் கேட்டிற்குப் போகும் வழியில் நடக்கலாமா. மனிதனாகத் தோன்றியவன் எக்காலுஞ் சுகவழிகளைத் தேடல் வேண்டும், அவ்வகை சுகவழியைத் தேடாதவன் மனிதனென்னும் பெயரற்று மிருகமென்றே எண்ணப் படுவ’ ஆகலின் சுகவழியை நாடுவதே மேலாய தன்மமென்று போதனா தன்மததை மேலும் மேலும் போதித்துவருவதாயின் அவன் மதுபான மயக்கமும் அற்று அறிவுந் தெளிவுற்று நாளுக்குநாள் தனது துற்செயல்களை உணர்ந்து தானே சீர்படுவதுடன் தனது சுற்றத்தோருஞ் சீரடைவார்கள் அவனைக் கண்ணுறும் ஏனயக் குடியர்களுஞ் சுகம் பெற்று நல்வாழ்க்கை அடைவார்கள்.

மற்றும் வஞ்சினத்தாலும் சூதாலும் பேராசையாலும் ஏனையக் குடிகளைக் கெடுத்து சீவிப்போனை அடுத்து உன் குடும்பம் ஒன்று பிழைக்க மற்ற குடும்பங்களை

வஞ்சினத்தாலும் சூதினாலும் பேராசையினாலுங் கெடுப்பது அழகன்று, மனிதச் செயலன்று, உமக்குள்ள வஞ்சினமும் சூதும் பேராசையும் உம்மெயும் உமது குடும்பத்தையுங் காப்பது போல் தோன்றி அதுவே பெருங்கேட்டுக்குக் கொண்டுபோய் விடுவதன்றி மீளா துக்கத்திற்கு ஆளாக்கி விடும்.

ஆகலின் உமது இதயத்துள்ள வஞ்சினஞ்சூது பேராசை முதலிய துற் குணங்களை அகற்றி தேகம் வருந்த பாடுபட்டு உம்மெயும் உமது குடும்பத்தையும் போஷிக்க ஆரம்பிப்பீராயின் இதுவே நன்மார்க்கமென்னும் சுகவழியாகும், இவ்வழி நடப்போரே துக்கம் ஒழிந்து சுகநிலையடைவார்கள் என்னும் மெய்யறத்தை மேலும் மேலும் வற்புறுத்திப் போதித்து வருவதாயின் இதய சுத்தமுண்டாகி அவன் சுகச்சீரடைவதுடன் அவனை அடுத்தோரும் இதய சுகங்கொண்டு சுகமடைவார்கள். மனிதர்களால் போதிக்குந் தன்மத்தை மனிதர்கள் கேட்டு சீர்பெறுவதே மனுதன்மமென்னப்படும் இன்னீதி நெறிகளை எழுதி வைத்துள்ளதே மனுதன்ம நூலென்னப்படும் இந்நீதி நெறிகளுக்கு மாறாய போதனைகளையும் நூற்களையும் அதன்ம போதம் என்றும் அதன் நூற்களென்றுமே கூறப்படும். இதுகண்டு சத்திய தரும் வழியில் நடப்பதே அழகாம்.

7:41; மார்ச் 18, 1914 –

# 109. வித்தைகள்

வினா: தற்காலம் இந்தியாவில் தோன்றியுள்ள மதத்தோர்களிற் சிலர் எங்கள்

டியார்களும் எத்தனையோ மகத்துவமானச் செயல்களைச் செய்திருக்கின்றார்கள் செத்தவர்களை எழுப்பியிருக்கின்றார்கள் உங்கள் பௌத்த மதத்தில் யாரேனும் அவ்வகையான மகத்துவங்கள் செய்த துண்டோவெனக் கேழ்க்கின்றார்கள் அது விஷயம் எனக்கு விளங்கவில்லை.

பெ. முத்துசாமி, குடியேத்தம்.

விடை: மனிதனாற் செய்யக்கூடிய வித்தைகள் அனந்தமுண்டு அவ்வித்தைகளால் தருமம் சிறப்படையாது. மனிதனை சீலமும் ஒழுக்கமுமே சிறப்படையச் செய்யும். சித்துக்களை விளையாடியவர்கள் யாவரும் சமணமுனிவருட் சித்திப்பெற்றோர்களேயன்றி வேறொருவருங் கிடையா. அவர்களினும் மேலாய சித்துவித்தைகளைக் கையாடினோர் வேறொருவருங் கிடையாதென்பதே திண்ணம்.

இவ்வித்தைகள் யாவற்றையும் பௌத்தர்கள் வெகுவாக மதிக்கமாட்டார்கள். சீலத்தையும் ஒழுக்கத்தையுமே மேலாக மதிப்பர்.

மனிதன் அபூர்வமாய சித்துக்களை விளையாடிய போதினும் அவைகள் யாவுமோர் வித்தையென்றே புத்தபிரான் பிரதம தமிழ் மாணாக்கர்

அகஸ்தியராலியற்றியுள்ள செய்யுட்களைக் காண்க.

**அகஸ்தியர் விவேக தசபாரதம்**

1. சோதியிலெழுந்த திருநிழல்போலும் சொல்லிடாச் சூடனல் போலும்
   ஆதியிலெழுந்த விருவினை விகர்ப்ப மாய்ந்தறிந் தோதவே சுத்த
   நீதியிலெழுந்த வாசமுமனந்த நித்தியவினோதமாஞ் சித்தின்
   வீதியிலெழுந்த விந்திரஜாலம் வித்தையென் றறிவதே விவேகம்.

2. மன்னவராதி தருமசிந்தையினால் மறுவுமெய் சுவர்க்கமென் பதமும்
   கொண்ணவாரதி கோல்பழிக்குரிய குரல்மணி முதலிய பதமும்
   பன்னவராதி முநிவரர் சித்தர்பதுமனை பாரதியாம் பதமும்
   விண்ணவராதிப் பதங்களைப் பார்க்கில் வித்தையென்றறிவதே விவேகம்.

3. பருத்தியால் மாலும் நூலினால்வர்ணப்படம் பல சுவர்க்க நிர்ப்பதமும்
   துருத்தியால் காற்றுங் காற்றினாலங்கி துரும்பினால் தோற்றிடுஞ் சித்தங்
   கருத்தெனுமொன்றா யொன் றினி வனந்தங்கற்பனை நினைவில் பல்பேதம்
   விருத்தியால் வளரும் வேற்றுமெயெல்லாம் வித்தையென்றறிவதே விவேகம்.

4. மணிலேமறைய மறைந்து பின் வருக, மலையென வளர்ந்தெதிர் நிற்க
   தண்ணியிற்கரையா தனித்துருவெடுக்க தரணியோர் கண்டு மெய்களிக்க
   கண்ணிலே நுழைய கரியமால் முகில் போல் காலிலே தளையது பூட்ட
   விண்ணின் மீதிருந்து பரந்து வந்துரினும் வித்தையென்றறிவதே விவேகம்.

5. கடல் வரவழைக்க மேருவையணைக்க கடமுயிர்ப் பெய்யவே செய்ய
   உடல் பிறிந்தயலோ ருடலதிற்பாய வூரிலா வெளியி லூர்காட்ட
   வடவனல்வளைக்க வஷ்டநாகங்களனைத்தையு முன்னிலையழைத்து
   விடபலகோடி சித்துவாடிடினும் வித்தையென்றறிவதே விவேகம்.

6. தந்தையன்னையர் முன்தவ நிலையொடுக்கத் தனிமகா மேருவைக்காட்ட
   சந்தையமில்லா கலத்தின் மேல் நடக்க சலத்தினை திரட்டியே யெடுக்க

பந்தியங்சொல்லி வடவை மேலிருக்க பருதியோடுடு மதியழைக்க
விந்தையுற்றதுன்னும் வேதையாடிடினும் வித்தையென்றறிவதே விவேகம்.

7. ஆணுறுவதனைப் பெண்ணுறுவாக்க வடுத்த பெண்ணுறு வையாணாக்க
காணுவதனைத்தும் பேதனஞ்செய்ய காமனைக்கண்ணெதி ரழைக்க
சேணுறுவெடுத்து சேணிடையொளிக்க செம்பொடு யிரும்பை பொன்னாக்க
வீணுறுவெடுக்கும் கற்பித சிந்தை வித்தையென்றறிவதே விவேகம்.

8. கரிபலகோடி வனத்திருந்தழைக்ககரடி சிங்கங்களை யாட்ட
வரிபலகோடி யழைக்க மேற்கொள்ளவவனியைத் துறந்தறக்காட்ட
நரிபலகோடி பரியென நடத்திநஞ்சமுதாக்கியே கொடுக்க
விரிபலகோடி சித்தையாடிடினும் வித்தையென்றறிவதே விவேகம்.

9. நாட்டில் சஞ்சரிக்க நமனுறுகாட்ட நற்றவத்தோரென நடிக்க
ஏட்டினை நீரி லெதிர்க்கவே விடுக்கவெண்ணிலாவாகன மேற்க
காட்டினிலிருந்து மனதினி நினைக்கக்காமதேன் கற்பகமமைக்க
வீட்டினிலடைக்க வெளியில் வந்திடினும் வித்தையென்றறிவதே விவேகம்.

10. உம்பர் பூதங்கள் பணிய வேநிற்க ஊமையாயிருந்தவன் பேச
தம்பமாய் அசையா மலையென நிற்க தனிமகாமேருவைக் காட்ட
கம்பங்களேறி கழையர் கூற்றாடி காணாது கூப்பிடற் கேட்க
விம்பநோயகற்றுஞ் சித்தையாடிடினும் வித்தையென்றறிவதே விவேகம்.

-7:41; மார்ச் 18, 1914 -

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

# கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**தற்போதைய செயல்கள்**

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி

- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்

- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்

- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்

- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்

- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்

- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி

- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி

- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்

- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்

- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்

- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்

- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்

- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்

- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்

- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்

- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்

- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**

BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**

**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.